## 1 ஆகாயத்தாமரை—Antaratamarai

வே-பெ : அந்தரத்தாமரை.

Pistia stratiotes

**Eng.—The We ter - lettuce (Tropical Duckweed).**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Anthar-tamari**<br>**Agasa-tamara** | **Kan.** | **Anthar-gange** |
| | | **Sans.** | **Kumbhika**<br>**Vari-parni** |
| **Mal.** | **Kodda-pail**<br>**Akàsa-tàmra** | **Hind.** | **Jal-Kutbhi** |

இது நீர்ப்பாங்குள்ள குளம், குட்டை, ஓடை முதலியவற்றின் நீர்ப்பரப்பில் மிதக்குஞ் செடி.

பு- உ : இலை, வேர்.

சுவை : கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- இலை : குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-**Refrigerant.**
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ் நிக்தகாரி-**Demulcent.**
- மலமிளக்கி-லகுவ்ரேசநி-**Laxative.**
- வேர் : வரட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-**Emollient.**

பண்பு.—இதனுல், அழுகிரந்தி, குட்டம், கரப்பான் இவைகள் போம். அன்றியும், நீர்சுருக்கு, மூலம், சீதபேதி, பொடி அல்லது வரட்டிருமல், தாபிதம் இவைகளும் இதனுல் நீங்கும்.

அழுகிரந்தி குட்டம் அடர்ந்த கரப்பான்
புழுவுறுமக் கூடுமுதற் போகும்—அழகாரும்
இந்திரநீ லக்கருங்கண் ஏந்திழையே ! எப்போதும்
அந்தரத் தாமரையா லாய்.

(அ.கு.)

இலையைச் சாறு பிழிந்து சுரசஞ் செய்து தெளிவிறுத்து 1/8 முதல் ¼ ஆழாக்கு வீதம் (தேனும் சிறிது கலந்து) கொடுக்க, குணத்தில் செப்பிய பிணிகள் தீரும்.

இலையை அரைத்து, அடிதள்ளிப் போதல், மூலம், வித்திருதி தாபிதம் இவைகளுக்குக் கட்டலாம்.

இலையைக் காடிநீரில் வேகவைத்து, நீரைப் பிழிந்துவிட்டு, திப்பியை, அழுகிரந்தி, குட்டம், கரப்பான் இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

அரிசி, தேங்காய்ப்பால், அந்தரத்தாமரையிலை இவைகளை ஒன்றுகூட்டிச் சமைத்துச் சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

இலையின் சுரசத்துடன், பந்நீரும், சருக்கரையுங் கூட்டி இருமல், சுவாசம், இவைகட்குக் கொடுக்கச் சாந்தமாகும்.

மூட்டுப் பூச்சிகள் நிரம்பிய இடங்களில், இப்பூண்டை வைக்க, இது வாடுந் தறுவாயில் உண்டாகும் ஓர்வித வெகுட்டல் மணத்தால், பூச்சிகள் மயங்கி இறக்கும்.

இப்பூண்டின் சமூலத்தைச் சுட்டுச் சாம்பலாக்கி, எச்சிற்றழும்பு, மண்டைக் கரப்பான் இவைகளுக்கும் பூச, அவைகள் நீங்கும்.

## 12. அந்திமல்லி—Andimalli.

வே-பெ : அந்திமந்தாரை, பத்திராக்ஷி.

Mirabilis Jalapa

Eng. Four o'clock flower.

| | |
|---|---|
| Tel. Chandra Kanta .. | Sans. Sanhya-raga |
| Mal. { Anti-malari / Anti-mantara | Pers and Hind. } Gule-aabbas |
| Kan. Mandhyana Mallige | Duk Gula-bash |

இது இந்தியாவில், எங்கும் தோட்டங்களை அழகுப்படுத்த பயிரிடப்படுகிறது

இது மாலையில 3, 4 மணிக்குப் பிறகு தான் மலரும். இதன் பூ வெண்மை, செம்மை, மஞ்சள், கலப்பு நிறமுள்ளதாயும் கண்களைக் கவரக்கூடியதாயுமிருக்கும்.

ப - உ—இலை-கிழங்கு.

### இலை.

சுவை : கைப்பு, தன்மை—வெட்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : வீக்கமுருக்கி—சோபாநாசிநி. Deobstruent.

### கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு,

செய்கை : மலமிளக்கி—மலகாரி—Laxative.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.

### இலை.

பண்பும் வழக்கும் :—கட்டிகளைப் பழுக்கவைக்க, இதன் இலையை வதக்கி, ஆமணக்கு நெய் தடவி, கட்டிகள் மீது போடலாம்

வெப்பத்தாலுண்டாகும் சொறி, சிரங்குகள் நீங்க, இதன் இலையின் சாற்றைத் தடவலாம்.

காயங்களை யாற்ற இலையை அரைத்துப் பூசலாம்.

### கிழங்கு.

மலத்தை இளக்கித்தள்ள, இதன் கிழங்கைத் தக்க அளவெடுத்து பால் விட்டரைத்து, பாலிற் கலக்கி, காய்ச்சிக் கொடுக்கலாம்.

பிளவைகள் குணப்பட, இதைப் புற்கை செய்து கட்டலாம்.
நெய்விட்டு வறுத்துண்ண, உடல் பலக்கும்.

அடிபட்டுண்டான வீக்கங்களுக்குக் கிழங்கை நீர் விட்டரைத்துப் பற்றிட லாம்.

## 13, அபினி—Abini

**கசகசா காயின் பால்.**

**Opium.**

**Eng. Papaver.somiferam**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Abhini** / **Nalla-mandu** | **Sans.** | **Ahipehnam** |
| | | **Arab.** | **Afyun** |
| **Mal.** | **Kasha-Kasha-Karappa** / **Apini** | **Per.** | **Mahanul** / **Tiryak** |
| | | **Hind.** | **Afynn.** |
| **Kan.** | **Aphimu** | **Duk.** | **Afim.** |

**போத்தக்காய் என்னும் கசகசக் காயைக் கீறியபின் அதினின்று வடியும் பால் உறைந்திருப்பதற்கு அபின் எனப்படும்.**

காய் பழுக்காததற்கு முன்பும், புட்ப இதழ்கள் உதிர்த்து எழுநாள் சென்ற பின்பும், இரண்டு மூன்று நீண்ட வட்டமான கீற்றுகளை, மேலோடு கீற, அதிலிருந்து பால் வடியும். ஆழமாய்க் கீறினுல், பால் வடியாது. பகல் வெயிலிற் கீறினுல், கீறின வாய்வழியில் பால் உறைந்து, கட்டிக் கொள்வதால், பால் ஏராளமாய் வடியாது. ஆகையால், மாலைப்பொழுதில் கீற, இரா முழுதும் பால் வடிந்து உறைந்திருக்கும். காலையில் இதைச் சுரண்டி எடுத்துக்கொள்ளக்கூடும். இவ்விதம் காயை இரண்டு, மூன்று முறை கீறிப் பால் எடுக்கலாம். எடுத்தபின் காற்று, வெயில் முதலியவைகளால் வறட்சியடையுமுன் இலைகளால் மூடிவைக்கவேண்டும்.

ஸ்மர்னு (Smyrna), துருக்கி (Turkey) இவ்விடங்களில் கிடைப்பதை தான் பெரும்பாலும் இங்கிலாந்தில் கையாளுகிறுர்கள்.

இந்தியாவில் பாட்னு (Patna), மால்வா (Malwa) ஆகிய நாடுகளில் விளைவதைக் கையாளுகிறுர்கள். இதர நாடுகளிலிருந்தும் வருகிறது. அபினியின் குணம் நாட்டு வளப்பத்தைப் பற்றியேயிருப்பதால், துருக்கி தேசத்தது மிகச் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. இந்தியாவில் பயிராவதில், மால்வாவில் விளைவது, பாட்னுவில் விளைவதைப் பார்க்கிலும் சிறந்தது.

புதுச் சரக்கு, பிசுபிசுப்பாயும், ஊதா நிறமாயும், ஓர்வித மணமாயுமிருக்கும்.

**செய்கை**
- துயரடக்கி—வேதநாசாந்தநி–Analgesic and Anodyne
- இசிவகற்றி—அங்காகர்ஷணந சநி Antip-sasmodic.
- தாபமகற்றி—உக்ரோகசமநகாரி–Anti-pholopistic.
- வியர்வைபெருக்கி—ஸ்வேதகாரி–Diaphoretic.
- சி நீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தநி–Diuretic.
- கோழையகற்றி—கபஹாகாரி–Expectorant.
- குருதிப்போக்கடக்கி-ரக்தஸ்தம்பனகாரி-Haemostatic-(Styptic)-
- உறக்கமுண்டாக்கி—நித்ராகாரி–Hypnotic Narcotic-மூர்ச்சை.
- யுண்டாக்கி Soporific-உறக்கமெழுப்பி Artisoporific.
- காதுவெப்பகற்றி—சமனகாரி–Sedative.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி–Stimulant.

**குணம் :** இதனால், குன்மம், வளிப்பிணிகள், காது நோய், பல்வலி, கழிச்சல், மந்தம், எலும்பைப்பற்றிய நோய்கள் மூக்கு நோய் ஆகிய இவைகள் போம். உடலுக்கு வன்மையும் உண்டாகும்.

நல்லவபி னிக்குணத்தை நாடறியும் நாம்புகல்வ
தல்லகுன்மம் வாதம் அருஞ்செவிநோய்—பல்லின்வலி
பேதிமந்தம் அத்திநோய் பீநசம்போம் வன்மையுண்டாம்
சாகியங் ரச்சுத்தி தான். (அ.கு.)

குறிப்பு.--அபினியைத் தூய்மைப்படுத்தி, நீரில் கலக்கி (ஆமனோபான்) என்னும் மருந்தாகவும், அபினியின் உப்பை (மார்பியா)என்னும் மருந்தாக வும் ஊசிவழி செலுத்தி துயர் அடக்கவும், உறக்கமுண்டாக்கவும் மிகுதியும் கையாளுகின்றனர். மேல்நாட்டு மருத்துவர் ஈதன்றி அபினியை நீ அல்லது சாராயத்தில் கலக்கித் துளிக்கணக்காய் மற்றைய மருந்துகளுட கூட்டியும் ஆளுகின்றனர்.

இதை நோயாளிக்கு வழங்குமுன் மேற்கூறியவாறு தூய்மை செய்து கொள்ளுதல் முறைமையாம்.

சுமார் 510 கிராம் அபினிக்கு 2·100 லிட்டர் நீநீர் கூட்டி, அதை மூன்று பங்கு செய்து, ஒரு பங்கு நீராகிய 850 மி.லி. நீரில் அபினியை நன்றாய்க் கரைத்து, ஒரு நாள் முற்றும் (24 மணி நேரம்) ஊறிய பின், வடிகட்டி, திப்பியில் இரண்டாவது பங்குநீரைக் கொட்டிக் கரைத்து, முன்போலவே செய்து, எஞ்சி நிற்கும் திப்பியை மூன்றாவது பங்கு நீரிற் சேர்த்து, முன்போலவே செய்து வடித்த நீர் யாவற்றையும் ஒன்றாகக் கூட்டி, நீர் யந்திரத்தில் காய்ச்சி, மெழுகு பதத்தில் எடுத்து, கல்கார்க்குப் புட்டியில் சேமித்து வைத்துக்கொண்டு, நோய்க்கும், நோயாளிக்கும் தகுந்த அளவில் வழங்க வேண்டும்.

சுத்தி செய்யாமலும், அதிக அளவிலும் செலுத்தில் கொல்லும்.
அபினியை வழங்குமுன் கவனிக்கவேண்டியவை :—

(1) சில நோயாளிகளுக்கு அபினி பொருந்தாமல் துர்க்குணத்தை விளைவிக்கும். இத்தகையார்க்குச் சிறிய அளவிற் கொடுத்தாலும், நாடி தீவிரம், தலை பாரம் அல்லது வலி, வெப்பம், அடிக்கடி வாய்க்குமட்டலுடன் வாந்தி, குடற்சுருக்கம், வியர்வையின்மை, தோல்வரட்சி, நித்திரை ஆகியவையுண்டாகும்.

(2) சிறுவர்கட்கும் குழந்தைகட்கும் அபினியால் மரணம் நேரிடுகிறதென்பதைப் பல வைத்தியர்கள் அநுபவத்தில் கண்டறிந்திருப்பதால், இதை முற்றுமே விலக்குவது அவசியமாகும்.

(3) முதிர்ந்த வயதுடையவர்க்கு, கொடுக்கவேண்டிய அளவிற்கு மிஞ்சினால், சுவாசம், இத்துடன் குறட்டை, கண்ணிருளல், மந்தபுத்தி உணர்ச்சியின்மை, நாடிமெலிந்து துடிப்புடன் நடத்தல், கண்தாரை சுருங்கல் ஆகிய துர்க்குணங்கள் நேரிடுமாகையால், மிகவும் கவனித்து, அளவு படுத்தி உபயோகிக்க வேண்டும்.

(4) அபினியால் தீங்குண்டாகுமென்று கணிக்கப்பட்ட நோயாளிகளுக்கு இதை அறவே நீக்கி, வேறு மருந்துகளை வழங்கவேண்டும்.

### மாத்திரை.

வ. கு: செரியாக்கழிச்சல், பெருங்கழிச்சல், நிணக்கழிச்சல் முதலிய வைகட்குச் சாதிக்காயைத் துளைத்து, அதற்குள் ஒரு குன்றி அபினியை யடைத்து, துளைவாய்க்குச் சாதிக்காய் தூளையிட்டு அடைத்து, ஒரு நீண்ட கதிரில் காயைக் குத்திக்கொண்டு, தேனிற்றோய்த்து, நெய்விளக்கில், காய் வேகும் வரையில் சுட்டு, கலவத்திலிட்டு அரைத்து மெழுகு பதம் வருஞ்சமயத்தில் சிறு பயறளவு மாத்திரைகள் செய்துகொண்டு, ஒரு நாளைக்கு 2, 3 முறை கொடுக்கத் தீரும்.

### பொடி.

சாதிக்காயை சோறு கொதிக்கும்போது அதிற் செருகி, வேகவைத் தெடுத்து உலர்த்தியதும், அபினியும் ஓர் எடை எடுத்துச் சூரணஞ்செய்து, அதில் 1, 2·065, ·130 கி. வெடுத்து 2 கி. கற்கண்டுப் பொடியிலோ அல்லது தேனிலோ கலந்து, நாள் ஒன்றுக்கு 2, 3 முறை கொடுக்க, கழிச்சல்கள் போம்.

### வேறு பொடி.

அபினி 1½, மிளகுப்பொடி 2, சுக்குத்தூள் 5, சீரகத்தூள் 6, பாதாம் பிசின் ½ பங்காக ஒன்று கூட்டிக் கலக்க அரைத்து 65 அல்லது 130 மி. கிராம் கொடுக்க கழிச்சல், சூலை, நித்திரையின்மை, இசிவு தீரும்.

### அல்லது

இப்பொடி 12 கிராம் எடை, வெல்லப்பாகு 40 கிராம் எடை சேர்த்து இலேகியங் கிண்டி 160 மி. கி. முதல் 650 மி. கி. ஒரு நாளைக்கு 2, 3 வரை முறை கொடுக்க, வயிறு பொருமியுண்டாகும் கழிச்சல், உடல்வலி நீங்கும.

### வடகம்.

அபினி 1, சுக்கு 2, சாதிக்காய் 2, சீரகம் 2, அதிவிடயம் 1, பேரீந்து 2 பங்கு எடுத்து, எலுமிச்சம் பழரசம் விட்டு மைபோலரைத்துக் கடலையளவு மாத்திரை செய்துலர்த்தி, 1, 2 மாத்திரை தேனில் கொடுக்க கழிச்சல் கட்டும்.

### கட்டுவாதிக் குளிகை.

(சிறுவர்கட்கு.)

சுத்தி செய்த சாதிக்காயைத் தொளைத்து, அதில் அபினி 3 குன்றி எடை செலுத்தி, சாதிக்காய்த் தூளால் துளைத்த வாயையடைத்து, மஞ்சளை யரைத்துக் காய்க்குக் கவசமிட்டு உலர்த்தி, அதற்கு மேல் சீலைமண் செய்துலர்த்தி, 1, 1½ வரட்டியிற் புடமிட்டெடுத்துக் கவசத்தை நீக்கி, காய் எடை அளவு பேரீச்சம் பழத்தைச் சேர்த்து மூலைப்பால் விட்டரைத்து, பச்சைப்பயறு அளவு மாத்திரையுருட்டி உலர்த்தி, ஒரு மாத்திரை தேனி லுரைத்துக் கொடுக்க, பேதி கட்டும்.

### அபினி எண்ணெய்.

ஒரு உச்சிக்கரண்டி நல்லெண்ணெயில், ஒரு பயறு அளவு அபினி கூட்டி எரித்து இரண்டு துளி காதில்விட, காது நோய், சீழ்வடிதல் நிற்கும்.

(வேறு)

ஒரு உச்சிக்கரண்டி நல்லெண்ணெயில், 65 மி. கிராம் அபினி கஸ்தூரிப்பட்டை வேர்ப்பட்டை ஒரு சிறிய துண்டு, சுக்கு ஒரு சிறிய துண்டு சேர்த்து, எரித்து வடித்து, காதில் 1, 2 துளி விட்டுவர, காதுநோய், காது குத்தல், சீழ்வடிதல் நீங்கும்.

ஓமத்துகள்.

ஓமம் 34 கிராம், கற்பூரம் 2 கிராம், சுட்ட வாதுமைக் கொட்டை யோட்டுக்கரி 17 கிராம், அபினி குன்றி ஒன்று, யாவையும் சேர்த்துப் பொடி செய்து பல் தேய்த்துவர, பல்வலி, ஈறுகட்டல், வாய் நாற்றம் போம்.

கண்ணோய்க்கு வேது.

அபினியை வெந்நீர்விட்டரைத்து வெந்நீரில் கலந்து, ஆவியெழும் படிகாய்ச்சி, அந்த ஆவியைப் பிடிக்க கண்ணோய் தீரும். அல்லது முற் கூறிய நீரைக்குளிர ஆறவிட்டுக் கண்களைக் கழுவி வந்தாலும், கண்ணோய் தீரும்.

புற்கை.

நோய்கூடிய வீக்கம், கட்டி, நீர்ப்பையழல் இவைகட்கு, ஊமத்தையிலை, தராயிலை வகைக்கு ஒரு பலம், சடாமஞ்சில், மஞ்சள் வகைக்கு 9 கிராம், அபினி ·130 மி. கிராம் அல்லது 195 மி. கிராம் இவற்றைச் சேர்த் தரைத்துப் போதுமான அளவு நல்லெண்ணெய் விட்டுக் கிண்டி, புற்கை செய்து, நோயுள்ள இடத்தில் பூசிவர, மிக்க நன்மையைத் தரக் கண்டுள்ளோம்.

மேல்பூச்சுத் தைலம்.

ஒரு வராகனெடை அபினியைக் கல்வத்திலிட்டு 510 கிராம் நல்லெண்ணெய் விட்டரைத்து, ஒன்றுபடக் கலக்கி, கற்பூரம் ஒரு வராக னெடை பொடித்துச் சேர்த்துத் தடவிவர, கீல்வாதம், இடுப்புவலி, கால் குடைச்சல், எலும்பைப் பற்றிய நோய்கள், பூப்பிணியில் காணும் வலி, சூலகவலி முதலிய நோய்கள் தணியும்.

மூலத்திற்கு.

துத்தியிலை, அரிசிமா, அபினி தக்க அளவில் சேர்த்து நீர் விட்டரைத்துக் களி கிளறிக் கட்ட, மூலவலி வீக்கம் குணமாகும்.

அபினியின் நஞ்சுத் தன்மைகளையும் முறிவையும் நஞ்சு நூலில் காண்க. நஞ்சு நூலில் கூறிய விதிப்படி அனுசரிக்க, அவை நீங்கும்.

---

## 14. அமுக்கிராக்கிழங்கு—Amukkurak-Kizhangu.

வே-பெ : அமுக்கிரி, அமுக்குரவி, அமுக்கூரவு, அமுக்கிருங்கிழங்கு அசுவகந்தம், அசுவகந்தி, அசுவம், இருளிச்செவி, கிடிச்செவி, வராககர்ணி.

Withania somnifera, Dunal.

Eng.—Winter cherry.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Penneru-gadda | Sans. | Aswagandha |
| Mal. | Amukkuram | Arb. | Habdul Kaknaje-Hindi. |
| Kan. | Sogade-beru | Pers. | Tukhma Kaknaje-Hindi |
| | | Urdu. | Asgandh |

இது இந்தியாவிலும் பெலுசசிஸ்தானத்திலும் பயிராகும் சிறு செடி கீழ் வங்காளத்தில் கிடைப்பதில்லை. இச்செடி சாம்பல் நிறமுள்ளது. காய் தக்காளிக் காயைப்போலத் தோலால் மூடப்பட்டு உள்ளே காயிருக்கும். பழுத்தால் பழம் செந்நிறமாயிருக்கும்.

ப. உ : இலை, விதை, வேர் (கிழங்கு).

சுவை : (யாவும்) கைப்பு, வீரியம்-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை.
- இலை—வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
- காய்.—சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- கிழங்கு.—உடற்றேற்றி—வியதாபேதகாரி—Alterative.
- ஆண்மைபெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
- வீக்கமுருக்கி—சோபாநாசநி—Deobstruent.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி Diuretic.
- உரமாக்கி—பலகாரி Tonic
- உறக்கமுண்டாக்கி—Hypnotic.
- உடல்வெப்பகற்றி—சமனகாரி Sedative.

குணம் : இக்கிழங்கு க்ஷயம் வளிக்கூட்டங்கள் காப்பான், சாம், வீக்கம் இவைகளைப் போக்கும் ; பசித்தீயையுண்டாக்கும்.

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகயம் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு-விஞ்சி
முசுவுறு தோடமும்போ மோகம்அன லுண்டாம்
அசுவகந் திகெகென் றறி. அ. கு.

அமுக்கிலுங்கிழங்கு.

.......................................
.......................................கோலை
நகுட வெருண்டுதிர நாட்டுவையேன் மேலை
நகுட வெருண்டுறுவாழ் நாள்.

(பொருள்)—அமுக்கினுங்கிழங்கை, பொடி நெய் முதலியன செய்து பயன்படுத்தினல், உறுதி, அழகு, நீண்ட ஆயுள் முதலியவைகள் உண்டாகும்

மேல்பூச்சு.

அமுக்கினுங்கிழங்கைப் பச்சையாய்க் கொண்டுவந்து, பசுவின் நீர் விட்டரைத்துக் கொதிக்கவைத்து, (கழலை) கிரந்தி, (கழுத்துக் கழலை) கண்டமாலை, வீக்கம், இடுப்புவலி இவைகளுக்குப் பற்றிட, இவைகள் விலகும்.

இதைச் சுககுடன் சேர்த்து வெந்நீர்விட்டரைத்து, வீக்கங்களுக்குப் போடக் கரையும்.

கிழங்கு அல்லது இலையை அரைத்து, மேகக்கட்டி, நோயுடன்கூடிய வீக்கம், புண் இவைகட்குப் பூசலாம்.

குடிநீர்.

கால் முதல் அரை பலம் எடையுள்ள இலையை விதிப்படி குடிநீர் செய்து கொடுக்கச் சுரந்தணியும். அல்லது ஊறல் நீர் செய்துங் கொடுக்கலாம்.

### அமுக்கராப் பொடி.

(1) கிழங்கைப் பாலில் வேகவைத்து அலம்பி, உலர்த்தி, பொடி செய்து ஒரு வேளைக்கு 2 முதல் 4 கிராம் வரை தேனிற் கலந்து கொடுக்க, வளி ஐயம் இவற்றால் பிறந்த நோய்கள், வீக்கம், பசியின்மை உடல் பருமன் இவைகள் போம்.

நெய்யுடன் கலந்து கொடுக்க, ஒய்ச்சல் பெருமூச்சு போம். உடற்கு வன்மைதரும். விந்துவைப் பெருக்கும்.

(2) அமுக்கிராக் கிழங்குப் பொடி 1 பங்கும், கற்கண்டு 3 பங்கும் சேர்த்து, வேளைக்கு 4 கிராம் காலை மாலை உட்கொண்டு, அரை அல்லது ஓர் ஆழாக்குப் பசுவின் பால் சாப்பிட்டுவர, நரம்புத் தளர்ச்சி ஆகிய இவைகள் நீங்கும்; உடல் வன்மை பெறும்; அழகு தரும்.

### அம்மான்பச்சரிசி

### 16, (சித்திரப்பாலாடை—Amman-pach-charisi)

**Euphorbia Pilulifera. E. HirtaE. Paviflora.**

**Eng.—Australian sthima weed**

| | |
|---|---|
| Tla. Raddivari Nanubalu | Kan. Akkigida |
| Mal. { Cherucheera / Nilapala } | Sans. Kshirini |
| | Hind. Dudhi |

இது பூண்டினத்தைச் சேர்ந்தது இது வெளிகளில் ஏராளமாய்ப் பயிராகும்,

பூமியுடன் ஒட்டிப் படர்கின்ற வகுப்பில், வெண்ணிறம், செந்நிறமுள்ளதும், பூமிக்குமேல் சிறு பூண்டைப்போல் வளர்வதில், வெண்ணிறம் செந்நிறமுள்ளதும் உண்டு. முற்கூறியதைச் சிறு அம்மான்பச்சரிசி யென்றும் பிற்கூறியதைப் பெரு அம்மான் பச்சரிசி யென்றும் வழங்குவர். ஆயினும், இவற்றிற்கு சுவையிலும், செய்கையிலும், பண்பிலும் மிக்க ஒற்றுமையுண்டு.

சுவை—துவர்ப்பும், இனிப்புமுள்ளது, தன்மை- சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி—Refrigerant.
எருவிளக்கி - மலகாரி—Laxative.
துவர்ப்பி - ஸங்கோசனகாரி—Astringent. }

### அம்மான்பச்சரிசி.

குணம் எரி புண், மலக்கட்டு, வெள்ளைக்கசிவு, மேகத்தடிப்பு, நமைச்சல் இவைகளை நீக்கும்.

காந்தல் விரணமலக் கட்டுமே கந்தடிப்புச்
சேர்ந்த தினவிவைகள் தேகம்விட்டுப் —பேர்ந்தொன்றாய்
ஓடுமம்மான் பச்சரிசிக் குண்மை இனத்துடனே
கூடுமம்மா னொத்தகண்ணாய் ! கூறு. (அ.கு.)

### சிவப்பு அம்மான்பச்சரிசி.

இது வாதப் பிரமேகத்தை நீக்கி, வெண்ணீரைப் பெருகச் செய்யும் திற்க, வெள்ளியை நீற்றும்.

அரத்தவம் மானப் சரிவெணு' மூலிச்
சுரதத வண்மேக மொழியும்—காத்தித்தொரு
விந்துவு முண்டாகும் வெள்ளி பொடியாம்
இந்துவினும் வாண்முகத்தாய் ! எண். (அ.கு

சிவப்பு அம்மான் பச்சரிசியை உலர்த்திப் பொடித்து, கற்கண்டுப் பொடியை அதனளவே சேர்த்து, வேளைக்குக் 85 கிராம் உட்கொண்டு, உடனே பசுவின்பாலைச் சாப்பிட, மேற்கண்ட நோய் நீங்கி, வெண்ணீரை (விந்துவை) பெருக்கும்.

## சிறு அம்மான்பச்சரிசி.

இதனால், மேக வெப்பம் தீரும், இதைப் பசுவின்பால் குணத்திற்கு ஒப்பாகக் கூறலாம்.

மேற்கூறிய அம்மான் பச்சரிசி இலைகளை, அரைக்காமல் தின்றாலும், அரைத்து, பால் அல்லது தயிரில் கரைத்துக் காலையில் உண்டுவந்தவும் மேற்குறித்த பிணிகள் தீரும்.

இவைகளின் காயைத் துவையல் செய்து சாப்பிட, எருகட்டு ஒழியும்.

இதன் பாலை, புண்களுக்கும், உதடு நா வெடிப்புகளுக்குத தடவி வர, புண்ணாறும். நகச்சுற்றுக்குந் தடவலாம்.

சிறு அம்மான் பச்சரிசிப் பாலை இலிங்கத்திற்குத் தடவி உலர்த்தி, பிறகு அப்பாலால் சுருக்கிட, இலிங்கம் கட்டும். இது மேகப் பிணிக்கு இறைச்சரக்காகும்.

யாதுபுகல் வேணமுதா ஙங்கி கருமெழுகாந்
தீதுபுரி மேகவெப்கந் தீருமினும்—ஓதுங்காற்
றே ம்மான் ஈரமொக்குந் தின்னுதயஞ் செம்மைநிறச்
சிரம்மான் பச்சரிசிச் சீர்.

(அ.கு)

## 16. அம்மையார் கூந்தல்—Amamiyarkundal.

**வே-பெ :** அவ்வை (ஔ)யார் கூந்தல், குதிரைவாலி, முதியார் கூந்தல், முருவிலி மிரியார்ர் கூந்தல், சரண்.

Cuscuta, reflexa

| | | | |
|---|---|---|---|
| Mal. | Talanili | Hind. | Gandhali |
| Sans. | Peasarini | | |

இது இந்தியாவில் தென் சமவெளிகளில் கன்னிச்சையாக வளருறது.

**ப-உ :** மூலம்.

**சுவை :** கைப்பு, தன்மை - சீதம், பிரிவு - கார்ப்பு.

**செய்கை :**
- துவர்ப்பி-ஸங்கோச சனகாரி—Astringent.
- உடற்றேற்றி-வியதாபேதகாரி Alterativ.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்கினிவர்த்தநி—Stomachec.

குணம்—இதனால், மூலக்கடுப்பு, பெருங்கழிச்சல்கட்டி, சுரவேகத்தினுண்டான நாவறட்சி, இடுப்புவாதம், வெள்ளை, இருமல், கட்டி, படுவன், கண்மங்கல் கோழை, பசியின்மை, தினவு ஆகிய இவைகள் நீங்கும்.

கடுப்பு கஜிச்சல் கணன்றசுர தாகம்
இடுப்புவலி வாத மிவற்ரே—டடுப்ப
விதிரைவா வென்றழைக்கு மேகமும் போகுப்
குதிாைவா லிக்குக் குலேந்து.
காசம் பருப்படுவன் கண்மயக்க மீளேயோடு
வாசங் கமழ்குழலாய் மாந்தமும் போம்—பேசத்
தரியாது வாதகபந் தடனே சொறிபோம்
மிரியார்கூந் தற்கு விரைந்து. (அ.கு.)

முதியார் கூந்தலே அரைத்து, இளநீரிற் கலக்கிக் குடிக்க. மாருச்சுரமும் முப்பிணியும் தீரும்.

பிரிந்த இளநீரிற் பின்முதியார்க் கூந்தல்
அறிந்ததனின் வேரை யரைத்துச்—சொரிந்துண்ண
மாருச் சுரமுடனே வாதபித்த சேத்மமும்
கூருகப் போகுங் குளிர்ந்து. (தே.அந்.)

அம்மையார் கூந்தல் குடிநீர்

முருவிலிநன் ளுரியோடு வெள்வெங் காய
முதிர்வசம்போ டிந்துப்பு கடுக்காய் முள்ளி
வருவியநா ரத்தையெலு மிச்சை வெள்ளே
வக்கணு மலேதாங்கி கீழ்க்காய் நெல்லி
வருசுரையும் பூசுணேயும் பேய்ப்பாற் சொற்றி
வளர்குறட்டை மால்காந்தி வகையொன் ருக்கிப்
பெருகநல் நீர்விட்டுக் காய்ச்சிக் கொள்ளப்
பலத்தவிட சுரவீக்கம் பெயர்த்து போமே.
(தேரையன் குடிநீர் 100).

பொருள்: அவ்வையார் கூந்தல், நன்ளுரி, வெள்வெங்காய, வசம்பு, இந்துப்பு, கடுக்காய், நெல்லிமுள்ளி, நாரத்தைத்தோல், எலுமிச்சைத் தோல், வக்கணுத்தி, மலேதாங்கி, கீழ்க்காய்நெல்லி, சுரை பூசணே, பேய்ப் பாறசொறி, குறட்டை கொகணம், விஷ்ணுகாந்தி ஆகிய வற்றைச் சம எடை யில் சேர்த்து குடிநீர் செய்து பருக, வன்மையான விஷக் காய்ச்ல் வீக்கம் முதலியன நீங்கும்.

## 17. அரசு—Arasu.

வே - பெ: அஸ்வத்தம், அச்சுவத்தம், திருமரம், கவலே, பேதி, பணே, கணவம், சராசனம், பிப்பிலம்.

Ficus religiosa, Linn.

Eng.—The Peepul tree: Sacred fig.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ravichettu | Sans. | Aswdtha |
| Mal. | Areyal<br>Arasu | Urd. | Peepul paras. |
| | | Hind. | Pipol. |
| Kan. | Aswathamara<br>Pimpala | Duk. | Anipeepul. |

இது இந்தியாவில் சதாரணமாக எங்கும் பயிராகிற பெருமரத்துள் ஒன்று.

ஆனி முதல் ஆவணித்திங்கள் வரையில் பூக்கும். இம்மரம் தெய்வத தன்மையுடையதென நம்பப்படுவதால், இதனைக் கோவில்களிலும் கோவில்களுக்கு அடுத்துள்ள இடங்களிலும் வைத்துப் பயிராக்கப்படுகிறது

"அரச மரத்தைச் சுற்றி விட்டு அடிவயிற்றைத் தொட்டுப்பார்த் தாள்".

என்னும் பழமொழியும் உண்டு. இப்பழமொழியும், இவ்விலை சூலகத் துண்டாம் கோளாறுகளைப் போக்கும் தன்மையுடையதால் எழுந்தது போலும்.

ப. உ. இலை, வித்து, பட்டை, வேர்.

சுவை—துவர்ப்பும், கைப்புமுள்ளது, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : வித்து—மலமிளக்கி · மலகாரி (Laxative and cooling)
இலை, வேர், பட்டை —துவர்ப்பி - ஸங்கோசனகாரி (Astringent)

குணம் : இலைக்கொழுந்து- உடல் வன்மையைப் பெருக்கும். சுரத்தையும் முக்குற்றத்தையும் போக்கும். அன்றியும் சூலகத்துண்டாம் கோளாறுகளைப் போக்கி, சூல் அமையசெய்யும்.

பிள்ளைப் பேறு இல்லாதார் இம்மரத்தை நாள்தோறும் சுற்றி வந்து வணங்குவதுண்டு.

விரை : இளகக் கழியச் செய்யும்.

மரப்பட்டை, வேர்ப்பட்டை - புண்களை ஆற்றும்.

அரசவேர் மேல்விரணம் ஆற்றுமவ் வித்து
வெருவவரும் சுக்கிலநோய் வீட்டும்—குரல்வறள்வி
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேகமுத்தோ டம்போக்கும் மெய். (அ. கு.)

இலைக் கொழுந்தைப் பாலில் அவித்து சருக்கரை சேர்த்துண்ணக் காய்ச்சல் முப்பிணி தணியும்.

வித்தைத் தக்க அளவில் பொடி செய்து உட்கொண்டுவர, மலச்சிக்கல் குரல் வறட்டல் போம், பசித்தீ பெறும்.

பட்டையை இடித்துப் பொடியாக்கிக் கருக்கிய சாம்பலில் கொஞ்ச மெடுத்து, நீரில் ஊறவைத்து வடிகட்டிக்கொடுக்க, விக்கல் போம்.

பட்டைத்தூளில் கால் முதல் அரைப்பலமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்க, சொறி சிரங்குகள் குணமாகும். வெப்புமகலும்.

பட்டையின் நுண்ணிய துகளைப் புண்ணின் மீது தூவிவர, புண் ஆறி வரும்.

ஐந்து துவர்ப்புப் பொருள்களில் அரசுமொன்று. ஆகையால், இவ் வைந்து பட்டைகளின் குடிநீரை, வாய்ப்புண்ணுக்குக் கொப்பளிக்கும் நீராக வும், வெள்ளையில் நீர்த்தாரை வழியாகச் செலுத்திக் கழுவும் நீராகவும் பயன்படுத்தலாம். அவைகளால் காய்ச்சிய எண்ணெயையும் கையாளலாம்.

இம்மரத்தில் வளரும் புல்லுருவியின் இலையை அரைத்துப் பிள்ளைபேறு இல்லாப் பெண்கட்கு எலுமிச்சம் பழம் அளவு மூன்று நாள் சூதகத் திற்கு முன்பு கொடுத்துவர, சூல் அமையும்.

இம்மரத்தைக் குத்துவதனுல் வடியும் பாலைப் பாதத்தில் காணும் பித்த வெடிப்புகளுக்குத் தடவலாம்.

## 18. அரத்தை—Arattai.

Alpini galanga,

சிற்றரத்தை, Chittaratai, பேரரத்தை. Perarattai.

Eng. Galangal the lesser, Glangal the greater.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sanna-rashtramu<br>Thumpa rashtramu | Mal. | Aratha |
| | | Kan. | Rasmi |
| | | Sans. | Rasna |
| | | Urd. | Khulanjan |

அரத்தையில் இரு பிரிவுகள் உண்டு. அவை சிற்றரத்தை (2) பேரரத்தை. இவைகள் இந்தியாவில் பயிராகும்.

ப-உ : வேர்.

**சுவை—கார்ப்பு, வீரியம்—வெப்பம், பிரிவு—கார்ப்பு.**

செய்கை :
- கோழையகற்றி—கபஹரகாரி-Expectorant.
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி-Febrifuge.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி-Stomachic.

இரு அரத்தைகளின் குணம்—நெஞ்சுக்கோழை, ஈளை, இருமல், நாட்பட்ட ஐயம், கரப்பான், மார்புநோய், வீக்கம், பல்நோய், வாதசோணிதம், தீச்சுரத்தாற் பிறந்த ஐயம் ஆகிய இவைகளைப் போக்கும், பசியைதரும்.

தொண்டையிற்கட் டுங்கபத்தைத் தூரத் துரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்கும்—கெண்டைவிழி
மின்னே ! கரப்பனேவே ருக்கும் பசிகொடுக்கும்
சொன்னோம் அரத்தைச் சுகம் (அ.கு.)

மார்பை யடர்பிணிசு வாசகா சம்மூலம்
சோபைதட்டச் சூர்வாத சோணிதநோய்—தீபச்
சுரத்தை யடுபபுர்பல் தூருறுகண் நேரின்
அரத்தை யெடுதுகள தாம். (தே.கு.)

அரத்தையின் குணத்தைக்கேளீர் அக்காஞ் சந்தி போக்கும்
உரத்தொரு இருமல் மாற்றும் ஓங்கிய உதிரம் போக்கும்
இரைத்திடுங் காச மெட்டும் விஞ்சிய க்ஷயமுந் தீரும்
சுரத்தையும் நீக்கு மென்று சொன்னது வேத நூலே. (ஏடு.)

வழங்கும் அளவு : அரத்தைப் பொடியை 2 முதல் 4 கிராம் தேனுடன் கலந்து கொடுத்து வந்தாலும், 8 கிராம் எடை அரத்தையைச் சிதைத்து, 350 மி.லி. வெந்நீரிற்போட்டு, மூன்று மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, 22 மி.லி. (அ) 44 மி.லி. வீதமெடுத்து, கொஞ்சம் தேன் விட்டுக்கலந்து கொடுத்துவந்தாலும், மேற் கண்ட நோய்கள் நீங்கும்.

### சிற்றரத்தையின் சிறப்பு.

வளி, ஐயக் குற்றங்கள், கரப்பான், வாயு, தலைநோய், சீதளம், இருமல், பழைய சுரம் ஆகிய இவைகளைப் போக்கும்.

வாதபித் தங்கரப்பான் வாதஞ் சிரோரோகஞ்
சேர்ந்தகப மூத்தோடஞ் சீதமொடு—நேர்ந்தசுரம்
மற்றரத்தைக் காட்டி வருமிரும லுந்நீரும்
சிற்றரத்தை வண்மருந்தால் தேர். (தே.கு.)

ஒரு துண்டு சிற்றரத்தையை வாயிலிட்டுச் சுவைத்துவர, தொண்டையிற் கட்டும் கோழை, வாந்தி, இருமல் தணியும்.

அழலொடு உண்டாகும் கோழைகட்டுக்கு இதை வழங்கும்போது ஒரு துண்டு கறகண்டையும் சேர்த்துக்கொள்ளவும்.

சிறு குழந்தைகளுக்குண்டாகும் முக்குற்றப் பிணிகட்கு, இதைச் சுட்டுத் தேனில் உரைத்து, முலைப்பாலிற் கலந்து புகட்டுவது வழக்கம்.

அதிமதுரம், தாளீசம், திப்பிலி, சிற்றரத்தை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து, அம்மியிலிட்டு நீர்விட்டரைத்து, கால ஆழாக்கு நீரில் கலக்கிப் பொங்கவிட்டு வடித்து, தேன் சிறிது கூட்டிப் புகட்ட, இருமல் கோழைகட்டு, குத்திருமல், தலைவலி, சீதளம், ஐயப்பெருக்கு, காய்ச்சல் முதலியவை நீங்கும்.

## பேரரத்தையின் சிறப்புக்குணம்.

இது, வளிநோய், உடல்வலி, புறவலி (பின்னிசிவு), அழலையம், ஐயசுரம் முப்பிணி, தலைப் புண், தலையின் நீரேற்றம், சூதகவலி, நஞ்சுகள் ஆகிய இவைகளைப் போக்கும். உடல் அழகுமிகும்,

அரத்தை கபத்தை அறுக்குங்கால் ஓட்டுஞ்
சிறத்திலுறும் ஈளையைச் சிதைக்கும்—இரைத்துவரும்
பித்ததோ டத்தைப் பிறவலிப்பை மாற்றிவிடும்
உற்றசர்வ வல்விடம்போக் கும். (அ.கு.)

சந்நி யுபட்சிரணஞ் சார்ந்தசீ தச்சுரம்போம்
வன்ன மிகுந்து வளருங்காண்—கன்னியர்கள்
மாதவிடாய்க் காகும்வலி வாதக் கடுப்பகலும்
பேதமிலை பேரரத்தைப் பேறு. (அ.கு.)

வாத மிசிவு வலிசந்தி பித்தையஞ்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ-ரோதுபல
வாங்கடுப் பூப்படறு மாறு மொளியாகு
மீங்கடரும் பேரரத்தை யால். (அ.கு.)

## 19. அரிவாள்மூக்குப்பச்சிலை—Arival mukkuppachchilai

Sida Oarpini (ola

அரிவாள் மனைப்பூண்டு

ப-உ: இலை, வேர், பட்டை, கனி, விதைகள்.

சுவை: துவர்ப்பும் சிறிது கைப்புமுள்ளது. தன்மை-வெப்பம் பிரிவு-கார்ப்பு.

செய்கை: குருதி பெருக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—styptic.

குணம்: ஆயுதங்களாலுண்டாகிற காயத்தை ஆற்றும். கொடிய விடத்தையும், இரத்தக் கெடுதியால் பிறந்த தலை நோயையும் நீக்கும்.

வெட்டுக்காயத்தை விரைவி லுலர்த்திவிடும்
துட்டக் கடுவோட்டுந் தோன்றிமிகக்-கெட்ட
பிரிவாற் றலையைப் பிளக்கும் வலி நீக்கும்
அரிவாள் மூக்குப்பச்சிலை. (அ.கு.

வெட்டுக் காயமுள்ளவிடத்தில், இப்பச்சிலைஸ்யயரைத்துப் பூச குருதி பின் பெருக்கை யடக்கும். காயம வெகு சீக்கிரத்தில் ஆறிப்போம். இது வெளிகளில் தன்னிச்சையாய் பயிராகும் பூண்டினம். தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும்.

இப்பச்சிலையுடன், மிளகு, பூண்டு, சேர்த்துக் கற்கமாக்கிக் கொடுக்க, நஞ்சுகள் நீங்கும். தலைநோயும் விலகும்.

## 20. அருநெல்லி—Aru Nelli.

**Phyllanthus distichus.**

**Eng.—Country Goose-berry.**

| | |
|---|---|
| Tel. Racha-Usherika | Sans. Leavani. |
| Mal. Arinelli | Hind. Chemrsi, Haraphalvadi. |
| Kan. Kirunelli | |

இது சிறு மரக்கூட்டத்திற் சேர்ந்தது. இந்தியாவில் தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்படுகிறது மலேயா நாட்டில் ஏராளமாகப் பயிராகின்றன.

ப-உ : இலை, காய், விதை வேர்.

**காய்**

சுவை : புளிப்பு, துவர்ப்பு, விரியம்-தட்பம். பிரிவு-கார்ப்பு.

செய்கை :
- இலை—வியர்வைபெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.
- விதை - மிலமுளக்கி—மலகாரி—Laxative.
- காய்—பித்தசமனி—பித்தசாந்திநி—Antibilious.

**இலை**

வ-கு : இதை அரைத்துப் புன்னைக்காயளவு கால்படி மோரில் கலந்து, மூன்று நான்கு நாட்கள், காலையில் மாத்திரம் சாப்பிட, காமாலை நீங்கும். இதைக் கொள்ளும்போது, உப்பை நீக்கி, சோற்றுடன் வெள்ளாட்டுப்பால் விட்டுக் கலந்து சாப்பிடவும்.

**காய்**

வ-கு : இக்காய் ஜுரத்தையும் இருமலையும் உண்டாக்கும். ஆனால் நீர் வேட்கை, அழல், உட் சூடு இவைகளைப் போக்கும்.

அருநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்பித்தம் போக்கும்
மருவுதுவர்ப் பால்* துரிசை மாற்றும்—விரியுலகில்
தாகத் துயர்நீக்குஞ் சாரிரும லைத்தொலைக்கும்
ஆகக் கொதிப்பகற்று மாங்கு. (அ·கு.)

*துரிசு—துன்பம்

வ-கு : அருநெல்லிக்காய்ச்சாறு, பச்சை திராட்சரசம், வெள்ளை வெங்காய்ச்சாறு வகைக்கு ஓர் அளவாகக் கூட்டி, அதில் அரையாழாக்கெடுத்து, அதில் படிகாரபற்பம் 2 சிட்டிகை சருக்கரை நான்கு சிட்டிகை சேர்த்து வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

அருநெல்லிக்காய்ச்சாறு ஒரு பங்குடன், இரண்டு முதல் மூன்று பங்குச் சருக்கரை சேர்த்து மணப்பாகு செய்து, உட்சூடு, வறட்சி, நீர்வேட்கை இவைகளுக்கு 15 முதல் 30 மி.லி. வீதம், தண்ணீருடன் கலந்து வழங்கலாம்.

அருநெல்லிவற்றல், சீரகம், நெற்பொறி, திப்பிலி வகைக்கு ஒன்றே கால் வராகனெடை எடுத்துக் குடிநீர் செய்து, அதில் கொஞ்சம் சருக்கரை சேர்த்து, வாந்தி நிற்கக் கொடுக்கலாம்.

அருநெல்லி வடகத்தைத் துவையலாக வழங்க, அழல் தணியும், உடல் குளிர்ச்சியடையும் ; கண் ஒளி பெறும்.

**வேர்.**

இதனால், தனிச்சுரம், சுவையின்மை, வாந்தி, ஆகிய இவை போம்.

சுத்த சுரம்அருசி* தோலாப் பெரும்வாந்தி
பித்தசந்நி பாதமிவை பேருங்காண்—மெத்தமணம்
நாறுமலர்க் கூந்தன்மின்னே நாவுக் கினிமையெனக்
கூறுமரு நெல்லியின் வேர்க்கு. (அ.கு).

* தோலா—இளைக்காத.

கு-வ : இதை அரைத்துக் கொடுக்க, அரோசகம், சுரம், வாந்தி நீங்கும். )நாளொன்றும் அளவு கால்பலமாகும்.

**வித்து.**

இதை உலர்த்திப் பொடி செய்து, கால் பலமெடுத்துச் சருக்கரை கலந்துண்ண, மலமிளகும்.

## 21- அலரி Alari.

**வே - பெ : கத்தூரிப்பட்டை, கணவீரம், கரவீரம், கவீரம்.**

**Nerium odorum, Soland.**

**Eng.—The Oleander**

| | |
|---|---|
| Tel. Gannéru | Arab. Difli |
| Mal. Alari, Araḷi | Pers. Khar-zahra |
| Kan. Kanagale | Hindi: Kanér, Kanél, Karher |
| Sans. Karaveera | |

இது செடி வகுப்பிற் சேர்ந்தது. இதை வட இந்தியாவிற்குரியதாகக் கொள்ளப்படினும், தென்னிந்தியாவின் தோட்டங்களிலும் ஏராளமாய்க் காணலாம். இதில் வெண்மை, செம்மை, அழுக்கு மஞ்சள் நிறமுள்ள பூக்கள் பூக்கும் வகைகளுண்டு. வெண்ணிறப் புட்பமுள்ள செடி வெள் அலரி என்றும், மஞ்சள் நிறப் புட்பமுள்ளது மஞ்சாலரி என்றும் வழங்கும். செந்நிறப் புட்பமுள்ளது தன்னுள் செவ்வலரி, குங்கும அலரி என இருவகுப்பையும் பெற்றிருக்கின்றது.

ஒவ்வொரு வகையிலும், ஓரடுக்கு முதல் பல அடுக்கு இதழுள்ள புட்பங்களுண்டு. குணத்திலும், சுவையிலும், செய்கையிலும் சற்றேறக்குறைய நன்றாகவே இருக்கும். வருடமுற்றும் பூக்கும்.

ப - உ : பூ, வேர்ப்பட்டை.

சுவை : கைப்பு, வீரியம் – வெப்பம், பிரிவு – கார்ப்பு.

செய்கை :
- வாந்தியுண்டாக்கி - வமநகாரி - Emetic.
- நீர்மலம்போக்கி – விரேசனகாரி – Purgative.
- புழுக்கொல்லி – கிருமிநாசநி – Anthelmintic.

**பூ.**

குணம் : காய்ச்சல், அரோசகம், குட்டம், நமைச்சல், புண், கிரந்தி, இரத்த

தக்கட்டி, பித்தநோய், தலையெரிவு இவைகளைப் போக்கும்.

வெப்பருசி குட்டம் விதாகம் சொறிசிரங்கு
செப்பிரத்தம் புண்பித்தஞ் சென்னியெரி—விப்படியில்
தங்குமோ கும்பத் தனத்தணங்கே ! வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு.

(அ.கு.)

**வேர்ப்பட்டை.**

வ - கு : இதற்கு விடத்தை மிகுதிப்படுத்தும் குணமிருப்பதால், இதை அரைத்து நல்லெண்ணெயிற் கலக்கிச் சாப்பிட, தோடங்கள் விகற்பப்பட்டு இது உயிரைப் போக்கும்.

வேர்ப்பட்டையை நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சிக் காதில் 2, 3 துளிவிட, காதில் வடியும் சீழ், காதுவலி, காதுபுண் இவைகள் நீங்கும். காதிற்றங்கிய பூச்சிகள் சாகும்.

மேற்படி பட்டையுடன், அபினியும் கொஞ்சம் சேர்த்துக் காய்ச்சி ஷை நோய்களுக்கு வழங்க இது மிக்க நன்மை தரும்.

வேர்ப்பட்டையின் சாறு தாம்பிரக் களங்கைச் செந்தூரிக்கும்.

## 22, அலிசி விதை Alishivirai

**Linum Usitatissimum.**

**Eng—Linsee Seeds of.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Atasi, Madana-ginjalu | Arab. | Bazrul Kattan |
| **Mal.** | Cheru-Chauattine-Vitta. | Pers. | Thukhme Zaghir*, Tukhme katan |
| **Kan.** | Alashi.: | Hindi | Alsi, Tisi * |
| **Sans.** | Atasi., Masrina | Duk. | Alsi-keinj. |

குறிப்பு : அலிசி விதையும் ஆளி விதையும் ஒன்றென்று சிலர் கருதியுள்ளனர். இது தப்பான கருத்து.

இஃது சிலோன், இமாலயம், மேற்குத் தொடர்ச்சி மலை முதலிய இடங்களிலும் பயிராகின்றது.

ப - உ : பூ, விதை, எண்ணெய்.

சுவை—இனிப்பு - துவர்ப்பு, தன்மை - சீதம், பிரிவு - இனிப்பு.

**பூ**

குணம் : இதன் பூ இருதயத்துக்கு வலுவைத் தரும்.

செய்கை :
- ஆண்மை பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac
- வரட்கியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent

**அலிசிவிதை.**

வ - கு : இஃது இருமல், நீர் எரிச்சல், வெள்ளை, நீரடைப்பு, நீர்க் கோவை, சூதகசந்நி, தீப்புண், உள்தாபிதம், வீக்கம், கட்டிகள், கண் நோய் ஆகிய இவைகளை நீக்கும்.

அலிசி விதையைப் பொடித்து, சுத்தமான நீரில் ஊரவைக்கக் குழம்பாகும். அதை வடித்து பிசைந்து எடுத்துக் கண்ணிவிட, கண்கசிப்பு, கண் அரிப்பு, கண் எரிச்சல் மாறும்.

இப்பசையுடன் தேன் கலந்து கொடுக்க, நீர்க்கோவை, இருமல் நீங்கும்.

இதன் ஊறல் குடிநீரால் (1 பங்கிற்கு - 32 பங்கு நீர்)-ஈளை, இருமல், சிறுநீர் எரிச்சல், நீரடைப்பு, வெள்ளை இவைகள் தீரும். இதையே நீர்த் தாரை, எருவாய் வழியே செலுத்த, அவைகளைச் சேர்ந்த நோய்கள் தணியும்.

குடிக்கக்கூடிய அளவு நீரில் இவ் விதையைப் பொடித்துக் கூட்டி, இரவு முற்றும் வைத்திருந்து மறுநாள் காலையில், அதில் கொஞ்சம் எலுமிச்சம் பழச்சாறு சேர்த்துக் குடித்துவர, இளைப்பு நோய், அழலை, வியர்வை தணியும்.

இதன் எண்ணெயை மேற்கூறிய நீருடன் கலந்து உட்கொண்டுவர இளைப்புங்போம். மூச்சடைப்புத் தணியும்.

விதையை அரைத்துப் புற்றை செய்து கட்ட, நோய் வீக்கம் குறையும். பழுக்காத கட்டிகள் பழுக்கும். உட்டாபிதங்களைப் போக்கும்.

எண்ணெய்.

இதன் எண்ணெய் 1 பங்கும், சுண்ணாம்புத் தெளிநீர் ½ பங்கும் கூட்டிக் குழைத்து இறகாலெடுத்துத் தடவிவர, நெருப்பாலுண்டான புண், வெந்நீர்ப்புண் இவை ஆறும்.

## 28. அல்லி—Alli.

வே - பெ: ஆல்பம், குமுதம், கைரவம்.

Nymphaeastllata

Eng. The Water Lilly (White).

| | |
|---|---|
| Tel. Kalava | Arab. and Pers Nilu far. |
| Mal. Allit-tamara | Urd. Challani * |
| Kan. Nyadale huvu | Hind. Kanval * / Chhotta Kanval* |
| Sans. Kumudam | |
| (Hebrs. | |

இஃது இந்தியாவில் குளங்களிலும், குட்டைகளிலும் பயிராகும். கொடி வகுப்பிற் சேர்ந்தது. வெண்மை, செம்மை, வெண்மையுஞ் செம்மையுங்கலந்த நிறம் ஆகிய பூக்களையுடைய வகைகள் இதில் உண்டு. குளிர்காலத்திலும் மழைக் காலத்திலும் இது ஏராளமாகப் பூக்கும்.

ப - உ: பூ, கொடி, இலை, கிழங்கு, காய்.

சுவை—சிறு துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை: வறட்சியகற்றி—ஸ்நிர்தகாரி—Emmolliant.

குணம்; அல்லி, புட்ப நிறத்தால் மூவகைப்படினும், குணத்தில் பெரும்பான்மை ஒன்றாகவே இருக்கும்.

## வெள்ளல்லியின் பூக்குணம்.

இதனால், மேகம், நீர்புழையின் புண், நீரிழிவு, நீர்வேட்கை, உட்சூடு ஆகிய இவைகள் விலகும்.

மேகமறும் புண்ணாறும் விட்டேகும் நீரிழிவு
தாகந் தணியும் தழலகலும் - வாகான
மெல்லியலே ! ஆயுள்மறை வேதிய ரெலாமுரைக்கும்
அல்லி மலரால் அறி. (அ.கு.)

## செவ்வல்லியின் பூக்குணம்.

இதனால் நீர்ப்பிணி (நீரிழிவு), வெப்பத்தாலுண்டாகும் கண்ணோய்கள், குருதியழல், புண் முதலிய பல பிணிகள் தீரும்.

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்ப்பிணியோ
டொவ்வுமே கப்பிணியும் ஒய்வதன்றி—இவ்வுலகிற்
கண்ணின்நோய் தீரும் கனத்தபித்த ரத்தமொடு
புண்ணின்நோய் பன்னையும் போம்.

(அ.கு.)

வ - கு : மேற்கண்ட நோய்களுக்குப் பூவைக் கொண்டு மணப்பாகு செய்தும், கிழங்கைப் பொடி செய்தும் தக்க அளவில் கொடுக்கலாம்.

கொடியும், வெப்பத்தைத் தணிக்கும் எண்ணெய்களிற் சேரும்.

இலையைக் குடிநீரிட்டுப் புண்களைக் கழுவலாம்.

கிழங்கை உட்கொள்ள, மேக அனல், உட்டினம், தாகம் ஆகிய வெப்ப ரோகங்கள் தணியும்.

பூஞ்சாற்றாலும், கிழங்கின் சாற்றாலும் கற்பூர சிலாசத்தைப் பற்பமாக்கி வழங்க, மேகப் பிணிகள், மேக அழல், உட்சூடு, நீர்வேட்கை, குருதியழல் நோய் முதலியவை நீங்கும்.

## 24. அவரை —Avarai.

வே - பெ : சிம்பை. சிக்கிடி, நிட்பாவம், நகுலி, நிஷ்பவம்.

Name : Dolichos lablab,

| | |
|---|---|
| Tel. Chikkudu | Sans. Nishpava |
| Mal. Avara | Urd. Samki-Phalli |
| Kan. Avare | |

இது கொடி வகுப்பைச் சேர்ந்தது ; தென்னிந்தியாவில் வீடுகள் தோறும் பயிரிடப்படுவதிலொன்று. ஆடித் திங்களில் விதை நடப்படும். இஃது ஆறு மாதப் பயிர்.

இப்பெயரால் வழங்கப்படும் அவரை வகைகள் பலவுண்டு.

அவை : (1) சீனியவரை Cyamopsis psovaloides
(2) செவ்வவரை Dolichos lablab (with red flowers).
(3) நகரவரை Dolichos rugosus Nob.
(4) வெள்ளவரை Dolichos lablab (with white flowers).

ப - உ : இலை, பிஞ்சு, காய்.

## இலை.

சுவை—துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : அகட்டுவாய்வகற்றி—உதாவாதஹரகாரி—Carminative
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent

பண்பு : அவரை இலையால் தலைநோய், கழிச்சல், ஊழி, புண் ஆகிய இவை போம். இது பசித்தீயைத் தூண்டும்.

அவரையிலைக் குத்தலைநோய் ஆழ்ந்த கிராணி
இவரும் விடூசிமுதல் ஏகுந்—தவராமல்
கொண்டவர்க்குத் தீபனமாங் கோதாய்! விரணமறுங்
கண்டவர்க்குத் தோற்றுமிது காண். (அ.கு.)

வ- கு : அவரையிலைச் சாற்றுடன், கொஞ்சம் சுண்ணும்பைச் சிற்று மணக்கெண்ணெய் விட்டுக் குழைத்து, புண்ணின் மேற் பூசப் புண்ணாறும்.

இச் சாற்றுடன் கற்கண்டுப் பொடி கூட்டிக் கிளறி, கொட்டைப் பாக்களவு கொள்ள, சீதக் கழிச்சல், நாட்பட்ட கழிச்சல் முதலிய வயிற்றுப்போக்கு நிற்கும்.

ஒரு துண்டுச் சீலையை, இச் சாற்றில் நனைத்து நெற்றிமேற் போட்டு வர, தலைநோய், தலைபாரம் நீங்கும்.

## பிஞ்சு.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

செய்கை : தாதுவெப்பகற்றி-சமனகாரி Sedative

குணம் : விதை முதிராத வெள்ளவரைப்பிஞ்சு முக்குற்றம், புண், காய்ச்சல், கண் விழிக்குள் ஐயத்தால் உண்டான பில்லம் முதலிய நோய் யுற்றோர்க்கும், மருந்துண்போர்க்கும், இராவுணவிற்கும் ஆகும்.

கங்குலுண விற்குங் கறிக்கும் உறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர்—தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லநோய்க் காரருக்குங் காமுறையா
வெண்முதிரைப் பிஞ்சாம் விதி. (தே.கு.,

வெள்ளவரைப் பிஞ்சைச் சமைத்துண்ண, மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

## காய்.

சுவை : இனிப்பு, வீரியம்—சீதம், பிரிவு—இனிப்பு.

செய்கை. காமம் பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac

## அவரை.

அவரையின் காய்கறியமிலமெய் யுரமாம்.
(பொ - ள்.) அவரைக்காயை கறியாக்கி உண்ணில், மெய் உரமாகும். (தே.கா.)

குணம் : கொட்டை முதிர்ந்த அவரைக்காயைச் சமைத்துண்டால், சுவையின்மை தீரும். ஆனல், மந்தம், பேதி, வளிநோய், ஐயநோய், சூலை ஆகிய இவைகளுண்டாகும்

கொட்டையவ ரைக்கையால் கோர அரோசகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடுந்—துட்டமந்தம்
வாயுவுண்டாம் பேதியுண்டாம் பாரிப் பனிலமுண்டாம்
ஐயமுண்டாம் சூலையுமுண்டாம். (அ. கு.)

மேற்கண்ட அவரைகளல்லாமல்,

(1) காட்டவரை (பேயவரை) அல்லது (காட்டு மொச்சை). Dolichos Tetraspermus ( a kind of beans growing wild).

(2) தீவாந்திர அவரை (a kind of beans brought from the Eastern islands).

(3) பேரவரை (a large kind of beans).

(4) கோறியவரை Dolichoas gladiatis என்பவைகளுமுண்டு.

குத்துச்செடி வகுப்பில்.

(5) கொத்தவரை என்று ஒரு பிரிவுமுண்டு.

குறிப்பு : (4) , (5) -ல் கண்டவைகளின் குணத்தை அதனதன் தலைப்பின் கீழ்க்காண்க.

---

## 25. அவுரி—Avuri.

வே - பெ.—அவிரி, நீலி.

Indigofera, tinctoria,

Eng—Indigo plant.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nili, Aviri | Arab. | Nabatul-Nilaj* |
| Mal. | Amari, Nilam | Pers. | Darakhte-Nil * |
| Kan. | Nili-gida | Duk. | Nil-ka-jhar * |
| Sans. | Nilini | Hind. | Nil-ka-per * |

வளரும் இடங்கள் (Habits)

இஃது இந்தியாவிலும், தென்னாட்டிலும், வங்கத்திலும் பயிராகும் செடி வகுப்பு. இச்செடியினின்றும் நீலம் (நீல மருந்து) எடுக்கப்பட்டு ஏராளமாய் மேல் நாட்டுக்கு அனுப்பப்பட்டு வந்தது. இப்போது இந்த வாணிபம் தடைப்பட்டுவிட்டது.

ப- உ. இலை, வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- நுட்புழுக்கொல்லி-கிருமிநாசநி—Germicide.
- முறைவெப்பகற்றி- முறைவியாதிரோதி—Anti-periodic.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.

### இலை.

பண்பு : இது பதினெண்வகை நஞ்சுகளைப் போக்கும், வளிசுரம் காமாலை, மாந்தம், சீதளம், முப்பிணி, கீல்வாதம் இவைகளைப் போக்கும். உடல் பொன்னிறம் பெறும்.

உரியலவு ரித்தழைத்தான் ஓது பதினெண்
அரியநஞ்சைத் தின்றவர்க்கும் ஆகும் —தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர் குறுமாந்தஞ்
சீதம் அகற்றுந் தெரி.

சந்நி பதிமூன்றுஞ் சந்தொடித்த வாதமுதல்
உன்னு விடக்கடியும் ஓடுங்காண்—மின்னுங்
கவுரிநிறம் உண்டாகுங் காசினியுள் நல்ல
அவுரியிலை தன்னால் அறி. (அ.கு.)

## வேர்.

**குணம்** : எல்லா நஞ்சுகளையும் முரிக்கும் சுரமூர்ச்சை, வெட்டை (வெள்ளை), குன்ம நோய் முதலிய பல நோய்களையும் தீர்க்கும்.

அவுரிவேரைக் குடிநீர் செய்து கொடுக்க, குன்மநோய், வெள்ளை, சுர மூர்ச்சை நீங்கும், எல்லாவிடங்களையும் முரிக்கும்.

எல்லா விடங்களுக்கும் எற்ற முறிப்பாகும்
பொல்லாச் சுர மூர்ச்சை பொங்கு வெட்டை—நில்லாப்
பவுரிதருங் குன்ம முதல் பன்னோ யொழியும்
அவுரிதரும் வேருக் கறி. (அ.கு.)

**வ-கு** : அவுரியிலையைக் குடிநீர் செய்து கொடுக்க, நஞ்சு, வளி சுரம், முப்பிணி, காமாலை, மாந்தம், கீல் வாதம், நீங்கும்.

அவுரியிலை, அவுரிவேர்ப்பட்டை, பொரித்த பெருங்காயம், மிளகு இவைகளை ஓரெடை தூக்கி, நன்றாக அரைத்து, சுண்டையளவு செய்து, நாள் ஒன்றுக்கு, காலை ஒன்று, மாலை ஒன்றாகக் கொடுத்து, உப்பில்லாப் பத்தியம் வைக்க, நரம்புச் சிலந்தி குணமாகும். மூன்று முதல் ஐந்து நாள் வரைக் கொடுக்கலாம். இதையே அரைத்து நரம்புச் சிலந்தி தோன்றியவிடத்தில் வைத்துக்கட்டலாம்.

இம்மூலிகையின் உபயோகம் பலவற்றை நஞ்சு நூலில் காண்க.

—=—

## 26. அழவணம்—Azhavanam.

வே-பெ.—ஐவணம், மருதோன்றி, சரணம்

**Lawsonia alba,**

**Henna Plant.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Góranta | Arab. | Hinnà *F<br>Yornanà* |
| Mal. | Mayilanchei<br>Marutoni | Pers. | Hinà * |
| Kan. | Górantte | Duk. | Mhéndi*<br>Mhenhdi |
| Sans. | Kurantaka<br>Raktogarba | | |

இஃது இந்தியா முழுவதும் பயிராகும். இது பெருஞ்செடி அல்லது சிறுமர வகுப்பில் சேர்ந்தது.

**ப—உ** : இலை, பூ, வித்து, பட்டை.

**சுவை** : துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

## இலை.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
புண்ணழுக்ககற்றி—வ்ரனசுத்திகாரி—Detergent
நாற்றமகற்றி—பூதிகந்தநாசநி—Deodorant.

**பண்பு :** லேவாயு, குடைச்சல், தலைநோய், கைகால்வலி, எரிச்சல் ஆகிய இவைகட்கு அழவணையிலையை புளித்த காடியேனும், எலுமிஞ்சஞ் சாறேனும் விட்டரைத்துப் பூசிவரலாம். இலையை உள்ளங்காலில் தேய்த் தால் கால் எரிச்சல் போம்.

நகப்புண், புண், சுளுக்கு இவைகட்கு இலையைச் சதைத்துக் கட்டக் குணமுண்டாம்.

இலையை அரைத்து வைத்துக்கட்ட கண்வேக்காடு குணப்படும். மூன்று நாளைக்குள் இதன் நற்குணம் தெரியும்.

அம்மை போட்ட காலத்தில் கண்களுககு அம்மையால் யாதொரு தீங்கும் நேரிடாதவாறு பாதுகாக்க, இலையை அரைத்து இருகாலடிகளில் வைத்துக் கட்டலாம்.

இலையை அரைத்து நகங்களுக்குத் தடவ நகம் சிவக்கும். இப்படிச் செய்வது நம் மக்களின் வழக்கம். இதனால், நகம் யாதொரு நோய்க் கும் உட்படாமல் தடுக்கப்படும்.

6 கிராம் எடை இலையை எடுத்து, பூண்டுத்திரி ஒன்றும் மிளகு ஐந்தும் சேர்த்து அரைத்துக் காலையில் மாத்திரம் 3 முதல் 5 நாள் வரை கொடுத்து உப்பில்லாப்பத்தியம் வைக்க, மேகத்தழும்புகள் நீங்கும்.

இலையை, நிசிநீரில் ஓர் இரவு ஊறவைத்து, மறுநாள் காலையில் இறுத்து இருபதுநாள் வரை காலையில் மாத்திரம் கொடுத்துவர, மேகச் சொறிபுடைகள் நீங்கும்.

இதன் ஊறல் கஷாயம், சுளுக்கு, தாபிதம் ; சிறு காயங்கள் இவற்றிற்கு ஒற்றடங்கொடுக்கவும், இவற்றைக் கழுவவும், வாய்ப்புண்ணுக்குக் கொப்பு ளிக்கவும், வெள்ளைக்குப் பீச்சு செய்யவும் உதவும்.

இலைச்சாற்றில் அரை உச்சிக்கரண்டி யளவை 90 மி.லி. பாலுடன் கலந்து கொடுக்க, கைகால் வலிநீங்கும். அதனை 90 மி.லி. நீரில் 4 கிராம் எடை சருக்கரை கலந்து கொடுக்க வெண்ணீர் (சுக்கிலம்) பெருக்கும்.

## பூ.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
உறக்கமெழுப்பி—நித்ராகாரி—Soporific.

**குணம் :** இதன் பூவை, இராக்காலங்களில் தலையணையின் கீழ் வைத் துப் படுக்க, நித்திரையுண்டாகும். உடல் வெப்பம் மாறும்.

## வித்து.

செய்கை : நாற்றமகற்றி—பூதிகந்தநாசநி—Deodorant.

**பண்பு :** வித்துக்கு, பல்லிசூனியம், பேய், பூதங்கள இவற்றின் செய்கை கெடும்.

" மருதோன்றி யின்விதைக்கு மாபில்லி சூன்யம்
விருதாண்ட பேய்பூதம் மேவும். " (அ.கு.

இதன் சாற்றில் தாளகத்தை இழைத்து மெல்லியதாக வெண் குட்டத்தின் மேல் பூசிவர, நிறம் மாறும்.

வித்தை நெருப்பிலிட்டுப் புகைக்க, மேற்கண்ட கிரியாச் செய்கைகள் நீங்கும்.

பூ அல்லது விதைகளின் ஊறல் கஷாயம், தலைவலிக்கும் தாபிதங்களுக்கும், ஒற்றடமிட, நற்குணந்தரும்.

## வேர்ப்பட்டை.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.**
தாதுவெப்பகற்றி—சமனகாரி—**Sedative.**
உடற்றேற்றி—வியதாபேதகாரி—**Alterative.**

**குணம் :** இது சூதகத்தின்போது மிகுதியாக வெளியாகும் குருதியைத் தடுக்கும், அழல்நோயைப் போக்கும்.

சோணித தோடமெலாஞ் சொல்லாம லேகிவிடும்
பேனுவர்க்கி ரத்தமொடு பித்தம்போம்—காணு
ஒருதோன்ற லென்னுமத னேதுமெழின் மாதே !
மருதோன்றி வேரால் மறைந்து. (அ.கு.)

வேர்ப்பட்டையை ஊறற் குடிநீர் செய்து கொடுக்க, மேற்கண்ட நோய்களும், காமாலை, இடப்பாடு—வலப்பாட்டீரல்வீக்கம், கல்லடைப்பு நீங்கும். இக்குடிநீரை குறைநோய்க்கும் கொடுப்பதுண்டு. மேலும், சுட்டபுண், மேகப்புண் இவைகளைக் கழுவவும் உதவும்.

**குறிப்பு :** இதன் இலை கெந்தகத்தைச் சுத்திசெய்யும். இதன் பட்டை செம்பைச் செந்தூரிக்கும்.

**மருத்துவப் பரிசிலனை (Clnical trial)**

1. இலைகளை அரைத்துப் பற்றிட்டால் தலைவலி தீரும். (Dymock)

2. இதன் விதையிலுள்ள எண்ணெயை உடம்பின்மீது தடவ உடலின் எரிச்சல் தணிந்து குளிர்ச்சியாகும் என்று கண்டறியப்பட்டிருக்கிறது என்று (Dr. Emrson) கூறுகிறார்.

3. குஷ்டநோய்களுக்கு இதன் மலரைப் பயன்படுத்தலாம் என்று மருத்துவர் அமின்ஸ்லி (Ainslie) கூறுகிறார்.

4. இது வாதமடக்கியாகவும் வாதத்தைத் தீர்க்கவும் சிறந்த பயனுள்ள மருந்தாக இருக்கிறது என்று அனுபவ பூர்வமாக ஹோன்னி பெர்க்கர் (Honniberger) என்பவர் கூறுகிறார்.

5. மருத்துவர் கிரியர்ஸ் (Dr. Grierson) என்பவர் இது கால்களின் உட்புறத்தில் ஏற்படும் எரிச்சலைப் போக்குகிறது என்று கூறுகிறார் (Calcutta Mad ply Trams vol. III. 279).

6. இதன் இலைகள் தற்காலிக சாந்தியைக் கொடுக்கிறது (Temporary relief) என்று கூறப்படுகிறது (Madras puar Jous of Mad. vol 1, 300, 1860).

7. இலைகளிலிருந்தும், மலரிலிருந்தும் தயாரிக்கப்பட்ட சாறு (Pan) (extract from leaves and flowers given to lessory Dr Nevton) குஷ்ட நோய்களுக்கு வழங்கப்படுகிறது என்று மருத்துவர் நியூடன் என்பவர் கூறுகிறார். (Phamacon TiaIndia)

## 27. அழிஞ்சில்—Azhinjil.

வே. பெ.—அங்கோலம், செம்மரம், சேய்.

Alangium ecapetalum.

Eng.—Sage leaved Alangium.

Tel. { Uduga, Amkolam

Mal. { Ankolam, Azhinna

Kan. Amkole

Sans. Amkolam

Hind. { Akola

Duk. { Akolah

இம்மரம் தென்னிந்தியா, பர்மா ஆகிய இடங்களின் வெப்ப பாகங்களிலுள்ள காடுகளில் பயிராகின்றது.

ப. உ. விதை, பட்டை.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு. அளவு.

| செய்கை | | அளவு | |
|---|---|---|---|
| | உடற்றேற்றி—வியதாபேதகாரி—Alterative. | 1—3 | குன்றி |
| | புழுக்கொல்லி—கிருமிநாசநி—Anthelmintic. | 1—3 | ,, |
| | சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic. | 3—5 | ,, |
| | வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic. | 24— | ,, |
| | வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge. | 5— | ,, |
| | மலமிளக்கி—லகுவிபேசநி—Laxative. | 10—12 | ,, |
| | குமட்டலெழுப்பி—வமனவியதாகாரி—Nauseant. | 5— | ,, |

விதையின் செய்கை :உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.

பண்பு : இது வாதகோபம், கபதோடம், சீவடியும் பெருநோய் ஆகிய இவற்றை நீக்கும். ஆனால், அழலைப் பெருக்கும்.

### அழிஞ்சில்—சிதேவியார் செங்கழுநீர்.

அங்கோல வித்தை யயின்ருன்முன் போலவினை
யங்கோல வித்தை யடங்குமே—யங்கோல
முண்டா மரைவாசி யுட்பலமே லாகியதை
யுண்டா மரைவாசி யுள்.

(பொ - ள்) : அழிஞ்சிலினது கொட்டையை, மேலே சொல்லியிருக்கும் கலபப்படி, மிளகு முதலானவைகளுடனே புசித்தால், முக்குற்றங்களால் வரக்கூடிய பிணிகள் நீங்கும்.

(தே.ய.)

### அழிஞ்சில்

அங்கோல வேருமே லாகவே யுண்டிடக்
கங்குலும் பூரக் கடிமுதலகலுமே.

(பொ- ள்) : அழிஞ்சில் வேர்ப்பட்டையை, வெள்ளாட்டு நீரில் ஊற வைத்து, உலர்த்திப் பொடியாக்கிக் கொடுக்க, பூரான் கடி முதலிய நஞ்சுகள் நீங்கும்.

(தே.க)

அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத் தாழ்த்தும்
ஒழிஞ்சபித் தத்தை யுயர்த்தும்—விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந் தெய்திடல்
திட்ட மெனவறிந்து தேர். (அ.கு.)

வ - கு : இதன் வேர்ப்பட்டையைக் கால் முதல் அரைப்பலமெடுத்துக் குடி நீராகிலும், ஊறல் நீராகிலும் செய்து, கொஞ்சம் நெய் சேர்த்து கால் முதல் அரை ஆழாக்களவாக உட்கொள்ள, நாட்பட்ட கடி, பாம்புக்கடி, நஞ்சாலுண்டான தாபிதம் இவைகள் நீங்கும். பெருங்குடலிற்றங்கிய பூச்சிகளும் வெளிப்படும்.

4கி. முதல் 8கி. வேர்ப்பட்டையெடுத்து, கழுநீரில் அரைத்து, சிறிது தேன்விட்டுக் கலந்து கொடுக்க, செரியாக் கழிச்சல் நிற்கும்.

செருகு முதலிய நோய்களிலும், மேகப்புண்ணிலும், சுரங்களிலும் இப் பட்டையை அளவுபடுத்தி சுத்தநீர் விட்டரைத்து உள்ளுக்குக் கொடுத்து நற்பலன் கண்டதுண்டு. காய்ச்சல்கள் நீங்க உப்பில்லாப்பத்தியம் வைத்து, மோர் அல்லது பால் கூட்டிய சோற்றை உண்ணும்படி செய்யவேண்டும்.

கீல்வாதம் மிக்க கடுமை செய்யும் வேளையில், வேர்ப்பட்டைக் குழித் தைலத்தை மேலுக்குத்தடவ, நன்மை பயக்கும்.

இத்தைலத்துடன் கொஞ்சம் வாலரசம் சேர்த்துக் குழப்பியதில், மூன்று முதல் ஐந்து துளி வரையில் சருக்கரையிற் கலந்து புகட்டி, கடும் பத்தியம் காக்கும்படி செய்ய, மேகப் பிடிப்பு, மேகப் புடைகள், மேக வெடிப்பு, சொறி சிரங்கு இவைகள் நீங்கும்.

இப்பட்டையை நுண்ணிதாகப் பொடிசெய்து மேகப்புண், சீவடிகின்ற பெரு நோய், சொறிசிரங்கு இவைகளின்மீது தூவிவர, குணமாகும்.

இப்பட்டையினுல் மாந்தம், சுரம், முப்பிணிபோம் என்பது தந்வந்தரி கருத்து (வைத்திய குருநூல்—200).

பட்டை, அழலை உயர்த்துமெனினும், இதன் வித்து, குருதியழல் நோய், குருதிவாந்தி, எரிச்சல் இவைகளைப் போக்கும். இந்நோய்களுக்கு, வித்தின் பருப்பு கால் எடுத்து 2 கிராம் பசுவின் பால் விட்டரைத்துப் பின்னும் பசுவின்பாலில் கலந்து, கொஞ்சம் சீனி கூட்டி கொடுக்கலாம்.

வித்திலிருந்து தைலமிறக்கி மறைமுகமாக உபயோகிக்கிறார்கள். இதனை.

* * * *

* * * * நிலத்தில்.

தொழுஞ்சகமோ கக்கரப்பிற் சொல்அஞ் சனமாம்
அழிஞ்சில் விதையென் றறி ! என்னும் (அ.கு.)

செய்யளால் அறியலாம்.

மூன்று முதல் ஐந்து துளி சருக்கரையுடன் சேர்த்து, குஷ்டநோய்க்கு கொடுக்கலாம்.

[குறிப்பு.—அழிஞ்சிற்பட்டையினுல், இலிங்கம் மிகச் சிறந்த சத்தியாகும். அகத்தியர் - 12,000).

## 28. அறுகம்புல்—Arugu.

வே. பெ. அறுகு, பதம், மூதண்டம், தூர்வை, மேகாரி.

Cynodon dactylon

| | | | |
|---|---|---|---|
| Tel. | Garika | Sans. | Durva |
| Mal. | Karukappulla | Arab. | Kalighans |
| Kan. | Garike | Urd. | Duba |

இது எங்கும் வளரும்.

ப - உ : புல், வேர்.

சுவை—இனிப்பு, வீரியம் - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை.
- வறட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient:
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astrigent.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவாத்தநி—Diuretic.
- குருதிப்போக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—styptic.

குணம் : முக்குற்றக்கேடு, ஈளை (கோழை), கண்ணோய், கண் புகைச்சல், தலைநோய், குருதியழல், மருந்துகளின் வெப்பம் ஆகிய இவைகளைப் போக்கும்.

அறுகம்புல் வாதபித்த ஐயமோ டீளை
சிறுக அறுக்குமின்னுஞ் செப்ப—அறிவுதரும்
கண்ணோ யொடுதலைநோய் கண்புகைமி ரத்தபித்தம்
உண்ணோ யொழிக்கு முரை. (அ.கு.)

வ - கு : அறுகம்புல்லின் ஊறல் நீரும், பாலுஞ்சேர்த்து உட்கொள்ள, கண்நோய், தலைநோய், கண் புகைதல், குருதியழல் இவை ஒழியும்.

அறுகம் புல்லை இடித்துப் பிழிந்த சாற்றைக் கண்ணுக்குப் பிழிய, கண்ணோயும், கண் புகைச்சலும், மூக்கிலிட மூக்கிலிருந்து பாயும் குருதியும் காயம்பட்டவிடத்தில் பூச அதிலிருந்து வடியும் குருதியும் நிற்கும். புண்களின்மீது தடவ, புண் ஆறிவரும். வெள்ளிக்கிழமையில் குடித்துவர, பெருச்சாளிவிடம் நீங்கும். (புலி. 500.)

அறுகு.

போகாத தோஷவினை போகப் பிணியகன்று
தேகாதி யெல்லாஞ் செழிக்கவே—வாகாய்
அடர்தந்தை பிள்ளைக் கணியா தலாலத்
திடமாங் கணபதிபத்ர ம்.

இது, முக்குற்றத்தால் விளையும் நோய்க் கூட்டங்களைக் களைந்து, உடற்கு ஊட்டந்தரும்.

(தேரன் - வெண்பா)

அறுகம்புல்லுடன், சிறிது மஞ்சள் சேர்த்தரைத்துத் தடவிவர, சொறி, சிரங்கு, படர்தாமரை போம்.

அறுகம்புல், கடுக்காய்த்தோல், இந்துப்பு, கிரந்தி தகரம், கஞ்சாங்கோரை, இவை ஓரெடையெடுத்து, மோர்விட்டரைத்துப் பூச, சொறி, சிரங்கு, படர் தாமரை ஒழியும். நுண்புழுவும் சாகும்.

அறுகம்வேர்.

பண்பு : அறுகின் கிழங்கால், தணியாத பற்பல வெப்பமும், முக்குற்ற நோய்களும் நீங்கும். உடல் மேனிபெறும்.

(அ.கு.)

ஆறு அழலெல்லா மாறுமுத் தோடமது
வீறு திருக்குநல்ல மேனிதரும்—மாறுக்
கடியமர லங்கலணி காரளக மின்னே !
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு.

வ - கு : இதைக் கணுபோக்கி, கால்பலம் எடுத்து, அத்துடன் வெண மிளகு பத்து சேர்த்துக் குடிநீரிட்டு வடித்து, அதில் பாக்களவு பசு வின் வெண்ணெய் கூட்டி உட்கொள்ள, மருந்தின் தீங்கு, இரசவேக்காடு, மூலக்கடுப்பு, நீர்க்கடுப்பு, நீரடைப்பு (கல்), வெட்டை, நீர்ப்புழைஎரிச்சல் முதலானவைகள் நீங்கும்.

தயிரில் அரைத்துக் கலந்து கொடுக்க, பழைய வெள்ளை நீங்கும்.

இவ்வேரைக்கொண்டு செய்யும் தூர்வைத்தைலத்தின் குணத்தைத் தேரையர் தைலவருக்கச் சுருக்கத்தில் காண்க.

---

## 29. அறுகீரை—Arukirai.

வே - பெ.—அறைக்கீரை.

**Amarantus tristis**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Koiua-Kura | Kan. | Harive Sappu |
| Mal. | Arakirai | Urd | Mat-Ki-Bhaji |

இது தென்னிந்தியாவில் தோட்டக்கால்களில் பயிரிடும் ஓர் பூண்டு.

ப - உ: கீரை, விதை.

சுவை—இனிப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி-Stimulant.
காமம்பெருக்கி காமவர்த்தநி-Aphrodisiao.

பண்பு : இக்கீரையை நறகறியாக்கியுண்ண, சுரம், நடுக்கல், முப்பிணி ஐயநோய், வளிநோய், ஆகியவை போம். தாது விருத்தியாம்.

அறுகீரை.

அறுகீரை பத்திய மாகு மேற்றண்டின்
மறுகீரை வாத மழைவெனப் பட்டதே.

(பொ-ள்) :அறுகீரை பத்தியத்திற்குதவும்; கீரைத்தண்டு வளி ஐயக் குற்றங்களை உண்டாக்கும்.

(தே)

காய்ச்சல் குளிர்சந்நி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறியாய் வழங்குங்காண்—வீச்சாய்க்
கறுவுமோ வாயுவினுங் காமமிக வுண்டாம்
அறுகீரை யைத்தின் றறி.

(அ.கு.)

இது தென்னாட்டில் பல பிணிகளுக்குப் பத்திய பதார்த்தமாக வழங்கப் படும்

ப

**அறுகீரை விதை.**

வ-கு : இதை நீர் போக்கிய தேங்காய்க்குட் செலுத்தித் தமரிட்டு, சதுப்பு நிலத்தில் புதைத்து 40, 50, நாள் சென்றபின் எடுத்து, ஓட்டை நீக்கி, மற்றவைகளை நல்லெண்ணெயுடன் கூட்டி எரித்து, தைலம் வடித்து தலை முழுகிவர, தலைப் பளுவு போம். தலைமயிர் கறுத்து வளரும்.

குறிப்பு.—இவ்வாறாகவே புல்லாந்திப்பழம் அல்லது நற்சங்கன் பழத்தைக்கொண்டு தைலம் வடித்துத் தலைமுழ்க, அல்லது தலைக்குத் தடவிவர, மயிர் கறுத்து வளரும்.

---

## 30. அறுவதா—Aruvada.

**வே- பெ.—அர்வதா—சதாப்பு.**

**Ruta gravolens**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sadapa, Arudu. | Sans. | Sadap |
| Mal. | Sathappu | Arab. | Fejan, Sadab |
| Kan. | Nagadali Sappu | Pers & Hind | Sada |

இஃது 2, 3 அடி உயரமுள்ள செடி ; அதிக வெப்பமும் அதிக குளிர்ச்சியுமில்லா இடங்களில் பயிராகும். இந்தியாவில் பயிராகிற இச் செடியின் குணம், தென் ஐரோப்பாவிலும் தென் அமெரிக்காவிலும் பயிராகிறதற்குத் தாழ்ந்ததன்று. இதன் இலை பச்சையாயிருக்கும்பொழுது சாம்பற்பூத்த நிறமாயிருக்கும். இதில் எண்ணெய்ப் பசையுண்டு. அன்றியும், இதில் ஒருவித மணமும், வெகுட்டலோடுங் கூடிய கைப்பும், விறுவிறுப்புமிருக்கும். உலர்ந்தால் இதன் குணம் குறையும்.

ப-உ : இலை :

சுவை :—கைப்புடன் கார்ப்பு, தன்மை : வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை :
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodic.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
- தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

பண்பு : இலையை, சூதகசந்தி, சூதகவலி, பிள்ளைப்பேற்றிலுண்டாகும் துன்பம், வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, செரியாமை, நாட்பட்ட மார்புச்சளி, வயிற்றுப் புழுநோய், பால்மாந்தம், காக்கைவலி, மாந்தவலி, மாந்தசுரம், கணக்கழிச்சல் ஆகிய இவைகட்கு வழங்கலாம்.

வ-கு : இலையைக் கசக்கிச் சாறெடுத்தேனும், உலர்ந்த இலையைப் பொடி செய்தேனும், குடிநீர் செய்தேனும், மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இருமலினால் பீடிக்கப்பட்ட நோயாளியிருக்கும் அறையில் இலையைப் புகைக்க, இருமல் குறையும்.

பசித்தியைத் தூண்டி மந்தத்தைப் போக்க இதனைக் கொடுக்கலாம்.

அளவு.

சிறுவர்கட்கு (இலைச்சாறு) 30 முதல் 60 துளி.
பெரியவர்கட்கு (இலை கற்கம்) 1 கி. முதல் 6 கி. எடை
பெரியவர்கட்கு (கஷாயம்) 40 மி.லி. முதல் 80 மி.லி.

தைலம்.

இந்தச் செடியில் ஒரு வித சிறு பூச்சுகள் தோன்றி, முடிவில் ஒரு தடித்த புழுவுண்டாகும். ஒரு புட்டியில் சுமார் 200 கிராம் எடை நல்லெண்ணெய் இட்டு, அதில் இப்புழுவை விட்டு, சற்றேறக்குறைய கால் பலம் சுத்தமான ஓமத்தையும் பொடித்துச் சேர்த்து வெயிலில் வைத்துவர, புழு கரைந்து எண்ணெயுடன் கலந்துபோம். இதில் இரண்டொரு துளி மூக்கில் விட்டு வர, மூக்கில் நீர் பாய்தல், மூக்கடைப்பு இவைகள் நீங்கும்.

---

## 31 அன்னாசிப்பழம்—Anaship-pazham.

வே. பெ.—பூந்தாழம்பழம்.

Ananas sativus Schult

Eng.—The Pine Apple.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Anasa-pandu | Arab. & Pers. | Aainunnas |
| Mal. | Kaita-chakka, Munthri-chakka | Hind. | Anannas, Ananas |
| Kan. | Ananasuhannu | Duk. | Anannas |

இஃது இந்தியா முழுதும் பயிரிடப்படுகிறது.

ப - உ : இலை, காய், பழம்.

சுவை : பழம்—புளிப்பு, இனிப்பு, விறுவிறுப்பு, தன்மை-தப்பம். பிரிவு-இனிப்பு.

செய்கை :
- இலை.—நுட்புழுக்கொல்லி—கிருமிநாசநி—Germicide.
- நீர்மலம்போக்கி—வ்ரேசனி—Purgative.
- காய்.—வியர்வைபெருக்கி—ஸ்வேதகாரி Diaphoretic.
- செரிப்புண்டாக்கி—போசனகாரி—Digestive.
- மலமிலக்கி—மலகாரி—Laxative.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- பழம்.—நுட்புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Germicide.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- குருதிப்பெருக்கடக்கி—ரக்தஸ்தம்பனகாரி—Styptic.
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

பழத்தின் பண்பு : மேகவெட்டை, வாந்தி, அழல்நோய், நீர்வேட்கை, தலைவலி ஆகிய இவை போம். அழகுண்டாகும்.

மேகவெட்டை வாந்திபித்த மீறுவாம் மேனியிடுந்
தாகமுமட் டாகும் தலைவலிபோம்—பாகமுறு
பூந்தாழை யின்பழத்தைப் பூரிப் புடன்புசிக்க
லாந்தாழ்வும் இல்லை யறி.

(அ.கு.)

இலேச்சாற்றை ஓர் உச்சிக்கரண்டி எடுத்து, சருக்கரை கூட்டிக் கொடுக்க, விக்கல்போம். இரண்டு கரண்டி அளவு உட்கொள்ளக் கழிச்சலுண்டாம்.

இதன் பழத்தை மிகுந்த அளவில் தின்றால், தொண்டை கட்டும். கரு அழியும். ஆகையால், இதைச் சூல்கொண்ட பெண்கள் உண்ணலாகாது.

பழரசத்தை வெதுப்பிக் கொடுக்க, வாந்தி, வயிற்றுக்கடுப்பு, காமாலை முதலிய அழல் நோய்கள் நீங்கும்.

பழரசத்தை மணப்பாகு செய்து உண்டுவர, வெட்டை, வாந்தி, நீர் வேட்கை, அழல்நோய் தணியும்.

## 32. அன்னாசிப்பூ—Annasippu.

**Illicicum Veerum.**

இஃதே, அனாசிப்பூ, சைனா, கொச்சின்சைனா முதலிய விடங்களிலிருந்து இந்தியாவிற்கு வருகிறது.

**சுவை.**—இனிப்பு, விறுவிறுப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

**செய்கை :**
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி Stomachic.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- உரமாக்கி—பலகரி—Tonic.

**பண்பு :** இது செரியாமை, மாந்தம், வன்மைக் குறைவு முதலிய நோய்களைப் போக்கும்.

இப்பூவைப் பொடி செய்து ½ கிராம் முதல் 1 கிராம் எடை வீதம் நாள் ஒன்றுக்கு 2, 3 முறையுட்கொள்ள, மேற்கண்ட நோய்களும், புளியேப்பமும் நீங்கும்.

---

## 33. ஆகாச கருடன்—Akasha garudan.

வே. பெ. ஆகாச கெருடன், ஆகாயகருடன், கருடன்

கொல்லன் கோவை, பேய்ச்சீந்தில்.

**Corallo carpus epigaeus Hook.**

**Eng.—Bryoms.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Akasha-garuda-gaddalu<br>Nagadonda<br>Murudonda | Sans. | Mahamulam<br>Nabho-garuda-kanda. |
| Mal. | Kollam-kova-kizhanna | Hind. | Akas-gaddah<br>Rakas-gaddah |
| Kan. | Akasha-garuda-gadde | Duk. | Garaj-phal |

இது கொடி வகுப்பிற் சேர்ந்தது. இந்தியாவில் எங்கும் பயிராகும்.

ப - உ.: வேர் முதலியன, சிறப்பாகக் கிழங்கு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { உடற்றேற்றி வியதாபேதகாரி—Alteroative.
உரமாக்கி பலகாரி—Tonic.

## வேர் முதலியன.

**பண்பு** : சூலை, பாண்டு, முக்குற்றம், அக்கிப்புண், உட்சூடு, கழுத்துக் கழலை, குடல்வலி, பெருநோய் (மாகுஷ்டம்), நஞ்சுகள், கரப்பான், நமைச்சல் ஆகிய இவைகள் கொல்லன் கோவை வேர் முதலியவைகளால் நீங்கும்.

சூலைபாண் டுதைதிரி தோடமக்கி வெப்புகண்ட
மாலை குடலின்வலி மாகுட்டம்—ஆலவிடம்
உட்கரப்பான் மெய்யரிப்பும் உண்டோகொல் லங்கோவை
கைகு ளிருக்கவின்னு ங்காண். (அ.கு.)

## கிழங்கு.

**குணம்** : இது, கொடிய நஞ்சு, பாண்டு, உட்சூடு, சூலை, கிரந்தி, பெருநோய், நமைச்சல், அக்கிப்புண், குடல்நோய், கழுத்துக்கழலை, முக்குற்றக் கேடு ஆகிய இவைகளைப் போக்கும்.

துட்டவிடம் பாண்டுவெப்பு சூலைவா தங்கிரந்தி
குட்டம் அரிப்பக்கி கோண்குடல்நோய்—கெட்டகண்ட
மாலைபோம் கொல்லன்கோ வைக்கிழங்கால் முத்தோட
வேலைபோம் பாரில் விளம்பு. (அ.கு.)

**வ - கு** : கிழங்கின் மேற்றோலை நீக்கி நிழலிலுலர்த்தி, நுண்ணிய பொடி செய்து, அரை முதல் ஒரு வராகனெடை எடுத்துச் சருக்கரையுடன் கலந்து, காலை மாலை இருவேளைகளிலுமுண்டு, புளி, உப்பு நீக்கிப் பத்தியங் காக்க, மேற்கண்ட நோய்களல்லாமல், பாம்புக்கடி நஞ்சு, கீல்பிடிப்பு, மேக நோய்கள் தீரும்.

மேற்படி பொடியில் ஒரு 4 கிராம் எடை எடுத்து குடிநீர்ச் செய்து கொடுக்க, சீதக் கழிச்சல் குணமாகும்.

வேண்டிய அளவு கிழங்கெடுத்து, அதற்குத் தக்கபடி வெங்காயம், சீரகம் சேர்த்து, சிற்றாமணக்கெண்ணெய் விட்டரைத்துக் கிண்டி, கீல்வாதங் களுக்குப் பற்றிட மிக நன்மை பயக்கும்.

கொல்லன்கோவையைக் கொண்டு செய்யப்படும் தைலங்கள் வளி நோய்களுக்கும் நஞ்சுகளுக்கும் சிறந்ததாம்.

## 34. ஆடா தொடை.—Adatodai.

வே. பெ.—ஆடாதொடை வாசை.

Adhatoda vasica.

Eng.—Malabar-nut.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Addasaram | Sans. | Vaidyamatruvrikshaha; Väsaka |
| Mal. | Ata-lotakam | Pers. | Bansa |
| Kan. | Adusogae; Adusoge Sappu | Hind. | Arusa |
| | | Duk. | Asarada |

இச் செடி, தென்னிந்தியாவிலும், வங்காள தேச முழுவதிலும் ஏராளமாய்ப் பயிராகின்றது. இதன் இலை மா இலை நுணாயிலைகளைப்போல 4 முதல் 9 அங்குல நீளமாகவும் 2 முதல் 3 அங்குலம் அகலமாகவும் இருக்கும்; செடி 4 முதல் 10 அடி உயரம் பயிராகும்.

ப- உ : இலை, பூ, பட்டை, வேர்.

**சுவை - கைப்பு, தன்மை** - வெப்பம், **பிரிவு** கார்ப்பு.

**செய்கை:**
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி **Antispasmodic.**
- கோழையகற்றி—கபஹரகாரி **Expectorant.**
- நுட்புழுகொல்லி—கிருமிநாசநி **Gemicide.**
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி **Diuretic.**

## இலையின் பண்பு

வளி ஐயக்குற்றங்களின் பெருக்கை அறுக்கும். வாததோடம், பற்பல சுரம், முப்பிணி, வயிற்றுநோய், குருதியழல், இருமல், மேலிளைப்பு, வாந்தி, விக்கல், சூலை, அண்டவாயு ஆகிய இவைகளையும் போக்கும். பாடக்கூடிய நல்ல குரலொலியைத்தரும்.

ஆடாதோ டையின் குணத்தை அடைவுட னுரைக்கக் கேளும்.
பாடாத நாவும் பாடும் பரிந்துமே தோடம் போகும்
வாடாத பித்தஞ் சேதம் ரோகங்கள் விலகிப் போகும்
நாடாது வியாதி தானும் நல்விழிக் குழலினாளே. (ஏடு.)

ஆடாதோ டைப்பன்ன மையறுக்கும் வாதமுதற்
கோடாகோ டிச்சுரத்தின் கோதொழிக்கும்—நாடின்
மிகுத்தெழுந்த சந்நிபதின் மூன்றும் விலக்கும்
அகத்துநோய் போக்கு மறி. (அ.கு.)

ஆடாதோ டைக்கிரத்த பித்தமறும் காச
மானந்த வாயுவுடன் மேலிளைப்பு மேகம்
சூடாகும் தாபசுரம் பித்தகப வாத
சுரரோகஞ் சந்நிபா தஞ்சூலை குட்டம்

ஓடாவோ வாந்திவககல மூல ரோகம்
ஒளிதோடம் உட்கனலும் ஒழியுந் தானே
வாடாது மனக்கிளர்ச்சி யாகுமிதன் பெருமை
வகுத்துரைத்தார் முன்னோர்கள் வாழ்ந்திடயா வருமே.
(ஏடு.)

## இலை.

வ-கு : இலையின் ரசம் 10 முதல் 20 துளிவரை எடுத்து, தேனுடன் கலந்து கொடுக்க, மேற்கூறிய பிணிகள் நீங்கும். சிறப்பாகக் குருதியழல், இருமல், இளைப்புநோய், சுரம், காமாலை தீரும்.

இலையை யடடுய குடிநீர் செய்து, அதல தேன் சேர்த்துக்கொடுக்க குருதியழல், சுரம், இருமல், இளைப்புநோய் முதலியன தீரும்.

இரண்டு மூன்று இலைகளைக் குறுகவரிந்து, இத்துடன் ஏலக்காய் ஒன்று சேர்த்து, இரண்டு ஆழாக்கு வெந்நீரில் இரண்டு மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி, 30 மி. லி. முதல் 65 மி. லி. வரை வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று வேளையாகக் கொடுக்க, ஐயத்தாலுண்டான இருமல், சுரம், குருதியழல் நீங்கும்.

இரண்டு மூன்று கொழுமையான இலைகளைப் பொடிப்பொடியாகக் கத்தரித்து, ஒரு புதிய மண்சட்டியிலிட்டு, தேன் சிறிது கூட்டி எரிக்க, ஒருவித நன்மணம் வீசும். அத்தருவாயில், அதிமதுரம் 2 கிராம் எடை திப்பிலி 1 கிராம் எடை, தாளீசபத்திரி $\frac{1}{2}$ கிராம் எடை (வேண்டுமானால் சிற்றரத்தை $\frac{1}{4}$ கிராம்) இவைகளை ஒன்றிரண்டாக நசுக்கிச் சேர்த்து, அரைப்படி சுத்த நீர் விட்டு அரைக்காற்படியாகக் குறுக்கி வடிகட்டி, காலை மாலை இருவேளையும் கொடுத்துவர, கோழைக் கட்டறும். சளி வெளிப்படும். இருமல், இரைப்பு, சுரம் போன்றவைகள் நீங்கும். (இது கைகண்டது.)

ஒரு பங்கு இலைக்கு எட்டுப் பங்கு நீர் சேர்த்து, எட்டில் ஒன்றாகக் குறுக்கி வடிகட்டிய குடிநீரைச் சீலையிற்றோய்த்து ஒற்றடமிட, வீக்கம், சூலை, கீல்பிடிப்பு முதலியன தணியும்.

இலையின் தனிரசம், இரத்தக்கழிச்சல், சீதமும் இரத்தமும் கலந்துண்டாகுங் கழிச்சல் இவைகட்கு நன்மை தரும்.

இலையை உலர்த்திச் சுருட்டாகச் சுருட்டி புகை பிடிக்க இரைப்பு நோய் தீரும்.

இலை, வேர் இவைகளை ஒரெடையெடுத்து, அதற்குத் தக்கபடி மிளகுங் கூட்டி, ஊறல் குடி நீர் செய்து கொடுக்க, இரைப்பு, உப்பிசம், ஈளை, இருமல், சுரம் தணியும்.

### மெழுகு.

இலையை இடித்துப் பிழிந்த சாற்றை, ஒரு புதிய மண் பாண்டத்தில் விட்டு, மெழுகு பதமாய்க் காய்ச்சி, இரண்டு முதல் ஐந்து குன்றியளவு தனியாகவேனும், திப்பிலிப்பொடி கூட்டியேனும், நாள் ஒன்றுக்கு மூன்று அல்லது நான்கு முறை உட்கொள்ள, ஐயப்பிணிகள் போம்.

### வேறு.

இலையின் ரசம் ஒரு பங்கு, தேன் அல்லது இஞ்சிச்சாறு அரைப் பங்கு இரண்டையும் ஒன்று சேர்த்து மெழுகுபதமாய்க் காய்ச்சி, இரண்டு முதல் நான்கு குன்றியளவு, நாள் ஒன்றுக்கு மும்முறைகொடுக்க, இரைப்பு, ஈளை, இருமல், இளைப்பு நோய் போன்றவைகள் தணியும்.

### பூ.

பூவை வதக்கி இரு கண்களின்மீதும் வைத்துக்கட்ட, கண்களில் உண்டாகும் நோய்கள் தீரும்.

### பட்டை

இதைக் குடிநீர் செய்தாகிலும், பொடி செய்தாகிலும் சுரம், இருமல், இரைப்பு, இளைப்பு ஆகிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

### வேர்க்குணம்

இதனால், இருமல், அழல் மந்தம், அழல் மிகுதி (சுவேதபித்தம்), கடினமூச்சு, கழுத்துவலி முதலியன தீரும்.

காசமொடு மந்தங் கதித்தபித் தங்கொடுஞ்சு
வாசங் கழுத்து வலிமுதனோய்—கூசியே
ஓடாதி ராதிங் கொருநாளு மொண்டொடியே
ஆடாதோ டைத்தூருக் கஞ்சி. (அ.கு.)

வ-கு : ஆடாதோடை வேரையும், கண்டங்கத்திரி வேரையுங் குடிநீரிட்டு அதில் திப்பிலிப் பொடி சேர்த்துக் கொடுக்க, இருமல் நீங்கும்.

ஆடாதோடை வேர், கண்டங்கத்திரி வேர், சீந்திற்கொடி வகைக்கு பலம் கால் கூடிய எடைக்கு, பதினாறு பங்கு நீர் சேர்த்து, எரித்து, எட்டில ஒன்றாகக் குறுக்கி வடிகட்டி, அதில் தேன் கொஞ்சம் சேர்த்து, நாள ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை கொடுத்துவர, ஐயவிருமல், கோழைக் கட்டு, ஐயசுரம் தணியும்.

ஆடாதோடை, திராட்சை, கடுக்காய் இவற்றின் குடிநீரில், தேனும் சருக்கரையுங் கூட்டி உட்கொள்ள, கொடுமையான குருதியழல், இரைப்பு, இருமல் தீரும்.

ஆடாதோடை வேர், கண்டங்கத்திரி வேர், சுக்கு, கொள்ளு இவைகள் சேர்ந்த குடிநீரில், அல்லிக்கிழங்கின் பொடியைக் கூட்டிக்கொடுக்க இரைப் பிருமல் தீரும்.

**ஆடாதோடைக் குடிநீர்**

ஆடாதோடை சிறுதேக்கு மருங்கை யாந்த கரைசங்கும்
தோடாவேரும் பேராம்பற் சுக்குஞ் சேர்ந்த சமன்மிளகு
வாடா நீர்வார்த் தெட்டொன்ருய் வடித்துத் தேனு முடன்கூட்டிப்
போடா நீருட் கொள்வீரேற் போற்றிச் சிலேத்ம சுரம்போமே.

(பொ-ள்) : ஆடாதோடை, கண்டு பரங்கி, கையாந்தகரை, சங்கன், காஞ்சொறி வேர், அல்லிக்கிழங்கு, சுக்கு, மிளகு இவற்றை ஒன்று சேர்த்து தக்க நீர்விட்டு, அஃது எட்டில் ஒன்ருய் வற்றுமாறு காய்ச்சி, அதனைத் தேனுடன் சேர்த்து உட்கொள்ளில், ஐயத்தால் வரும் காய்ச்சல் நீங்கும்.

(தேகு. நூறு.)

## ஆடு தீண்டாப்பாளை—Adu tinda palai.

**வெ. பெ : ஆடுதின்னாப்பாளை, ஆடுதொடாப்பாளை, பங்கம்பாளை**

**Eng.—Worm-Killer, Indian Birthwort, Aristolochia Bractiata.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Gadide-gade-para-aku**, **Kadapara.** | Kan. | Sanajali-hullu |
| | | Sans. | Ajaspurisaha. |
| | | Hind. | Gandan |
| **Mal.** | **Atu-tintap-pàla** | **Duk.** | **Kirà-màr** |

இது பூண்டு இனத்தைச் சேர்ந்தது. இது, தென்னிந்தியாவின் திருவாங்கூரிலும், கீழ்கரையைச் சேர்ந்த நாடுகளிலும், சிங்களத்திலுள்ள மணற் பாங்கு, அல்லது நன்செய் நிலங்களிலும் ஏராளமாகக் கிடைக்கும். இதன் இலை சாம்பல் நிறமாகவிருக்கும்.

**ப.உ :** இலை, விதை, வேர், சமூலம்.

**சுவை :**—கைப்பு (குமட்டல்), தன்மை-வெப்பம், பிரிவு-காப்பு.

**செய்கை :**
- புழுக்கொல்லி—கிருமிநாசனி—Anthelmintic.
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தனகாரி—Emmenagogue.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulent.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- நீர்மலம்போக்கி—விரேசநி—Purgative.
- உடற்றேறி—வியதாபேதகாரி—Alterative.
- முறைவெப்பகற்றி—முறைவியாதிரோதி—Antiperiodic.

**பண்பு :** குடற்புழு, சிலந்தி, பூச்சி நஞ்சுகள், கரும்படை, கரப்பான், வாதநோய்—80, பன்றி மாமிசத்தோல் போன்ற படை ஆகிய இவைகள் ஆடுதீண்டாப்பாளையால் நீங்கும். பலமும் விந்தும் உண்டாகும்.

**ஆடு தீண்டாப்பாளை.**

கிரந்திகரப் பன்வெக்கை கேசநலி மாந்தை
யரந்தை வினையை யறுக்கும்—துறந்து
பிரியொணு நோய்களையும் பின்முன்பா ராமல்
மறியுணு மூலியடை வாய்.

இது, கிரந்தி, கரப்பான், மயிர் கொட்டிப்போதல், கணச்சூடு ஆகிய வற்றைப்போக்கும்.

(தே. வெண்பா.)

ஆடுதொடாப் பாளைக் ககக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குட்டம் நிறைகரப்பான்—ஆடிடச்செய்
எண்பது வாய்வும் இகல்குட்ட முந்தீரும்
திண்பெறுநற் ருதுவுமாஞ் செப்பு. (அ.கு.)

**வ - கு :** மேற்கண்ட நோய்களுக்கு, கால் பலம் நிறையுள்ள இலையைக், கால்படி வெந்நீரில் இரண்டு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி 15 மி. லி. முதல் 30 மி. லி. வீதம் கொடுக்கலாம்.

உலர்ந்த இலையை மேற்கண்ட படி ஊறல் குடிநீர் செய்து கொடுக்க, துண்புழுக்கள் சாகும்.

**விதை.**

விதைகளைப் பொடித்து, 4 கிராம் எடுத்து, அரை முதல் ஒரு பலம் சிற்றுமணக்கெண்ணெயில் கலந்து கொடுக்க, வயிற்றுவலி, சூதகத்தடை, சூதகக்கட்டு, முறைச்சுரம், பிரசவ வேதனை இவைகளை நீக்குவதுடன், குடற்புழுக்களையும் வெளிப்படுத்தும்.

**வேர்.**

வேரை அரைத்து, அரை முதல் ஒரு வராகனெடை கொடுக்க, பாம்பு நஞ்சு முறியும். மற்ற நஞ்சுகளும் நீங்கும்.

வேர்த்தூளை, ஒன்று முதல் ஒன்றரை வராகனெடை வீதம், தனியே யாவது, வெந்நீருடன் கலந்தாவது கொடுக்க, பிரசவ வேதனையைத் தூண்டும்.

**முழுப்பூண்டு.**

இப்பூண்டின் ரசத்துடன், அதே அளவில், நல்லெண்ணெய் கூட்டி, எரித்துப் பக்குவப் பாகத்தில் எடுத்து வடிகட்டி, கரும்படை, கரப்பான். இவைகளுக்குப் பூசி வரலாம்.

பூண்டைச் சேர்த்தரைத்து, சற்றேறக் குறைய தேங்காயளவு எடுத துருட்டி ஒருபடி நெல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டி, கால் அல்லது அரைப்பலம் வீதம் ஐந்தைந்து நாட்களாக 40 நாள் கொடுத்துவர, பெருநோய்த் தடிப்பு நீங்கும். உப்பும் புளியுமாகா. (அனுபவம்.)

## 33. ஆடை யொட்டி—Adaiyotti.

Sans. Jhinjharitâ Hind. Chitki.

இஃது, இலங்கையிலும், தென்னிந்தியாவிலும், தன்னிச்சையாய்ப்பட ரும் பூண்டு, இப்பூண்டுகளுள்ள இடங்களில் உட்கார்ந்தால், இதன் காய்கள் ஆடையில் ஒட்டிக்கொள்ளும். இதனால், இதற்கு ஆடை யொட்டி என்னும் பெயருண்டாயிற்று.

**ப-உ :** இலை, பூ, காய்.

**சுவை :** துவர்ப்பி, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை: { துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

வழக்கும் குணமும் : இலையை அரைத்து, சருக்கரை சேர்த்து நீரிற் கலக்கிக் கொடுத்துவர, வெட்டை தணியும்.

இலையையும், காயையும் அரைத்து நீரிற்கலக்கி, நீர்ப் புரைவீழ்வோரை பீச்ச, மேற்படி நோய் நீங்கும். இதன் இலையையும் பட்டையையும் அரைத்து, நீரிற் கலக்கி உள்ளுக்குக் கொடுக்க, பெருங்கழிச்சல், சொரியாக் கழிச்சல், சீதக்கழிச்சல் குணப்படும்.

---

## ஆதண்டம்—Atandam.

(வே. பெ.)—ஆதண்டம், ஆதண்டை, ஆதொண்டை, ஆதொண்டன் ஆதொண்டம், காற்றொட்டி, காத்தொட்டி, காத்தோட்டி, காகதுரத்தி.

Capporis Zeylanica (C. horride)

Tel. Arutonda | Mal. Atanda

இது கொடி வகுப்பிற் சேர்ந்தது ; தென் இந்தியாவில் தோட்டங்களின் வேலிகளிற் பயிராகும்.

ப - உ :- காய், வேர், இலைகள், வேர்ப்பட்டை.

சுவை—சிறுகைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { தாதுவெப்பகற்றி—சமனகாரி—Sedative.
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.

பண்பு :- இதனால், மண்டைக் குடைச்சல், மூக்கடைப்பு, தொண்டையிற் சேரும் சளி, குடைச்சல் முதலியவை தீரும்.

மண்டைக் குடைச்சலறும் வாதத்தின் பீநசம்போம்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண்—மிண்டுசெய்யும்
வாதக் கடுப்பகலு மாதே ! ஆ தொண்டைக்குப்
போதப் பலபிணிபோம் போம். (அ.கு.)

### 37. ஆதொண்டை.

ஆதொண்டை யின்காய் அஃதுவற்ற லெண்ண
வேதின வைப்பிணி யினமெலா மகலுமே.

(பொ - ள்.) ஆதொண்டைங்காயை வற்றலாக்கி உணவுடன் சேர்த்து உண்ணில், ஐயநோய்க் கூட்டங்கள் யாவும் நீங்கும்.

### காய்.

வ - கு : காயைச் சமைத்தும், வற்றலிட்டும் வழங்குவது தென்னாட்டு வழக்கு. இதனால் மேற்கண்ட நோய்கள் தணியும்.

### வேர்.

வேர்ப்பட்டை பலம் ஒன்று இடித்து, 700 மி. லி. நீரிலிட்டுக் காய்ச்சி மூன்றிலொன்றாகக் குறுக்கி வடிகட்டி, மூன்று பங்கு செய்து நாள் ஒன்றுக்கு மூன்று முறையாக உட்கொள்ள, மந்தம், இரைப்பையின் சூடு வாந்தி, மார்புவலி குணமாகும். (வேர் கிடைக்காவிட்டால் இலையே போதும்.)

இதன் வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைமுழுகிவர, மூக்கடைப்பு, தொண்டைக்கட்டு, வாதக் குடைச்சல், மண்டைக் குடைச்சல் தீரும்.

---

## 38. ஆமணக்கு—Amanakku.

**வே. பெ.—ஏரண்டம், சித்திரம், தலரூபம்.**

**Ricinus communis.**

**Eng.—Castor-oil plant.**

ஆமணக்கு என்னும் பெயரால் வழங்கும் செடிகள் இருவகைப்படும். அவற்றுள் ஒன்று சிறுமரம் (பெருகு செடி) வகுப்பிலும், மற்றொன்று குத்துச் செடி வகுப்பிலும் சேரும்.

### சிறுமர வகுப்பு.

இக்குலத்தில் சேர்ந்தவை: (1) சிற்றாமணக்கு, (2) பேராமணக்கு (3) செவ்வாமணக்கு. இம்மூன்றுக்கும் பொதுப் பெயர் **ஆமணக்கு.**

இது, முற்கூறிய சிற்றாமணக்கு, பேராமணக்குகளைச் சிறப்பாகவும், செவ்வாமணக்கைப் பொதுவாகவும் குறிக்கும். இச்செடிகளின் பொது, சிறப்புப் பெயர்களும், இவைகளின் உறுப்புகளும், அடியிற் காணும் பெயர்களால் வழங்கும்.

### குத்துச்செடி வகுப்பு.

இவ்வகுப்பிற் சேர்ந்தவை: (1) காட்டாமணக்கு, (2) எலியாமணக்கு இரண்டின் பண்புகளும் தனியாகக் கூறப்பட்டுள்ளன.

**Eng.—Castor-oil plant.**

| | |
|---|---|
| **Tam.** Āmaṇakkan-cheḍi ஆமணக்கஞ்செடி. | **Arab.** Shajratul-khirvaa |
| **Tel.** Āmudapu-cheṭṭu | **Pers.** Drakhte-bédanjir |
| **Mal.** Āvaṇakku | **Hind.** Arand-kä-pér; Āranḍi-kä-pér |
| **Kan.** Harald-giḍa | |
| **Sans.** Yeranda-vrikshaha | **Duk.** Yarandi-kajhär |

**Eng.—Castor-oil-seeds.**

| | |
|---|---|
| **Tam.** Āmaṇakku-muttu ஆமணக்குமுத்து | **Pers.** Bédanjir; Tukhme-bédanjir |
| **Tel.** Āmudapu-viṭṭulu | |
| **Mal.** Āvaṇakkin-kuru | **Hin.** Aranḍ; Aranḍ-ké-binj; Aranḍi; Aranḍi-kébin |
| **Kan.** Haralu' | |
| **Sans.** Yéranḍa bijam | |
| **Arab.** Khirvaa; Bazrul-khirvaa | **Duk.** Yaranḍi; Yaranḍi-Kebin |

## ஆமணக்கெண்ணெய்—Castor Oil.

Eng.—Castor Oil.

| | | | |
|---|---|---|---|
| Tam. | Āmaṇak-Keṇṇey | Sans. | Yeranda-Tailam |
| Tel. | Amudam | Arab. | Dhonul-khirvaa |
| Mal. | Koṭtenna | Hind. | Aranḍ-kà té; Aranḍi-ka-t |
| Kan. | Haraleṇṇe | Duk. | Yaranḍi-kà-tél |

Eng.—The small-seeded variety of castor oil plant.

| | | | |
|---|---|---|---|
| Tam. | Chiṭṭà-maṇakkan chedi<br>சிற்றுமணக்கஞ்செடி | Arab. | Sharjatul-khirvaaaaus-saghr |
| Tel. | Chiṭṭàmudapu-cheṭṭu | Pers. | Darakhte-dédanjire-khurd |
| Mal. | Chiṭràvaṇakkam-cheṭi | Hind. | Chhóṭi-arand-ka-pér |
| Kan. | Chiṭṭa-harala-giḍa | | |
| Sans. | Kshudra Yéranḍa vrikshaha | Duk. | Chiti- yarandi-ka-jhar; Chioti-yarandi-ka-jhar |

Eng.—Seeds of small the-seeded variety of castor-oil plant.

| | | | |
|---|---|---|---|
| Tam. | Chiṭṭàmaṇakkaṉ-koṭṭai<br>சிற்றுமணக்கங்கொட்டை<br>Chiṭṭàmaṇakku-muttu<br>சிற்றுமணக்குமுத்து. | Pers. | Tukmé-baidanjire-khurd |
| Tel. | Chiṭṭàmudapu-vittulu | Hind. | Chhoṭi-aranḍ; Chhóṭi-aranḍ-ke-binj; Chhóṭi-aranḍi; Chhoṭi-arnḍike-binj |
| Mal. | Chiṭṭavaṇakkin-kuru | Duk. | Chiṭli-yaranḍi; Chiṭli-yaranḍi ke-binj; Chhoti-yaranḍi; Chhoti-yarandi-ké-bin |
| Kan. | Chiṭṭa-haraḷu | | |
| Sans. | Kshudra Yéranḍa-bijam | | |
| Arab. | Khirvaaaus-Ṣaghir; Bazrul-khirvaasus-saghir | | |

## சிற்றாமணக்கு நெய் (எண்ணெய்)

## Chitramanakku Nai (Enney)

Eng.—Castor-oil from the seeds of the small seeded variety.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chiṭṭāmudam-nune | Pers. | Roghane-Tukme-Baid anjir Khurd. |
| Mal. | Chitravanakkin-eṇṇa | Duk. | Chhoti-Yarandi-Kaiṭṭl |
| Kan. | Chiṭṭaharaḷeṇṇe | Hind. | Chhoti-Yaranḍi-Ka-t l |
| Arab. | Dhonul-Khirvaaaus | Sans. | Lahu-Yéranda-tailam |

### பேராமணக்கு—Peramanakku.

Recinus inermis.

ஆற்றங்கரை ஓரத்தில் பயிரிடப்படுவதால், இதனைக் படுகையாமணக் கென்றும் வழங்குவர்.

ஆமணக்கு என்னும் மொழியின் முன் "பெரிய" என்கிற சொல்லை அமைத்து, பேராமணக்கு என்று வழங்குவதுபோல, இதன் இலைக்கும், வித்துக்கும், வேருக்கும் நெய்க்கும் முன் "பெரிய" என்கிற சொல்லை அமைத்துக்கொள்க. அவ்வாறே இதர மொழிக்குமாம்.

### 48. செவ்வாமணக்கு—Chevvamanakku.

Ricinus tanarius.

இதற்குரிய மற்ற மொழிகளின் பெயர்களையும், மேற்கூறியவாறே அமைத்துக்கொள்க.

இஃது இந்தியா முழுவதிலும் எளிதில் கிடைக்கும்.

ப. உ: இலை, வேர், வித்து.

சுவை—கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. { பாற்பெருக்கி—க்ஷீரவர்த்தநி Galactagogue.
வாதமடக்கி—வாதஹரகாரி Anti-vata.

### சிற்றாமணக்கு.

இஃது இந்தியா முற்றிலும் எளிதில் கிடைக்கக்கூடிய செடி.

ப - உ: இலை, வேர், வித்து.

### இலை.

சுவை: கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

காண்டம்

வாதத் தொடக்கை வரவொட்டா மற்படிக்குக்
காதத்துக் கப்பாற் கழுயுமே—சூதந்தை
பேரண்டப் பந்திக்கும் பேதிக்கு நோய்க்காடை
யோரண்ட மெப்பதிலையே.

(தே.வெண்பா)

சிற்றுமணக்குக் கழிச்சலை உண்டாக்கி வளிக்குற்றத்தை எழவொட்டாமற் றடுக்கும்.

செய்கை : { பாற்பெருக்கி—க்ஷீரவர்த்தநி—(Lactagogue.)
வாதமடக்கி—வாதஹரகாரி—(Anti-vata.)

வ-கு : இலையைக் குடிநீராகச் செய்தாவது, இலையின் சுரசமெடுத்தாவது உள்ளுக்குக் கொடுத்து, இவ்விலை இட்டுக் காய்ச்சிய வெந்நீரால் ஒற்றடமிட்டு, இவ்விலையை அரைத்துப் புற்கை செய்தாவது, இலையை வதக்கியாவது மார்பிற் கட்டிவரப் பெண்களுக்குப் பால் சுரக்கும்.

இலைகளைச் சிறுக நறுக்கி, சிற்றுமணக்கு நெய் விட்டு வதக்கிச் சூட்டுடன், வலியுடன் கூடிய கீல்வாய்வுகளுக்கும், வீக்கங்களுக்கும் ஒற்றடமிடலாம்.

சிற்றுமணக்கிலையையும் கீழாநெல்லியிலையையும் ஓரளவிலெடுத்து, அரைத்து சிறு எலுமிச்சங்காயளவு, மூன்று நாளைக்குக் காலையில் மாத்திரம் கொடுத்து, நான்காம் நாள் 3, 4 முறை வயிறு போவதற்குரிய அளவு சிவதைப் பொடி கொடுக்கில், காமாலை தீரும்.

மலக் கட்டும் வயிற்று வலியும் உள்ள காலத்திலேனும், சூதகக் கட்டு அல்லது சூதகத் தடையுடன் அடி வயிற்றில் வலி காணும்போதேனும், அடிவயிற்றின் மீது சிற்றுமணக்கெண்ணெயைத் தடவி, அதன்மேல் சிற்றுமணக்கிலைகளை வதக்கிப் போட்டுவர, அவைகள் குணப்படும்.

### வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : வாதமடக்கி—வாதஹரகாரி—Anti-vata.

வ-கு : வளிக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தச் செய்யும் குடிநீர்களிலும், தைலங்களிலும் ஆமணக்கின் வேரைச் சேர்ப்பது வழக்கம்.

தேரையர் தைலவருக்கச் சுருக்கத்தில் சொல்லிய (1) வாதாந்தத் தைலம், (2) மூலயோக நிற்குண்டித் தைலம், (3) பூதிகாதைலம், (4) சிறிய விடமுட்டித் தைலம், (5) சுக்குத் தைலம், இவைகளில் மேற்படி வேர் சேருவதைக் கவனிக்க.

வேரைக் குடிநீர் செய்து, அதில் கொஞ்சம் பூநீறு சேர்த்து, காலை மாலை இரு வேளையாக 3 அல்லது 5 நாட்கள் கொள்ள, பக்கசூலை குணமாகும்.

### வித்து.

சிற்றுமணக்கு வித்தின் ஓட்டை நீக்கி, பருப்பைப் பச்சையாக அரைத்தாவது அல்லது ஒன்றிரண்டாய் நசுக்கி அனலில் வதக்கியாவது, கட்டிகளின் மீது வைத்துக் கட்டிவர, கட்டிகள் எளிதில் பருத்து உடையும்.

இவ்வித்தின் பருப்பை ஒன்றிரண்டாகப் பொடித்து, சட்டியிலிட்டு வதக்கிச் சீலையில் முடிந்து ஒற்றடமிட, வயிற்று வலி, மூத்திரப்பைத் தாபிதம், கல்லடைப்பு, சதையடைப்பு, நீரடைப்பு, பக்கவலி, புறவுறுப்புகளிற் காணும் வீக்கம் முதலியன தணியும்.

### நெய்.

ஆமணக்கு வித்திலிருந்து எடுக்கும் நெய்—" ஆமணக்கு நெய் " அல்லது " ஆமணக்கெண்ணெய் " என வழங்கும்.

ஆமணக்கு வித்திலிருந்து நெய் இரு வகையாக எடுக்கப்படும். அவை (1) பச்சை எண்ணெய், (2) ஊற்றின எண்ணெய் என்று வழங்கப்படும்.

## பச்சை எண்ணெய்.

வித்துக்களை உலர்த்தி, ஓடுகளை நீக்கி, இயந்திரத்தின் மூலமாய்ப் பருப்புகளை அழுத்திப் பிழியும் எண்ணெய், பச்சை எண்ணெய் எனப் படும்.

## ஊற்றின எண்ணெய்.

ஓர் அகண்டகாலில் நான்கு பங்கு நீர்விட்டு, அதில் மேற்கூறிய பருப்பு களை இடித்து ஒரு பங்கு சேர்த்து, தீயிட்டு எரிக்க, நெய் கக்கி நீர் மீது மிதக்கும். இதை, அகப்பையால் முகந்து எடுத்து வேறு கலயத்தில் சேர்த்து, அதிற் கலந்துள்ள நீரை அனலில் வைத்துப் போக்கினதே, ஊற்றின எண்ணெய் எனப்படும்.

குறிப்பு :—நீருக்குப் பதிலாக, இளநீர் சேர்த்துக் காய்ச்சி எடுக்கும் நெய், குற்றமற்றதும், உடற்கு மிகுந்த நன்மை பயப்பதுமாகும்.

மேற்படி பருப்புகளை நீரில் ஊறவைத்து, கழுவி எளிதாக வறுத்து இடித்து, மேற்கூறியபடி காய்ச்சியும் எடுப்பார்கள்.

சிறு முத்துக்களிலிருந்து எடுக்கப்படும் நெய்க்கு, சிற்றாமணக்கு நெய் என்பர். இதை சிற்றாமணச்கெண்ணெய், சிறு முத்துக்கொட்டை எண் ணெய், கொட்டைமுத்து எண்ணெய், எரண்டத்தெண்ணெய் என வழங்குவர்.

பெருமுத்துக்களிலிருந்து எடுப்பதற்கு, பெருமுத்துக்கொட்டை எண ணெய், விளக்கெண்ணெய் என வழங்குவர்.

மேற்கண்ட இரு வகை முத்துக்களின் எண்ணெயில், எது மலின மற்றுத் தூய்மையாயும், வைக்கோல் நிறமாயும் நன்மணத்துடனுமிருக் கின்றதோ, அதுவே மேலானது. எஃது அதிக மஞ்சள் நிறமாயும் மிகு கனமாயும் தெவிட்டலாகவுமிருக்கிறதோ, அது தாழ்ந்தது.

**செய்கை :** மலமிளக்கி—லகுவிரேசநி (Laxative).
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி—Emollient.

**போதுப் பண்பு :** ஆமணக்கெண்ணெய்—வயிற்றைக் கழிக்கும். கோர வலி நோய், குன்மம், சூடேற்றம், உடல்-கண்-மூக்கு-செவி-வாய் இவை களிலுண்டாகின்ற எரிச்சல் இவற்றை நீக்கும். உடலைப் பொன்னிறமாக் கும்.

## ஆமணக்கெண்ணெய்.

ஏரண் டத்துநெய் யென்பது டற்கொடு
சீரண் டத்தனி செய்திடு நிசமே.

(பொருள்) : ஆமணக்கு எண்ணெயோ, உண்மையாக உடலிற்கு மிகுந்த நன்மையைக் கொடுக்கக் கூடியதாகும். (தே.கா.)

ஆமணக்கு நெய்யால் நலமுண்டாம் யாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுமே—வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறும்
உள்ளில்வரு குன்மம்போ மோது. (அ.கு.)

அம்பொனிற மூட்டிவிந்து மாங்குடலி லேற்றமறும்
ஓம்பொறிச் சூடெரிவு மாறுங்காண்—அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய்! நலஞ்செறிந்த
ஆமணக்கு நெய்யை அருந்து.

ஆமணக் கெண்ணெய் தன்னை யணிநில மறியக் கேண்மின்
பூமணச் சந்துதோறும் பொருந்திய வாதம் போக்கும்
தீமந்தந் தானும் போக்குந் திகழ்வுடன் விரைவு முண்டாம்
தீமனக் குடலில் வாதஞ்சேர்குட லேற்றம் போமே (எ௫.

**சிறப்புப் பண்பு :** சிற்றாமணக்கெண்ணெய்—இது, மருந்தின் வேகம், வலியினால் எருவாயிலுண்டாகும் அழலை (நீர்ச்சுருக்கு, வெள்ளை) ஆகிய வைகளை நீக்கும்.

குழந்தைகளைத் தாய்ப்போல வளர்க்கும்.

இதைப் பேதியாவதற்குக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கும், பிள்ளை பெற்ற பெண்களுக்கும் வயிறு கழியக் கொடுத்தற்கு, இஃது ஒரு சிறந்த மருந்தாகும் ; வயிற்று வலி, எருவாய்க் கடுப்பு முதலியவைகளைப் பிறப்பி யாது. ஆகையால், இதை, கைக் குழந்தை, கிழ வயதுடையவர், சூல் கொண்டவர், பிள்ளை பெற்றவர், சீதகுருதி பேதியால் வருந்துபவர் முதலியவர்களுக்கும் அச்சமின்றிக் கொடுக்கலாம்.

பசியின்மை வயிற்றுவலி இவற்றால் துன்புறுவோருக்கும் இதைத் தரலாம். ஐயத்தின் பெருக்கால், கோழைக்கட்டு, இரைப்பு, இருமல், இவைகளால் ஈடுபட்டவர்களுக்கு, சிற்றாமணக்கு இரண்டு பங்கும் தேன் அரைப் பங்கும் சேர்த்து, நன்றாய் உறவுபடக் கலந்து கொடுக்க, வயிறு கழிந்து நன்மை உண்டாகும்.

**அளவு :** குழந்தைகட்கு, அரை உச்சிக்கரண்டி முதல் ஓர் உச்சிக் கரண்டி வரை.

**பெரியவர்களுக்கு :** அரைப் பலம் முதல் ஒன்றரைப் பலம் வரை.

**கொள்ளும் விதம் :** எண்ணெயைத் தனித் தேனும், அல்லது உப்புச் சேர்ந்த நிசித்தண்ணீர், சுக்குக் குடிநீர், சோம்புத்தீ நீர், ஓமத்திநீர் எலுமிச்சம் பழ ரசமும் சருக்கரையும் கலந்த நீர், பால் காப்பித் தண்ணீர் போன்றவைகளில் கூட்டியேனும் கொடுக்க, கடினமின்றி வயிறு கழியும்.

மூலக் காம்புப் புண், மூலை வெடிப்பு இவைகளுக்கு, இதைச் சீலையில் நனைத்துப் போட்டுவரப் போம்.

இது, வலி நோய்களைப் போக்கும் வாத நாசத் தைலம், கழற்சித் தைலம், மெருகுள்ளித் தைலம் முதலிய தைலங்களிலும் ; மாந்தத்தைப் போக்கும் மாந்த எண்ணெய்களிலும், மேக ரோகங்களைப் போக்கும் இரசத் தைலங்களிலும் சேரும்.

கண்கள், மருந்துகளின் வேகத்தாலும், தூசுகள் விழுவதாலும் அரு இச் சிவப்பின், சிற்றாமணக்கெண்ணெயும் மூலைப்பாலும் கூட்டிக் குழைத் துக் கண்ணிலிட, சிவப்பு மாறி, அருகலுங் குணமாகும்.

எருக்கட்டுள்ளவர்கள், சிற்றாமணக்கெண்ணெயை எருவாயின் உட்புறத் தில் தடவி வர, எரு இளகி வெளிப்படும்.

உடம்பில் மேல் தோல் உராய்ந்து குருதிக் குழம்பக் கண்டால், சிற்றாமணக்கெண்ணெயைத் தடவ, எரிச்சல் நீங்கி, அந்த இடம் முன் னிருந்த நிலையையடையும்.

முக்கூட்டு நெய்யில் இஃதுமொன்று—எள் நெய், முத்து நெய், பசுவின் நெய்.

ஆமணக்கு நெய் மூன்று பங்கு, எண்ணெய் இரண்டு பங்கு, பசுவின் நெய் ஒரு பங்கு கூட்டி மூழ்கிவர, வலிப் பிணிகளும், ஆமணக்கு நெய் இரண்டு பங்கு, எண்ணெய் ஒரு பங்கு, பசுவின் நெய் மூன்று பங்கு சேர்த்து மூழ்கிவர, அழலை நோயினருக்கு உண்டாகும் நோய்களும் ஆமணக்கு நெய் ஒரு பங்கு, பசுவின் நெய் இரண்டு பங்கு, எண்ணெய் மூன்று பங்கு கூட்டி மூழ்கிவர, கபதேகிகளுக்குண்டாகும் துன்பங்களும் நீங்கும்.

## சிற்றுமணக்கு—பேராமணக்கு.

இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமை, கொட்டையின் அளவைப் பொருத்ததாகும். சிற்றுமணக்கின் கொட்டை சிறியதாகும். பேராமணக்கின் கொட்டை சிற்றுமணக்கின் வித்தை விடப் பெரியதாயிருக்கும். இதனால், இவ்விரு வகைக் கொட்டையினின்றும் வடிக்கும் நெய்யிலும் வேற்றுமை உண்டு என்று சிலர் கருதுகின்றனர். மற்றுஞ்சிலர் நெய் எடுக்க வேண்டிய முறைமையிற் செய்யின், இவ்விரண்டு வகை முத்துக் களின் நெய்யிலும் யாதொரு பேதமுமில்லை என்கின்றனர். வழக்கில் இவ்விரு கொள்கைகளும் உண்மையே. எங்ஙனமெனில், கடைகளில் வணிபத்தின் பொருட்டு விற்கப்படும் நெய்க்கும், மருந்தாக வழங்குவதற்கு எடுக்கப்படும் நெய்க்கும் இருக்கும் வேற்றுமையேயாம்.

The above are the general names of castor oil, whether obtained from the seeds of the large-seeded variety or from the small-seed. But there is a great difference between these two a rtices as found in the bazaars of Southern India. So much so, the one is used by Indians only for lamp, and the other for medicinal purposes. The latter is viscid, nearly colourless or of pale yellow colour, and has a peculiar bland oily taste with a slight nauseous smell. The former is much thicker, more or less of brown colour and has an acid and very disagreeable nauseous taste and odour. Its action as a purgative is much stronger, and generally accompanied with much griping. It is often used in hospital practice with purgative Enemata, for which purpose it is more suited, in my opinion, than the other article. *These oils are distinguished in the bazaar by the following names:—Chittamanak-kenney and Viḷak-keṇṇey.

The above remarks are applicable only to the varieties of castor oil sold in the bazaar; but I believe that there is no difference between the oil of small and large seeds, if they are prepared in a proper manner or by cold-drawn process. Dr. Bidie has kindly furnished the following note on the subject, when the proof of this form was submitted to his examination:—

I have prepared oil from both varieties of the seeds by cold-drawn process and there was not the least difference as regards quality or action between them. Several dozen bottles of each were prepared, so there could be no chance of error—Vide pages 187 and 188, Supplement to the Pharmacopoeia of India by Moinede Sheriff. G.M.M.C.—1869.

## 39. ஆயில்.—Ayil.

**இது பூதிகம் என்றும் வழங்கும்.**

இது தென்னிந்தியாவில் கொங்கு நாட்டில் தன்னிச்சையாக பயிராகிற மர வகுப்பில் ஒன்று.

ப-உ : பட்டை.

செய்கை : முத்தோடமகற்றி-திரிதோஷஹரகாரி-Counter-irrestena-Counter—irritent.
வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி—Febrifuge.

பண்பு : வாதாதி முத்தோடங்களையும், பழைய சுரத்தையும் போக்கும்.

ஆயி லுரியை யடுநீரு ணித்தியமெய்
வாயி லுரியையெனி லாவிமிசை—யாயில்
வரிசையாக் கற்குநிகர் வல்லியட்டுண் மெய்க்கு
வரிசையாக் கத்தையுறு வை. (தே.ய.)

## ஆயில்பட்டை

" ஆயி லுரியை யகுநீ ருணித்தியமெய்
யாயி லுரியையெனி லாவிமிசை."

(பொ-ள்) ஆயில்பட்டை சூரணம் 34 கிராமும், நல்ல தண்ணீர் 1,400 மி.லி., ஒரு புதிய மண்பாண்டத்தில் இட்டு, ஒரு நாள் வெய்யிலில் வைத்து, முக்கடுகு, வகைக்கு அரைக்கால் பலம் சேர்த்து, கமலாக்கினி யாய் எரித்து, முக்கால் ஆழாக்காகச் சுண்டக் காய்ச்சி உட்கொள்ள, தேகத்தில் உண்டான வாதம் முதலான முப்பிணிகளும் தத்தம் நிலையில் நடக்கும். சுரமுதலான வெப்புப்பிணிகள் யாவும் அகலும். உடல் வன்மை பெறும்.

வ-கு : இதன் பட்டையை நிழலிலுலர்த்தி, இடித்துத் தூள் செய்து அதில் 34 கிராம் எடையை எடுத்து, 1,400 மி. லி. நீர் விட்டு, ஒரு நாள் முற்றும் சூரிய புடத்தில் வைத்து, பிறகு திரிகடுகுத்தூள் வகைக்கு அரைக்கால் பலம் சேர்த்து, கமலாக்கினியாய் எரித்து, முக்காலாழாக்காகச் சுண்டியபின் இறக்கி, வடிகட்டிக் குடித்துவர, முக்குற்றக் கேட்டாலுண்டாகும் நோய்களைப் போக்கி, சுரத்தையும் நீக்கி உடலைக் காக்கும்.

" ஆயி லடுபுன லனலையடு நெறி "—என்கிற வாக்கியத்தாலுமறிக. (தே. க.)

முக்குற்ற நோய்களை நீக்கும். தைலங்களிலும், வளிக்குத்தலால் உண்டான நோய்களைப் போக்கும். தைலங்களிலும் இப்பட்டை சேரும்.

இதன் பட்டையை இழைத்து மேல் பூச, வெளுத்த தோல் (வெண்குட்டம்) கருக்கும்.

---

## 40. ஆரைக்கீரை—Araikkirai.

வே.பெ. : சதுப்பன்னி, நீர் ஆவாரை.

**Marsilea quadrifolia** .

இது நீர் தங்கிய இடங்களில் ஒரு தண்டில் நான்கு இதழ்கள் கூடிய நீர் மட்டத்தில் பயிராகும் பூண்டு.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி, சீதளகாரி—Refrigerant

பண்பு : இஃது, அழல் நோய், அடிக்கடி நீரிழிதல், வெள்ளை ஆகியவைகளைப் போக்கும்.

தின்று லுரிசைதருந் தீராப் பயித்தியத்தைப
பொன்றுத நீரிழிவைப் புண்ணீரை—யென்றுமிந்த
வூராரைச் சார்ாம லோட்டிவிடு நாலிதழார்
நீராரைக் கீரையது நீ. (அ.கு.

வ-கு : இதைச் சமைத்துண்ண மேற்கண்ட நோய்களைத் தீர்க்கும். நாவிற்குச் சுவையைத் தரும்.

இதை நிழலிலுலர்த்திக் குடிநீர் செய்து, இதில் பால் சருக்கரை சேர்த்து உட்கொண்டு வரலாம்.

---

## 41. ஆலமரம்—Alamaram.

வே. பெ.—இயக்குரோதம், காமரம், கோளி, தொல் மரம், பழுமரம், பூதம், வடம், வானேக்கி.

**Ficus bengalensis,**

**Eng.—The banyan tree.**

| | |
|---|---|
| Tel. Marri. | Kan. Allada |
| Mal. { Péral / Peralinmaram | Sans. Vata |
| | Hind. Bargad |
| | Urd. Boru |

இம் மரமானது, இந்தியாவின் எப்பாகங்களிலும் சருவ சாதாரணமா யுள்ளது.

ப.உ : இலை, பழம், விழுது, பால், பூ.
சுவை—துவர்ப்பு, தன்மை—சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
உரமாக்கி—பலகாரி—Tonic.
காமம் பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

பண்பு : இதன் எல்லாப் பாகமும், மேகம், வயிற்றுக் கடுப்பு, நீரிழிவு இவைகளைப் போக்கும் ; உடற்கு வன்மை தரும்.

### ஆல்

அச்சரம் புண்கிரந்தி யாவும் பயந்தோட
வச்சமுற மேகமுந்தீ யாகுமே—இச்சகத்தில்
நாதனென மூவருக்கு நற்றுணையா மாக்கைக்கும்
பூத மதிபதியைப் போல். (தே. வெண்பா.)

ஆல், வாயில் சிறு கொப்புளங்களோடுங் கூடிய புண்ணையும், கிரந்தி மேகத்தையும் போக்கும். அன்றியும், உடற்கு வன்மையையும் அளிக்கும்.

சொல்லுகின்ற மேகத்தைத் துட்ட அகக்கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்காண்—நல்லாலின்
பாலும் விழுதும் பழமும் விதையும் பூவும்
மேலும் இலையுமெனவே விள். (அ.கு.)

### ஆலம்பால்

செய்கை { உடல் உரமாக்கி—பலகாரி—Tonic.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

சுவை—துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு—இனிப்பு.

**குணம்** : மேகத்தைப் போக்கும் ; அசைகின்ற பல்லை இறுக்கும்; தலைக்குக் குளிர்ச்சியைத் தரும் ; விந்துவைப் பெருக்கும்.

ஆலம்பால் மேக மறுதசையும் பல்லிறுக்கும்.
கோல முடிக்குக் குளிர்ச்சிதரும்—ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்த மதிமுகத்தாய் ! சொல்.

(அ.கு.)

" பூதச் சுதைபோற் பொருபாண்டிவைகளுக்கு
பூதச் சுதையுண் "

(பொ-ள்) அறுகங்கட்டைச் சமூலத்தைப் பொடித்துச் சூரணம் செய்து அதற்கெனவே குறிக்கப்பட்ட அளவிற்கேற்ப, ஆலம் பாலைச் சேர்த்துக் கருக்கிலே, ஆறிப்போகாதவாறு முன் சொன்ன சூரணத்துக்குச் சரியாய், கற்ப முறைப்படி ஒரு மண்டலம் (48 நாட்கள்) தவறாமல் பத்தியத்துடன் உண்ணில், வெண்குட்டம், சோகை முதலிய பிணிகள் ஓடிப்போகும்.

**வ.கு** : நாக்கு வெடிப்பு, வெள்ளை, ஆண்மைக் குறைவு இவைகளுக்கு உள்ளுக்கும், பல் ஆட்டம், கால் வெடிப்பு இவைகளுக்கு மேலுக்கும் வழங்கலாம். விழுதைக் கொண்டு பல் துலக்கப் பல் இறுகும். வயிற்றுளைச்சல் போகும்.

" ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலு மிரண்டும் சொல்லுக் குறுதி " (ப-மொ)

## ஆலம் பழுப்பு

இதைச் சுட்டுச் சாம்பலாக்கி, நல்லெண்ணெயில் கலந்து, கரப்பானுக்குப் பூசக் குணமாகும். ஆலம் பழுப்பிலையை அரிசிப்பொரியோடு சேர்த்துக் குடிநீரிட்டுக் கொடுக்க, வேர்வையை உண்டாக்கும்.

## ஆலம் விதை

**செய்கை** :
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- மலமிளக்கி—மலகாரி—Laxative.

**பண்பு** : இது வயிற்றைக் கழிக்கும் ; உடற்கு ஊட்டத்தைத் தரும்.

**வ-கு** : மலச் சிக்கலைப் போக்குதற்குச் செய்யும் லேகியங்களுடன், இதைச் சேர்த்துக்கொள்ளலாம் ; தேகபலத்தைத் தரக்கூடிய இதர லேகியங்களோடும் இதைச் சேர்த்து உபயோகிக்கலாம். இரத்த காசத்துக்கு, அகத்தியர் கும்மி 47, 48-வது பாடலில் சொல்லியிருக்கும் மருந்து முறையில் இந்த விதையும் சேர்ந்திருக்கிறது.

## ஆலம் பட்டை

**செய்கை** : துவர்ப்பி—ஸங்கோசனகாரி - Astringent.

**வ-கு** : இதைக் குடிநீரிட்டு வாய்க் கொப்பளித்து வர, வாய்ப்புண், வாய்நாற்றம், நாவெடிப்பு, ஈற்றுபுண் இவை போம். விரணங்களைக் கழுவவும் இதை உபயோகிக்கலாம்.

பட்டையை இடித்து, 10 மடங்கு நீர் விட்டு, நன்றாக ஊறவைத்து உள்ளுக்குக் கொடுத்து வர, நீரிழிவும் நீங்கும்.

### ஆல் வேர்பட்டை

வ-கு : இதை முறைப்படிக் குடிநீரிட்டு, பாலுடன் சேர்த்துக் கொடுக்க, வெள்ளை நீங்கும்.

### ஆலிலை

வ-கு : இலையை வதக்கி, மேகக்கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம். இதனால் கட்டி உடைந்து சீழ் நீங்கும்.

### ஆலமொட்டு

வ-கு : இதைப் பால், சர்க்கரை முதலியவற்றோடு சேர்த்து, வயிற்றுளைவுக்குக் கொடுக்க, அது நீங்கும்.

### ஆலம்பழமும், வேர்க்கொழுந்தும்

வ-கு : இவை வெண்ணீரைப் பலப்படுத்தும்.

### ஆலங்குச்சி

வ-கு : இதனால் பல் துலக்கி வர, பல் நோய், ஈறிலிருந்து குருதி வடிதல் முதலியவை நீங்கி, பல் உறுதிப்படும்.

---

## 42. ஆல்பொகாடாப்பழம்—Alpogadapazham

வே-பெ : ஆல்பகோடாப்பழம்.

**Bot. Name : Prunus Communis Var Instititia.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Alpogada-Pandlu | **Hind. & Duk.** | Alu-bokhara. |
| **Arab.** | Ijàs | | |
| **Pers.** | Alu | | |

இது இமயமலையின் மேற்குத் தொடர்ச்சி மலைகளில கோவால் முதல் காஷ்மீர் வரையில் பயிராகிறது. தற்போது கோடைக்கானலிலும் நீலகிரியிலும் இது பயிரிடப்படுகிறது. இதைப் ப்ளம் ( ) என்பார்கள்

சுவை—இனிப்பு, புளிப்பு, தன்மை- தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி —Cooling
- மலமிளக்கி —Laxative.
- வறட்சியகற்றி —Emollient.

பண்பு : இப்பழம் எருக்கட்டு, செரியாமை, மிகுந்த அழல், தலை வலி, நீர் வேட்கை, சுரம், தினவு, சொறி, சிரங்கு இவைகளைப் போக்கும்.

வ-கு : கொள்ள வேண்டிய அளவிற்குமேல் கொஞ்சம் அதிகப்படுத்திச் சாப்பிட, வயிறு கழிவதுடன், பித்த நீரையும் கழிக்கும்.

இப்பழத்தைச் சுவைத்துத் தின்ன, இஃது அழலால் உண்டான காய்ச்சல், தலைவலி, தினவு, சொறி, சிரங்கு, சுவையின்மை ஆகிய வற்றைப் போக்கும்.

ஒரு பங்கு பழத்திற்கு, எட்டுப் பங்கு நீர் விட்டு, நாலிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டி, இதில் சிறிது வெள்ளைச் சருக்கரை சேர்த்து சாப்பிட, வயிறு கழியும்.

## ஆவாரை—Avarai

வே-பெ : ஆவரை, ஆவிரை, ஏமபுட்பி, மேகாரி, ஆகுலி, தலபோடம்.

Cassia auriculata.

Eng.—The tanners- cassia.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Thangédu | Sans. | Telapotakam. |
| Mal. | Avara. | Hind. & Duk. | Tarvar. |
| Kan. | Tangàdi-gida<br>Avare-gida<br>Taravada-gidà | | |

இஃது, இலங்கை, மத்திய மாகாணம், தென்னிந்தியா, மேற்கரை நாடு இவ்விடங்களில் ஏராளமாக வளரும் குத்துச் செடி.

ப—உ : இலை, பூ, பட்டை, விதை, வேர், பிசின்.
சுவை—துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

### இலை, பூ, பட்டை

செய்கை :
- துவர்ப்பி—ஸங்கோஸனகாரி—Astringent.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

விதை.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
- செந்நீரிளக்கி—Attenuant.

வேர்.
- உடற்றேற்றி— வியதாபேதகாரி Alterative.

### பொதுக் குணம்.

ஆவாரைச்சமூலம் : சர்வ பிரமேக மூத்திர ரோகங்களையும், ஆண்குறி எரிச்சலையும் போக்கும்.

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீர்
எல்லா மொழிக்கு மெரிவகற்று—மெல்லவச
மாவாரைப் பம்பரம்போ லாட்டுந் தொழிலணங்கே !
பாவாரை மூலி யது. (தே.கு.)

### ஆவாரையின் ஐந்தின் குணம்

ஆவாரையின் இலை, பூ, காய், பட்டை, வேர் என்னும் ஐந்து உறுப்புகளால், நீரிழிவு, வெள்ளை, உட்சூடு, புண், வெளிநிணக் கழிச்சல், எலும்பைப் பற்றிய சுரம், நீர் வேட்கை இவைபோம்.

மோகத்தி னாலே விளைந்தசலம் வெட்டையனல்
ஆகத்தின் புண்ணோ டருங்கிராணி—போகத்தான்
ஆவாரைப் பஞ்சகங்கொள் அத்திசுரம் தாகமும்போம்
ஏவாரைக் கண்மடமா' தே ! (அ.கு.)

### ஆவாரம் பூவின் குணம்

இது, நீரிழிவு, வறட்சி, உடம்பிற் பூத்தவுப்பு, கற்றாழை நாற்றம் இவைகளை நீக்கும் ; உடம்பிற்குப் பொற்சாயலைத் தரும்.

தங்கம் எனவே சடத்திற்குக் காந்திதரும்
மங்காத நீரை வறட்சிகளை—அங்கத்தாம்
மாவைக்கற் றாழை மணத்தை அகற்றிவிடும்
பூவைச்சேர் ஆவார ம் பூ. (அ.கு

## 35. ஆவாரைப்பிசின் குணம்.

ஆவாரைப்பிசின், நீரிழிவு, வெள்ளை முதலிய சிறுநீர் கேடுகளைப் போக்கும்.

பெருநீர் மறிக்கும் பிரமேகம் போக்கும்
வருநீர்ச் சுருக்குதனை மாற்றுந்—தருநீர்மை
பூணுமே னிக்கமலப் பொன்னே! பிடகரெலாம்
பேணுமே காரிப் பிசின். (அ.கு.)

### இலை.

வ—கு: இதற்குக் குளிர்ச்சியுடைமையால், வெயிலில் வெகுதூரம் நடப்பவர்கள், இவ்விலைகளைக் கையிலேபிடித்துத் தலையின்மீது பரப்பி அதன்மீது தலைப்பாகையிட்டு நடக்க, வெயிலின் வெப்பம் தோன்றாது நடையும் பரியும்.

### பூ

பூவைச் சமைத்துச் சாப்பிட, கற்றாழைமணம், நீரிழிவு, உடம்பில் உப்புப் பூத்தல்,வறட்சி (நீர்வேட்கை) சமனப்படும்.

இதை வதக்கிக் கண்ணோய்க்கு ஒற்றமிடலாம்.

இதைக் குடிநீரிட்டுப் பால் சேர்த்துச் சாப்பிட, உட்சூடு தணியும்.

பூவுடன் பச்சைப்பயறுசேர்த்தரைத்து நமைச்சலுக்குத் தேய்த்துக் குளிக்கலாம். மணப்பாகு செய்து சாப்பிட, வெள்ளை, மூத்திரரோகம், ஆண்குறி எரிச்சல் நீங்கும். சொப்பனஸ்கலிதமும் போம். பெரும்பாடு என்னும் நோயை நிறுத்த, வட இந்தியப் பெண்கள் பூவை யோனிக்குட் செலுத்திக் குணம் பெறுகிறார்கள்.

### பட்டை.

இதைக் கஷாயமிட்டு, வாய் கொப்பளிக்கவும், ஆசனவழியாய்ப் பீச்சவும் உபயோகிக்கலாம்.

### விதை.

இதை நன்றாகப் பொடித்து, நீர்விட்டரைத்துக் குழப்பி, கண் சிகப்பு நீங்க, இமைப்பையின் மீது பற்றிடலாம்.

விதையின் தோலைப்போக்கி நுண்ணியதாகப் பொடிசெய்து கண்ணில் தூவியாவது, அல்லது தேங்காயெண்ணெய், எண்ணெய் இவற்றுள் ஒன்றில் குழைத்துக் கண்ணோய்களுக்கு உள்ளிலிட்டாவது நலம் பெறல் வழக்கு.

இதை உரைத்துக் கண்களிலிட, சீ பிடிக்கும் கண்ணோய் தீரும்.

### பிசின்.

இதில் 4 கிராம் முதல் 10 கிராம் எடை நீரிற் கலந்து குடித்துவர நீரிழிவு, வெள்ளை, சிறுநீர் எரிச்சல் போம்.

### முழுச் செடி.

வேர் முதலியவைகளைக் குடிநீரிட்டுச் சாப்பிட்டுவர, நீரிழிவு, ஆண்குறி எரிச்சல் தணியும். வேண்டுமானால், இத்துடன் கற்கண்டு, பசுவின் பால் சேர்த்துக்கொள்ளலாம்.

மேற்கண்ட குடிநீர் செய்தெடுத்து, அதற்கு நேர் பனங்கற்கண்டு, தக்க அளவில் வால்மிளகு, ஏலக்காய் இவைகளைக் கூட்டி மணப்பாகு செய்து, இதைப் பால் அல்லது நீர் இவைகளில் ஒரு உச்சிக்கரண்டியளவு கூட்டிச் சாப்பிட, உடல் வலுக்கும். சிறுநீர் அளவில் கட்டுப்படும். அதில் நிறைந்த இனிப்புக் குறையும், அல்லது பொடித்தவணிலும் மேற் கூறிய நன்மைகளைப் பயக்கும்.

### வேர்.

வேர்ப்பட்டையைக கஷாயஞ்செய்து, அதற்கு நேர் வெள்ளாட்டுப்பால் அல்லது பசுவின் பால், எண்ணெய் இவற்றைக் கூட்டித் தைலஞ்செய்து தலைமுழுகிவர, மேகநீரால் வேதனைப்படுபவர்களின் வெப்பந்தணியும், கண் குளிரும்.

### ஆவிரைக் குடிநீர்.

ஆவிரை கொன்றை நாவல் அலை கடல் முத்தங் கோஷ்டம்
மேவிய மருதத் தோலும் விரைந்துட ரெக்கக் கொண்டு
பூவிரி குழலி னாளே ! பொருந்தவே தன்னை யுண்ணக்
காவிரி நீரும் வற்றிக் கடல்நீரும் வற்றுந் தானே.

(பொ—ள்) ஆவிரை, கொன்றை, நாவல், கடலழிஞ்சில், முத்தக்காசு, கோஷ்டம், மருதப்பட்டை, இவற்றை ஒரே அளவில் கூட்டி, அதற்குத் தகுந்த நீர் விட்டு, எட்டில் ஒன்ருய் வற்றச் செய்து குடிக்க, நீரிழிவு போம்.

ஆவா ரந்துளிர் கல்மதங் கொன்றைவேர்
நீவி ரைந்து புளிமோரி லுண் டையேல்
தீவி ரைந்து வரி னுந்திரைக்கடல்
காவி யைந்து வரினுங் கடக்குமே.

(பொ-ள்) ஆவாரந்துளிர், கல்மதம், கொன்றைவேர், ஆகிய மூன்றையும் புளித்த மோரில் கலக்கிக் குடிக்க, நீரிழிவு நோய் நீங்கும்.

வேறு : ஆவாரம, சீந்தில், தில்லைச்செடி இவைகளின் வேர், இலை, தண்டு, பூ, முதலியவற்றை முறையே மூன்று, இரண்டு, ஒன்று என்னும் எடையாகக் கொண்டு, இளவறுப்பாக வறுத்து, ஒன்றிரண்டாக இடித்துப் பொடியாக்கி, அரைப்பிடிக்கு அரைப்படி நீரிட்டு, அரைக்கால் படியாகக் குடிநீர் செய்து அதில் பால் கூட்டி, காலை மாலை கொடுக்க, நீரிழிவு போம். நீரில் சருக்கரை குறையும்.

---

## 44. ஆளிவிரை—Ali verai.

வே—பெ : ஆழிவிரை, ஆளிவிதை.

**Lepidium sativum,**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adeli. Adipalu Adituyalu | Pers. | Tukhme-turraktézak |
| Mal. | Alivittu. | Hind. | Hàlim. Chansar |
| Kan. | Alibija | Duk. | Halim. |
| Sans. | Chandrasura | | |
| Arab. | Habbur-rashàd Hurf | | |

ப—உ : இலை, பூ, விதை, வேர். இஃது இந்தியாவில் பயிரிடப்படுகிறது.

## இலை.

செய்கை : { வெப்புண்டாக்கி—உஷ்ணகாரி/Stimulant.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி/Diuretic. }

குணம் : இஃது உடலுக்கு வன்மை தரும். நீர்க்கட்டை உடைத்து நீரைவெளிப்படுத்தும்.

வ—கு : இலையைப் பச்சடி செய்துண்ண மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

## பூ.

செய்கை : உரமாக்கி—பலகாரி (Tonic).

குணம் : இளைத்த உடலுக்குப் புலத்தை உண்டாக்கும்.

வ—கு : இனிப்புள்ள பச்சடிகளில் பூவைத் தூவித் தின்னலாம்.

## விதை.

செய்கை. {
உடற்றேற்றி—வியதாபேதகாரி/Alterative.
மலமிளக்கி—லகுவிரேசனி/Aperient.
காமம்பெருக்கி—காமவர்த்தநி/Aphrodisiac.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரதாரி/Carminative.
உள்ளழலாற்றி—ஸ்நிக்தகாரி/Demulcent.
சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி/Diuretic.
ருதுஉண்டாக்கி—ருதுவர்த்தனகாரி/Emmenagogue.
பாற்பெருக்கி—க்ஷீரவர்த்தநி/Galactagogue. }

குணம் : இஃது செரியாமை, சீதக் கழிச்சல், செரியாக் கழிச்சல், இடப்பாட்டீரல் வீக்கம், வயிற்றுப் பொருமல், விக்கல், ஐயநோய் ஆகிய இவைகளை நீக்கும். பாலைச் சுரப்பிக்கும். சருவைக் சரைக்கும். நீரை வெளிப்படுத்தும், வெண்ணீரைப் பெருக்கும், கழிச்சலையுண்டாக்கும், உட்சூட்டைத் தணிக்கும்.

வீக்கம் அதிவாநதி மேனி வலிவாய்வுந்
தூக்குநரம் பின்குத்தல் தொல்லழலை—ஒக்காளம்
மீளி யருசி விதைவாத மும்போகும்
ஆளிவிதை தன்னால் அறி.

(அ.கு.)

வ—கு : மேற்கண்ட குணங்களைப் பெற (1) ஒரு பங்கு விதைப் பொடிக்கு 20 பங்கு நீர் சேர்த்து, குடிநீராக்கியாகிலும், அல்லது ஒரு பங்கு பொடி செய்த விதையை, 10 பங்கு குளிர்ந்த நீரில் நன்றாய் ஊறவைத்தாகிலும் கால் முதல் அரையாழாக்கு வரை நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை கொடுத்துவரலாம்.

ஒரு பங்கு பொடி செய்த விதையை 8 பங்கு நீரில் ஊறவைத்தாகிலும் கொதிக்கவைத்தாகிலும் சுமார் ½ முதல் 1 பலம் வீதம் அடிக்கடிக்குக் கொடுத்துவர, விக்கல் நீங்கும்.

விதையைப் பாலிலிட்டுக் காய்ச்சிக்கொடுக்கப் பாலைச் சுரப்பிக்கும். ஆனால் இஃது இளங்கருவைக் கரைத்துவிடும்.

விதையின் சூரணத்தைச் சருக்கரையுடன் கலந்துகொடுக்க, அசீரணம், அசீரணபேதி, சீதபேதி இவைகள் குணப்படும்.

விதைச் சூரணத்துடன் சருக்கரையும் நெய்யும் சேர்த்து உட்கொண்டு வர, இளைத்த உடல் தேறும்.

விதையைப் பாலில் வேகவைத்து, போதுமான அளவு சருக்கரை அல்லது வெல்லம் சேர்த்து, இலேகியம் போலக்கிண்டி, கழற்சிப் பிரமாணம் காலை மாலை கொள்ள, அது வயிற்றுப் பொருமலை நீக்கும், பாலைச்சுரப் பிக்கும், சுக்கிலத்தைப் பெருக்கும், குசுமரோகத்தைத் தணிக்கும்; இடுப்பு வலியை நீக்கும்.

கடுகிற்குப் பதிலாக, இவ்விதையை நீர் விட்டரைத்து இரத்தக் கெடுதியினால் வந்த சருமரோகங்களுக்கு வெளிப்பிரயோகஞ் செய்யலாம்.

வாதவலிக்கும், உள்தாபிதங்களுக்கும், விதையைப் பழரசம் விட்டரைத்துச் சீலையிற்றடவிப் போடலாம்.

மருத்துவன் தன் அனுபவத்தில், இவ்விதையின் குணத்திற்குப் பொருந்திய இதர பதார்த்தங்களையும் இத்துடன் சேர்த்து, நோயாளிக்குத் தகுந்தபடி எவ்விதமாகவேனும் செய்து கொடுத்துவரலாம்.

**வேர்**

மேகப்படைகளுக்கும் ஆசனக்கடுப்பிற்கும் இதன் வேரைப் பயன்படுத்தலாம்.

**எண்ணெய்.**

இதையும் மேற்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கலாம். பெரும்பாலும் இது வாதநோய்களிலும், உள்தாபனங்களிலும் மிகப்பயன்படும்.

## 45. ஆள்வள்ளிக்கிழங்கு—Al-vallik-kizhangu.

**வே-பெ : மரவள்ளிக் கிழங்கு, மரச்சீனிக்கிழங்கு.**

**(Manihot utilissima.)**

**Jatropa Janipa Monihat.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Manu-pendalam<br>Karra-pendalam | Mal. | Mara-Kizhanna.<br>Mara-vallikizhanna. |
| | | Duk. | Pindalu.<br>Pindalam. |

இது தென்னிந்தியாவிலும், சிறப்பாக மலையாளம் திருவிதாங்கூரிலும், வட இந்தியாவில் ஆஸாமிலும் பயிராகும். தென் பிரேசில் (Brazil) லும் கிடைக்கும்.

ப-உ : கிழங்கு : இதில் கைப்புச் சுவையுள்ளதுமுண்டு. ஆனால் இந்தியாவில் கிடைப்பது இனிப்புடையதேயாகும்.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை - உரமாக்கி - பலகாரி -(Tonic)

குணம் : இக்கிழங்கை உண்பதால், அழலையும், வளிக்குற்றங்களையும் மிகுதிப்படுத்தி மாந்தத்தையும் உண்டாக்கும்.

பித்தங் கலந்த பெருவாய்வை யுண்டாக்கும்
மெத்தவனல் மந்தத்தை மேலெழுப்புஞ்—சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ் லேந்திழையே ! இந்த
மரவள்ளிக் கந்தமென வை. (அ.கு.)

ஆயினும், மிக உழைப்புடைய ஏழைமக்கட்கு இது முக்கிய உணவாயிருக்கிறது. உடலைப் பேணும் தன்மை இதில் இருப்பதால், ஏழை மக்கள் இதைப் பச்சையாகவே தின்பார்கள். சிலர் இதை வேகவைத்துத் தனித்தேனும் வெல்லம் சருக்கரை சேர்த்தேனும் தின்பர்.

இதைப் பச்சையாகவேனும், வேகவைத்துத் தோலை உரித்தேனும் நன்றாக வெய்யிலில் உலர்த்தி, மாவாக்கிக் கஞ்சிசெய்து, சருக்கரை, பால் சேர்த்தும் குடிப்பார்கள். இக்கஞ்சியைப் பால் இல்லாக் குழந்தைகளுக்கும் கொடுத்து, குழந்தைகளை வளர்ப்பது ஏழைமக்களின் வழக்கம்.

இம்மாவிலிருந்தே டாபியாகோ (Topioca) செய்யப்படுகிறது.

---

## 46. ஆற்றுத்துமட்டி—Artu-tumatti.

வே-பெ.—பேய்க்கொமட்டி, பேய்த்துமட்டி, துமட்டி, வரித்துமட்டி கலிங்கம், பிச்சிக்காய்.

Citrullus colocynthis.

Eng—Colocyntal—fruit of.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Verri-puch-cha<br>Ett-puch-cha<br>Chitti-papara | Pers. | Hindavanhoce-talkh.<br>Kharbuzahe-talkh<br>Kabiste talkh.<br>Khar-bruzaha-rubah. |
| Mal. | Pei-Kumatti | | |
| Kan. | Hàva-mekke-Kayi | | |
| Sans. | Indra varuni | | |
| Arab. | Hanzal<br>Alqam | Hind. | Indarjow. |
| | | Duk. | Indardvan. |

இஃது, இந்தியாவில் மணற்பாங்கான இடங்களிலும், நீர் வற்றிய காலத்தில் ஆற்றுப்படுகைகளிலும், தானாகவே முளைத்துப் பயிராகுமெனினும், வடமேற்கு மாகாணத்திலும், பஞ்சாப், சிந்து முதலிய இடங்களிலும் மத்திய மாகாணங்களிலும், தென் இந்தியாவிலும் ஏராளமாய்ப் பயிராகும். கொடி வகுப்பைச் சேர்ந்தது.

ப - உ : காய், பழம், வேர், வித்து.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை
- குறைந்த அளவில்—கோழையகற்றி—கபஹ்ரகாரி-Expectorant
- உடற்றேற்றி— வியதாபேதகாரி-Alterative
- மத்திய அளவில்—மலநீராக்கி—ஜலவிரேசநி-Hydrogogue.
- சிறுநீர் பெருக்கி—மூத்ரவர்த்தநி-Diureti.
- அதிக அளவில்—வாந்தியுண்டாக்கி—வமநகாரி-Emetic.
- குடற்புரட்டி - Gastro-Intestinal irritant.

## காய், பழம்.

இதன் காய் அல்லது பழத்தை வழங்குமுன், வரகு வைக்கோலாற் சுட்டு, பழத்திற்குள்ளிருக்கும் சோறு, விதை, மேலுள்ள தோல் இவைகளை நீக்கி, தோலுக்கு நெருங்கியுள்ள சதைப்பற்றை மாத்திரம் எடுத்துக் கையாளவேண்டும். இன்றேல், கொடிய வாந்தியும் வயிற்றுப் புரட்டலும் உண்டாகும்.

குணம் : இது கீல்பிடிப்பால் நடையின்றிக் கிடத்தல், சோர்தல் முதலிய வளிக்குற்றத்தால் உண்டாகும் நோய்களையும், சூலத்திலுண்டாகும் நோய்களில், சூதகத் தடை, மிகுதியும் குருதி வெளியாதல் சூதகவலி, சூல் கொள்ளாடை என்னும் நோய்களையும் போக்கும்.

இடையெங்கே சோம்பலெங்கே கேடுறச்செய் வாதக்
கடையெங்கே யாற்றுக் கலிங்க—மடைதிறக்கின்
அண்டை யடைச்சலெங்கே யாமிழையார் சூதகத்தின்
உண்டை யுடைச்சலெங்கே யோது. (தே.கு.)

வ-கு : இச்சதையை உலர்த்திப் பொடிசெய்து, 65 மி. கி. முதல் 200 மி. கி. வரை கொடுக்க, மலக்கட்டு, சோபை, சூலகத்து நோய்கள் போம்.

பழத்தைப் பிழிந்த சாற்றில் 700 மி.லி. எடுத்துக் குழம்பாய்க் காய்ச்சி, அதனுடன் பொரித்த பெருங்காயம் 17 கிராம், ஏலரிசி, வால் மிளகு, கடகரோகணி, குரோசானி ஓமம், வெங்காரம், இந்துப்பு இவைகளின் பொடி வகைக்கு 2 கிராம், இவற்றைச் சேர்த்தரைத்து, 130 முதல் 260 மி. கி. எடை கொடுக்க, மலபந்தம், சூதகக்கட்டு, சூதகசன்னி, குருதி குன்மம் முதலியன நீங்கும்.

பழத்தின்சாறு அநேக மெழுகுகளிலும் தைலங்களிலும் (கலிங்காதி மெழுகு, கலிங்கத்தைலம்) சேரும்.

இதன் வேரைப் பொடி செய்து சிறிய அளவில் கொடுக்க, வயிற்றுப் பொருமல், இருமல், குழந்தைகளுக்குண்டாகும் இரைப்பு, உப்பிசம், வயிற்றுப்புழு போம்.

வேரை அரைத்து வயிற்றுப் பொருமலுக்குப் பற்றிடலாம்.

வேரையாகிலும், பழத்தையாகிலும் எட்டிக்கொட்டையைச் சேர்த்தோ சேர்க்காமலோ நீர் விட்டு அரைத்து, கட்டிகள் மீதும், குருவின் மீதும் பற்றிடலாம்.

வேரை அரைத்து புற்கை செய்து மூல வீக்கத்திற்குக் கட்டலாம்.

வேரும் திப்பிலியும் ஓரெடையெடுத்து நீர் விட்டரைத்து, 65 மி.கி. மாத்திரை செய்து கொடுக்க, கீல்வாயு போம்.

விதையினின்றும் எடுத்த தைலத்தால், பாம்பு, தேள் கடிகளின் நஞ்சு, வயிற்று வலி, காக்கைவலி, போம் ; மயிரும் கறுக்கும்.

குறிப்பு : இது கூடிய மருந்துகளை அதிக அளவில் கொண்டால், வாந்தி, குடல் புரட்டல், குருதிக் கழிச்சல், உண்டாகலாம். குடற் புண் பட்டவர்களுக்கும், பிள்ளைத் தாய்ச்சிக்கும் இதனால் செய்யப்பட்ட மருந்தைக் கொடுக்கலாகாது.

---

## 47. ஆற்று நெட்டி—Atru Netti.

வே-பெ : கொடிநெட்டி, நீர்ச்சுண்டி.

Aeschynomene aspera

இது, தென்னிந்தியாவிலெங்கும் ஏரிக்கரை, குளக்கரையோரங்களில் பயிராகும். இதன் இலையைச் சமைத்துண்பார்கள். தொட்டற் சுணங்கியைத் தொட்டவுடன் எவ்வாறு சுணங்குமோ அவ்வாறே அதன் இலையைத் தொட்ட உடனே சுணங்கும்.

இதன் இலையை வதக்கி ஒற்றடமிட்டாலும் கட்டினாலும் வலி வீக்கம் போகும்.

## 48. யானைக் கற்றாழை—Anaik-kartazhai.

வே-பெ : யானைக்கற்றாழை, இராகாசி மடல், ரெயில்வே கற்றாழை.

Agave americana.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Rakashi-Mattalu. | Hind. | Rakas-Pattah. Hethi-Senger. Bara-Kanvar. Jangli-Kanvar. |
| Mal. | Panam-Katrazha | | |
| Kan. | Bhuttale | | |
| Sans. | Kanatla | Duk. | Rakkas-Pattah |

இஃது அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு கொண்டு வந்ததாய்க் கூறப்படுகிறது ; இது நற் நாட்டில குறிஞ்சி, முல்லை நிலங்களில் ஏராளமாகப் பயிராகின்றது. இது மடல் மடலாக விரிந்து, அகலத்தில் 4 முதல் 6 அங்குலமும், நீளத்தில் 2 அடி அடி முதல் 5 6 அடி வரையும், மடலில் இரு புறத்திலும் முட்களும் உயரத்தில் 2 அடிக்கு மேலும் வளர்கின்றபடியால் இதற்கு இராகாசி மடல் என்றும் இருப்புப் பாதையின் இருபுறமும் வைத்து வளர்க்கப்படுவதால் ரெயில்வே கற்றாழை என்றும் பெயர் வழங்கினர் போலும்.

ப-உ. : மடல் வேர்.

சுவை : கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.
செய்கை : வீக்கங் கரைச்சி, மலமிளக்கி, சிறு நீர் பெருக்கி.
குணம் : நீர்க்கட்டையுடைத்தல், வீக்கத்தைக் கரைத்தல்.

வ - கு : இதன் மடலை, அனலில் வாட்டிச் சாறுபிழிந்து, அதில் போதுமான அளவு கேழ்வரகு மாவைச் சேர்த்து, குழம்பு பதம் வரும் வரையில் காய்ச்சி, வீக்கமுள்ள இடத்திற்குப் பற்றிட, வீக்கம் கரையும்.

இதை மேற்கண்டபடி பிழிந்த சாற்றில், மூசாம்பரத்தைச் சேர்த்துக் கெதிக்க வைத்து, குழம்புப் பதத்தில் எடுத்து வீக்கங்களுக்குப் பூச வீக்கங் கஷ்ரயும்.

மடல்களை கத்தை கத்தையாகக் கட்டி, சேறுள்ளவிடத்தில் புதைத்து வைத்து 20—25 நாட்கள் சென்றபின் எடுத்து, நீரில் தோய்த்துத் துவைக்க இதிலுள்ள சுத்த நார்கள் மட்டும் நிற்கும். இதைக்கொண்டு கயிறுகத் திரிக்கலாம்.

இதன் வேர், 25 கி. அல்லது 35 கி. எடுத்து 700 மி.லி. நீர்விட்டு ஒரு ஆழாக்காகக் குறுக்கி வடிகட்டி, நாள் ஒன்றுக்கு இருவேளையும், அரை ஆழாக்கு வீதம் உட்கொண்டுவர, நீர்க்கட்டை உடைத்து நீரைத் தாராளமாய் வெளிப்படுத்தும், வயிறு கழியும்.

—ஊ—

## 49. ஆனைக்குன்றிமணி—Anaik-Kunri.

வே. பெ. மஞ்சாடி.

Adananthera Pavonina

| | |
|---|---|
| Tel. { Bandigurvinda, Manseni kotta | Kan. Manjadi |
| | Sans. Gunja |
| | Dup. Ka bhoji |
| Mal. Manjadi | Duk. Bari. Gumchi |

இஃது இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிராகிறது. மரவகுப்பைச் சேர்ந்தது.

குணம்: இதன் இலையைக் கஷாயம் செய்து, நாட்பட்ட வளிநோய்கட்கும், கீல் பிடிப்புகளுக்கும் கொடுக்கலாம். மேலும், இதனால் வயிற்றிலிருந்தாவது, ஆண் குறியிலிருந்தாவது வெளிப்படும் குருதி நிற்கும்.

இதன் வேர் வாந்தியை உண்டு பண்ணும் மருந்துகளில் ஒன்றாகும்.

இதன் விதையை அரைத்துக் கட்டிகளுக்குப் பற்றிட அவைகள் சீக்கிரத்தில் கரையும்.

---

## 50. ஆனைப்புளியமரம்—Anaippuliyamaram.

வே - பெ. ஆனைப்புளி, சீமைப்புளி, பப்பாப்புளி, பூரிமரம்.

Adansonia Digitata,

(Malvaceae.)

Eng.—Baodab.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Shima-Chinta. | Arab. | Hujed. |
| Mal. | Anapuli. | Hind. | Gorekh-amli. |
| Kan. | Brahmamlika | Duk. | Bara-khat yan. |
| Sans. | Gorakh-chinch | | Hathi-khat yan. |

இஃது, ஆப்பிரிக்கா தேசத்திற்குரியது; இப்போது இந்தியாவிலும் பயிராகிறது. இதன் புளி அழுக்குப் படிந்த நிறமாயிருக்கும். இலங்கை போன்ற இடங்களில் பயிராகின்றவை 60, 70 அடி உயரமுடையவை. இம் மரப் பழத்தின் ஓடு, சன்னியாசிகளின் ஓடு போலிருப்பதாகவும் கூறப்படுகிறது. இம்மரத்தின் கீழ், பண்டைக் காலத்தில் "கோராக்" (Gorakh) என்ற ஒரு சன்னியாசி தனது சீடர்களுக்கு உபதேசஞ் செய்தாரென்றும் அதனால் இதற்கு "கோரக்" என்ற ஒரு பெயருமுண்டென்பாருமுளர்.

ப - உ. இலை, பட்டை, பழச் சதை, வித்து.

சுவை—இனிப்பும் புளிப்பும், தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : வாதமடக்கி—வாதஹரகாரி—Anti Vata

---

## இலை

வ - கு : இலைச் சாற்றில் சுக்கை அரைத்துக் கீல்வாயு, பறங்கிப் புண் முதலியவைகளுக்குப் பூசலாம்.

இலையை அவித்துக் கை கால் வீக்கம், வலி முதலியவைகளுக்குச் சூட்டுடன் ஒற்றடமிட்டுப் பிறகு அதையே கட்டலாம்.

இலையை உலர்த்திப் பொடி செய்து உள்ளுக்கு கொடுக்க, அதி வியர்வை உண்டாவது குறையும்.

## பட்டை

செய்கை: வெப்பகற்றி - ஜீவ்ரஹரகாரி—Febrifuge

வ - கு : பட்டையை இடித்து எடுத்த ஒரு பங்கிற்கு, 20 பங்கு நீர் சேர்த்து விதிப்படி குடிநீர் செய்து, கால் அல்லது அரை ஆழாக்கு வீதம் கொடுத்து வர, முறைக்காய்ச்சல் நீங்கும்.

குறிப்பு.—இப்பட்டையின் சத்தை (Adansonin), குவைனாவிற்குப் பதிலாக உபயோகிக்கின்றார்கள்.

## பழச்சதை

செய்கை
- சிறுநீர்பெருக்கி—மூத்திரவர்த்திநி—Diurecti
- துவர்ப்பி —ஸங்கோசனகாரி—Astringent
- உள்ளழலாற்றி —அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent

இப்புளிக்குச் சீதபேதியைப் போக்கும் குணமுண்டு.

இத்துடன் அத்திப்பழம் சேர்த்து, மணப்பாகு செய்து கொடுத்துவர, இஃது உடம்பிற்கு உற்சாகத்தைத் தரும். உடலில் காணும்வெப்பத்தைத் தணிக்கும்; சுரத்திற் ணும் நீர் வேட்கையைப் போக்கும்; இளைப்பு நோயில் இரவில் உண்டாகும் வியர்வையைத் தடுக்கும்; வாய்க்கசப்பு, புளித்தேப்பம் முதலியவற்றை நீக்கும்.

## விதைப் பருப்பு

இதன் பருப்பை அரைத்து மோருடன் கலந்து குடிக்க, அதிசாரம், சீதபேதி குணப்படும்.

## 51. இங்கிமரம்—Inki-maram.

**Caesalpinia Coriaria Lin**

**Eng. : The Divi-divi.**

**Tel Divi Divi**

இது சிறு மர வகுப்பிற் சேர்ந்தது.

தென் அமெரிக்காவிற்குரியதாயினும், இந்தியாவில் கடற்கரையோரங்களிலுள்ள நிலங்களில் பயிராக்கப்படுகிறது.

ப - உ : காய்.

சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை - { புண்ணழுக்ககற்றி விரணசுத்தகாரி- Detergent.

குணம் : புண்களை ஆற்றும்.

வ - கு :—இதன் காயைக் குடிநீர் செய்து புண்களைக் கழுவலாம், வாய் கொப்பளிக்கலாம்.

குறிப்பு. இக்காய் உயர்ந்த "இங்கி" செய்வதற்கும், தோலைப் பக்குவம் செய்வதற்கும் பயன்படுகிறது.

(Clevorendron inerme)

## 52. இசங்கு—Isangu.

வே - பெ : குண்டலி, கோல், சங்கங்குப்பி, முத்தாபலம், மீச்செங்கன், பீனுசெங்கம்குப்பி.

Tel. { Pishinika, Ūṭti-Chettu, Piśangi

Mal. Shangam-kuppi

Sān. Kundal

Hind. { Sang-kuppi, Sang-kupi

Duk. Isamdhāri.

இது இந்தியாவிலும் இலங்கையிலும் கடற்கரையோரங்களிலும்பயிராகும்.

ப - உ : இலை, வேர்.

சுவை - கைப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை {
உடற்றேற்றி—Alterative—வியதாபேதகாரி
வெப்பகற்றி—Febrifuge—ஜ்வரஹாகாரி
உரமாக்கி—Toovic—பாலகரி
}

குணம் : சங்கங்குப்பி, அரைக்கடுவன், கிரந்தி, கருங்குட்டம் வெள்ளை செவ்வாப்புக் கட்டி, சொறி, சிரங்கு, சூலை பெருவளிநோய், ஐயநோய்க் கூட்டங்கள், பாம்புக் கடிகள், அழல் நோய்கள் போம்.

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோகம்
உரப்பான மேகம் ஒழியுங்—கருவாம்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகும்
அருஞ்சங்கங் குப்பிக் கறி.

வெட்டை சொறி சிரங்கு வீறி வருஞ்சூலே
துட்டவா தங்கபந்த னுக்கிருமல்—கெட்டவிடம்
அங்கங்கொள் பூச்சியிவை யாவும் போம் பித்தமுறுஞ்
சங்கங்குப் பிக்கெனவே சாற்று. (அ.கு.)

வ - கு : இலேயைக் கசக்கிப் பிழிந்த ரசம் அல்லது பச்சை வேரை இடித்துப் பிழிந்த ரசம், காலே மாலே இரு வேளேயும், அரைக்கால் முதல் கால் ஆழாக்கு வீதம் கொடுத்து வர, மேகம், கழுத்துக் கழலே குணப்படுவதுடன், இதையே சில நாட்கள் வரை உட்கொண்டுவர, குருதி தூய்மையாகும், உடல் வலுக்கும்.

ஒரு பங்கு இலேக்குப் பத்துப்பங்கு நீர் சேர்த்துக் குடிநீரிட்டு, கால் முதல் அரை ஆழாக்குக் கொடுத்துவர, விடாச் சுரங்களும், விட்டு விட்டு வருஞ் சுரங்களும் நீங்கும்.

இலேயை நீரிலிட்டுக் காய்ச்சி, அந்நீரைக்கொண்டு முழுகிவர, சொறி, சிரங்கு, வெறிநோய் குணமாகும்.

இலேயை ஆமணக்கு நெய் விட்டு வதக்கிக் கட்ட. அரையாப்புக் கரையும்.

இலேச் சாறும், சிற்றுமணக்கெண்ணெயும் ஓரளவாகக் கலந்து, காய்ச்சி எடுத்து, காலேயில் அரை முதல் ஒரு பலம் வரையும் கொடுக்க வெட்டை, கழலே, கரப்பான், சொறி, சிரங்கு, வெள்ளே, குடற்புழுக்கள் நீங்கும். உப்பு, புளி நீக்கவும்.

**வேர்:**

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, வளிப்பிடிப்பு முதலிய வளி நோய் களுக்கு மேல் பூசலாம்.

வேரை உலர்த்திப் பொடி செய்து, அரைக்கால் முதல் கால் வராக னெடை வீதம் கொடுக்க, நஞ்சுகள், சொறி, சிரங்கு, சுரம் முதலியன நீங்கும்.

குறிப்பு : இது "குவைனுவு"க்கு ஒப்பானது எனக் கூறுவர் சிலர்.

---

## இசப்பு கோல்விதை—Ishappukol vitai.

வே - பெ : இஸ்கோல்விதை, இஸ்பகூல்வித்து, இஸ்புகோல், இசுபொங்கிவிதை, ஈசபுகோல்விதை.

Syn : Plantagomajor

Eng : Spogel—Seeds of—

| | |
|---|---|
| Tel. Isapagóla-la—Vittulu | Pers. Shikam dairdah |
| Kan. Isapakólu | Hind. Isabaghól |
| Arab. Bazre-qaṭūnā | Duk. Isapghee |

இது, பாரசீக இராஜ்ஜியத்தில் முதல் முதல் உற்பத்தி செய்யப்பட்டு, இப்போது இந்தியாவில் பல பாகங்களிலும், முக்கியமாய்ப் பஞ்சாப், சிந்து, வங்காளத்திலும் பயிராகின்றது. இந்த விதைமிகச்சிறியது ; நீரில் போட்டு வைத்தால் குழகுழத்து உப்பும்.

ப - உ : விதை.

செய்கை:
- உள்ளழலாற்றி–Demulcent.-- அந்லர்ஸ்நிக்தகாரி.
- துவர்ப்பி–சிறு லகு Mild Astringent - ஸங்கோசனகாரி
- வரட்சியகற்றி—Emollient. - ஸ்நிக்தகாரி
- சிறுநீர்ப்பெருக்கி—Diuretc. - மூத்ரவர்த்தநி

குணம் : இஃது செரியாக் கழிச்சல் சீதக் கழிச்சல், சிறு நீர் எரிச்சல், உடலில் காணும் வெக்கை இவைகளைப் போக்கி உடற்கு ஊட்டம் தரும்.

இவ்விதைத் தோலை நீரில் ஊறப் போட்டு, கஞ்சி போலக் காய்ச்சி அந்நீரை எருவாய் வழியே செலுத்த, சீதக் கழிச்சல்போம்.

விதையை ஒன்றிரண்டாய்ப் பொடித்து,ஒன்றுக்கு 40, 60 பங்கு நீர் சேர்த்துக் காய்ச்சி, வடிகட்டிய நீரை உட்கொள்ள, உடல் எரிச்சலைத் தணிக்கும். ஒன்றுக்கு 80 பங்கு நீர் சேர்த்து மேற்கூறியவாறு செய்து, நாள் ஒன்றுக்கு இரண்டு, மூன்று முறையாக,அரை முதல் ஓர் ஆழாக்களவாகக் கொடுத்துவர, நீர் எரிச்சல் போம்.

இவ்விதையைப் பொடித்து, அதனளவு கற்கண்டு சேர்த்து, இளகிய பதம் வருவதற்கு வேண்டிய நீர்விட்டு ஊறவைத்து, வேண்டிய நாள்வரை உண்டுவர, உடலுக்கு ஊட்டத்தை உண்டாக்கும். உடலின் வெப்பம் தணியும்.

இவ்விதையினால் மதுபானம், மணப்பாகு செய்து வேனிற் காலத்தில் சாப்பிட உடல் வெப்பம் தணியும்.

## 54. இஞ்சி—Inji.

**வே - பெ :** அல்லம், ஆர்த்தரகம், ஆத்திரகம், இலாக்கொட்டை, நறுமருப்பு மதில்.

**Zingiber Officinalis,**

**Green ginger-fresh root of-dry ginger.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Allamu | Arab. | Zanjabile |
| Mal. | Inji, Chukka | Pers. | Zanjabieltar |
| Kan. | Hashi-shunti, Vona-sunthi | Hind. | Adrakh, Sonth |
| Sans. | Adrakam | Duk. | Adrak, South* |

இஃது இந்தியாவில் அநேக இடங்களில் பயிரிடப்படுகிறது ; நீர் செழிப்புள்ள இடங்களில் முக்கியமாய் உண்டாகிறது. ஆயினும், செம்பாடுகளிலும் மணல் பூமிகளிலும், சிறப்பாகவும், சென்னை, கொச்சி, திருவாங்கூர், முதலிய இடங்களிலும், பஞ்சாப், வங்காளம், முதலிய நாடுகளிலும் ஏராளமாகவும் பயிரிடப்படுகிறது.

உறுப்பு : கிழங்கு.

சுவை–கார்ப்பு, தன்மை–வெப்பம், பிரிவு–கார்ப்பு.

செய்கை.
- அகட்டுவாய்வகற்றி—Carminative. - உதரவாதஹரகாரி
- பசித்தீத்தூண்டி—Stomachic. —ஜடராக்னிவர்த்தநி
- உமிழ்நீர்ப்பெருக்கி—Sialagogue.—திரவகாரி
- செரிப்புண்டாக்கி—Digestive.—தீபனகாரி
- வெப்பமுண்டாக்கி Stimulant.—உஷ்ணகாரி
- தடிப்புண்டாக்கி—Rubefaacient.—ஷோணகாரி

**குணம்** : இஞ்சியினால் இருமல், ஈளை, வெள்ளோக்காளம், அழல்குற்றம் வளிசூலை, முக்குற்ற நோய்கள், கோழைக் கூட்டம், செரியாக் கழிச்சல் இவை போம். பசியுண்டாகும்.

இஞ்சிக் கிழங்குக் கிருமல்ஐயம் ஒக்காளம்
வஞ்சிக்குஞ் சந்நிசுரம் வன்பேதி—விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு — அ. கு.

இஞ்சியின் குணமே தென்றி யல்புட னுரைக்கக் கேளீர்
அஞ்சிடுஞ் சன்னியெல்லா மகன்றிடும் பித்த தோடம்
நெஞ்சினி லிருமற் கோழை நெகிழ்ந்திடும் கபங்கள் தன்னை
மிஞ்சினி வருமோ வென்று விளம்பிடும் தேவ நூலே — (எடு).

மண்ணிலாக் கோட்டையொன்று மாத்திரமே கற்பமென்ப
தெண்ணிக்கை யாகி யிருக்குமே—கண்ணுக்கு
நன்முறையாஞ் சீதளத்தை நாடாம லேயடிக்குந்
தின்முறைமை நீயறிந்து தின்.

இஞ்சி ஒரு கற்ப மருந்து. இஃது கண்களுக்கு நலத்தை பயக்கும்; கபக் குற்றத்தை போக்கும்.

இருந்தே னலங்கார மெய்தயின்று மீறி
யிருந்தே னலங்கார மெய்தி—இருந்தேன்
நீவி ரகசியமா நென்மா வுடன்கலந்து
நீவி ரகசியமா நெய் :

**(பொ-ள்.)** : தேனில், இஞ்சியைக் கீற்றுக் கீற்ருகக் கீறியிட்டு, அது நன்ருய் ஊறின பின்பு, அதை மனத் திடத்துடன் கல்ப முறைப்படி உண்ணுதல் நல்லது. அங்ஙனம் உண்டால், நரை, திரை மூப்புகளற்று வாழலாம். பெரு வயிறு மருத்துவத்தில் இஞ்சிச் சாற்றை நாளளவில் கால் ஆழாக்காக உயர்த்திக்கொண்டே ஒன்றரை ஆழாக்கு வந்த பின் அவ்வளவாகவே நோய் நீங்கு மட்டும் கொடுக்க, இஃது நற் பயனைத் தரக் கண்டுள்ளோம்.

**வ-கு** : இஞ்சிக் கிழங்கை ஊறுகாய், தேன் ஊறல், வெல்லப் பாகு ஊறல், பழச்சாறு ஊறல் என பலவகையாகச் செய்து உட்கொள்ளுவ துண்டு.

மேலும் அகட்டைப் பற்றிய வயிற்று வலி, வயிற்றுப் பொருமல் வாந்தி, குடல் நோய், முதலிய நோய்கட்கும், இதைத் தேனூறல் (முரப்பா) ஆகச் செய்து கொடுக்கலாம்.

முறை : இஞ்சிச் சாறு, தேன் சேர்த்து தேன் போலப் பாகு செய்து, குங்குமப் பூ, ஏலம், ஜாதிக்காய், கிராம்பு இவற்றைப் பொடி செய்து, தூவிக் கிளறி எடுத்து, நன்ருகச் சுத்தம் செய்த கண்ணாடி அல்லது பீங்கானில் வைத்துக்கொள்ளவும். இதை ஒன்று முதல் இரண்டு சுண்டை யளவு கொடுக்கலாம்.

**பித்த மயக்கத்திற்கு** : இஞ்சிச் சாறு 10 பங்கு, பால் 7 பங்கு இத்துடன் கற்கண்டு சேர்த்து மணப்பாகு செய்து, படுக்கைக்குப் போகும் போது 2 கிராம் முதல் 8 கிராம் எடை குளிர்ந்த நீருடன் சேர்த்துச் சாப்பிட லாம்.

இஞ்சியை வாயில் மென்றுமிழ் நீரைத் துப்ப, தொண்டைப் புண், குரற் கம்மல் இவைகள் குணப்படும்.

செரியாக் கழிச்சலுக்கு இஞ்சிச் சாற்றை, தொப்புளைச் சுற்றித் தடவலாம்.

வாந்தி, ஒக்காளம் இவைகட்கு : இஞ்சிச் சாறும், வெங்காயச் சாறும் வகைக்கு ஒரு தோலா வீதம் எடுத்துக் கலந்து கொடுக்கலாம்.

நீரிழிவு நோய்க்கு : இஞ்சிச் சாறும் கற்கண்டும் சேர்த்துக் கொடுத்து வரலாம்.

## இஞ்சிகற்பம்.

இஞ்சியைத் தோல் போக்கிப் பக்குவப்படுத்தித் தேனில், ஊறவைத்துத் தினந்தோறும் கற்ப முறைப்படி உட்கொண்டால், நரை-திரை-மூப்பு இன்றி நீண்ட நாள் இருப்பதுடன், தேகமும் அழகு பெறும் மனோ பலமுமுண்டாகும்.

பத்திய உணவு : நெற்பொரி மாவுடன், பசுவின் நெய் சமன் கலந்து ஆகாரத்திற்குப் பதிலாக உண்ண வேண்டும்.

இஞ்சிச் சாறு, மாதுளம்பூச் சாறு, தேன் சமனெடை கலந்து, வேளைக்கு 35 மி. லிட்டர் வீதம் சாப்பிட்டுவர, ஈளை இருமல் சாந்தியாம்.

இஞ்சி, திரிகடுகு, ஏலம், அதிமதுரம், சீரகம், சந்தனத் தூள், வகைக்கு கிராம் 4 சிதைத்து 1,400 மி. லிட்டர் நீரிலிட்டு 130 மி. லிட்டர் கஷாயஞ் செய்து 5, 6 வேளை சாப்பிட பித்தஞ் சாந்தியாகும். இஞ்சிச்சாறும் கழுதைப் பாலும் வகைக்கு 18 மில்லி லிட்டர் கலந்து உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்கு ஆதனை இலையும் முத்தெருக்கன் செவியும் ஓர் அளவாய் எடுத்துக் காடியிலரைத்து, உச்சி முதல் கால் வரையில் காலையில் பூசி, மாலையில் நீராட்டி வரவும். இவ்வாறு 10 நாட்கள் செய்ய உடம்பெரிவு நீங்கும்.

இஞ்சிச் சாறு, ஈர வெங்காயச் சாறு, எலுமிச்சம்பழச் சாறு இம்மூன்றும் ஒரு நிறையாகக் கலந்து, வேளை 34 கிராம் வீதம் 2 வேளை, 3 நாட்கள் சாப்பிட இரைப்பு இருமல் போம்.

இஞ்சி, சிவதை, சீந்தில், நிலவாகை, கொடுவேலி, கழற்சிக்கொடி, முடக்கறுத்தான், முக்கடுகு, பூண்டு வகைக்குப் 34 கிராம் எடுத்து, சிற்றாமணக்கு எண்ணெய் படி அரையில் அரைத்துக் கலக்கிக் காய்சிச் வடித்து, வேளைக்கு உச்சிக் கரண்டி வீதம் கொடுத்துவர, வளி குன்மம், தீரும்.

இஞ்சியைப் பாலிலரைத்துக் கழற்சியளவு 18 மி. லிட்டர் பாலில் கலந்து காலை மாலை கொடுத்துவர, இருமல், இளைப்பு, குன்மம், மயக்கம் அழல் வாய்வு தீரும். பசி உண்டாகும்.

---

## 55. இண்டு—INDU.

வே - பெ ; இங்கை, ஈகை, ஈயக்கொழுந்து, புலித்துடக்கி.

Mimosa panicullata (செவ்விண்டு)
Mimosa instiana (வெள்ளிண்டு).

இது தென்னாட்டு வெளிகளில் பயிராகும் முட்கொடி வகுப்பிற் சேர்ந்தது. வெள்ளிண்டு, செவ்விண்டு என இரு வகைப்படும்.

ப-உ : சமூலம் எனினும், பெரும்பாலும் கொடியே பயனபடும.

சுவை-கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : கோழையகற்றி—Expectorant.
வெப்பமுண்டாக்கி—Stimulant

குணம் : இக்கொடியினால், மூக்கு நீரேற்றம் (சலதோஷம்). மண்டைக் குடைச்சல், முகவலி, வளித் தடிப்பு, வெள்ளை, குதக வாயு, ஈளை, சூலை, தீப்புண் ஆகியவைகள் போம்.

பீநசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றம்
தானசிக்கச் செய்யுமிது சத்தியங்காண்—வானசைக்கும்
மண்டைக் குடைச்சல் மருவுமுக சந்நியும் போம்
பண்டையுற்ற இண்டினுக்குப் பார்.
கட்டுவா தங்களுங் காரிகையே மேகம்போம்
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங்—கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை
அனலிலெழு புண்ணு மறும். (அ.கு.)

வ-கு : கொடியைத் துண்டித்தூத, ஒருவித இரசம் வெளிப்படும். இதில் ஒன்று அல்ல, இரண்டு துளி மூக்கிலிட, மேற்குறிப்பிட்ட நோய்கள் விலகும். அன்றியும் குழந்தைகளுக்குண்டாகும் மாந்தத்தைப் போக்கு வதில் இது மிகச் சிறப்புடையது. தேரையர் இயற்றிய தைலவருக்கச் சுருக்கத்தில் எழுதியுள்ள மாந்தத் தைலம், சிறு மாந்தத் தைலம், இவைகளைக் காண்க.

இண்டிலை தூதுளை யிசங்கு திப்பிலி
கண்டரி சுக்குடன் கலந்து வெந்தநீர்
உண்டிடி லொருதர மிரும லுற்றிடில்
தெண்டமுந் தருவன்யான் தேரனு மல்லனே.

(பொ-ள்.) : ஈயக்கொழுந்து, தூதுளை, சங்கன் இலை, திப்பிலி கண்டங் கத்தரி, சுக்கு இவற்றைச் சேர்த்து, எட்டு பங்கு நீர்விட்டு, எட்டில் ஒன்றுகக் காய்ச்சிக் குடித்துவர, இருமல் நோய் போம். (தே. 100.)

---

## 53 இத்தி—Itti.

வே - பெ : இந்திரி ; இறலி, கவி.

Eng : Ficus. gibbosa

| | |
|---|---|
| Tel. Juvvi | Mal. Itti. |
| Kan. Itti | Sans. Plakshara |

இது தென்னிந்தியாவில் ஏராளமாகப் பயிராகும் ; ஆல் வகுப்பிற் சேர்ந்தது.

ப-உ : பிஞ்சு, காய், பட்டை.

சுவை-துவர்ப்பு , தன்மைதட்பம்—பிரிவு-இனிப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent

**பிஞ்சு.**

**குணம்** : இது கழிச்சல், பெரும்பாடு, உட்சூட்டிஞற் பிறக்கின்ற பிணியினங்கள் இவற்றைப் போக்கும்.

வாயுமலக் கட்டு மலக்கழிச்சல் கால்வழியே
சாயு மசிர்க்குள்ளே தங்குவெப்பி—ஞேயினங்கள்
எத்திக்கா தாரமுற்றி ருப்பனவிரா வேநல்
இத்திக்காய் பிஞ்சுகளை யெண்.

(அ.கு.)

இப்பிஞ்சுகளை அரைத்தேனும், இதன் பட்டையைக் குடிநீர் செய்தேனும் குடித்துவர, மேற்கண்ட பிணிகள் நீங்கும்.

இதன் காயை நெய் விட்டு வெதுப்பித் தின்றுல், எருக்கட்டுப் போம்.

இது நம் நாட்டில் தோட்டங்லிகளும் மேட்டுநிலங்களிலும் தாஞகவே பயிராகும் பூண்டு. இராமேசுவரம் முதலிய தென்தேசக் கடற்கரைகளின் இது பயிரிடப்படுகிறது,

## 57. இம்பூறல்—Impural.

**வே-பெ** : இம்பூராவேர், இன்புருவேர், சிறுவேர், சாயவேர்,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chiru Veru | Sans. | Rajana |
| Mal. | Chay Ver | Hind. | Chirval or Chirval-k Lakri. |
| Kan. | Chaya Beru | Duk. | * |

**Oldeulandia Vunbella**

**ப-உ** : இலை, வேர், வேர்பட்டை, சமூலம்.

**சுவை** : இனிப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை:
- கோழையகற்றி—**Expectorant**—கபஹரகாரி.
- குருதிப்பெருக்கடக்கி—**Styptic**—ரத்தஸ்தம்பனகாரி.
- பித்தநீர்ப் பெருக்கி—**Cholagogue**—பித்தகாரி.

**குணம்** : தொண்டையில் கோழை கட்டல், உடலின் அழல், அழல் சுரம், குருதிவாந்தி, இருமல், ஈளை, இரைப்பு, வயிற்றிரைச்சல், விக்கல் முதலிய நோய்கள் போம்.

வேர்க்குணம்

இன்புரு வேரை இதமாய் அருந்தினர்க்குப்
பின்புரு ஹையமொடு பித்தமுமே—துன்பாம்
இருமல் சுவாசம் எரிசுரம்வ யிற்றுப்
பொருமலுப்பி சம்பறந்து போம்.

(அ.கு.)

**வ-கு** : (1) இலையின் பொடியை, இரண்டு பங்கு அரிசிமாவுடன் கலந்து அடையாகச் செய்து, இரைப்பு ஈளை உள்ளவர்கள் சாப்பிட்டு வரலாம்.

(2) வேர் 10 கிராம் எடை, அதிமதுரம் 4 கிராம் எடை முறைப்படி குடி நீர் செய்து 17 கிராம் முதல் 34 கிராம் எடை வரை, தினம் இரண்டு அல்லது மூன்று வேளை சாப்பிட்டுவா, இருமல், இரைப்பு இருமல் ஈளை முதலியனபோம்.

(3) இலையின் சாற்றைப் பாலுடன் கலந்து, சருக்கரை இட்டுச் சாப்பிட்டு வர மார்பு எரிச்சல் நீங்கும்.

(4) இதன் இலையையும் வேரையும் சேர்த்த 1-க்கு 20 பங்கு நீர் சேர்த்துக்குடிநீரிட்டு, நஞ்சு கடிகளினாலுண்டான புண்களைக் கழுவலாம்; 17 கிராம் முதல் 34 கிராம் எடை வரை, இருமல், இரைப்பு, இளைப்பு முதலிய நோய்களுக்கு உள்ளுக்குக் கொடுத்து உதவலாம்.

(5) ஷெ குடிநீரைச் சூரத்தாலுண்டான கை, கால் எரிச்சலுக்குப் பூசலாம்.

இதன் வேரைக்கொண்டு செய்யப்படும் லேகியம், குருதியழல் நோயில் வாயின் வழியாய் வெளிப்படும் குருதியை இரண்டொரு வேளையில் நிறுத்தும்.

"இம்பூறலைக் காணுது இரத்தங்கக்கிச் செத்தானே" என்று சட்டமுனி நூலுண்ணத்தில் கூறியதால் இம்பூராவின் வேர்ப் பட்டையால் செய்த லேகிய முதலிய மருந்துகள் இரத்தத்தைக் கக்கச் செய்யும் நோய்கட்கு நன்று, எனக் குறிக்கும்.

---

## 58. இரட்டைப்பேய்மருட்டி.

## Rattaip-pui-marutti (Pai-marutti)

**வே-பெ :** வெதுப்படக்கி, பேய்மருட்டி, பேய்வருட்டி, பேய்வெருட்டி பைசாசம், பெருந்தும்பை.

**Ansomeles Malabarica,**

**Eng: Malabar Cat-mint.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Moga-bira. Mābhéri. China-ranā-bhéri. | Mal. | Pey-Meratti. Peratumba. |
| | | Sans. | Alamoola. |
| | | Duk. | Mogbiré-ka-pattā. |

இது தென்னிந்தியாவிலும் திருவாங்கூரிலும் இலங்கையிலும் பயிராகும்.

ப-உ : இலை, சமூலம்.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- பசுதீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
- வியர்வைபெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

குணம் : இதனால் கணமாந்தம், பேதி, வயிற்றுநோய், கரப்பான் கோரசுரம் நீங்கும்.

மாந்த கணங்கழிச்சல் மாறு வயிற்றுவலி
சேர்ந்து வருகரப்பான் தீச்சுரமும்—போர்ந்துவிடும்
வெய்யிட்டுந் தோஷமுடைய மெல்லியலே! சாதியமாய்ப்
பேய்மிரட்டி யென்றுரைக்காற் பேசு.

(அ.கு.)

வ-கு : இதன் இலேயைக் கஷாயமிட்டுக் கொடுக்க, வாந்திபேதி, சீதசுரம், கோரசுரம், முறைக்காய்ச்சல், இருமல் குணப்படும். இக்கஷாயத்தை, குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் போது ண்டாகும் பேதியில் உள்ளுக்குக் கொடுக்கவும், கீல்வாதங்களில் மேலுக்கு ஒற்றடமிடவும் உபயோகிக்கலாம்.

இக்கஷாயத்தின் ஆவியை முகர்வதாலும், இதனை உள்ளுக்குக் கொடு பதாலும் உடம்பில் வியர்வை உண்டாம். விடாச்சுரம் நீங்கும்.

இலேச்சாற்றைப் பல் முளைக்குங் காலத்திலுண்டாகும் பேதிக்கு, உபயோகிக்கலாம்.

---

## 59 .இரத்தபோளம் --Rattabolam.

**கற்ருழைப்பால், (Kaṭṟazhaippal.)**

**வே - பெ : கரியபோளம், மூசாம்பரம்.**

**Aloe Veera**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Mushambaram.** | **Pers.** | **Siebr.** / **Bolessiyeh.** |
| **Mal.** | **Chenna-Nàyakam.** | | |
| **Kan.** | **Làla-sàra.** | **Hindi.** | **Musambar.** / **Iíva.** |
| **Sans.** | **Rakthabolam.** | | |
| **Arab.** | **Nàbatussibr.** * | **Duk.** | **Muṣanbar.** |

இது கடல் ஓரங்களில் பயிராகும். கற்ருழைப் பாலே உலர்த்துவதால் உண்டாகும் செயற்கைப் பொருள். சிறு கற்ருழையின் குணமே இதற்குமுண்டு.

**இரத்தபோளம்.**

சோற்றுக் கற்ருழை மடலை குறுக்கிலரிய, பால மஞசள் நறமாக வடியும். இ..து உறைந்தவுடன் கெட்டிப்பட்டு கறுத்த நிறத்தோடு இருக்கும் ; சூரிய வெப்பத்தில் இது சிவக்கும். அதனல், இதற்கு இரத்தபோளமெனப் பெயர் வழங்கும்.

**சுவை, செய்கை, குணம்** : இவை கரிய போளத்துக்குரியனவேயாகும். ஆனல், வீக்கங்களை மிகச் சீக்கிரத்தில கரைக்கும்.

வீழுந்திறத்தந் தங்கிமிக வீங்குமுறு வீக்க
மெழுந்துநிற்க வொட்டா விசுவோ—டழுந்தி
யுரைத்ததம ரும்வலி யோடுமெதிற் நிற்கா
திரத்தபோ ளத்தை யெடு.

(அ.கு.)

வ-கு : இதை நீரிற் கரைத்துக் கொதிக்கவைத்து, விழுந்து அடிபட்ட வீங்கிய வீக்கம், நடக்கமுடியாத வலி, பக்க நோய் இவைகட்குப்பற்றிடப் போம்.

## 60. இருவாட்சி—Iruvatshi.

வே-பெ : அநங்கம்,, நவமல்லிகை, மயிலை, வசந்தி.

(Jasminum sambuc)

Eng : Arabian jasmin.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Malle. | Arab. | Sumana-Yesmana. |
| Mal. | Cherupichakam. Mullàchchapu. Mullapu. | Hindi. | Bailphul. Mogre-ke-phul |
| Kan. | Mallige-Hoovu. | Duk. | Bailphul. Mogre-ke-phul. |

இஃது இந்தியா, பர்மா, இலங்கை இவ்விடங்களில் மிகுதியாகப் பயிரிடப் படுகின்றது.

ப-உ : இலை, பூ, வேர், எண்ணெய்.

சுவை-கார்ப்பு, வீரியம்-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : பாற்சுருக்கி—க்ஷீரநாசநி—Lactifuge.

குணம் : இது, கண்ணொளி, உடலுக்கு நன்மணம், வனப்பு இவைகளை உண்டுபண்ணும். உடல் குத்தலும், மூர்ச்சை நோயும் இதனால் நீங்கும்.

கண்ணொளியும் மெய்யிற் கமழ்மணமும் நீடழகும்
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்—பண்ணளியும்
கங்குலும்வாழ் வார்குழலே! காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால்.

(அ.கு.)

வ-கு : இப்பூவினின்று ஒருவித எண்ணெய் எடுக்கின்றனர். இவ் வெண்ணெயை, காது மூக்கு இவ்விடங்களிலுண்டாகும் சீழ் நாற்றங் களுக்கு விடலாம்.

இதன் இலை, பூ, வேர் இவைகளை முலையின்மீது வைத்துக்கட்ட பால் சுரப்பைக் கண்டிக்கும்.

கண் நோய்க்கு இதன் இலையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, தலையில் தேய்க்கலாம்.

குருதி வாந்தியிலில், இதன் பூவைக் குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுத்தும் கண்ணில் குருதிவரின், இப்பூவின் சாற்றைக் கண்ணில் இட்டும் வருவது வழக்கம்.

சீன தேசத்தில் தேயிலைப்பானம் நறுமணம் பெற இதன் பூவை அதனோடு கூட்டுகின்றனராம்.

## 6, இரவேல் சின்னி—Iraval Chinni.

வே-பெ : பேதிக்கிழங்கு, மஞ்சட்சினக்கிழங்கு, வரியாத்துக்கிழங்கு நாட்டு ரேவல்சின்னி

(Rheum Emodi, R. Acuminatum, R. Australe, R. Speciforme).

R. Webbianum of the germs of polygonaceae.

Eng. : Himalayan—Rhubarb.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nattu-reval-chinni. Nāṭṭu-pasupu-china gadda. | Arab. | Ravande-hindi |
| | | Pers. | Ravande-hindi |
| Kan. | Nāṭ-reva-chinni. | Hind. | Hindi-revand-chini. |
| Sans. | Reval-chinni. | Duk. | Nat-kî-revanchini. |

இது, திபேத்து தார்த்தாரி நாடுகளிலும், இந்தியாவில் இமயமலையை யடுத்த காடுகளிலும் பயிராகிறது. இமயமலையில் விளைவதற்கு, நாட்டு ரேவற் சின்னி என்று பெயர். இது சீன நாட்டுச் சரக்குக்குத் தாழ்ந்த தென்று கருதப்படுகிறது. சீனாவிலிருந்து ஏற்றுமதியாகும் சரக்கு, வட்டமாகவாவது தட்டையாகவாவது இருக்கும். இதில் சிறு துளைகள இருப்பதுண்டு. வெளிப்புறம் மஞ்சட்சாயலாகவும், உட்புறம் வரிவரி யாகவும், மென்றால் மணலைப்போல் நறநறவென்றும் இருக்கும். இதில் ஒருவித மணமுண்டு. சொத்தை விழுந்திராது.

சுவை—துவர்ப்பு, கைப்பு, வீரியம்—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை
- துவர்ப்பி—Astringent.—ஸங்கோசனகரி
- உரமாக்கி—Tonic —பல்யகாரி
- பெருமலம்போக்கி—Cathartic.—விரேசனகாரி
- பசித்தீத்தூண்டி—Stomachic —ஜடராக்னிவர்த்தநி

குணம் : மலக்கட்டு, பசிமந்தம், பாண்டு இவற்றைப் போக்கும். பித்தீயைப் பெருக்கும்.

வ-கு : வயிற்றைக் கடுக்காதபடி கழியச் செய்வதால், குழந்தைகளுக்குப் பாண்டு நோய்க்கும், பின்னிததாய்ச்சிக்கும் கொடுக்கலாம்.

இதைக் குறைந்த அளவில் தனித்தேனும், வேறு மருந்துகளுடன் சேர்த்தேனும் கொடுக்க, மந்தம் நீங்கிப் பசியுண்டாம்.

ஒன்றரை முதல் நாலுகுன்றியளவில் கொடுக்க, பசித்தியுண்டாம்.

பத்து முதல் இருபது குன்றியளவு தேனுடன் கலந்து கொடுக்க நீர் நீராகக் கழியும்.

இரவேற்சின்னியுடன், சரக்கொன்றைப்புளி, வெடியுப்பு, சுக்கு, தேவ தாரு, சந்தனம், சடாமாஞ்சில் இவைகளைச் சேர்த்து, சிறிது நீர் விட்டு அரைத்து, வயிற்றின் மீது பற்றிட, மருக்கட்டு நீர்க்கட்டு நீங்கும். கல்லீரல் மண்ணீரல் வீக்கத்துக்கு இதைப் பற்றிட, அவைகள் நாளுக்குநாள் சுருங்குவதைக் கண்டுளோம்.

## 62. Ilandai Maram இலந்தை.

வே-பெ : இலந்தை, குல்லரி, குல்வலி, கோல், கோற்கொடி, வதரி.

Zizyphus Jujuba,

Eng : The : Jujuba Tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Regu | San. Badari ; | Kola. |
| Mal. | Ilanda | | |
| Kan. | Bogari. | Hind. | Bær |

இஃது, இந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதில் இரு வகை யுண்டு : காட்டு இலந்தை, நாட்டு இலந்தை. நாட்டு இலந்தையில் சீமை இலந்தை என்று வேறொரு பிரிவும் உண்டு.

ப-உ : கொழுந்து, இலை, பழம், பட்டை, வேர், வேர்ப்பட்டை, கட்டை, சமூலம்.

### காட்டு இலந்தை

சுவை-பழம் புளிப்பு, துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

### நாட்டு இலந்தை.

சுவை : பட்டை-இலை-துவர்ப்பு, இனிப்பு, பழம்—இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை { பட்டை—துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
துளிர்—ஸ்நிக்தகாரி-வரட்சியகற்றி-Emollient.

### குணம்.

வேர் . அயர்ச்சியை விலக்கும், பசியை உண்டாக்கும்.

இலை : எருவாய்க்கடுப்பு, பெருங்கழிச்சல், உடல் எரிச்சல், சொறி வயிற்றுக் கடுப்பு, அழல், மேகம் இவைகளைப் போக்கும்.

பழம் : சுவையின்மை வாந்தி, வலி, கால் (வாயு) இவைகளைப் போக்கும்.

### இலை.

வேருக்கா யாசம் விலகும் பசியுண்டாம்
சீரொத் திடுமிலைக்குச் சீழ்மூலம்—சோரிவிழல்
மேவெரிச்ச லுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவும் விழியாயிலந்தை.

### பழம்.

பித்த மயக்கருசி பேராப் பெருவாந்தி
மொத்தனில் மெல்லா முடிந்திடுங்காண்—மெத்த
உலர்ந்த வெறும்வயிற்றி லுண்டால் எரிவாம் (அ. கு.)
இலந்தை நெறுங்கனியை யெண்.

இலை.

வ-கு : (1) பச்சை இலையை அரைத்து, சிறு எலுமிச்சங்காயளவு புளித்த மோரில் கொடுக்க, எருவாய்க்கடுப்பு குணமாகும் ; (2) இந்த இலையைப் , பவள பற்பம் செய்ய உபயோகிக்கலாம்.

இலந்தை.

கொண்டையா மிலந்தையைக் கொள்ளவெத்திறத்திலும்
மண்டிய நோயெலா மாய்ந்துபோய் விடுமே.

(பொ-ள்.) இலந்தங்காய் பழம், துளிர் இவற்றை எவ்விதமாய் உட்கொண்டாலும் அழல் நோய்கள் யாவும் ஒழிந்துபோகும். (தே. கா.)

இலையும் பட்டையும் சேர்த்துக் குடிநீர் செய்து கொடுக்கில், குருதி வடியும் கழிச்சலும், வயிற்றுக் கடுப்பும் போம்.

துளிரும் கட்டையும்.

இவற்றை நன்ருய் அரைத்துக் கொப்புளங்கள் முதலியவற்றிற்கு வைத்துக்கட்டிவர, பழுத்து உடையும்.

பழம்.

பழத்தை உலர்த்திக் கொட்டையை நீக்கிக் கொடுக்க, கோழையை அகற்றும்.

கொட்டையை நீக்கிவிட்டு தசையுடன் மிளகாயும் உப்புஞ் சேர்த் தரைத்து உலர்த்தி வைத்துக்கொண்டு. ஒரு கடுக்காயளவு, காலையில் கொடுத்துவர, அழலைத் தடுத்து செரியாமையைப் போக்கும்; பசித் தீயைத் தூண்டும்.

பட்டையும் இலையும் சேர்த்துத் தண்ணீரில் கொதிக்கவைத்துக் குளிக்க குத்தல் குடைச்சல் நீங்கும்.

பட்டையை உலரவைத்து இடித்துத் தூளாக்கி, பழைய புண்களுக்கும் தூவிக்கட்டலாம்.

பட்டையைக் குடிநீரிட்டுக் காய்ச்சலுக்கும் முப்பிணிக்கும் கொடுத்துவரலாம்.

வேர்ப் பட்டை.

இதன் ரசத்தை உட்கொள்ளக் கழியும். கீல்வாயுக்கு மேல் பூச்சிட கீல் வாயு போம்.

## 63. இலவங்கம்—Lavangam.

வே-பெ : அஞ்சுகம், உற்கடம், கருவாய், கிராம்பு, சோசம், திரளி, வராங்கம்.

Eugenia Caryophyllata.

Eng : Cloves.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Lavnagàlu<br>Lavanga-pü | Sans. | Lavangam. |
| | | Arab. | Aaranful |
| | | Per. | Mekhak |
| Mal. | Karàmpu | Hind. | Long |
| Kan. | Lavangà | Duk. | Lavan. |

இஃது இந்தியாவிலும் இலங்கையிலும் பயிராகிறது. எல்லாக்கடைகளிலும் விற்கப்படும்.

**சுவை: காரமும் விறுவிறுப்புமுள்ளது, தன்மை - வெப்பம், பிரிவு கார்ப்பு.**

செய்கை :
- இசிவகற்றி - அங்காகர்ஷணநாசநி–Antispasmodic Counte Treatnent.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி Carminative.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி–Stomachic.

**குணம்** : இது கிராம்பு, மயக்கம், பேதி, வாந்தி, குருதிக்கழிச்சல், நாட் பட்ட கழிச்சல், எருவாய்க்கடுப்பு, செவிநோய், சிவந்தமச்சம், கறுத்த மச்சம், கண்ணில் பூ, படைகள் ஆகியவற்றை நீக்கும். கறிமசாலையிலும் சேரும்.

பித்த மயக்கம் பேதியொடு வாந்தியும்போம்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமோ—மெத்த
இலவங்கங் கொண்டவருக் கேற சுகமாகும்
மலமங்கே கட்டுமென வாழ்த்து.

சுக்கிலநட் டங்கர்ண சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கல்விடாச் சர்வா சியப்பிணியு—மக்கிக்குட்
டங்கப் பூவோடு தரிபடருந் தோன்றிலில்
வங்கப்பூ வோடுரைத்து வா. (அ.கு.)

**வ-கு** : கிராம்பை நீர் விட்டு மை போலரைத்து, நெற்றியிலும் மூக்குத் தண்டின் மீதும் பற்றிட, தலைபாரம் நீரேற்றம் குணமாகும்.

தணலில் வதக்கி வாயிலிட்டுச் சுவைக்க, தொண்டைப் புண் ஆறும், பற்களின் ஈறு கெட்டிப்படும்.

இரண்டு ஆழாக்கு, வெந்நீரில், கிராம்புத்தூள் பலம் கால் சேர்த்து, அரை மணி நேரம் வரையில் மூடி வைத்து வடிகட்டி, 1/8 முதல் ½ ஆழாக்கு வீதம் உட்கொள்ள, பசித்தீயைத் தூண்டிக் கழிச்சலைப் போக்கும். பிள்ளைத் தாய்ச்சியின் வாந்தி நிற்கும்.

கிராம்பு, சிறுப்பு, விலாமிச்சம் வேர், திரிகடுகு இவைகளின் சூரணம் சமவெடையெடுத்து வடகஞ்செய்து கொடுக்க மயக்கம், கழிச்சல், வாந்தி, தீரும். (10 முதல் 20 உழுந்தெடையுள்ள மாத்திரையாகச் செய்து கொள்ளவும்.)

கிராம்பு சுக்கு வகைக்கு 5 பங்கும், ஓமம் இந்துப்பு வகைக்கு 6 பங்கும் சேர்ந்த சூரணத்தில், 2 முதல் 3 குன்றியெடை வீதம் கொடுக்க, பசித் தீயைத் தூண்டும். உணவு நன்குச் செரிக்கும்.

கிராம்பும் நிலவேம்பும் சமமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்க பசி உண்டாகும். அயர்ச்சி நீங்கும். சுரத்திற்குப் பின் உண்டாகும் களைப்பைப் போக்கும்.

நிலாவாரைக் குடிநீரில் ஒன்று அல்லது ஒன்றரைக் குன்றியெடை கிராம்புத்தூளும், சுக்குப் பொடியும் சேர்த்துச் சாப்பிட, சுகமாய்ப் பேதியாகும்.

பித்தசாந்தி, சுக்கிலநட்டம், ஸ்திரீரோகம் இவைகளின் பொருட்டு செய்யப்படுகிற மருந்துகளில் அநேகமாய்க் கிராம்பு சேரும்.

**இலவங்கத் தைலம்.**

புறச்செய்கை.

செய்கை :
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி–Antiseptic.
- உணர்ச்சிபோக்கி - Local anaesthetic.
- தடிப்புண்டாக்கி - ஷோணகாரி-Rubefacient.

அகச்செய்கை.
- பசித்தீத்தூண்டி - ஜடராக்நிவர்த்தநி–Stomochic.
- உடலுரமாக்கி-போஷணகாரி–Nutritive.

இலவங்கத்தை வாலேயிலிட்டு வடித்த தைலம் துல்லியமாயும், காரமாயும், நல்ல மணமுள்ளதாயுமிருக்கும். நாவில் பட்டால் சிவக்கும். 2 முதல் 3 துளி சர்க்கரையுடன் சேர்த்துண்ண முன் கண்டுள்ள பல நோய்கள் சாந்தமாகும். பல் நோய்க்குப் பஞ்சில் நனைத்து வைக்கலாம்.

---

## 64. இலவங்கப்பட்டை—Lavangappatti.

வே-பெ : கருவாப்பட்டை.

Cinnamomum Zeylanic um.

Eng : Cinnmon—Bark of

| | | | |
|---|---|---|---|
| Tel. | Lavanga-patta<br>Sanna-lavangapaṭṭa | Arab. | Qifahe-sailiyiah<br>Dàr-chini |
| Mal. | Lavanga-paṭṭa<br>Cheriya-elaVanna-tolii | Pers. | Saḷikhae-sàilàniyah *<br>Dàr-chini. |
| Kan. | Lavanga-paṭṭa<br>Dàla-Chinni. | Hin. | Qalami-dar-Chin<br>Dàr-Chini |
| Sans. | Twak | Duk. | Qalam.-dal-Chi *<br>Dàl-Chiini. |

கருவாப்பட்டைச் செடி இலங்கைக்கும் இந்தியாவுக்கும் உரிய பயிர். ஆயினும், இலங்கையில்தான் மிகுதியாக வளர்கின்றது. நமக்குக் கடையில் கிடைப்பது சிஜ்ஜபார் என்னும் நாட்டிலிருந்து வருவதேயாகும். இது மற்ற தேசத்திய உறபத்தியிலும் மேட்பட்டது. கறிமசாலேயில் சேரும. வாய் நாற்றத்தைப் போக்கும.

சுவை-காரமும் இனிப்புமுடையது, தன்மை-தட்பம், (வெட்ப வீரிய மென்றும் கூறுவர்) ; பிரிவு-இனிபபு. (கார்ப்பென்றுங்கூறுவர்.)

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி— Stimulant.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
- காமம்பெருக்கி—காமவர்த்திநி—Aphrodisiac.

**குணம்** : இது பாம்புக்கடி, சிலந்திப்பூச்சிக்கடி முதலியவைகளின் நஞ்சைப் போக்கும். இஃது இரைப்பு, இருமல், வயிற்றுக்கடுப்பு, உள்மூலப்புண் இவைகளைப் போக்கும். உடற்குக் குளிர்ச்சியை உண்டுபண்ணும்.

தாதுநட்டம் பேதி சருவவிஷம் ஆகியநோய்
பூதகிர கஞ்சிலந்திப் பூச்சிவிடஞ்—சாதிவிடம்
ஆட்டுமிரைப் போடிருமல் ஆகியநோய்க் கூட்டமற
ஓட்டுமிலவங்கத் துரி.
சன்னலவங் கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கும்
இன்னுமிரத் தக்கடுப்பை யீர்க்குங்காண்—முன்னமுறும்
உந்திக் கடுப்பகற்றும் உண்மூலப் புண்போக்கும்
கந்தமிகு பூங்குழலே ! காண். (அ.கு.)

**வ-கு** : இதற்குச் சூல்பையைச் சுருங்கச்செய்கிற குணமுண்டென்று பெரும்பாடு முதலியவைகளுக்குக் கொடுப்பதுண்டு.

**அளவு** : இப்பட்டையின் தூளை 65 மி. கி. முதல் 260 மி.கிராம் எடை கொடுக்கலாம். பெரும்பாலும் தனியாய்க் கொடுப்பது அரிது

சீதக்கழிச்சலில் 650 மி. கிராம் எடைப் பொடி பலனைத் தரும். இதன் செடியிலிருந்து 3 வகை எண்ணெய் எடுக்கப்படும்.

(1) பட்டையிலிருந்து எடுப்பது, பொன் நிறச்சாயலாயிருக்கும்.

(2) இதன் இலையிலிருந்து எடுக்கும் எண்ணெயை, உடல் வலி தலை வலி, பல்வலி முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு.

அளவு—2—5 துளி.

### இலவங்கப்பட்டைப்பொடி

இலவங்கப்பட்டை, ஏலரிசி, சுக்கு இவைகளைப் பொடித்து, ஓர் அளவாகக் கலந்து 180 மி. கிராம். முதல் 650 மி. கிராம் எடை கொடுக்க, வாந்தி, வயிற்றுப்பொருமல், வலி, கழிச்சல், கடுப்பு போம்.

இலவங்கப்பட்டை, சோம்பு, சுக்கு, வாய்விடங்கம், இராம்பு வகைக்கு 4 கிராம் ஆகச் சேர்த்து, முறைப்படி குடிநீரிட்டு 4-ல் ஒன்றாகக் குறுக்கி, வேளைக்கு 17 கிராம் முதல் 34 கிராம் வரையிலும் தினம் இருவேளை கொடுத்துவர, வயிற்று வலி, குன்மம், பூச்சிக்கடி முதலிய நோய்கள் தீரும்.

இலவங்கப்பட்டை 1 பங்கு, காசுக்கட்டி 3 பங்கு இவைகளைக் கொதிக்கிற வெந்நீரில் 80 பங்கில் நன்றாய்க் கலக்கி, வடிகட்டி 17 கிராம் தினம் 3 வேளை கொடுத்துவர, பெருங் கழிச்சல் தீரும்.

---

## 65. இலவங்கப்பத்திரி—Lavangappattri.

**Cinnamomum tamale.**

**Cassia Lignee**

**Eng : Chinnamum Leaves.**

| | |
|---|---|
| **Lavangapatri** | **San. Lavangapatram.** |
| **Elavanna patri** | |
| **Lavangapatri** | **Hind. Thjpat** |

இந்தியாவில் இமயமலை, கீழ் வங்காளம் முதலிய இடங்களிலும், பர்மா முதலிய பிரதேசங்களிலும் விளைகிற இலவங்கப்பட்டை போன்ற ஒரு செடியின் இலைக்கு இலவங்கப்பத்திரி என்று பெயர். கருவாப் பட்டையின் குணமும் மணமும் இதற்கு உண்டு.

சுவை.—கார்ப்பு, வீரியம்-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி— உஷ்ணகாரி-Stimulant.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி- Carminative.
- பசித்தீத்தூண்டி —ஜடராக்கினிவர்த்தநி-Stomachic.
- வியர்வைபெருக்கி -ஸ்வேதகாரி-Diaphoretic.

குணம் : மேகசுரம், ஐயசுரம், வெட்டை, இரைப்பு, இருமல் நீர் வேட்கை, அழல், வாந்தி, வாய்ப்புண், மேகக்கட்டி தாது நட்டம் கைப்புச் சுவை இவைகளைப் போக்கும்.

மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசம்
தாகபித்தம் வாந்திசர் வாசியநோய்—மேகத்தின்
கட்டியொடு தாதுநட்டங் கைப்பருசி போக்கிவிடும்
இட்டஇல வங்கத் திலை. (அ.கு.)

வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, இவைகளை உண்டாக்கலாம்.

கருவாப்பட்டைச் செடியின் பட்டை இலை இவைகளிலிருந்து தைல மெடுத்து, இவைகளையும் இலவங்கப்பட்டைத்தைலங்களைப் போலவே உபயோகிக்கலாம்.

இஃது இலேகிய முதலிய மருந்துகளில் சேருகிறது.

## 66. இலவு மரம்—Ilavu Maram.

**Eriodendron anfractuosum D. C.**

**Eng : Capok tree or white silk cotton tree.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Buruga-Cheṭṭu | Sans. | Shalmali Vrikshaha. |
| Mal. | Panni-Maram<br>Muḷḷillà-Pula | Hind. | Sufėd-Sémal<br>Tluà-Pér |
| Kan. | Bura-Màra | Duk. | Khatyàn<br>Khatyan-Kà-jhàr. |

இஃது இந்தியாவில் சில உஷ்ணப்பிரதேசங்களில் வளரும் மரவகையைச் சேர்ந்தது.

ப-உ : இலை, பூ, வித்து, பட்டை, பிசின், பஞ்சு, வேர்.

சுவை : இனிப்பு, துவர்ப்பு, கைப்பு, தன்மை-தட்பம், பிரிவு இனிப்பு.

குணம் : இலவு மரத்தினால், நீர்க்கடுப்பு, நீரெரிவு, வெள்ளை இவைகள் விலகும் ; சுக்கிலமும் இரசதாதுவும் பலப்படும்.

நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகமும்போம்
ஆர்க்கும்விந்து வோடைக்கு மாண்மையுறும்—பார்க்குள்
நிலவு மதிவதன நேரிழையே ! வெப்பாம்
இலவு மரத்தா லியம்பு. (அ.கு.)

இலவம்பட்டையை அரைத்து, எலுமிச்சங்காயளவெடுத்துப் புளித்த நீரில் கலக்கிக் கொடுக்க, இடு மருந்து முறியும்.

## 67. முள்-இலவு—Mul-ilave.

வே-பெ: முள் இலவம், சான் மலி, பூரணி, பொங்கர், மோசம்.

Bot. Name: Bombax Malabaricum or

Eng: The Red Silk-Cotton Tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mundla-buraga Chettu | Hind. | Ragai-senbal<br>Ragai semal |
| Mal. | Pula-Maram<br>Mul-elava | Duk. | Kantno-Ka—Khatyan<br>Kanton-Ka-sema |
| Kan. | Mullu-buraga Mara | | |
| sans. | Kantaka-shalmali | | |

இஃது இந்தியாவில் உஷ்ணபிரதேசங்களில் வளரும் மர வகுப்பைச் சேர்ந்தது. இதன் புஷ்பம் குங்குமம்போல் சிவப்பாயிருக்கும்.

ப-உ: இலவமரத்தின் உறுப்புகளேயாம்.

சுவை: இனிப்பு, துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை:

**இலை**

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

**பூ.**

மலமிளக்கி—மலகாரி—Laxative.
சிறுநீர்ப்பெருக்கி—முத்ரவர்த்தநி—Diuretic.
குருதிப்பெருக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—Styptic.

**வித்து.**

காமம் பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

**பட்டை.**

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringentmild.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
உரமாக்கி—பலகாரி—Tonic.

**பிசின்.**

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
குருதிப்பெருக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—Styptic.

**வேர்.**

வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
உரமாக்கி—பலகாரி—Tonic.

**குணம்** : முள்ளிலவுமரத்தினல் தந்துமேகம், நீர்த்தாரை, வெப்பம் வளிப்பெருங்கழிச்சல் போம்.

தந்துமே கஞ்சிறுநீர்த் தாரைவெப் பம்வாயு
வுந்தவரு பேதியிவை யோட்டுங்காண்—முந்திக்
கிளர்வள்ளை பாயும்வரிக்கெண்டை விழியாய்!
வளர்முள் ளிலவ மரம். (அ.கு.)

இலவமரம், முள்ளிலவமரம் இவைகளின் குணம் பெரும்பாலும் ஒத்திருப்பதால், இவைகளின் உறுப்புகளைக்கொண்டு வழங்கும் விதங்களை ஒன்று சேர்த்து எழுதப்பட்டுள்ளது.

**வ-கு** : இலையை அரைத்துப் பசுவின் பாலிற் கலக்கிக் கொடுக்க, சிறுநீர் எரிச்சல் நீங்கும்.

பூவைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மலக்கட்டையும் நீர்க்கட்டையும் நீக்கும்.

இதன் உலர்ந்த பூவுடன் கசகசா சேர்த்து அரைத்து; வெள்ளாட்டுப் பாலிற் கலக்கிச் சர்க்கரை சேர்த்துக் காய்ச்சி, கால் பலம் வீதம் நாளொன்றுக்கு மும்முறை கொடுக்க, இஃது இரத்தபித்தத்தைப் போக்கும்.

இதன் வித்து ஒரு பங்கு, சீரகம் அரைப் பங்கு, வால்மிளகு கால் பங்கு, சேர்த்தரைத்து, 4 கிராம் முதல் 10 கிராம் எடை வரையில் கொடுக்க, வெட்டை நீர் எரிச்சல், நீர்ச்சுருக்கு, வாயின்வழியாம் குருதிப்போக்கு இவைகள் போம்.

பட்டை பலம் காலில், 2 ஆழாக்கு நீர் விட்டு ஒரு ஆழாக்காகக் காய்ச்சி வடிகட்டி, ¼ முதல் ½ ஆழாக்கு வீதம், தினம் மூன்று அல்லது நான்கு முறை கொடுக்க, நாட்பட்ட புண் சிறுநீர் எரிச்சல், நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, வெள்ளை, செரியாக் கழிச்சல், சீழ்க் கழிச்சல் முதலியன நீங்கும்.

இலவம் பிசின் பொடித்தது கால் முதல் அரை வராகனெடை இளநீரில் கலந்து நாள் ஒன்றுக்கு மூன்று நான்கு முறை கொள்ள நாட்பட்ட வெள்ளை நீர்க் கொதிப்பு, செரியாக் கழிச்சல், சீதக் கழிச்சல் முதலிய நோய்கள்போம்.

இதன் பஞ்சை, புண்களில் வைத்துக் கட்ட, சீழை வரட்டும். தலையணை மெத்தை முதலியவைகளுக்கும் உதவும்.

இதன் வேரைக்கொண்டு செய்யும் குடிநீர், சீழ்வெள்ளை, சீதக் கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

## 68 இலுப்பை—Iluppai.

**வே-பெ** : இருப்பை, குலிகம், மதூகம்.

**Bassia longifolia.**

**Eng : The narrow-leaved Mohua.**
**The Mahwah or Mowa Tree.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Ippe-chettu**<br>**Pinna-ippa** | **Pers.** | **Darkhte gulchikan** |
| **Mal.** | **Irippa** | **Hind.** | **Mōhà**<br>**Mohva** |
| **Kan.** | **Ippe gida** | | |
| **Sans.** | **Madhuka-Vriskhaha** | **Duk.** | **Moōhà** |

இஃது, இந்தியாவிலும் இலங்கையிலும் பயிராகும் மரம்.

ப-உ : இலை, பூ, காய், பழம், வித்து, நெய், பிண்ணாக்கு, மரப்பட்டை, வேர்ப்பட்டை.

சுவை—(பொது)—துவர்ப்பு. தன்மை—தட்பம்—பிரிவு—கார்ப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
உரமாக்கி—பலகாரி—Tonic.

## இலை.

பால்பெருக்கி—க்ஷீரவர்த்தநி—Lactagogue.

வழக்கு-இலையை மார்பில் வைத்துக்கட்ட முலைப்பால் சுரக்கும்.

## பூ.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை. உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
உரமாக்கி—பலகாரி—Tonic.

பூவினால், தீச்சுரம், நீர்வேட்கை நீங்கும். அழலை உண்டாகும். அறிவு கலங்கும்.

குன்று விலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாந்
தின்றாற் பயித்தியமுஞ் சேருங்காண்—மன்றலுறுந்
தார்குழலே ! பித்தசுரம் தாகந் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து. (அ.கு.)

பூவைக் குடிநீர் செய்து கொடுக்க, இருமல், தீச்சுரம், நீர்வேட்கை போம்.

பூவைப் பால் விட்டரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க, இளைப்பு வாங்கும்.

காய்ந்த பூவை வதக்கி வீக்கங்களுக்கு ஒற்றடமிட அவ்விடத்தில் வேர்வை தோன்றி வீக்கங் குறைந்துகொண்டே வரும்.

இதைக்கொண்டு சாராயஞ் செய்வதுண்டு. மேலும், இப்பூவிலிருந்து ஒருவகைச் சருக்கரை எடுக்கலாம் ; இதைச் சருக்கரைக்குப் பதிலாக உபயோகிக்கலாம். “ ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூச் சருக்கரை ” என்கிற பழமொழியும் வழங்குகிறது.

சருக்கரை அல்லது வெல்லப்பாகில், பூவைச் சேர்த்து உருண்டை செய்து ஏழை மக்கள் உணவாகக் கொள்ளுவார்கள்.

இப்பூவின் சாற்றில் இரும்புத் தூள் மையாகும் (குணபாடம் 2-வது பாகத்திற் காண்க).

## காய்.

காயைக் கீறினால் வெளிப்படும் பாலை, வெண்பாடானத்திற்கு நாள் தோறும் பூசிப்பூசி, வெயிலில் வைத்து உலர்த்திக் கொண்டே வந்து, கால் அங்குல மட்டும் பாலேறியபின், கொம்புக்கள்ளிச் சாம்பற்குள் வதைத்து எரிக்கக்கட்டும்,

## பட்டை.

| | |
|---|---|
| செய்கை. | உடற்றேற்றி — வியதாபேதகாரி—Alterative.<br>வெப்பமுண்டாக்கி — உஷ்ணகாரி—Stimulant.<br>துவர்ப்பி - ஸங்கோசனகாரி — Astringent.<br>உரமாக்கி பலகாரி—Tonic.<br>பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic. |

பட்டைக் குடிநீர், வளி நோய்க்குப் பலன் கொடுப்பதுடன், புண் சொறிகளைக் கழுவவும் பயன்படும்.

இதன் எண்ணெய் கால் கடுவனைப் போக்கும்; மண்டைக் கொதிப்பைத் தணிக்கும்; வளி நோய்களைத் தன்னிலைப்படுத்தும் (சித்தர் உறை விளக்கம் பார்க்க).

## வித்து.

குணம்: இலுப்பை விதை, வாயுவையும், நஞ்சையும் போக்கும்.

> "இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும்விடத் திற்கும்
> அலுப்பையுண் டாக்கி யகற்றும்". (அ.கு)

வ - கு: வித்தின்மீதுள்ள ஓட்டை நீக்கி, உப்பருப்பை நசுக்கி, வதக்கி சுற்றடமிட, மேற கண்டவை விலகும்.

## நெய்-பிண்ணுக்கு.

வித்தின் ஓட்டைப் போக்கி, இடித்துப் பிட்டவியலாய் அவித்துச் சூட்டுடன் ஆலேயிலிட்டு ஆட்டி எடுக்க, 100-க்கு 30 பங்கு நெய் தேறும். இதற்கு, "இலுப்பை நெய்" என்றும், திப்பிக்கு "இலுப்பைப் பிண்ணுக்கு" என்றும் பெயர்.

## இலுப்பை நெய்.

> மிருப்பைநெய் பித்தவாய் வெண்பதைக் குறித்துங்
> கருப்பமா யாக்கையைக் காத்திரஞ் செய்திடும்.

(பொ - ள்): இலுப்பெண்ணெய், தீவளிக் குற்றத்தை உண்டாக்கக் கூடியதாயிருப்பினும், உடம்பிற்கு மிகுந்த வன்மையைத் தரும். (தே. கா)

இதனுல், கரப்பான், சிரங்கு, புண் உண்டாகும். ஆனுல் இடுப்புவலி நீங்கும். உடற்கு வன்மை தரும்.

> கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணும
> உரப்பா மிடுப்புவலி யோடுங்—கரப்பான்
> பாகுமொழி மாதே! பலமுண்டாந் துற்பலம்
> ஏதகுமி லுப்பையினெய்க் கே. (அ. கு.)

நெய்யை வெதுப்பி இடுப்பு வலிக்குத் தேய்த்து வர விலகும். உடல் வலுக்கும்.

இது சீக்கிரத்தில் காரலெடுத்துப் போவதால், உட்புகட்டும் தைலங்களில் சேர்ப்பதில்லை. ஏழைகள் இதில் சிற்றுண்டி செய்து உண்பார்கள். சேற்றுப் புண்ணிற்குப் பூசவும், விளக்கு எரிக்கவும் பயன்படும்.

இதில் நாகம் சுத்தியாகும். (குணபாடம் 2-வது பாகத்திற் காண்க).

## இலுப்பைப்பிண்ணாக்கு.

சுவை - கைப்பும், துவர்ப்பும் தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.
- தொற்றுப்புழுவகற்றி—ஆகந்துகரோகநாசநி—Disinfectant
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி -Anthelminitic.
- வாந்தியுண்டாக்கி – வமநகாரி—Emetic

இலுப்பைப் பிண்ணாக்கு, கடுவன், புண், கரப்பான், வீக்கம், திரிதோடம் எண்ணெய்ச்சிக்கு ஆகியவற்றைப் போக்கும்.

பொத்திக் கடுவனொடு புண்ணுங் கரப்பனும்போம்
வித்ததைப்பு தோடமிவை வீருவாம்—மெத்தனவே
எண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பைவிதைப்
பிண்ணாக்குக் கென்றறியப் பேசு. (அ.கு.)

வ-கு : இதைச் சுட்டு, தேங்காயெண்ணெயுடன் கலந்து பூசக் கடுவன், புண், கரப்பான் போகும்.

இதைப் புகைக்க வீட்டிலுள்ள புழு, பூச்சு, எலிகள் வீட்டைவிட்டகலும்.

பிண்ணாக்கைப் பொடித்து மூக்கிலிட, நீர்ப்பாய்ந்து தும்மலுண்டாகும். இப்பொடியை வறுத்துப் போதுமான சூடுபண்ணி ஒற்றடமிட வீக்கம் குறையும்.

அரைத்துத் தண்ணீரில் கலக்கிக் கொடுக்க, வாந்தியுண்டாகி ஊமத்தங்காதைத் தின்பதனாலுண்டாகும் நஞ்சை முறிக்கும்.

### வேர்க்குணம்.

சுவை- துவர்ப்பு, -தன்மை வெப்பம், பிரிவு -கார்ப்பு.
செய்கை : வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-(Stimulant)

குணம் : புண், புரை, வயிற்றுக்கடுப்பு, இரத்தக்கழிச்சல், மிகுதியான சிறு நீரிறங்கல், பசியின்மை, சுவையின்மை, சூலை, சுரம், சுக்கிலம், நீர்வேட்கை, உடல் அயர்வு இவைகளை நீக்கும். தலைமயிருக்காகாது.

புண்ணும் புரையுமறும் போதத் துவர்ப்பாகும
எண்ணு மகக்கடுப்பி ருக்குமோ—பெண்ணே கேள் •
நீரிழிவு மேகும் நெடுமோமை மூலத்தாற்
போரடர்க டுப்பிரத்தம் போம்.

மந்த மரோசிம காசூலை சர்வசுரம்
விந்துநட்டந் தாகமொடு மெய்யினைப்பும்—முநத
அலுப்பைப்பெற் றேகு மளகத்திற் காகா
இலுப்பைக்குச் சூடதிக மெண்.

(அ.கு.)

வ-கு : வேர்ப்பட்டைக் குடிநீர், புண்புரைகளைக்கழுவவும், உட்கொள்ள மேற்கூறிய நோய்களைப் போக்கவும் உதவும்.

## 69. இலைக்கள்ளி Ilaik-kalli

**Euphorbia nivulia**

**Eng. : Common Milk Hedge.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Aku-jemedu | Hind. | Patton-ki-send<br>Thohar |
| Mal. | Elakkalli | | |
| Kan. | Yalekalli | Duk. | Kutte-ki-jibh-ki-send.<br>Kutte-ki-jibh-ka-patta |
| Sans. | Snuhi (patra) | | |

இது நம் நாட்டில் எங்கும் பயிராகும். சிறு மரவகுப்பிற் சேர்ந்தது. கள்ளிக்குப் பாலுண்டு. இலை நாயின் நாக்கு அல்லது முயலின் செவி போலிருக்கும். மரத்தில் முள்ளுண்டு.

ப-உ : இலை, பால், வேர்.

### இலை.

இலையை வரகு வைக்கோற்றீயில் வதக்கிச் சாறு பிழிந்து வழங்கச் லாம்.

செய்கை: தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
நீர்மலம் போக்கி—வ்ரேசநி—Purgative

குணம்: இச்சாற்றினுல் செங்கரப்பான், கருங்கரப்பான், இரந்தி, காது குத்தல் நீங்கும்.

வ-கு : சிறு குழந்தைகளுக்குண்டாகும் கரப்பான் நோய்க்கு இச் சாற்றில் சிறிதளவு (ஓர் உச்சிக்கரண்டியளவு) புகட்டலாம்.

சாற்றைச் சுடவைத்துக் காதில் விட்டுவர, காது குத்தல் நீங்கும்.

ஐயத்தை விலக்கக்கூடிய மணப்பாகுகளில் ஒன்றில், அவ்வளவு சாற்றைக் கலந்து 10 முதல் 20 துளி வீதம் நாள் ஒன்றுக்கு 2 முதல் 3 தரம் கொடுக்க, இரைப்பு, உப்பிசம் தணியும்.

இச்சாற்றுடன் உப்பு சிறிது சேர்த்துக் காய்ச்சி, கக்குவான் சோகை குன்மம், காமாலை, சூலை ஆகிய நோய்களுக்கு வழங்கலாம். நெய் சேர்த்துக் கொடுக்க, மேகமும், நீண்ட நாள் சுரக்காய்ச்சலாலுண்டான பிலீகவீக்கமும் குணப்படும். வேப்பெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி வளி நோய்களுக்குத் தேய்த்துவரலாம்.

இலையை வதக்கி அடிவயிற்றின் மீது போட, நீர்த்தடையை விலக்கி நீரை வெளிப்படுத்தும்.

### பால்.

சுவை-கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : நீர்மலம்போக்கி..வ்ரேசநி—Purgative
தடிபபுண்டாக்கி—ஷோணகாரி — rubefacient.

**குணம்** : இலைச்சாற்றுக்குள்ள குணங்களே இதற்குமுண்டு.

செய்ய கரப்பான் செவிநோய்வா தம்போக்கும்
பையவருஞ் சூலைதனைப் பாழாக்கு—மெய்யின்மிக
ஊது கிரந்தியோ டுப்புண்ணை யாற்றிவிடும்
ஓதிமிலைக் கள்ளிப்பா லோர். (அ.கு.)

**வ-கு** : இதன் பாலை எண்ணெயுடன் சேர்த்துப் பாகப்படுத்தி வாத நோய்களுக்கு உபயோகிக்கலாம். தனிப்பாலைத் தோல்மீது கிளைக்கும்மருளுக்கும் வீக்கங்களுக்குந் தடவலாம்.

## வேர், வேர்ப்பட்டை.

**செய்கை** : நீர்மலம் போக்கி —வ்ரேசநி— **purgative**
நுட்புழுக் கொல்லி—கிருமிநாசிநி — **Germicide.**

**வ-கு** : இதன் வேருடன் பெருங்காயம் சேர்த்து நீர் விட்டரைத்து, சிறு பிள்ளைகளின் வயிற்றின்மீது பற்றிட, வயிற்றுப் பூச்சிகள் வெளிப்படும்.

### மரச்சக்கை.

இம்மரத்தின் சக்கையைச் சுட்டுச் சாம்பலாக்கி, நாட்பட்ட புண்களின் மீது தூவ, புண் ஆறும். இதை வதக்கிக்கட்ட நகச்சுற்று நீங்கும்.

## ஈச்சு.—Eehchu

இஃது இந்தியாவில் பல விடங்களிலும் பயிராகும். மரவகுப்பைச் சேர்ந்தது. இரண்டுவகைப்படும். (1) சிற்றீச்சு, (2) பேரீச்சு.

## 70. சிற்றீச்சு.

**Phoeruise sylnstrisllnn**

**Eng. Small Date.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | **Eethakaya** | **Kan.** | **Esala-mara** |
| Mal. | **Chitteenthal** | **Hind.** | **Sandola** |

ப-உ : பழம், பிசின், கொட்டை, கள், குருந்து, வெல்லம், கற்கண்டு

### பழம்.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை { சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diuretic.**
மலமிளக்கி — லகுவிரேசநி—**Laxative**

**குணமும்** வழக்கும் : வாயிலிட்டுச் சுவைத்தால், சிதபேதி, உழலை நோய், புண், இரைப்பு, சுரம், வெள்ளை, வாய் நாற்றம் மந்தம் இவைகளை உண்டாக்கும்.

சிற்றீந் தெனுங்கனிக்குச் சீத முழலையொடு
உற்ற சிரங்குகளு முண்டாகுஞ்—சுற்றிச்
செறியும் பலபிணியுந் தேமொழியே! நாளும்
அறிவு மழுக்கும் அறி. (அ.கு.)

## பிசின்.

பிசினியைச் சிறிய அளவில் நீரிற் கலந்து உட்கொள்ள, செரியாக் கழிச்சல், மூத்திர சம்பந்தமான நோய்கள் இவைகளைப் போக்கும்.

## கொட்டை.

கண்ணில் விழும் பூவிற்கு, இதன் கொட்டையைப் பால் அல்லது தண்ணீரில் தேய்த்துச் சிறிது கண்ணில் தீட்டலாம்

## கள்.

இதன் கள்ளைப் புளியாததற்கு முன்பு, அதிகாலையில் அரைமுதல் ஓர் ஆழாக்கு வரையில் உட்கொண்டுவர, உள்ளழலை, பிரமேகம், மூத்திரக்கிரிச்சரம், அரோசகம் தீரும். ஆனால், பித்தமதிசகப்படும். வீக்கம், திமிர்வாயு உண்டாகும். அதிக அளவில் வயிற்றைப் போக்கும்.

வெப்பகலு மெய்குளிரு மேகங் கிரிச்சரம்போஞ்
செப்பருசி போம்பித்தஞ் சேருங்கா—ணெப்படியும்
பூச்சுத் திமிருண்டாம் பொங்கறிவுங் கெட்டிடுமே
ஈச்ச மதுவதற் கே (அ.கு.

## குருத்து.

குருத்தைத் தின்பதால், பெண்களுக்குண்டாகும் உதிரச்சிச்கல் போம்

"சிறியவீச் சுக்குருத்தைத் தின்றால் வயிற்றின்
மறியுதிர வாயுவறும் வாழ்த்து ." (அ.கு.)

## கற்கண்டு.

ஈச்சங்கற்கண்டு அவிழ்தங்களையும் அறிவையும் கெடுக்கும். வாதபித்த கப க்ஷயங்களையும், காணுதற்கரிய பல பிணிகளையும் தரும்.

அரிய மருந்தையெலாமன்றே முறிக்குந்
திரிவித கபத்தைவரச் செய்யுந்—தெரிவரிய
பன்னோய் விளைக்கும் பகரறிவை மங்குவிக்கு (அ.கு.)
மன்னோய்வீச்சங்கண் டிசை.

## பாய்.

சிற்றீச்சுப் பாயில் துயில்பவருக்கு, உஷ்ணமும் தேகவுலரலுமுண்டாகும். ஆவிருதவாதம் விருத்தியாகும் பித்தம் ஒழியும். கபச்சினம் நீங்கும்.

சிற்றீச்சுப் பாயிற் றினமும் படுப்பவருக்
குற்றிடுமே காந்த லுடம்புலருஞ்—சுற்றியதோர்
வாயுவுறும் பித்தமறு மற்றுங் கபந்தீருந்
தாயகமா மிக்குணத்தைச் சாற்று. (அ.கு.)

# பேரீச்சு—Perichchu.

**Phoenix dactilifera.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Karjuramu** | **Kan.** | **Kharjura** |
| **Mal.** | **Tenech-cha** / **Perich-cha** | **Sans.** | **Kharjjuram** |
| | | **Hind.** | **Kajur** |

இது வட ஆப்பிரிக்கா, எகிப்து, அரேபியா முதலிய இடங்களில் சாதாரணமாக வளரும் மரம். தற்காலம் இராஜபுதனம் முதலிய இடங்களிலும் இதைப் பயிரிட்டு வருகிறார்கள். இதன் காய்க்குக் கர்ச்சூரக் காய் எனப் பெயர் வழங்குகின்றது.

ப - உ : பழம், பிசின், கொட்டை, கள், குருத்து, வெல்லம், கற்கண்டு.

**பழம்.**

சுவை இனிப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**பொது.**

செய்கை :
- உரமாக்கி—பலகாரி Tonic.
- உடலுறமாக்கி—போஷணகாரி—Nutritive.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி Demulcent.
- மலமிளக்கி—லகுவிரேசநி —Laxative.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

**காய்.**

செய்கை :
- பசித்தீத் தூண்டி ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி— Aphrodisiac.

**பழம்.**

செய்கை :
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி —Febrifuge.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant
- மலமிளக்கி—லகுவரேசநி—Laxative.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
- கோழையகற்றி—கபஹரகாரி --Expectorant.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி Aphrodisiac.

**கச்சூர்.**

கச்சூரம் என்னும் பேரீச்சங்காயின் பருப்பை நீக்கி, அதை அப்படியே தேனில் ஊறவிட்டுக் கடைப்பிடியாய் நாளும் கற்ப முறையில் உண்டுவரின், மாரடைப்பு வாய்வு நீங்குதல் மட்டுமேயல்லாமல், மேற் குறித்த வியாதிகளும் தொலையும்.

**காய்.**

**குணம் :** உமிழ்நீர்ப் பெருக்கையும், நீரழிவையும், கழிச்சல் வகைகளையும் போக்கும். பசித்தீயைத் தூண்டும்.

வாயிலுண்டா மூற்றலை மாற்றும் பசியில்லை
யாயிலுண்டா லுண்டா மதுமேக—நோயுள்
பெருநீர் மறுக்குமினும் பெண்களைக் கூடில்
தருநீர்மை சூரக்காய் தான். (அ.கு.)

**காய் வடகம்**

வ - கு : காய்களைப் பிளந்து விரையை நீக்கி, அதற்குள், சுக்கு, மாம்பருப்பு, சிறுநாகப்பூ, கசகசா வகைக்கு ஒரு பலம் எடுத்துத் தூள் செய்து அடைத்துச் மண்செய்து, புடம் போட்டுச் சீலையை நீக்கி அரைத்து, சுண்டை அளவு உருட்டி, தினம் 2 முதல் 3 உருண்டை வீதம் நாளொன்றுக்கு 3 முதல் 4 வேளை கொடுக்க, குருதிக் கழிச்சல் முதலியன போம்.

அநேகர் இக்காயை ஆகாரமாக உட்கொள்கின்றனர்.

### பழம்.

**குணம் :** நீரைச் சுரப்பிக்கின்ற பித்தம், மூர்ச்சைச்சுரம், நீர்க் கோவை, நீர்வேட்கை, இரத்தபித்தம், மதுமேகம், வாயிலேப்பு, அரோசகம், மலபந்தம், ஆகியவைகளைக் கண்டிக்கும். இதை யூனனி வைத்தியர்கள் அதிகமாய் வழங்குகின்றனர்.

பேரீந்தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைசுரம்
நீரார்ந்த ஐயம் நெடுந்தாகம்— பேரா
இரத்தபித்த நீரிழிவி லேப்பறும் அரோசி
உரத்தமலக் கட்டுமறும் ஓது. (அ.கு.)

### குருத்து.

**குணம் :** இதன் குருத்தால் சிலேத்தும குன்மம் போம்.

" பேரீச்சுத் தன்குருத்தைப் பேணியே தின்பவருக்
கீரீச்ச குன்மவலி யேகுங்காண்." (அ.கு.)

### பாய்.

பேரீச்சு ஓலைப்பாயில் துயில்பவருக்கு வாதகுன்மம் கோபை நீங்கும். பசி, பாண்டு, வெப்பம் இவைகளை உண்டாக்கும்.

பேரீச்சுப் பாயினிதம் பேரா துறங்குவர்க்குப்
பாரித்த குன்மம் பறக்குமென்பார்—பூரித்த
வீக்கமறுந் தீபனமா மெய்யைவெளுப் போடுஷ்ணம
ஆக்கிவிடு மென்றே யறி.

(அ.கு.)

---

## 71. ஈச்சுரமூலி Ech-chura-muli.

**வே - பெ :** ஈசுரமூலி, பெருமருந்து, பெருங்கிழங்கு, தலைச்சுருளி தராகக்கொடி.

**Aristolochia Indilca,**

**Eng : Inidan birthwort.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ishvara-veru<br>Dula-Govela<br>Govila. | Kan: | I |
| | | Sans. : | Ishwari |
| Mal. | Ishvaramuri<br>Karukap-pul<br>Karalekam | Hind. | Isharmul<br>Isnwarmul<br>Isharmul-kjar |

இஃது இந்தியாவில் எங்குங் காணக்கூடிய கொடி.

**ப-உ :** இலை, வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- உரமாக்கி - பலகாரி—Tonic.
- ருதுஉண்டாக்கி—ருதுவர்த்தநி—-Emmenagogue.

Roots contains an alkaloidal principle.

**குணம் :** இதன் இலை, விஷசோபை முதலிய பல வீக்கங்களையும், சந்தி பாதம் பல விஷயங்கள், குளிர்ச்சுரம் உடல்வெளுப்பு, படர்குட்டம், இருதய நோய், ஆகந்துகசோகை, திரிதோடம், சொறி, சிரங்கு, விடத்தினவு தேமல் ஆகியவைகளையும் போக்கும். இதன் வேர், குட்டத்தையும், சர்ப்ப விஷத்தையும், அற்ப விஷக்கடிகள், பித்தகோபம், சுவாசம், இருமல், சுரம், சரீரக்குத்தல், வாததோடம் இவைகளையும் போக்கும்.

பலபலவீக் கஞ்சந்நி பாதங்க ளோடு
நலமகல்வி ஷங்கள் நடுங்குங்—கலகலெனப்
பேச்சுரமுண் டாகுமலர்ப் பெண்ணனமே நீகேளாய் !
ஈச்சுர மூலிதனக் கின்று. (அ.கு)

பாண்டகற்று மெய்யிற் படர்குட்ட நோய்விலக்கும்
நீண்ட விருதயநோய் நீக்குங்காண்—தாண்டதப்பை
முன்னே யொழித்துவிடு மூவாத் தலைச்சுருளி
யென்னே யுலகி லிசை. (அ.கு.)

திரிதோடம் வெப்பு சிரங்குசொறி நஞ்சோ
டரிதேமல் வன்புடையு மண்டா—தொருவான்
அருமருந்தை யொத்த வணங்கே ! யுலகிற்
பெருமருந்தை நீயெடுத்த பின்பு (அ.கு.)

(வ - கு) : இதனிலைக்குக் கைப்புச் சுவையிருப்பதால், இலையை உலர்த்திப் பொடி செய்து 2 கிராம் வீதம், காலை மாலை கொடுக்க, அக்கினி மாந்தம், பேதி, சுரம், படர்குட்டம், இருதயநோய், பாண்டு, சோபை, சொறி, சிரங்கு முதலியன போம். இதைப் பாம்பு நஞ்சுகளுக்கும் கொடுப்பதுண்டு.

இதன் இலைச் சாறு அல்லது இலை, எல்லா நஞ்சையும் போக்குங் குணமுடையது.

**உரமாகப் பேசுவதற்கு வன்மைதரும்.**
**இதனால், செம்பு பற்பமாகும்.**

## ஈச்சுரமூலி வேர்.

**குணம் :** இதனால் பித்தம், இரைப்பு, இருமல், சுரம், உடம்புவலி வாதநோய், விடக்கடிதோடம் ஆகியவைகள் போம்.

பெருமருந்தின் வேர்பித்தம் பீறிரைப்பு காசம்
வருசுரம உடம்புவலி வாதம்—உருவுவிஷம்
ஒன்றிய மாகடிகள் ஓட்டும் உலகிலிது
அன்றியது கோச்சிகிச்சைக் காம். (அ.கு.)

**வ - கு :** இதன் வேரைப் பொடித்து அரைக்கால் முதல் அரை வராகனெடை வரையில் கொடுத்துவர, படர்புடைகள், நஞ்சுகள், வளி நோய்கள், இரைப்பு, இருமல், சுரம் போன்றவைகளைப் போக்கும். அன்றியும் மாட்டு நோய்களுக்கும் கொடுப்பதுண்டு.

---

## 72. ஈழத்தலரி : (ஈழம்-Gold) Ezhattalari.

வே-பெ : பெருங்கள்ளி.

Pacuminata

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vada-Ganneru | | |
| Mal. | Velutharali | Sans. | Kshira-Champaka |
| Kan. | Kadusampige | Hind. | Gulchin. |

இது தென்னிந்தியாவின் கடற்கரையோர பிரதேசங்களில் பயிராகும் ஒருவித செடி வகுப்பைச் சேர்ந்தது. இதில் பால் சுரக்கும.

ப-உ : இலை, 'பூ, மரபட்டை, வேர், வேர்ப்பட்டை, பால், குச்சிகள். சுவை—கார்ப்பு, தன்மை —வெப்பம், பிரிவு —கார்ப்பு

செய்கை : { தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.
பெருமலம்பொக்கி—வ்ரேசனகாரி—Cathartic.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent. }

குணம் : இது புரையோடும் புண், தொடை வாழைப்புற்று இவற்றை நீக்கும். மேகம், வளிநோய், கழிச்சல், சுரம் இவைகளுக்குங் குணந்தரும்

" ஈழத் தலரிப்பா லேறுபுரைப் புண்தொடையின்
வாழைப்புற் றும்போக்கு மால்." (அ.கு.)

வ-கு : ஒரு பூ மொக்கு எடுத்து வெற்றிலையோடு சேர்த்துச் சாப்பிட்டு வர, சுர நோய் நீங்கும்.

பட்டையைச் சதைத்துக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டிவரப் போம்.
மேக நோய்க்கு இதன் பட்டை மிகுந்த நன்மை பயக்கும்.

இலையை வேகவைத்துப் பழுத்த கட்டிகளுக்கு வைத்துக் கட்டிவர, அவைகள் உடையும்.

வேரும் வேர்ப்பட்டையும் கழிச்சல் உண்டாக்கக் கொடுக்கலாம.
பாலை எடுத்து வீக்கங்களுக்குப்போட, கொப்புளித்து நோயைப் போக்கும்

இதன் பால், சந்தனத் தைலம், கருப்பூரம் இவை மூன்றையும் சேர்த்துச் சிரங்கு முதலிய நோய்களுக்குப போடப் போம்.

இதன் கொம்புக் குச்சிகளைச் சூல் அழித்தலுக்காகக் கையாளுதல் உண்டு.

## 73. உகா—Uka-.

Salvodora persica

| | | | |
|---|---|---|---|
| Tel. | Uva<br>Pedda kalinga | Kan. | Betta Kanagala<br>Kadda Kanagala |
| Mal. | .. .. | San. | Bhavya |
| | | Hind. | Chalta |

143284
LC

இஃது இந்தியாவிலும் இலங்கையிலும் பயிராகும். மர வகுப்பிற் சேர்ந்தது.

ப-உ: இலை, பட்டை, பழம், விதை.

இலை, பட்டை.

சுவை—துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை: துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

பழம்.

சுவை—இனிப்பு, வீரியம்—தட்பம், பிரிவு இனிப்பு.

செய்கை: மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.

வ-கு: இதன் சாற்றைப் பிழிந்து சிறிது சருக்கரையும் தண்ணீரும் சேர்த்துச் சாப்பிட, இருமலைத் தணிக்கும்; குளிர்ச்சி தரும். இச் சாற்றை அளவறிந்து கொடுக்கின் கழிச்சலாகும்.

வித்து.

குணம்: முக்குற்ற நோய்களைப் போக்கும்.

வாதமுதல் முப்பிணியால் வந்த பிணியையெலாம்
கோதில் சமனமிகக் கொண்டொழிக்கும்—சீத
மகாவனசந் தன்னில் வளர்ந்திருக்கும் மாதே!
உகாவிதையை நன்று யுரை.

(அ.கு.)

வ-கு: விதையைப் பொடி செய்து முக்குற்ற நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## 74. உசிலமரம்—Usilamarm.

ஸூஞ்சி மரம்.

வே. பெ: கலிகை சீக்கிரான்

Mimosa Amara.

| | |
|---|---|
| Tel. Nallarenga, Shikareni | Sans. Krishna Sirisha |
| Mal. Dosulay, Nenmeni-vaka, Varachchi | Kan. Mimosoideae ((Lijgaminosac) |

இது நம் நாடுகளில் வளருகின்ற மரம்.

ப-உ. இலை, பூ, விதை, எண்ணெய்.

சுவை—துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை: துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

குணம் : உசிலமர வேர்ப்பட்டை அள்ளுமாந்தத்தையும், இலையின் தூள் எண்ணெய்ச் சிக்கையும், பிசின் மேகத்தையும் நீக்கும்.

குடிக்கின்ற எண்ணெய் காய்ச்சுதற்கு இதன் கட்டை மிகப் பயன்படும்.

அள்ளுமந்த நெய்ச்சுக் கழன்மேக நீங்குநிதங்
கொள்ளுதை லக்கறைக்குச் கொள்விறகாம்—விள்ளுமதி
லோதியடை வானினமென் றென்றுகுழ லேகலிகை
யாதி யடைபிசின்கட் டை. (அ.கு.).

வ -கு : இலையை அரைத்து அல்லது உலர்த்தித் தூள் செய்து தேய்த்து வர, தலைமயிரிலுள்ள எண்ணெய்ச் சிக்கைப் போக்கும். மயிர் வளரும், கருக்கும்.

கண் நோய்களுக்கு இதன் இலைச் சாற்றை வழங்குகின்றனர்.

பூ.

மிகவும் குளிர்ச்சியை உடையது. இதை அரைத்துத் தோலைப்பற்றி வரும் நோய்களுக்கும் வீக்கங்களுக்கும் பூசுவதுண்டு.

விதை.

செரியாக் கழிச்சல், மேகநோய், அடித்தள்ளல் என்னும் இவைகளை போக்கும்.

விதை எண்ணெய்.

இதன் எண்ணெயை மேலுக்குப் பூச, திமிர்படை முதலியன போம்.

---

## 75. உத்தாமணி—Uttamani.

வே-பெ : வேலிப்பருத்தி, உத்தமமாகாணி, உத்தமகன்னிகை

**Dalmia extena,**

**Asclepiadaace**

| | | |
|---|---|---|
| Tel. | Juttu-paku. / Dushtupu-Chettu. | Kan. Hala Koratige |
| Mal. | Velip- parithi. | Sans. Phala antaka. |
| | | Hind. Utran. |

இது தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும். இது கொடி வகையை சேர்ந்தது. இதில் பால் உண்டு.

ப - உ : இலை முதலியன.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic
- வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic,

குணம் : இதனால், வளிக்குற்றத்தாலுண்டாம் நோய்களாகிய குடைச்சல், குத்தல், வீக்கம், நடுக்கம், வலி (இசிவு) நோய்களும் ஐயநோய்களாகிய, இரைப்பு (சுவாசகாசம்), இருமல், கோழை கட்டல் ஆகிய நோய்களும் நீங்கி, பசித்தீ அதிகப்படும்.

### உத்தாமணி.

வேலிப்பருத்தி முழு தாலாற் பற்றுதுவேலிப்பரு.

உத்தாமணி வேர், கொடி, இலை, பால் இவைகளினால் செய்த குடிநீரை ஒரு மண்டலம் உபயோகித்தால், சலதோஷத்தினால் உண்டாகும் வாதபித்த சந்நிகளின் பேதங்களான தோஷவிடங்கள் யாவும் நீங்கும்.

### இலையின் குணம்

ஆலித் தெழுந்தநோய் அத்தனை யுந்தீருமே
வேலிப் பருத்தியதின் மெல்இலையால்—வேலொத்துக்
கண்டிக்கும் வாதங் கடுஞ்சந்நி தோடமும்போம்
உண்டிக்கும் வாசனையாம் ஓது. (அ.கு.)
உத்தா மணியிலையால் உள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம் வலியுங் குளிரும்போம்—பற்றி
இசிக்கும் வலியிரைப்பும் எத்தடிப்பும் எகும்
பசிக்குமதி மாந்தமும்போம் பார். (அ.கு.)

### இலை.

வ-கு : இலையின் குடிநீரை, மூன்று உச்சிக்கரண்டி அல்லது ஒரு அங்களவு குழந்தைகட்குப் புகட்ட, வயிற்றிலுள்ள புழு வெளிப்படும்.

இதன் சாற்றை ஓர் உச்சிக்கரண்டி வீதம் சுவாசகாசத்துக்குக் கொடுக்கலாம்.

இதன் சாற்றையுஞ் சுண்ணாம்பையுங் கலந்து கால் வீக்கங்கட்குப் போடலாம்.

இலையின் விழுதைப் பிளவைகட்கு வைத்துக் கட்டலாம்.

பெண்களுக்கு கருப்பையின் குற்றத்தாலுண்டாகும் இடுப்புவலிக்கு இலையின் சாற்றைத் தேனுடன் கலந்து மருந்தாகவாவது அல்லது வேறு மருந்துகட்குத் துணை மருந்தாகவாவது உபயோகிக்கலாம்.

இதன் இரசம் 5 துளியும், தேன் 5 துளியும் சேர்த்து, அதில் தாம்பரச் செந்தூரம் 12 மி. கிராம் பிரமாணமும், கஸ்தூரி 12 மி. கிராம் பிரமாணமும் சேர்த்துக் கொடுக்க, சுவாசகாசம் நீங்கும்.

இம் மூலிகையினால் செய்யும் எண்ணெய் சூதக ரோகங்களுக்கும், ஊதை வாதங்களுக்கும் உட்பிரயோகமாக உபயோகப்படும்.

இது சுண்ணமாக்கும் கொடி, அதாவது இதன் சாற்றினால் செய்யப்படும் பவழபற்பம், ஆமையோட்டு பற்பம் முதலியன மிகக் காரமாயிருக்கும்.

### உத்தாமணி கருக்கு.

உத்தாமணிச் சாற்றில் சிறிதளவு உப்பும், வசம்பு சுட்ட கரியுஞ் சேர்த்து ஒரு புதுச் சட்டியிலிட்டுக் காய்ச்ச, உப்பு சுண்டி வெளுத்துப் பொடியாகும். இப் பொடியைக் குழவிகட்கு வரும் மாந்தம், அள்ளு மாந்தம், செரியாக் கழிச்சல் முதலிய ரோகங்கட்கு, வெந்நீரில் 12 மி. கிராமிலிருந்து 200 மி.கிராம் வரை கலந்து புகட்ட, நோய் நீங்கி மிகவும் நன்மை தரும்.

வேரின் பொடி.

அளவு : 325 மி.கி. முதல் 650 மி.கி. எடை. இப் பொடியை அளவாகவாவது, ஒன்று முதல் 2 வராகனெடை வரையிலாவது பாலில் கலந்து கொடுக்க, இது கழிச்சலை உண்டாக்கும் ; வாத ரோகங்கட்கு முக்கியமானது.

---

## 76 உப்பிலாங்கொடி—Uppilang-kodi.

Sans Vlauka Dhidaparni

இது வெப்பமுள்ள நாடுகளில் மிகுதியும் பயிராகும். இது கொடி வகுப்பைச் சேர்ந்தது. இதன் தண்டு மெல்லியதாகவும், இலை ½ அங். நீளமாகவும், முட்டை வடிவமாகவும், கொஞ்சம் தடிப்பாகவும், உடைத்தால் உடைபடுவதாகவும் இருக்கும்.

ப - உ : இலை, கொடி, வேர்

சுவை - சிறுகார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { செரிப்புண்டாக்கி—பாசனகாரி—Digestive.
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Fepriuge. }

குணம்: இதனால் குழந்தைகட்கு உண்டாகும் மாந்தம், பால் பாலாகக் கழிதல், நீங்காத காய்ச்சல் இவைகள் போம்.

பிள்ளையின் மந்தபேதி பேராத ரூட்சையும்போம்
வெள்ளிசெயுந் தங்கத்தை மென்மலராற்—றெள்ளிபுரி
வேளு நடுங்குவடி வேலைநிகர் கூர்விழியாய்
நாளுமுப்பி லாங்கொடியி னல். (அ.கு

வ- கு : மாந்தத்தினால் வயிறு உப்பிக் காணின், இந்தக் கொடியை அரையில் கட்டத் தீரும்.

இலையை வதக்கிச் சாறு பிழிந்து, காசளவு முலைப்பாலுடன் கலந்து ஊட்டிவர, மந்தம் கழிச்சல் போம். இலையை அரைத்துச் சுண்டையளவெடுத்து, தாய்ப்பாலில் கலக்கியும் புகட்டலாம்.

இதனால் பொன் வெள்ளியும் பற்பமாகும்.

---

## 77. உருத்திரச்சடை—Rudrajadai.

வே-பெ : திருநீற்றுப்பச்சை, பச்சை சப்ஜா

Ocimum, basilicum,

Eng. Sweet Basil

| | |
|---|---|
| Tel. { Vibudi-patri, Rudrajeda } | Kan. Kama-kasturi |
| | Sans. vishdvat-ulasi |
| Mal. { Tirunitru-pach-cha, Pach-cha-pushpam } | Hind. and Duk. { Sabzah } |

இலை எண்ணெயிலிருந்து எடுக்கும் கற்பூரம் போன்ற ஒரு பொருள் கிடைக்கும் :

**Lookslike meskiel called Bengal camphor.**

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகின்ற ஒரு வகைச்செடி ; முக்கிய மாய் பாரசீக ராஜ்யத்தில் அபரிமிதமாகப் பயிராகிறது.

**சமூலம்.**

ப. உ : சமூலம்

சுவை–கார்ப்பு (விறுவிறுப்பு), தன்மை–வெப்பம், பிரிவு–கார்ப்பு

**விதை.**

சுவை–இனிப்பு, தன்மை–தட்பம், பிரிவு–இனிப்பு.

**வேர்.**

செய்கை:
- வியர்வையுண்டாக்கி-ஸ்வேதகாரி–**Diaphoetric.**
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி.–**Carminative.**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**Stimulant.**

**விதை.**
- வழுவழுப்பு-**Mucilaginous.**
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ் நித்தகாரி-**Demulcent.**
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்தநி–**Diuretic.**

**சாறு.**
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-**Anthelmintic.**

குணம் : இது ஐயம் வாந்தி முதலியவற்றையும், சுரத்தால் பிறக்கின்ற குருதி வாந்தி முதலியவற்றையும் போக்கும்.

திருநீற்றுப் பச்சை சிலேஷ்மசர்த்தி தன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே—பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரமருசி நில்லா
வுருத்திரச்ச டைக்கே யுரை. (அ.கு.)

விதை ஐயத்தைப் போக்கும்.

வ– கு : இதனால் வயிற்றைச் சேர்ந்த நோய்கள், சீதக்கழிச்சல் மேகம், நீர் நோய்கள் தீரும்.

இது பிரசவ சம்பந்த வேதனை முதலியவைகளைக் குறைக்கும்.

மேற்கண்ட நோய்களுக்கு நீரில் ஊறவைத்த விதையும் சருக்கரையும் சேர்த்துச் சாப்பிடலாம்.

கொள்ளவேண்டிய அளவு, ஒன்று முதல் இரண்டரை வராகனெடை யாகும்.

இலையைப் பிழிந்து, சாறு எடுத்துக் காதுநோய்களுக்கு விடலாம்.

இதன் இலையை உலர்த்தி, நன்றாய்ப் பொடித்து மூக்கில் உறிஞ்ச அதற்குள் இருக்கும் புழுக்கள் வெளிப்படும்.

இதன் சாற்றை, மூக்குநோய், காதுநோய் இவைகளுக்கு வழங்குவ யதுண்

## 78, உருத்திராட்சம்—Rudraksham.

வே-பெ. அக்கமணி, கண்மணி, சிவநேத்திரம், உத்திராட்சம்

Elaeocarpus lanceslates.

| | |
|---|---|
| Tel. Rudraksham | Kan. Rudratsham |
| Mal. Rudrakham | Sans· Rudraksham |

இஃது, இமயமலைச்சாரலில் நேபாளம் போன்ற இடங்களில் பயிராகும்·

ப. உ; இலை, வித்து.

சுவை–கார்ப்பு–கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு–கார்ப்பு.

செய்கை { கோழையகற்றி-கபஹாரகாரி–Expectorant.
முத்தோடமகற்றி-திரிதோஷஹரகாரி-Anti-Tridosha.
பித்தமகற்றி-பித்தஹரகாரி–Anti-bilious.

குணம் : இஃது அதிக நாவறட்சியோடுள்ள நீர்வேட்கை, முக்குற்ற வேறு பாடுகள், விக்கல், அழல் இவைகளைப் போக்கும் ; ஐயத் தாலுண்டாகும் மரணத்தைத் தடுக்கும்.

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
ஆளுவிக்கல் பித்தத்தை யாற்றுங்காண்—நாளும்.
மிருத்திரா மற்கபத்தை வீட்டுமே நல்ல
உருக்கிராக்கத் தின்வலிஓது. (அ.கு)

வ. கு: இலையின சாறு, முககுற்றப்பெருக்கு, ஐயப்பெருக்கு இதை களைத் தணிப்பதுடன் பற்ப செந்தூரங்களுக்கு அனுபானமாகவும் உப யோகப்படும்.

கொட்டையைத் தேன் விட்டு உரைத்து நாக்கில் தடவ, சந்நிபாத தோடம், விக்கல், பித்த மயக்கம், மரணத்தைத் தருகின்ற கபம் ஆகிய இவைகளைப் போக்கும்.

## 79 உருளைக்கிழங்கு Urulaik-krizhangu.

வே-பெ : அபிசித மூலம்.

Solanum uberosum.

Eng. Potato.

| | |
|---|---|
| Tel. Urla-gadda | Kan. { Batata, Alugaddai } |
| Mal. Urula-kilanna | Hind. Alu |

இதற்கு அபிசிதமூலம் என்றும் ஒரு பெயர் உண்டு.

இஃது இந்தியா முழுமையும் கிடைக்கும் ; குளிர்ப் பிரதேசங்களில் நன்றாய் விளையும் ; பூமியின் கீழ் விளையக்கூடிய ஒரு கிழங்கு வகையைச் சேர்ந்தது.

ப. உ : இலை, கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

இலை.

செய்கை. இசிவகற்றி–அங்காகர்ஷண நாசநி–Antispasmodic.

கிழங்கு.

செய்கை
- மலமிளக்கி-மலகாரி–Aperient
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ர நிவர்த்தநி-Deuretic.
- பாற்பெருக்கி-க்ஷிரவர்த்தநி–Galactagogue.
- நரம்புவெப்பகற்றி-நாடிசமனகாரி-Nervous Sedative.

குணம : கிழங்கு, சிறுநீரை மிகுதியாகப் போக்கும். பாலைச்சுரப்பிக்கும். நரம்புகளுக்குச் சிற்றயர்வை உண்டாக்கி, உற்சாகத்தை உண்டு பண்ணும்.

வ. கு. இதை வேகவைத்துத் தோல் நீக்கி நெய்யில் வறுத்துப் புசித்துவரின், உடலை நன்றாய் உறுதி படுத்தும்.

நாட்பட்ட இருமல் நோயால் வருந்தி, தூக்கம் இல்லாதிருப்பவர்கள், இதன் இலைச்சாற்றை உண்டுவர, தூக்கம் வரும்.

கிழங்கைப் பசையாகச் செய்து, தீயினற் சுட்ட புண்ணுக்கு வைத்துக் கட்டலாம்.

சிறு குழந்தைகட்கு, அவித்த உருளைக்கிழங்குடன் பாலாடை சேர்த்து ஊட்டலாம்.

சில இடங்களில் இக் கிழங்குகளிலிருந்து ஒரு விதமான சாராயம் எடுக்கிறார்கள்.

## 80 உழுந்து—Uzhundu.

வே–பெ : உளுந்து, மாடம், மாஷம்.

Phaseoiu sdiatus,

Eng : Black gam

| | | | |
|---|---|---|---|
| el. | Minumu | Sans. | Masha |
| Mal. | Ulunnu | | |
| Kan. | Uddu | Hind. | Masha |

இஃது இந்தியாவிலெங்கும் பயிராகும் ஒருவகைச் செடியின் விதை

ப-உ விதை, வேர்.

சுவை–இனிப்பு, தன்மை–தட்பம், பிரிவு– இனிப்பு.

செய்கை
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிகதகாரி–Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant (cooling).
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac.
- பாற்பெருக்கி-க்ஷிரவர்த்தநி–Lactagogue.
- உரமாக்கி (டானிக்)-பலகாரி-(Nervine tonic.
- உடலுரமாக்கி-போஷணகாரி-Nutritive.

குணம் : இஃது உணவுப் பொருள்களுள் ஒன்று. மிகுந்த அளவில் உண்ணில், வயிற்றுக்கடுமையுண்டாகி, பசித்தீயைக் கெடுக்கும். அளவறிந்துண்ணில், உடற்கு ஊட்டத்தையும் அழகையும் கொடுக்கும். ஆண்மை பெருகும். பெண்களுக்கு இடுப்புக்கு வலிமையைத் தரும். உடலுக்குக் குளிர்ச்சியைத்தரும்.

செய்யஉழுந் திற்குச் சிலேத்மவனி லற்பிறக்கும்
வெய்யபித்தம் போமந்தம் வீறுங்காண்—மெய்யதனில்
என்புருக்கி தீரும் இடுப்புக் கடுபலமாம்
முன்பு விருத்தியுண்டாம் முன். (அ.கு.)

வ-கு : உழுந்தை மாவாக்கிப் பண்டங்களாகச் செய்து அருந்த வன்மை தரும்.

பச்சை உழுந்து மாவைத் தேன் சேர்த்து அருந்தலாம்.

உழுந்தை நீரில் ஊறவைத்து எடுத்த நீரை, மறுநாள் அதிகாலையில் அருந்த மூத்திர சம்பந்தமான வியாதிகள் போம்.

இதைக் கொண்டு செய்கிற எண்ணெயை, வளிநோய், முடக்கு நோய்கள் முதலியவற்றிற்கு, நோயுள்ள இடத்தில் பூசிவர அவை போம்.

வேரை அரைத்துச் சூடாக்கி வீக்கங்களுக்கு வைத்துக்கட்டலாம்.

உழுந்தை வடையாகச் செய்தும், கஞ்சியாகக் காய்ச்சியும் உண்கின்றனர் இதனால் இளைத்த உடல் பருக்கும். உழுந்து வடை வன்மை உண்டாம்.

## உழுந்துவடை.

இதைச் சாப்பிடுவதனால் வளிக்குற்றம் மிகும். பசி கெடும். குளிர்ச்சி தரும்.

வெறுமுழுந்திற் செய்வடைக்கு மேன்மேலும்—வாதம்
உறும்பித்தம் சற்றே யொடுங்கும்—நறுந்தீ
பனம்போம் புசிப்பிற் பருகநன்றும் வாவி
யனம்போ னடையா யறி. (அ.கு.)

## உழுந்தோதனம்.

இது மந்தம் உண்டாக்கும்; இது ஐயத்தையும் வளிக்குற்றத்தையும் பெருக்கும்; தீக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தும்; உடம்பை வலுக்கச் செய்யும்.

எஞ்சுகப வாதமிக வுறுமதி மந்தமுறும்
விஞ்சுபித் தந்தாழு மெய்யுரக்கும்—அஞ்சம்
எழுந்தோதம் புக்கு மினியநடை மாதே!
உழுந்தோ தனத்திற் குரை. (அ.கு.)

## 81. ஊமத்தை Umattai.

**Datura alba**

**Eng. Dhatura (white flowering) Thorn-apple.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ummeth-tha | Sans. | Datura, Unmattha |
| Mal. | Ummath-tham | | |
| Kan. | Ummatte-gida | Hind. | Dhatura |

வெள்ளைப்பூ பூக்கும் ஊமத்தை எங்கும் கிடைக்கும். இது விசத (1) கருவூமத்தை, (2) பொன்னூமத்தை (3) அடுக்குமத்தை மருளூமத்தை எனப் பலவகைகளுண்டு. அடுக்கு என்றால், பூவுக்குள் பூ அடுக்கினாற் போலிருப்பது

வெள்ளூமத்தை (காட்டூமத்தை)

இஃது எங்கும் பயிராகக்கூடிய செடி. இதன் காய் உருண்டையாகவும், இதன் மீது முட்கள் அடர்ந்தனவாகவும் இருக்கும். இதன் விதை சுரசுரப்பு. இது கருவூமத்தையைப்பார்க்கிலும் வன்மை குறைவு.

ப- உ : இலை, பூ, காய், விதை.

சுவை - கைப்பு தன்மை-வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை { வாந்தியுண்டாக்கி-வமநகாரி-Emetic
இசிவகற்றி-அங்காகர்ஷணநாசனி-Antispasmodic.
துயரடக்கி-வேதனசாந்தநி-Anodyne.
மூர்ச்சையுண்டாக்கி-நித்ராகாரி-Narcotic.

இச்செய்கைகள் இலை, பூ, காய், விதை முதலியயாவற்றிற்கும் உண்டு.

**சமூலம்.**

**குணம்:** நாய்க்கடிப் புண், குழிப்புண், கட்டிகள், நஞ்சு, ஆகியவைகளை நீக்கும்.

நாய்க்கடியால் வந்து நலிசெய் விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்காண்—தீக்குணத்தைச்
சேமத்தில் வைத்திவிடந் தீருமுத்தோ டங்களறும்
ஊமத்தை யின்குணத்தை யுன்னு. (அ.கு.)

**இலை.**

**வ.கு.** இதன் இலையை உலர்த்திப் பொடி செய்து 32 மி.கி. அல்லது 100 மி.கி. யளவு உள்ளுக்குக்கொடுக்க, இரைப்பு நீங்கும்.

**அல்லது**

325 மி.கி. முதல் 1,000 மி.கி. எடையுள்ள உலர்ந்த இலையைச் சுருட்டிப் புகை பிடிக்க, மேற்படி நோய் தீரும். ஆனால், இதைக் குறைந்த அளவிலிருந்து படிப்படியாக மிகுதிப்படுத்திக்கொண்டே வரவேண்டும். இல்லையேல் நஞ்சாகும்.

இப்புகையால், கோழை வெளிப்படும். மூச்சடைப்பு நீங்கும். சிறிது பொட்டிலுப்பும் சேர்த்தால் மிகவும் நன்மை தரும்.

இலையை வதக்கி ஒற்றடமிட, கீல்வாயு, எலும்பு வீக்கம், கட்டிகளினாலுண்டாகும் வலி, பால் கட்டிக்கொள்வதாலுண்டாகும் நோய் இவைகள் தணியும்.

**களி.**

இலை அரிசிமா இவ்விரண்டையும் ஓர் அளவாக எடுத்து, கொஞ்சம் நீர் விட்டரைத்து, களிபோல் வேகவைத்து, எலும்பு மூட்டுகளிலுண்டாகும் வீக்கம், வலி தருகின்ற கட்டிகள், வெளி மூலம் இவைகளுக்குப் போடலாம். ஆனால், புண் முதலியவைகளுக்குப் போடலாகாது. நரம்புச்சிலந்தியிருக்கும் இது மிக நன்று.

இலை அல்லது பூ 35 கிராம் எடுத்திடித்து, 1,400 மி.லி. நீருடன் சேர்த்துக் காய்ச்சி, மேற்கண்ட நோய்களுக்கு ஒற்றடம் போடலாம்.

கரும்பு வெல்லத்தில் இதன் இரசம் 1 முதல் 3 துளி விட்டுக் கொடுத்து, பாலன்னம் மோர், சாதம் கொடுக்க, பேய்நாய்க்கடியின் நஞ்சு தீரும். 3 நாளைக்கு மேல் கொடுக்கவேண்டியதில்லை. உப்பு, புளி முற்றும் நீக்க வேண்டும்.

தயிரில் இதன் இரசம் 5 முதல் 10 துளி சேர்த்துக் கொடுக்க, வெள்ளை தணியும்.

இலை இரசத்தை 1 முதல் 2 துளி வரை காதில் விடக், காதுவலி தீரும். வீக்கமுள்ள இடங்களிலும் தடவலாம்.

### சத்து

ஊமத்தை, கண்தாரையைப் பெருக்கும்.

### காய்

**குணம் :** இதனால், வளிநோய், கரப்பான், கழலை, சொறி இவை நீங்கும், மயக்கமும், வெறிநோயும் உண்டாகும்.

வாதமறும் பித்த மயக்கமுறு மாநிலத்திற்
றீது கரப்பான் சிரங்ககலுங்—கோதாய்கேள் !
மாமத்த மாகும் வறட்சியெல் லாம்போகும்
ஊமத்தங் காய்க்கென் றுரை. (அ.கு.

இளங்காயைக் குடைந்து அதற்குள் கெந்தகத்தூண்டை வைத்து, அக்காயினுடையே குடையப்பட்ட வாயை மூடி, பசுவின் சாணத்திற்குள் வைத்துக் காய் வேகும்படி புடமிட்டெடுத்து, சாணத்தைப் போக்கி வெந்தகாயுடன் ... யிலே சேர்த்து அரைத்து, உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு, பொடித்து சிரங்கின்மீது தூவ, சிரங்காறும் ; எண்ணெயுடன் குழைத்துப்பூச, கழலை, கரப்பான் போகும்.

### தைலம்.

இதன் இலைச் சாற்றைக்கொண்டு செய்யப்படும் மத்தன் எண்ணெய், (பச்சை எண்ணெய்), புண், புரை, ஆறாப்புண், பிளவை, சதை வளர்தல் இவைகளைப் போக்கும்.

இதன் முறையை சித்தர் உறை விளக்கத்திற் காண்க.

### வித்து.

**குணம் :** இஃது, நஞ்சுகளைப்போக்கும் ; முப்பிணி கழிச்சல் இவைகளை நீக்கும் ; வெறிநோயை உண்டாக்கும் ; காய்ச்சல் சுரம் இவைகளை நீக்கும், உன்மாத ரோகத்தை உண்டாக்கும்.

சுரம்போம் விஷம்போந் தொலையாத சந்நி
யுரம்போ மதிசார மோடும்—நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே !
யூமத்தந் தன்விதையை உன். (அ.கு.)

**வ - கு :** பசுவின் நெய்யில் விதையை அரைத்து மூலமுளையினடியி பூச, மூலமுளை அற்றுவிழும்.

காடி அல்லது தேனில் அரைத்துக் கொதிக்கவைத்துக் கட்டிகள்மேல் பூச, கட்டிகள் கரையும். வீக்கத்தின்மீது பூச, வீக்கம் குறையும்; வலி குத்தலுள்ளவிடங்களில் பூச, வலியையும் குத்தலையும் நிறுத்தும்.

இதனால் மயக்கம் உண்டானால், மிளகு, சோம்பு, தேன் இவைகளில் ஒன்று அல்லது இரண்டைக் குடி நீராகக் கொடுக்க அக்குற்றம் விலகும்.

சிதைத்த விதை 42 கிராமுக்கு, எண்ணெய் 325 மி.லி. சேர்த்து ஏழு நாள் வரையில் அரைத்தரைத்து வெயிலில் வைத்து, 8-ஆம் நாள் வடித்து, அடிவயிற்றில் தடவ, சூதக வயிற்றுவலி, நீர்த்தாரை எரிவு நீங்கும். கன்னம், முகம், காது இவ்விடங்களில் காணும் குடைச்சலுக்கும், முப்பிணியிலுண்டாகும் வலிகளுக்கும் தடவ, நன்மை பயக்கும்.

## கருவூமத்தை—Karu-umattai.

| | | | |
|---|---|---|---|
| Beng. | Kata dhatura. | Arab. | Jouzmaleavad |
| Hindi. | ,, | Tel. | Nalla ummetta. |
| Dec. | ,, | | |

இஃது ஊமத்தையைவிட மிகுந்த வன்மையுள்ளது. (வெண்ணீர்), சுக்கிலத்தையும், பாதரசத்தையும் கட்டும்: உடலுக்கு அழகைத்தரும். பெருநோய், வியர்வை, தினவு, முனி சுரம் இவைகளைப் போக்கும்.

விந்திரதங் கட்டுமெழின் மேனிதருங் குட்டமொடு
வந்த வியர்ப்பரிப்பு மாற்றுங்காண்—முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருமத்தம் நல்மூலி காண். (அ.கு.)

வ - கு: கருவூமத்தன் இலைரசம் 410 கிராம் தேங்காயெண்ணெய் 816 கிராம் இவ்விரண்டும் சேர்த்துக்காய்ச்சி, இரசம் சுண்டுந்தறுவாயில் ஓமப் பொடி 34 கிராம் கூட்டி மெழுகுபதத்தில் வடிகட்டி, அதில் கருப்பூரம் 34 கிராம் பொடித்துக் கரைத்துப் பூசி, வெந்நீர் விட்டு உருவ குத்தல் குடைதல் போம்.

## பொன்னூமத்தை--Pon-umattai.

இதற்குப், புண் கிரந்தி, நாள்பட்ட கிராணி, கருப்பாதிசாரம், பித்தசுரம், நீங்காவிடசுரம், அதிசாரம் முதலியவற்றைப் போக்கும் குணம் உண்டு.

பொன்மத்த முண்டாகிற் பூவையரே! புண்கிரந்தி
தொன்மைக் கிராணிவரு சூசிகா—வன்பேதி
பித்த சுரத்துடனே பேரா விடசுரமும்
சுத்தவதி சாரமும்போஞ் சொல். (அ.கு.)

## மருளூமத்தை—Marul-umattai.

இதனால்; குளிர்க்காய்ச்சல், சலக்கோவை, அற்பவீரியமுள்ள விடங்கள், அக்கினிமாந்தம், வாததோடம் இவை நீங்கும்.

சீதசுரம் நீரேற்றஞ் சில்விஷங்கள் மந்தத்தோ
டுதையிவை யெல்லா மொழியுங்காண்—போத
இருளுருங் கூந்த லெழின்மாதே! கான
மருளுமத் தைக்கறிந்து வை. (அ.கு.)

குறிப்பு: மருளூமத்தைக்காய், மற்றவூமத்தங்காய்களைவிட, உருவத்தில் சிறியதாயும் நீண்டிருக்கும் உருண்டிராது. நீண்டு கறுத்துக் கனத்திருக்கும். விதைகளும் சிறியவை.

## 82. ஊழலாற்றி.—Uzhalatri

வே-பெ : ஊழலத்தி.

இஃது ஒரு மரவகுப்பைச் சேர்ந்தது.

சுவை - துவர்ப்பு, தன்மை- வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : உடற்றேற்றி—வியதாபேதகாரி—Alterative.

குணம் : இதனால், மேகவிரணம், ஒட்டுப்புண், கொறுக்கு (ஆண்குறி விரணம்) சிரங்கு, அரையாப்பு, வெள்ளை, கீல் வாயு, பெருநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

அடவி வதிரூழ லாற்றி யெனுமூலி
படவிரணம் புண்கொறுக்கை பாமை—கடிதடத்தால்
வந்தவரை யாப்புவெள்ளை வாதப் பிடிப்புகுட்ட
மிந்தவகை நோயகலு மெண். (அ.கு.)

வ ·கு : இதன் பட்டையைக் குடிநீர் செய்து, காலை மாலை இருவேளை யாகக் கொடுத்துவர, மேற்கண்ட ரோகங்கள் தணியும்.

இப்பட்டை உடைய ஊழலாற்றித் தைலத்தைத் தலைமுழுகி வர, புண் வெட்டை முதலிய மேகமும், தினவுகளும், பெருநோயும் அகலும் (சித்தர் உறை விளக்கத்திற் காண்க.)

## 83. எட்டி—Etti (Yetti).

வே-பெ : காஞ்சிரம், விடமுட்டி (விஷமுஷ்டி).

Strychnos Nux-vomica,

Eng. Nux-vomica, Strychine Tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mushti | Cing. | Goda–Kaduru |
| Mal. | Kanjiram | Arab. | Izaraqi |
| Kan. | Mushti | Per. | Kocholah |
| Sans. | Visha–Mushti | Hind. | Kuchla |
| | Kupilu, Kulaka. | Guz. | Kuchla |

இம் மரம், இந்தியாவின் வெப்ப பாகங்களிலும், சிங்களம், கொச்சி சைனு, தென் ஆஸ்ட்ரேலியா, கீழ் இந்தியத் தீவுகள் ஆகிய இவ்விடங்களி லும், தன்னிச்சையாய்க் காடுகளிலும், நாடுகளின் சில பாகங்களிலும் பயிராகும். இது சுமார் 40 முதல் 50 அடி வரையில் வளரும். இதன் பழம் பார்வைக்கு மிக அழகாகவும், செம்மை கலந்த மஞ்சள் நிற மாகவும், உள்பாகம் வெண்மையாகவும், பசப்பசப்பாயும், விதைகள் நெடுக்கில் அமைக்கப்பெற்றதாகவும், 2 முதல் 5 விதைகள் உள்ளதாகவும் இருக்கும்.

ப-உ : இலை, பழம், விரை, மரப்பட்டை, வேர்ப்பட்டை.

சுவை : இலை-கைப்பு, பழம்-கைப்பு, வித்து-கைப்பு, பட்டை (மரம் வேர்)-கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

| | |
|---|---|
| செய்கை : | அழுகலகற்றி—தாதுக்ஷணரோதி—Antiseptic. |
| | அகட்டுவாயுவகற்றி—உதரவாதஹரகாரி—Carminative. |
| | நீர்மலம்போக்கி—விரேசநி—Purgative |
| | உரமாக்கி—பலகாரி—Tonic. |
| | வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulnnt. |
| | சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diur eic. |

**குணம்** : வளிக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தும் நரம்புகட்கு வன்மை தரும். வாந்தி, கழிச்சல் இவைகளையுண்டாக்கும்.

**வ-கு** : (i) நீரில் இலைகளைச் சேர்த்துக் காய்ச்சி, வளிநோயினருக்கு நீராட்டலாம்.

(ii) இளந்தளிரை, சீலையில் முடிந்து, அடுப்புக் கும்பியில் செருகி, வெந்த பின் எடுத்து, அம்மியிலிட்டு அரைத்து, அதனோடு குளிர் வெண்ணெய் கூட்டிக் குழைத்துக், கட்டிகளின் மீது தடவிவரக் கட்டிகள் நாளுக்கு நாள் உள்ளே அழுந்திவிடும்.

## பழரசம்.

பழங்களை வரகு வைக்கோலில் வதக்கி, ஓட்டையும், கொட்டைகளையும், நீக்கி, உட்சதையைமாத்திரம் ஒரு துல்லிய சீலையிலிட்டுப் பிழிந்து எடுத்த ரசத்துடன், நேர் எண்ணெய் கலந்து காய்ச்சி வடிகட்டி கீல்வீக்கங்கட்குப் போடலாம்.

பெருநோய் உள்ளோர்க்குக் கொடுக்கப்படும் சில பற்பம், செந்தூரம் மாத்திரை போன்றவைகட்கு இதன் பழச்சாறு துணையாகக் கொள்ளப் படும். பெரு எட்டித்தைலம், சிறு எட்டித்தைலம் செய்யும் முறையைச சித்தர் உறையில் விளக்கம் காண்க.

## வித்து.

இது வட்டமாகவும், நடுவில் ஒரு குழியுடையதாகவுத் இருக்கும். அக் குழியிலிருந்து மேல்பக்கமாக வரவரக் கனத்தும், கொட்டையின் மேற்புறம் பற்றியிருக்கும் தோலில் பட்டுப்போன்ற மினுமினுத்துள்ள சுணையுமிருக்கும். உட்பாகம் மிகக் கடினமாகவிருக்கும். எளிதில் உடையாது. கொட்டையின் மைய அளவு ஓர் அங்குல கனம் முதல் கால் அங்குலம் மட்டும் இருக்கக் காணலாம்.

**குணம்** : இதனுல், கைக்கறுப்பு, சந்நி, கடிநஞ்சு வாதவலி,* கட்டி, கரப்பான், மயக்கம (மூர்ச்சை). சுரம். ஐயசுரம், துத்திரோகம், சொட்டு நீர், நீர்க்கோவை முதலியனபோம். கழிச்சலை உண்டாக்கும்.

பெரு அளவில் கொள்ள, வாந்தி கழிச்சலை உண்டாக்கிப் பின் கை விரல்கள் துடித்தலும், நடுக்கலும, கொருக்கு வலிபோல் சொத்தலோடு இடைவிட்டுவிட்டு வலிக்கும். போகப்போக இடைவிடாது முதுகைப் பின்னுக்கு வில்லைப்போல வளைத்து வளைத்து (குதிரை) வலியுண்டாகும். தக்க மருத்துவம் செய்யாவிடில் கொல்லும்.

கைக்கறுப்பு சந்நி கடிவிடங்குட் டுதைவலி
எய்க்கவரு தாதுநட்டம் என்பதும்போம்—மைக்கண்ணுய் !
கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமில்
எட்டிமரக் கொட்டையினு லே.

(அ,கு.)

*வாதவலி என்பது முன்னந்தண்டு நரம்பு, இவைகளின் துர்ப்பலத்தை அனுசரித்து வருகின்ற நோய்கள் பக்ஷவாதம், உதறுவாதம், காக்காய் வலி, தனுஸ்தம்பவாதம், அமரகண்டம், குமரகண்டம். பிரமகண்டம் முதலியனவாம்.

வ-கு: கொட்டையைப் பொடித்து தனிப்படக் கொடுப்பது நம் மருத்துவத்தில் கூறவில்லை. ஆயினும், மேனாட்டு மருத்துவர் வழங்குகின்றனர். அவ்விதங்களைப் பிற்குறிப்பில் கண்டுகொள்க. இந்நாட்டு மருத்துவத்தில் இக்கொட்டைகளைக்கூட்டிச் செய்யப்படுகின்ற மருந்துகளில் இஃதும் ஒன்றாகச் சேர்த்து வழங்கப்படும். அவ்வித மருந்துகளால் மேற்கண்ட நோய்களும் இதர நோய்களும் நிவர்த்தியாவது, ஒவ்வொரு சிறந்த நாட்டு வைத்தியர்களின் அனுபவம். உதாரணமாக இக்கொட்டை சேர்ந்துள்ள சில அரிய மருந்துகளின் பெயர்களை அடியிற் காண்க:—

(1) குடித்தைலம், முடித்தைலம், பிடித்தைலம், துளைத்தைலமாக வழங்கப்படும்.மர மகாவிடமுட்டித்தைலம்."

(2) (3) பிடித்தைலமாக சிறுவிடமுட்டித்தைலம், இலகுவிடமுட்டித்தைலமும் (தேரையர் தைலவர்க்கச் சுருக்கம்).

(4) இரசகெந்தி மெழுகு புலிப்பாணி 500.

(5) நந்திமை (சித்தர் உறை விளக்கம்).

(6) மூசாம்பரப்பத்து (கீல்வாதம், மூட்டுவீக்கம் இவைகளுக்கும் வழங்கப்படும்) (ஷை நூலைப் பார்க்க).

### மேனாட்டு மருத்துவ முறைப்படி.

வ-கு: எட்டிக்கொட்டைத்தூள்—இதில் 65 மி.கி. முதல் 650 மி.கி வரையில் படிப்படியாய் உயர்த்தி, நாள் ஒன்றுக்கு 2, 3 தரம் கொடுக்கப்படுகிறது.

இதனால், பக்கவாதம், உதறுவாதம், காக்கைவலி, நரம்புகளைப்பற்றிய நோய்கள், சுரம் நீர்க்கோவை, பாண்டு ஆகிய நோய்கள் தீரும். உடலுக்கும் நரம்புக்கும் வன்மை தரும் என்பர்.

### எட்டிக் கொட்டை ஊறல் குடிநீர்

எட்டிக்கொட்டைத்தூள் கிராம் 2, வெந்நீர் அவுன்ஸ் 12, ஒரு மணி நேரம் ஊறவைத்து இதில் ½ அவுன்ஸ் வீதம் நாள் ஒன்றுக்கு 3 தரங் கொடுக்க நீரேற்றம், நரம்புகளைப்பற்றியுண்டாகும் நோய்கள் போம். உடலுக்கு ஊட்டம் தரும் என்பர். ஆனால், இதன் செய்கையை வெகு ஜாக்கிரத்தையுடன் கவனிக்கற்பாலது.

### எட்டிக் கொட்டை டின்சர்

ரெக்டிபைட் சாராயம் அவுன்ஸ் 20-ல் எட்டிக்கொட்டை அவுன்ஸ் 2 சேர்த்து அவித்து உடனே உலர்த்தி, நுண்ணிய பொடி செய்து சாராயத்திலிட்டு 48 மணி காலம் ஊறவைத்து, பெர்க்கலஷன் முறைப்படி வடிகட்டி இதில் 10–20 துளி வீதம் கொடுத்தால், நரம்புகளுக்கு வன்மை உண்டாகுமென்றும் கூறப்படுகிறது.

### எட்டிக் கொட்டைச் சத்து

எட்டிக்கொட்டையை ரெக்டிபைட் சாராயத்தில் பிட்டுப்போல வேகவைத்து உலர்த்திப் பொடியாக்கிக் கைப்பு நீங்குமட்டும், கொஞ்சங்கொஞ்சமாக ஷை சாராயத்தை விட்டுக்கொண்டேவந்து பிறகு, அதைக் காய்ச்சி வாலையில் இட்டு வடித்து, அடியில் தங்கியுள்ளதைச் சலயந்திரத்திலிட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி இதில் 16 மி.கி.—65 மி.கி. கொடுக்க, அக்னி மந்தத்தை நீக்குவதில் சிறப்புடையதெனக் கொள்ளப்படுகிறது.

### எட்டிக் கொட்டை உப்பு

எட்டிக்கொட்டையிலிருந்து எடுக்கும் உப்புக்கு ‘ எட்டிக்கொட்டை உப்பு, என்று பெயர். இது சிறு மணலைப்போலும், பழுப்பு நிறமாய், வாசனை யற்றதாய், மிகக் கைப்பாயுமிருக்கும். நீரில் கரையாது. இது கொடிய நஞ்சாதலால், அளவறிந்து கொடுத்தல் வேண்டும்.

இது பக்கவாதம், கண்புகைச்சல், அந்திமாலை, பயித்தியம், கூத்தாடும் சந்நி, ஐயசுரம், துத்திரோகம், காக்கைவலி, சாராயக்குடியால் நேரிடும் விடம், குளோரபாரவிடம், பாம்புக்கடி, சூதகக்கட்டி, முதலியவைகளை நீக்குமென்பர் மேனாட்டு மருத்துவர்.

அளவு (dose)—1 மி.கி. நாள் ஒன்றுக்கு 3 தரம் கொடுக்க பலகாரி. 1 மி.கி., 2 மி.கி. 5 மி.கி. கொடுக்க வெப்பமுண்டாக்கியாகும்.

இதைக் கொடுத்துவரும்போது சதைகளுக்கு இசிவு கண்டால் உடனே நிறுத்திவிடவேண்டும்.

### மரப்பட்டை.

இதன் மேல்புறணிகளைச் சீவி வெய்யிலில் உலர்த்தி, நுண்ணிய பொடி செய்து 65 மி.கி.—130 மி.கி. எடையளவு சுரங்கட்கும் வலிநோய்கட்கும் இது சிலரால் கையாளப்பட்டு வருகிறது.

65 மி.கி.—130 மி.கி. எடை பட்டையுடன் உப்புக்கல் 1 சேர்த்து, மென்று தின்னும்படிகொடுக்க, தேள் நஞ்சு நீங்கக் கண்டிருக்கிறோம்.

இப்பட்டையைச் சேர்த்து செய்யப்படும் தைலங்களை, தோலைப்பற்றிய நோயிலும் பெருநோயிலும் பூச்சுத் தைலமாக வழங்கலாம்.

### வேர்ப்பட்டை

பண்பு—இது (விடபேதி) ஊழி, முப்பிணி, காதடைப்பு, சூதகவலி, வளி நோய்கள், வலி, நஞ்சு முதலியவைகளைப்போக்கும்.

### விடபேதி—காதடைப்பு—சந்நி-வேர்வைதீர
### எட்டிவேர்ப்பட்டைச் சூரணம்

வ-கு. : எட்டியின் வடவேர் மேற்றோலை எலுமிச்சம்பழரசம் விட்டு அரைத்துப் பொடியாக்கியதை, கடலை அளவு சிவனார்வேம்பும், தும்பையும்,

சேர்ந்த குடிநீரில் கூட்டிக்கொடுக்க, மேற்கண்ட நோய்கள் தீரும். வறுத்த அரிசிக் கஞ்சியைக் கொடுக்கவேண்டும். (அகத்தியர் பரிபூரணம்—400.)

### சூதக சந்நிக்குக் குடிநீர்

சுமார் ஒரு வராகனெடை வடவேர்ப்பட்டையைச் சிதைத்து, கொதிக்கின்ற ஆழாக்கு வெந்நீரில் ஒரு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, நாள் ஒன்றுக்கு ஒருமுறை 700 மி.லி. ஊறல் குடிநீரைக் கொடுக்க, சூதக வலிபோம்.

### எட்டிவேர்ப் பொடி

குணம்.—இதன் நுண்ணிய பொடியை மூக்கிலிட, கடிநஞ்சுகள் தீரு மென்பது பல நூலாசிரியர்களின் கருத்து (சத்தி—ஆரூடம்).

ஆலவிடம் ஒக்கும் அருந்தக் கடிதீரும்
ஞாலமதில் பித்தகுணம் நாசமாம்—ஆலைக்கோல்
அட்டியபா காமொழியே ! யானவிட மூட்டியெனும்
எட்டி மரவே ரிது.

(அ.கு.

**எட்டி வித்து.**

**குறிப்பு.**—இதற்குக் காமவிச்சையை எழுப்புதல், பலத்தைத் தரல், தீபனத்தை உண்டாக்கல் ஆகிய செய்கைகளும் இருப்பதனுல், சிலர் காம இச்சையைப் பெருக்கச் செய்யும் பொருட்டே, இதைச் சிறு அளவாக உட்கொள்ளத் தொடங்கி நாளடைவில் சிறு அளவைக் கொஞ்சங் கொஞ்சமாக உயர்த்திக்கொண்டே வருகின்றனர். இதனுல், அவர்கள் கொண்ட கருத்து முற்றும் நிறைவேருது, பெண் இச்சையே அடியோடு நீங்கக் கண்டிருப்பதுடன், வெண்ணீர் (சுக்கிலம்) நீர்த்து அடிக்கடி வெளிப்படுவதையும் கண்டுள்ளோம்.

இதை அளவிற்கு மிஞ்சி கொள்ளின், முதல் முதல் ஒருவித ஆயாசம் தோன்றி மூச்சு அடைப்படுவதுபோலிருக்கும். பிறகு முன்னிசிவு பின்னிசிவு போன்ற நோய்களின் முழுக் குறிகுணங்களும் காணும். நாடி படபடத்து நடக்கும். உடல் வெப்பமடையும். காது கேட்கும் தன்மையும், கண் பார்க்கும் தன்மையும் மிகக் கூர்மையாயிருக்கும். இவ்வலி 1 அல்லது 2 நிமிடநேரம் இருந்து விட்டுவிடும். பின்பு ஆயாசத்தையும், வியர்வையையும் உண்டாக்கும். மறுபடியும் இவ்வலி வந்து, சிறிது நேரத்தில் விடும். இப்படி விட்டுவிட்டு வந்து அடிக்கடி ஆளைத் துன்புறுத்திக் கடைசியில் உயிரைப் போக்கும். ஆயினும், கடைசிவரையில் தன் சுயபுத்தி மாத்திரம் மாறுவதில்லை.

**இதை உட்கொள்ளக்கூடாத காலங்கள்.**—பக்கவாதம் நேரிட்ட உடனேயும், இவ்வாதம் காலைப் பற்ற நேரிட்ட காலத்தும் உபயோகிக்கக்கூடாது.

இதற்கு எதிர் பொருள்கள் : (1) இரசம், (2) பூரம், (3) வீரம், (4) துவர்ப்புப் பொருள்கள்.

---

## 84. எரிசாலை—Erisalai.

**செய்கை** : வாதமடக்கி—வாதஹரகாரி—Anti-Vata

**பண்பு** : இதனுல், தனுஸ்தம்பவாதம், கீல்குத்தல், வாதகோபம் நீங்கும்.

"பூவில் எரிசாலைப் பூண்டுக் கிழுப்புவலி
கூவியமுஞ் சூலையனி லங்குறையும்." (அ. கு.)

## 85. எருக்கு—Erukku.

**வே. பெ. அருக்கன்.**

Calotropis gigantiea.

(Perocera)

Eng. Mudar.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Jilledu-chettu | Arab. | Usher |
| Mal. | Erukka | Hind. | Ak |
| Kan. | Yakkeda-gida | | Akan |
| Sans. | Arka | | Akond |

இஃது வெப்பநாடுகளில் எங்கும் தானே பயிராகும் செடி. இதில் சில ஓங்கி வளர்ந்து அடிகனத்து சிறுமரம்போல் தோன்றுவதுண்டு. வெள்ளைப் பூ, சிறிது நீலம் கூடிய பூ இவற்றை உடைய இருவகுப்புகளுண்டு. வெள்ளைப் பூ பூக்கும் செடியை வெள்ளெருக்கு என்பர். இஃது இந்தியாவின் வெளிகளில் தன்ச்சையாகப் பயிராகும் செடி வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ: இலை, பூ பால் பட்டை, வேர்.
சுவை—கைப்பு, காரம், மதுரம், தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

இலை.

| | |
|---|---|
| செய்கை | புழுக்கொல்லி—கிருமிநாசநி—Anthelmentic. |
| | உடற்றேற்றி—வியதாபேதகாரி—Alterative. |
| | மலமிளக்கி—மலகாரி—Laxative. |
| | வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant. |

குணம்.—எருக்கிலையினால், எலிக்கடி நஞ்சு, பாம்புநஞ்சு, பெருநோய், ஐய நோய், வயிற்றுப்புழு, ஐவகைவலி, கில்வீக்கம், வளி, அக்கினி மந்தம், மலக்கட்டு இவைபோம்.

எலி விடங் குட்டமைய மேறு கிருமி
வலிசூலை வாயுவிட மந்தம்—மலபந்தம்
எல்லா மகலு மெருக்கிலை யைக்கண்டால்
வில்லார் நுதலே! விளம்பு. (அ.கு.)

வ-கு.—இலையை வதக்கிக் கட்டிகளுக்குக் கட்ட அவை பழுதுத்டையும். செங்கலிலைப் பழுக்கக்காய்ச்சி, அதன்மீது எருக்கன் இலைப்பழுப்பை அடுக்கி குதிக்கள்ளான் எழும்பியுள்ள காலை அதன்மீது வைத்துச் சூடுதாங்கும்படி அழுத்திவர அது மறையும்.

தேன் சேர்த்து வயிற்றுப்புழு போக்கக் கொடுக்கலாம்.

இலைகளை ஒன்றன்மீது ஒன்று இருக்கும்படி அடுக்கிச் சுருட்டி. ஒரு புறத்தை ஒழுங்குப்பட அறுத்துத்தள்ளி, வேப்பெண்ணெயைக் காயவைத்துத் துவைத்து ஒற்றமிட, ஐயத்தாலும், வலியாலும் பிறந்த நோய்களும் இசிவுகளும் போம்.

இதன் சாற்றில் 2 முதல் 5 துளி, தேள் பாம்பு விடக்கடிகளுக்கு உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இலையை உலர்த்திப் பொடிசெய்து ஆறாத புண்களுக்குப்போட, சீக்கிரத்தில் புண்கள் உலரும்.

உலர்ந்த பழுப்பைப் பாறையுப்புடன் சேர்த்து வறுத்து, முறித்தபாலுடன் கொடுக்க, கல்லீரல், மண்ணீரல் வளர்ச்சி, பெருவயிறு தீரும்.

எருக்கு.

மன்னனையுங் கையெடுக்க வைத்தெயிற்றி னையகற்றி
யுன்னு பிணிப்பணியை யோட்டுதலாற்—சொன்னேன்
எருக்கெனவே பூமி யினிலே விளங்கும்
அருக்க மருக்கனென லாம். (தே. வெண்பா.)

எருக்கு, வலி (வாத) நோய்களுக்கு நன்மருந்தாகும்; பல நோய் களைப் போக்கும்; ஐய (கப) நோய்களாகிய இருமல். இரைப்பு என்னும் இவைகளையும் ஒட்டிவிடும்.

## பூ

| | |
|---|---|
| செய்கை : | கோழையகற்றி-கபஹரகாரி—Expectorant |
| | பசித்தீயுண்டாக்கி-ஜடராக்னிவர்த்தநி—Stomachie |
| | செரிப்புண்டாக்கி-போசனகாரி—Digestive. |
| | உரமாக்கி—பலகாரி—Tonic. |

**பன்பு :** பூவினால், இரைப்பு இருமல் தீரும். ஆண்மையுண்டாகும் பூச்சாறு அப்பிரகத்தைத் தூய்மை செய்ய உதவும்.

**வ-கு ;** பூ ஒன்று அல்லது இரண்டு பங்கு மிளகு ஒரு பங்கு, கிராம்பு அரைப்பங்கு சேர்த்து அரைத்து, மிளகு அளவு உருட்டிக் கொடுக்க, கடின இப்பு உடனே தணியும.

உல்ர்ந்த பூ 125, கிராம்பு, சாதிக்காய், சாலபத்திரி வகைக்கு தோலா ஒன்று பன்னீர் விட்டரைத்து, மிளகளவு மத்திரை செய்து உட்கொண்டு, உடனே கொஞ்சம் பாலைக் குடித்துவர, வீரியமுண்டாகும்.

## பால்

| | |
|---|---|
| செய்கை | தப்புண்டாக்கி-ரேபண்காரி—Rubofacient. |
| | நாற்றமகற்றி-பூதிகந்தநாசகி—Deodorant. |

**குணம்**—வெள்ளெருக்கம் பாலால், ஐவகை வலிகளும், வலிநோய் கள், எலி நஞ்சு, குளிர்சுரம் இவைகளும் போம். கட்டிகள் கரையும்.

### வெள்ளெருக்கம் பால்.

வலியின் வலிகளுக்கு மாவாத சந்நி
எலியின் விஞ்டசுரங்க ளெல்லாம்—வலியற்றுக்
காலைத் தொழுதே கடற்சேரும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவார்க்குப் பார்.

### எருக்கம்பால்.

எருக்கம்பாற் கட்டிகளை யேக்ரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராச்—செருக்கான
சந்தி வலிதீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூரம்
முன்ன முடிக்குமென வோது. (அ.கு.)

வ-கு.—பாலை, எலிநஞ்சு, சுளுக்கு, கட்டி, வெட்டையாலுண்டான கீல் வாயு, நரித்தலை வாயு இவைகளுக்குப் பற்றிடலாம், பல் நோய் பல் சொத்தை, பல் ஈறுகட்டு இவைகளுக்குப் பாலைத் தொட்டுவைக்கலாம்.

பாலை உலர்த்தி 65 அல்லது 130 மி.கி. பனைவெல்லத்தில் வைத்துக் கொடுத்து உப்பில்லாப் பத்தியம் வைக்க, எலிக்கடி நஞ்சு நீங்கும்.

பாலை முதன்மையாகக் கொண்டு செய்யப்படுகின்ற அர்க்கக்ஷீரத்தைலம், மகாவாத நோய்களைக் கண்டிக்கும்.

இப் பால் " அண்ட அருக்கன் செய்நீர் ,, செய்ய உதவும்.

பட்டை

பட்டையிலிருந்து நார் உரித்தெடுத்து உபயோகிக்கலாம்.

கற்பமுறை பெண்போற் கணவனெனும் பண்டிதன்சொல்
கற்ப முறைக்குக் கடுகுணவி—கற்பமுறை
மூவருக்கங் கட்டை முதலொடுநன் மாத்திரமன்
மூவருக்கங் கட்டையது முன். (தே.ய.

(பொ - ள்.) முதிர்ந்த பழைய எருக்கம்பட்டையின் வேர் முதலான வற்றை, ஒரு நெல் அளவில் தண்ணீரில் கற்பமாய் உண்டால், வளிப்பிணி (வாதம்) நீங்கும்.

மேற்படி பொடியைத் திப்பிலியுடனும் மிளகுடனும் உட்கொள்ளில், முறையே வெறிநோயும் ஐயநோயும் ஒழியும்.

வெள்ளெருக்கு

வெள்ளெருக் கின்புற வேருமிப் படிசெய்து
கொள்ளவே விருச்சிகக் கூட்டமாந் தேட்குல
மனைத்தினுக் குங்கொடுத் தருளலா முண்மையே. (தே.கா.)

பொ-ள்.) வெள்ளெருக்கம் வேரை வெள்ளாட்டு நீரில் ஊற வைத்து, உலர்த்திப் பொடியாக்கி, தேள்கடிக்குக் கொடுக்கில், அது குணம் தரும்.

வேர்ப்பட்டை

| | |
|---|---|
| செய்கை : | வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge. |
| | உடற்றேற்றி—வியுதாபேத்காரி—Alterative. |
| | வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulan |
| | உரமாக்கி—பலகாரி—Tonic. |
| | வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaph ic. |
| | வாந்தியுண்டாக்கி—வமனகாரி— Emetic. |

குணம் : இது நாட்பட்ட கீல்வாயு, குட்டம், மேகப்புண், மேகப்புடை, நீர்க்கோவை போக்கும்.

மேலும், இலை, பால் இவைகளால் நீங்கும் நோய்களையும் விலக்கும்.

வ - கு : வேர்ப்பட்டையைப் பொடி செய்து நாள் ஒன்றுக்கு 2, 3 முறை 2, 3 குன்றி அளவில் கொடுக்க, சீதக் கழிச்சல் போம். வயிற்றுப்பிடுங்கல் குணமாகும்.

வேர்ப்பட்டையைக் குடிநீர் செய்து கொடுக்க, வேர்வை தோன்றிச் சுரந் தணியும்.

மணற்பாங்கில் பயிரான, முதிர்ந்த வெள்ளெருக்கன் வேரை, சித்திரை, வைகாசி மாதங்களில் சேகரித்து மேற்புறணியை நீக்கி நிழலிலுலர்த்திப் பொடி செய்து, 65 மில்லி கிராம் முதல் 325 மி.கி. வீதம் தினமொன் றுக்கு 2 தரம் கொடுத்து வர, பெருநோய்ப் புண்கள் முதலிய மேற் குறிப்பிட்ட பிணிகள் போம்.

இதை, மேனாட்டு வைத்தியர் Ipecac வேருக்குப் பதிலாகக் கையாளு கின்றனர் என்று கூறப்படுகிறது.

எருக்கன் செடி முழுமையும் பொடித்து நெல்லெடை எடுத்து, அவ் வெடைக்குச் சுக்கு, திப்பிலி அல்லது மிளகு இவற்றைத் தனித்தனி 40 நாட்கள் உட்கொள்ள, முறையே வளி தீ ஐயநோய்க் கூட்டங்கள் ஒழியும்.

## 86. எலிக்காதிலை—Elikkadilai

Evolvulus marginatus.

| | |
|---|---|
| Sans : { Virkshakarni / Akhukarani | Bomb : Undirkani. / Tel. : Toinvatali. |

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

குணம் : இது மலபந்தஞ் செய்யும் ; நாவறட்சி, முக்குற்றம், கழலை, வயிற்றில் உண்டாகும் நோய்கள், பாண்டு, சூலை, சுரம், பகந்தரம், தமரக நோய், புழு, வெள்ளை இவைகளைப் போக்கும்.

வ - கு : இதைச் சமைத்துண்ண மேற்கண்ட நோய்கள் தீரும்.

---

## 87. எலியாமணக்கு—Eliyamanakku

வே. பெ. ஏரிக்கரைக்காட்டாமணக்கு.

சிமைக்காட்டாமணி உரலாமணக்கு.

Jatropha kurkas.

Eng : Physic Nut.

| | |
|---|---|
| Tel. Pépàlamu | Arab. Dande-nahri* |
| Mal. Kàṭṭàvaṇakka | Hind. Jangli-araṇḍi |
| Kan. Beṭṭada-haralu | Duk. Jangli-yarandi |
| Sans. Parvata-yeraṇḍa | |

இச் செடி, தென்னிந்தியாவிலும், கொங்கணத்தின் தென் பாகத்திலும், ஏரி, குளக்கரைகளிலும் பயிராகக் கூடியது. ஆகையால், இதற்கு ஏரிக்கரைக் காட்டாமணக்கு என்னும் பெயரும் உண்டு.

சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- புழுக்கொல்லி—க்ருமிநாசனி—Anthelmintic.
- பாறபெருக்கி—க்ஷீரவர்த்தநி—Galactagoue.
- குருதிப்போக்கடக்கி—ரதஸ்தம்பனகாரி—Styptic.

குணம் : எலியாமணக்குச் செடியினால், உடல்நோதல், சூலை, குன்மம், முளை மூலம், குருதிமூலம், கழல்புண், மேகம், எலிநஞ்சு, புண், வயிற்று வலி, ஈரல் நோய் ஆகிய இவைகள் நீங்கும். கழிச்சல் உண்டாம். காட்டாமணக்கின் செய்கைகளும் இதற்கு உண்டு.

உரலா மணக்குக் குரத்தவலி சூலை
விரைவான குன்மமும்போம் விள்ளப்—பிரிவாம்
முளைமூல மோடிரத்தம் முன்கால் விரணங்
கொளுமேக மெல்லாம் போங் கூறு. (அ.கு

இதன் விதையிலிருந்து எடுக்கப்டும் நெய் கழிச்சலே உண்டாகும். நிறம் வைக்போலின் நிறத்திற்குச் சிறிது குறைவு.

வ-கு: இனப் பூச, கீல் பிடிப்பு, ரக்கவாயு நீங்கும். இதை, வீரணம், புரைபோடிய புண், ஊண் சதை வளர்கின்ற புண், காயப்புண், படை இவைகளுக்கும் பூசலாம்.

இதன் வேரை, ஊரல் குடிநீரிட்டுக் கொடுக்க, குழந்தைகட்குக் காணும் வயிற்றுப் பொருமல் நீங்கும். இது, கண்டு கண்டா யுண்டாகின்ற வீக்கங்களைக் கரைக்கும்; கழியச் செய்யும்.

இதன் பால் எலி நஞ்சு, விதை, வீக்கம் பல வித நஞ்சுகள் முதலியவற்றை நீக்கும்.

எலியா மண்க்கோ எலிவிடம்வித் துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பார்ல்—வலுபேதி
யுண்டாகச் செய்யு முயர்பீலி கங்குன்மம்
அண்டாம லோட்டுபிதை யாய். (அ.கு.)

இதன் இலையைக் கசக்கிய சாற்றை 1, 2 துளி கண்ணில் விட, கண் படலத்தை மாற்றும்.

இதன் குச்சியைக் கொண்டு பல் துலக்கிவர, இது பல்லீறு நோய்களைப் போக்கும்; பல் வலியைக் குறைக்கும்.

இதனிலையை வதக்கிப் பிளவை முதலிய கட்டிகளுக்கு வைக்துக் கட்டச் சுகந்தரும்.

---

## ✓ எலுமிச்சை—Elumichchai.

**Citrus a cida.**

**Eng: Acid Lime**

| | |
|---|---|
| Tel. Nimma | Kan. Nimbe |
| Mal. Cheru-Naranga | Sans. Jambira |
| | Hind. Ninbu Limu |

இது, செடி எலுமிச்சை, என்றும்கொடி எலுமிச்சை என்றும் இரு வகைப்படும்; இஃது இந்தியா முழுமையும் தோட்டக்கால் பயிராகச் செய்யப்படுகிறது.

சுமார் 8 முதல் 10 அடி உயரம் வளரும். இலை, மேற்புறம் பசுமையுடன் சிறு புள்ளிகளையும் உடைத்தா யிருக்கும். இப் புள்ளிகளில் எண்ணெய் நிறைந்திருக்கிறது. இச் செடி முழுமையும் நீண்டு பசுமையுள்ள தான முட்கள் நிறைந்திருக்கும். இதன் பழத்தின் தோல், சற்று மஞ்சள் நிறமாகவும், எண்ணெய் கலந்த புள்ளிகளை யுடையதாகவும், ஒரு வித நல்ல மணமுடையதாகவும் இருக்கும். உட்பரகம் சுளைசுளையாகவும், இரசம் அதிக புளிப்புடையதாகவும் இருக்கும். காயாக இருக்கும்போது பச்சை நிறமாக இருக்கும்.

ப-உ—இலை, காய், பழம் பழரசம், எண்ணெய்.

## இலை.

சுவை–புளிப்பு, தன்மை–வெப்பம், பிரிவு–கார்ப்பு.
செய்கை–குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

## காய் பழம்.

சுவை–புளிப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு
செய்கை—குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

## தோல்.

சுவை : புளிப்பு, கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-காப்பு.
செய்கை | தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.
| அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.

### காய்.

குணம் இது, முக்குற்றம், சூலை, வாந்தி, குன்மம், இடுமருந்து, அழல் இவைகளைப் போக்கும்.

தீதெலெலு மிச்சங்காய் டேர்முத்தோ டத்தையுமுள்
வாதகப சூலையையும் மாகொடிய—சாதியெனுஞ்
சர்த்திகுன் மத்தையுமுள் தங்கமருந் திட்டதையும்
பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு. (அ.கு.

### எலுமிச்சை.

சதாப்லக் கனிகாய சமூலமு முணவே
நிதானமாய்ப் பயித்திய நிந்தையை யகலுமே

(பொ-ள்) எலுமிச்சம்பழம், எலுமிச்சங்காய், எலுமிச்சை வேர், இலை இவைகளைக் கொள்ளின், தீக்குறறத்தால் உண்டான நோய்களும், வெறி நோயும் போம்.

### சம்பீரம்—(எலுமிச்சை).

மந்திரிக்கு மந்திரியாய் மன்னனுக்கு மன்னனெனத்
தந்திரிக்கு மித்திரன்போற் சாருமே—முந்தவரு
கம்பீர மாய்ச்சரக்கின் கெண்ணியமாய் வாகடர்க்குச்
சம்பீர மாமெலுமிச் சை. (தே.கா.)

எலிமிச்சம்பழம் மந்திரி எனக்கூறும் தீக்குற்றத்தைத் தணிக்கும் ; தந்திரியாகிய ஐயத்திற்கு அன்பன்போலிருந்து அனல வளர்க்கும் (ஐயத்தை மிகுதிப்படுத்தும்.) (தே.வெண்பா.)

### பழம்.

குணம் : இது, மயசக்கம், வாந்தி, வாய்க்குமட்டல, நீர்வேட்கை, வெறி, கண்ணோய், காதுவலி இவைகளைப் போக்கும் ; நகச்சுற்றுக்கு நன்மை தரும்.

தாகம் குநகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்கொள் உன்மாதம் வீறுபித்தம்—மாகண்ணோய்
கன்னநோய் ,வாந்தியும்போங் கட்டுவா தித்தொழிலில்
முன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து. (அ.கு.)

வ-கு : சுரத்தில் உண்டாகும் வாந்திகட்கும் வாய்க்குமட்டலுக்கும் இப் பழரசத்தினால் செய்யப்படும் சாதி சம்பீரக்குழம்பு நற்பயனைத் தரும்.

இப்பழரசத்தோடு சருக்கரை கூட்டி நீர் சேர்த்துப் பெருக்கி நீர்விடாய்க்கு அருந்தலாம்.

எலுமிச்சம்பழத்தை, ரசமும் ஊறுகாயுமாகக் கற்பமுறையாய்ப் பத்தியத் துடனே ஆறுமாதங் கொள்ள, நரை திரை மாறும். பிடிப்பு, பெரு வயிறு, பக்கசூலை, முடம், வெறி, மயக்கம், மனச்சோர்வு என்பவை களும் அடியோடு நீங்கும்.

கோணத் துளையுங் குறியுளையுங் கொக்காகில்
கோணத் துளையுங் குருளைபோற்—கோணச்
சடமதியுண் மாருமற் சம்பிரக் கற்பஞ்
சடமதியுண் மாருமற் சண். (தே.ய)

பவள பற்பத்தை, இப்பழச் சாற்றுடன் சேர்த்து, சீதக் கழிச்சல் பெருங் கழிச்சல், அதிசாரக் கழிச்சல் இவைகளுக்குக் கொடுத்துவரலாம்

கழிச்சலுக்காக மருந்துகள் கொடுக்க, அடங்காத கழிச்சலும் வாந்தி யும் நேரிட்டால், சீரகத்தைக் கதன் வட்டுப் பொன்வறாவலாக வறுத்து, இதன் பழரசத்தைச் சேர்த்து நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க, உடனே வாந்தியும் கழிச்சலும் நிற்கும்.

இதனிலையைக் காடியிலிட்டு நீராகாரமாகப் பருகுவது நமது நாட்டு பழக்கம்.

---

## 89. எலுமிச்சன் துளசி —Elumichan tulasi.

**Ocimum gratissimum, Linn.**

**Eng : Shrubby Basil.**

**Tel.** Nimma-Tulasi
**Mal.** Kattu-tulluva; Kattu-tuttava
**Kan.** Râma-tulasi
**Sans.** Ajaka; Vanatulsi
**Arab.** Faranjmish
**Pers.** Raihaua Qaransul
**Hind.** Banjari*; Ram-tulsi*

இஃது இந்தியாவில் சாதாரணமாகக் கிடைக்கும்.

சுவை-கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை.
- வீக்கமுருக்கி —சோபாநாசநி —Deobstruent
- கற்கரைச்சி—பாஷாணபேதநி—Lithontriptic
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
- உள்ளழலாற்றி —அந்தர்ஸ்நித்தகாரி—Demulcent
- அகட்டுவாய் வகற்றி —உதரவாதஹரகாரி—Carminative

குணம் : இது, வீக்கம், நாட்பட்ட இருமல, சூலக நோய், கீல் வாயு முதலியவற்றைப் போக்கும்.

வ-கு : இதை அரைத்து, வீக்கம், கட்டி இவைகளுக்கு வைத்துக் கட்டினால், வீக்கத்தைக் கரைக்கும் ; அங்கு தங்கியுள்ள கெட்ட நீர்களை உறிஞ்சிக் கொள்ளும். இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, நாட்பட்ட இருமல் முதலியன போம். இது, நீர்ப்பையிலுள்ள கற்களை உடைத்து வெளிப்படுத்தும். அதைச் சார்ந்த நரம்புகளின் வீக்கத்தைக் கரைக்கும்.

இதன் குடிநீரை உள்ளுக்கும், இதன் சாற்றை மேலுக்கும், பூசிவர கீல் வாயு முதலியன தணியும்.

---

## 90. எழுத்தாணிப்பூண்டு---Ezhuttanippundu

**Launea nudiclians.**

சுவை-கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : மலமிளக்கி—மலகாரி—**Laxative**

குணம் : பழமலக்கட்டு, சீதக்கடுப்பு, கரப்பான், சொறி, சிரங்கு இவை நீங்கும்.

பழமலங்கள்சாறும் பருங்குடற்சீ தம்போம்
எழுமலச்சீ தக்கடுப்பு மேகும்—ஒழியாக்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகலும்
உரப்பாம் எழுத்தாணிக் கோது. (அ.கு.)

வ-கு : இப்பூண்டைக் கால் பலமெடுத்து ஒன்றிரண்டாய்ச் சிதைத்துக் குடிநீரிட்டுக் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

---

## 91. எள்—Ell.

வே. பெ. திலம்

**Sesamum Indicum.**

**Eng. : Gingeli oil plant.**

| | |
|---|---|
| **Tel.** Nuvulu | **Sans.** Tilam |
| **Mal.** Karuella | **Hind.** Thil. |
| **Kan.** Ellu. | |

இஃது, இந்தியாவில் ஏராளமாகப் பயிரிடப்படுகின்ற ஒரு சிறிய செடி. இதன் காயிலிருக்கின்ற ஏராளமான விதைகளைச் சேகரித்து உலர்த்தி ஒரு வித எண்ணெய் எடுக்கிறார்கள். இதற்கு நல்லெண்ணெய் என்பது பெயர்; எள்ளின் நெய் என்னும் பெயருமுண்டு. இது தென்னிந்தியாவில் உணவு செய்தற்பொருட்டும் தலைமுழுக்கிற்கும் வழங்கப்படுகிறது. இதில் வெள்ளை, கருமை, செம்மை என மூன்று பிரிவுகளுண்டு. இவைகளல்லாமல், காட்டெள்ளு, சிற்றெள்ளு, பேரெள்ளு எனவும் பல வகுப்புகளுண்டு.

ப-உ : இலை, பூ, காய், விதை.

சுவை-இனிப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-இனிப்பு.

## இலை

செய்கை | உள்ளழலகற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
| வரட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient

வ-கு: ஒன்றிரண்டு பச்சை இலையை எடுத்துக் குளிர்ந்த நீரில் அலசினால் பசை இறங்கும். இது புண்பட்ட கண்களைக் கழுவ உதவும்.

ஒன்றிரண்டு இலைகளை ஒரு உழக்கு குளிர்ந்த நீரிலிட்டு, ஊறவைத்து, தினம் இருவேளையாக 6 அல்லது 7 நாட்கள் கொடுத்துவர, சீதக் கழிச்சல் குணமாகும்.

இலையைப் பதவாடையாகச்செய்து கட்டிகளுக்குக்கட்ட, அவை சீக்கிரம் பக்குவமடைந்து உடையும்.

## பூ

இதன் பூவைக் கண்ணோய்க்கு வழங்குவதுண்டு.

## காயும் தோலும்

காயையும் தோலையும் உலர்த்திச் சுட்டுச் சாம்பலாக்கி, புண்களுக்குத் தூவ, அவை போம்.

## விதை.

செய்கை
| ருதுவுண்டாக்கி—ருதுவர்த்னகாரி—Emmenagogue
| வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
| உரமாக்கி—பலகாரி—Tonic
| சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic
| பாற்பெருக்கி—க்ஷீரவர்த்தநி—Lactogogue
| மலமிளக்கி—மலகாரி—Laxative

குணம்: இது மருந்தை முறிக்கும்; வெம்மை, காசம், ஐயம் இவற்றைப் பெருக்கும்; தொண்டையைக் கட்டும். கண்ணுக்கு ஒளியையும், உடலுக்கு வன்மையையும் தரும். குருதிப் பெருக்கை உண்டாக்கும்.

எள்ளுமருந் தைக்கெடுக்கும் எறனலாந் திண்மைதரும்
உள்ளிலையைச்சேர்க்கும் உதிரத்தைத்—தள்ளுமிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

(அ.கு.)

வ-கு: இவ்விதையை ஊறவைத்த தண்ணீரை உதிரச்சிக்கலுக்குக் கொடுக்கலாம்.

இதைப் பெரு அளவில் சாப்பிட்டால், கருவு அழிவு உண்டாகுமென்று கருதப்படுகின்றது.

விதையின் விழுது ஒரு சுண்டையளவு வெண்ணெயில் சாப்பிட, குருதி மூலம் போம்.

விதையை அரைத்துக் கொதிக்கவைத்துக் கட்டிகளுக்குக் கட்ட, அவை பக்குவமடையும்.

### எள்ளோதனம்.

எள்ளைச் சேர்த்துப் பக்குவப்படுத்திய அன்னத்தை உட்கொண்டால் ஐயப்பெருக்கம், உடல் வன்மையும் உண்டாகும்.

செப்பரிய வாதபித்தத் தீமையக லுங்கபம்
துப்பி வளரும் உடலிறுகு—முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே ! நீகேளாய்
எள்ளோ தனத்தினாலே. (அ.கு.)

### எள்ளின் நெய்

| | |
|---|---|
| செய்கை | உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent |
| | மலமிளக்கி—மலகாரி—Lexative |
| | உடலுரமாக்கி—பாஷணகாரி—Nutritive |
| | வரட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient |

**குணம்**: இது. புத்திக்குத் தெளிவு, விழிகளுக்குக் குளிர்ச்சி, உடல் பூரிப்பு, உடல் வன்மை ஆகியவற்றைத் தருவதோடு, கண்ணோய், காது நோய், தலைக்கொதிப்பு, சொறி—சிரங்கு, புண் முதலிய வைகளையும் போக்கும்; இருமலைத் தணிக்கும்; மனமகிழ்ச்சியைத் தரும்.

புத்திநயனக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் கந்தி தனியிளமை—மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலவழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று. (அ.கு

வ-கு: கூறல் எண்ணெயில் இரண்டு அல்லது நாலு உச்சிக்கரண்டி யளவு ஒவ்வொருநாளும் கொடுத்துக் கொண்டுவர உடல் பூரிக்கும் தினவு. படை, சொறி சிரங்கு நீங்கி தோல் மெலியும். இருமல் தணியும்.

ரகோழிமுட்டை வெண்கருவுடன் கலந்து, பருக்களின் மீது பூசிக்கொண்டு வா கட்டிகளின் வலி நீங்கும்.

இதையே காலையில் இருகண்களிலும விட்டுக் கட்டி தலையிலும் தடவித், தேய்த்து, காய்ந்தாறிய வெந்நீரில் அடுத்தடுத்து மூன்று நாட்கள் தலை முழுகி வர, கண்சிவபபு, கண்வலி, கண்ணில் நீர்வடிதல் கண்கூசல். இவைகளுடன் சேர்ந்த மண்டைக் குத்தல் முதலியன நீங்கும்.

மஞ்சட்கருவுடன் சேர்த்துக் கலக்கிப்பூச, தீப்புண், சுண்ணாம்புவேக காட்டுப்புண், தினவு, சொறி நீங்கும்.

### எள்ளுப் பிண்ணாக்கு

இஃது, எள்ளை ஆட்டி எண்ணெய் எடுத்தபின் உள்ள திப்பிபோன்ற ஒரு பொருள்.

**குணம்**: இதனால் கழலை, தினவு, கரப்பான், புண், நீரிறிவு இவைகள உண்டாகும்.

உள்ளிற்புண் ணுங்கிரந்தி யூரலு மிகக்கிளைத்தே
எள்ளின் பிண்ணாக்குக் கெழும்புங்காண்—விள்ளுங்
கரப்பான் விரணங் கதித்தநீர் மேகம்
உரப்பாகும் நாளும் உரை.
மலாவக மட்டுண மழைப்பிணியான
திலாவக மாக்கிடு மென்று நிச்சயமே. (அ.கு)

பெர-ள்.) பிண்ணாக்கை மோர்க் கறியாகச் செய்து புசிக்கில், அஃது உடம்பிலுள்ள ஐயத்தைக் கண்டிக்கும்.

---

## 92. (பெரிய) ஏலம்--(Peria) Elam (Elarisi).

வே-பெ. ஆஞ்சி, கோரங்கம், துடி.

Eletaria cardamomum

Malabar cardomoms.

Eng. cardamom Seeds.

Tel. Elakulu (El akya)— | Kan. Elakki
Sans. Ela.
Mal. Elattari | Hind. Elachi.

இச்செடி, ஏலக்காயின்பொருட்டுக் குளிர்ச்சியுள்ள மலைநாடுகளில் பயிரிடப்படுகின்றது. இக்காய் மூன்று பிரிவுள்ளது ; உள்ளிலும் மும்மூலையுடையது. விதை கருப்பு ; மணமுள்ளது ; மருந்துகளுக்கு மணம் தரும். இதில் வேறு வகைகளுமுண்டு. அவை பின்வருமாறு :

சுவை - கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை {
வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி—Stimulant.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி--Carminative.
பசித்தீத்தூண்டி—ஜ ராக்னிவர்த்தநி—Stomachic

குணம் : இது, தொண்டை, தாள், வாய், கீழ்வாய் இவைகளில் உண்டாகும் நோய்களையும், இருமல், கழிச்சல், நீர்ச்சுருக்கு, நெஞ்சின் கோழைக்கட்டு, சிலந்தி நஞ்சு இவற்றையும் போக்கும் ; அழலை ஆற்றும் ; வெண்ணீரைப் (விந்து) பெருக்கும்.

தொண்டை வாய்கவுள் தாலுகு தங்களில்
தோன்றும் நோயதி சாரம்பன் மேகத்தால்
உண்டை போல்எழுங் கட்டி கிரிச்சரம்
உழலை வாந்தி சிலந்தி விஷஞ்சுரம்
பண்டை வெக்கை விதாகநோய் காசமும்
பாழுஞ் சோமப் பிணிவிந்து நட்டமும்
அண்டை யீளைவன் பித்தம் இவைக்கெல்லாம்
ஆல மாங்கமழ் ஏல மருந்ததே." (தே.கு.)

அளவு : ஏலாதிச்சூரணம் : 5-10 குன்றியெடை.

ஏலம்.

...............................
.............................புண்டரிக
நாலுதிர மூக்கு நலிக்கேல நாவியொடு
நாலுதிரி மூக்குபத்து நாள்.

(பொ - ள்.) ஏலம், மிளகு, சீரகம் முறையே ஒன்று முக்கால் அரை அளவில் எடுத்து, பச்சை புனுகு கூட்டி, இவற்றிற்கு இரண்டு பங்கு பசுவின் நெய் கலந்து, பஞ்சில் தோய்த்து நாள் ஒன்றுக்கு ஒரு வேளையாய் பத்து நாள் உறிஞ்சி ஆக்கிராணம்பண்ண, மூக்கில் தோன்றக் கூடிய பீநசம், ரத்தம் கசிதல், தலைநோய் யாவும் குணப்படும்.

(பொ - ள்.) ஏலம், அதிமதுரம், செங்கழுநீர், கோட்டம், விலாமிச்ச வேர், வெட்டிவேர், சுக்கு, சந்தனம், நன்னாரி, கோரைக்கிழங்கு, பாப்படகம் முதலியவற்றை ஓர் எடையில் கூட்டி, நீர் விட்டு எட்டில் ஒன்றாய் வற்றக் காய்ச்சி அருந்தில், உடம் வெப்பு, குருவியர்வை, சுரம் முதலியன தீரும்.

### ஏலப் பொடி.

வ - கு : ஏலம் அதிமதுரம், நெல்லி, சந்தனம், வால்மிளகு இவைகளின் பொடி வகைக்கு 34 கிராம், சருக்கரை 85 கிராம் சேர்த்துக் கலந்து 2 கிராம் முதல் 4 கிராம் சேர்த்துக் கலந்து கொடுக்க, இருமல், நாவரட்சி, வயிற்றுவலி முதலியன நீங்கும்.

### ஏல வடகம்.

ஏலவரிசி, இலவங்கப்பட்டை, முந்திரிகை, திப்பிலி வகைக்கு 204 கிராம் அதிமதுாம், சருக்கரை, பேரீந்து வகைக்கு 102 கிராம் இவை களை ஒன்றுபட இடித்து சூட்டுடன் இருக்கும்போதே, கழற்சிக்காய் அளவு உருண்டை செய்து 1, 2 கொடுக்க, மாந்தம், வயிற்றுவலி, பொருமல் கழிச்சல் அழல்போம்.

### ஏல நெய்.

ஏலப் பொடி 272 கிராம் பசுவின் பால் 1,400 மி.லி., பசுவின் நெய் 1400 மி.லி., இளநீர் 700 மி.லி., இவைகளைக் கூட்டிக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்து, அதில் வால்மிளகுத் தூள் 34 கிராம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, கொத்துமல்லி, கொப்பரை, திராட்சை வகைக்கு 8 கிராம், கற்கண்டு 816 கிராம் சேர்த்துப் பயன்படுத்த நீர்வேட்கை, வயிற்றில் வரு பிணிகள் விலகும். உடல் குளிர்ச்சியடையும். குருதி பெருகும்.

### ஏலக் குடிநீர்.

ஏல்மதி மதுரஞ்செங் கழுநீர் கோட்ட
மிலாமிச்ச மிருவேலி மிசைந்த சுக்கு
மூலமிகு சந்தனநன் ஞரிமுத்த
முதிர்படகஞ் சமன்கூட்டி முன்னீர் விட்டுக்
கோலமுட னெட்டொன்ருய்க் காய்ச்சிப் பின்னர்க்
குடித்திடவே போங்குருவேர் பித்த மோடு
காலமிகு தாபசுரந் தீருமென்று
கருணையுடன் முனியுரைத்தார் காண லாமே.

## சிற்றேலம்—Chirttilam.

**Heracleamrigns Var. mult iradiatum**
**Eng : Lesser Cardamom**
**ElettariaregainsVar Mutlirdiatum**

**Tel.** Elakàya; Clakàya-vittulu

**Mal.** Elattari

**Kan.** Yalakki

**Sans.** Upakunchika

**Arab** Qaqilah; Hél; Hél-bavaå*; Kh-air-bavā*

**Pers.** Qaqilhe-khurd

**Hind.** Ilachi; Chhōti-ilàyechi

**Duk.** Chhoti-ilachi*

தென்னிந்தியாவில் மலைநாடுகளில் இதைப் பயிரிட்டு வருகிறார்கள்.

ப - உ: விதை.

சுவை - கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant and also Aromatic.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

**குணம்** : இது, மலாவர்த்தவாதம், வயிற்றுக் கொதிப்பு (பொருமல் வலி) வாயில் நீருறல், வாயினிப்பு, நீர் வேட்கை, கழிச்சல், வேர்வையுடன் கூடிய தலைவலி, மிகுந்த வறட்சி, கபம் இவைகளைப் போக்கும்.

மலவாத மோடு வயிற்றுக் கொதிப்பு
சலமூறல் வாயினிப்பு தாகம்—சலபேதி
வேர்க்குந் தலைநோய் மிகுரூட்சை ஐயமிவை
போக்குஞ்சிற் றேலம் புகல். (அ-கு)

வ - கு : ஏலக்காய் 68 கிராம், பனை வெல்லம் 170 கிராம் எடை சேர்த்து, 350 மி.லி. நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க, தீக்குற்றத்தாலுண் டாகும் தலைமயக்கம் நீங்கும்.

ஏலரிசி, சுக்கு, இலவங்கம், சீரகம் இவை ஓரெடை எடுத்து, பொடித் துத் தூளாக்கி, 17 கிராம் வீதம் கொடுத்துவர, வயிற்றுவலி, குன்மம் இவை நீங்கும்.

ஏலரிசி, ஓமம், சீரகம் இவை ஓரெடை எடுத்து இளவறுப்பாய் வறுத் துப் பொடித்து, அதில், ஒரு தேக்கரண்டி (34 கிராம்) எடுத்து உட்கொள்ள, செரியாமை நீங்கும்.

## காட்டு ஏலம்—Kattu-yelak-kay.

Amomum subulatum

Eng : Cardomom (wild)

| | |
|---|---|
| Tel. Pedda-yéal-kàyalu; Adavi-yéla-kàya | Sans. Brahata-upakunchikà |
| | Arab. Hel-Zeekh-ahar |
| | Pers. Qàqilahe-zeekh-akar |
| Mal. Pérélam | Hind. Barī-ilàchi |
| Kan. Doḍḍa-yàlakki | Duk. Bari-ilàyechi |

இது, பண்படுத்தப்படாத நிலத்தில் தானகவே வளரும் செடி

ப - உ : விதை.

சுவை - கார்ப்பு, துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்தனி
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி Astringent.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

**குணம் :** இதனால், நீங்கா வாந்தி, ஐயம், கழிச்சல், **வாய் குமட்டல்.** வெறி இவைகள் போகும்.

தீராத வாந்தி சிலேத்ம மதிசாரம்
பேரா அருசிபித்தம் பேருங்காண்—சோராமல்
காட்டேல வார்குழலே! காரம் பரிமளஞ்சேர்
காட்டேல மென்றுரைக்குங் கால்.

(அ.கு.)

**வ - கு:** காட்டு ஏலக்காயைக் குடி நீரிட்டு, வாய் **கொப்பளித்துவர,** வாய் நாற்றம், பல் அரணை, ஈற்றுபுண் முதலியன மாறும்.

காட்டு ஏலக்காய் ஒரு பங்கு, வெள்ளரி விதை 2 பங்கு சேர்த்துக் குடி நீரிட்டு, 30 மி.லி. வீதங்கொள்ள, இது சிறுநீரைப் பெருக்கி, நீரைடைபைப் போக்கும் ; வலப்பாட்டீரல் நோயைக் குணமாக்கும்.

650 மி.கி. முதல் 950 மி.கி. எடை உட்கொள்ள, **தலைவலி மாறும்.**

## மலையேலம்—Malayelam.

**Eng. Cardamom (Hilly).**

இது காடுகளிலும் மலைகளிலும் ஏராளமாக வளர்ந்து கிடக்கும்.

**ப - உ :** விதை.

**சுவை** - கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :** ஏலத்துக்குரியதே.

**குணம் :** இதனால், நாவறட்சி, வறட்சுரம், சொறி, நீர்ச்சுருக்கு, மூக்குற்றத்தால் உண்டான வறட்சி இவைகள் போம்.

தாவறட்சி தாகசுரம் நாடா தகற்றிவிடுந்
தீவறட்சி நீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண்—மூவறட்சி
கூடும் அரோசகத்தைக் கூடாமல் ஓட்டிவிடும்
நாடுமலை யேலம் நவில்.

(அ.கு.

## 93. ஏழிலைப்பாலை—Azhilaip—palai

**வே. பெ. சப்தபர்ணி**

**Eng. : Dita-bark.**

**Alstonia scholaris,**

| | |
|---|---|
| **Tel. Palagaruda.** | **Sans. Sapthaparna.** |
| **Mal. Ezilampala.** | **Hind. Datyuri.** |
| **Kan. Hala.** | |

இஃது இந்தியாவில் பயிராகின்ற மரம். இதன் பட்டை 6, 7 அங்குல கனமுடையது; இப்பட்டையின் உட்புறம் மஞ்சள் நிறமாயும், யாதொரு மணமுமின்றியும் இருக்கும் மேலும் இது பஞ்சைப்போலிருக்கும்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : புழுக்கொல்லி—க்ருமிநாசனி —Anthelmintic
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent
உரமாக்கி—பலகாரி—Tonic
முறைவெப்பகற்றி—முறைவ்யாதிரோதி—Antiperodic

குணம்: சூலை, நுண்புழு, புண் பெருநோய், குன்மம், சீதக்கழிச்சல், விரை வீக்கம், ஐயப்பெருக்கு, முப்பிணி முதலியன எழிலைப்பாலையால் நீங்கும்.

ப- உ : பட்டை, வேர்,

வ- கு : இதன் பட்டையை இடித்து, கிராம் 8, 16 கிராம் எடுத்து, உழக்கு வெந்நீரில் ஒரு மணி நேரம் மூடி ஊறவைத்து, 8 கிராம் 16 கிராம் வீதம் நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை கொடுக்க, நாட்பட்ட சீதக்கழிச்சல், சுரத்திற்குப்பின் காணும் வன்மை குறைவு இவைகள் நீங்கும்.

இதன் வேரை உலர்த்திப் பொடித்து, இரண்டு முதல் ஐந்து குன்றி எடை கொடுக்க, ஐயப் பெருக்கு, நுண்புழு, விரைவலி, சூலை, குன்மம் அண்டவாதம், குட்டம், புண், தாபம் தீரும்.

வாதபித்த கபங்களினால் உண்டாகும் கோளாறுகளும் போம்.

---

## 94. ஐவிரலி—Iyvirali

வே - பெ : ஐவேலி.

**Broyonia Laciniosa.**

**Tel Linga—Dontl.**

இஃது இந்தியாவில் வேலிகளில் பயிராகிற கொடி. இதன் இலை கையினின்று விரல்கள் பிரிவது போல பிரிந்து இருக்கும். இலையின் பின்புறமும் முன்புறமும் முசுமுசென மயிர் போலத் தோன்றியிருக்கும். இதன் விதை இலிங்கத்தை ஒத்திருக்கும்.

ப-உ : முற்றும்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை: மலமிளக்கி—லகுவ்ரேசனி Aperient

குணம் : உடலுக்கு வலுவைத்தரும்.

வ-கு : முதிர்ந்த காயைப் பொடித்து ஒன்று அல்லது இரண்டு கிராம் எடையைக் குடிநீர் செய்து உட்கொள்ளக் கழியும். உடல் வலுக்கும்.

---

## 95. ஒடுக்கன் Odukkan

வே–பெ : ஓடுக்கு.

Cliestanthus Collinus

இது தென்னிந்தியாவில் சாதாரணமாக வெளிகளில் பயிராகின்ற கொடி வருக்கங்களில் ஒன்று. இதன் கொடி வளர வளரத் துவளத் தொடங்கும். இதன் பூ மணி (Bell) உருவமாயும் நீலநிறமுடையதாயு மிருக்கும். இலையைக் கிள்ளினாலும், கொடியை உடைத்தாலும் பால் வெளிப்படும். இதில் பால் வடியுந் தன்மை இருப்பதால், இக்கொடியை இரப்பர் (Rubber) கொடி என்றும் சொல்லுவார்கள்.

ப–உ : இலை, பால்.

சுவை—கைப்பு, கார்ப்பு தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை: வீக்கமுருக்கி—சோபாநாசநி—Deobstruent

குணம் : இது, கட்டிகளையும், அரையாப்புக் கட்டிகளையும் கரைக்கும்.

வ–கு : இதன் பாலைக் கட்டியின்மீது தடவிவர, கட்டி நாளுக்குநாள் கரைந்து மறையும் ; பழுத்திருந்தால் உடையும்.

இதன் இலையை அரைத்துப் புற்கை செய்து கட்டிகளுக்கு வைத்துக்கட்டலாம். இம்மூலிகை கெந்தகத்தை நீற்றும்.

## 96. ஒதிமரம் அல்லது உதிமரம் odi or Udimaram

வே–பெ.— மோதகம்.

Odina wodier, Roxb

Eng. Rhus olina.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Oddimanu. | San. | Jingini. / Ajasringi. |
| Mal. | Odimaram. | | |
| Kan. | Shimtee. | Hind. | Jingam. / Kashmala. |

இம்மரம் இந்தியா முழுமையும் வளரும் ; இது தென்னிந்தியாவில் சாலைகளின் ஓரங்களில் அமைக்கப்பெற்றுள்ளது. இது கோடை காலத்தில் இலைகள் முற்றும்உதிர்ந்து நிழலின் றிநிற்கும் மழை காலத்தில் தளிர்க்கும் இலை உதிர்ந்த காலத்தில் பூக்கும்.

ப–உ : இலை, மரப்பட்டை, பிசின்வேர்.

சுவை—துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை:
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent
- உரமாக்கி—பலகாரி Tonic
- தொத்துப் புழுவகற்றி—ஆகந்துகரோகநாசநி—Disinfectant.
- குருதிப்பெ ருக்கடக்கி—ரக்தஸ்தம்பனகாரி—Styptic

### வேர்

**குணம்:** புண், புரை, கழிச்சல் வகைகள் இதனால் விலகும்.

புண்புரைசி ராணிரத்தப் போக்கதிசா ரங்கடுப்புந்
விண்பெறுதா கஞ்சோபஞ் சீதளமும்—நண்பிலை
அதிவிரைவாய்த் தாண்டு மணங்கே ! பருத்த
ஒதிமரத்தின் வேருக்கொதுங்கி. (அ.கு.)

### இலை

வ–கு : இதன் இலையை, மிளகுடன் சேர்த்து அரைத்து, வீக்கங்களுக்கு வைத்துக் கட்டிவர, வீக்கம் குணமாகும்.

### பட்டை

வ–கு : இதன் வேர்ப்பட்டைக் குடிநீரால், புண்கள், புரையோடிய புண்கள் இவற்றைக் கழுவலாம்.

மேலும், இதன் குடிநீரைப் பெரும்பாட்டிற்கும் வெள்ளைக்கும் பயன் படுத்தலாம்.

இதன் குடிநீரைப் பல்வலி, வாய்ப்புண், நாப்புண் முதலியவற்றிற்கு வாய் கொப்பளிக்க வழங்குவதுண்டு.

### குடிநீர் முறை

பட்டை 170 கிராம், நீர் 1500 மி.லி., இதைக் காய்ச்சி 750 மி.லி. குறைத்து, தினம் 3 அல்லது 4 வேளை, 30—65 மி.லி. வரை கொடுத்து வர, வயிற்றுப்போக்கு, வயிற்றுப்புண் இவைகள் மாறும். உடம்பிற்கு தெளிவுண்டாகும்.

இதன் ஈரமுள்ள பட்டையை இடித்து வீக்கங்களுக்குக் கட்டலாம். பட்டை ரசம் கண்நோயைப் போக்கும்.

### பிசின்

இதன் பிசினைப் பொடி செய்து 325 மி.கி. முதல் 450 மி.கி. எடை வரை கொடுக்க, இருமல் நோய் குணப்படும். இது பால் கொடுக்கும் தாய்க்கு மிகவும் நன்மை பயக்கும்.

---

## 97. ஓமம் omam

**வே–பெ : அசமோதம், தீப்பியம்.**

**Carum kopticum**

**(Ptychotis) Ajowan**

**Eng. : The Bishops weed.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Omamu. | Kan. | Voma. |
| Mal. | Omam.<br>Ayamodakam. | Sans. | Yavani. |
| | | Hind. | Ajvayam. |

இஃது, இந்தியாவில் பயிரிடப்படுகின்ற ஒரு செடி வகை ஆகும். இதை வாயில் போட்டால் உரப்பாகவும் காரமாகவும் இருக்கும். இதில் ஒரு மணமுண்டு.

**ப-உ :** விரை.

**அளவு :** ¼ முதல் ½ வராகனெடை.

**சுவை:** கார்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :**
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—**Stomachic**
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—**Antispasmodic**
- அகட்டுவாய்வகற்றி—உதாவாதராஹாரி—**Carminative**
- அழுகலகற்றி—தாதுக்ஷணரோதி—**Antiseptic**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant**
- உரமாக்கி—பலகாரி—**Tonic**
- உமிழ்நீர்பெருக்கி—திரவகாரி—**Sialogogue**

**குணம் :** இதனால், ஐயசுரம், இருமல், செரியாமாந்தம், பொருமல், கழிச்சல், ஊழி, குடலிரைச்சல், இரைப்பு, பல் நோய், பகம் (குய்யரோகம்) இவைகள் போம்.

சீதசுரங் காசஞ் செரியாமந் தம்பொருமல்
பேதியிரைச் சல்கடுப்பு பேராமம்—ஓதிருமல்
பல்லொடுபல் மூலம் பகமிவைநோ யென்செயுமோ?
சொல்லொடுபோம் ஓமமெனச் சொல். (அ.கு)

**வ-கு :** ஓமம், சுக்கு, சித்திரமூல வேர்ப்பட்டை, இம்மூன்றும் ஒரிடை பொடித்து ஒன்றுகலந்து, கலந்த எடைக்கு, நேர், கடுக்காய்ப் பொடி கூட்டி வேளைக்கு மூவிரல் அளவு மோரில் கொடுக்க, மந்தம் நீங்கும்.

ஓமம், கடுக்காய்த் தோல், முக்கடுகு, சிற்றரத்தை, அக்கிராகாரம், திப்பி. வேர் இவைகளின் பொடி ஒரிடை கூட்டிய எடைக்கு நேர் பாதி, சருக்கரை சேர்த்து காலை மாலை மூவிரல் அளவு கொள்ள, புகையிருமல் தீரும்.

ஓமம் மிளகு வகைக்கு 34 கிராம் இவற்றை வெதுப்பி, வெல்லம் 34 கிராம் சேர்த்தரைத்து, காலை மாலை, 10 நாள் கொட்டைப் பாக்களவு சாப்பிட, வயிற்றுக்கடுப்பு, பொருமல், கழிச்சல் தீரும்.

3400 கிராம் தூணிநீரிற்சேர்த்து, எட்டிலொன்றாக வடித்து, அதில் சருக்கரை 340 கி. கரைத்துப் பாகு செய்து, அமுக்கிராக்கிழங்கு, குக்கில், பறங்கிப்பட்டை, கார்போகவரிசி வகைக்கு 34 கிராம் பொடித்துத் தூவி நறு நெய் நாழி விட்டுக் கிண்டி, இலேகியஞ் செய்து வேளைஒன்றுக்கு 6 கிராம் எடை வீதம் கொள்ள, பறங்கிச்சூலை, சிரங்கு, புண் கரப்பான், வாயு, நஞ்சு கடிகள் தீரும்.

ஓமம் 252 கிராம், ஆடாதோடைச்சாறு, இஞ்சிரசம், பழரசம், புதினச் சாறு வகைக்கு 136 கி. இந்து உப்பு 34 கிராம் சேர்த்து ஊறவைத்து உலர்த்தி இருமல், சுவாசகாசம், அசீரணம் முதலியன நீங்கக் கொடுக்கலாம்

**அளவு :** 650 மி.கி. முதல் 2000 மி.கி.

ஓமத்திலிருந்து ஓமத்தீநீர், ஓமத் தைலம் எடுத்து வழங்கலாம்.

**ஓமத்தீநீர்.**

1440 கி. 8400 மி.லி. விட்டு வாலையில வடிக்க உண்டாவது, ஓமத் தீநீர்.

அளவு: 30 மி.லி. முதல் 60 மி.லி.

தீரும்நோய்: ஊழி, வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, செரியாக் கழிச்சல், மந்தம் இவைகளைப் போக்கும். அகட்டுவாய்வகற்றுஞ் செய்கை இதற்குண்டு.

**ஓமத் தைலம்**

தீநீரின்மீது மிதந்து படியும் எண்ணெய் ஓமத்தைலமெனப்படும்.

அளவு : 1 முதல் 3 துளி வரை. மேற்கூறிய நோய்களுக்கு கொடுக்கலாம்.

---

## 98. குரோசாணி ஓமம்—Kurosani Omam

**வே. பெ. திப்பியம், காரஸவை, காரபி, கார்சவை**

**Hyoscyamus nigrum**

**Eng. : Henbana seeds.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kurasani oamamu | Sans. | Parasikayavani |
| Mal. | Kurasani (Omum) | Hid. | Khorasani-Ajowan. |
| Kan. | Kurasani voma<br>,, Vadakki | | |

இஃது ஒரு செடி வகையைச் சேர்ந்தது. இதன் இலே பச்சையாயும் மஞ்சள் நிறங்கலந்ததாயுமிருக்கும் ; இதற்கு ஒரு வித மணமுண்டு; பூக்கள் இளமஞ்சள் நிறமாயிருக்கும்.

இது சீமையில் பயிராகும் பூண்டு. இந்தியாவிலும், இமயமலைத்தொடரில் 8,000 முதல் 11,000 அடி உயரமுள்ள பாகங்களிலும் தானகவே பயிராகின்றது.

ப-உ : விதை.

சுவை - கார்ப்பு, சிறுகைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- உறக்கமுண்டாக்கி—நித்ராகாரி—Hypnotic
- தாதுவெப்பகற்றி—சமனகாரி—Sedative
- துயரடக்கி—வேதனசாந்தநி—Anedyne
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Anoispasmodic
- சிறுநீர் குறை படப்பெருக்கி—அற்ப மூத்ரவர்த்தநி—Mild diuretie

குணம் : இதைப் பல்லடி நோய், சூதவாயு, சூதகவலி, மந்தர இரைப்பு, கழுத்து நோய், ஆரம்ப பயித்தியம், நடுக்கம், நினைவு தடுமாற்றம் தூக்கமின்மை, தமரகத் தடிப்பு ஆகியவைகட்குக் கொடுக்கலாம்.

இதனால், மிகுதியாகச் சிறுநீர் கழித்தல், புண், கழிச்சல், கடுப்பு, கரப்பான் ஐயநோய்கள், வன்மை--த் குறைவு இவைகளும் போகும்.

வெகுமூத் திரம்வாதம் வீரியநட் டம்புண்
உருபேதி யுட்கடுப்பி ஞேடே—மிகுகரப்பான்
திராக் கபமிவைபோம் செய்யகு ரோசானியென்ருல்
வாரா மயக்கமுறு மால்

(அ.கு.)

வ - கு: இச் செடியின் இலை, பூ, வித்து இவைகளிலிருந்து எடுக்கும் சாற்றை உலர்த்தியது Extract-Hyoscyamus எனப்படும்.

அளவு: 65 மி.கி.—320 மி.கி. இதை நினைவு தடுமாற்றம், தூக்க மின்மை, சூதக வலியில் காணும் தமரகத்தடிப்பு இவைகட்குக் கொடுக்க லாம்.

இதில் தாது வெப்பகற்றுஞ் செய்கை அதிகமாய் அமைந்திருப்பதனுல் ஜன்னேந்திரியங்கள், குடல், நுரையீரல் (சுவாசகாசம்) இவ்விடங்களில் காண்கின்ற எரிச்சலை மிக நன்ருகச் சாந்தப்படுத்தும்.

இதனைக்கொண்டு மேல்நாட்டு மருத்துவர் செய்யும் பல திறப்பட்ட மருந்துகளையும் அவைகளின் அளவு முதலியவற்றையும் அந்நூலில் காண்க.

---

## 99. ஓமம் (அசமதா) Omam (asamada)

வே-பெ. அசம்தாகம், அசம்தா ஓமம்.

**Carum roxburghianum**

Eng. Aprum Involucreatum.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ajamodagam | Kan. | Ajamodu-Omum. |
| Ma! | Ajamotha Omum | Sans. | Ajamoda. |
| | | Hind. | Ajwan. |

இ.ஃது ஓமத்தில் ஒருவகை. இதில் சாதாரண ஓமத்தைப் பார்க்கிலும் காரம் அதிகமாக இருக்கும்.

ப - உ: வித்து.

செய்கை
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதகரகாரி—Carminative

குணம்: இது, ஊழி, செரியாக் கழிச்சல், வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, குன்மம் இவைகளைப் போக்கும்; இன்னும் வறட்டிருமல், மேல்மூச்சுடன் கூடிய இருமல், ஈரல் மண்ணீரல்களின் நோய் ஆகியவற்றையும் நீக்கும்; நீரைப் பிரிக்கும்; கல்லடைப்பை நீக்கும்; பசியைத் தூண்டும்.

வ-கு: மேற்கூறிய நோய்களுக்கெல்லாம் இதை ஓமத்தைப் போலவே கொடுத்துதவலாம்.

## 100. ஓரிதழ்த்தாமரை Oritazhttamara

வே-பெ. சூரியகாந்தி, இரத்தனபுருஷ்.

Ionidiumsuffruticosum.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ratnayurusha. | Hind. | Ratan-purs. |
| Kan. | Sooryakanty. | Duk. | Ratan-purus. |
| Sans. | Sooryagandi | Mal. | orrela tanrara |

இது, நிலத்தையொட்டிப் பயிராகும் சிறு செடி பூண்டு. இதை சுவைக்க வாயில் குழகுழப்பு தட்டும்.

ப-உ ; சமூலம்

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம்,—பிரிவு—இனிப்பு.

செய்கை : | உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive
| இச்சைபெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac

குணம் வெண்ணீர் (சுக்கிலம்) கட்டும், உடலுக்கு அழகு தரும்.

தாதுவையுண்டாக்குந் தனிமேகத்தைத் தொலைக்கும்
ஆதரவா மேனிக் கழகுதருஞ்—சீதம்போம்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே ?

ஓரிதழ்த் தாமரையை யுண்.
புண்டரிக நன்மை பொருந்தவென்று மேடேகல்
புண்டரிக நன்மை புனைநீநீ—புண்டரிக
நாலுதிர மூக்கு நலிக்கு .. .. .. .. .. ..

(பொ-ள்) ஓரிதழ்த் தாமரை சமூலம், பச்சை கற்பூரம், கோரோசனை இவற்றைப் பசுவினது நெய்யுடன் கலந்து, மேலுச்குப் பூசிவர, மேக வெட்டை, புண், மண்டை நோய்கள் முதலியன நீங்கும்.

சுரத்தைக் கடிந்து சுவாசத்தைப் போக்கி
யுரத்தை யுடலுக் குதவும்—பருத்தவுடல்
வாடாதனுதினமும் வைத்தடிக்கு மேகத்தை
யேடேகோகனகமே.

(பொ-ள்) ஓரிதழ்த் தாமரை, சுரம், இரைப்பு ஆகிய நோய்களைப் போக்கி, உடற்கு வன்மையை அளிக்கும். அன்றியும், மேகத்தால் பருத்த உடலைத் தக்க நிலைக்குக் கொணரும்.

(தேரர்-வெண்பா)

வ-கு : இதனைக் காலையில் காயகல்பமாகச் சாப்பிடின், உடலை வலுக்கச்செய்யும்.

இதனால் காட்டுகெந்தி பற்பமாகும்.

———

## 101. ஓரிலைத்தாமரை—Orilai-tamarai

வே-பெ : அவ்வியதம்.

இது நீர்ப்பாங்குள்ள குளம், மடு, எரிகளில் பயிராகும்.

சுவை : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : பாற்பெருக்கி—க்ஷரவர்த்தநி—Lactagogue.

குணம் : இது பாலைச் சுரப்பிக்கும் ; வாதமேக ரோகங்களைப் போக்கும்.

ஓரிலைத் தாமரையின் உற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பால் இல்லாத மங்கையற்கு—மோரில்
குடிக்கப்பால் உண்டாகும் கோரமே கத்தைப்
படிக்குளிருக் காதொழிக்கும் பார்.

(அ.கு.)

வ-கு : இதை அரைத்து எலுமிச்சங்காய் அளவு பசுவின் மோரில் கலக்கி, இரண்டு வேளையும் 40 நாட்கள் கொடுத்துவர, பால் இல்லாதவர்களுக்குப் பால் சுரக்கும். உப்பைக் கட்டும்.

---

## 102. கக்கரிக்காய் Kakkarikkay

வே-பெ : முள்வெள்ளரிக்காய், முள்ளன் வெள்ளரி, வெள்ளரிக்காய்.

**Cucumis Muticatrus.**

**Eng : Cucumber, common.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mullu-dosakkaya. | Kan. | Mullu-savate. |
| | | Pers. | Tukhme. |
| Mal. | Kakkarikkay<br>Mul-vellarikkay<br>Mullen-vellari | Hind. | Kakri. |
| | | Duk. | Kankri |

இஃது இந்தியா முழுவதும் பயிராகிற ஒரு வகை "வெள்ளரி" இனத்தைச் சேர்ந்த கொடி.

இதில் ஆகாய கக்கரிக்காய் என்று வேறொரு விதமுண்டு.

ப-உ : இலை, விதை.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை:
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent

**குணம்:** இது அழலையை நீக்கும்; ஆனால் குளிர்ச்சியையும் உண்டாக்கும்.

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்த்தும்
மெய்க்குக் குளிர்ச்சிதரும் மென்னுதலே!—முக்குகின்ற
மூல வழறணிக்கும் மூடிரத்த பித்தத்தைச்
சால வகற்றிவிடுஞ் சாற்று. (அ.கு.)

**வ-கு:** இதைப் பச்சையாகவும், துவையல், பச்சடி, குழம்பு, முதலியவைகளாகச் செய்தும் உண்ணலாம். ஐயத்தையும் குளிர்ச்சியையும் உண்டாக்காமலிருக்கும்படி மிளகுத்தூள், உப்பு சேர்த்து உண்ணலாம்.

**ஆகாய கக்கரிக்காயின் குணம்.**

பந்தலில் காய்கின்ற கக்கரிக்காய்க்கு ஆகாய கக்கரிக்காய் என்ற பெயர் வழங்கும். இதனையே பெங்களூர் கத்திரிக்காய் என்றும் கூறுவர் இதனால், உடல்சூடு, கரப்போன், வெறி, மருந்தின்சூடு, வாந்தி ஆகிய இவைகள் போம். ஆனால் ஐயத்தைப் பெருக்கும். உடற்கு ஊட்டம் தரும்.

ஐயம் விளையு மழல்கரப்பான் பித்தமும்போ
மெய்யுளதி போகம் விளையுங்காண்—செய்மருந்தின்
காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய் தின்றவர்க்கு
வாந்தியும்போ மாதே! வழுத்து. (அ.கு).

**வ-கு:** இலையை வேகவைத்து, சீரகம் சேர்த்து வறுத்துப் பொடித்து, வேளைக்கு 2 கிராம் எடை கொடுக்க, தொண்டையிலுண்டாம் நோய்களைப் போக்கும்.

மேற்கண்டபடி செய்வதுடன் சருக்கரை சேர்த்துக் கொடுக்க, சிறுநீர்ப் பெருக்குண்டாகும்.

வெயிலினாலுண்டாகும் தலைவலிக்கு, இந்தக் காயை வெட்டித் தலையில் வைத்துக் கட்டினால், தலைவலி குறைந்துவிடும்.

விதையை, நீரைப் பெருக்கவும், உடற்கு வலுவைத்தரவும் செய்யப்படும் மருந்துகளில் சேர்க்கலாம்.

---

## 103. கசகசா—Kasa-kasa.

**வே-பெ. போஸ்த்தக்காய்.**

**Postakkai.**

**Pacae Somiferum**

Eng: Opium poppy, Popppy casules.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gasagasalu. | Sans. | Khas-Khas. |
| Mal. | Kasha-kasha. | Hind. | Kash-Kash. |
| Kan. | Kasa-Kasa. | | |

**போஸ்தக்காய்**க்குள்ளிருக்கும் விதை **கசகசா** எனப்படும். இது **வெண்மை** நிறமுடையது. அதிகம் முற்றுததற்கு முன்பு எடுப்பதே **சிறந்தது.**

காயின் தோலுக்குப் போஸ்த்தக்காய்த் தோல் என்பது பெயர். கீறப்பட்ட காயினின்றும் வடிந்து உறையும் பாலுக்கு அபினி என்பது பெயர்.

**சுவை**—இனிப்பு, **தன்மை**, வெப்பம், **பிரிவு**—இனிப்பு.

**செய்கை.**
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
- உடலுரமாக்கி--போஷணகாரி—Nutritive
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent (mild).

**குணம் :** கசகசாவினால் குடற்புழு, தினவு, குருதிக் கழிச்சல், சீதக் கழிச்சல், தூக்கமின்மை, தலைக்கனம் ஆகிய இவைகள் போம். உடல் வன்மை, அழகு, ஆண்மை பெறும்.

கிருமி நமைச்சல் கிராணியதி சாரஞ்
சிரநீர் அநித்திரைபோஞ் செப்பில்—உருவழகுங்
காந்தியுமுண் டாகுங் கசகசா வின்குணத்தைத்
தேர்ந்தவர்க்கு விந்துவுமாந் தேர். (அ.கு.)

**போஸ்த்தக்காய் குடிநீர்.**

**வ-கு :** போஸ்த்தக்காய் 68 கிராம், துத்தியிலை 34 கிராம், தண்ணீர் 1,400 மி.லி. இவற்றைச் சேர்த்து, ½ நாழிகை நேரம் காய்ச்சி எடுத்து வடிகட்டிக் கொண்டு, கண்ணோய், வயிற்றுவலி, கீல் பிடிப்பு முதலிய நோயுள்ள விடங்களில் ஒற்றிடமிடலாம்.

**செய்கை :** தாதுவெப்பகற்றி—சமனகாரி–Sedative.

**குறிப்பு :** நீருக்குப் பதிலாகப் பாலோ அல்லது பாலும் நீருஞ் சேர்த்தோ விட்டுக் காய்ச்சிக் கொள்ளலாம்.

போஸ்த்தக்காய், அதிவிடயம், கடுக்காய்ப்பூ, சிறுநாகப்பூ இவைகளை ஓர் அளவாக எடுத்து, 1-க்கு 16 நீர் சேர்த்துக் காய்ச்சி, நாலில் ஒன்றாகக் குறுக்கி, 30 முதல் 60 மில்லி லிட்டர் வரையில் பலவகைப்பட்ட கழிச்சல் களுக்குத் தக்கவாறு கொடுக்கலாம்.

**கசகசா லேகியம்.**

கசகசா, வால்மிளகு, வாதுமைப்பருப்பு, கற்கண்டு ஒரெடை எடுத்து இடித்து, தேன், நெய் போதுமான அளவு விட்டு, இலேகிய பதமாகக் கிளறியோ அல்லது கசகசாவைப் பசுவின் பால் விட்டரைத்துப் பிழிந்து பனங்கற்கண்டு ஓரளவு சேர்த்து இலேகியம்போலக் கிளறியோ அதில் 4 முதல் 8 கிராம் எடை கொடுத்துவர உடல் வன்மை உண்டாகும். ஆண்மை பெருகும்.

---

## சிவந்த போஸ்த்தக்காய்

**Papaverrheas**

**Eng. Redpoppy petals**

கசகசாவினத்தில் இஃதும் ஒன்று. இதற்குத் துயிலை உண்டுபண்ணுஞ் செய்கை உண்டு. இது மருந்துகளுக்குச் சாயமேற்ற வழங்கப்படுவதன்றி, மற்றப்படி வேறு வகையில் வழங்குவதில்லை.

---

## 104. கஞ்சா—Ganjah

வே-பெ. : ஆநந்தமூலி, கற்பமூலி, கோரக்கர்மூலி, சிவமூலி, பங்கி, மநமத்தகம், மூதண்டம்.

Cannabis Sativa

Eng. Indian, Hemp.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ganjah, Ganjayi. | Sans. | Vijaya. Sidhapatri. |
| Mal. | Kanjah. | Arab. | Kinnab. |
| Kan. | Bhangi, Ganja. | Pers. | Daarato-bhang. |
| | | Hind. | Ganja. |

இஃது ஒரு செடி வகையைச், சேர்ந்தது ; ஆசியாவின் மேற்கு நடுபாகத்துக்கே இஃது உரியதாயினும் தற்காலம் இந்தியா முழுவதுமே பயிரிடப்படுகின்றது ; இமயமலை மேற்சார்பிலும், காஷ்மீரத்திலும் மிகுதியாக விளைகிறது.

இந்தியா நாட்டில் விளைகின்ற கஞ்சாவுக்கு "Cannabis India" என்றும், இங்கிலாந்தில் விளைகிறதற்கு "Cannabis Sativa" என்றும் மேனாட்டார் பெயரிட்டிருக்கின்றனர்.

இவ்விரண்டிற்கும் வேற்றுமை இல்லை என்று சிலரும், வேற்றுமை உண்டு என்று சிலரும் கூறுகின்றனர்.

ப-உ : இலை, பூ, சமூலம், நார்.

**சுவை.—கைப்பு, தன்மை, வெப்பம், பிரிவு கார்ப்பு. Deleriet.**

**செய்கை.**

- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.**
- துயரடக்கி—வேதனசாந்தநி—**Anodyne.**
- உறக்கமுண்டாக்கி—நித்ரகாரி—**Hypnotic.**
- மூர்ச்சையுண்டாக்கி—நித்ரகாரி—**Narcotic.**
- உறக்கமெழுப்பி—**Soporific.**
- காமம்பெருக்கி—கர்மவர்த்தநி—**Aphrodisiac.**
- இசிவகற்றி அங்காகர்ஷணநாச-நி—**Antispasmodic**
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்தநி—**Diuretic.**
- பேறுவலியுண்டாக்கி—ப்ரசவகாரி—**Parturifacient.**

**பண்பு** : இதனல், புண், கள்ளுண்ட வெறி, பாலவண இசிவு, பல சூலைகள், நரம்பு வலி, வாந்திபேதி, பெரும்பாடு, கீல்வாயு, இரைப்பு நோய், கழிச்சல் வகை, ஒற்றைத்தலைவலி, கக்கிருமல், வயிற்றுவலி ஆகிய இவை போம். வாயு, கரப்பான் இவைகள் போம். மிகுபசி, மிகு மயக்கமும் உண்டாகும்.

மூதண்ட கற்பம் (மூதண்டம்—கஞ்சா.)

கற்ப முறைமை கறியொன் றிரண்டுமுறை
விற்பன மாகநிதம் வேண்டினேர்—நற்படிவம்
வேதண்ட மாமழகும் விற்பத்தி யுஞ்சேரு
மூதண்ட மும்படியு முன்.

இத்துடன் அருகன் வேர் ஒரு பங்கும், மிளகு இரண்டு பங்கும் சேர்த்துக் கற்பமுறைப்படி உண்ணின், உடல் ஊட்டமாம்.

(தேரன் வெண்பா.)

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டும்
சாலமயக் கும்பசியுஞ் சாருங்காண்—தூலஞ்செய்
வாதமொடு ஐயமும்போம் வன்கரப்ப னுந்தொலையும்
கோதறுகஞ் சாச்சடைக்கு. (அ.கு.)

மேலும், இது மனக்களிப்பையும், தூக்கத்தையும், பசியையும், கண்களுக்குத் தோன்றுநவைகளைத் தோற்றும்படியான நினைப்பையும் உண்டு பண்ணும் ; ஆண்தன்மையைப் பெருக்கும்.

சிறு அளவில் பசித்தீயைத் தூண்டி, செரிப்பிக்கச் செய்யும். ஆனால் எருகட்டுப்படும். வழக்கத்திற்குக் கொண்டுவரின் பசித்தீயைக் கெடுக்கும்.

சிறு அளவில், வயிற்று வலியையும், கழிச்சலையும் நீக்கும்.

பெரு அளவில் கொள்ளின், கள், அபின் முதலியவைகளைப்போல முதலில் களிப்பைத் தந்து, இன்பத்துடன் பாடல், ஆடல், நகைத்தல் என்பவைகளை உண்டாக்கி, வெறியுள்ளவன்போல ஆடச் செய்யும். பின் தன்னை அறியாமல் தூங்கச்செய்யும்.

அளவு கடந்து உட்கொண்டால், நரம்பைப் பற்றிய வலிப்பு "Catalepsy" உண்டாகும். இந்நோயில் கைகாலைத் தூக்கி எவ்விதம் வைப்பினும் அசையாமல், வைத்தது வைத்தபடியே இருக்கும். கண்தாரை பெருகும். மயக்கம், நாடித்தளரல் என்னும் குறிகளைக் காட்டிக் கொல்லும்.

**இதன் அளவு :** இலைத்தூள் **32** மி.கி. முதல் **65** மி.கி. வரை.

சத்து **16** மி.கி. முதல் **48** மி.கி. வரை.

**கஞ்சா.**

ஆமலகை வாணன் திகமளை யோடுகுறை
யாமலகை யுண்டுரை யழலெங்கே—யாமலகை
சாகச் சுரையா "தனுவாயு மார்வலிகஞ்
சாகச் சுரையானு சம்."

**பொருள் :** கஞ்சா விதையுடன், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மிளகை அதிகப்படுத்தி ஒரு மண்டலம் புசித்தால், தனுர் வாயு நீங்கக்கூடும்.

**கஞ்சா சுத்தி.**

கஞ்சாவை மருந்துக்காக எடுக்குமுன், அதிலுள்ள நச்சுத்தன்மைகளை நீங்கும் பொருட்டுச் செய்யும் முறை பின்வருமாறு :

சடைக் கஞ்சாவிலுள்ள விரை, காம்பு இவைகளை ஆய்ந்து நீக்கி, நீரில் நன்றாக ஊறவைத்துக் கைகளால் நன்றாகப் பிசைந்து பிசைந்து நீரை வடிகட்டி, மறுபடியும் வேறு புதிய நீரில் ஊறப்போட்டு முன்செய்த முறைப்படியே பிசைந்து எடுக்க வேண்டும். இப்படி **7** முதல் **10** முறைக்குக் குறையாமல் செய்து, வெயிலில் நன்றாய் உலர்த்திப் பசுவின் நெய் விட்டு, இளவறுப்பாய் வறுத்து எடுத்துக்கொள்ளத் தூய்மையாகும்.

**வ-கு :**

"முக்கடி லவங்கமுரி புச்சமுறு காய்குன்றி
மூலமொடு காரந்திரி
சிக்குவை நவத்தொடி வடிப்பொடி துவாதசத்
தேன்றெடி பாணிதத்திட்

தொக்கவைந் தொடியவிசு பெய்தட் டளாவல்புரி
யுணணிட்கமரை யசனமே
மிக்குறு மிதப்பவுண் வீறுமிவ் விலேகமோ
வீறுமத மூதண்டமே." (தே.சே.)

மூதண்ட மும்மிளேகால் மூத்தவதி சாரமறும்
தீதண்டச் செய்யிரத்தச் சீதமுமில்—வேதண்ட
மெய்யா மனவலியும் விந்துஞ்ச மாக்கினியு
நையா வமுதனமு நல்கு. (அ.மு.)

சுக்கு, மிளகு, திப்பிலி, இலவங்கம், இலவங்கப்பட்டை, வால்மிளகு, அதிமதுரம், அக்கராகாரம், கஞ்சா வகைக்கு 34 கிராம் எடுத்துப் பொடித்து வடித்துக் கொள்ளவும். இதைத் தேன் 408 கிராம். பால் 34 கிராம், நெய் 170 கிராம் சேர்த்து, முறைப்படி இலேகியமாகக் கிண்டி 2 கிராம் எடை வீதம் காலே மாலே சர்க்கரையாக உட்கொள்ளப் பசி எழும். இதனுல், மூலவாயு கழிச்சல் வகைகள் போம்.

மைசூர் அரண்மனே வைத்தியர் ஜெகநாத நாயுடு அவர்களின் அநுபவ முறைகள்.

நீரடைப்பு, சதையடைப்பு, சொட்டுநீர், நீரருகல், நீர் க்கட்டுக்கு : கஞ்சாயிலே 170 கிராம், துருசு 34 கிராம் இவ்விரண்டையும் வெண்ணெய் போல் அரைத்து, அதற்குள் பலகறை (சோகி) 10 வைத்து, 2, 3 மண்சீலே செய்து, 30 வரட்டியில் புடமிட்டு எடுத்துப் பொடித்து, அதில் 8 கிராம் எடை எடுத்து, எலுமிச்சம்பழரசம் சீனி 700 மி.லி. 34 கிராம், சேர்த்துக் கலக்கி, பொடியை அதில் போட்டு, வாழைக்குருத்து இலேயினுல் மூடி, ஓர் இரவு பனியில் வைத்து, மறு நாள் எடுத்துக் கொடுக்க, மேற்படி நோய்கள் விலகும்.

கஞ்சாவைத் தூய்மை படுத்தியபின், அத்துடன் பால், சர்க்கரை, ஏலம், குங்குமப்பூ, பச்சைக்கருப்பூரங்கூட்டிக் குடிப்பது வழக்கம். இதனைப் பங்கி, சித்தி சாப்ஜீ எனக் கூறுவர்.

கஞ்சாவைக்கொண்டு சூதகவலியைப் போக்க வாழை வடகமும், வன்மை பெறுதற்கு மதனகாமேஸ்வர லேகியமும், கழிச்சலேப்போக்க கட்டு வாதி ஊழி முதலிய மாத்திரையும் செய்வதுண்டு, இவைகளேச் சித்தர் உறை விளக்கம் என்னும் நூலில் காண்க.

கஞ்சாவை அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுவதாலுண்டாகும் நஞ்சை முறிக்க :

கஞ்சா நஞ்சுக்குக் குடிநீர்.

1. இலேக்கள்ளி வேர் 8 கிராம், கோரைக்கிழங்கு 8 கிராம், வசம்பு 8 கிராம், சுக்கு 8 கிராம் இவற்றைக் குடிநீர் செய்து இரண்டு வாரம் சாப்பிட்டுவர, கஞ்சா அபினி இவைகளினுலுண்டாகும் நஞ்சு நீங்கும்.

2. (a) சுக்கின் குடிநீர், (b) வாழைப்பட்டையை இடித்துப் பிழிந்த நீர், (c) எலுமிச்சம் பழச்சாறு இவைகளுள் ஏதாகிலும் ஒன்றைக் கொடுக்கத் தீரும்.

குறித்திடிவாய் கோரக்கர் மூலிக்குச் சுக்கி
னெரித்திடுநீ ருண்டால் விலகும்—நறைக்குழலாய் !
சம்பீரச் சாருகுந் தனிக்கதலிப் பட்டையினீர்
உம்பரமுந் தொக்குமதை யுண். (வி.பி.வி.)

3. காடி நீரும் கொடுக்கலாம்.

4. வாந்தி செய்விக்கலாம்.

---

## 105. கஞ்சாங்கோரை—Kanjankorai

Ocimum album

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella-Tulasi | Sans. | Surasam |
| Mal. | Katurama-tulasi | | Ajaka |
| Kan. | Rama Thulase. | | Gambheeram |

குறிப்பு : கஞ்சாங்கோரை. நாய்த்துளசி, இவ்விரண்டும் வெவ்வேறு. இது செடி வகுப்பைச் சேர்ந்தது.

சுவை—காரம், தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை.
- செரிப்புண்டாக்கி Digestive.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி Stimulant.
- வியர்வைப்பெருக்கி —ஸ்வேதகாரி Diaphoretic
- கோழையகற்றி—Expectorant.

குணம்: இதனால், மாந்தக் கணச்சூடு. நமைச்சல், கழிச்சல், காசம் இவை போம். மூச்சடைப்பு, விக்கல், வெறி இவைகளும் நீங்கும்.

மாந்தக் கழிச்சலறும் மாந்தஞ் சுரங்கணம்போம்
சேர்ந்தமூ லத்தின் தினவடங்கும்—பூந்தடக்கை
யன்னமே ! மேக மறுங்கஞ்சாங் கோரையினே
யுன்ன இருமலிலே யோது. (அ.கு.)

வ-கு : இதன் இரசத்தைக் குழந்தைகளுக்குண்டாகும் மாந்தம், இருமல், சுரம் இவைகளுக்குக் கொடுப்பது வீட்டு வழக்கம். இலையைத் தேயிலைக்குப் பதிலாக வழங்குவதுண்டு. இதனால், இருமல், பசியின்மை, உடல் வலி இவைகள் போம்.

## 106. கடம்பு—Kadambu

வேறு பெயர் நீபம்

Anthocephalus cadamba.

Eng. : Wild cinchona.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Rudrakshakamba. | Sans. | Kadamba. |
| Mal. | Kadamba. | | Halipriya. |
| Kan. | Kadvala. | | Sisupala. |
| Hind. | Kadamba. | | |

ப-உ : இலை, பழம், விரை, மரப்பட்டை.

சுவை : துவர்ப்பு, கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை.
- பட்டை.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
- பழம்.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

பட்டை.

**குணம்** : இஃது, என்பு சுரம், குளிர் சுரம், பிடிப்பு, கண்ணோய் முதலியவைகளைத் தீர்க்கும்.

இலை.

**இலையை**, வாய்ப்புண் தொண்டைப்புண் இவைகளுக்கு வழங்கலாம்.

**வ-கு** : இலையைக் குடிநீரிட்டு, வாய்ப்புண் தொண்டைப்புண் முதலியவைகளுக்கு வாய் கொப்புளிக்கக் கொடுத்துதலாம்.

பழம்.

**பழம்**, வயிற்று நோய் சுரம் இவைகளைப் போக்கும்.

விதை.

**விதை**, கடிநஞ்சு, நீரேற்றம், வளிநோய்கள், மாந்தம் இவைகளை நீக்கும்.

கடப்பம் விதைக்குக் கடிவிடமு முண்டோ ?
தொடுப்புமண்டை நீருந் தொலையும்—இடக்கான
வாத வகையொழியும் மந்தங்கள் ஏகிவிடுங்
கீதமொழி மாதே கிளத்து.

பழம்.

பழச்சாற்றோடு சிறிது சர்க்கரை சேர்த்து, வயிற்று நோய்க்கும், வேட்கையோடுங்கூடிய சுரங்களுக்கும் கொடுக்கலாம்.

கடப்பம்பட்டைக் குடிநீர்.

தொந்தித் தகலாத தோடச் சுரமகன்று
சிந்தைக் கனுகூலஞ் சேரவென்றால்—வந்தித்துத்
தாப சுரமுமறச் சஞ்சலமி லாதருந்து
நீபப் புரணிகுடி நீர். (தேரன்-வெண்பா.)

கடம்பமரத்தின் புறத்தோலைக் குடிநீர் செய்து உண்ண, முக்குற்றத்தாலுண்டான சுரம், மனச் சோர்வு, தாப சுரம் ஆகியவை நீங்கும்.

பட்டை.

பட்டையைப் பிழிந்து எடுத்த சாற்றைக் குழந்தைகளுக்கு உச்சிக்குதாழ்ந்திருந்தால், தலைக்குத் தேய்க்கலாம். அத்துடன் சிறிது சர்க்கரை சேர்த்து, மேற்படி சாற்றை உள்ளுக்கும் கொடுக்கலாம்.

பட்டையைக் குடிநீராக்கி, என்பு சுரம், குளிர் சுரம் முதலியவைகட்கும் கொடுப்பதுண்டு. வளியாலுண்டாகும் பிடிப்புகட்குப் பட்டையை இடித்துத் தெள்ளி, வறுத்து ஒற்றடமிட்டு, பின்பு அப்பட்டையையே கட்டிவைத்தலுமுண்டு.

குழந்தைகட்குண்டாகும் கண்ணோய்க்குப் பட்டையின் சாறும், எலுமிச்சம்பழச்சாறும் ஒரெடைகூட்டி, அத்துடன் சிறிது பொறித்த படிகாரமும் சேர்த்துக் குழைத்து, கண்ணைச் சுற்றிப் பூசி வைப்போம்.

விதை.

விதையை அரைத்து நீரில் கலக்கிக் கொடுக்க, கடி நஞ்சு, நஞ்சு முறியும். கொட்டையை உரைத்துத் தலைக்குப் பற்றிட நீர்க்கோவையும் கைகால் மூட்டிலிட முடக்கும் போம்.

## கடலழிஞ்சல்—Kadala-Zhinjil

ப - உ : பட்டை.

சுவை - துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. | உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி–Demulcent.
| துவர்ப்பி—ஸங்கோசனகா Astringent.

பண்பு : இதனல், நீரிழிவு வெளி முதலிய நீர் நோய்களும், நீர் வேட்கை, படர்தாமரை, கழிச்சல், காய்ச்சல் ஆகியவைகளும் நீங்கும்.

தீதில் கடலழிஞ்சில் செய்யுங் குணங்கேளாய் !
ஓதுமது மேக மொழிப்பதல்லால்—வாதத்தில்
வந்தசலம் பித்தசல மாகபச்ச லந்தாகத்
தொந்தசல மும்போக்குஞ் சொல்.
கமல விரணங் கசிநீ ரகற்றும்
நிமல சுரம்விலக்கு நேரே—கமலமு
மாதே ! கடலழிஞ்சில் வன்பட்டை பேதிகட்டுஞ்
சீதாமே கம்போக்குந் தேர். (அ.கு.)

வ - கு : இதன் பட்டையைச் சிதைத்து, வேலைக்குக் காற்பல மெடுத்து ஊறல் கஷாயமேனும், குடிநீரேனுஞ் செய்து கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் யாவும் போம்.

மேலும், நீர் நோயினைப் போக்கும் குடிநீர் வகையில், தேரன் குடிநீர் நூறு என்னும் நூலில் உள்ள பாவொன்றை, ஆவாரையின் பண்பைக் கூற வந்தவிடத்துக் கூறியுள்ளதைக் காண்க.

" சீதமேகம்,, என்பது எதுகை நோக்கி "சீதாவென" திரிந்தது.

## 107. கடலை—Kadalai

வேறுபெயர்—சூரம்

Cicer arietinum,

Eng. : Bengal gram, Chicken Pea.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sengalu. Chanakamulu. | Sans. | Chanaka. |
| Mal. | Katala. | Arab. | Humug. |
| Kan. | Kadalai. | Pers. | Chola. |

இது சாதாரணமாக இந்தியா முழுவதும் கிடைக்கக் கூடியது. சொட வருப்பைச் சேர்ந்தது.

குறிப்பு : இச்செடியிலிருந்து " கடலைப்புளிப்பு " என்றொரு வனகட் புளிப்பு நீர் எடுக்கிறார்கள்.

ப - உ : இலை, விதை, சமூலம்.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை.

சமூலம்
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant
விதை
பித்தசமனி—பித்தசாத்திறி Anti—bilious
இளவிதை
காமம் பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac
வறுத்த விதை
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic
இலைச் சாறு
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி-Stomachic
மலமிளக்கி—மலகாரி—Laxative
கடலைப்புளி
துவர்ப்பி—ஸங்கோசன்காரி—Astringent

கடலை.

குணம் : இது, வயிற்றுப்புசம், கனல், நீர் வேட்கை, குடல்நோயுடன் கூடிய கழிச்சல், மயக்கம், மூலவாயு இவைகளை உண்டாக்கும் ; வயிற்றுள் காற்றைச் சேர்க்கும் ; நன் மருந்தை முறிக்கும்.

கடலைவயி றூதல் கனல்தாகஞ் செய்யுங்
குடலைவலிப் பித்துமலங் கொட்டுந்—திடமருந்தைச்
சேதமுறப் பண்ணுந் தியக்கமொடு வாயுவையும்
போத அழைக்கும் புகல். (அ.கு.)
" சுரமேனிக்குரத தொக்கவுண்டாகும் "
கடலை உடம்பிற்கு உறுதியைக் கொடுக்கும். (தே.கா.)

பச்சைக்கடலை.

இதனால் உடல் பருக்கும். ஆண்மை பெறும். நுரையீரலுக்கு வன்மை உண்டாகும்.

கடலைப்புளிப்பு அல்லது கடலைக்காடி.

கடலைச் செடிகளின்மீது வெண்சீலை இட்டு, படியும் பனி நீரை பிழிந்தெடுப்பதே கடலைப்புளிப்பாம்.

இலை.

வ-கு : இலையை வேகவைத்து, அடிப்பட்ட வீக்கம், மூட்டுப் பிசகல் முதலியவைகளுக்குச் சூட்டோடு வைத்துக் கட்டப்போம்.

செடி.

பச்சைச் செடியைக் கொதிக்கக் காய்ந்த தண்ணீரில் போட்டு, ஆவியை இடுப்புக்குக் கீழ் பிடிக்க, சூதகவலி, அதனாலுண்டாகும் இடுப்புவலி முதலியவை தீரும்.

இதைக குடிநீரிட்டுச் சுரநோய்களுக்குக் கொடுக்கலாம்.

கடலை.

முதிராத பச்சைக்கடலையைச் செடியிலிருந்து எடுத்து, உடனே அரைத்த அ[illegible] க, சீதக் கழிச்சல் நீங்கும்.

கடலையைக் காப்பியைப் போல் வறுத்துப் பொடித்து, உள்ளுக்குக் கொடுக்க, வயிற்றுப் பொருமல் நீரடைப்பு இவைகள் ஒழியும்.

கடலையைத் தண்ணீர் விட்டு அரைத்து, நீரில் கலக்கி வடிகட்டி, 60 மி. லிட்டர் வீதம் குடித்துவர, உடல் வலுக்கும்.

கடலையை வெதுப்பி மென்று சாப்பிட்டு 130 மி.லி., பால் குடித்துவர, நீர்க்கோவை, இருமல் தீரும்.

**கடலைப்புளிப்பு.**

கடலைச் செடியின்மீது மெல்லிய துணியைவிட்டு வைக்கப் பனி நீர் படியும். அதனைப் பிழிந்து எடுக்கும் நீரே கடலைப்புளிப்பாகும்.

இதை 5 முதல் 10 துளி வரை நீரில் சேர்த்துக் கொடுத்துவர, கழிச்சல் வாந்தி, வாய்க்குமட்டல், செரியாமை, உடல் அழற்சி, சூதகவலி இவைகள் போம்.

**Gracilaria confervodies**

## 109. கடற்பாசி Kadarpasi.

Eng. : Ceylon moss, Edible moss, Sea weeds.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Samudrapu-pachi. | Duk. | Darya-ki-pachi. |
| Mal. | Kadal-pausi. | Cing. | Agar-agar. |

கடற்பாசி, இலங்கையைச் சேர்ந்த கடலிலும், நம் நாட்டுக் கடலிலும் விளைகிற ஒருவகைப் பூண்டு. இதைக் காயவைத்து எடுத்து, மருந்துக்கு வழங்குகின்றனர்.

ப-உ : பாச்சை.

சுவை : துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

பண்பு : இதனால், சீதகக்கழிச்சல், வயிற்றுக்கடுப்பு முதலிய நோய்கள் போம். குழந்தைகளுக்கும், நோயுற்று இளைத்தவர்களுக்கும் மிகவும் நன்மை உண்டாகும். உணவு எளிதில் செரிக்கும். பிரமேகம், நீர் எரிச்சல், பெரும்பாடு முதலியனவும் நீங்கும்.

செய்கை :
- இளைப்பாற்றி—Restorative
- வறட்சியகற்றி—Emollient—ஸ்நித்தகாரி
- உள்ளழலாற்றி—Demulcen—அந்தர்ஸ்நிக்தகாரி

வ-கு : கடற்பாசியை நன்றாய்க் காயவைத்து உலர்த்திப் பொடிசெய்து 100 பங்கு நீர் விட்டுச் சிறிது கருவாப்பட்டை சேர்த்துக் காய்ச்சி கூழ்ப்பதமாக எடுத்து ஆறவைத்து, சிறிது சருக்கரையும் திராட்சைரசமும் சேர்த்துக் கொடுத்துவர, நோயுற்றிளைத்தவர்களுக்கு மிகவும் நனமை பயக்கும். உடல் வன்மையையும் ஊக்கத்தையும் பெறும்

1-க்கு 40 பங்கு நீர் விட்டுக் குடிநீரிட்டு இறக்கி, 30 மி.லி. முதல் 60 மி. லி. வரை செரியாக்கழிச்சல் சீதக்கழிச்சலுக்குக் கொடுக்க, நோய் தணியும்.

## 110. கடற்பாலை Kadaspalai

வே-பெ : கடல்பாலை, சமுத்திரசோகி, சமுத்திரசோவி சமுத்திரப்பச்சை

Argyreias peciosa

Eng. Elephant creeper

| | | | |
|---|---|---|---|
| Tel. | Samudra pala<br>Kokkita<br>Pala-samudra<br>Chandra poda | Kan. | Chandra pada |
| | | Sans. | Vriddha daraka<br>Samudra—palaka |
| Mal. | Samudra pach cha<br>Samudra yogam | Hind. | Samudras hoka<br>Samandar—ka patta |
| | | Duk. | Samandarka patta |

இச்செடி இந்தியா முழுவதும் பயிராகும் கொடி.

ப-உ : இலை, வேர்.

சுவை—கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை
இலையின் கீழ்ப்புறம்
தடிப்பு உண்டாக்கி—Rubefacient
கொப்புளமெழுப்பி—Vesicant
இலையின் மேற்புறம்
குளிர்ச்சியுண்டாக்கி—Refrigerant
வேர்
உடற்றேற்றி—Alterativo
உரமாக்கி— Tonic

பண்பு : இஃது, ஐயநோய்கள், சுவையின்மை, வளிநோய்கள், உடல் அழல், நீர் ஆகிய இவைகளை மாற்றிவிடும்.

ஐய மகற்று மரோசகத்தை மாற்றிவிடும்
பையுதிர வாயுவையும் பற்றறுக்கும்—மெய்யை
அமிழ்த்துகின்ற நீரை யனிலத்தைப் போக்குஞ்
சமுத்திரநற் சோஷிவிதை தான். (அ.கு.)

வ-கு : இலையை கட்டிகள் மீது அடிப்புறமாகக் வைத்துக்கட்டினால், கட்டிகள் பழுத்து உடையும். மேற்புறமாக வைத்துக் கட்டினால், கட்டி கரையும்.

இதன் வேரை முறைப்படி குடிநீரிட்டு வாதவலிகளுக்குக் கொடுத்து வரலாம்.

இதன் வேரைப் பொடித்து, தண்ணீர்விட்டான் கிழங்குச் சாற்றில் எழு நாள் (புதுப் புதுச் சாற்றில்) ஊறவைத்து எடுத்து உலர்த்தி, வேளை ஒன்றுக்கு 2 கிராம் முதல் 5 கிராம் எடை வீதம், பசுவின் வெண்ணெயில் 40 நாட்கள் சாப்பிட்டுவர, இது உடலிற்கு வன்மை கொடுத்துப் புத்தியைத் தெளிவாக்கும். இதையே நெடுநாட்கள் சாப்பிட, நரை திரை மூப்பின்றி வாழலாமென்றுங் கூறுவர் பெரியோர்.

## 111. கடற்றேங்காய்—Kadartengay.

**Bot Name : Lodoicea Sechellarum, Labill.**

பிறமொழிக்கூ.—

**Fam : Palnae.**

| | |
|---|---|
| Tel. Sumudrapu - tenkaya | Sans. Samudra - nalikeram |
| Mal. Katal - tenna | |
| Kan. Samudra - tenglna-kai | Arab. Narjile-bahri |
| | Pers. Nargile-bahri |
| | Hind. Darya-ka-nariyal |

இஃது, செயிக்கல்லீஸ் (Seychelles) என்னுமிடத்தில் வளரும் மரத்தின் காய். இக்காயானது, கடலின் வழியாய்த் தண்ணீரில் மிதந்து, கரையோரங்களில் வந்துசேருகிறது. சராசரி 40, 50 இராத்தல் கனமுடையது.

ப - உ : உட்சதை.

சுவை - இனிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - சீதம்.

செய்கை : { நச்சரி—Alexiphasmic.
உரமாக்கி—Tonic.

குணம் : நீரிழிவு, நெறிகட்டி இவைகளைப் போக்கும்.

வ - கு : கடல் தேங்காய் 2 பங்கு, மான் கொம்புத்தூள் 1 பங்கு, எட்டிவிதை ½ பங்கு, இவைகளை நீர்விட்டு ஒன்றாகவரைத்து, அரையாப்பு கழுத்துக்கழலை முதலிய வீக்கங்களுக்கு வைத்துக்கட்டிவர, அவை போம்.

இத்தேங்காயைத் தண்ணீரில் வேகவைத்துக் குடிநீரிட்டு, 30 மி. லிட்டர் வீதம் கொடுத்துவர, நீரிழிவின் சர்க்கரையைக் குறைக்கும்.

இதைத் தேன் விட்டரைத்து, நாக்கில் தடவிவர வாந்தி நிற்கும்.

## 112, கடாரநாரத்தை Kadara Narathithai.

வே.பெ. கொடிநாரத்தை, கொம்மட்டிமாதுளை.

**Citrus medica.**

**Eng : Citron.**

| | |
|---|---|
| Tel. { Lungamu, Pulla-dabha, Biaja-pura | Kan. Mada - lada hannu |
| | Sans. Bijapuram |
| Mal. Ganapathi-Naranna | Hind. Maphal* |
| | Duk. Turanj |

இஃது, இந்தியாவின் தெற்கு. மேற்குக் கரைநாடுகளிலுள்ள தோட்டங் களில் பயிராகும் ஒரு வகை மரம்.

ப-உ : பழம், இரசம்.

சுவை-கைப்பு, புளிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
மணமூட்டி—Aromatic
பசிததீத்தூண்டி—Stomachic
துவர்ப்பி—Astringent
தாதுவெப்பகற்றி—Sedative
செரிப்புண்டாக்கி—Digestive

பண்பு : அழல் நோய், வாய்நீரூறல், சுவையின்மை இவை போம் இது நோயாளர்க்கு ஏற்றது.

பித்தமொடு வாயிற் பெருகல ரோசகம்போம்.
பத்தியமா நோயிற் பருகலாங்—குத்துங்
கடாரி யனையவிழிக் கன்னிமட மாதே !
கடாரநாரத்தங்கையைக் கண்டு. (அ-கு.)

வ-கு : இதன் பழரசம், தேக அனலைத் தணிக்கும் ; நீர் வேட்கையைப் போக்கும் ; வாந்தியை நிறுத்தும்.

பழத்தின் மேல் தோலைச சருக்கரைப் பாகிலேனும் தேனிலேனும் ஊறவைத்து, நன்றாய் ஊறியபின் எடுத்துச் சீதக்கழிச்சலுடையவர்க்குக் கொடுக்கலாம்.

மரத்தின் இலை, பூ, தோல் இவைகளிலிருந்து எண்ணெய் எடுப்பதுண்டு.

காய் : ஊறுகாய் போடலாம்.

பழரசத்தை மணப்பாகு செய்து, காய்ச்சல், வாந்தி முதலியவை களுக்குக் கொடுக்கலாம்.

---

## 113. கடுகு Kadugu

### வே. பெ. ஐயவி

கடுகில் இரண்டு இனமுண்டு : (1) கருங்கடுகு. (2) வெண்கடுகு. இவைகளல்லாமல், நாய்க்கடுகு, மலைக்கடுகு, சிறுகடுகு என வேறு மூன்று வகைகளுமுண்டு.

### கருங்கடுகு இதுவே செங்கடுகு—Karung Kadugu

Brassico Juncea

Eng : Black mustard seed.

**Tel.** Nalla-avalu

**Mal.** Karuththa-kaduga

**Kan.** Saasive

**Sans.** Rajika / Sarshapa

**Duk.** Rayan

இது சிறு செடி வகை ; இந்தியாவில் பல இடங்களிலும் பயிராகின்றது. வெண்கடுகை விட இதற்குக் காரம் மிகுதி. இதன் தோல் கறுப்பாக இருக்கும்.

## வெண்கடுகு—Venkadugu.

**Sinapis Alba Semina**

| | |
|---|---|
| Tel. Thella-avalu. | Pers. Sipandane-sufaid |
| Mal. Vella-kaduga | |
| Kan. Sasive. | Hind. Sufedrai |

இவ்விரண்டு விதக் கடுகுகளுக்கும்,

சுவை - காரம், தன்மை-வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி - Stimulant.
- துடிப்புண்ட -ஷோணகாரி—Rubefacient.
- கொப்புளமெழுப்பி—த்வக்ஸ்போடகாரி—Vesicant.
- செரிப்புண்டாக்கி—போசநகாரி—Digestive.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

### கருங்கடுகு

குணம் : இது, தலையிடிப்பைத் தரக்கூடிய இருமல், மூக்குநீர் வடிதல் கோழை, வெறி, காணுவிடக் கடி, குடைச்சல், முடம், மந்தம், குழம்பிய உமிழ்நீர், கழிச்சல், வயிற்றுவலி, முப்பிணி, இவைகளை விலக்கும் ; மேலும், சீதக் கடுப்பு, கீல் வாயு, செரியாமை, தலை சுழற்றல், விக்கல் இவைகளையும் போக்கும்.

### கடுகு

கடிப்பகை யெனவரு கடுகினை நாளும்
மிளகில வணத்தொடு மூன்றுமொன் றாக்கி.
யடுபுன லருந்துமு னயிலவை கறைதொறும்
வளிமுதன் மூலிகை வலியெலா மகலும்
பச்சடி முதற்கறி பண்பினு லயிலினு
நிச்சய மாயுணி கழ்பிணி யறுக்குமே : (தே—ன்)

(பொ - ள்) ஒவ்வொரு நாள் விடியற்காலையிலும் கடுகு, மிளகு, உப்பு இம்மூன்றும் ஒரு நீறையில் சேர்த்துச் சாப்பிட்டு, உடனே வெந்நீர் குடிக்க, வளி, தீ, ஐயம் இவைகளால் உண்டான துன்பங்கள் யாவும் நீங்கும். கடுகு சேர்ந்த பச்சடி முதலிய கறிகள் புசித்து வந்தாலும், உடம்பிலுள்ள மேற்படி நோய்கள் போம்.

நீரைப்பெருக்கும் - வாந்தியை உண்டபண்ணும்.

இடிகாச நாசிச்சூ ரீளைகபம் பித்தங்
கடிவாத சீதங் கடுப்போ—டுடலிற்
படுகோட்டு நோயென் னும் பங்கிவைக ளேப்புன்
கடுகோட்டு மேன்மருந்து காண்.
மந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றலறு
முந்து சுகப்பிரச வங்களுண்டா—மிந்துறுதன்
மானே ! இராணிகுன்ம மாறுமுத் தோடமும்போம்
தானே கடுகிற்குத் தான். (அ - கு)

## வெண்கடுகு

**குணம்** : குழந்தைகளுக்குண்டாகும் தோடங்கள், பூதபைசாச பார்வை, கடிகளின் குற்றம், முடக்குவாயு இவை நீங்கும்.

பாலக்கிர கம்பூத பைசாச மோட்டிவிடும்
மூல விஷங்கடிக ளாற்றுங்காண்—கோலமிகு
வள்ளைச் செவிமாதே ! மாபங்க நோய்விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி. (அ. கு.)

**அளவு** : 650 மி. கி. முதல் 1,300 மில்லி கிராம்.

**வ - கு** : கடுகை 2 கிராம் எடை அரைத்து, நீரில் கலக்கிக் கொடுக்க, வாந்தி உண்டாம். நஞ்சுண்டவர்களுக்குக் கொடுக்க, உண்ட நஞ்சு வெளியாம்.

கடுகை அரைத்துக் கெண்டைச் சதைகளில் துணியிற்றடவிப் போட, சுரவேகத்தினுலுண்டாம் மயக்க தோடங்கள் நீங்கும். கால் கைகளிற்றடவிச் சீலையைச் சுற்றிவைக்க, அவைகளில் தங்கிய சீதகுணம் நீங்கி வெப்பமுண்டாகும்.

தொண்டை, மார்பு முதலிய இடங்களில் தடவ, அவ்விடங்களிலுண்டாகும் நோய்களைத் தணிக்கும்.

மார்புக்குழியில் சீலையில் தடவிப்போட, விக்கல் தணியும்.

கீல் வாயு, குருதிக்கட்டிக்கொண்ட இடம் இவைகளுக்கு மேலுக்குப் பற்றிடலாம்.

தேனில் அரைத்துக் கொடுத்தால் இரைப்பு, இருமல் இவை தீரும்.

அடுத்தடுத்துக் கொடுத்தால் சிறுநீரைப் பெருக்கும்.

### கடுகு உக்களி.

கடுகுத்தூள், அரிசிமா இவைகளை ஓரெடையெடுத்துப் போதுமாசன் நீரிலிட்டுக் களிபோற் கிளறித் துணியிற்றடவி, வயிற்றுவலி குடைச்சல் இவைகட்கு அந்தந்த நோயுள்ள இடங்களிலும், இருமல், இரைப்பு இவைகட்கு மார்பின் மீதும், தலைவலி, வெறி இவைகட்குப் பிடரியின் மேலும், வாந்திபேதியிற் காணும் கெண்டைச் சதைப்புறழ்ச்சி இவைகட்குக் கால் கெண்டைச் சதையின் மேலும் போடக் குணமுண்டாகும்.

### கடுகுத்தைலம்.

இஃது, சற்று மஞ்சள் நிறமும், நெடியும், விறுவிறுப்பும் உடையது. சுவைக்கில் எரிச்சலைத்தருதலும், உடலில் படக் கொப்புளித்தலும் செய்யும்.

இதை நோய்களுக்கும் கழலைகளுக்கும் மேலுக்குப் பூசலாம்.

**செய்முறை** : கடுகை இடித்து, சிறிது கற்கண்டு சேர்த்து வெந்நீர் கூட்டி நெருக்கிப்பிழிந்தாவது, நீரிற் சேர்த்துக் காய்ச்சி நீரின் மீது எண்ணெய் படிந்துவரும்போதாவது, இதிலிருந்து எண்ணெய் எடுப்பது நாட்டு வழக்கம்.

கடுகுத்தூள் 8 கிராம், வெந்நீர் 130 மி.லி. எடுத்து, அதில் கடுகை ஊறவைத்து வடித்துக்கொடுக்க, விக்கல் நீங்கும். இது விக்கலைப் போக்குவதிற் சிறந்தது.

---

## 114. கடுகுரோகணி—Katukurohani.

**வே. பெ. கடுரோகிணி, கடகரோகிணி.**

Picrorrhiza, kurrooa,

| | |
|---|---|
| Tel. Katuku - rohini | Kan. Katurohini |
| Mal. Katuka - rohani | Sans. Katurohani |

இஃது, இமயமலையைச் சார்ந்த காஷ்மீரம் முதல், சிக்கிம் வரையிலுள்ள நாடுகளில் விளையும் ஒரு விதச் செடி. இதன் வேர், மேலே மங்கல் வெண்மையாயும், உள்ளே கறுப்பாயுமிருக்கும். இதற்கு, நாட்டுக்கடுகு ரோகிணி என்பது பெயர். இது கிழக்குத் தொடர்ச்சி மலைகளிலும் பயிராவ தாகச் சொல்லப்படுகிறது. மேல் நாடுகளில் பச்சை, கறுப்பு ஆகிய இரண்டு இனம் பயிராகின்றது.

ப - உ : வேர்.

சுவை - கைப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.
- முறைவெப்பகற்றி—முறைவ்யாதிரோதி—Antiperiodic.
- பெருங்கழிச்சலுண்டாக்கி—விரேசனகாரி—Cathartic.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.

திரரூ ஆக்நி

அளவு : கழியச்செய்ய, 325 மி.கி.—650 மி. கி. : பசித்தீத்தூண்டியாக 325 மி.கி.—450 மி.கி. ; முறை வெப்பகற்றியாக 650 மி.கி.—1300 மி.கி. மூன்று முதல் நான்கு முறை கொடுக்கலாம். இதிலிருந்து எடுக் கும் உப்புப் பொருளுக்கு " picrorhizin " என்பது பெயர்.

குணம் : மாந்தம், சுரம், ஐயப் பெருக்கு, கரப்பான், சீதக் கழிச்சல், வயிற்றுவலி, புண்கள், வளி நோய்கள் என்னும் இவைகள் போம்.

மாந்தஞ் சுரமையம் வாயுகரப் பானுமஞ்
சேர்ந்தமலக் கட்டு திரிதோடம்—பேர்ந்தபொட்டுப்
புண்வயிறு நோயிவைபோம் பொற்கொடியே—பேதியுண்டாம்
திண்கடுகு ரோகணிக்குத் தேர்.

(அ.கு.)

வ - கு : இதன் வேரை முறைப்படி குடிநீரிட்டு, தினம் 3 அல்லது 4 வேளையாக, 3 அல்லது 4 நாட்கள் கொடுக்க, வீக்கம் (Dropsy) நீங்கும் சுற்றேறக்குறைய 8 கிராம் எடை தூளை, நீரில் கலந்து சருக்கரை சேர்த்துக் கொடுக்கச் கழியச் செய்யும்.

## கடுகுரோகிணி—Katukurohani.

**கறுப்பு இனம்.**

**Black bariety of western market.**

**Helleborous Niger.**

**Eng : Black Hellebore.**

**Tel.** Katukarohini

**Mal.** Katukarohani

**Kan.** Katukarohini

**Sans.** Vakragra, Katurohini; Krishna Bhedi

**Arab.** Khartu, Kuerbeck

**Pers.** Kharbekahindi

**Hindi.** Kalikutkai.

இது (Black Hellebore) என்னும் செடியின் உலர்த்தப்பட்ட வேர் ; மேல் கறுத்தும், உள் வெளுத்தும் கெட்ட மணத்துடன் கூடியும் இருக்கும் ; நாட்பட்டதாயின் பயன்படா.

(நாக்கைத் திமிர்க்கக்கூடியது.)

**சுவை** - கைப்பு, கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- பெருமலம்போக்கி—வ்ரேசனகாரி— Cathartic.
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி —Emmenagogue.

**குணம் :** இதனால், சூதகக் கட்டு, நீர்க்கோவை, காக்கைவலி, வெறி இவைகள் போகும். பெருங்கழிச்சலுண்டாம்.

**அளவு :** 9 முதல் 40 குன்றி பேதியாக.

**வ - கு :** வேரைக் குடிநீரிட்டுக் கழியக் கொடுக்கலாம்.

## கடுகுரோகிணி—Katukurohani.

**பச்சையினம்.**

**Veratri Viridi Rhizome.**

**Eng : Green Hellebore Rhizome.**

**குறிப்பு.**—இஃது அமெரிக்காவில் விளைகிற ஒரு செடி. சுமார் 2—6 அடி உயரமிருக்கும். இதிலிருந்து வீவாடைன் (Cevadine), ஜர்வைன் (Jervine,) ரூபி ஜர்வைன் (Ruby jervine) ஸியூடோ ஜர்வைன் (Pseudo jervine), கிரடைன் (Caradine), வெராட்ரால்பைன் (Veratralbine), வெராடைன் (Veratine) என்கிற உப்புகள் எடுக்கப்படும் என மேல்நாட்டு மருத்துவர் கூறுவர்.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.**
- சோர்வுண்டாக்கி—(இருதய) அபகர்ஷனகாரி—Depressant.
- தாதுவெப்பகற்றி—சமனகாரி —Sedative.

குணம் : இது, சுரம், பிள்ளைத்தாய்ச்சிக்கு உண்டாகும் வலி (Puerperal Ecampsia), நுரையீரல் நோய் இவைகளைப் போக்கும்; நாடித்துடிப்பை அடக்கும் ; ஆனால், இது மிகுந்த கழிச்சலை உண்டாக்கும்.

வ - கு : கடுகுரோகணிப் பாவனத் திராவகம் :

சாராயம் 20 பங்கு, தூள் 4 பங்கு, கருடுகுரோகணி 2 நாள் ஊற வைத்து, பிற்பாடு வடிகட்டி எடுத்து, 5 முதல் 20 துளி வரை தினம் 2 அல்லது 3 வேளை கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் சாந்தமாகும்.

குறிப்பு: நச்சுத் தன்மையை உண்டாக்கும்படி இதைச் சாப்பிட்டால், முதலில் வெந்நீரைக் கொடுத்து வாந்தி ஆகும்படி செய்து, பிறகு அபினி, பிராந்தி முதலிய வெப்புப் பொருள்களைக் கொடுக்க வேண்டியது.

---

## 115. கடுக்காய்—Kadukkai.

**வே. பெ ; அக்கோடம், அங்கணம், அந்தன், அபரணம், அபையன், அமரிதம், அமலை, அமுதம், அம்மை, அம்ருதா, அரபி, அரிதகி, அலியன், அவ்வியதா, இரேசகி, ஏமவதி ஐயவி, ஹைமவதி, கடு, காயஸ்த்தா, சியிருதம், சிரேயசி, சிரோட்டம், சிவா, சேதகி, சேதநிகா, சேயா, திவ்யா, தேவி, நந்திரி, நெச்சி, பத்தியம், பாரியம், பிஷக் வரா, பூதனு, பூதன், ப்ரபத்யா, ப்ரா்ணதா, மேகம், வயதரம், வயஸ்த்தா, வரிக்காய், வனதுர்க்கி, விஜயவேதன், ரோகிணி, ஜிவநிகா ஜீவந்தி, ஜீவப்பிரியா, ஜீவ்யா, ஜெயா.**

**Terminalia chebula.**

**Eng : Chebulic Myrobalam, Ink nut.**

**Tel.** Karak-kaya
**Mal.** Katukkai
**Kan.** Anile-Kayi; Alale-Kayi
**Sans.** Pathya; Sudha; Bhishak Priya; Haritaki

**Arab.** Halila
**Pars.** Palilahe Zard
**Hind.** Pile Hara
**Duk.** Harda

கடுக்காய் மர வகுப்பைச் சேர்ந்தது ; இது சில இடங்களில் உயர்ந்தும் சில இடங்களில் மிக உயரமின்றித் தாழ்ந்தும் பயிராகின்றது. வட இந்தியாவில் உண்டாகும் மரங்கள் மிக உயரத்தை அடைகிறதில்லை. நருமதைக்குத் தென்பாகத்தில் வளர்ப்பவை சற்றேறக்குறைய 100 அடி உயரமுள்ளனவாகவே இருக்கின்றன. இலங்கைத் தீவிலும், இந்தியா முற்றிலும் இம்மரம் பயிராகின்றது ; தெற்கின் மேட்டுப்பாங்கான இடங்களிலும், குமாயூனிலும், வங்காளத்தின் மத்திய பாகங்களிலும் அளவு கடந்து விளைகின்றது.

**மு. உ. : பிஞ்சு, பழம்.**

## கடுக்காய்ப் பிஞ்சு—Kadukkai Pinchu.

**Tel.** Chitti karakkaya
**Mal.** Katukkaipinja
**Kan.** Alale pinda, Anile kai
**Sans.** Bala-Harithaki
**Pers.** Haleelai Siah
**Hind.** Bal Har, Zangi-har, Kale-har

இப்பிஞ்சை உலர்த்திய பின், முட்டை வடிவமாயிருப்பினும், இருபக்கங் களிலும் பெரும்பாலும் சப்பையாயும் சுருங்கியுமிருக்கும்.

குறிப்பு

" சுக்குக்குப் புற நஞ்சு "

" கடுக்காய்க்கு அக நஞ்சு "

என்னும் பழ மொழியின்படி, கடுக்காயுள்ளிருக்கும் கொட்டையின் பருப்பு நஞ்செனக்கருதினும், அது கண் நோய்களுக்காகச் செய்யும் மருந்துகளில் கூட்டப்படுகிறது.

வகை : மருத்துவர் கடுக்காயை அடியிற்கண்டபடி பிரித்துக் கூறுவர் :

### கடுக்காயின் பேதம்.

ஆதி விசயன் அரோகிணியோ டேபிருதிவி
தீதில் அமிர்தை சிவந்திமலே—மீதார்
திரிவிருத தியபயன் செப்பிலிவை யேழாம்
அரிதகியின் பேதம் அறி. (அ.கு.)

### 1. விசயன் கடுக்காய்.

விசயன் எனுங்கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசமதுதான் வாதத்தை நீக்கும்—மிசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் பேரவந்தி யாதேசம்
வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து. (அ.கு.)

### 2. அரோகிணிக் கடுக்காய்.

ஓதும் அரோகிணிக்கா யொன்றுண்டா னுற்சந்தி
பாதமொடு சீதம் பறக்குங்காண்—மீதுகுறி
நான்குவரி யாய்த்தோற்று நங்கா! அருண்நேசம்
ஆங்குகனி யாருமரி வாம். (அ.கு.)

### 3. பிருதிவிக் கடுக்காய்.

தோற்றம் பிருதிவிதான் [illegible] பலித்திரத்தை
மாற்றும் வயலந்த வரை[illegible]—[illegible]
மெல்லியதாம் அக்காய் [illegible] கனிந்த[illegible]
வல்லசைவு ராட்டிகமாம் வாழ்த்து. (அ.கு.)

### 4. அமிர்தக் கடுக்காய்.

அமிர்த மெனுங்கடுக்காய் அம்புவியி லுள்ள
திமிர் தசி லேட்டுமத்தைத் தீர்க்கும்—விமிதச்
சதைப்பற்றுண்டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங்
கதிக்கொத்த காசியென்பர் காண். (அ.கு.)

### 5. சிவந்திக் கடுக்காய்.

சிவந்தி எனுங்கடுக்காய் செய்குணத்தைக் கேள்வா
யுவந்தமூ லத்தையெலாம் ஓட்டுஞ்—சிவந்திப
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே! அந்தக்காய்
துன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல். (அ.கு.)

### 6. திருவிருத்திக் கடுக்காய்.

திருவிருத் திக்கடுக்காய் தேகத்தில் நாளும்
வருவிரணம் போக்குமதன் வன்னம்—ஒருவிதமோ
பஞ்சவன்னம் மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலே தோற்றுமுண்டாம் விள். (அ.கு.)

### 7. அபயன் கடுக்காய்.

அபயன் எனுங்கடுக்காய் அங்கநோ யெல்லாம்
அபயமிட் டோட அடிக்கும்—அபயற்
கதிக நிறங்கறுப்ப தாகுவிளை பூமி
பொதிய மலையாம் புகல். (அ.கு.)

### 1. விசயன்.

(a) விளைவு-அவந்தியில். (b) பேய்ச்சுரை போன்றது; (c) இது வளி நோய்களையும், மற்றைய எல்லா நோய்களையும் போக்கும்.

### 2. அரோகிணி.

(a) விளைவு - கன்னியாகுமரியில். (b) வட்டமும், நான்கு வரிகளுமுடையது; காய் சிறியது; ஆனல் கொட்டை பெரியது. (c) முப்பிணியையும் ஐயக்குற்றத்தையும், போக்கும் இந்தப் புண்களுக்குப் பற்றிடலாம்

### 3. பிருதிவி.

(a) விளைவு - சௌராஷ்டிரத்தில். (b) மெல்லிய தோலையுடையது. அழலைப் போக்கும்; உயிரை வளர்க்கும்.

### 4. அமிர்தம் சேதகி.

(a) விளைவு-காசியில். (b) சதைப்பற்றுள்ளது. (c) ஐயத்தைப் போக்கும் கழிச்சலை மிகவும் உண்டாக்கும். உடலுக்கும், மருந்துகளையிட்டு இளைத்தவர்கட்கும் இது நன்று.

குறிப்பு:—இதன் மணமே கழிச்சலை உண்டாக்கும்.

சேதகி மூன்று வரம்புகளையுடையது. இதில் இருவகையுண்டு:

(1) வெள்ளை, (2) கறுப்பு.

வெள்ளை 6 அங்குல நீளம். கறுப்பு 1 அங்குல நீளம்.

5. சிவந்தி (அரிதகி).

(a) விளைவு-காடுகளில். (b) பொன்னிறமுடையது. (c) மூலத்தைப் போக்கும். இதை மற்ற நோய்களுக்கும் வழங்கலாம்.

6. திருவிருத்தி (மொந்தன்).

(a) விளைவு - மலைகளில். (b) மூன்று வரம்புடையது ; ஐந்து நிற முடையது. (c) புண்ணைப் போக்கும்.

7. அபயன்.

(a) விளைவு-பொதிகைமலையில். (b) ஐந்து கீற்றுகளுடையது, கறுப்பு நிறமுடையது ; உருண்டு, இரண்டு அங்குல நீளம் இருக்கும் வறட்சியுடையது. (c) அங்கநோயையும் கண்நோயையும் போக்கும் கோழையையகற்றும் மலத்தைப் போக்கலும் இதற்குச் சிறப்பாகும்.

குறிப்பு : மேற்கூறிய வகைகளுள் ஒன்று சாப்பிட்டால் கழியும்.

| | | |
|---|---|---|
| ,, | முகர்ந்தால் | ,, |
| ,, | தொட்டால் | ,, |
| ,, | பார்த்தால் பேதியாகும். | |

மேற்கூறிய ஏழுமன்றி, வேறு 4 வகைகளும் கூறப்படுகின்றன.

கருங்கடுக்காய்.

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும்—பழகி
மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண். (அ.கு.)

செங்கடுக்காய்

சத்தியொடு புத்தி சுகமும் புகழுமுண்டாம்
மெத்தவொளிர் பொன்னிறமாம் மேனியெல்லாஞ்—சுத்தகப
வங்கடுத்த லீளைபல வன்காச மும்மலமஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர். (அ.கு.)

வரிக்கடுக்காய்.

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவையுண் டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந்—துடுக்கான
வாதபித்த ஐயகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதி வரிக்கடுக்காய் தான். (அ.கு.)

பால்கடுக்காய்.

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுஞ்
சேமம் பெறுபலமுஞ் சேருமே—தாமநெடும்
வேற்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே எப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார். (அ.கு.)

1. கருங்கடுக்காய்.

இது, பழைய எருவை (மலத்தை)ப் போக்கும். உடலுக்கு அழகையும் புத்திக்குத் தெளிவையும் உண்டாக்கும் ; வாத பித்த கபத்தை நீக்கும்.

2. செங்கடுக்காய்.

இது நீர் நரம்பின் துளைகளிலுண்டாகிய ஈளையையும், முப்பிணி நோய்களையும் போக்கும். இதனுல் உடல் பொன்னிறம் பெற்று ஒளிரும் புத்தி பெருகும்.

3. வரிக்கடுக்காய்.

இஃது உடலை வலுக்கப்பண்ணும்; விந்துவைப் பெருக்கும்; தேகத்துக்கு அழகைத் தரும்; திரிதோடத்தைப் போக்கும்; தீபனம் பாசனம் இவைகளை உண்டு பண்ணும்.

4. பால்கடுக்காய்.

இஃது உடலுக்கு அழகையும், ஒளியையும், வன்மையையும் தரும்; வயிற்று மந்தத்தைப் போக்கும்.

குறிப்பு : இந்நான்கும், மேற்படி ஏழு வகைகளுள் அடங்கினவையே.

இவை தவிர, காபூல் கடுக்காய், சூரத்துக் கடுக்காய், என வேறிரு வகைகளுமுண்டு. இவை யூநாநி மருத்துவர்களால் மிகுதியும் கையாளப் படுகின்றன. தற்கால வழக்கில் வரும் பிரிவுகள் 4. மேற்கண்ட பிரிவுகள் யாவும் தற்காலம் கிடைப்பது மிக அரிது.

1. இளம் பிஞ்சு (tender of very young fruits)

இது பச்சையாயும், உலர்ந்தபின் சுருக்கமும் சப்பையுமுடையதாய்க் கறுத்துச் சிறுத்திருக்கும்.

முதிர்ந்த கடுக்காய்.

இது, நம் நாட்டில் கிடைப்பனவும் வெளிநாட்டிலிருந்து வரக்கூடியனவுமான சூரத்துக்கடுக்காய் காபூல் கடுக்காய் என்னும் இரண்டுமாம். நாட்டுக் கடுக்காயில் முற்றிப் பழுத்தது, பசுமை நிறத்தோடும் சதைப்பற்றுள்ளதாகவுமிருக்கும். அவ்வாறு இல்லையேல், கருநிறத்தோடு சதைப்பற்று அற்றதாக இருக்கும். காபூல் கடுக்காய், பார்வைக்குப் பெரியதாகத் தோன்றினும், ஊட்டமில்லாமல் இருக்கும். சூரத்துக்கடுக்காய், மஞ்சள் நிறத்தோடு ஊட்டமும், எடையோடுமிருக்கும்.

சுவை—முக்கிய சுவை-துவர்ப்பு, அத்துடன் சிறிது-இனிப்பு-புளிப்பு கார்ப்பு, கைப்பு பெற்றிருக்கும்.

கொட்டை-துவர்ப்பு, பருப்பு-இனிப்பு, நரம்பு-புளிப்பு, காம்பு-கைப்பு, தோல்-கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-இனிப்பு.

குறிப்பு :—அறுசுவைகளுள் உப்புச்சுவை நீங்கலாக மற்ற ஐந்து சுவைகளும் இதில் அடங்கியிருக்கின்றன ஆகையால் இது முக்குற்ற அளவாகிய முப்பிணியைப் போக்கும் வல்லமை உடையதாயிருக்கின்றது.

புளிப்புச் சுவையால் வளிக்குற்றத்தால் உண்டாகும் நோய்களும், இனிப்புச் சுவையால் தீக்குற்றத்தினல் ஏற்படும் நோய்களும், கார்ப்பு, கைப்பு, துவர்ப்புச் சுவைகளால் ஐயக்குற்றத்தால் உண்டாகும் பிணிகளும் போம்.

குற்றங்களில் ஒன்றை மிகுத்தும், மற்றொன்றைக் குறைத்தும் செய்யுந்தன்மை இதற்கின்மையே, இதன் ஒப்பற்ற பெருமையாகும்.

மேலும் கடுக்காயில் அமைந்துள்ள ஐம்பெரும் பொருளின் (பூதங் களின்) கூட்டுறவே, இஃது இனிப்புப் பிரிவை அடைய ஆதாரமாகின்றது.

**குணம்** : இது, வெம்மை, நொய்மை, வறட்சி, இயக்கம் என்னும் பண்புகளையுடையது. மேலும், இது பசித்தீயைத் தூண்டிச் செரிப்பிக்கச் செய்து, உடற்கட்டுகளுக்கு வன்மை தந்து, முதுமை வரவொட்டாமற் செய்யும். அன்றியும் வாழ்நாள் பெருக்கையும், அறிவையும், ஆற்றலை யும் தரும். ஆதல்பற்றி இஃதொரு காயகற்பப் பொருளாகக் கொள்ளப் படுகிறது.

இன்னும், இது வாதாதி குற்றங்களைக்கீழ் நோக்கச் செய்யவும், பசியைத் தூண்டவுங் கூடியது. பக்குவமாகாத உணவைச் செரிப்பிக்கவும் செய்யும்.

தோடங்கள் தங்கிய இடங்களிலிருந்து அவைகளை வெளிப்படுத்துதல் குடலிலுள்ள இயற்கைச் சக்தியைத் தூண்டி மலத்தை வெளிப்படுத்துதல், கிழத்தன்மையைத் தடுத்தல் ஆகியவையும் இதற்குண்டு.

இஃதன்றியும் கடுக்காயினால், கன்னம், கழுத்து, நா, ஆண்குறி, இவ் விடங்களின் நோய்கள், காலடிப்புற்றுநோய், அதிதூலம், இடிப்புண், வாத சோணிதவாதம், காமாலை, தாவ, ரசங்கமவிடங்கள் இவை போம்.

தாடை கழுத்தக்கி தாலு குறியிவிடப்
பீடை சிலிபதமுற் பேதிமுடம்—ஆடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணிகா மாலையிரண்
டாலமிடி போம்வரிக்கா யால்.

**பொதுப் பண்பு**

மிகுநீர் போதல், சுவையறியாமை, தமரக நோய், குருதியழல், இடி பட்டபுண், உதாவர்த்தவாதம், உதட்டு நோய், கண் நோய்கள், இருமல், காமாலை, புழுநோய்கள், குன்மம், குட்டம், கைகால் எரிச்சல், கோழை வெளிப்படுதல், தலை நோய்கள், சோபை, இரைப்பு, தொண்டைக் கம்மல், நீர் வேட்கை, ஆண்மையின்மை, ஈரல் நோய், வெள்ளை, பெருவயிறு, நாவறட்சி, நாவிணேய்கள், நிறம்மாறுபடுதல், பங்குவாதம், பாண்டு, மார்புநோய், மூத்திரகாதம், மூத்திரகிரிச்சம், மூர்ச்சாரோகம், மூல ரோகம், மேகரோகம், மேதோரோகம், வயிற்றுப்பொருமல், வயிற்று வலி, வாதரத்தம், வாதானுலோபம், வாய்நீர் சுரத்தல், வாந்தி, விக்கல் புண், விரைவாதம், வெண்குட்டம், விடசுரம், புராணசுரம், க்ஷயம், சூலைவியாதி, இந்திரிய மார்க்கங்களிலும் மலம் முதலியவைகளிலும் வெளிப்படவேண்டிய மார்க்கங்களிலும், அடைபடுதல், முதலிய நோய்க ளல்லாமல், அசீரணம், அழலை, அஸ்மரி, இருமல், இளைப்பு, உள்ளங்கால் எரிவு, உட்சூடு, உன்மத்தம், உஷ்ணவாயு, கபவாத ரோகம், கிரந்தி, தலை எரிவு, குடல்புரட்டல், கைஎரிவு, தோஷம், பவுத்திரம், புகைச்சல், மண்டைப்புற்று, மண்டைக்கிரந்தி, வயிற்றுக்கட்டி, வாதரத்தம், வாய்ப்புண், முதலிய நோய்களும் தீரும்.

**கடுக்காயின் சிறப்பு.**

கடுக்காயுந் தாயுங் கருதிலொன்றென் றாலும்
கடுக்காயத் தாய்க்கதிகங் காண்நீ—கடுக்காய்நோய்
ஒட்டி யுடற்றேற்றும் உற்றவன்னை யோசுவைகள்
ஊட்டியுடற் றேற்று முவந்து (அ.கு.)

தாயோ, அறுசுவை உணவை ஊட்டி உடலைத் தேற்றுவாள். கடுக் காயோ, உடற்பிணிகளை ஒட்டி உடலைத் தேற்றும். பிணிகளை நீக்கி னலல்லவோ, உணவு பயன்பட்டு உடல் தேறும். ஆதலின், தனு உணவை மாத்திரம் ஊட்டுந்தன்மை உடையவளாதலால், தாயினும் கடுக்காய் சிறந்ததெனக் கொள்க.

**கடுக்காயைக் கொள்ளக் கூடாதவர்கள்:**

செரிப்புத்தன்மையற்றவர், வறட்சியான உணவு கொண்டவர், இல் வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளோர், நஞ்சு, பசி, அழல் நோய் முதலியவற்றால் துன்புற்றோர், மிகுவழி நடந்தோர், பட்டினி கிடந்தோர், பிள்ளைதாய்ச்சிகள், குருதிவாங்கப் பெற்றவர், தாள் கட்டப்பட்டவர், சுரமுடையவர், வாய் பூட்டுத் தளர்ந்தவர், தொண்டை இறுகலுள்ளவர் ஆகியவர் கடுக்காயைக் கொள்ளலாகாது.

**வ- கு: காயகற்பகமாகக் கொள்ளும்போது நோக்கவேண்டுவன:**

**உணவிற்குப் பின் கொள்ள உணவின் வெறுப்பை நீக்கும்.**

உப்புடன் சேர்த்துண்ண—ஐயமும்,
சர்க்கரையுடன் சேர்த்துண்ண—அழலும்,
நெய்யுடன் சேர்த்துண்ண—வளியும்,
வெல்லத்துடன் சேர்த்துண்ண—முக்குற்றமும் போம்.

**குறிப்பு:**

கார், கூதை, முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், ஆகிய பருவங்களில் இதை இராசயனமாக உபயோகப்படுத்தும்போது, முறையே இந்துப்பு, சர்க்கரை, சுக்கு, திப்பிலி, தேன், வெல்லம், இவைகளைச் சேர்த்து உபயோகிக்க, அவ்வப் பருவத்தால் நேரிடும் தோடங்கள் நீங்கும்.

**வேறு வழக்கு.**

கடுக்காய்த் துவையல் அரோசகத்தைப் போக்கும்; மலத்தைக் கட்டும்.

கஷாயமிட்டுக் கொடுக்க, அதி மூத்திரம், கண்ணோய் குணப்படும்.

பொடி செய்து, பல் துலக்க, ஈறுவலி, ஈறிலிருந்து வடியும் இரத்தம் நிற்கும். விரணம் ஆறும், பல்லிறுகும்.

கடுக்காயும், காசுக்கட்டியும் சமபாகமெடுத்து அரைத்து நாக்கு விரணத்துக்குத் தடவ, நன்மை தரும்.

கடுக்காயின் நுண்ணிய பொடியையேனும், கஷாயத்தையேனும் மூலத்தின் மீது தூவ அல்லது கழுவ இரத்தம் நிற்கும்.

கடுக்காய்ப் பொடியை நசியமிட, இரத்தபீநசம் தீரும்.

கடுக்காய்த்தோல், கிராம்பு அல்லது இலவங்கப்பட்டை வராகனெடை 1 எடுத்து, ¾ ஆழாக்கு நீர்விட்டு, 10 நிமிஷம் காய்ச்சி வடிகட்டி உபயோகிக்க, வயிற்றுக்கடுப்பு நீங்கும். வாந்தியின்றி நாலைந்து முறை பேதியாகும்.

மேற்கூறிய நீருக்குப் பதில் பால் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்க, சீதபேதி நிற்கும்.

ஒவ்வொரு நாளும் காலைதோறும் கடுக்காயை ஓராண்டு சாப்பிட்டு வர, நரைதிரை மாறும்.

பாவனக்கடுக்காயால், அரோசகம், ஆமலபித்தம், இரத்த பித்தம், இருமல், குன்மம், சுவாசகாசம், சூலை, வயிற்றுநோய், வாந்தி, வாத நோய், மூலம், ஊழி, மந்தம், பாண்டு முதலியநோய்கள் நீங்கும்.

பச்சைக்கடுக்காயைப் பாலிலரைத்துச் சாப்பிட, இருமல், ஈளை, சீதக் கடுப்பு, புகையிருமல் நீங்கும்.

கடுக்காய்ச் சமூலத்தைப் பாலிலரைத்து உட்கொள்ள, கரப்பான், குட்டம், கிரந்தி, வங்கு, சில்விடம் நீங்கும்.

**கடுக்காய் சத்து,** கரியபோளம், நாபிக்கிழங்கு, அபின், கொடி வேலி, எருக்கன்வேர், வாளம் இவைகளைச் சமபாகம் எடுத்து எருக்கன் பாலில்ரைத்து அல்லது எருக்கன் பழுப்புச் சாற்றில் அரைத்துத் தடவ, பிளவை, கட்டி, பரு, அரையாப்பு இவைகள் நீங்கும்.

கடுக்காயைத் தட்டித் துணியில் முடிந்து, ஆமணக்கெண்ணெயி லிட்டுச் சூரிய புடம் வைத்து, கண்ணில் பிழிய கண் அமரம் நீங்கும்.

**கடுக்காய் நெய்:** இரண்டு கழஞ்சு வீதம் தினம் இரு வேளையாகக் கொடுத்துவர, வீக்கம், பித்தம், சோகை, எரியக்கினி, மந்தம் போம். மலக்கட்டு இளைப்பு, பித்தவெப்பும் தீரும்.

**கடுக்காய் லேகியம் :** கடுக்காய் 100 பலம் இடித்து, 2 மரக்கால் நீரிற் போட்டு, $\frac{1}{8}$ ஆக வற்றவைத்து, வடித்த கஷாயத்தில் 10 பலம் சரக்கரையைக் கரைத்துப் பாகு செய்து, அதில் சிவதை, இஞ்சி, மிளகு, ஓமம், வாய்விளங்கம், திப்பிலி வகைக்குப் பலம் 1 எடுத்து அரைத்துப் போட்டு, ஆவினெய் ஒரு படி விட்டுக் கிண்டி இலேகியஞ்செய்து, வேளை ஒன்றுக்குப் புன்னைக்காயளவு உட்கொள்ள, அக்கினிமந்தம், சூலை, மல சலக்கட்டு, வாயு, மூலம் தீரும். கரப்பான் பதார்த்தம் தள்ளவும்.

**கடுக்காய் வடகம் :** ஒன்றிரண்டு உட்கொண்டுவர, வாந்தி, குன்மம், சுவாசகாசம், மூலம், கிராணி, அரோசகம், பாண்டு, வீக்கம் வயிற்று வலி, சூலை, வயிற்றுளைவு, சோகை முதலியன நீங்கும்.

**கடுக்காய்ச் சத்து :** பருமனுள மஞ்சட் கடுக்காயைப் பிளந்து, கொட்டையை எடுத்துவிட்டு, ஒரு பெரிய வாயகன்ற ஜாடியிலிட்டு நீர்விட்டு ஊறவைத்து எடுக்க, அந்நீரானது கடுக்காயின் நிறம் பெற்றிருக்கும். பிறகு தண்ணீரை வடிக்கட்டி எடுத்து, வெயிலில் நாடோறும் வைத்துச் சுண்ட வைக்க, குழம்பாகிக் கரிய போளத்தையொத்து இருக்கும். இரண்டு முதல் $2\frac{1}{2}$ வராகனெடை தேக பலத்துக்குத் தக்கபடி கொடுத்து வரப் பேதியாகி பழ மலங்களும் வெளிப்படும். இரைப்பையும் பலப்படும். பாண்டு ரோகந் தீரும். இத்துடன் காந்தச்செந்தூரத்தைச் சேர்த்துக் கொடுத்து வரலாம். இச்சத்தை ஒரு நாள் விட்டு ஒரு நாள் கொடுத்து வருவது உத்தமம்.

**செங்கடுக்காய் லேகியம் :** இதில், செங்கடுக்காயைக் கொட்டை போக்கி, 10 முறை நீரில் ஊறவைத்துப் பிசைந்தெடுத்து, வெயிலில் உலர்த்தி, எடுத்துக்கொண்டு, பிற்பாடு பழங்காடியில் முன்போலப் பிசைந்தெடுத்து நீர் வற்றக் காயப்போட்டு, பின்பு எலுமிச்சம்பழச் சாற்றில் பிசைந்துருட்டி, வெயிலில் காயப்போட்டுப் பொடித்து, பீங்கானிலிட்டுப் பழச்சாறு விட்டு, நிறுனமாய் உப்புச் சேர்த்து, உலர்த்தியிடித்து, மேலும் பழச்சாறு விட்டுப் பதப்படுத்தி, நிழலிலுர்த்தி, பரணியிலடக்கம் பண்ணி, பணவெடை வீதம் ஒரு மண்டலம் கொள்க.

இதனல் சீதம் போம். மலம் தங்கா. வாதநீர் பித்த நீர், கபநீர் நீங்கும். நரைதிரை மாறும். காயசித்தி உண்டாகும்.

வனதுர்க்கிச் சேய்க்கு மணித்தயிலம் பூசி
அனலிற் பொரித்தாங் கருந்தத்—தினமுமலச்
சிக்கலக்க டுப்பநின்ற சீதமறுங், காற்றுகைத்த
மூக்கலக்க டுப்பிருக்கு மோ !

(அ. கு.

கடுக்காய்ப் பிஞ்சு.

(பொ-ள்.) கடுக்காய்ப் பிஞ்சுக்கு, எருச்சிக்கலும், எலும்பைப் போல வெளுத்து வராநின்ற சீதமும் நீங்கும், கீழ் வாயுவினால் பிறந்தமுக்கலும் எருவாயக் கடுப்பும் இராது.

அரிதகி.

சொல்லு மரிதகிமேற் றோலை மதுவுடனே
யல்லும் பகலு மயிலவே—கல்லுங்
கரைய வுரமெழுப்புங் காயசித்தி யுண்டாம்.
நரையுந் திரையுமிலை நை.

(தேரன்வெண்பா).

கடுக்காயின் மேற்றோலைத் தேனுடன் உண்ணின் உடலுரமாகும்.

கடுக்காய்க் கற்பம்

மலைக் கடுக்காய் வருணத் துடனுணக்கா
மாலைக் கடுக்காய் மகோதரம் போம்—மாலையடக்குஞ்

(பொ-ள்) கடுக்காயை மாத்திரம் தூள்பண்ணும் முறைப்படி பண்ணி வைத்துக் கொண்டு, ஒரு நிலக்கடலையளவாய், நல்ல தண்ணீருடன் எப்படிப் புசிக்க வேண்டுமோ, அப்படி உண்டு வருவாயாகில், நீ காமாலை என்று சொல்லப்பட்ட பிணியினால் பீடிக்கப்பட்டு வருந்த மாட்டாய்.

முற்கூறிய பிரயோகங்களல்லாமல், கடுக்காய்க் கஷாயம், கடுக்காய்த் தித்திப்பு, பாவனைக்கடுக்காய், கடுக்காய் நெய் முதலிய செய்முறைகளுமுள.

## 116. கட்டுக்கொடி--Kattukodi

**Cocculus villosus**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dusari-tiga. | Sans. | Jaljamni.<br>Vasanavalli.<br>Vanatik-tika. |
| Mal. | Kattukodi. | | |
| Kan. | Dagada.<br>Katte-tige | Hind. | Faridbale<br>Jamtiki bel<br>Jamtika-patta. |

இஃது இந்தியாவில் உஷ்ணப் பிரதேசங்களில் வளரும் ஒருவிதக் கொடி யினத்தைச் சேர்ந்தது. இதில் சிறு கட்டுக்கொடி, பெருங் கட்டுக்கொடி என இரு பிரிவுகள் உண்டு.

ப- உ: இலை, வேர்.

சுவை: துவர்ப்பு, கைப்பு, தன்மை- வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- உடற்றேற்றி—வ்யுதாபேதகாரி–Alterative.
- எருவிளக்கி—லகுவ்ரேசநி-Laxative.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி–Demulcent.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி–Refrigerant.

**குணம்** : சிறு கட்டுக்கொடியால், சீதரத்தமும், மேகநீர்ப்பெருக்கும் நீங்கும்.

பெருங் கட்டுக்கொடியால், பெரும்பாடும், கழிச்சலும் நீங்கும். மேலும், நீர் எரிச்சல், நாட்பட்ட வளிநோய். குன்மம் முதலியனவும் குணமாம்.

பெரியகட் டுக்கொடிக்குப் பேசுபெரும் பாடும்
அரியமல பேதியும்போ மப்பால்,—உரிய
சிறுத்தகட் டுக்கொடி தான் சீதரத்தம் நீக்கும்
இறுத்தபுன லேக்கட்டு மெண்.

(அ.கு.).

**வ-கு** : இதன் இலைச்சாற்றைப் பிழிந்து நீரில் விட்டால், நீர், வெண்ணெய் போலக் கட்டுப்படும். அதைத் தோல் சம்பந்தமான நீர்க் கசிவுக்கும், கரப்பான் முதலிய நோய்களுக்கும் இடச் சுகந்தரும்.

இலைச்சாற்றோடு சருக்கரை கலந்து பிரமேகத்துக்குக் கொடுக்க, நீர் எரிச்சல், நீர் பாயும் போது குத்தல் முதலியவை தீரும்.

வேர் 1 பங்கு, நீர் 10 பங்கு எடுத்துக் கஷாயமிட்டு 30 மி.லி. முதல் 60 மி. லி. வீதம் நாட்பட்ட வாதரோகத்துக்குக் கொடுத்துவரலாம்.

இத்துடன் சிறிது இஞ்சிச்சாறும் சருக்கரையும் சேர்த்து, பிக்க குனமகதுக்குக் கொடுக்கலாம்.

---

## 117. கணப்புண்டு—Kanap-pundu.

**Exacum pedunculatum,**

இஃது இந்தியா முற்றிலும் பயிராகும். பூ உதிர்ந்தவுடனே இதைச் சேகரிப்பது உத்தமம்.

**ப-உ** : இலை.

**சுவை** : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

**செய்கை** : வீக்கமுருக்கி—சோபாநாசநி—**Deobstruent.**
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—**Febrifuge.**

**குணம்** : இதனால், மேகக்கட்டி கரையும், வாத பித்தகணங்களும், கபசுரமும் போம்.

கணப்பூண் டிலேமேகக் கட்டியைக்கரைக்கும்
மணக்குமிக வாய்க்கு மதுரஞ்—சிணுக்கான
வாதகணம் பித்தகணம் மாற்றுங் கபசுரத்தின்
பேதமறப் போக்குமெனப் பேசு.

(அ.கு).

**வ-கு** : பச்சையிலையை அரைத்துக் கட்டிகளின் மீது வைத்துக் கட்ட கட்டி கரையும்.

உலர்ந்த இலையில், வேளைக்குக் கால் பலமெடுத்துக் குடிநீர் செய்து கொடுக்க, கபசுரம், வாத-பித்த கணம் தீரும்.

## 118. கண்டங்கத்திரி Kandangkattari

Solanum xanthocarpum.

Eng.—Wild eggs plant ; Bitter-sweet woody nightshade

Tel. Nela Mulaka - Vakudu.

Mal. Vellottuvālutina. Kantānkāth-thiri.

Kan. Nela-gulla.

Sans. Kanta - karika. Nidegdhika

Arab. Hadaka.

Pers. Badınjan - i - bari.

Hind. Kateli. Bhat katai.

இது செடி வருக்கத்தைச் சேர்ந்தது ; எல்லாவிடங்களிலும் கிடைக்கும் ; முக்கியமாகக் கிழக்கு மேற்குக் கரையோரங்களில் ஏராளமாய் வளரும்.

ப-உ : இலை, பூ, காய், பழம், விதை, வேர்.

சுவை- கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- கோழையகற்றி—கபஹரகாரி-Expectorant.
- சிறுநீர்ப் பெருக்கி—மூத்ரவர்த்தநி-Diuretic.
- அகட்டுவ ய்வகற்றி—உதரவாதஹ காரி-Carminative.
- விதை.
- பெருங்கழிச்சலுண்டாக்கி—ஜலவ்ரேசநி-Hydragogue.

குணம் : இதனால், காசம், சுவாசம், க்ஷயம், அக்கினி மந்தம், தீச்சுரம், சந்நி வாதம், ஏழு வகைத் தோடங்கள், வாத நோய் ஆகியவை போம்.

காச சுவாசங் கதித்தக்ஷய மந்தமனல்<br>
வீசுசுரஞ் சந்நி விளைதோடம்—ஆசுறுங்கால்<br>
இத்தரையு ணிற்கா, எரிகாரஞ் சேர்க்கண்டங்<br>
கத்திரியுண டாமாகிற் காண். (அ.கு)

காய்.

இதனால் ஐயப்பிணி தீரும். மேலும், இது சீதங் கலந்து கழியச் செய்துப் பசியைத் தூண்டும்.

ஐயமறுந் தீபனமாம் ஆமமலக் கட்டுகளும்<br>
பையவெளி யாகிவிடும் பார்மீதிற்—செய்யமலாத<br>
தொத்திருக்கும் வார்குழலே ! தூமணலா ருங்கண்டங்<br>
கத்தரிக்கா யைப்புசிக்குங் கால். (அ.கு.)

### பழம்.

இஃது, இருமல், இரைப்பு, இளைப்பு, நோய், ஐயப் பிணி, பல்லரணை, புடை, நமை இவைகளைப் போக்கும் ; வன்மையையும் பசியையுமுண் டாக்கும்.

காசஞ் சுவாசங் கயஞ்சீதம் பல்லரணை
வீசு சொறிதினவை விட்டோட்டும்,—பேசுடலை
உத்தரிக்குந் தீபனத்தை யுண்டாக்கி டுங்கண்டங்
கத்தரிப்ப ழக்குணத்தைக் காண்.

### சமூலம்.

உடலின் நீரேற்றம், மூக்கில் நீர் பாய்தல், ஈளை (கயம்), இரைப்பு இவை போம்.

வேரிலைபூ காய்பழமவ் வித்துமதன் பட்டையுமிவ்
வூரி லிருக்க உடற்கனப்பும்,—நீராய்
வரும்பீந சங்கயஞ்சு வாசமுந்தங் காதே
அருங்கண்டங் கத்தரியு ளார். (அ.கு.)

### இலை.

வ-கு : இதன் இலைச்சாற்றில், அல்லது குடிநீரிட்டு எண்ணெய் கலந்து காய்ச்சிப் பூசிவர, தலைவலி, கீல் வாதம், அக்குள் நாற்றம் முதலியவை நீங்கும்.

இதன் இலைரசத்தில், ஆளிவிதைநெய் சேர்த்துக் காய்ச்சி, வெடிப்பு களிற்பூச, அவை வெகு சீக்கிரத்தில் மாறும்.

### பூ.

வ-கு : இதன் பூவை வாதுமை நெய்யில் சேர்த்துக் காய்ச்சிப் பூச, எருவாய் முளையைப் போக்கும்.

### பழம்.

வ-கு : இதன் பழத்தைக் குழைய வேகவைத்துக் கடைந்து வடிகட்டி எடுத்த அளவு 4-க்கு, ஒன்று செய்த்தூன் எண்ணெய் சேர்த்துக்காய்ச்சி, கடுகு திரள வடித்து வைத்துக்கொண்டு, வெண்குட்டத்தின் மீது பூசிவர, வெண்மை மறைந்து உடல் நிற மடையும்.

மேற்படி அளவாகவே, சுரைவித்தெண்ணெயில் சேர்த்துக்காய்ச்சிக் காதுக்குள்விட, காதுவலி தீரும்.

### விதை.

வ-கு : இதன் விதைகளை எரித்து, அதனின்று எழுகின்ற புகையைப் பிடிக்க, பல்வலி நீங்கும். புழுக்கள் சாகும்.

### வேர்.

வ-கு : இதன் வேரை முறைப்படி கஷாயமிட்டு, அதில் திப்பிலிச் சூரணமும் தேனும் சேர்த்துக்கொடுக்க, இருமல், நீர்தோஷம் முதலியன சுகமாம்.

**கண்டங்கத்தரி வேர் குடி நீர்**

கரிய கண்டங் கத்திரிவேர் கார முள்ள சிறுதேக்கு
முரிய முத்தக் காசுடனே யொத்த சுக்குச் சிறுமூலம்
தெரிய விருபடி நீர்விட்டுச் சிறுகக் காய்ச்சிக் குடிப்பீரேல்
தரியா தோடும் வாதசுர மென்றே தரணிக் குரைசெய்வாய்.

(தேரன் - குடிநீர்.)

(பொ- ள்.) கண்டங்கத்தரி வேர், கண்டுபரங்கி, முத்தக்காசு (கோரைக் கிழங்கு), சுக்கு, சிறுவழுதலைவேர் முதலியவற்றை ஒரே அளவில் எடுத்து, இரண்டு நாழி தண்ணீர் விட்டு, எட்டில் ஒன்ருய் வற்றக்காய்ச்சி அருந்தில், வாதசுரம் நில்லாது நீங்கிவிடும்.

## 119. கண்டுபாரங்கி—Kanduparangi

**வே. பெ சிறுதேக்கு**

**Clerodendron serratum.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Gantu Bharang** | **Sans.** | **Bharngi** / **Barbara** |
| **Mal.** | **Cherutekka** | | |
| **Kan.** | **Bharangi** | **Hindi** | **Gant-Bharangi** |

இஃது இந்தியாவில் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும்.

**ப - உ :** இலை, வேர்.

**சுவை** - கைப்பு, துவர்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :** வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant**
தாதுவெப்பகற்றி—சமநகாரி—**Sedative**

**குணம்:** இதனால் முக் குற்றம், இரைப்பிருமல், உள்வெப்பு, வெறி நோய் (பைத்தியம்), சுரம், மூக்கில் முன்நீர்க்கோவை, பின் நீர்க்கோவை, நாட்பட்ட வளிநோய், குளிர் காய்ச்சல், உடல்வலி, உட்காந்தல், மனத் தடுமாற்றம் தீரும்.

கண்டுபா ரங்கியெனுஞ் சிறுதேக் குண்டேல்,
காலெங்கே பித்தமெங்கே கபந்தா னெங்கே
தொண்டுதொட்டுத் தொடர்சுவாச காச மெங்கே
சுரமெங்கே வெறியெங்கே தொனிநோ யெங்கே
மிண்டுபுரி பீநசநீர்க் கோவை யெங்கே
வெளிநீருண் ணீரெங்கே விறற்கா லெங்கே
அண்டுபடாச் சீதசுரங் கடுப்பு மெங்கே
யழலையக நோயெங்கே யறைகு வீரே!

(தே.கு.)

**அளவு :** 2 கிராம் முதல் 4 கிராம் எடை.

**இலை.**

**வ - கு :** இலையை அரைத்து, வீக்கம் கட்டி முதலியவைகளுக்குப் பற்றிட, அவை பழுத்து உடையும்.

இலையை முப்பிலைக்குடிநீரில் அரைத்து, மேற்படி நோய்களுக்குப் பற்றிடலாம்.

**வேர்.**

இதன் வேர்ப்பொடி, சுக்குத்தூள் இவைகளை ஓரளவாக எடுத்துத் தேனிற் கலந்து கொடுக்க, இரைப்பிருமல் தீரும்.

இதைக் கால் பலமெடுத்துச் சிதைத்துக் குடிநீரிட்டு வடிகட்டி, இதில் சிறிது கோரோசனம் சேர்த்துக் கொடுத்துவர, குணத்தின் கீழ்கண்ட நோய்களைப் போக்கும்.

**சிறுதேக்குக் குடிநீர்.**

சிறுதேக்கு தோடையொடு கஞ்சாங் கோரை
சேர்முதியார் கூந்தல்சிறு குறட்டை யோடு
உறுசிறுகாஞ் சொறிமுள்ளி சாரணையோ
டுள்ளிநீர் முளிமுட்டி யிரண்டு மொன்ருய்
மறுமுக்கா வேளைவெள்ளை வக்க ணுவும்
வளருபா வட்டைபுங்கொ டமுத வல்லி
குருகுமுரு விலியாணும் வேர்நன் னுரி
கொத்துமலி சுக்குமுத்தங் கூட்டி டாயே.

முத்தமால் காந்தியொடு கண்டங் காலி
முதிர்படகம் வசம்புமுதல் முன்னீர் விட்டுச்
சுத்தமாய்க் காய்ச்சுதிரி கடுகு ரோணி
சுகமான சீரகமுந் துலங்கக் கொண்டு
மற்றநான் முதலாக வெரித்துக் கொள்ள
மானேயிப் புவியில்வாழ் மாந்தர்க் கெல்லாஞ்
சித்தமாய்க் கபசுரங்கள் சோம வீக்கந்
தீராத ரோகமெலாந் தீர்ந்து போமே.

(பொ - ள்.) சிறுதேக்கு, ஆடாதோடை, கஞ்சாங்கோரை, முதியார் கூந்தல், சிறுகுறட்டை, சிறுகாஞ்சொறி, முள்ளிக்கீரை, சாரணை, உள்ளி, நீர்முள்ளி, சிற்ருமுட்டி, பேராமுட்டி, முக்காவேளை, வெண்ணுணு, பாவட்டை, புங்கு, சீந்தில், முருவிலி, பனைவேர், நன்னுரி, கொத்துமல்லி, சுக்கு, முத்தக்காசு, விஷ்ணுகாந்தி, கண்டங்காலி, பர்ப்படகம், வசம்பு இவற்றை ஒத்த அளவில் எடுத்துச் சேர்த்து, நீர் விட்டுச் சுண்டச் செய்து அத்துடன் திரிகடுகு, கடுகுரோகணி, சீரகம், முதலியவற்றையும் கலந்து காய்ச் உட்கொள்ளில், ஐயசுரம், சோமநோய்முதலியன விலகும்.

---

## 120. கத்தக்காம்பு Kath-thak-kambu

**வே. பெ. ஒதிலைமரம் ஒதனைமரம்.**

**Uncaria gambier.**

**Eng.: Gambier.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kanchu | Hind. | Katthàà, Kath, Kàt |
| Mal. | Kàtta, Gambier | Duk. | Katthah |
| Kan. | Kàchu | | |
| Sans. | Khadira-saram | | |

இஃது, ஒதலேமரத்தின் இலேகளிலிருந்து எடுக்கப்படுகிற ஒரு விதச் சத்து. இம்மரம் கீழ்த்தீவுகளில் ஏராளமாயுண்டு; இது காசுக்கட்டி இனத்தைச் சேர்ந்ததே. இவ்வினத்தில் கறுப்பு, சிவப்பு, வெளுப்பு என மூன்று வகைகளுண்டு. இவற்றுள் வெளுப்பு என்பதே கத்தக்காம்பு எனப் பெயர் பெற்றுளது (**White catechu**).

**சுவை**- சிறுகைப்பு, துவர்ப்பு, **தன்மை**- வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :** துவர்ப்பி - ஸங்கோசனகாரி **astringent**

**குணம் :** இதனல், செரியாக்கழிச்சல், சீதக்கழிச்சல், ஈறுவீக்கம், பல்லரணே, பல்வலி, இரசவேக்காடு, தொண்டைப்புண், தொண்டைக்கம்மல் நாட்பட்ட புண் முதலியன தீரும்.

**வ - கு :** கத்தக்காம்புத்தூள் கருவாப்பட்டைத்தூள் வகைக்கு 8 கிராம் சாதிக்காய்த்தூள் 2 கிராம் எடை மூன்றையும் கலந்து, வேளேக்கு 650 மி.கி.—1 மி.கி. வீதம் 3, 4 மணிக்கொருதரம், தேனில் கலந்து உட்கொள்ள செரியாக்கழிச்சல் குணமாகும்.

கத்தக்காம்புத்தூள் 65 மி.கி., கருவாப்பட்டைத்தூள் 100 மி.கி. சேர்த்துக் கலந்து, 6 மணிக்கு ஒரு முறை கொடுத்துவர, குழந்தைகட்குண்டாகும் சுரத்தோடுங்கூடிய செரியாக்கழிச்சல் குணமாகும்.

கத்தக்காம்பு 12 கிராம் எடை, கருவாப்பட்டைத்தூள் 4 கிராம் எடை, இவற்றை வெந்நீர் 700 மி. லிட்டர் விட்டு ஊறவைத்து வடிகட்டி, 30 மி.லி. வீதம் தினம் 3 வேளே கொடுக்கலாம்.

இதை வாயிலிட்டு மென்றுவர, ஈறுவீக்கம், பல் நோய், பல் வலி இரசவேகம் முதலியன நீங்கும்.

இதை மெழுகு அல்லது களிம்பாகச் செய்து, துருசுத்தூள் சேர்த்துத் துணியில் தடவி புண்களின் மீது போட்டுவர, புண் ஆறும்.

---

## 121. கத்தரி-Kath-thari

**வே. பெ. வழுதலே வழிதுணே**

**(Solanum melongena)**

**Eng.—Egg plant, Brinjal**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Vankaya** | **Sans.** | **Vartakam**, **Peetaphalam** |
| **Mal.** | **Valutina**, **Mulakutakali** | **Pers.** | **Badangan** |
| | | **Urdu.** | **Baigan** |
| **Kan.** | **Badanekayi** | **Hind.** | **Bhanta** |
| | | **Duk.** | **Bhante** |

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகின்ற ஒரு வகைச் செடி இதில் அநேக சாதிகளுண்டு.

பப்பறமுள்ளி { ஆகாசக்கத்திரி Hibiscus Longifolius 2 வகை
1 சிறுஆகாசக்கத்திரி
2 பெரு ஆகாசகத்திரி

கண்டங்கத்திரி Solanum Jaequini நிற்க,
காறல்கத்திரி Solanum Insanum.
கத்திரி நாயகம் Veronia யானை சீரகம்.
கொத்துக்கத்திரி Solanum Stramoni folium.
சிறுவழுதலை (முள்ளி) Solan„um Ind.

வழுதுணையில் மூன்று வகை : (1) கருப்புவழுதுணை, (2) பெருவழுதுணை, (3) சிறுவழுதுணை. இது தச அல்லது சிறு பஞ்சமூலத்தொன்று.

ப - உ : இலை, பிஞ்சு, காய், பழம், வித்து, வேர்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை. { வெப்பமுண்டாக்கி–Stimulant.
உறக்கமுண்டாக்கி–Hypnotic.
கோழையகற்றி–Expectorant.

**பிஞ்சு.**

குணம் : பிஞ்சு முக்குற்றத்தை விலக்கும் ; ஆனால், புடையையும் கிரந்தியையும் அதிகப்படுத்தும் ; பத்தியத்துக்கு உதவும்.

**காய்.**

இஃது, அழலால் வந்த ஐயத்தைப் போக்கும் ; ஆறிய கரப்பான், புடை, சொறி, சிரங்கு இவைகளை விளைவிக்கும். மேக ஊரலை அதிகப் படுத்தும்.

பண்டு மாண்ட கிரந்தியைப் பாலிக்கும்,
உண்ட கைக்குந் தினவை யுண்டாக்கிடும்,
நண்டுகட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டு விட்டது கத்தரிக் காயதே. (தே.கா.)

கத்தரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும் ;
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடும் ;—மெத்தவுந்தான்
பிஞ்சான கத்திரிக்காய் பேசுமுத்தோ டம்போக்கும் ;
மஞ்சார் குழலே! வழுத்து. (அ.கு.)

**வழுதலை**

வழுதலை யாகிய வங்கக் காய்தினப்
பழுதிலை யஃதுநற் பத்திய மாகுமே. (தே.கா.)

(பொ - ள்.) சிறு வழுதலைக்கறி, உடம்பிற்குக் கேடு செய்யாது பத்தியத்திற்கும் நன்று.

**பழம்**

இதனால், இரைப்பு, கோழை, வளிக்குற்றம் இவைகள் நீங்கும். கரப்பான், பித்தநோய், பெருநோய், பெரும்புண், ஆண்மையின்மை, உடல் அனல் இவைகள் உண்டாகும்.

பித்தங் கரப்பான் பெருங்கிரந்தி குட்டமிவை
மெத்தவுமா மெய்யிலழல் வீறுங்காண்,—சத்தான
தாதுநட்ட மாங்கபங்காற் சார்ந்த சுவாசமும்போம்
ஓதுகத்த ரிப்பழத்தா லுன். (அ.கு.)

**வேர்**

இது, ஐயவளி நோய்களையாவும் நீக்கும்.

வ - கு : இலையை நீர்ப்பெருக்குக் குடிநீரிற் சேர்த்துக்கொள்ளலாம். இஃது, தூக்கத்தையும் உண்டாக்கும்.

**கத்தரி**

எக்கால மும்பழகி யில்லாத மானிடர்க்கு
முக்கால முண்டாலும் மோசமிரா—பக்குவமா
யங்கந் தணிய வமாபத்தி யக்கறியாம்
வங்கக்கா யுண்டறிகு வாய். (தேரன் வெண்பா.)

மூன்று வேளை உணவிலும் கத்திரிக்காயை உண்ணினும் கெடுதி செய்யாது. பத்தியத்திற்கு உதவும்.

**பிஞ்சு, காய்**

வ -கு : இவைகளைச் சமைத்தும், வற்றலிட்டு வறுத்தும் உண்ணலாம்.

**பழம்**

வ - கு : கும்பியில் வெதுப்பியாகிலும், சுட்டாகிலும் மாடுகளின் வயிற்றுவலி நீங்குதற்கும், வயிற்றுப்புழுக்கள் வெளிப்படுதற்கும் கொடுப்பது வழக்கம்.

இலிங்கத்தைப் பழத்துக்குள் வைத்து, மூன்று சீலைமண் செய்து காடைப் புடமிடவும். இப்படி 100 புடமிட இலிங்கம் கட்டுப்படும்.

சுட்டபழம், செரிப்பை உண்டாக்கும். ஆனால் கழியச் செய்யும், பித்தத்தைத் தணிக்கும். வாயுவைக் குறைக்கும்.

ஊசியினால் பழத்தைப் பல இடங்களில் குத்தி, நல்லெண்ணெயில் வறுத்து, பல் வலிக்குக் கொடுக்கத் தீரும்.

வலப்பாட்டீரல் நோய்களுக்கு இஃது ஒரு முக்கிய மருந்தாகும்.

**விதை.**

இஃது உடல் வெப்பத்தைப் பெருக்குஞ் செய்கையுடையது ; எருக்கட்டு குன்மம் முதலிய நோய்களை உண்டு பண்ணும்.

**வேர்.**

இது, ஐயம் வளி இவைகள் சேர்ந்த நோய்களைப் போக்கச் செய்யுந் தைலங்களிற் சேரும்.

## கத்தூரிமஞ்சள் —Kat-turi Manjal

வே. பெ : கஸ்தூரிமஞ்சள்

Curcuma aromatica.

Eng. : The Round Zeodary.

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Kastūri-pasupu | | Sans. | Kastoori Nisa |
| Mal. | Kastūri-Maññal<br>Anakuva<br>Kattu-Manjal | | Hind. | Gandamasti<br>Kachur<br>Jangli haldi |
| Kan. | Kastūri-arishinā | | Duk. | Katchoor |
| | | | Urdu. | Amba - Huldi |

இஃது இந்தியாவின் பல இடங்களிலும் பயிராகிற ஒரு வகை செடியின் கிழங்கு.

ப - உ : கிழங்கு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- உரமாக்கி—பலகாரி—Tonic
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative

குணம் : இதனால், பெரும் புண்கள், கரப்பான், நுண்புழுக்கள், அக்கினி மந்தம் இவை போம். ஆண்மையும் அறிவும் பெருகும்.

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியு நாசமாம்—வண்ணமலர்த்
தொத்தே றளகமின்னே ! சுக்கிலமும் புதியுமாங்
கத்தூரி மஞ்சளுக்குக் காண்.

(அ.கு.)

வ - கு : இதை அரைத்துத் தேய்த்துக் குளிக்க, கரப்பான், பெரும் புண், மந்தம் இவை போம்.

எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, உடல்வலி முதலிய நோய்களுக்கும், அடிபட்ட நோய்களுக்கும் மேலுக்குத் தேய்க்கலாம்.

இதன் தூள் 325 மி.கி.—500 மி.கி. வரை உள்ளுக்குக் கொடுத்துவர, வயிற்று நோய், குன்மம் முதலிய நோய்கள் நீங்கும்.

மணமூட்டிப் பொருள்களோடும், தைலவர்க்கங்களோடும் இதைச் சேர்ப்பது வழக்கம்.

## 13. கமுகு—Kamuku

வே-பெ : பாக்கு மரம், கந்தி அடைக்காய்.

**Areca katechu.**

**Eng. : Betel-nut-palm or areca-nut-palm.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Poka-Vakka | Sans. | Kramuka / Pooga |
| Mal. | Kazhunga | | |
| Kan. | Adike | Hind. | Dharrakhthai-Supari |

இஃது, இந்தியாவின் உஷ்ண நாடுகளில் பயிராகும் ஒரு மரம்; மைசூர், கன்னடம், மலையாளம் முதலிய இடங்களில் ஏராளமாயுண்டு. இதன் விதைக்குப் பாக்கு என்பது பெயர்.

ப - உ : இளங்குருத்து, விதை வேர்.

சுவை- துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**stimulant**
- சாயமேற்றி—**Taenifuge**

குணம் : இதனால், செரியாக்கழிச்சல், சிறுநீரைப்பற்றி நோய்கள், வயிற்றுப்புழுநோய், ஈறுநோய், மேக வெள்ளை முதலியன தீரும்.

### இளங்குருத்து

வ - கு : இளங்குருத்தை எண்ணெயிலிட்டு வதக்கி, வாதவலிக்கு—வைத்துக்கட்டலாம்.

### இளம்பிஞ்சு

இளம்பிஞ்சுப் பாக்கு, வயிற்றுநோய்களுக்கு ஏற்றது.

### பாக்கு

கந்தியின் காய்தினக் கயத்தினை யறுத்திடும். (தே - கா).

(பொ - ள்.) ' பச்சைப் பாக்குத் தொண்டையில் கட்டும் கோழையைப் போக்கும்.

இது வெற்றிலை தின்பவர்களுக்கு இன்றியமையாதது.

பாக்கை உலர்த்திப் பொடித்து, அதில் 12 முதல் 24 கிராம் எடை எடுத்துச் சருக்கரை சேர்த்துச் சாப்பிட, செரியாக் கழிச்சல், சிறுநீர் நோய்கள் முதலியன தீரும்.

மேற்படி தூளையே 2½ கிராம் எடுத்து, 20 கிராம் பழச்சாறு விட்டு அரைத்து, உள்ளுக்குக் கொடுக்க, புழுக்கள் வெளியாகும்.

17 கிராம் முதல் 25 கிராம் பொடியை 65 மி. லி. ஆவின் பாலில் கலக்கிக் கொடுக்க, ஒரு மணி நேரம் கழித்துத் தட்டைப் புழு (Tapeworm) வெளியாகும்

பாக்கை முறைப்படி குடிநீரிட்டு வாய் கொப்புளித்துவர, பல்லீறிலுண்டாகும் நோய்கள் தீரும்.

இதையே பெண்களுக்குப் பீச்சாங்குழலால் எருவாய்க்குள் பீச்சிவர வெள்ளை முதலிய நோய்கள் தீரும்.

கொட்டையைச் சுட்டுச் சாம்பலாக்கி அவ்வளவு காசுக்கட்டியும், இலவங்கமும் பொடி செய்துகூட்டிப் பல் துலக்கி வரலாம்.

**வேர்**

வேரைக் குடிநீரிட்டு வாய் கொப்புளித்துவர, உதட்டுப் புண்களும், ஈறு புண்களும் தீரும்.

---

## 124. கமேலா—Kamela

**வே. பெ. கபிலா கமலா. கம்பில்லம்.**

**Mallotus phillippinensis.**

**Eng. : Monkey face tree.**

| | |
|---|---|
| **Tel. Kamela** | **Sans.** { **Kampilla**, **Kampha** } |
| **Mal. Kampillam** | **Hind. Kamala** |
| **Mal. Kampillam** | **Duk. Kameela** |
| **Kan.** { **Vasare**, **Chandrahittu** } | |

இஃது ஒரு வகை மரத்தின் பழங்களின் மீது படிந்திருக்கும் சிவந்தபொடி. இந்தப் பொடியைக் கமேலாப்பொடி, கபிலப்பொடி அல்லது கம்பில்லம் எனக் கூறுவார்கள்.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** { பெருங்கழிச்சலுண்டாக்கி-விரேசனகாரி-Cathartic
புழுக்கொல்லி-க்ருமிநாசநி- Anthelmintic
இன்பம் பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac
கற்கரைச்சி-பாஷாணபேதநி-Lithontriptic

**குணம்** : இது தோல் நோய்கள், மலக் கிருமிகள் ஆகியவைகளைப் போக்கும்.

வ-கு: 6 குன்றி கமேலாப் பொடியைத் தேனிலேனும், சருக்கரைப் பாகிலேனும் கலந்து இரவில் படுக்கைக்குப் போகும்போது சாப்பிட்டு, மறுநாட்காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட வயிற்றுப் புழுக்கள் விழும்.

கமேலாப் பொடி 1 பங்கு, எண்ணெய் 8 பங்கு சேர்த்துக் காய்ச்சி மேலுக்குத் தடவிவர சிரங்கு, படை முதலிய நோய்கள் தீரும்.

## 125. கம்பளிப் பூச்சிச் செடி—Kambalip putchichedl

வே .பே. முசுர்கட்சைச் செடி
M. Indica.
Eng : Mulberry.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kambali - chettu<br>Kombali-ghutthi-chettu | Sans. | Toola<br>Tooda. |
| | | Hind. | Tut.<br>Shetota |
| Kan. | Hippal-Nerali-gida | Duk. | Tutri. |

இச்செடி, இந்தியாவில் குளிர்ச்சியுள்ள நாடுகளில் மிகுதியாகவும் மற்ற இடங்களில் சிலவும் வளருகின்றது. பட்டுப்புழு இதனிலையைத் தின்று வளருகின்றது.

ப- உ : இலை, பழம்.

சுவை-புளிப்பு, இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு, கார்ப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
நீர்போம் கழிச்சலுண்டாக்கி-ஜலவ்ரேசநி—Hydrogogue.

குணம் : இது, சுரத்தைத் தணிக்கும் ; நீர்வேட்கையைப்போக்கும் ; தொண்டை வறட்சியை நீக்கும் ; இருமலைத் தடுக்கும்; பெருங்கழிச்சலை யுண்டாக்கும்.

வ-கு : இதன் பழத்தை மணப்பாகு செய்து சுரரோகிகளுக்குப் புளிப் பான பானமாகக் கொடுக்கலாம்.

மருந்துகளுக்கு இதன் பழச்சாற்றைச் சாயமேற்ற வழங்கலாம்.

இம்மரத்தின் இலையையும், வேப்பிலையையும், ஒன்றிரண்டு சிறு வெங் காயத்தையும் சேர்த்து அரைத்துப் படுக்கைப்புண்களுக்குப் போட அவை உலரும்.

இதைத் தீம்பானமாகச் செய்து, இருமல் முதலிய தொண்டை நோய்களைப் போக்கப் பயன்படுத்தலாம்.

—.—

## 126. கம்பு—Kambu

Eng. : pear milet
Pennisetum typhoides

| | |
|---|---|
| Tel Sajjalu | Mal. Kambu |

இது தானியவகையைச் சேர்ந்தது.

சுவை-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை: உரமாக்கி—பலகாரி—Tonic.

**கம்பு**

கம்புமாக் கூழுணக் காத்திரந் தூய்தாம்.

(பொ-ள்.) கம்பு மாவின் கூழ் உடம்பினைத் தூய்மையாக்கும்.(தே.கா)

**கம்பு அரிசி**

**குணம்** : இது, சொறிசிரங்கு இவற்றை உண்டாக்கும் ; உடற்கொதிப்பை யகற்றிக் குளிர்ச்சியைத் தரும் ; உடலுக்குப் பலத்தையூட்டும்.

கம்பு குளிர்ச்சியெனக் காசினியிற் சொல்லுவர்காண்
பம்பு சொறிசிரங்கைப் பாலிக்கும்—வெம்பும்
உடலின் கொதிப்பகற்றும் உட்பலமுண்டாக்கும்,
அடலயிற்கண் மாதே! யறி. (அ.கு.)

**கம்பஞ் சாதம்**

இதனால், இருமல், இரைப்பு, சிரங்கு முதலியவைப் பெருக்கும். உடல் பாரிக்கும். உடலிலுள்ள இரத்தம் வற்றி நிறம் மாறும்.

கம்பினது சாதத்தாற் காசசுவா சஞ்சிரங்கும்
பம்பும் உடல்மிகப் பாரிக்குஞ்—செம்பாலோ
வற்றுவது மன்றிநிற மாறுமென்பார் வாமமெலா
முற்றுமுலை மாதே ! மொழி. (அ.கு.)

**வ - கு** : கம்பிரிசிக்கூழில் சிறிது ஆவின் தயிராவது, மோராவது கூட்டிக் காலைதோறும் பருகிவரின் குலை எரிவு சாந்தமாகும்.

கம்பைச் சமைத்து எருமைத் தயிர் விட்டுப் பிசைந்து முளைமூலத்துக்குக் கட்டிவரக் குணமுண்டாகும்.

---

## 127. கரந்தை - Karanthai

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகும். கரந்தையில் பல விதமுண்டு அவையாவன :

1 குத்துக்கரந்தை—Erigeron oliquum
2 கொட்டைக் கரந்தை—Spheranthus Indicus
3 சிறுகொட்டைக் கரந்தை—Ethulia divaricatä
4 சிவகரந்தை—Sphoe ranthus amaranth oides
(நறுங்கரந்தை) Hianaoser
5 சுனைக்கரந்தை—Ocimum pilosum
6 சுரைக்கரந்தை—Sphoeranthus Neylanicus Nob
7 சூரியக்கரந்தை—

கொட்டைக் கரந்தை சற்றேறக்குறைய சிவகரந்தைக்கு ஒப்பெனினும், மணத்தில் சிவகரந்தை சிறப்புடையது.

இவைகளுள் கொட்டைக்கரந்தை சிவகரந்தை இவ்விரண்டும் மருந்து வகைகளிற் சிறந்தது. இவைகளே பெரும்பாலும் மருந்துகளுக்கு வழங்கப்படும்.

## கொட்டைக்கரந்தை Kottai Karanthai

**Spheranthus indicus**

**Eng : East Indian Globe Thistle.**

**Tel.** Boda-taramu

**Mal.** Minānganni, Atakka-maniyan

**Kan.** Karandagid

**Sans.** Mundi, māriyun

**Pers.** Kamādārithus

**Hin.** Mundi

இது, வயல் நிலங்களிலும் தோட்டங்களிலும் வளர்ந்து கிடக்கும் இப்பூண்டு தென்னிந்தியாவிற்கே உரியது. இதிலிருந்து ஒரு வகை எண்ணெய் எடுக்கின்றார்கள். இதில் வெண்மை, செம்மை என இரண்டு பிரிவுகளுண்டு.

ப-உ : இலை, பூ, விதை, வேர், வேர்ப்பட்டை.

சுவை -கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு

செய்கை :

இலை, பூ.
உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நித்தகாரி—Demulcent
விதை, வேர்.
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்ததநி—Stomachic
புழுக்கொல்லி— க்ருமிநாசநி—Anthelmintic
சிறப்புச் செய்கை
தூய்மையாக்கி—பலகாரி—Depurative
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரிம் Refrigerant
உரமாக்கி—Tonic

குணம் : இதனால், ஒழுக்கு வெள்ளை, கரப்பான், சொறி, சிரங்கு இவை தீருவதல்லாமல், மறிபட்ட எருவுங்கழியும். மேலும், வளி, வெறி, சிலேப்பு முதலியவையும் ஒழியும். தோறபிணியும் போம்.

கொட்டைக் கரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந்—துட்டச்
சொறி சிரங்கு வன்கரப்பான் றேற்றுது நாளும்
மறிமலமுந் தானிறங்கு மால். (அ.கு.)

சமூலம்

வ - கு : மேற்கூறிய நோய்களுக்கு, இப்பூண்டினை உலர்த்திப் பொடிசெய்து வேளைக்கு 4 கிராம் எடை சாப்பிட்டு வரலாம் ; அல்லது இதன் கிழங்கைக் குடி நீரிட்டுச் சாப்பிட்டு வரலாம்.

இலை

இலையை நிழலிலுலர்த்திப் பொடிசெய்து, வேளைக்கு 1 கிராம் எடை வீதம், தினம் இரு வேளை கொடுத்துவர, தோலைப்பற்றிய நோய்கள் தீரும். ஆண்மையுண்டாகும்.

**பூ**

மேற்கூறியபடி இதைப் பொடித்துக்கொடுக்க, உரமாக்கியாக வழங்குவ தன்றி, உடலுக்குக் குளிர்ச்சியையும் உண்டு பண்ணும்.

**விதை**

விதையைப் பொடித்துத் தேனிற் கலந்து கொடுக்க, செரியாமை, இருமல் தீருவதுமல்லாமல், வயிற்றுப்புழுக்களும் வெளிப்படும்.

**வேர்**

வேர்பொடித்ததை 2 கிராம் எடை கொடுக்க, வயிற்றுப்புழுக்களைக் கால்லும்.

**வேர்ப் பட்டை**

இதை அரைத்து வெண்ணெயிற் கலந்துகொடுக்க, குருதி எருழுளே போம். இதையே அரைத்து வெளிப் பூச்சாகவும் வழங்கலாம்.

நல்லெண்ணெயுடன் கலந்து 7 மி. லி. 15 மி. லி. உச்சிக்கரண்டி வீதம், ஒருமண்டலம் சாப்பிட்டுவர உடல் வன்மை பெறும். ஆண்மை பெருகும்.

## சிவகரந்தை Siva-Karanthai

வே-பெ : நறுங் கரந்தை

Spheoranthus amaranthoicdes.

Tel. Bodatharamu

Sans. Hapushā

Arab. { Kamaphilusa / Kamafi ūs }

Duk. { Jangli-Mūli. / Jangli-kasmi }

Hind. Kakrōṇda

இஃது, எல்லாவிடங்களிலும் பயிராகும் ஒரு வகைக் குத்துச் செடி. இதிலும் கொட்டைக் கரந்தையைப் போல் இரண்டு பிரிவுகளுண்டு.

ப-உ : சமூலம்.

சுவை-துவர்ப்பு, சிறுகார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை
- மணமூட்டி—Aromatic
- துவர்ப்பி —ஸ்ங்கோசனகாரி—Astringent
- பசித்தீத் தூண்டி—ஜ்டராக்னிவர்த்தி—Stomachic
- இசிவகற்றி —அங்கூக்ர்ஷணநாசநி—Antispasmodic
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue
- சிறுநீர்பெருக்கி—முத்ரவர்த்தநி—Diuretic

குணம் : இது, வாந்தி, சுவையின்மை, ஆண்மைக்குறைவு, கரப்பான், வாதாதிதொந்தம், காசம், அக்கினிமாந்தம் இவைகளை நீக்கும் ; சடராக் கினியையும் வனப்பையும் உண்டாக்கும்.

வாந்தி யரோசகத்தை மாற்றும் பசிகொடுக்கும்.
சாய்ந்தவிந்து வைக்கட்டுந் தப்பாதே—வந்தழகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சாந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான்.
கந்த நாறு கரந்தை யதின்குணம் (அ.கு.)
மந்த வாதங் கரப்பனே மாற்றிடுந்
தொந்த ரோகந் துடைக்கு மிருமலா
மந்த நோயுந் தணிக்கும் மாணேயே. (தே.கு.)

வ-கு : இலேயைப் பொடித்து 4 முதல் 8 கிராம் எடை வெண்ணெய் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க, மேற்கண்ட நோய்கள் விலகும். இதை ஆண்மைப் பெருக்குண்டாவதற்கும் வழங்கலாம்.

இதன் இலேச்சாறு பாதரசத்தை சுத்தி செய்யவும் நீற்றவும் உதவும்

## 128. கரிசலாங்கண்ணி—Karisalankanni

**வே-பெ :** கரசனுங்கண்ணி, கரிசாலே, கரியசாலே. கைகேசி, கைவீசிஇலே, கையாந்தகரை, பிருங்கராஜம், கரிப்பான், கையான், தேகராஜம்

**Eclipta alba,**

| | |
|---|---|
| Tel. Guntagalijaeru | Sans. Bhringaraj, Kesaranja |
| Mal. Kanjunni | Arab. Radim-el-bint |
| Kan. Kadive-garage | Hind. Bungrah |
| | Duk. Bhangra |

வகை : நீலம், மஞ்சள் (பொறறலேக்கையான்) சிகப்பு, வெள்ளே, மேற்கூறிய நாலு இனங்களுள், முதல் மூன்று இனங்களும் அநேகமாக அகப்படமாட்டா. இப்பூண்டு மிகுதியாக மலேச்சாரல்களிற்றுன் உண்டு. நான்காவது கூறிய வெள்ளேக் கரிசலாங்கண்ணியானது எங்கும் அகப்படக் கூடியது.

ப - உ : பூண்டு.

சுவை : கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை
- பித்தநீர்ப்பெருக்கி—பித்தகாரி—Cholagogue
- உரமாக்கி—பலகாரி—Tonic
- உடற்றேற்றி—வ்யத டேதகாரி—Alterative
- வாந்தியுண்டாக்கி—வமனகாரி Emet
- நீர்மலம்போக்கி—வ்ரேசநம்—Purgative
- வீக்கமுருக்கி—சோபாநாசநி—Deobstruent
- ஈரல்தேற்றி—யகிருதபலகாரி—Hepictonic

குணம் : இதனல், குரலுறுப்பு நோய், காமாலே, குட்டம், வீக்கம், பாண்டு, பல்நோய் ஆகியவை போம். உடலிற பொற்சாயலும், ஆணிக்குள்ள பலமும் உண்டாகும்.

குரற்கம்மற் காயாலே குட்டமொடு சோபை
யுறற்பாண்டு பன்னோ யொழிய—நிரற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளி ண்ணு நற்புலத்துக்
கையாந் தகரையொத்தக் கால். (அ.கு.)

### மஞ்சள் (பொற்றலைக்) கையாந்தகரை

உடலுக்குப் பொற்சாயலையும், விழிக்கு ஒளியையும், புத்திக்குத் தெளிவையும் உண்டாக்கும். குன்மக் கட்டியைப் போக்கும். இது பல விதச் சிந்தூரஞ் செய்ய உதவும்.

### பொற்றலைக் கையாந்தகரை.

திருவுண்டாம் ஞானத் தெளிவுண்டா மேலே
யுருவுண்டா முள்ளதெல்லா முண்டாங்—குருவுண்டாம்
பொன்னுகத் தன்னுகம் பொற்றலைக்கை யாந்தகரைத்
தன்னுகத் தின்ருகத் தான். (தேரன் வெண்பா.)

பொற்றலைக்கையானை (மஞ்சள் கரிசாலை) கறியாகச் செய்துண்ண, அறிவின் தெளிவும் திருவும் சேரும்.

பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிறமாக் கும்முடலை
சுத்த முறக்கட்குச் சுகங்கொடுக்குஞ்—சிற்றிடையாய் !
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தை தனைத்துலக்கும்
உந்திவளர் குன்மமொழிக் கும். (அ.கு.)

வ-கு : இலைச்சாறு 700 மி.லி., நல்லெண்ணெய் 700 மி.லி., தைல பாத்திரத்திலிட்டு, சிறு தீயாக எரித்துப் பக்குவமாக வடித்து, 5 கிராம் காலை மாலை இருவேளை சாப்பிட்டுவர, இருமல் நோய் தீரும்.

கையாந்தகரைச்சாறு 5600 மி.லி., நெல்லிக்காய்ச்சாறு 5600 மி.லி., நல்லெண்ணெய் 1750 மி.லி. இவற்றைக் கலந்து, அதிமதுரம் 8 கிராம் சேர்த்து அரைத்துக் குழப்பி, எரித்துப் பதமாய் வடித்துத் தலைமுழுக, கண்காசம், காதுநோய் இவைகள் தீரும்.

கரிசலாங்கண்ணிச்சாறு 1 பங்கும், ஆமணக்கு நெய் 1 பங்கும் கலந்து அதிற் கொஞ்சம் வெள்ளைப்பூண்டு சேர்த்து எரித்து, பதத்தில் வடித்துக் கொண்டு, வேளை ஒன்றுக்கு 15 கிராம் முதல் 30 கிராம் எடை வரையிற் கொடுக்க, காய்ச்சற்கட்டி, வீக்கம், காமாலை, குட்டம் இவை நீங்கும்.

காரிசாலைச் சூரணத்தை அயச்செந்தூரத்திற்கு அனுபானமாகக் கொள்ள, பாண்டு, சோபை, காமாலை முதலிய நோய்கள் தீரும்.

இலைச்சாறு 90 துளி எடுத்து, அதோடு நீர் அல்லது மோர் சேர்த்துச் சாப்பிட, பாம்பின் கடிநஞ்சு போம்.

மேற்படிச்சாறு 2 துளி எடுத்து, 8 துளி தேனிற் கலந்து கொடுக்க, கைக்குழந்தைகட்கு உண்டாகும் நீர்க் கோவை (ஜலதோஷம்) நீங்கும்.

இலைச்சாற்றைக் காதுவலிக்குக் காதுகளில் விடத் தீரும்.

இதனை நல்லெண்ணெயில் அரைத்து யானைக்கால் நோய்க்கு மேலுக்குப் பூசலாம். மூத்திரத்தில் இரத்தம் கண்டால், இலைச்சாறு, கால் முதல் அரை ஆழாக்கு வீதம் தினம் இரு வேளை கொடுக்கத் தீரும்.

இலையை அரைத்துக் கற்கம் பண்ணித் தேள்கடிக்கு, கடித்த இடத்தில் நன்ருய்த் தேய்த்து, அதையே அவ்விடத்தில் வைத்துக்கட்டினுல் நஞ்சு நீங்கும். இலையை வேகவைப்பதாலுண்டான ஆவியை மூலநோய்களுக்குப் பிடிக்கத் தீரும்.

இலைச்சாற்றை நல்லெண்ணெய், அல்லது தேங்காய் எண்ணெயில் காய்ச்சித் தலைக்குத் தேய்த்துவர, முடி கறுத்துத் தழைத்துவளரும்.

வேர்ப்பொடித்ததை, கல்லீரல் மண்ணீரல் நோய்களுக்கும் தோலைப் பற்றியபிணிகளுக்கும் கொடுக்கலாம்.

---

## 129. கருங்காலி—Karungali

**Diospyrosmelanoxylon**

**Eng : Black Catcehu**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chandra. | Sans. | Khandira. |
| Mal. | Karingali. | Hind | Katha |
| Kan | Khadira | Duk | Kher |

இஃது (கருங்காலி இந்தியாவிலும் பர்மாவிலுமுள்ள காடுகளில் பயிராகும். இது மர வகுப்பைச் சேர்ந்தது.

ப–உ: பட்டை, பிசின், வேர்.

சுவை : துவர்ப்பு, தன்மை–சீதம், பிரிவு–கார்ப்பு.

செய்கை : துவர்ப்பி- ஸங்கோசனகாரி—Astringent.

**வேரூறிய நீர்.**

குணம் : இதனல், பெருநோய், அழலகுன்மம் பெருவயிறு, வயிற்றுப் புழுநோய், குருதிக்குறைவால் வந்ததிமிர், திமிர்வாதம், நீரிழிவு இவைகள் போம்.

குட்டங் கயரோகங் குன்மம் பெருவயிறு
நெட்டைப் புழுதிமிரு நீரிழிவும்—விட்டே
யருங்கான கத்தேகு மஞ்சுகமே ! நல்ல
கருங்காலி நீரதனைக் கண்டு. (அ.கு.)

வ–கு : வேரூறிய நீரை அருந்த மேற்கண்ட நோய்கள் தணியும்

**மரப்பட்டை.**

வெள்ளை, பலவேர் நோயகள், இருமல், ஈளை இவைகளை நீக்கும்.

மேகநீ ரைக்கெடுக்கும் வீறுதந்த மூலத்துள்
ஆகிய வேதனையையாற்றுங்காண்—சோகந்
தருங்காச மீளையிவை சாரா தகற்றுங்
கருங்காலிப் பட்டையது காண்

**வ–கு :** பட்டையைக் குடிநீரிட்டு அக்குடிநீரில் நீரடிமுத்தை வேக வைத்து அதினின்றும் பிறக்கும் எண்ணெயை 5—15 துளி வரை பெரு நோய்க்கு, உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசிவரலாம்.

இதன் குடிநீர் நீரிழிவைப் போக்குவதிலும், இரத்தத்தைச் சுத்தி செய்வதிலும், உடற்குப் பலத்தை உண்டாக்குவதிலும் மிக்க பெருமை உடையது.

**குடிநீர் :** மரப்பட்டை அல்லது மரக்கட்டை 1 பங்கு, நீர் 8 பங்கு சேர்த்து, 8-ல் ஒன்ருகக் காய்ச்சி எடுத்துக்கொள்ளவும். கருங்காலிக்கட்டை அல்லது பட்டை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றைச் சமனெடை எடுத்து, மேற்கூறியபடி குடிநீர் செய்துகொள்ளவும்.

முற்கூறிய குடிநீருடன் எருமைநெய், வாய்விடங்கப்பொடி கூட்டிக் கொடுக்கப் பகந்தரம் தீரும்.

இக்குடிநீரே, வாய்ப் புண்களை ஆற்றுவதற்கும், சயித்தியக்கட்டியைக் குறைப்பதற்கும் பயன்படுத்தப்படும்.

கருங்காலிப்பட்டை, வேப்பமரப்பட்டை, நாவற்பட்டை இம்மூன்றையும் ஓர் ஓர் எடை எடுத்து, பசுமூத்திரத்திலரைத்து புண்கள் மீது பூச, விரணம் தீரும்.

**பிசின்.**

**குணம் :** இது, கருங்கரப்பான், மேகநீரிழிவு, பெரும்பாடு ஆகிய இவைகளை நீக்கும் ; விந்துவை வளர்ப்பிக்கும்.

கருங்காலி யின்பிசின்ருன் காரார் கரப்பான்
வருமேக நீரிழவை மாற்றும்—விரைவாய்ப்
பெரும்பாட்டை நீக்கும் பெருந்தாது விர்த்தி
அரும்புமெனக் கண்டறி. (அ.கு)

**வ–கு :** 1 கிராம்—2 கிராம் எடை பிசினை நீரில் கரைத்துக்கொடுக்க, மேற்படி நோய்கள் தணியும்.

**மரவேர்**

**குணம் :** வயிற்றுப்புழு, நீரிழிவு நோய், நாக்கைப்பற்றியவரும் பெரு நோய், குருதிக்கழிச்சல் ஆகிய இவை விலகும்.

கைப்புற் றிருக்குங் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகாம் மதுநீரும்—மெய்க்குளெழு
குஷ்டமுதி ரப்போக்குங் கூவியமு தகலும்
மட்டுறுபூங் கோதாய் ! வழுத்து.

**வ–கு :** மரப்பட்டைக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம். (அ.கு)

**கருங்காலிச் சத்து.**

மரத்துண்டை வெட்டி, நீரில் நன்ருய் வேகவைத்துக் குடிநீரிறக்கி, நிழலில் காயவைத்து எடுத்தால் ஒருவகைச் சத்து (Catechuextreat from the wood) இறங்கும். அதை உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

**அளவு :** 150 மி கி. -- 500 மி.கிராம் எடை .

இதற்குத் துவர்ப்புச்செய்கை அதிகமாயுண்டு. இஃது, செரியாக்கழிச்சல், குருதிப்போக்கு, ஈறுகட்டு, ஈறுகரைவு, அதில் இரத்தம் ஒழுகல் முதலிய பிணிகளுக்குப் பயன் தரும்.

## வெண்கருங்காலி—Venkarungali

ப-உ : வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி – Astringent

குணம் : இதன் வேரினால், பெருவயிறு, ஏறுபித்தம், நாக்கறுத்துப் போதல், கள்ளைப்போல் நீரிழிதல் இவை நீங்கும்.

வ-கு : இதைக் கருங்காலியை வழங்குவது போலவே வழங்கலாம்

---

## 130. கருணைத் தண்டு—Karunaithandu

வே-பெ : சூரணத்தண்டு, கருணைக்கிழங்குத்தண்டு.

Typhonium trilobatum,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kanda-Gaddha | Hind. | Jangli Suran or Alu Madana-Masta. |
| Mal. | Chenath-thanda | | |
| Kan. | Survana-Guddah | | |
| Sans : | Arsoghna-Kunda | | |

இது சதுப்பு நிலங்களில் வளருகின்றது; இந்தியாவின் கீழ்; தென், மேல் பாகங்களிலும் இலங்கையிலும் ஏராளமாய் உண்டு, இது காட்டுச்கருணை நாட்டுக்கருணை என இரு வகைப்படும். இதில் நாட்டு கருணை, உணவுக்குச் சிறப்பானது. காட்டுக்கருணை, உணவுக்கு ஏற்றதன்று ஆயினும் சில மருந்துகளில் சேரும். இவைகளின் குணங்களை, நாட்டுக் கருணை, காறுகருணை, காருக்கருணையின் கீழ் காண்க.

சுவை—கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : { வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

குணம் : இதனால், மூலமுளை (குதாங்குரம்), ஐயவளர்ச்சி, கொழுப்பின் வளர்ச்சி குறையும், பசியும் தீபனமும், சீரணமும் உண்டாம்.

சத்தகு தாங்குரத்தை துட் கபம் மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
சீரணத்தை யங்கொடிய தீபனத்தை யுங்கொடுக்குஞ்
சூரணத்தின் தண்டெனவே சொல். (அ. கு.)

கருணை—முள்ளங்கி.

கருணைக் கிழங்குநற் கந்தமுள் ளங்கியு
மருவு முடற்குரம் வாய்ந்ததென் றுரைப்பர். (தே. கா.)

(பொ-ள்) கருணைக் கிழங்கும் முள்ளங்கிக் கிழங்கும் உடம்பிற்கு மிகுந்த நன்மை அளிக்குமென்பர் மருத்துவர்.

வ-கு : இதன் தண்டைக் கறியாகச் சமைத்துண்ண மேற்கண்ட நோய்களைத் தணிக்கும்.

---

## 131. கருப்பூரவள்ளி—Karuppura-valli

**Anisochilus carnosus.**

**Eng.—Thick-leaved Lavander.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Karpura-valli | Hind. | Panjiri-ka-pat<br>-Sita—ki-panjiri |
| Mal. | Chomara<br>Kattu-Kurkka<br>Kurkka | | |
| Kan. | Dodda-patri | Duk. | Panjiri-ka-patta<br>*<br>Ajvan-ka-patta |
| Sans. | Ajapada<br>Induparni | | |

இது மலையாளம், மைசூர் முதலிய இடங்களில் வளரும் செடி.

ப-உ : இலை.

சுவை : கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphorotie.
கோழையகற்றி—கபஹரகாரி—Ecxpectorant.

குணம் : கருப்பூரவள்ளியினால், காசம் என்கிற பொடியிருமல், அம்மைக்கொப்புளம், ஐயக்குற்றம், புறர்க்கோர்வை, மார்பிற் ஐயக் கட்டு, வாதக்கடுப்பு ஆகியவை போம்.

காச இருமல், கதித்தம சூரியயையம்
பேசுபுற நீர்க்கோவை பேருங்காண்—வீசுசுர்ங்
கற்பாறை யொத்து நெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்
கற்பூர வள்ளிதனைக் கண்டு (அ.கு.)
கற்பூர வள்ளியின் கழறிலே யைத்தின
நற்பாலர் நோயெலா நாசமா யகலுமே. (தே. கா.)

(பொ-ள்.) கற்பூர வள்ளி இலையால் குழந்தைகளுக்கு உண்டாகும் மாந்தம் முதலியன விலகும்.

வ-கு : இதன் இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்துக் குழந்தைகளுக்கு உண்டாகும் இருமலுக்குக் கொடுக்கலாம்.

இதன் சாற்றை, சருக்கரை நல்லெண்ணெய் இவற்றுடன் சேர்த்துத் தலைக்குத் தடவிவர, மூக்கு நீர்ப்பாய்தல் தீரும்.

மேற்கூறிய நோய்களுக்கு, இவ்விலைரசத்தை நீர் சுண்டக் காய்ச்சி 4 கிராம் முதல் 8 கிராம் எடை வரையில் கொடுக்கலாம். குழந்தைகளுக்குச் சிறிய அளவில் கொடுக்கவும்.

முக்கியமாக கோரோசனை மாத்திரைக்கு இவ்விலைச்சாற்றை அனுபான மாகக்கூட்டிக் குழந்தைகளுக்குக் கொடுக்க, ஐயத்தாலுண்டாகும் பிணிகள் நீங்கும்.

இதைப் பச்சையாகப் பிழிந்தும், பிட்டவியல் செய்து பிழிந்தும் வழங்கலாம்.

குறிப்பு : இதன் இலையால் வாழைப்பழம் பற்பமாகும்.

---

## 132. கரும்பு—Karumbu

**வே-பெ : புனற்பூசம், இக்கு, வேய்.**

**Saccharum officinarum,**

**Eng : Sugarcane.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Cheruku<br>Kanupula-Cheruku | Arab. | Qasabus-sakar *<br>Qasabe-sakar * |
| Mal. | Karinpa | Pers. | Nai-Shakar |
| Kan. | Khabbu | Hind. | Ukh-Ganna * |
| Sans. | Ikshu<br>Rasalah | Duk. | Ganda * |

இஃது இந்தியா முழுவதிலும் ஏராளமாய்ப் பயிரிடப்படும் செடி. இதில் பல வகை உண்டு.

**உ-உ : கருப்பஞ்சாறு, சருக்கரை, வேர்.**

**சுவை : இனிப்பு-தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.**

**செய்கை :**

உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
அழுகலகற்றி—தாதுக்ஷீணரோதி—Antiseptic.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.
சுறுசுக்கழிச்சலுடாக்கி—லகுவ்ரேசநி—Laxative.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்திநி—Diuretic.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.

**வேர்**

உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்திநி—Diuretic.

**சருக்கரை.**

அழுகலகற்றி—தாதுக்ஷீணரோதி—Antiseptic.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

### குணம்.

### கருப்பஞ் சாறு.

கரும்பின் சாற்றை மிகுதியாய், உட்கொள்ளின் ஐய நோயுண டாகும். மிதமாய் உட்கொள்ளின், வெள்ளை, அழல் பெருக்கு இவைகளை அடக்கும்.

கரும்பிரத மெத்நவுண்டாற் காணுங் கபநோய்
விரும்பிவெல்ல மெத்தவுண்டால் மேகம்—தருமதுநீர்
உண்டா மதைமிதமா யுண்டால்மே கம்பித்தம்
மிண்டாமற் சாந்தமுறும் விள். (அ.கு.)

### செங்கரும்பின் சாறு.

இதன் சாறு பித்தத்தைச் சாந்தம் பண்ணும்.
"செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்"
(அ.கு.)

### நல்ல வெல்லம்.

இது பித்தகுன்மத்தைப் போக்கும் ; ஆனால், ஐயத்தையும் வயிற்றுப் புழுக்களையும், நீரிழிவு நோயையும் உண்டாக்கும்.

குன்ம பித்தம் போக்குமதி கோழைதனை யுண்டாக்குந்
துன்மலத்துட் கிடத்தைத் தோற்றுவிக்கும்—நன்மைபோல்
மெல்லமது நீரை விளைவிக்கு மாமதுர
வெல்லமென நாளும் விளம்பு. (அ.கு.)

### பழுப்புச் சருக்கரை.

கரும்பின் சாற்றைக் காய்ச்சி சருக்கரை செய்யப்படும்.

இது மருந்துகளுக்கு அனுபானமாயுள்ளது ; வாந்தி, பித்தம், சுவையின்மை இவற்றைப் போக்கும். கெட்டிப்பட்ட கபத்தை இளக்கி மகிழ்ச்சியைத் தரும்.

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம் போக்கும்—அருந்தருசி
நீக்கு மதிபகத்தை நீற்றுமகிழ்ச்சியுண்
டாக்கு நறுஞ்சர்க்க ரை. (அ.கு.)

### சீனிச்சருக்கரை.

இது, வாதசுரம், வாதநோய், வாந்தி, நுண்புழு, விக்கல் இவைகளைப் போக்கும்.

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவும்—ஏனிற்கும்
வாந்தி யொடுகிருமி மாருத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு. (அ.கு.)

### கற்கண்டு.

சருக்கரையைக் கொண்டு கற்கண்டு செய்யப்படும். இதில் ஒரு தோலா எடுத்து, அத்துடன் 4 கிராம் எடை பொரிகாரம் சேர்த்து ஏழுநாள் சாப் பிட (தவளம்) விந்து நீத்தல் நீங்கும்.

இதனால், பல்லரணை (ஈறு தடிப்பு), இருமல் வாந்தி ஐய அழல் தீரும்.

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டினமுஞ் சேராதே—தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழ மடவனமே!
கற்கண் டெனவுரைக்குங் கால். (அ.கு.)

சாறு.

வ-கு : இது மிக்க இனிப்புள்ளது. இதன் சாற்றால் விக்கலை நிறுத்தும். உடம்பிலுண்டாகும் எரிச்சலைத் தணிக்க இச்சாற்றினோடு தயிர் சேர்த்து அருந்தலாம்.

சருக்கரை.

சருக்கரையைப் பாகு செய்து உணவு பொருள்களைக் கெடாமல் சேமித்துவைப்பதற்கும் ஜலதோஷம், நீர்ப்பீறசநோய் இவைகளைப் போக்கு வதற்கும் கொடுத்துதவலாம்.

செம்பு, வெள்ளைப்பாடாணம், வீரம், முதலிய நச்சுப்பொருள்களை அருந்துவதனாலுண்டாகுங் கேட்டிற்கு, சருக்கரையை மிகச் சிறப்பான நஞ்சு முறிப்பாகக் கொள்ளலாம்.

சருக்கரையை ஆறு புண்களுக்கு வழங்கலாம்.

மஞ்சள் மெழுகும் சருக்கரையும் சேர்த்துக் குழப்பிப் பருக்களுக்குப் போடலாம்.

கண்களில் படிந்த மாசு, கண்வலி, கண்விரணம், கண்ணோய் முதலிய நோய்களுக்கு, சருக்கரை ஒரு பங்கு, நீர் மூன்று பங்கு சேர்த்துக் கரைத்து, ஒரு மணிக்கொருதரம் இரண்டொரு துளி, கண்ணில் விட்டுவர, மேற்படி நோய்கள் பலப்படாமல் அடங்கும். இந்நோய் களுக்கு இராக்காலங்களில் கண்ணிமைகளுக்குச் சிற்றாமணக்கு நெய் போன்ற ஒரெண்ணெயைத் தேய்த்து, கண் இமை ஒட்டாதபடி பார்த்துக்கொள்ளுவதுடன், காலையில் சூடான பாலும் நீரும் சேர்த்துக் கண்ணைக் கழுவவும் வேண்டும்.

சருக்கரையை நாட்பட்ட நோயாளிகளின் படுக்கை அறையில் புகைக்க, சுத்தக்காற்று உண்டாகிஅறை சுத்தப்படும்.

காடி

கருப்பஞ் சாற்றைப் புளிக்க வைத்து ஒரு வகைக் காடி செய்யலாம். இதற்குக் கருப்பங்காடி என்று பெயர். இது பசியை உண்டுபண்ணுவ தோடு, செரிப்பை மிகுதிப்படுத்தித் தாகத்தையும் அடக்கும்.

காடி ஒரு பங்கும், சுத்த நீர் 5 பங்கும், கலந்து, ஈயம் உண்ட நஞ்சா லுண்டாகும் நோய்களுக்குக் கொடுத்துதவலாம். முதலில் பேதியாகக் கொடுத்து, பிறகு மேற்படி மருந்தைக் கையாள்வதே உத்தமம்.

தலைவலி, மயக்கம், தொண்டைப் புண், மூக்கு நீர்பாய்தல் முதலிய நோய்களுக்கு, இக்காடியின் ஆவியை மூக்கின் வழியாய் ஏற்ற மிகுந்த குணமுண்டாகும்.

இரத்த மூத்திர நோய்க்கு, மேற்படி காடியை, கடிதடம், தொடை இடுக்கு, முதலிய இடங்களில் பூச, இரத்த மூத்திரம் நீங்கும்.

மேலும், தேள், குளவி, தேனீ, முதலியன கொட்டினதாலுண்டாகும் நோய்க்கும், சில பயிர்ப் பொருள்களின் சுணையினாலுண்டாகும் நமைச்சல் முதலிய நோய்களுக்கும் காடியைப் பூசச் சுகமுண்டாகும். இவ்வாறாகவே இது மூலை வீக்கத்தையும் கரைக்கும்.

இளைப்பு நோயில் இரவிலுண்டாகும் மிகு வியர்வைக்கு, கருப்பங்காடி ஒரு பங்கு, நீர் 2 பங்கு, யூ-டி-கொலோன் (Ean-de-Coloqne) ஒரு பங்கு சேர்த்துக் கலந்து மார்பில் பூசிவர, வியர்வை குறையும்.

**வேர்**

கரும்பின் வேரை முறைப்படி குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுக்க, சிறுநீர் எரிச்சலைக் குறைக்கும்.

**கரும்பு.**

கரும்பை இரண்டாகப் பிளந்து, திப்பிலிப் பொடி, ஏலக்காய்ப் பொடி இவைகளை நடுவில் வைத்துச் செம்மண் சீலை செய்து, கும்பியில் வைத்துப் பதமாகச் சுட்டு எடுத்துச் சீலையை நீக்கி அதைப் பிழிந்து எடுத்த சாற்றை விக்கலுக்குக் கொடுக்க, உடனே தீரும்.

கரும்பைத் துண்டு துண்டுகளாக வெட்டி, சுத்தி செய்த செம்புத்தூளை சட்டியிலிட்டு, வறுத்து, வெட்டிய துண்டுகளால் கடைய, செம்பு ஒரு வகைப் பற்பமாகும். இது செய்வதற்குக் குறைந்தது 34 கிராம் செம்புத் தூளுக்கு மூன்று நான்கு முழுக் கரும்பு தேவையாகும். இதைக்கொண்டு பல நோய்களைத் தக்க துணை மருந்துகளால் போக்கலாம்.

---

## 133. கர்க்கடகசிங்கி—Karkadaga Shingi

**வே - பெ : கர்க்கடகசிங்கி, கற்காடகசிங்கி.**

**Rhus succedenea.**

**Eng : The galls.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Karkataka-sringi | Sans. | Karkatashring. |
| Mal. | Kàrkada-srungi | Had. | Kàkàrasinigi. |
| Kan. | Karkatakashrinngi | | |

இது, வாழை மரத்தைப் போன்ற ஒரு வகை மரத்தின் காய் அல்லது பூவாகக் கருதப்படுகிறது ; ஆட்டுக்கொம்பின் உருவத்தை ஒத்துக் கனமற்ற மெல்லிய தோலுடையது ; அடி கனத்தும், நுனி சுருங்கியு மிருக்கும். இதற்குள் சிலந்திக் கூடுகள் போன்ற வெண்ணிறக் கூடுகளு முண்டு. நிற்க, பூச்சிகள் கடுக்காய் மரத்தைத் துளைக்க அதினின்று வழி கின்ற பால் கட்டுவதாலுண்டாவதற்கு *கடுக்காய்ப்பூவென்பது பெயர். முதற்கூறிய கர்க்கடக சிங்கியை வழங்குமுன் அதிலுள்ள பூச்சிக் கூடுகளை நீக்கல் வேண்டும். பின் கூறியதில் பூச்சுகள் இரா. இது தட்டையாவும், ஓரங்களில் மலர்போன்றுமிருக்கும். இவ்விரண்டிற்குங் குணமொன்றே.

**சுவை**—துவர்ப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை :**
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.**
- உரமாக்கி—பலகாரி—**Tonic.**
- உடலுரமாக்கி—போஷணகாரி—**Nutritive.**
- செரிப்புண்டாக்கி—போசநகாரி—**Digestive.**
- கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.**
- பித்தநீர்ப்பெருக்கி—பித்தகாரி—**Cholagogue.**

**குணம் :** இதனால் ஐயத்தாலுண்டாம் இருமல், கற்றுக்கூடிக் கழியும் நிணக்கழிச்சல் நோய், குருதிக் கழிச்சலிலுண்டாகுங் கடுப்பு, பெருங் கழிச்சல் ஈளை, வயிற்றிரைச்சல், இவைகள் நீங்கும்.

கர்க்கடக சிங்கி கபங்காசம் ஈளையொடு
முக்கல் கிரர்ணி முதிரிரைச்சல்—பொக்கெனவே
சாடுகின்ற பேதியையுஞ் சாடும் அரிவையரைக்
கூடு திறங்கொடுக்குங் கூறு.

மூலவிரத் தங்கடுப்பு மோதிரத்த பித்தங்கால்
மேல் அடரும் மேக விரணவெப்போ—டாலத்
துடுக்காங் கொதிப்புமறுந் தோகைமட மாதே!
கடுக்காயின் பூவைக் கருது. (அ.கு.)

**அளவு :** 280 மி. கிராம். முதல் 650 மி. கிராம்.

இது, முக்கியமாய்க் குழந்தைகளுக்குண்டாகுங் கழிச்சல், இருமல் களைப் போக்குவதில் சிறந்தது.

**வ-கு :** இதை வாயிலடக்கிக்கொண்டு இதன் சாரத்தை விழுங்க, இருமலடங்கும்.

இதைக் காடி விட்டரைத்துப் பூச வெண்குட்டம் நீங்கும்.

புரையோடிய புண்களையும், இரத்த மூலத்தையும் இதன் புகை குணப் படுத்தும்.

தேனுடன் கலந்து சாப்பிட உடல் வலுக்கும்.

இதைச் சருக்கரையுடன் கலந்து உட்கொண்டு, பால் அல்லது நீர் அருந்த, பெண்களுக்குண்டாகும் வெள்ளை நிற்கும். ஆனால், இதை உட்கொண்டவுடனே கோதுமை அப்பம் நெய் இவைகளை வழங்க வேண்டும்.

கர்கடகசிங்கி, மருதம்பட்டை, திப்பிலி இவைகளைப் பொடித்து ஓரெடையாக எடுத்து, இதில் 2 கிராம் முதல் 4 கிராம் எடை தேனிற் கொடுக்க, இருமல் தீரும்.

கற்கடகசிங்கி, சுக்கு, திப்பிலி கஸ்தூரி மஞ்சள், முருக்கம்பிசின் இவைகளை ஓரெடை எடுத்துப் பொடித்து, 2 கிராம் எடை வீதம் தேனுடன் சேர்த்துக் கொடுக்க, வறட்டிருமல் தீரும்.

---

## 134. கர்ப்பூரப்புல் Karpurap-pul

**வே - பெ :** வாசனைப்புல், சுக்குநாறிப்புல், தைலப்புல், சம்பாரப்புல்.

Cymbopogon citratus,

**Eng :** Lemor grass, Sweet rush, Ginger grass.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nimma-gaddi, | Sans. | Bhustrana. Devajagdhaka. |
| Mal. | Vas nap-pulla. Sambhàrap-pulla | Hind | Gandhatrana or Hare-chahe. |
| Kan. | Purvali-hullu Vasane-hull | Duk. | Hazar-masalehka. |

---

* இதற்கும் கர்க்கடகசிங்கி எனப் பெயர் வழங்கும்.

இஃது, இந்தியா முழுமையும் மலை நாடுகளில் வளர்ந்து கிடக்கும் புல்லினம். அநேக இடங்களில் இதைத் தோட்டங்களில் வைத்துப் பயிரிடுகிறார்கள். இதற்கு ஒருவித நறுமணம் உள்ளது. ஆகையால் இதற்கு **வாசனைப் புல்** என்றொரு பெயருமுண்டு.

ப - உ : இலை, புல்லிலிருந்து எடுக்கும் எண்ணெய்.

**சுவை** - காரம், விறுவிறுப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.**
- வியர்வைப் பெருக்கி—ஸ்வேதகாரி—**Diaphoretic.**
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—**Antispasmodic.**
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—**Carminative**
- தடிப்புண்டாகி—ஷோணகாரி—**Rubefacient.**

**குணம்** : இது, வளியழல் நோய், சுரம், கோழை, சுவையின்மை இவைகளை நீக்கும். பசியை உண்டாக்கும். மேலுக்குப் போட்டால் எரிச்சலை உண்டுபண்ணும்.

வாசனைப்புல் வாதபித்த மாற்றுவது மல்லாமற்
சூசனையாய் வந்த சுரம்போக்கும்—பேசரிய
ஐய மறுக்கு மரோகத்தை விண்ணேற்றுந்
துய்யபசி யைக்கொடுக்குஞ் சொல். (அ.கு.)

**வ - கு** : இலையை முறைப்படி குடிநீரிட்டு 1—2 உச்சிக்கரண்டி வரையில் கொடுக்க, இதனால், குழந்தைகளின் வயிற்றுவலி நீங்கிச் சுகமுண்டாகும். பசி ஏற்படும்.

**குறிப்பு** : பச்சைப்புல்லை வாலையிலிட்டு வடித்தெடுக்கும்போது ஒரு வகை எண்ணெய் இறங்கும். இதற்கு, வாசனை புல் எண்ணெய், அல்லது புல் தைலம் என்பது பெயர். இது, மிகத் தெளிவாயும், சிறு மஞ்சள் கலந்த சிவப்பு நிறமாயும், காரமுடையதாயும் எலுமிச்சம்பழத்தின் மணத்தையும் பெற்றிருக்கும்.

**எண்ணெய்**

இதில் 3 முதல் 6 துளி வீதம் சருக்கரையுடன் கலந்து உள்ளுக்குக் கொடுக்க, வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, வாந்தி இவை குணமாகும்.

ஊழிநோய்க்கு, மேற்கூறிய அளவுப்படி தண்ணீரில் ஒரு மணிக்கொரு தரம் கொடுத்துவர, வாந்தியை நிறுத்தி உடலுக்கு வெப்பம் உண்டு பண்ணும்.

வெளிப் பிரயோகமாய், இந்த எண்ணெயைச் சரி பங்கு தேங்காயெண்ணெயுடன் கலந்து, வாதப் பிடிப்பு, கீல்வாதம், நரம்புக் குடைச்சல் முதலிய நோய்களுக்குத் தேய்த்துவரலாம்.

---

## 135. கலப்பைக் கிழங்கு—Kalappai Kizhangu.

வே - பெ : கார்த்திகைக் கிழங்கு, வெண்தோன்றிக் கிழங்கு,

காந்தட் கிழங்கு, இலாங்கலிக் கிழங்கு.

பிற மொழிகள்.—

Gloriosa superba (Root of)

Eng : Superblily

| | | | |
|---|---|---|---|
| Tel. | Advani-Nabhi<br>Potti-dumpa<br>Agndhikka | Sans. | Sukra pushppika<br>Garbhagatine<br>Langalika<br>Agni Sikka<br>Kalikari |
| Mal. | vestoni<br>Mnnthoni-kizhangu<br>Methoni. | Hind | Carihari |
| Kan. | Nangulika | Duk. | Nat-ka-bachnag |

இது, பெரும்பான்மையாய் வங்காளத்திலும், இந்தியாவின் மலையடிவாரக் காடுகளிலும் வளர்ந்து கிடக்கும் ஒருவகைக் கொடி வகையைச் சேர்ந்தது.

ப - உ : கிழங்கு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- முறைவெப்பகற்றி—முறைவ்யாதிரோதி—Antiperiodic.
- கழிச்சலுண்டாக்கி—விரேசநி—Purgative
- உரமாக்கி—பலகாரி—Tonic.

### காந்தட் கிழங்கு

தேவியுரத் தையுமா தேவபல தையுமோ
ராவியெனக் கட்டியுற வாக்குமே—நோவுகளை
யேன்றுகொண்டு மாட்டுமை யின்மதலைக் கில்லிடமாஞ்
தோன்றியெனுங் காந்தளடித் தூள். (தேரன் - வெண்பா.

காந்தட் கிழங்கு கந்தகத்தையும் ரசத்தையும் ஒன்றாய்க் கூட்டிக் கட்டாக்கும் அன்றியும வளி முதலிய பிணிகளையும் போக்கும்.

குணம் : இதனால், தோலைப்பற்றிய நோய், பாம்பு தேள்களின் கடி நஞ்சு, வெள்ளை, எருவாய் முளை, வயிற்றுவலி, பெருநோய், வயிற்றுப் புழு இவைகள் நீங்கும். இது பித்தத்தை அதிகரிக்கச் செய்யும். இதை அதிக அளவில் கொள்ள நஞ்சாகும்.

வ - கு : இதன் கிழங்கை, கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், கார்போகவரிசி இவைகளை சேர்த்தரைத்து மேல் தடவ, தோலைப்பற்றிய நோய்கள் போம்.

இக்கிழங்கைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி உப்புச் சேர்த்த மோரில் 7 நாள் இரவுதோறும் ஊறவைத்து, பகலில் உலர்த்தி வரச் சுத்தமாகும். இப்படிச் சுத்தம் செய்த கிழங்குத் துண்டுகளுள், ஒன்று அல்லது இரண்டு பொடித்து உள்ளுக்குக் கொடுக்க, பாம்புக் கடியின் நஞ்சு நீங்கும்.

இக்கிழங்கின் மா, 130 மி. கிராம் முதல் 260 மி. கிராம் எடை வரை உள்ளுக்குக் கொடுக்கலாம். சாதாரணமாய் இதனால் கன்று காலிகளின் வயிற்றிலுண்டாகும் புழுக்கள் சாகும்.

கிழங்கைப் பொடித்து நீர் விட்டு அரைத்து, தொப்புள், உள்ளங்கை, உள்ளங்கால் இவ்விடங்களில் பூச, பிள்ளைப்பேற்றைத் துரிதப்படுத்தச் செய்யும் எனக் கருதப்படுகின்றது.

அளவுக்கு மீறாமல் உள்ளுக்குக் கொடுத்துவர, குட்டம், மூலம், தீரா வயிற்றுவலி, வயிற்றிலுள்ள மலக்கிருமிகள் நீங்கும்.

---

## கலியாணப் பூசினிக்காய்—Kaliyana-pushnik-kay.

**வே-பெ: சாம்பல்பூசினி, தடியன்காய், பெரும்பூசணி, வெண்பூசணை.**

Cucurbita Pepo,

**Eng. : White pumpkin.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Budida-Gummadi | Hind. | Kudimah / Pethaa / Kondhà |
| Mal. | Kumpalanna / Kumpalam | Arab. | Majdabah |
| Kan. | Bude-kumbal-kàyi | Pers. | Do. |
| Sans. | Kushmàndam | Duk. | Pethah |

இது கொடி வகையைச் சேர்ந்தது. இந்தியா முழுவதும் பயிரிடப் படுகின்றது. காய் சாம்பல் நிறமாயிருக்கும்.

ப - உ : காய், விதை.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு

செய்கை :
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- குருதிப்பெருக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—Styptic.
- உரமாக்கி—பலகாரி—Tonic
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.

**குணம் :** இதனால், உட்காய்ச்சல், கள்ளைப் போலிழியும் நீரிழிவு, சிறுநீர் எரிச்சல், இடுமருந்து, பித்தசுரம், என்புச் சுரம், பேய்ச்சொறி, வெள்ளை, மனக்கலக்கம், வெறி ஆகியவை போம்.

பெரும்பூ சணிக்காய்க்குப் பித்தமோ டுட்காய்ச்சல்
அருஞ்சார நீர்க்கட் டருதல்—மருந்திடுதல்
பித்தசுரம் அஸ்திசுரம் பேய்வறட்சி மேகமும்போம்
மெத்த அனிலமுறும் விள். (அ.கு.)

காய்.

**வ - கு :** பூசினிக்காயைக் குடைந்து, அதனுள் செம்பருத்திப் பூவைப் போட்டு ஊறவைத்து ரசமெடுத்து, அதனுடன் சர்க்கரை கூட்டிக்கொடுக்க, வெள்ளை, நீரெரிச்சல இவை தீரும்.

பூசினிப்பழத்தை வேகவைத்துப் பிசைந்து அழுகிப்போன புணகட்கு வைத்துக் கட்டலாம்.

இதன் சாற்றை, இரத்தவாந்தி, மற்றும் உள்ள உறுப்புகளில் உண்டாகும் இரத்தப் பெருக்கு இவைகளுக்குக் கொடுக்கச் சாந்தியாகும்.

இடுமருந்து, இரசவேக்காடு, நஞ்சுகள் இவைகளுக்கு, இதனைச் சமைத்தாவது, அல்லது இதன் சாற்றைப் பிழிந்தெடுத்தாவது கொடுக்கலாம்.

**குறிப்பு :** இடுமருந்தின் குற்றம் உண்டோ, இல்லையோ என அறிய, இக்காயுடன் பச்சைப்பயிறு சேர்த்துச் சமைத்துச் சோற்றிற் கலந்துண்ண இடுமருந்திருந்தால், உணவு செரியாது கழியும், இல்லையேல் உணவு செரித்து மலம் மட்டும் கழியும்.

இதனால், இரசாயனம், இலேகியம், நெய் இவைகள் செய்து, முக்கியமாக இரச தாதுவைப் பற்றிவரும் நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இதன் விதையை ஒரு பலம் எடுத்து அரைத்து, வெறும் வயிற்றில் கொடுத்துவிட்டு, பிறகு இரண்டல்லது மூன்று மணி நேரங்கழித்து ஆமணக் கெண்ணெய் கொடுக்க, நாடாப் புழுக்கள் வெளிப்படும் (Tape worm)

கூஷ்மாண்டகிருதம் பலத்தை உண்டாக்கும்; உடலைப் பருக்கச் செய்யும்; இவ்வப்பு நோய்களுக்கு இது சிறந்தது.

---

## 137. கலியாணமுருக்கு—Kaliyana Murukku.

**வே. பெ :** முள் முருக்கு, கிஞ்சுகம்.

**Erythrina Indica.**

**Eng.** Indian Coral tree.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Bàdidapu-chettu; Bàḍisapu-cheṭṭu | Kan. | Paravàlada-Mara |
| | | Sans. | Parijataka; Kimsukam; Mandàya |
| **Mal.** | Karu-Murukkin-Maram.; Murukka; Kalyana-Murukku-Marram. | Hind. | Pàngra; Ferrud.; Mandar |
| | | Duk. | Pàngra |

இம்மரம், வங்காளத்திலும், இந்தியாவின் பல வேறிடங்களிலும் வேலியாகவும், தோட்டங்களில் பயிராகும். வெற்றிலை, நல்ல மிளகு முதலிய கொடிகள் தாவி வளர்வதற்குப பயிரிடப்படுகின்றது.

ப - உ : இலை, பூ, விதை, பட்டை.

**சுவை** - கைப்பு, கார்ப்பு, **தன்மை**- வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- பித்தமகற்றி-பித்தஹரகாரி-Anti-bilious
- கோழையகற்றி-கபஹரகாரி Expectorant.
- வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-Febrifuge.
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Anthelmintic.

இலை.

- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- மலமிளக்கி-லகுவ்ரேசநி-Laxative.
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.
- பாற்பெருக்கி-க்ஷீரவர்த்தநி-Galactagogue.

**குணம்** : இது வாந்தி, வயிற்றுவலி, பித்தசுரம், அக்கரம், அனல், வாய் வேக்காடு, இவைகளை நீக்கி, உடலிற்கு வன்மையை உண்டாக்கும்.

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சர்த்திகுன்மங்
கள்ளமறத் தீர்க்குங் கனற்சுரமும்—விள்ளரிய
அக்கரமும் போக்கு மனல்வாய்வேக் காடகற்றும்
யிக்க வலிகொடுக்கும் விள். (அ.கு.)

பூ.

இது கருப்பப் பையில் கட்டிய இரத்த குன்மத்தை விலக்கும்.

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்தவுதி ரத்தினைப் பஞ்சாய்த்—துரத்திவிடும்
பண்முருக்கு மின்பமொழிப் பாவாய் · உலகறிய
முண்முருக்கம் பூவை மொழி. (அ.கு.)

இலை.

வ - கு : இலைச்சாறு ஒரு தேக்கரண்டி எடுத்து, அத்துடன் ஒரு மேசைக் கரண்டி விளக்கெண்ணெய் சேர்த்து, காலை மாலை மூன்று நாள் சாப்பிட, சீதபேதி விலகும்.

இலைச்சாறு 30 மி.லி. எடுத்து, சிறிது தேன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க, வயிற்றுப் புழுக்கள் வெளிப்படும். இது நீர்மலப் போக்கியாகக் கொள்ளப்படுகின்றது.

இலையை ஒன்றிரண்டாய் நறுக்கிச் சுடுதண்ணீரிலிட்டு, நல்ல சூட்டுடனே கீல் வாதத்துக்கு வைத்துக் கட்டினால், வலி நீங்கும்.

இலையைப் புற்கை செய்து அரையாப்புக்கு வைத்துக்கட்ட மிகுந்த நலந் தரும்.

இதன் இலையைத் தேங்காய் எண்ணெயில் சமைத்துப் புசித்தால் பெண்களுக்குப் பால் சுரக்கும்.

இதனிலை ரசத்தைத் தொடர்ச்சியாக 2 அல்லது 3 மாதங்கள் வரையில் காலை மாலைகளில் உட்கொண்டுவரின், மாதாந்தர சூதகத்திலுண்டாம் வயிற்று வலியைப் போக்கி மிகப் பருத்த உடலை இளைக்கச் செய்து மலட்டு நோயையும் நீக்கும்.

மூத்திர எரிச்சல், மூத்திரத்தடை, முதலிய நோய்களுக்கு, இதன் இலைச் சாற்றை 1 முதல் 2 தேக்கரண்டி காலை மாலை இரு வேளையும் கொடுத்துவர, இது மேற்படி நோய்களைக் கண்டிக்கும்.

பூ.

பூவைக் குடிநீரிட்டுக் குடித்தாலும், அல்லது கருப்பைக்கு நேராக அடிவயிற்றில் வைத்துக் கட்டினாலும் இரத்த குன்மத்தைப் போக்கும். குடிநீரிட்டுக் கொடுக்க, குன்ம நோயை விலக்கும்.

விதை.

விதையை மேற்றோல் நீக்கி, நன்றாய்க் காயவைத்து, இடித்துப் பொடித்து வஸ்திரகாயம் செய்த தூளில் 65 மி.கி.—130 மி.கி. இரவு படுக்கைக்குப் போகும்போது சருக்கரை சேர்த்துச் சாப்பிட்டு, மறுநாள் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட, மலம் விருத்தியாகி மலக்கிருமிகள் விழுந்துவிடும்.

பட்டை.

இதன் உட்பாகத்தில் நெய் தடவித் தீயில் வைக்க, இதில் ஒரு வகைப் புகை படியும். அதை எடுத்துக் கண்ணில் கீழிமையின் உட்புறத்திலும், ஓரத்திலும், தடவிவர, கண்ணோய் முதலிய நேத்திர நோய்கள் நீங்கும்.

பட்டை ரசத்தைப் புண் கிருமிகளைக் கொல்ல வழங்கப்படுத்தலாம்.

வெண்முருக்கன் இளம் வேர்ச் சூரணத்துடன், காய்ந்தாறிய பால் சேர்த்தருந்த தாது புஷ்டி உண்டாகும்.

வேர்ப்பட்டை 20 கிராம், சுத்தநீர் 350 மி.லி. இதை நாலிலொன்றாகக் கஷாயமிட்டு, வசந்தகுசுமாகரரசம் சேர்த்து ஒவ்வொரு தினமும் காலை தோறும் அருந்திவர, நீரிழிவு நோய் நீங்கும்.

---

## 138. கலுமிச்சங்காய்—Kalumi-chchangkai.

**சுவை** - புளிப்பு, **தன்மை** - வெப்பம்**பிரிவு** - கார்ப்பு.
**செய்கை :** குளிர்ச்சியுண்டாக்கி - **Refrigerant.**

**குணம் :** இதைத் தின்றால் பல் விழும். பற்கூச்ச முண்டாகும். **தாது** நஷ்டமுண்டாகும். சீதளத்தை உண்டு பண்ணும்.

தந்தம்விழப் பண்ணுஞ் சலவை தனைக்கொடுக்கும்
வெந்துமிக விந்துவை விழச்செய்யும்—அந்த
எலுமிச்சங் காய்போல் இருக்குங் கொடிய
கலுமிச்சங் காய்க்குணத்தைக் காண்.

**வ - கு :** இதை ஊறுகாய் செய்தேனும், இதன் சாற்றுடன சருக்கரை கலந்தேனும் உண்ணலாம்.

---

## 139. கல்லுருவி—Kallurivi.

Syn. : **Ammania Vesicatoria.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Agni-Venḍra-paku | **Sans.** | Agni-Garba |
| | | **Hind.** | Dad-Mari |
| **Mal** | Kalurvanchi | **Duk.** | Agin-but |

இது சாதாரணமாக இந்தியா முழுவதும் சதுப்பு நிலங்களில் கிடைக்கக் கூடிய பூண்டு.

ப- உ : இலை, சமூலம்.

**சுவை**-கார்ப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை** { நமைச்சலுண்டாக்கி— **Irritant**; கொப்புளமெழுப்பி - த்வக்ஸ்போடகாரி—**vesciant** }

**குணம்**: பல கட்டிகள், இரத்தக்கடிப்பு, கிரந்தி, வெள்ளைப் பாம்பு நஞ்சு இவைகளை நீக்கும்; இரும்பைச் சுத்தி செய்யும்.

சல்லுருவிப் பூண்டுபல கட்டிகளை யுங்கரைக்கும்
வல்லுதிரக் கட்டறுக்கும் வந்தபுண்ணை—வெல்லரிய
மேகத்தை வல்விடத்தை மீறு தகற்றிடும்
லோகத்தைச் சுத்திசெய்யு மோது. (அ.கு.)

**வ - கு** : இலையை அரைத்துத் தோலில் தடவிக் கொப்புளிக்கச் செய்யலாம்.

முறைச்சுரத்துக்கு இதனை உலர்த்திப் பொடித்து, இஞ்சி சேர்த்துக் குடிநீரிட்டுக் கொடுக்கலாம்.

இலையை வீக்கம் கட்டி முதலியவைகளுக்கு அரைத்துக்கட்ட, வீக்கத்தைக் குறைத்துக் கட்டியைக் கரைக்கும்.

கடி நஞ்சுகளுக்கு இதன் இலையைக் கசக்கிக் கடிவாயில வைத்துக்கட்ட நஞ்சு முறியும்.

---

## 140. கவிழ்தும்பை—Kavizhtumbai.

வே-பெ : கழுதைத்தும்பை

Trichodesma indica

| | | | |
|---|---|---|---|
| Hindi : | Ch-hota-Kulpā | Mar : | Lahanā Kalpa |
| Beng : | Do. | Tel : | Gusva-Guttē. |
| Pb : | Kowri-bootee. | | |
| Sind : | Gaōbāgar | | |

**குணம்** : இதனால், அரையாப்புக்கட்டி, வாதநோய், இரத்தமுஞ் சிதமும கலந்து விழலால் வருங் கடுப்பு ஆகிய இவை போம்.

அரையாப்புக் கட்டி யனில முதிரம்
பிரியாச்சீ தக்கடுப்பும் பேருந்—தரையிற்
பழுதைக்கொள் ளாச்செய்ய பங்கயப்பெண்ணே! கேள்
கழுதைத்தும் பைச்செடியைக் கண்டு. (அ.கு.)

**வ - கு** : கவிழ்தும்பைச் சமூலத்தில் ஒரு பிடி எடுத்து, ஒன்று இரண்டாக நசுக்கி, 4 ஆழாக்கு நீர் விட்டுக் குடிநீர் செய்து, காலை மாலை ½ ஆழாக்கு வீதங் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் தணியும். இதன் இலையை அரைத்துச சிறிது சிற்றாமணக்கெண்ணெய் விட்டுக் இவ்வடிக்கினறி அரையாப்புக்கு வைத்துக்கட்டலாம்.

இலையைத் தேன் விட்டு வதக்கி, நீர் விட்டுக் குடிநீர் செய்து கொடுக்கப் பெரும்பாடு நீங்கும்.

இலையை அரைத்துத் துருசுக்குக் கவசித்துக் காடைபுடமிடத் துருசு செந்தூரமாகும்.

## 141. கழற்சிக்கொடி—Kazharchi Kodi.

வே-பெ : காய், வஜ்ஜிரபீஜம், கழற்காய், கச்சக்காய், குபேராட்சி

Caesapinia bonducella

Eng : Bonduc-Nut, Moloucca Bean, Physic nut

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gach-chakaya | Arab. | Akitmakit |
| Mal. | Kazhanchikkuru<br>Kalanchi-kkuru | Pers. | Khayahe-iblis |
| | | Sagar- | Ghota. |
| | | Hind. | Kalkaranj<br>Katkaliji |
| Kan. | Gajjage-kay | | |
| Sans. | Kuberakshi<br>Serakaraja | Duk. | Guchha |

இஃது, இந்தியாவிலும், இலங்கையிலும், வேலிகளிலும், தோட்டங்களிலும் பயிராகிற ஒருவிதக் கொடி ; எங்கும் கிடைக்கக்கூடியது. இதில் கருமை, வெண்மை என்னும் இரண்டினமுண்டு.

ப - உ : இலை, கொட்டை, பட்டை, வேர்.

சுவை—கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

விதை வேர்ப்பட்டை
- முறைவெப்பகற்றி—முறைவ்யாதிரோதி—Antiperiodic
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodic
- உரமாக்கி—பலகாரி—Tonic
- புழுக்கொல்லி—கிருமிநாசநி—Anthelmintic
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge

இலை
- வீக்கமுறுக்கி—சோபாநாசநி—Deobstruent,
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue

குணம் : கருங்கழற்சி இலையால், அண்டவாயு, சூலைக்கட்டு, வெள்ளை பலவித குன்மம், உள்ளழலை ஆகியவை ஒழியும்.

விரைவாதஞ் சூலையறும் வெட்டையன லேகும்
நிரைசேர்ந்த குன்மம் நிலையா—துரைசேர்
அழற்சி விலகும் அருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால். (அ.கு)

## இலை

வெண்கழற்சி இலையால், எறண்டம், இறங்கண்டம், தசையண்டட் வை போம்.

ஏறண்டத் தோடே யிறங்கண்ட மெத்தவுமே
வீறண்ட மெல்லாம் விலக்குங்காண்—தூரண்ட
வள்ளைக் குழையடிபோம் வாள்விழிமா தே! நல்ல
வெள்ளைக் கழற்சியிலை விள். (அ.கு.)

## கழற்சி

கோசஞ் சுருங்கக் குடிலமிகு மன்னவனால்
வீசஞ் சுருங்காது மேலிட்ட—மோசம்
ஒழிய மருந்தாகி யொத்தாசை செய்யும்
கழலா கியகழற்சிக் காய் (தேரர் வெண்பா.)

கழற்சிப் பருப்பால் விரை வீக்கமும், வளிக்குற்றத்தாலுண்டாகும் மற்றைய வீக்கங்களும் போம்.

## விதை

விதையினால், அண்டவாதம், சூட்டினால் பிறந்த பக்கச்சூலை, வயிற்று வலி (குன்மம்) இவை போம்.

"கழற்காய் விதைக்குக் கனவண்ட வாதம்
தழற்பக்கச் சூலைகுன்மம் சாந்தி."

(அ.கு.)

வ - கு: இலையுடன் தேங்காய்ப்பூ சேர்த்து, விளக்கெண்ணெய் விட்டு வதக்கி, வீக்கங்களில் வைத்துக்கட்ட, வீக்கங்கள் கரையும், விரை வீக்கம் மறையும்.

கழற்சிப் பருப்பு, சுக்கு, களிப்பாக்கு இவற்றை முறையே மூன்று இரண்டு, ஒன்று எடையில் எடுத்து, முட்டையின் வெள்ளையை விட்டு, கருப்புக் கருங்கல்லில் மை போல அரைத்துப் பற்றிடுவதால், யானைக்கால் நோயில் வரும் விரை வீக்கம், நீர் கோத்து வரும் விரை வீக்கம் முதலியன கரைவதைக் கண்டுள்ளோம்.

## கெச்சக்காய் பருப்புக் குடிநீர்

கழல்மணி வெள்ளை யுள்ளி முருங்கைத்தோல் வசம்பு தேனு
நிழலிடச் சுக்குத் தானும் நெருப்பினி லுழக்காய்க் கொள்ளக்
குழலடி னுசை போக்குங் குமிறிடுங் குடலில் வாதம்
பழகிய சூலை குன்மம் பற்றிடா தோடிப் போமே.

(பொ - ள்.) கெச்சக்காய் பருப்பு, வெள்ளுள்ளி, முருங்கைப் பட்டை, வசம்பு, சுக்கு முதலியவற்றைத் தண்ணீர் விட்டு எட்டில் ஒன்றாய் வற்றச் செய்து பயன்படுத்த, குடல் வாதம், சூலை, குன்மம் முதலிய நோய்கள் போகும்.

## விதை வேர்ப்பட்டை

விதைகளும் வேர்ப்படடையும் சுரத்திற்கு ஏற்றது.

வேர்பபட்டைத் தூள் 325 மி. கி. முதல் 500 மில்லி கிராம் வரையில் கொடுக்கலாம்.

விதையைப் பொடித்து, அவ்வெடை மிளகுத் தூள் சேர்த்து, அதில் 325 மி. கி. முதல் 1000 மில்லி கிராம் எடை கொடுக்கலாம்.

விதையைப் பொடித்து பெருங்காயம் சிறிது சேர்த்து மோரில் கலக்கிச் சாபபிட, குன்ம நோய் போம். உடற்கு வன்மை தரும்.

விதையைச் சுட்டுப் பொடித்து, அதோடு வறுத்த பாக்குத்தூள் சமனெடையும் சிறிது வெங்காரமும் சேர்த்துப் பல் துலக்கிவர, பல் இறுகும். பல் நோய் தீரும்.

விதையை வெண்கருவில் அரைத்துப் பற்றிட விரை வீக்கம் நீங்கும்

விதையைத் தூளாக்கி முட்டையுடன் கலந்து, விளக்கெண்ணெய் அல்லது நெய் விட்டு, அட்டுச் செய்து சாப்பிட, விரை வீக்கம் நீங்கும்.

இதன் வேர் கழற்சி எண்ணெயில் சேரும்.

கழற்சி தைலம், கழற்சி தைலம், கழற்சி பற்று

## கழுநீர்—Kazhunir.

வே-பெ: உற்பலம், குவளை, குவலயம், செங்கழுநீர்.

**Pontederia vaginalis,**

**Eng : Water Lity.**

**Mal: Chenkazhuneer.**
**Tel: Nirucancha.**

இது நீரில் வளரும் கொடி ; தென்னிந்தியாவில் ஏராளமாய் வளரும்

ப - உ : கொடி முற்றும்.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை { பித்தமடக்கி—பித்தசாந்தநி—Anti-pitta
{ குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant

குணம் : இது, நீர் வேட்கையையும், ஐயப்பிணி, சுவையின்மையையும் போக்கும். உடலுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும்.

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளுழலை மாற்றும்
அடற்கபவ ரோசகத்தை யாற்றுங்—கடற்குள்
எழுநீர்க் குமிழி யிகழு முலையாய் !
கழுநீர் மலரெனவே காண். (அ.கு.)

**சிதேவி செங்கழுநீர்.**

கல்லெனும்பா ஷாணத்தைக் கட்டுவிக்கு மேகத்தைக்
கொல்லு முடலைக் குளிர்விக்கும்—உல்லாசம்
ஆக்கு முயிர்நிலையை யாதரிக்கு மெஞ்ஞான்றும்
மாக்கலவ மூலிமகி மை.

(தேரன் வெண்பா.)

இது வெள்ளைப் பாடாணத்தைக் கட்டும்; மேகத்தினால் ஏற்படும் அழலைக் குளிர்விக்கும் ; உயிர் நிலையைக் காத்து இன்பமளிக்கும்.

**பூ**

வ - கு : இதன் பூ செந்நிறமுடையது. இதில் ஒரு மணமுண்டு. இதைக் குளிர்ந்த நீரில் ஊறப்போட்டு, 30 நாழிகை சென்றபின் அந்நீரை அருந்த தாகம் நீங்கும். உடல் குளிரும்.

**கிழங்கு**

இதை உலர்த்திப் பொடித்து, ஒன்று முதல் ஒன்றரை வராகனெடை எடுத்து, அத்துடன் சீனி கலந்து உட்கொள்ள, நாச்சுவையறியாமை உடலில் அழல் குற்றம் பெருகல் முதலியன நீங்கி, உடல் தழைக்கும்.

உடற்குக் குளிர்ச்சியைத் தரும். முடித் தைலங்கள் பலவற்றிலும் இது சேரும்.

---

## களர்வா—Kalarva.

**வே - பெ கார்கொள்மரம்.**

**Salvadora wightiana.**

**Eng : Tooth brush tree.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Varagogu | Pers. | Darakhte-misvak |
| Kan. | Goni-mara | Hind. | Pilu |
| Sans. | Pilu | Duk. | Pilu-Ka-jhar |
| Arab. | Arak | | |

இது வட இந்தியாவில் வளரும் ஒரு வகை மரம். இதில் **சிறுகளர்வா, பெருங்களர்வா** என இருவகை உண்டு. ஆயினும் செய்கை, குணம முதலியவற்றில் வேற்றுமை கிடையா.

## சிறுகளர்வா—Chiru-kalarva

**Salvadora persica,.**

**Eng. : Tooth-brush tree (Short).**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pinna-vara-gogu | Hind. | Chhōta-pilu |
| | Chinn-vara-gogu | Duk. | Chhotà-pilu |
| | | Arab. | Arak |

---

## பெருங்களர்வா—Perung-kalarva

**Salvadora Indica.**

**Eng. : Tooth-brush tree (Tall).**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pedda-vara-gogu | Pers. | Darakhte-misvak |
| Arab. | Arak | Hind. | Bara-pilu |

**ப-உ :** இலை, பூ, பழம், பட்டை, வேர்ப்பட்டை

**செய்கை :**

**இலை.**
- கோழையகற்றி—கபஹரகாரி—Expecterant.

**பூ**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- மலமிளக்கி—அநுவ்ரேசநி—Laxative.

**பழம்.**
- வீக்கமுருக்கி—சோபாநாசநி—Deobstruent.
- அக்ட்டுவாய்வகற்றி—உதராவாதஹரகாரி—Carminative.
- கற்கரைச்சி—பாஷாணபேதநி—Lithontriptic.
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- நீர்மலம்போக்கி—வ்ரேசநி—Purgative.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

**வேர்.**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- கொப்புளமெழுப்பி—த்வக்ஸ்போடகாரி—Vesicant.

**பட்டை.**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Aeterative.
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

**குணம்** : இது, குடற்காற்று, கோழை, குடற்புழு, வெள்ளை, தீராத் தலை வலி, குட்டம், சூதகத்தடை, வாதநோய், விடக்கடி ஆகியவைகளைப் போக்கும்.

**இலை**

**வ - கு** : இலையை முறைப்படி குடி நீரிட்டு 30 மி. லி. முதல் 60 மி. லி வரையில் உண்டுவர, இரைப்பு. இருமல் போம்.

இலைச்சாறு ½, 1 தேக்கரண்டி வீதம், சருக்கரை சேர்த்துத் தினம் இரு வேளை கொடுத்துவர, குழந்தைகளுக்குண்டாகும் உடல் மெலிவு, கணச் சுரம் போம்.

இலை நஞ்சை முறிக்கும்.

இலையைப் புற்கைசெய்து, வீக்கங்கள், மூலம் முதலியவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

**பூ**

பூவிலிருந்து ஒரு வித எண்ணெய் எடுப்பதுண்டு. இது, வளி நோய், ஐயம், குறை நோய், வெள்ளை, தலைவலி, குடற்புழு இவைகளைப் போக்கும்.

**பழம்**

இதை இடப்பாட்டீரல், வீக்கம், வளி நோய், கட்டிகள் முதலிய நோய் களுக்குக் கொடுக்கலாம்.

பாம்புக் கடிக்கு வெங்காரத்தோடு சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க, நஞ்சு தீருமென்று கொள்ளப்படுகின்றது.

இதை அரைத்து வலி வீக்கங்களுக்குப் பூசலாம்.

**பட்டை**

இதை முறைப்படி குடிநீரிட்டு அரை ஆழாக்குக் கொடுத்துவர, உடற்கு ஊட்டம் தரும், மாதாந்தர ருதுவைக் கிரமப்படுத்தும்; சுரத்தைப் போக்கும்.

**வேர்பட்டை.**

இதைச் சிதைத்து வீக்கங்களில் வைத்துக் கட்ட, வீக்கம் அடங்கும். இது கட்டியவிடத்தில் கொப்புளிக்கும்.

---

## 144. களா—Kala

**வே - பெ : கிளா, கிளாய்**

**Carrissa Carrandus.**

**Eng. : Bengal currants.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Kalivi | **Sans.** | Karamarda |
| **Mal.** | Kila. | **Hind.** | Karando |

இது குத்துக்காடுகளிலும், வேலியோரங்களிலும், வேலிகளிலும் பயிராகும் செடி. முள்ளுள்ளதை கிள்ளினால் பால் வரும், காயில் செந்நிறமும் பச்சை நிறமும் கலந்திருக்கும். பழுத்தபின் கருமை நிறத்தையடையும். இதன் காயை ஊறுக்காய் போடுவதுண்டு. இதில் இருவித முண்டு, அவை சிறுகளா, பெருங்களா.

சிறு களா (Carissa Spinarum)

ப-உ : பூ, காய், பழம், வேர்.

சுவை- இனிப்பு, புளிப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை { பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்நி—Stomachic
வறட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient.
பேறுவலியுண்டாக்கி—பிரசவகாரி—Parturifacient.

## பூ.

குணம் ; இது, கண்ணிலுண்டான கரும்படலம், வெண்படலம், குருதிப் படலம், சதைப்படலம் இவைகளை நீக்கும்.

கண்ணிற் படருங் கரும்படலம் வெண்படலம்
வண்ணவுதி ரப்படலம் வன்சதைகள்—எண்ணற்
களவினேய் போக்கும் அணங்கே ! சிறிய
களவினது பூ வொன்றுங் காண். (அ.கு.)

## காய்.

இது, காதடைப்பு, நீர் வேட்கை, அழல், வாந்தி, சுவையின்மை, குருதி யழல் இவைகளை நீக்கும் ; மிகுந்த பசியை உண்டாக்கும்.

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே ! அரோசகமும் மாறுங்காண்—தீதாம்
இரத்தபித்தம் போகும் இனிய களாக்காய்க்(கு)
உரத்த பசியுண்டாம் ஓது. (அ.கு.)

## களாக்கனி.

களாக்கனி உண்டிடக கணவலி நோயெலா
முளாற்றல்போ யாக்கையை யோங்கல்போ லாக்குமே. (தே. கா.)

(பொ.ள்.) களாபபழந்தைப் புசித்துவரின், உடம்பு வலி முதலிய நோய்களெல்லாம் நீங்கி, மலையைப் போன்று மிக்க வன்மை உண்டாகும்.

## பழம்.

இதை மிகு பசியில் உண்டால் சீதரத்தமும், அதிமந்தத்திலுண்டால் நற்பசியுமுண்டாம். இதனால், தொண்டை வலியும், தலைகனப்பும் நீங்கும்.

நல்ல பசியிலுண்டால் நண்ணுமே சீதரத்தம்
வல்லமந் தத்திலுண்டால் மாபசியாம்—மெல்லப்
புரையார் களநோய்போம் போற்றுசிர நீர்போந்
தரையார் களாப்பழத்தைத் தான். (அ.கு.)

## வேர்.

நஞ்சு, தீக்குறறமிகுதி, தீஜயத்தாலுண்டான வியர்வை, நீர் வேட்கை பிள்ளை பெற்றவுடன் உண்டாகும், அழுக்கு அக்கினி மந்தம் இவைகள் போம்.

விடத்துறுநோய் பித்தமையம் வேர்வையதி தாகந்
திடத்தவுதி ரத்தினது சிக்கல்—சடத்துளெழும்
அக்கினி மந்தமிவை யண்டா தொருநாளும்
சிக்கெனக்க ளாவேரைச் சேர். (அ.கு.)

பூ

வ - கு : கண்களிலுண்டாகும் நோய்கள் யாவும் முதிராததற்குமுன், இப்பூவைக் கசக்கிக் கண்களில் விடியற்காலையில் மூன்று துளி விட்டுவர, அவைகள் போம். கண்களில் பூ விழுந்திருந்தால் அதையும் போக்கும்.

" நாரி கேளாஞ்சனம் " என்கிற மையில் இஃது ஒரு முக்கியமான சரக்கு.

காய்.

மிளகாய்த்தூள், கறிமஞ்சள்தூள், உப்பு, பூண்டு, வெந்தயம் இவைகளைக் கலந்து காயோடு பிசறி, புளித்த மோரிலிட்டு, வெயிலில் வைத்து நீர் சுண்டியபின், கடுகிட்டுப் பொரித்த நல்லெண்ணெய் விட்டுப் பாகப்படுத்தி, உணவுடன் கொள்ளப் பசியைத் தூண்டும். உணவு எளிதில் செரிக்கும். தீயாலுண்டாகும் பிணிகள் போம்.

புளித்த மோரில், காய்க்குத் தகுந்தபடி உப்புச் சேர்த்து ஊறவைத்தும் தயிருடன் சேர்த்துப் பச்சடி செய்தும் உண்ணலாம்.

பழம்.

இதைத் தக்க அளவுடன் உட்கொண்டால், இரைப்பைக்கு வலிவு உண்டாகும். உடல் வெப்பம் நீங்கும். அதிகமாய்க் கொண்டால், வயிற்றில் காற்றுப் பெருகும். இது பசித்தீயைத் தூண்டும்.

---

## 145. களிப்பாக்கு—Kalippakku.

Eng: Areca-nut boiled tender

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pokachekka | Kan. | Adikai |
| Mal. | Kaliyyakka | | |
| Sans, | Kramukam | Urdu | Chickni-supari |

இது, பச்சைப் பாக்கைத் துண்டு துண்டாக வெட்டி வேகவைத்து, சற்று உலர்த்தப்படுவது.

சுவை—துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- சாயமேற்றி—Toenifuge.

குணம் : இஃது நெஞ்சிற் கோழையையும், கழிச்சலையும், மனமகிழ்ச்சியையும் உண்டாக்கும் ; அருசியை ஒழிக்கும்.

களிப்பாக்குத் தின்றக்காற் கண்டத்துட் கோழை
யொளிப்பாகக் கட்டுமிஃ துண்மை—தளிர்ப்பான
பித்த அரோசகம்போம் பேதிமிக உண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு. (அ.கு.)

மேலும், உமிழ் நீரைப் பெருக்கி, வியர்வையைக் குறைத்து, குடல் லீற்றுக்கு உறுதியை உண்டு பண்ணும்.

**வ-கு :** களிப்பாக்கை, மருந்து உண்டவரும், சுர நோயாளரும் வாயிற் போட்டுக்கொள்ளுவர்.

இதை மிகுதியாகக் கொள்ளின் குருதிகெட்டு வீக்கங் காணும்.

இத்துடன் வெற்றிலே சுண்ணும்பு சேர்த்து மென்றுவரின், வாய்க்கு நறுமணத்தை ஊட்டி மகிழ்ச்சியைத் தரும். இதனல் உணவு செரிக்கும்.

பாக்கை வறுத்துப் பொடித்து, அவ்வெடைக்குக் காசுக்கட்டி, இந்துப்பு ஓமம், படிகாரம் சேர்த்துப் பொடித்துப் பல் தேய்த்துவர, **பல்லாட்டம், ஈறுவீக்கம்,** வாய் நாற்றம் முதலியவை நீங்கும்.

---

## (146.) கள்ளி—Kalli.

**Euphorbia calli.**

**Eng. : Milk Hedge plant.**

| | | | | |
|---|---|---|---|---|
| **Tel.** | Jemudu<br>Kada-jemudu | | **Kan.** | Bonta-kalli |
| | | | **Sans.** | Dugdhika<br>Snuhi |
| | | | **Hindi** | Barki-sehund<br>Barki-thorar |
| **Mal.** | Tiruk-kalli<br>Kalli | | **Duk.** | Bahki-send<br>Kaski-send |

இஃது இந்தியாவில் எப் பாகங்களிலும் கிடைக்கக்கூடியது. இது பல வகைப்படும். முக்கியமானவை—**திருகுக்கள்ளி, சதுரக்கள்ளி, இலேக்கள்ளி கொம்புக்கள்ளியாம்.**

**சுவை** - கைப்பு, கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- நீர்ப்பேதியுண்டாக்கி வ்ரேசநி—Purgative.
- வாந்தியுண்டாக்கி வமநகாரி—Emetic.
- தடிப்புண்டாக்கி ஷோணகாரி - Rubefacient.

**திருகுகள்ளி**

**குணம் :** திருகுகள்ளிப் பாலினல், வளிமுடக்குகள், கிரந்தி, பெருநோய், ஐயநோய், குடற்புழு, பக்கசூலே, கரப்பான் இவை போம்.

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேருமோ ?—மாதே !
பருகுபக்க நோயுடனே பாழ்ங்கரப்பான் நீருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

(அ.கு.)

**அளவு :** உறைந்தபால் 16 மி.கி. முதல் 48 மில்லி கிராம்.

பட்டை.

கள்ளி மரப்பட்டையினுல், நரம்புச் சிலந்தி, முக்குற்றங்கள், வளி வெட்டை நீங்கும்.

நரம்புச் சிலந்தி நளிர்வாத சந்நி
யுரம்பெரிய வாதமிவை யோடும்—பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினுல்
(அ.கு.)

.. .. .. .. .. ..

வ - கு : கள்ளிப்பாலே தேள் கொட்டிய வாயிலிட வலி போம்.

வெண்ணெயில் இரண்டொரு துளிவிட்டு உள்ளுக்குக் கொடுக்க, இப் பாட்டீரல் நோயைக் கண்டிப்பதுமன்றிக் கழிச்சலேயும் உண்டாக்கும்.

குருத்தைக் குடிநீரிட்டு, குன்மங்களுக்கும், வயிற்றைச் சேர்ந்த நோய் களுக்கும் கொடுக்கத் தீரும்.

---

## கொடிக்கள்ளி—Kodikkalli.

### Sarcosemma Brevistigma.

வே–பெ: திருஷ்டிக்கள்ளி, கொம்புக்கள்ளி,

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகும். ஆனல், இதை மிகுதியாக மலேக் காடுகளில் காணலாம்.

ப - உ : பால், முற்றின இலே (பழுத்த கொம்பு).

சுவையும் செய்கையும் பெரும்பாலும் மற்றைய கள்ளிகளுக்குள்ளனவே யாகும்.

குணம் : இஃது செரியாமை, மந்தம், வளிக்குற்றம் இவைகளைப் போக்கும் ; வயிற்றைக் கழிக்கும் ; சிறு குழந்தைகளுக் குண்டாகும் கரப்பான், தொண்டைக்கட்டு, சொறி, சிரங்கு இவைகளேயும், பெரும்புண் செய்யான் முதலிய புழுபூச்சிகளின் கடியாலுண்டாம் நஞ்சு, குட்டம், குன்மம் இவைகளேயும் போக்கும்.

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும் போம்
செய்யகடி குட்டநோய் சேருமோ !—மெய்யில்
அடிக்கடிசேர் குன்மவலி யத்தனையுந் தீரும்
கொடிக்கள்ளிப் பாலுக்குக் கூறு.
(அ.கு.)

வ - கு: இதை வைக்கோற்றீயில் வாட்டிப் பிழிய தெள்ளிய சாறு வரும். இதில் ¼, ½ உச்சிக்கரண்டி வீதம், முலேப்பாலுடன் கலக்கிக் குழ விகட்குப் புகட்ட, மேற்கண்ட சிறுவர்கட்குண்டாகும் பிணிகள் நீங்கும். அரை, அல்லது ஒரு பலம் வீதம் முதியோர்களுக்குக் கொடுக்க, அது கழிச்சலே உண்டாக்கி, செரியாமையைப் போக்கும்.

---

## 136. சதுரக்கள்ளி—Shadurakkalli.

**Euphorpia antiquorum.**

**Eng. : Quadrangular Spurge.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Bont-jemudu<br>Bedda-jemudu | Hind. | Tidahara<br>Sehund<br>Tin-dhari-send |
| Mal. | Chaturak-kalli | | |
| Kan. | Katak-kalli | | |
| Sans. | Vajratundi<br>Vajradantaka<br>Mahasunhi | Duk. | Tidhari-send |

இஃது இந்தியாவில் வளருகின்ற ஒரு வகை சிறு மரம்.

ப-உ : பால, தண்டு, வேர்ப்பட்டை

சுவை : கார்ப்பு, தன்மை, வெப்பம் பிரிவு :யார்ப்பு.

செய்கை : கள்ளியான் கீழ்க் காண்.

காப்பான் சொறியுங் கடியுங் கபமும்
உரப்பன் குன்மம் கீழிக்கும்— நிரைப்பரன
பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்
ஒதுசது ரக்கள்ளி தான்.

(அ.கு.)

பால்.

இது, பெருநோய், காணுக்கடி, சூலை, வளிகுன்மம், வளிநோய், வெள்ளை, புழுக்கொண்ட புண், கரப்பான் இவைகளைப் போக்கும்.

குட்டங் கடிசூலை குன்மயே கம்வாயு
துட்டக் கிருமியோடு தூறுபுண்ணு—முட்ட
முதிரக் காப்பனும்போ மொய்குழலே! நாளுஞ்
சதுரக்கள் ளிப்பாற்குத் தான்.

(அ.கு.)

வ - கு : கள்ளிப்பால், பாலுண்ணி முதலிய தோலைப் பற்றிய நோய் களுக்கும், வீக்கங்கள், பல்வலி முதலிய நோய்களுக்கும் உதவும்.

இதன் பாலை உலர்த்தி 35 மில்லி கிராம் எடை கொடுக்கக் கழிச்ச லுண்டாகும். இப் பாலை , புளியுடனும் சீரகத்துடனும் உறவுபட அரைத்து 65 மில்லி கிராம் முதல் 130 மில்லி கிராம் கொடுக்க, வயிறு கழியும். மூட்டு வீக்கங் கரையும். கரப்பான், சொறி, ஐயநோய், குட்டம், காணுக்கடி, சூலை, குன்மம், முதலியன நீங்கும்.

மூட்டு வீக்கத்திற்கு இதன் பாலைத் தடவி, வேர் மண்ணை அதன் மீது தூவுவது நாட்டுப் பழக்கம்.

இப்பாலின் செய்நீர் உபரசங்களைச் செந்தூரிக்க உதவும்.

தண்டு

தண்டைச் சுட்டுச் சாம்பலாக்கிப் புண்களின் மீது தூவிவர உலரும்.

பட்டை.

வேர்ப்பட்டையை நரம்புச் சிலந்திக்கு வைத்துக் கட்டலாம்.

---

## கள்ளிமுளையான்—Kalli-mulayan

**Stapelia Virgata**

சுவை - புளிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { உரமாக்கி-பலகாரி-Tonic.
பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic.

குணம் : பசித்தீயையுண்டாக்கும். வளித்திக்குற்றத்தை மாற்றும்.

வாய்க்குப் புளித்திருக்கு மண்பசியை உண்டாக்கும்
ஏய்க்குமுடற் வாதத்தை யேறுபித்தஞ்—சாய்க்குநற்
தெள்ளிய வின்பமொழித் தெய்வ மடவனமே !
கள்ளிமுளை யானருந்திக் காண். (அ.கு.)

வ-கு : இதைப் பச்சையாகவேனும், துவையல் (சட்டினி) செய்தேனும் உண்டுவர, மேற்கண்ட குணமுண்டாகும்.

---

## 147. கறிப்பாலைநாய்ப்பாலை—Karip-palai.Secamoneemetiga

வே பெ.

Eng. Vomitting swallow-wort.

Tel. { Kukka-pala
Verri-pala.

Mal. Vallipal

Kan. Adumuttoda, Kirumanji.

Sans. Mooinee, Pandhana

Hind. Jangli-pikwan.

இஃது இந்தியா முழுவதும் வளருகின்றது.

ப - உ : இலை, வேர்.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை {
வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
வாந்தியுண்டாக்கி — வமநகாரி—Emetic
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
உடற்றேற்றி—வ்யாதபேதகாரி—Alterative.

குணம் : இதனால், வெள்ளை, சுரம், பித்தகோபம் இவை போம். இது விந்துவைப் பெருக்கும் ; மருந்தை முறிக்கும்.

மேகமனல் வெட்டைசுரம் வீறுபித்த முந்தொலையும்
போகமுறு மெய்ம்மருந்தும் பொய்மருந்தாம்—பாகுமொழி
மானே ! கறிப்பாலை மன்னுமிலை யைத்தினமுந்
தானே யருந்துவர்க்குத் தான். (அ.கு).

வ - கு : இதன் இலையைச் சமைத்தாவது, இலையை உலர்த்திப் பொடி செய்தாவது தக்க அளவில் ½—1 கிராம் எடை சாப்பிட்டுவர, மேற்கண்ட நோய்கள் தணியும்.

இலையை உலர்த்திப் பொடித்து, 2 கிராம் எடை கொடுக்க, வாந்தியை உண்டு பண்ணும்.

சிறிய அளவில், அதாவது 65 மி.கி.—130 மில்லி கிராம் கொடுக்க கோழையகற்றியாகவும், வேர்வையுண்டாக்கியாகவு மிருக்கும்.

இப்பொடி 325 மி.கி, வேலம் பிசின் 130 மி.கி., அபின் அரிசி யெடை சேர்த்துக் கொடுக்க, சீதபேதி நிற்கும்.

இதன் வேரை முலைப்பால் விட்டு அரைத்து, நெற்றியிலிடத் தலைவலி நீங்கும்.

---

## 148. கறிவேம்பு--Kari-Vembu

வே.பெ. கறிவேப்பிலை, கருவேப்பிலை, கறியபிலை.

Murraya Keonigii,

Eng. : Curry leaf.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kari-Vepo-Chettu. | Sans. | Surabhinimba. |
| Mal. | Kari-Veppa. | Hind. | Karaypak. |
| Kan. | Kari bevu-Karibevina Gida | Duk. | Karepak. Karayapak. |

இஃது இந்தியாவில் மிக்க ஏராளமாய் வருகின்ற பெருஞ் செடியினம், மலை நாடுகளிலும், காடுகளிலும், வீட்டுக் கொல்லைகளிலும், தோட்டங்களிலும் பயிராகும. இதன் இலை ஒருவித நறுமணத்தைக் கொடுக்கும். இந்தியர் களுள் பெரும்பாலர், தங்கள் வீட்டில் செய்யப்படும் கறி வகைகளிலும், குழம்பு, மிளகுநீர், நீர்மோர் போன்ற பொருள்களிலும் இதனிலையைத் தாளிதமாய்ச் சேர்த்து உண்பர்.

ப-உ : இலை, ஈர்க்கு, பட்டை, வேர்.

சுவை- சிறுகார்ப்பு, தன்மை- வெப்பம், பிரிவு-கார்ப்பு.

| | |
|---|---|
| செய்கை. | உரமாக்கி பலகாரி—Tonnic |
| | பசித்தீத்தூண்டி—ஜடாரக்நிவர்த்தநி |

குணம் : கருவேப்பிலையால், சுவையின்மை, சீதபேதியால் வரும் வயிற்றுளைவு, பழஞ்சுரம், பயித்தியம் ஆகிய இவை நீங்கும்.

வாயி னருசி வயிற்றுளைச்ச லீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுங்கான்—தூய
மருவேர்று காந்தளங்கை மாதே ! உலகிற்
கருவேப் பிலையருந்திக் காண்,

(அ. கு)

வ - கு : இதன் இலே பட்டை, வேர் இவைகளைக் குடி நீரிட்டுக் கொடுக்க மேற் கூறிய நோய்கள் போம்.

இலேயை நிழலிலுலர்த்தி, இத்துடன் மிளகு, உப்பு, சீரகம், சுக்கு முதலியவற்றைப் பொடியாக்கிச் சோற்றில் கூட்டி, கொஞ்சம் நெய் விட்டுக் கலந்து உண்ண, மந்தம், மந்தபேதி, மலதோடம், மலக்கட்டு, கிரகணீ, பிரமேகம் இவை சாந்தமாகும்.

இலேயுடன், சுட்டபுளி, வறுத்த உப்பு, வறுத்த மிளகாய், கூட்டித் துவையல் செய்து ஆகாரத்துடன் சாப்பிட, அரோசகம், அதிசாரம், பித்த வாந்தி, பித்தக்ஷயம், செரியாமை, வயிற்றுளேச்சல் இவைகள் குணமாகும்.

ஈர்க்கின் புறணியை முலேப்பாவிட்டு இடித்து இரசம்பிழிந்து, கிராம்பு, திப்பிலி சேர்த்து 2,3 தரம் குழந்தைகட்குப் புகட்ட, வாந்தி நிற்கும். பசி தீவனம் உண்டாகும்.

அரிசியுடன் இலேயைச் சேர்த்து உரலிலிட்டுக் குத்தித் தேய்த்துப் புடைத்து விட்டு, அவ்வரிசியுடன் ஒரு பழுத்துலர்ந்த மிளகாய் கூட்டிக் கருக்கி, சாந்து நிறம் வரும் பக்குவத்தில், வசம்புச் சாம்பல், சிறு நாகப்பூ, அதிவிடயம் இவைகளைச் சேர்த்து நீர் விட்டுச் சுண்டக்காய்ச்சிக் கொடுக்க, அசீரணபேதி முதலியன நீங்கும்.

இதன் ஈர்க்குடன் வேப்பீர்க்கு, நெல்லியீர்க்கு சேர்த்து இடித்து, நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க, வாந்தி உடனே நிற்கும்.

மேற்படி இலேயிற் சிறிதும், வயதுக்குத்தக்கபடி 1, 3 மிளகும் சேர்த்து நெய்யில் வறுத்து வெந்நீர் விட்டு அரைத்துக் கரைத்து, பாலர் களுக்கு நீராட்டியபின் குடிப்பிக்க, மந்தம் முதலியன நீங்கிப் பசியை உண்டு பண்ணும்.

---

## 149. கறிமுள்ளி—Kari Mulli, பப்ரமுள்ளி—Pappramulli

**Solanum Indicum**

**Fam. : Solanaceae.**

**Eng. Indian Nightshade.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella Mmulaka. | San. | Brihati, |
| Mal. | Cheruchunda. | Hind. | Barahanta |
| Kan. | Kiriguligida. | | |

**முள்ளிக்காய் வற்றல்**

அமர்முள் ளிக்காய் வற்றலேவேரறுக்கும்.

(பொ-ள்.) முள்ளிக்காய் வற்றலுண்ணன ஐயநோய்களைப் போக்கும்

**சுவை**- கார்ப்பு, தன்மை-வெப்பம், **பிரிவு**- கார்ப்பு

**சமூலம்.**

செய்கை:
- காமம் பெருக்கி—காமவர்த்தனி-Approdisiaisia
- துவர்ப்பி—ஸங்கோசகாரி—Astringent
- வீக்கங் கரைச்சி—Resolvent
- குருதிப் பெருக்கி—ரத்தவர்த்தநி—Cordial Cவர்.
- வியர்வைப் பெருக்கி—பேதகஹராரி Diaphoretic
- கோழையகற்றி—கபஹராரி—expectorant
- சிறுநீர்ப்பெருக்கி முத்ரவர்த்தநி—diuretic
- வெப்பமுண்டாக்கி—stimulant

குணம் : இதனால், நெஞ்சிற் கோழைக்கட்டு, இருமல், இரைப்பு, ஐயசுரம் இவை நீங்கும்.

ஈளை யிரும லிரைப்புச் சுவாசமறும்
வாளைவென்ற கண்ணாய் ! வழுத்தக்கேள்—நாளையினி
யில்லைக் கடலுலக மெங்குங் கபச்சுரநத்
கொல்லைக் கறிமுள்ளி கொள்.

(அ.கு.)

**காய்.**

வளி, தீ, ஐயக் குற்றங்களையும், சுரம், இரைப்பு முதலியவைகளையும் போக்கும்.

வாதபித்த ஐயத்தை மாற்றும்—அனல்போக்கும்
ஓது சுவாசத்தை யோட்டுங்காண்—பூதலத்துள்
துள்ளிப்பாய் கெண்டைவிழித் தோகாய்கேள்! எப்போதும்
முள்ளிக்காய் செய்யும் முறை.

(அ.கு.)

வ - கு : இச்செடிக்கு 10 பங்கு நீர் சேர்த்துக் குடிநீரிட்டு கால் முதல் 1/2 ஆழாக்கு வீதம் கொடுத்துவர நீர்க்கட்டு, எரிச்சல் முதலியன நீங்கும்.

இதை வற்றலிட்டு வறுத்தும், ஊறுகாய் செய்தும் உட்கொள்ளலாம்.

---

## 150. கற்கோவை—Karkovai

**Bryonia umpelalta**

சுவை - இனிப்பு, தன்மை- சீதம், பிரிவு-இனிப்பு.
செய்கை : சிறுநீர்ப்பெருக்கி—Diuretic
குணம் : சோபையை விலக்கும்.

வ. கு. இலையை அல்லது சமூலத்தை இடித்துப் பிழிந்த சாற்றை முறித்துத் தெளிவெடுத்து 30 மில்லி மீட்டர் முதல் 60 மில்லி மீட்டர் வீதம் ஒரு நாளைக்கு இரண்டு முறை கொடுத்துவர, மூத்திரம் அதிகப் பட்டு இழியும். சோபை நீங்கும்.

## 151. கற்பாசி—Karpasi

**Parmelia perlata**

**Eng. Stone flowers.**

**Tel.** Rati-pachi, Rati-puvvu. **Sans.** Silapushpam

Mal. Kalp-pausi.
Kan. Kallu-huvvu.
Hind. Patthar-kā-phu.
Pers. Gule-sang.
Arab. Khirazus-Sakhar.

இது, சுவர், பழைய மரக்கட்டைகள், பெரு மரங்கள், கற்பாறை இவைகளில் உண்டாகின்ற ஒரு வகைப் பாசி; இது மிகுதியாய் கற்பாறையில் உண்டாவதால் கற்பாசி எனப்பெயர் பெற்றது.

இது மழையாற் பிறக்கும்.

**சுவை**- கைப்பு, **தன்மை**- வெப்பம் **பிரிவு**- கார்ப்பு.

செய்கை.
- வெப்பகற்றி ஜ்வரஹ்ரகாரி—Febrifuge.
- துவர்ப்பி ஸங்கோசனகாரி—Astringent.
- வீக்கங்கரைச்சி —Resolvent.
- வரட்சியகற்றி Emollient —அந்தர்ஸ்நிக்தகாரி
- உள்ளழலாற்றி Dimulcent.

**குணம்** : இது நீடித்த மேகத்தையும், பெருங் கழிச்சலையும் நீக்கும்.

பண்டைமே கத்தைப் பறக்கடிக்கும் பேதிகட்கும்
மண்டையெறி வாசனையி லாருங்காண்—தொண்டைக்
கனிக்குமொழி லூட்டுமிதழ்க் காரிகையே ! காரநற
கனிக்குமொரு கற்பாசிதான். (அ.கு.)

**வ.கு** : இதைப் புற்றைசெய்து அடிவயிற்றிலும், முள்ளந்தண்டின் அடிப்பாகவெலும்பிலும் பூச, சிறு நீரை மிகுதியும் இறங்கச் செய்யும்

இதை உலரவைத்து முலைப்பால் சேர்த்தரைத்து, நெற்றியிற்றடவத் தலைவலி போம்.

## 152. கற்றாமரை Katramarai

Mal. Kalthamara.

இது மலையில் உற்பத்தியாகும் ஒரு வகை இலை ; இது தாமரையிலையைப் போலிருக்கும் ; ஆனால் தாமரையிலையைவிடத் தடித்திருக்கும்.

**சுவை**—கார்ப்பு-விறு விறுப்பு, **தன்மை**- வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

செய்கை.
- உடற்றேற்றி வ்யதாபேதகாரி—Alterative.
- உரமாக்கி பலகாரி—Tonic.

**குணம்** : இது சுக்கிலத்தையும் பலத்தையும், விருத்தியாக்கும் ; குடத்தை நீக்கும் ; காரீயத்தைச் செம்பாக்கும்.

வீரிய விருத்திதரு மெய்க்குப் பலம்கொடுக்கும்
கூரிய குட்டுதனைக் கோபிக்குங்—காரீயத்தை
நற்றும் பரமாக்கு நங்காய் ! அடுக்கலுறை
கற்று மரையதனைக் காண்.

(அ. கு.)

வ - கு. இதை உலர்த்திப் பொடி செய்து சருக்கரையுடன் கலந்து காலை மாலைகளில் ஒரு சிட்டுகைத்தூள் கொண்டு, உடனே பாலைக் குடித்து வர, உடல் பலக்கும், சுக்கிலம் பெருகும். உப்பு புளி ஆகா

காரீயத்தை செம்பாக மாற்றும்.

## 153. கற்றாழை Katrazhai

வே-பெ : கன்னி, குமரி

Aloe veera,

Eng. Indian Aloes.

| | |
|---|---|
| **Tel.** Kalabanda. | **Sans.** Kumari. |
| **Mal** Kattuvazha. | **Hind.** Ghikauvar. |
| **Kan.** Kathalai gidsa, Lolisara. | |

இஃது இந்தியா முற்றிலும் ஆற்றங்கரைகளிலும் சதுப்பு நிலங்களிலும், தோட்டங்களிலும் பயிராகும்.

இது சிறுகற்றாழை, பெருங்கற்றாழை, பேய்க்கற்றாழை, கருங்கற்றாழை, செங்கற்றாழை எனப் பல வகைப்படினும், இதன் செய்கை முதலியன சற்றேறக்குறைய ஒத்தேயிருக்கும்.

சிவப்பு வகை கிடைப்பதரிது. இதன் பெருமையை போகர், ஏழாங் காண்டத்தில் காண்க.

ப- உ. பால், மடற்சோறு, சாறு, வேர்.

சுவை-சிறு கைப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை
- உரமாக்கி-பலகாரி-Tonic.
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- நீர்மலம்போக்கி—வ்ரேசநி-Purgative.
- ருதுஉண்டாக்கி—ருதுவர்த்தநி-Emmenagogue.

**குமரி.**

வற்றுக் குமரிதன்னை வற்றலென வுண்ணினுஞ்சீர்
முற்றுக் குமரியென மூளுமே—நற்றுக்குந்
திண்மையு மல்லாத் தெரிவையமேயானலு
முண்மைமிகு நூறுமா யுள்.

(தேரன் வெண்பா)

கற்றாழையை உலர்த்தி முறைப்படி பொடியாகச் செய்து உண்ணில் பொழுதும் இளைமையாக வன்மையுடன் நூறுண்டு வாழலாம்.

## கற்றாழை வற்றல்.

குமரியின் வற்றலும் கொளப்பிணி யகனும். (தே-கா)
(பொ-ள்.) கற்றாழை வற்றல் பிணியைக் கண்டிக்கும்.

## பொது.

**குணம் :** இதனால், வாதமேகம், கருமேகம், கிருமிக்குத்தல், பெருவியாதி, மூலம், உன்மாதம், பகந்தரம், குன்மம், பித்தக்கிரிச்சரம் இவை போம்.

பொல்லாமே கங்கபம்பு மூச்சூலை குட்டரசம்
அல்லார்மத் தம்பகந்த ரங்குன்மம் எல்லாம்விட்
டேகு மரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு, (தே.கு.)

**வ-கு :** இளமடலுடன், சீரகம் கற்கண்டு சேர்த்தரைத்து, குருதியும் சீதமும் கலந்த கழிச்சலுக்குக் கொடுக்கலாம்; மஞ்சள் சிறிது சேர்த்து அரைத்து, ஆரம்ப பிலீக வளர்ச்சிக்கும், கால் அல்லது அரைப்பலம் வரையில் கொடுக்கலாம்.

## பேய்க்கற்றாழை, செங்கற்றாழை.

பேய்க்கற்றாழைக்கு மிகுநீரும், உடல் எரிரும், சுரமும், செங்கற்றாழைக்கு உள்ளழலையும் போம். இதனால் இரும்பு தங்கமாகும்.

பேய்கற்ற ழைக்குப் பெருமேகம் மெய்யெரிச்சல்
எய்க்கக்கூ டாஅழலும் ஏகுங்காண்—தாய்க்குநிக
ராஞ்சிவந்த கற்றாழை யங்கன் குளிர்விக்கும்
பாய்ஞ்சயத்தைப் பொன்னாக்கும் பார். (அ.ரு.)

**வ.கு. :** கற்றாழையின் சோற்றை எடுத்துப் பல முறை கழுவி, இதில் சிறிது படிகாரம் அல்லது சீனக்கற்கண்டு சேர்த்து, சிறு துண்டில் முடிந்து தொங்கவிட அதில் நீர் வடியும். இதைக் கண்களில் விட, கண்ணோய் கண்சிவப்பு, கண்ணருகல் முதலியன மாறும்.

இதன் சாற்றை, வெப்பத்தைத் தணிப்பதற்காகும் பற்பச் செந்தூரங் களுக்குத் துணை கொள்ளலாம்.

இதுவே பற்ப செந்தூரஞ் செய்யவுமுதவும்.

இதன் சாற்றைக் கொண்டு எண்ணெய், நெய், இலேகியம் முதலியன செய்து மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இந்தச் சாற்றை வெதுப்பி மாந்த நோய்களுக்கும், ஊழியால் காணும் நீர்வேட்கைக்கும் கொடுக்கலாம். தாபிதங்களுக்கும், வீக்கங்களுக்கும் பூச, அவை தணியும். சிறிது அபினி சேர்த்துத் தலைக்குப் பற்றிடத் தலை நோய் நீங்கும். நல்லெண்ணெய் ஒரெடையாகக் கலந்து காய்ச்சித் தலையில் தடவிவர, தூக்கம் உண்டாகும், வெண்ணெய், கற்கண்டு, வால்மிளகுத்தூள் இவைகளைச் சாற்றுடன் சேர்த்துண்ண நீர்ச்சுருக்கு, உடலரிப்பு, உள்வெட்கை நீங்கும்.

## சோறு.

சோற்றை எடுத்து எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைக்குத் தேய்த்துத் தலை முழுகிவர, மயிர் வளரும். நித்திரை உண்டாகும்.

சிறுருமணக்கெண்ணெய் 340 கிராமில், கற்ருழைச் சோறு 85 கிராம் ஊறவைத்து அரைத்து, வெந்தயம் 8½ கிராம், சிறுக அரிந்த வெள்ளை வெங்காயம் 1, சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வடிக்கட்டி, அதைக் காலையிலாகிலும், இரவில் படுக்கைக்குப் போகுமுன்னராகிலும் ஓர் உச்சிக் கரண்டி சாப்பிட்டுவர, உடற்சூடு நீங்கும். உடல் பெருகும். மேக அனல் மாறும்.

பால்

இதை கண், இரப்பையில் உண்டாகும் புண்களுக்குத் தடவலாம்.

இரும்பு அல்லது எஃகு இதனுல் நீருகு.

---

## 154. கரியபோளம் Kariabolam

வே - பெ : மூஷாம்பரம், சந்நிநாயகம், இரத்தபோளம்.

**Aloe Litoralis.**

**Eng. : Small Aloe.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chinikalabanda | Sans. | Ikshuramalika |
| Mal. | Chenni Nayakam | | |
| Kan. | Lolisara | Hind. | Chhotakanvar |

கரியபோளம் என்பது சிறு கற்ருழையின் உலர்ந்த பால்.

இது கருப்பாகவும் சிவப்பாகவும் இருக்கும். இதைப்பற்றி எழுதுமுன் சிறுகற்ருழையின் குணத்தைக் கவனிப்போம்.

இது தென்கரை யோரத்தில் (கன்னியாகுமரியில்) இயற்கையாகத் தோன்றிப் பயிராகும். இதனுல், இதற்குக் "கன்னி" என்றும், "குமரி" என்றும், இதன் பாலுக்கு "கன்னியாசாரம்", "கரியபோளம்" என்றும் பெயர்கள் வழங்கும்.

நிற்க, இது, கற்ருழை இனத்தைச் சேர்ந்த சில செடிகளிலிருந்து எடுத்து, உலரவைத்துக் கொள்ளுகிறதாகவும் கருதப்படுகிறது.

மேல்நாட்டார் மருந்தில், நாலு வகைக் கரியபோளம் உண்டு. அவை :

(1) சொக்கோட்ரைன்-Soccotrine.

(2) ஹெப்பாட்டிக்-Hepatic.

(3) பார்படோஸ்-Barbadoes.

(4) கேப் ஆலோஸ்-Cape Aloes.

இவைகள் நிறத்தில் வேறுபடுமேயன்றி செய்கையில் ஒன்றே.

சுவை—கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- உரமாக்கி- பலகாரி- Tonic.
- வெப்பமுண்டாக்கி உஷ்ணகாரி-Stimulant.
- பசித்தீத்தூண்டி ஜடர ாக்நிவர்த்தநி-Stomachic.
- பெருங்கழிச்சலுண்டாக்கி விரேசநகாரி-Catharte.
- ருதுவுண்டாக்கி ருதுருவர்த்தநி-Emmenago.

குணம் : இது, மார்புவலி, வீக்கம், வயிற்றுவலி, பக்கநோய், மேகக் கட்டி, கைகால்களில் உண்டாகி நிலைத்த சூலை, பெருவலி நோய்கள் இவைகளைப் போக்கும்.

மார்புவலி வீக்கம் வயிற்றுவலி பக்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம்—பாருலகில்
நீளங்கை காலில் நிலைசூலை யுங்கறுத்த
போளந் தனைக்காணிற் போம். (அ.கு.)

அளவு : இதை 130 மி.கி. முதல் 190 மி.கி. எடைவரை 2, 3 நாட் களுக்கு ஒரு முறையாக் கொடுக்க, பசித்தீயைத் தூண்டும்.

325 மி.கி. முதல் 650 மி.கி. எடை கொடுக்கக் கழிச்சலுண்டாம்.

வ - கு : இதில் கைப்பும் கெட்டநாற்றமிருப்பதால், தனியே கொடுக் காமல், வேறு மருந்துகளோடு சேர்த்துக் கொடுப்பார்கள்.

மேலும், இது பெருங்குடலிலும் கீழ்வாயிலும் போய்ப் பரவி வெப்ப முண்டாக்கும் தன்மையுள்ளதாகையால் சூலைக் கரைக்கும். ஆதலின், சூல் கொண்ட பெண்கட்குக் கொடுக்குங்கால் அளவறிந்து கொடுத்தல் வேண்டும்.

மேற்கண்ட நோய்களல்லாமல், மந்தம், மஞ்சள்காமாலை, சூதகக்கட்டு, ஆகிய இவைகளையும் போக்கும்.

### கரியபோள மாத்திரை.

| | |
|---|---|
| மூஷாம்பரச் சூரணம் .. .. .. .. | 56 கிராம். |
| சவுக்காரத்தூள் .. .. .. .. | 28 கிராம். |
| சாதிக்காய் எண்ணெய் | 4 கிராம். |
| குல்கந்து .. .. .. .. .. | 28 கிராம். |

இவற்றை ஒன்றுபட அரைத்து 325 மி. கி.—650 மி.கி. தினம் இருவேளை கொடுக்க, இது மேற்கூறிய வியாதிகளைக் கண்டிக்கும்.

### காயமூஷாம்பர மாத்திரை

| | |
|---|---|
| மூஷாம்பரத்தூள் .. .. .. .. | 1 பங்கு. |
| பெருங்காயம் .. .. .. .. .. | 1 ,, |
| சவுக்காரத்தூள் .. .. .. .. | 1 ,, |
| குல்கந்து .. .. .. .. .. | 1 ,, |

இவற்றை ஒன்றுபட அரைத்து 325 மி.கி.-650 மி.கி. கொடுக்க, சூதகத தில் காணும் வயிற்றுவலி நிற்கும். வயிறு கழியும்.

செடியின் வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, சுரநோய் போம். இது மலக் கட்டை நீக்கும். தீட்டை உண்டாக்கும்.

கடையிற் கிடைப்பதில் மண், கல், தூசு கலந்திருப்பதால், இதை வழங்குமுன் வெந்நீரிலிட்டுக்கரைத்து, ஒரு நாள் சென்ற பிறகு வடிகட்டி வெய்யலில் வைத்து நன்ருய் இறுகியபின் எடுத்து வழங்கவும்.

ஒன்றரை முதல் மூன்று குன்றி எடை கொடுக்க, வயிறு கழியும்.

கரியபோளம் 780 மி.கி., அன்னபேதி 1,950 மி.கி. இவ்விரண்டையும் போதுமான அளவு தேன் விட்டு அரைத்து, அரைக்கால் வராகனெடை வீதம், நாளொன்றுக்கு மூன்று தரம் கொடுக்க, பெண்களுக்கு நேரிடும் குருதிச் சிக்கலை அறுத்து வெளிப்படுத்தும்.

கரியபோளம் 650 மி.கி., அன்னபேதி 900 மி.கி., இவற்றைப் போதுமான அளவு தேன்விட்டுச் சேர்த்தரைத்து, ஒரு வாரமட்டும் 130 மி.கி. வீதம் ஆறு மணிக்கொருமுறையும், இரண்டாம் வாரத்தில் நாளொன்றுக்கிரு முறையும், மூன்றும் வாரம் முதல் நாளொன்றுக்கு ஒரு முறையும் உணவுக்குப் பிறகு கொடுத்துவர, நாட்பட்ட எருக்கட்டு நீங்கும்.

கரியபோளம் 680 மி.கி., காயம் 650 மி.கி. இவ்விரண்டும் கொள்ளத் தக்க அளவு தேன் விட்டு அரைத்து, 130 மி.கி. எடை மாத்திரை செய்து நாளொன்றுக்கு இரண்டு தரம் கொடுக்க, செரியாமை, மந்தம், சூதக வயிற்றுவலி நீங்கும்.

குறிப்பு : சூதகத்திலும் எருவாயிலும் வெளியாகும்போக்கும் தீகுருதிப் சட்டென்று நிற்பதால், உண்டாகும் தலை நோய்க்கு இது சிறந்த மருந் தாகும்.

83-ஆம் பக்கத்தில் குறிப்பிட்ட "இரத்த போளத்தை"யும் கவனிக்க.

---

## 155. காக்கணம்-Kakkanam

வே-பெ: காக்கணங்கொடி, சங்குபுஷ்பம், காக்கணத்தி, காக்கட்டான்.

**Clitoria ternatea**

காக்குறட்டை கடுந்காக்கணம்.

Eng. Butterfly pea, Winged-leaved clitoria, Mzeriona

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dintana | Arab. | Mezeriyūne-hindī |
| Mal. | Ṣhangu-pushpam; Kàkkanamkoti; Kāka-valli | Pers. | Darakhte-bikhe-hayat |
| | | Hind. | Aprajità; Kavā-thēnthi |
| Kan. | Shanka-puspa | Duk. | Phiki-ki-jar-kā-jhar |
| Sans. | Shankha-pushpa | | |

இது, வேலிகளின் ஓரத்திலும், தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்கும் ஒரு வகைக் கொடி ; இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது. இக்கொடியின் பூக்களின் நிறவேற்றுமையைக் கொண்டு, இது வெள்ளை நீலம் என இரு வீதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இதில் வெள்ளையினமே மேலானது. இதன் விதைக்கு, காக்கண விதை அல்லது காக்கட்டான் விதை என்பது பெயர். இது *புளிப்பாயும், நறுமணத்தோடுங் கூடியும் இருக்கும்.

வெள்ளைப்பூவுடையதற்கு "வெண்காக்கட்டான்" என்றும், நீலப்பூவுடையதற்கு "கருங்காக்கட்டான்" என்றும் பெயர் வழங்கும்.

ப - உ : இலை, விதை, வேர்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, இனிப்பு தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு

வேர், விதை.

செய்கை: { பெருங்கழிச்சலுண்டாகி—விரேசனகாரி
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி }

(வெண்காக் கட்டான்) வேர்.

குணம் : இதனால், வெள்ளை, தலை நோய், சுரம், கண்ணோய், மந்தம் இவை நீங்கும். கழிச்சலுண்டாகும்.

மாதரால் வந்தவெட்டை வன் மேகஞ் சென்னி வலி
ஓது சுரம் விழிநோயோடுங்காண்—பேதியோடு
மாக்காட்டாஞ் சீதமறு மாமூலி யாம் வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது. (அ.கு.)

(கருங்காக்கட்டான்) வேர்.

இதனால், மந்தம், குடற்புழு, வளிப்பெருக்கு, ஐயப்பெருக்கு இவை போம். கழிச்சலுண்டாகும்.

மாந்தங் கிருமியடல் வாதங் கபவினமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண்—சூழ்ந்த
அருங்காக் குவடுகளி லண்டா மயிலே!
கருங்காக்கட் டான்வேரைக் கண்டு. (அ.கு.)

குறிப்பு : விதையை இளம் வறுப்பாய் வறுத்தும், வேரைப் பாலில் வேகவைத்தும் எடுக்கத் தூய்மையாகும்.

இலை.

வ - கு : இலையால் பொன் பற்பமாகும்.

(2) இதன் இலைச்சாறும் இஞ்சிச்சாறும் ஓரளவாக எடுத்துக் கலந்து, ஓரிரண்டு உச்சிக்கரண்டி வீதம் கொடுத்துவர, இளைப்பு நோயிலுண்டாகும் வியர்வை நீங்கும்.

(3) இதனிலையை உப்புச் சேர்த்தரைத்து, நெறிக் கட்டிகளுக்குப் பூச வீக்கங் கரையும்.

விதை.

(1) விதையை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து 1 கிராம் முதல் 1½ கிராம் வரை கொடுக்க, நன்றாகப் பேதியாகும்.

(2) காக்கட்டான் விதைத்தூள் 7 பங்கு, இந்துப்புப் பொடி 7 பங்கு, சுக்குத்தூள் 1 பங்கு எடுத்து நன்ருய் ஒன்றுபடக் கலந்து, ஒன்று முதல் 8 கிராம் எடை கொடுக்க, நன்ருகக் கழிச்சலுண்டாம். யானைக்கால் தீரும்.

**வேர்.**

(3) காக்கட்டான் ஊறல் நீர் :
வேர் 260 மி.கி.—1,040 மி.கி.
நீர் 130 மி.லி.

ஒரு நாழிகை ஊறவைத்து எடுத்ததில் 30, 60 மி.லி. கொடுத்து வர, சிறுநீரைப் பெருக்கி மலத்தைக் கழிக்கும்.

(4) வேரை அரைத்து ஒன்று முதல் இரண்டு கழற்சிக்காய் அளவு யானைக்கால் நோய்க்குக் கொடுத்து வரலாம்.

(5) வேர்த்தூள் : இதில் 260—520 மி. கி. எடை வீதம் கொடுக்க, குழந்தைகட்குண்டாகும் வாந்தி, ஓக்காளம், மந்தம், கண் நோய் தலை நோய் ஆகியவை தீரும்.

**(6) காக்கணம் வேர் மாத்திரை.**

| | | |
|---|---|---|
| காக்கணம் வேர் | .. .. .. 8 | கிராம் எடை. |
| திப்பிலி | .. .. .. .. 8 | ,, |
| சுக்கு | .. .. .. .. 12 | ,, |
| விளாம் பிசின் | .. .. .. 8 | ,, |

கல்வத்திலிட்டு நீர் விட்டரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து, ஒரு மாத்திரை வீதம் கொடுக்க, நன்கு பேதியாகும்.

குழந்தைகட்கு அரை மாத்திரை கொடுக்கலாம்.

The two varieties of this plant are distinguished by the colour of their flowers, white and blue, in most of the languages in the catalogue. In some, such as Malayalam, each variety has a distinct name. According to this, the name of the blue variety in the last named language is Kāka-valli, which means the crow-creeper in allusion to the resemblance of the colour of its flowers to that of crow. But this name is applied to Mucuna gigantea in the Hortus Malabaricus and some other works.

The Tamil names Kākkaṅan காக்கணும் or Kàkkatàn காக்கட்டான் are as frequently used for C. Terratea as for pharbitis nil, but they are more properly the names of the former, and should be restricted to it. The seeds of Pharbitis nil are easily distirguished by other names given under that head.

The Dukni names Kali-Zirki or Kāli-Zirki-kē-binij and Sufēd-Zirki or Sufed Zirki-ke-binj are occasionally applied to the seeds of C Ternatea not only in some books, but also in some bazaars ; but these are undoubtedly the correct name, of the deeds of ' Pharbitis nil " and its red variety, to which they should be confined.

## 156. காக்கைக்கொல்லி—Kakkai kolli

**வே. பெ : நஞ்சுக்கொட்டை, பேன் கொட்டை, காக்காய்க்கொல்லி.**

**Anamaridta cocculus**

**Eng. Indian berry, Fish Berry.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kàkamāri<br>Kàki-champa | Sans. | Kakphala<br>Kakanshika |
| Mal. | Nanjinkuru<br>Kakka-kolli | Pers. | Zehere ; Mahi |
| Kan. | Kaka-mari-bija | Hind. | Kakmari |
| | | Duk. | Kakmari |

இஃது, இலங்கை, மலையாளம், பர்மா முதலிய இடங்களில் வளரும் ஒரு வகைச் செடி. இதன் கொட்டையை உலர்த்திக் கடைகளில் விற்பது வழக்கம் இதன் உருவம் சுகணம் காயைப் போன்றிருக்கும். ஆனால் தோல் கறுத்துச் சுருங்கி இருக்கும் உள் பருப்பு மஞ்சள் நிறமாயும் நெய்ப்பசையுள்ளதாயும் இருக்கும் இதிலிருந்து எடுக்கும் நெய்க்கு Picro-toxine என்பது பெயர். இது கொடிய நஞ்சு.

இதைச் சோற்றுடன் கலந்து காக்கைக்கு வைக்க, அஃது இதைத் தின்ற உடன் இறக்கும். அதனால், இதற்குக் "காக்கைக்கொல்லி" என்ற பெயர் வழங்கலாயிற்று.

ப - உ : கொட்டை, எண்ணெய்.

சுவை - கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**பொது.**

செய்கை :
- வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic.
- தூக்குணிப்புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Parasiticide.
- உலர்ந்த பழம்.
- மூர்ச்சையுண்டாக்கி—நித்ராகாரி—Narcotic.

**இலை.**

செய்கை : தூக்குணிப் புழுக் கொல்லி—Parasiticide.

**பழச்சாறு**

வ - கு. : பழச்சாற்றைச் சொறி, சிரங்கு, அழுகிய புண்கள் முதலியவைகளுக்குத் தடவ, அவைகள் நலமாகும்.

நன்றாய்ப் பொடி செய்த காக்கைக் கொல்லிப் பருப்பை நீர் விட்டு அரைத்துத் தலையில் தேய்க்கப் பேன்கள் சாகும்.

உடலில் காணும் சீழ்க்கோத்த கொப்பளங்களைப் போக்குவதில் இது சிறந்தது. இக்கொட்டையின் பருப்பைத் தேங்காய் நெய் விட்டு அறைத்துக் கொப்புளங்களின் மீது தடவிவர, அவைகள் உடைந்து சீழ் வெளிப்படுவதுடன் எளிதில் ஆறிவிடும். இதைத் தடவி 3, 4 மணி நேரஞ் சென்றபின் இலுப்பைப் பிண்ணாக்கு அரைப்பிட்டு இள வெந்நீரில் குளிக்க வேண்டும்.

---

## 157. காசா—Kasa.

வே - பெ : காயாச்செடி, காயாம் பூச்செடி, காசரிச்செடி,

Memeeylonedale.

Eng. iorn wood tree

| | |
|---|---|
| Tel. Allichectu imbiatoli of ayam | Kan. Limbotolii or Kayava |
| Mal. Kàsham | Sans. Anjane |

இஃது இலங்கையிலும், கிழக்கு மேற்குக்கரையிலும் வளரும் குத்துச் செடி அல்லது சிறுமரம். இதன் இலைகள் பளபளப்பான பச்சை நிறத்தோடு அடர்த்தியாகவிருக்கும். பூக்கள் செம்மையும் நீலமும் கலந்த நிறத்துடன் கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கும். இதன் பழங்கள் இளஞ்சிவப்பாக உருண்டு, மாணிக்கங்கள் போலத் தொங்கும்

ப.- உ : இலை, வேர், பட்டை.

சுவை - துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி—சங்கோசனகாரி—Astringent.

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.

குணம்:—வெள்ளை வெட்டை, பிரமியம், பெரும்பாடு இவைகளைப் போக்கும்.

வ.கு. இலை பங்கு ஒன்றுக்கு 20 பங்கு நீரிட்டு எட்டிலொன்றாய் குறுக்கி வடித்து அதில் 3 மிலி உள்ளுக்கு கொடுக்க வெளளை தீரும் மேலும் ரத்த பேதியைக் கண்டிக்கும்.

வேரை உலர்த்திச் சிதைத்து 10 பங்கு நீர் விட்டுக் காய்ச்சி, எட்டிலொன்றாகக் குறுக்கி வடிகட்டி, 15 மி.லி., 30 மி.லி. வீதம் தினம் இரு முறை அல்லது மும்முறை கொடுக்க பெரும்பாடு குணமாகும் பெண்களுக்குண்டாகும் மிதமிஞ்சிய வெள்ளையும் போம்.

இதன் பட்டை, தேங்காய்த்துருவல், மிளகு, தேவதாரு, ஓமம் இவைகளை ஓர் அளவாகக் கிழிகட்டி ஒற்றடமிட, தசைச் சிதைவு, வலி முதலியவைகளுக்கு இதமாயிருக்கும்.

---

## 158. காசிரத்னம்—Kasi Ratnam.

**Ipomea quamoclit.**

**Eng. : Cupid's flower.**

| | | | |
|---|---|---|---|
| Mal. | Suriakranti | | |
| Sans. | Kamalata<br>Turoolata | Hind. | Kāmalāta |

இஃது, இந்தியா முழுவதும் பயிராகிற மெல்லிய சுற்றுக்கொடி; முக்கியமாய்த் தோட்டங்களில் வளரும்; அமெரிக்காவின் வெப்ப நாடுகளிலும் பயிராகும்; மழைக்காலங்களில் பூக்கும். இதில் இரு விதமுண்டு. இவைகளுள் சிவப்புப்பூப் பூக்கிறதைப் பார்க்கிலும், வெள்ளைப்பூப் பூக்கிறதே மிகுதியும் கிடைக்கக்கூடியது. இவ்விரு வகைக் கொடிகளின் குணமும் ஒன்றேயாம்.

ப - உ : இலை.

சுவை - துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி சீதளகாரி—Cooling.

குணம் : இது மூலத்தைப்போக்கும்; உடம்புக்குக் குளிர்ச்சியைத் தரும்; நீரிழிவுக் கட்டிகளைப் போக்கும்.

வ கு : இலையை நன்றாகச் சிதைத்து மூலத்தில் வைத்துக்கட்ட, மூல நோய் நீங்கும். அத்துடன் இவ்விலைச்சாறும், பசுவின் நெய்யும் நேரெடைக் கூட்டியதில், இரண்டு உச்சிக்கரண்டி வீதம் தினமிரு வேளை காலை மாலை கொடுக்கலாம்.

நீரிழிவு நோயில் உண்டாகும் பிளவைகளுக்கு, இவ்விலையைச் சிதைத்துக் கட்டப் பழுத்துடையும்.

## 159. காஞ்சொறி—Kanchori.

வே - பெ : காஞ்சொறி, காய்ஞ்சொறி, எருமைக்காய்ஞ்சொற்றி.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dula Gondi | Sans. | Duralabha. |
| Mal. | Kanchori | Hind. | Barhanta |
| Kan. | Akurabaru | Duk. | Kanchkuri |

இது இந்தியாவில் எங்கும் வளரும். இதில் முக்கியமாகச் சிறு காஞ்சொறி, பெருங்காஞ்சொறி, கருங்காஞ்சொறி என மூவகையுண்டு. இம் மூவகையுள் கருங்காஞ்சொறி கிடைப்பதரிது. பெருங்காஞ்சொறி அருமையாய்க் கிடைக்கும். சிறுகாஞ்சொறி எங்கும் கிடைக்கக்கூடியது. இவையின் குணம் ஒன்றேயாகும்.

ப - உ : வேர்.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : வியர்வைப் பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.

குணம் : இது சொறி, சிறங்கு, நமைச்சல் இவைகளைப் போக்கும் ; சுரத்தைக் குறைக்கும் ; மேலும் நீர்வேட்கை, நீரிழிவு, வளிப்பெருக்கு இவைகளையும் நீக்கும்.

வ - கு : மேற்கண்ட மூவகை வேர்களுள் ஒன்றை 8—17 கிராம் எடுத்து ஆழாக்கு நீரிலிட்டு, அரையாழாக்காக எரித்துச் சுண்டியபின் வடிகட்டிக் கொடுத்துவர, அந்தந்த இனத்தின் மேற்கண்ட நோய்களைப் போக்கும்.

இதன் வேரைத் துளசி இலையுடன் சேர்த்தரைத்துச் சரும ரோகங்களுக்குத் தேய்த்துவர, நமைச்சல் நீங்கும்.

சிறுகாஞ்சொறிவேர்.

குணம் : சிறுகாஞ்சொறி வேரினால், ஐய இறைப்பு, மூக்குற்றத் தாலுண்டாகும் சுரக்கூட்டம், கரப்பான், சிறு சிரங்குகள், வாயு, நீர் வேட்கை ஆகிய இவைகள் நீங்கும்.

சிறுகாஞ் சொறிவேர் சிலேத்துமசுவா சத்தைக்
குறியாத மூச்சுரக் குழாத்தைச்—சொறியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலேத்தா கத்தை
உரப்பாகச் சாடுமென வோது. (அ.கு.)
(1) மூக்குற்றத்தால் பிறக்கும் சுரக்கூட்டம்.
(2) வாயு.

கருங்காஞ்சொறிவேர்.

குணம் : இதற்குப் பொடியிருமல், நீர்க்கோவை, ஐயப்பெருக்கு, சுவையின்மை இவை போம்.

குத்திருமல் நீரேற்றங் கோர கபளுட்சை
நித்தியஅ ரோசகமும் நீங்குங்காண்—ரத்ன
அருஞ்காஞ்சி வாய்ந்தவிடை யன்னமே ! சுத்தக்
கருங்காஞ் சொறிவேரைக் கண்டு. (அ.கு.)

பெருங்காஞ்சொறிவேர்.

குணம் : இதனால் இருமல், இரைப்பு, ஐயசுரம் ஆகிய இவைகள் போம்.

காசம் சுவாசம் கபச்சுரங்கள் ஓடிவன
வாசஞ்செய் யும்உளர்க்குள் வாராமல்—வாசம்
பெருக்கு முலேயாய் பெருங்காஞ் சொறிவேர்
இருக்கு மெனவுமெனத்து சொல். (அ.கு.)

———

## 160. காட்டத்தி—Kattatti.

வே. பெ. மலையத்தி, அசமந்தம், பேயத்தி

Ficus oppositifolia

Tel. Verrl Atti-chettu

Mal. Kattaththi, Paraka-maram

Kan. Kad-atti

Sans. Unmatto-dumbare

Arab. Tine-bari

Pers. Anjire-dashti

Hind. Jangli-gulle

Duk. Jangli--Anji

இது தென்னிந்தியாவில் எங்கும் இடைக்கக்கூடிய குத்துச்செடி.

ப. உ: பழம், பட்டை, பால்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு

செய்கை:
- முறைவெப்பகற்றி-Antiperiodic.
- உரமாக்கி-Tonic.
- முறைவ்யாதிரோதி—பலகாரி.

குணம்: இதன் பாலானது, பாதபேதரோசம், மேக சொறி, குட்ட ரோகத் தடிப்பு. மூளைவிரணம் இவற்றை விலக்கும்.

வெடிப்படைபே கப்படைடைய விறிவரு குட்டத்
தடிப்படைப மூளைரணததைச் சாடும்—படிக்குண்மயி
லென்னவொளிர் மாதரசே! எங்குஞ் சுணைகணிறைப்
பன்னமுறு பேயத்திப் பால். (அ.கு.)

வ - கு: பட்டையைக் குடிநீரிட்டு, கால் ஆழாக்கு வீதம் தினமிரு வேளைக் குடித்துவர, அது முறைசுரத்தைக் கண்டிக்கும்.

பழத்தையும், பட்டையையும் வெந்நீரில் வேகவைத்துக் குளித்துவர படை நீங்கும்.

வேரிலிருந்து கீறி எடுக்கும் பால், மிகச் சிறந்ததென கருதப்படு கின்றது. அதில் கற்கண்டு சேர்த்து தகுந்த அளவில் கொடுத்துவர மேற்கூறிய நோய்கள் விலகும். இதன் பாலை இரசம் பற்பமாகுமெனச் சித்தநூல் கூறும்.

## காட்டாத்தி—Kattatti

Tel. Adavimandarumu

Mal. Kattati

Bauhini tomentos

Kankadtti

Sans-Dhathaki

H nd-kachnharen

இது மாவகுப்பு. இந்தியாவிலும் இலங்கையிலும் பயிராகிறது கண்டரை (துருசை) துலலியமாக்கும்.

ப.உ: இலை, மொட்டு, பூ, பிஞ்சு, காய்.

விதை

சுவை - துவர்ப்பு - தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

காம்.

செய்கை : சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநீ-Diuretic.

காட்டாத்தி இலை முதலியன.

குணம் : இதனால், கழிச்சல், மந்தம், இருமல், நஞ்சு முதலியன நீங்கும்.

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விடமும் விலகும்—எதிரொருவர்
மூட்டாத்தீ யென்னுமதி மோகந் தருமணங்கே !
காட்டாத்திக் கென்றுளத்திற் காண். (அ.கு.)

இலை மொக்கு.

வ - கு : (1) இதன் இலை, மொக்குகளைப் பச்சையாகவேனும், உலர்த்தியேனும், தனித்தனியாகவேனும், வேறு சரக்குகளோடு சேர்த்தேனும் குடிநீரிட்டுச் சீதபேதிக்குக் கொடுக்க, அது குணமாகும்.

பூ.

செய்கை { சீதபேதிபோக்கி-Antidysenteric.
புழுக்கொல்லி க்ருமிநாசநி-Anthelmintic.

குணம் : இதனால் குருதிக் கழிச்சல், பெருங்கழிச்சல், வெள்ளை ஆகியவைகள் போம்.

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேகம்—எதிர்நிற்க
மாட்டா தகலும் வனச மலர்த்திருவே
காட்டாத்திப் பூத்தனக்குக் காண். (அ.கு.)

மேலும் இது, குருதியழல், குடற்புழு, நாவறட்சி, மேகம் ஆகியவைகளையும் போக்கும்.

(2) காட்டாத்திப்பூ, வில்வவேர், வெள்ளிலோத்திரம், யானைத்திப்பிலி இவற்றைக் குடிநீரிட்டுக் கொடுக்க, கழிச்சல் தீரும்.

(3) காட்டாத்தி மலரைக் கொண்டு பற்பல மதுக்களைச் (ஆஸவம் அரிஷ்டம்) செய்வது வடநூல் சார்பு.

"வெறிமதுக்கள் சேர்த்தற்கு வேண்டு மிதற்கே
செறிசீத முண்டென்பர் தேர்ந்து."
(அ.கு.)

செய்கை { உரமாக்கி—பலகாரி- Tonic.
காமம் பெருக்கி—காமவர்த்தநீ-Aphrodisiac.

விதை.

(4) இதன் விதையைக் காடி விட்டரைத்து, நஞ்சுக்கடியாக முண்டாகும் புண்களுக்கு வைத்துக் கட்டப் போம்.

மரப்பட்டை.

(5) இதன் மரப்பட்டையைக் கழுநீர் விட்டரைத்துக் கட்டிகளின் மீது பற்றிடலாம்.

வேர்ப்பட்டை.

(6) இதன் வேர்ப்பட்டையை ஊறல் கஷாயமிட்டு, ஈறுபுண், வாய்ப்புண், தொண்டைப்புண் முதலியவற்றிற்கு வாய் கொப்புளிக்கச் சுகந்தரும். குடிநீரிட்டு மண்ணீரல் நோய்க்குக் கொடுக்கலாம்.

"தாதகியால் கட்டுமிரதம்" எனத் தேரன் வெண்பாவில் கூறியதால், காட்டாத்திப் பூவின் சாற்றைக் கொண்டு ரசத்திற்கு சுருக்கிடக் கட்டும.

## 161. காட்டாமணக்கு Kattamanakku

வே. பெ: நாட்டுக் காட்டாமணக்கு, வெள்ளைக் காட்டாமணக்கு. கடலாமணக்கு ஆதளை.

Jatropha curcas.

Eng.: English Physic nut, Nut of—

| | |
|---|---|
| Tel. { Pēpàlam, Adavi-Amudam } | Sans. Parvata-yeranda |
| | Arab. Dande-nahri } Pers. Dande Barri } |
| Mal. Kàttà-vanakka | Hind. Jangif-arandi } |
| Kan. Bettada-haralu | Duk. Janghi Yarandi } |

இது இந்தியாவில் எங்கும் பயிராகிறது; தென்னிந்தியாவில் மேகிட்டுப் புலங்களுக்கு வேலியமைக்க இஃது ஏராளமாய் உபயோகிக்கப்படுறது; இஃது இரும்பை ஈயமாக்கும் இது குத்துச் செடி வகுப்பிற் சேர்ந்தது.

,, - உ: இலை, பால், வேர், வித்து.

சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை {
பாற்பெருகி—க்ஷீரவர்த்தநி—Galactagogue.
குருதிப்பாக்கடக்கி—ரத்தஸ்தம்பனகாரி—Hoemostatic.
புழுவகற்றி—கிருமிநாசநி—vermifuge.

இலை.

குணம்: இதனால், மேகக்கட்டி, புண், கரப்பான், பிலீகம், குன்மக்கட்டி, கிளைக்கின்ற சிரங்கு, சிலேஷ்ம வாதக் குத்தல், தலைநோய், பெருவிரணம், உள்மூலம், உள்ளுருக்கி, வெள்ளை இவை போம். சுக்கில விருத்தி உண்டாகும்.

கட்டி விரணங் கரப்பான் பிலீகமதி
கெட்டியுறு குன்மங் கிளைத்தசிரங்—கொட்டுமே
கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே:
காட்டா மணக்கிலையைக் கண்டு.

காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்
வீட்டு தலைநோய் விரிசிரந்தி—வாட்டுகின்ற
உண்மூலம் போகு முடம்புலர்த்தல் வெட்டையறுந்
தின்மூல தாதுவுமாஞ் செப்பு. (அ.கு.)

இலை.

வ - கு : இலையை வதக்கி முலை மீது கட்ட, பால் சுரக்கும். இக்குணம் பெற, இதைக் களியாய்க் கிளறியாவது, குடிநீராய்ச் செய்தாவது கேப்-டீ-வெர்ட் (cape-de-verd) தீவிலுள்ளவர்கள் கையாளுவதாகத் தெரியவருகிறது.

இலைரசத்தைப் புடைகளுக்குப் பூசலாம்.

பால்.

குணம் : இது, வெள்ளை, வயிற்றுவலி, குறிப்புண், கட்டி இவைகளை நீக்கும்.

விழுமேக வெள்ளைகுன்மம் மேல்விரணந் தோலில்
எழுமேருக் கட்டியிவை யெல்லாந்—தொழுதோடுங்
கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கைமின்னே !
காட்டா மணக்கம்பாற் கண்டு. (அ.கு.)

வ - கு : இதன் பாலை வலியுள்ள பல்லில் வைக்க, பல் வலி குணமாகும். பல் வலியுள்ளவர்கள் இதன் குச்சியால் பல் துலக்கி வருவதுண்டு.

காயப்பட்டு இரத்தம் வெளிப்பட்ட இடத்தில் இதன் பாலைப் பூச குருதி நிற்கும். காயமும் ஆறும்.

விதை.

இதன் விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய், வெளிர் மஞ்சள் நிறமுள்ளது.

செய்கை : பெருமலப்போக்கி—வரேசனகாரி—Cathartic.
வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic.

குணமும் வழக்கும் : இதைத் இதர தைலங்களோடு கூட்டி வளிநோய்களுக்கும், தோலைப்பற்றிய நோய்களுக்கும் பூசுவதுண்டு.

இவ்வித்தின் நெய்யை, மிகு அளவாக உள்ளுக்குக் கொடுக்க நஞ்சாகும்.

வேர்.

வழக்கு : இவ்வேரின் பட்டையை அரைத்துக் இசிவு பிடிப்புக்குப் பற்றிடலாம்.

இதன் வேர்ப்பட்டையுடன், பெருங்காயமும் மோருஞ் சேர்த்து, செரியாமை, பெருங்கழிச்சல் இவற்றிற்குக் கொடுப்பது கொங்கண நாட்டு வழக்கமெனத் தெரியவருகிறது.

## 162. காட்டு இருப்பை Kattuiruppai

வே—பெ ;காட்டு இலுப்பை

**Bassia latifolia.**

**Butter tree**

| | |
|---|---|
| **Tel.** Adavi-ippa-chettu | **Sans.** Aṭavi-madhūka-vri-kshaha |
| **Mal.** Kàṭṭirippa | **Pers.** Darakhte-gulchakàno-Sahrài |
| **Kan.** Kàdu-ippe-gidà | **Hind.** Janglī-mohvà |
| | **Duk.** Janglī-mōhà |

இது, பம்பாய், வங்காளம், இலங்கை, தென்னிந்தியா முதலிய இடங்களிலுள்ள காடுகளில் வளருகின்ற மரம்.

ப - உ : இலை, பூ, விதை, பட்டை.

### இலை

சுவை - புளிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

### பூ

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

### விதை

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

### பட்டை

சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

குணம் : இது, தோலைப்பற்றிய நோய், வலி, இருமல், உடல் வன்மையின்மை இவைகளைப் போக்கும்.

### இலை

வ - கு : இலையைத் தண்ணீரிற் போட்டுக் காய்ச்சி வேது பிடிக்க வியர்வையுண்டாகி சுரம் நீங்கும்.

செய்கை : வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.

### பூ

பூவைக் குடிநீரிட்டுக் குடிக்க இருமல் நீங்கும்.

120 மி.லி, பாலில் அரைப்பலம் பூவைப் போட்டுக் காய்ச்சி, காலை மாலை குடித்துவர, நரம்புத்தளர்ச்சி நீங்கி வண்மை உண்டாகும்.

பூவை உலர்த்தி ஆமணக்கு நெய் சிறிது விட்டுவதக்கி, விரை வீக்கத்திற்கு ஒற்றடமிடலாம்.

செய்கை

குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Cooling
உள்ளழலாற்றி-அந்தாஸ்நிக்தகாரி-Demuleent
உரமாக்கி—பலகாரி-Tonio
உடலுரமாக்கி-போஷணகாரி-Nutritive.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி-Stimulant.

### விதை

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய், சொறி, சிரங்கு, புடை நோய்களுக்கும், தலைப்பாரத்திற்கும், அதைச் சேர்ந்த வலி முதலியவைகளுக்கும் மிகப் பயன்படும்.

செய்கை. வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
வாந்தியுண்டாக்கி-வமநகாரி—Emetic.

### பட்டை

பட்டையைக் குடிநீராக்கி வளி நோய்களுக்கு, வியர்வை பிடிக்கவும், அல்லது ஒற்றமிடவும் பயன்படுத்தலாம்.

இக்குடிநீரை, சொறி சிரங்கு முதலியன கழுவுவதற்கு எடுத்துக் கொள்ளலாம்.

செய்கை. நுட்புழுக் கொல்லிக் கிருமிராசினி—Germicide

### பிண்ணாக்கு.

பிண்ணாக்கு வாந்தியை உண்டுபண்ணும். இதை நெருப்புத் தணலிட்டுப் புகைக்க, பூச்சி புழுக்கள் சாகும்.

---

## 163. காட்டு உளுந்து—Kattu-Uzhundhu.

Glycine Lablails.

Tel. Adavi Mimumu
Mal. Kattuzhunnu
Kan. Kaduddu
Sans. Mashaparni
Hind. Jangi mash

இது, பண்படுத்தப்படாத நிலங்களில் இயல்பாக வளரும் பூண்டினம்; முக்கியமாய் மலையோரங்களில் பயிராகும்.

ப-உ: விதை.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை: காமம் பெருக்கி-காமவர்த்தநி—Aphrodisiac

குணம்: குருதிபழல், சுரம், வளி இவைகளைப் போக்கும்; மேனி அழகையும், ஐயத்தையும் பெருக்கும்.

வ - கு : இதை வேகவைத்தாகிலும், நீரில் நன்றாய் ஊறியபின் சருக்கரை சேர்த்தாகிலும் உண்டுவர, விந்துவைப் பெருக்கும். மேற்கூறிய நோய்களுக்காகச் செய்யும் இலேகியங்களில் இதைச் சேர்ப்பதுண்டு. இதை வறுத்து மாவாக்கி, சருக்கரை அல்லது கற்கண்டு, சாரைப்பருப்பு முதலியவைகளைச் சேர்த்து உருண்டை பிடித்து உண்டுவர, மேற்கண்ட நோய்கள் தணியும்.

---

## 164. காட்டு எலுமிச்சை—Kattu-Elumichchai.

வே - பெ : காட்டுநாரங்கம், பெருங்குருந்து.

Atalantia Monophylla.

**Eng : Wild lime.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavi-nimma | Sans. | Adavi-jambira |
| Mal. | Malanarakam | | |
| Kan. | Kadu-limbe | Hind. | Jangli-nimbu |

இது வெப்பமுள்ள நாடுகளிலுள்ள மலைகளிலும், காடுகளிலும் வளரும் சிறுமர வகுப்பைச் சேர்ந்தது ; இலங்கை தென்னிந்தியா முதலிய இடங்களிலும் மிகுதியாய்ப் பயிராகிறது.

ப—உ : இலை, பழச்சதை, பழத்தோல்.

**இலை.**

சுவை - கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**பழச்சதை.**

சுவை - புளிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**பழத்தோல்.**

சுவை - கைப்பு, விறுவிறுப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**விதை.**

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

பழச்சதை.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—**Refrigerant.**
பழத்தோல்.
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—**Stomachic.**
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி —**Carminative.**

விதை.
புழுவகற்றி—க்ருமிநாசநி—**Vermifuge.**
பட்டை.
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—**Febrifuge**

குணம் : இதனால், சூலை, குன்மம், சுரம், இருமல் இவைகள் தீரும்.

வ - கு : பழரசத்தோடு வெடியுப்புச் சிறிது சேர்த்து, சொறி சிரங்கு முதலியவைகளுக்குப் போட அவைகள் சுகப்படும்.

பழரசத்தைக் குன்மநோய்களுக்கு, ஒவ்வொரு தினமும் சாயங்காலங்களில் கொடுத்துவர, வாந்தியோடுங் கூடிய வயிற்றுவலி போம். இதனால், தலைவலியுந் தீரும்.

பழத்தைக் கும்பிச்சாம்பலிற் சுட்டுப் பிழிந்த ரசத்துடன், சிறிது தேன் அல்லது சர்க்கரை சேர்த்து, ஒரு தேக்கரண்டி வீதம் கொடுக்க, இருமல் தீரும்.

பழத்தோலிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிக்வும் காரமானது.

இவ்வெண்ணெயை விளக்கெண்ணெயுடன் கலந்து, ஆண்குறி. பெண்குறிகளிலுண்டாகும் நமைச்சல் வெடிப்பு முதலியவைகளுக்குத் தடவலாம்.

வாதவலி, கீல்வாயு முதலிய நோய்களுக்கு இத்தயிலத்தைத் தடவலாம்.

ஓர் எலுமிச்சம்பழத்தைத் துண்டுத் துண்டாக வெட்டி, அரைப்படி தண்ணீரிற்போட்டுக் காய்ச்சி, 60 மி.லி. வற்றவைத்து, ஓர் இரவு முழுவதும் பனியில் வைத்திருந்து வடிகட்டி, அதிகாலையில் சாப்பிட்டு வர குளிர்சுரம் நீங்கும்.

இதைக்கீறி உப்புச்சேர்த்து ஊறுகாயாகக் கொள்ள, செரியாமை நீங்கி அழல் தணியும்.

---

## 163. காட்டெள்ளு—Kattellu.

**Sesamum trifoliatum.**

**Eng : Gingeli oil plant (wild).**

| | |
|---|---|
| **Tel.** rri Nuvulu | **Arab.** Tine-Simsim |
| **Mal.** Kattellu | **Pers.** Anjire-kunjad |
| **Kan.** Adavi-yallu | |
| **Sans.** Oummatto-Tilaha | **Hind.** Jangli-Til. |

இது. காடுகளிலும், மலையோரங்களில் பண்படுத்தாத பூமிகளிலும் வளரும் செடி ; இஃது எள்ளினத்தைச் சேர்ந்தது.

இதன் சுவை, செய்கை, குணம், முதலியன நாட்டெள்ளுக்குப் பயதேயாகும்.

---

## 166. காட்டுக்கடுகு—Kattukkadugu.

வே - பெ : நாய்வேளை, நாய்க்கடுகு, பெருவேளை.

**Cleome viscosa**

**Eng : Wild or Dog mustard ; Sticky cleome.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nela Vàminta<br>Kukkaalu | Arab. | Bazar-ul-Banj |
| | | Hind. | Jangli Hurhur |
| Mal. | Nàyvēla<br>Kattukatuka | Duk. | Jangli Hulvul. |
| Kan. | Hucha-sasavi | Sans. | Vana-Sarashapa |

இஃது இந்தியா முழுவதும் கிடைக்கக்கூடிய ஒருவகைப் பூண்டு.

**ப - உ :** இலை, விதை, வேர்.

**சுவை** - கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- அகட்டுவாய்வகற்றி—உஷ்ணவாதஹரகாரி—**Carminative.**
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
- அழுகலகற்றி—தாதுக்ஷிணரோதி—Antiseptic.
- தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.
- கொப்புளமெழுப்பி—த்வக்ஸ்போடகாரி—**vesicant (Blister).**

**குணம் :** வயிற்றுப் பொருமல், உடல் கடுப்பு, குத்தல், காதுநோய் காதிரைச்சல், மூக்குநீர்பாய்தல் இவைகள் போம். மேலும், இது சூலகத்தில் உண்டாகும் வலியைத் தடுத்து குருதிப் போக்கை உண்டாக்கும். பேய் பிடித்ததென்று தன்னை அறியாது தலை விரித்தாடும் பெண்கட்கு இக்கடுகை நெருப்பிலிட்டுப் புகைத்துக் காட்ட அது போம்.

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்மம் மடியுங்காண்—மாதுநல்லாய் !
பேய்க்குப் புகையோடப் பேசா தொழிந்துவிடும்
நாய்க்கடுகை நீவிரும்பி னால்.
வாதம் உடற்கடுப்பு வன்சூலை காதிரைச்சல்
ஓதமிகு பீநசமும் ஓடுங்காண்—போதெறிந்து
காய்வேளைக் காயுவிழிக் காரிகையே ! வையமதில்
நாய்வேளை யுண்ண நவில். (அ.கு.)

### இலை.

**வ - கு :** இலையை வெந்நீர் விட்டு அரைத்து வீக்கங்களிற்போட, வீக்கம் அமுங்கிவிடும்.

இலையை வெந்நீர் விட்டுக் கசக்கிப் பிழிந்த சாற்றில், இரண்டொரு துளி காதில் விட, காது நோய் குணமாகும்.

இதன் சாற்றுடன் எண்ணெய் ஓரிடை சேர்த்துக் காய்ச்சி, காதுச் சீழ் நோய்க்குக் காதில் விடலாம்,

இலையை நெய்யிலிட்டுக் காய்ச்சியபின் இலையை எடுத்துவிட்டு, அந் நெய்யைப் புண்களுக்குப் பூச, அவை சீக்கிரத்தில் குணமாகும். புழுக்கள் உண்டாகா.

இலையைச் சமையல் செய்து சாப்பிடுவது வீட்டு வழக்கம்.

இலையை இடித்து வைத்துக் கட்டினால், கொப்புளமுண்டாகி நீர் வடியும். ஆகையால், கொப்பளமுண்டாக்கி நீர் எடுக்க வேண்டியதற்கு இதை வழங்கலாம்.

இலையை இடித்து இரசத்தைப் பிழிந்துவிட்டுத் திப்பியை முப்பிணி (சந்நி) க்கும், ஐய தலைவலிக்கும் தலையின் உச்சியில் வைத்து மேல் ஒரு சிறு புது ஓட்டை வைத்துச் சீலை கொண்டு கட்டிவிட, தலை நோய் நீங்கும். பிறகு திப்பியை எடுத்துப் பிழிய நீரொழுகும். கட்டிய இடத்தில் ஒரு வித விறுவிறுப்பும் புண்பட்டது போன்ற உணர்ச்சியுமுண்டாகும். முப்பிணி போம்.

**விதை.**

விதையைப் பொடித்துத் தண்ணீரில் ஊறவைத்துப் புழுபட்ட புண்களைக் கழுவ, அதினின்றும் புழுக்கள் விழுந்து, எளிதில் உலரும்.

விதையைப் பொடித்து, 325 மி.கி. முதல் ஒரு 4 கி. எடை வரையிலும் சர்க்கரை கூட்டி, தினம் இரு வேளையாக இரண்டு நாட்கள் கொடுத்து, பிறகு மூன்றும் நாள் விளக்கெண்ணெய் கொடுக்க, கழிச்சலுடன் வயிற்றுப் புழு விழும்.

விதையைக் காடி விட்டரைத்து வீக்கங்களுக்குப் போட, வீக்கங் கரைந்து அதனாலுண்டாகும் வலி குறைந்துவிடும்.

இதைக் கடுகுக்குப் பதிலாக வழங்கக் கூடுமாயின், இது மிகுந்த அழலை உண்டாக்கும்.

விதையைத் துவையல் செய்து வளிநோயுற்றோர் சாப்பிடுவது உண்டு.

**வேர்.**

இதன் சிறிய துண்டு ஒன்றை 17 கிராம் சிற்றாமணக் கெண்ணெயிற் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி, குழந்தைகட்குப் புகட்ட மாந்தம் போம். வயிற்றுப் புழு வெளிப்படும்.

---

## 167. காட்டுக்கருணை—Kattukkarunai.

வே – பெ : காட்டுச்சேனை, காட்டுக்கரணை, பெரியகருணை.

Tacca pinnatifida,

Eng. : Wild Amorphophalus.

| | |
|---|---|
| **Tel.** Pedda-Kanda-gadda | Sans. Vana-Surana |
| **Mal.** Kattu-chena | Hind. Varahikand |
| **Kan.** Kadukesavu | Duk. Barà-kandà |

இது தென்னிந்தியாவிற் பயிராகும் ஒரு வகைக் கருணைச் செடி: மலைகளிலும் காடுகளிலும் பயிராகும். இதில் பெருங்கிழங்கு உண்டு.

கெந்தியை மாய்க்கும்.

ப - உ : கிழங்கு.

சுவை - பச்சையில் -காகரப்பு. தன்மை -வெப்பம், பிரிவு -கார்ப்பு.

பச்சையில்

செய்கை : { பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி—Stomachic
தடிப்புண்டாக்கி-ஷோணகாரி—Rubefacient }

குணம் : வளி நோய்கள், வெள்ளை, எருவாய் முளை, சுரம் இவை போம். இதனால் மிகு பசியும் கரப்பானும் உண்டாகும்.

மேகமணு காது வெகுதீ பனமாகுந்
தேகமதில் மூலமுளை சேராதே—போகாச்
சுரதோடம் போங்கரப்பான் றேன்றும் வனத்திற்
பரவுகரு ணைக்கிழங்காற் பார். (அ.கு.)

வ - கு : இதைச் சமைத்துண்ண மேற்கூறிய நோய்கள் தணியும். மேலுக்குப் போட்டால், அவ்விடத்தில் வெப்பத்தை உண்டாக்கித் தோலைச் சிவப்பிக்கும்.

---

## 168. காட்டுக்கருவாப்பட்டை—Kattukkaruvappattai

Cinnamomum iners,

Eng. : Wild Cinnamon. Bark of—

| | |
|---|---|
| Tel. Advai-lavanga-patta | Arab. Tarnelly |
| Mal. Kàttu-karuvàtoli | Pers. Sazaji-Hindi |
| Kan. Adavi-Lavanga-patte | Hind. Jangli-dàr-chini |
| Sans. Tejpatra | Duk. Jangi-dar-chini |
| Tamalapatra | |

இது, திருவாங்கூர் மலையாளம் முதலிய நாடுகளிலும், வடஇந்தியாவிலும் வளருகின்ற காட்டுக் கருவா மரத்தின் பட்டை.

ப - உ : இலை, பட்டை, எண்ணெய்.

சுவை—கார்ப்பு—விறுவிறுப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : { அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி—Carminative.
வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
சிறுநீர்பெருக்கி-மூத்ரவர்த்தநி—Diuretic.
வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி—Diaphoretic.
வீக்கமுருக்கி-சோபாநாசநி—Deobstruent.
பாற்பெருக்கி-க்ஷீரவர்த்தநி—Lactagogue. }

குணம் : இதனால் செரியாமை, கழிச்சல், இருமல், குருதிக்கழிச்சல், நிணக்கழிச்சல், சீதக்கழிச்சல் இவைகள் போம். பசி உண்டாகும.

வ - கு : காட்டுக்கருவாப்பட்டை 1, சுக்கு 1, மிளகு 2, திப்பிலி 3, அதிமதுரம், வில்வப்பிசின், விளாம்பிசின், வேலம்பிசின், முருங்கைப் பிசின் இவைகள் வகைக்கு 8 பங்கு இவற்றை ஒன்றாகச் சேர்த்திடித்துச் சல்லித்து, ஒரு சிட்டிகை கொடுக்க, குன்மம், இருமல், வயிற்றுப்புசம், சுரம் முதலிய நோய்கள் போம்.

இலையை அதன் மணத்திற்காகக் காய்கறி சமையலில் சேர்ப்பதுண்டு.

இலையிலிருந்து எண்ணெய் வடித்து, அதை நறுமணமூட்ட உண்ணும் பொருள்களோடு சேர்ப்பதுண்டு.

---

## 169. காட்டுக்கஸ்தூரி—Kattuk-kasturi

வே-பெ. பொட்டகத்துத்தி, இரட்டகத்துத்தி, வெற்றிலைக் கஸ்தூரி. கஸ்தூரி வெண்டைக்காய். காட்டு வெண்டைக்காய் சீமை வெண்டைக்காய் காட்டுப்பருத்தி.

**Hibicus abelmochus**

**Eng. : The Musk-Mallow.**

| | |
|---|---|
| Tel. Kastūri-benda. | Arab. Habbul-Mishk |
| Mal. Kàttu-kastūri. | Pers. Mushk-dànah. |
| Kan. Kadu-Kastūri. | Hind. Mushk-dànah. |
| Sans. Laṭakastūrika. | Duk. Mushk-bhēndī-kēbīnj. |

இப்பூண்டு, இந்தியாவில் பல இடங்களில் பயிராகிறது.

இது துண்டு வகையைச் சேர்ந்தது.

ப - உ : இலை, விதை, வேர்

சுவை—கைப்பு, கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**விதை.**

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி - Carminative.
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி - Demulcent.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
- இசிவகற்றி-அங்காகாஷணநாசநி—Antispasmodic.

குணம். இதனால், தலை நோய், மேகம், சுரங்கள், குன்மம் இவைபோம்

வ - கு : இலை, விதை, வேர் இவைகளைக் குடிநீரிட்டு மேற் கூறிய நோய்களுக்குக் கொடுக்க, அவைகள் போம்.

விதையை எண் [illegible] ல் சேர்த்து நறுமணமுண்டுபண்ணலாம்.

அரேபியா நாட்டில் இவ்விதைகளைக் காப்பிக்குப் பதிலாகச் செய்து பருகுகின்றனர்.

விதையைப் பால் விட்டு அரைத்துச் சிரங்கு, நமைச்சல் இவைகளுக்கு பூசக்குணமாகும்.

---

## 170. காட்டுக் கிராம்பு—Kattuk-kirambu.

**Jussioea saffruticosa.**

| | |
|---|---|
| **Tel.** Adavibatsala. | **Kan.** Kadu-lavanga. |
| | **Sans.** Bhallavianga. |
| **Mal.** Kattu-lavangam. | **Hir.** Ban-launga. |

இஃது இந்தியாவில் பல இடங்களிலும் கிடைக்கக்கூடிய பூண்டு.

ப-உ : சமூலம்.

**சுவை**—சிறுகார்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

செய்கை:
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹாரகாரி—Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ராநிர்த்தநி—Diuretic.
- புழுவகற்றி-கிருமிநாகரி—Vermifuge.

**குணம்** : இது வெள்ளை, வெட்டை, சீதக்கழிச்சல், வயிற்றுப்பொருமல், குருதிப் போக்கு இவைகளை நிறுத்தும்; சிறுநீரைப் பெருக்கும்.

வ-கு : இதனை அரைத்து மோரில் கலந்து கொடுக்க, சீதக் கழிச்சலைப் போக்கும்.

இதைக் குறுக அரிந்து 1-க்கு 20 மடங்கு நீர் சேர்த்து, கொதிக்க வைத்துக் குடிநீரிட்டு 115 மிலி முதல் 30 மிலி வரைக் கொடுக்க, இது வயிற்று வலியைப் போக்கும்; மலக்கிருமியைத் தள்ளும்.

இக்குடிநீரை வயிற்றுப் பொருமலுக்கும் கொடுக்கலாம்.

இப்பூண்டை உலர்த்திப் பொடித்து, ஒரு படி கொதிநீரில் அரை மணி நேரம் ஊறவைத்து எடுத்து வடிகட்டி, அந்நீரால் கழுவ, பெண்களுக்கு உண்டாகும் வெள்ளை தீரும்.

---

## 171. காட்டுக் கொள்ளு—Kattukkollu.

வே. பெ. இடிக்கொள், முலைப்பால் விதை.

Cassia absus,

Eng. : Horsegram (Black).

| | |
|---|---|
| Tel. Chanu-pala-vittulu. | Sans. Vana-kuluthia. |
| | Arab. Chasmizaj. |
| Mal. Karin-kolla. | Pers. Chashūm. |
| Kan. Kaduhuruli. | Hind. Chaksu. |

இஃது இந்தியா முழுவதிலும், இலங்கையிலும் பயிராகிற பூண்டின் விதைகள். இது பளபளப்பாயும், கரிய நிறமாயும் இருக்கும். காரத்தைக் கட்டும்.

ப-உ : இலை, விதை.

சுவை—கைப்பு தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை
- செந்நீரிளக்கி-Attenuant.
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்தாவர்த்தநி—Diuretic.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
- பெருமலம்போக்கி-விரேசநி—Cathartic.

குணம் : விக்கல், நீரடைப்பு, வெறி ஆகியவற்றை நீக்கும்.

வ-கு : இலையை வெந்நீரிலிட்டுக் கொதிக்கக் காய்ச்சி, வலியாலுண்டாகும் கை கால் குடைச்சல், அவைகளின் நோய் இவைகளுக்கு ஒற்றிட மிடலாம்.

விதையைப் பொடி செய்து பீளை கட்டுகிற கண் நோய்களுக்கு ஒற்றிடமி மிடலாம். ஆனால், நீர் வடிகிற நோய்களுக்குப் போடக்கூடாது. விதையை வெந்நீர் விட்டரைத்துச் சிறு துணியிற்றடவி, சிறு காயங்களுக்கும், ஆண் குறியிலுண்டாகும் புண்களுக்கும் எருவையாகப் பயன்படுத்தலாம்.

காணத்தோல் 12 கிராம் எடை எடுத்து நீர் விட்டு அரைத்து, உருட்டி உள்ளுக்குக் கொடுக்க, நீரைப் பெருக்கித் தள்ளும்.

விதையை, தகர விதையோடு ஓரெடையாகக்கூட்டி, அரைத்து சொறித் தேமலுக்குப் போட, அவை நீங்கும்.

இதைப் பொடித்து 130 மி.கி. முதல் 325 மி.கி. எடை வீதம் தினம் 2-3 வேளை கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

### 172. காட்டுச்—சதகுப்பை.

இது எங்கும் கிடைக்க கூடிய பூண்டு.

ப-உ : இலை முதலியன.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை
- கோழையகற்றி-கபஹரகாரி—Expectorant.
- எருஇளக்கி-லகுவ்ரேசநி—Laxative.
- இச்சைபெருக்கி-காமவர்வதநி— Aphrodiaios

குணம் : இது, மூலம், இருமல் இவைகளைப்போக்கி, ஆண்மையை உண்டு பண்ணும் மேலும், மலபந்தம் சுரல் நோய்கள், வாந்தி, வயிற்றுப் புழு, கருவாய்ச்சூலை இவைகளையும் போக்கும் பசித்தீயையும் செரிப்பையும் பெருக்கும்.

வ-மு : இதைச் சதகுப்பையைப் போலவே வழங்கலாம். செய்கை ஒன்றே.

### 173. காட்டுச் சாதிக்காய்—Kattu-Sathikkai.

Myristica Malabarica,

Eng. : Wild Nutmeg—nut of Malabar nutmeg, Bombay Mace.

| | |
|---|---|
| Tel. Adavi-jàji-kàya. | Pers. Jozboya Daahti. |
| Mal. Kattu-jathik-Kaya. | Hind. Janglī-jaē-phal. |
| Kan. Kanagi or jadnikai. | Duk. Jangli-jàphal. |
| Sans. Kamuk. Malati | |

இது, மலையாளம், கன்ன டம், குடகு முதலிய நாடுகளிலும், முக்கிய மாய்க் காடுகளிலும் வளரும் ஒரு மரத்தின் காய்.

இதன் விரை, சாதிக்காயை விட பெரியதாயும், நீளம் சிறிது கூடுதலாயும், மணத்திலும், சுவையிலும், குணத்திலும் தாழ்ந்ததாயும் இருக்கும்.

ப-உ : விரை, பத்திரி.

சுவை—கைப்பு, துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை ; புறவெப்பமுண்டாக்கி—Local stimulant—உஷ்ணகாரி.

குணம் : இதை, விரணம், குடைச்சல் வலி, காது நோய் இவைகட்கு உள்ளுக்குக் கொடுக்காமலே வெளிக்கு வழங்கலாம்.

பத்திரி.

இது வாந்தி, நரம்புத் தளர்ச்சி இவைகளைப் போக்கும்.

வ-கு: காயிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் ஒரு பங்கும், தேங்கா யெண்ணெய் இரு பங்கும் சேர்த்து, அழுகிய புண்களுக்குப் போட அவை போம்.

நாட்பட்ட வளி நோய்க்கு இவ்வெண்ணெயை வெளிக்குப் பூசலாம்.

இக்காயை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, அவ்வெண்ணெயைக் காது நோய்க்கு இரண்டொரு துளி விடலாம்.

பத்திரியை, மற்ற மருந்துகளுடன் சேர்த்து வழங்க, உடல்வன்மையைக் கொடுத்துப் பலவீனத்தைப் போக்கும்.

## 174. காட்டுத்துமட்டி—Kattuthumatti.

**Cucumis trigonus..**

**Eng. : Bitter gourd.**

துமட்டிவகையில், காட்டித்துமட்டி மிகவும் கசப்பானது. காய் பச்சை நிறமாயும், மஞ்சள் வரியோடு கூடியுமிருக்கும். இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கக்கூடியது. கொடி வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ : காய், வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்பபு.

செய்கை : நீர்மலம்போக்கி—வரேசனி Purgative.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.

குணம் : இது, பூச்சிக்கடி, சிறு புழு, வெறி இவகைளை போக்கும்.

வ - கு : விதைகளை அறுகம்புல்லோடு சேர்த்தரைத்துச் சிற்றம்மை நோயில் எழும்புகின்ற சிறு கொப்புளங்களுக்குப் போட, இது குளிர்ச்சியைத் தரும்.

இலையை அரைத்து வீக்கங்களில் பூச, அதனாலுண்டாகும் வலி நீங்கி விடும்

காயை இடித்துப் பசுவின் பாலில் வேகவைத்துத் தலையில் பற்றிட வெறி நோய் நீங்கும்.

வேர் ஒரு பங்கும், நீர் 10 பங்கும் விட்டு, அரைமணி நேரம் கொதிக்க வைத்து, 30 மி.லி. கொடுக்கக்கழியச்செய்யும்.

## 175. காட்டுபாகல்—Kattuppakkal

வே - பெ : பழுபாகல்

**Momordica Dioica, Roxb.**

**Eng. Bitter gourd (Wild).**

| | | | |
|---|---|---|---|
| **Tel** | **Karkotaki** | | |
| **Mal.** | **Vempvaal** | | **Vahassa** |
| **Sans.** | **kagi-gala** | **Hindi** | **Dhar-karela** |

இது பாகல் இனத்தைச் சேர்ந்தது. இதற்குக் கிழங்கு உண்டு இது, தென்னிந்தியா, இலங்கை இவ்விடங்களிலுள்ள காடுகளில் தானகவே வளர்ந்து கிடக்கும். வங்காளம் முதலிய வட நாடுகளில் இதைப் பயிரிட்டு வளர்க்கிறதுண்டு. இவ்வினத்தில் ஆண் பெண் என இரு வகையுளது. பெண் இனக்கிழங்கு, ஆண் இனக்கிழங்கைவிடப் பருமனக இருக்கும். ஆண் கிழங்கு மிகச் சிறுத்து, பெரும்பான்மையும் வேர் போன்றே இருக்கும்.

ப-உ : இலை, காய், வேர் அல்லது கிழங்கு.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

| | | |
|---|---|---|
| செய்கை | வெப்பமுண்டாக்கி | - உஷ்ணகாரி—Stimulant. |
| | துவர்ப்பி | - ஸங் காசனகாரி—Astringen |
| | கோழையகற்றி | - கபஹரகாரி—Expectorant. |

குணம் : இதனல், புழுநோய், தலைவலி, மூலம், ஐயப்பெருக்கு, தோலைப்பற்றிய நோய்கள் முதலியன தீரும்.

வ-கு : இலைச்சாற்றேடு, மிளகு, தேவதாரு, தேங்காய் இவைகளைச் சேர்த்து மை போல அரைத்து, நெற்றியின் மீது தடவ, தலை வலிபோம்.

பல்லி எச்சமிடுவதனலுண்டாகும் சிறு கொப்புளங்களுக்கு, இதன் காய்ச்சாற்றைத் தடவப் போம்.

காயை நன்ருய் வெயிலிற் காயவைத்துப் பொடித்து மூக்கிலிட, தீராத் தலை வலி நீங்கும்.

காயைச் சமையல் செய்து சாப்பிடுவதுமுண்டு.

ஆண் செடியின் வேரை அரைத்து, பாம்புக் கடிவாயில் வைத்துக் கட்ட, புண் ஆறிப்போகும்.

பெண் செடியின் கிழங்கை மூலநோய்க்குக் கொடுக்கலாம்.

இக்கிழங்கை உலர்த்திப் பொடித்து, ஐயநோய்களுக்குக் கொடுக்கும் மருந்துகட்குத் துணை மருந்தாகக் கொடுக்கலாம்.

---

## 176. காட்டுப்பேய்ப்புடல்—Kattup peipudal.

வே - பெ - பேய்ப்புடல்.

Trichosanthes cucumerina,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavi-potla<br>Chedu-potla. | Kan. | Bettada-padavalā |
| Mal. | Kaippam-patolam<br>Pepatolam. | Sans.<br>Hind. | Patola.<br>Jangli-Chi-chond |

இது மலையாள நாட்டில் பயிராகும் ஒரு வகைக் கொடி: கொடிய கைப்புச் சுவையுள்ளது.

ப-உ : கொடி, இலை, வேர், விதை.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

இலையும் விதையும்.

செய்கை :
- புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperiodic. வேர்.
- நீர்மலம்போக்கி - வ்ரேசநி - purgative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

குணம் : இதனால், பித்த கப சுரங்கள், காமாலை, அம்மை, நீர் வேட்கை, மயக்கம் இவை போம்.

பித்தசுரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்றம சூரி யுழற்ருக—நித்தியமுங்
காய்ப்புடலை யுண்ணக் கவிழ்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு.

வ - கு : இதன் கொழுந்தைக் குடிநீரிட்டுக் கொடுக்க, கழியச் செய்யும்.

இலை இரசத்தைக் கொடுத்தால், வாந்தி உண்டாகும்.

இதன் இரசத்தைத் தேய்த்தால், தலைமயிர் உதிர்வது நின்றுபோம்.

இலை 12 கிராம் எடை, கொத்துமல்லி 12 கிராம் எடை எடுத்து, நீர் விட்டு இரவில் ஊறவைத்து, மறுநாட் காலையில் உட்கொள்ள, சுரம் தணியும்.

சுரங்களுக்காகக் கொடுக்கும் குடிநீர்களில், பெரும்பாலும் இஃது கூட்டப்படும்.

## 177. காட்டுமுள்ளங்கி—Kattumullangi.

வே - பெ நாரக்கரந்தை, சுவர்முள்ளங்கி

**Blumea aurita**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavi-mullangi<br>Käru-pögaku | Sans. | Kukuradru. |
| | | Arab | Kämafitus |
| Mal. | Kättu-mullangi | Hind. | Jangli-kasni |
| Kan. | Kadumullangi. | Duk. | Jangli-mulli |

இது, தென் இந்தியாவில் எல்லா மூலை முடுக்குகளிலும் வளருகின்ற பூண்டு; முக்கியமாய்ப் பாழுங்குடியிருப்புகளிலும், சுடலைகளிலும், பழஞ் சுவர்களிலும் வளர்ந்து கிடக்கும். இது இளமையாயிருக்கும்போது இதன் இலைகள் பெரிதாகவும், முதுமை அடையும்போது இலைகள் சிறிதாக வும் இருக்கும். இதை, நன்ருய் அறியாதவர்கள் இப் பூண்டின் இளமை யையும், முதுமையையும் நோக்கின், இவை வெவ்வேறு வகைப் பூண் டெனக் கருதுவார்கள். இஃது இளமையாயிருக்கையில் முக்கியமாய்ச், சுவர்களில் முளைத்தெழும்புகிறபடியால், இதற்கு சுவர் முள்ளங்கி அல்லது செயருமுள்ளங்கி என வேறுபெயரிட்டிருக்கின்றனர்.

ப - உ : பூண்டு.

சுவை- துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

| | | |
|---|---|---|
| மணமூட்டி | | Aromatic |
| துவர்ப்பி | ஸங்கோசனகாரி | Astringent |
| பசித்தீத்தூண்டி | ஜடராக்னிவர்த்தநி | Stomachic |
| இசிவகற்றி | அங்காகர்ஷண நாசநி | Antispasmodic |
| ருதுவுண்டாக்கி | ருதுவர்த்தநி | Emmenagogue |
| சிறுநீர்ப்பெருக்கி | மூத்ரவர்தநி | Diuretic |

குணம் : இது, நீர்க்கட்டையும், மார்பு நோயையும், சோபையையும் நீக்கும்.

நீரை யிறக்கிவிடு நெஞ்சுவலியைத்தொலைக்கும்
கோர வதப்பைக் குடிகெடுக்கு—நேரே
தவத்திலுயர்ந் தோர்மயங்குஞ் சாயகக்கண் மாதே
சுவரின்முள் ளாங்கியது சொல். (அ.கு)

வ - கு : இலையை உலர்த்திப் பொடித்து 8 கிராம் எடை வீதம் வெண் ணெயில் கொடுக்க, மேற்கண்ட நோய்கள் போம்.

இலைச்சாற்றை இரண்டொரு துளி கண்ணில் விட, கண்ணோய் நீங்கும்

இதனைக் குடிநீரிட்டு 30 மி.லி. வீதம் உட்கொள்ள, வயிற்றுப்புழு விழும். பெண்களுக்குண்டாகும் வெள்ளையும் போகும்.

மேற்படி குடிநீரைச் சூதகக்கட்டுக்குக் கொடுக்கலாம்.

---

## 178. காட்டுவாகை—Kaattu-vakai

Eng. : Sirissa tree

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dirisanaehettu | Kan. | Bagemara |
| | Tella-dirisana-chettu | Sans. | Shirish-sahasraki |
| Mal. | Velu-vaka | Hind. | Sufed kikar |
| | | Duk. | Ujli-kikar |

இஃது இந்தியாவில் காடுகளில் வளரும் மரம்.

ப - உ : இலை, பூ, விதை, பட்டை.

சுவை - துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : துவர்ப்பி - ஸங்கோசனகாரி Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதள்காரி Cooling.

குணம் : இதனால், குருதிமூலம், செரியாக்கழிச்சல், வெள்ளை முதலிய நோய்கள் குணமாகும்.

வ - கு : கண்ணோய்க்கு இதன் இலையை ஒற்றிடமிடலாம்.

பூவை அரைத்து, வீக்கம், சிரங்கு, கொப்புளம் முதலியவைகளுக்குப் பற்றிடலாம்.

விதையை அரைத்துக் கண் நோய்களுக்குக் கண்ணிலிடலாம்.

விதையைப் பொடித்து 2 கிராம் முதல் 4 கிராம் கொடுக்க, நெறிகட்டு நோயைப் போக்கும். விதையை நீர் விட்டரைத்து மேற்படி கட்டிகளுக்குப் பற்றிட, அவை போம்.

பட்டையை இடித்துப் பொடித்து 2 கிராம் முதல் 4 கிராம் எடை கொடுக்க, குருதி மூலம், வெள்ளை முதலிய நோய்கள் போம்.

---

## 179. காட்டுவெங்காயம்—Kattuvengayam.

**வே – பெ : காட்டீருள்ளி, நரிவெங்காயம்.**

Urginea indica

**Eng. Indian Squill, Bulb of—**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Nakka-vulli-gadda.** | **Arab.** | **Isqile-hindi** |
| **Mal.** | **Kaatulli.** | **Pers.** | **Piyaze-dahtie-hindi.** |
| **Kan.** | **Adavi-neerulli.** | **Hind.** | **Jangli -pilyz.** |
| **San.** | **Vanapaländ** | **Duk.** | **Kandra.** |

இது கடற்கரை, மணற்பாங்கு ஆகிய பூமிகளில் வளர்கின்றது ; வெங்காய வருக்கத்தைச் சேர்ந்த பூண்டு. ஆனால், இஃது அப்பூண்டினத்தைப் போலப் புரை புரையாயின்றி, ஒரே கிழங்காகவிருக்கும். இக்கிழங்கு முற்றுததற்கு முன்னரே எடுத்து அரிந்து, நடுப்பாகத்தை நீக்கிவிடல் வேண்டும்.

ப - உ : கிழங்கு.

சுவை - கைப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு· கார்ப்பு.

செய்கை
- கோழையகற்றி—கபஹாகாரி—Expectorant.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்தநி—Emmenagogue.
- வீக்கமுருக்கி—Deobstruent—சோபநாசநி

குணம் : இதனால், பாம்பு நஞ்சு, கோழைக்கட்டு, இருமல், இரைப்பு, மூலம், பகந்தரம் ஆகியவை போம்.

நஞ்சோடு சீதகபம் நாடாதி ரைப்புமறும்
பஞ்சாக மூல பகந்தரம்போம்—பஞ்சணைசேர்
வீட்டுள்ளிருக்கும் வினோத மடமயிலே !
காட்டுள்ளி யின்கிழங்கைக் கண்டு. (அ.கு.)

வ - கு : இதைக் குடிநீரிட்டுப் பெருவயிறு முதலிய நீரேற்ற நோயாளிகளுக்குக் கொடுக்க, நீரை இறக்கும்.

இதன் கிழங்கைக் காலடியில் தேய்க்க, கால் எரிச்சல் நீங்கும்.

காலாணி போன்ற நோய்களுக்கு, இவ்வெங்காயத்தைச் சுட்டு, சூட்டோடே ஆணியில் வைத்து மிதித்துவர, அந்நோய் நீங்கும்.

நரிவெங்காயம் ஒரு குன்றி, மிளகு 130 மி.கி.பொட்டிலுப்பு 210 மி. கிராம் இம்மூன்றையும் உலர்த்திப் பொடி செய்து, நீரில் கரைத்துக் கொடுக்க, மேற் கூறிய நோய்கள் நீங்கும்.

வெங்காயத்தைப் பிழிந்து சாறெடுத்து, இரு மடங்கு சருக்கரைப்பாகு சேர்த்து 7 மி. லி. வீதம் கொடுத்துவர, நாட்பட்ட இருமல், ஐய நோய்கள் தீரும்.

---

## 180. காப்பிக்கொட்டை kappikkottai

**Cffea arabica**

**Eng *Seeds of Coffae.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Käpi-vittulu | Arab. | Bun. |
| Mal. | Käppik-kuru | Pers. | Qahvä |
| Kan. | Käpi-bija. | Hind. | Bun. |
| Sans. | Meecha-phala.l | Duk. | Bunõ. |

இது காப்பிச் செடிப் பழத்தின் கொட்டை. இச் செடியானது முக்கியமாய்த் தென்னிந்தியா, நீலகிரி, மைசூர், குடகு முதலிய மலைகளில் பயிராக்கப்படுகின்றது.

ப - உ: கொட்டை (காய்ந்த பழம்).

சுவை - கைப்பு, துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- சிறு நீர்ப் பெருக்கி—மூத்ரவர்தநி—Diuretic.
- கற்றுகளாக்கி—பாஷாணபேதநி—Antilithic.
- தூக்கமகற்றி—Antisoporific.

வ - கு: இதன் கொட்டையை வறுத்துப் பொடியாக்கி, நீர்விட்டு காய்ச்சி வடித்து, சிறிது பாலும் சருக்கரையும் கூட்டிச் சாப்பிடுவது உலக வழக்காய்விட்டது. இதற்கு வெப்ப முண்டாக்கிச் செய்கை உள்ளதால், இதனைச் சாப்பிட சுறுசுறுப்பையும், மனத்திற்குக்களிப்பையும் அளிக்கும்; ஆனல் தூக்கத்தைக் கெடுக்கும்.

இதை அளவில் மிகுதியாகச் சேர்த்து உட்கொள்ளின், உமிழ் நீரைக் குறைத்துப் பசியைக் கெடுக்கும். அன்றியும், தமரகத் துடிப்பு, தூக்க மின்மை, வயிற்று நோய் என்னும் இவைகளையும் உண்டாக்கும்.

---

## 181. Kayappankottai காயப்பங்கொட்டை

**Strychnos—Ignatij**

**Eng : Ignatius Beans.**

| | | | |
|---|---|---|---|
| Ma. | Kayapaankuru | Hindi. | Papitah. |
| Arab. | Papita | Duk. | Papitah. |

இது, பிலிப்பைன் (Phillipine) தீவுகளில் வளரும் ஒரு வகை மரத்தின் விதை; இஃது எட்டியின் குணத்தைப் பெற்றிருக்கிறது.

ப - உ: விதை.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
- (நரம்பு) உரமாக்கி—பலகாரி—Nervine Tonic

குணம்: இஃது இரைப்பு, இருமல், நரம்புத் தளர்ச்சி, செரியாமை முதலிய நோய்களைப் போக்கும்.

வ - கு : விதையைப் பொடித்து, அரைக் குன்றியளவு கொடுக்க, மேற்கூறிய நோய்கள் போம்.

விதையை மாவிலங்கப் பட்டையுடன் சேர்த்து அரைத்து, புண் இல்லாத வீக்கங்களுக்குப் பூச, வீக்கங் கரையும்.

---

## 182. காய்வள்ளிக்கொடி kaiVallikkodi

வே. பெ. வெற்றிலைவள்ளி.

Dioscorea Bulbifera.

| | | |
|---|---|---|
| Tel. | Chedu-paddu dumpa<br>Malaka-kaya-pendalam | Mal. Kachchakkodi.<br>Kan. Thoonagenasu.<br>Hind. Zamin-kand. |

இது மர மேறுங் கொடி வகை. கொம்புகளைச்சுற்றி ஏறும். நாட்டில் வைத்துப் பயிராக்குவதற்கு நாட்டுக் காய் வள்ளி என்றும் தானாகவே வளர்வதற்குக் காட்டுக்காய் வள்ளி என்றும் பெயரிட்டுள்ளனர். தானாகவே காட்டில் வளரும் கொடியின் கிழங்கு மிக்க கைப்புச் சுவை உடையது. நாட்டில் வைத்து வளர்க்கப்படுவது அத்தகைய சுவையைப் பெறுவதில்லை. இது, நாளடைவில் தன் கைப்புச் சுவையை இழந்து, நாட்டிலுள்ள ஏழை மக்கள் சமைத்துண்ணத் தக்கதாயிருக்கும்.

இக்கொடியில் காயும் கிழங்குமாகக் காய்க்கிறபடியால், இதற்குக் காம் வள்ளிக்கிழங்குக்கொடி என்பது பெயர்.

ப - உ : V. 2 கொடி. காய், கிழங்கு.

### காட்டுக்காய்வள்ளி.

வ - கு : இலையை உலர்த்திக் குடிநீரிட்டுக் கொடுக்க, இது சுரத்தைத் தணிக்கும்.

கொடியின் காய்களைக் காயவைத்து, உலர்த்திப் பொடித்துப் புண்க மீது தூவிவர, புண்கள் போம்.

மேற்படி தூளையே 30 குன்றியளவில் எடுத்து, ஏலக்காய் சிறிதும் சருக் கரை, பால் இவைகளும் சேர்த்துச் சீதக்கழிச்சலுக்குக் கொடுக்கலாம்.

மேற்படி பொடியைச் சிறிது வெண்ணெய் சேர்த்துக் கொடுக்க, பெரு கழிச்சல் போம்.

### காட்டுக்காய்வள்ளி.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு- கார்ப்பு.

### நாட்டுக்காய்வள்ளி.

வ - கு : இதன் கிழங்கைக் கும்பிச் சாம்பலில் வேகவைத்து, சிறிது நெய் சேர்த்துப்பிசைந்து உருட்டி, மூலத்துக்கு வைத்துக்கட்ட வலி நீங்கும்.

இதன் காயையும் கிழங்கையும் ஏழை மக்கள் வேகவைத்துச் சாப்பிடு கிறார்கள்.

நாட்டுக்காய்வள்ளி.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸ்ங்கோசனகாரி—Astrigent.
இலே.
வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி—Febrifuge.

குணம் : இதன் கிழங்கு, வளிக்குற்றத்தைப் பெருக்கும் ; புண்களை உண்டாக்கும் ; உடலின் வெப்பத்தை அடக்கும்.

அக்கினி வெப்பை யடக்குமென்பார் வாதமொடு
தொக்கிலதி புண்சிரங்கைத் தூண்டிவிடும்—மிக்குபசும்
வேயையுடைத் தோளணங்கே ! வெற்றிலேயாம் வள்ளியெனுங்
காயையுடை வள்ளியது காண். (அ.கு.)

## 183. காராமணி—Karamani

Vigna Catgang.

Eng : Cow-gram

| | | | |
|---|---|---|---|
| Tel. | Boberlu-Alusundi<br>Duntu-pesulu | Kan. | Ala-sandi. |
| | | Sans. | rajamasha. |
| Mal. | Payara | Hind. | Lobia. |

இது ஒரு சிறிய செடி ஆகும்.

இது வெப்ப நாடுகளில் பயிராக்கப்படும் ஒரு வகைச் சிறு செடி.

ப - உ : செடி, பருப்பு.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic

குணம் : வளிநோய், மூலம், கழிச்சல் இவையுண்டாம்.

காரா மணியிலேயைக் காய்ச்சியுண்டால் நாவுரிசை
வாராத வாயுமிக வந்துறுமே—நேரேகேள்
மூலம் விளேயும் முசியாக் கழிச்சலுண்டாந்
தாலமதில் அவ்விலேயைத் தள். (அ.கு.)

" காரா மணியுடற் காற்பிணி யொன்றும் " (தே - கா)

(பொ - ள்.) காராமணி வாத ரோகத்தை உண்டாக்கும்.

வ- கு : இதை உப்புச் சேர்த்து வேகவைத்தும், வறுத்தும் உண்ணலாம். (இஃது உணவுப் பொருள்களுள் ஒன்று.)

---

## 184. காரை—Karai

**Randiadumetorum**

இஃது, இந்தியாவின் பல இடங்களிலும் வளருமாயினும், தென்னிந்தியாவிற்கே சிறப்பாக உரியது; இச்செடிக்கு முள்ளுண்டு; இது குத்துச் செடியினத்தைச் சேர்ந்தது. இதன் காய்கள் பச்சையாகவும், பழுக்கப்பழுக்க மஞ்சள், கறுப்பு நிறத்தையுடையதாகவும் இருக்கும்.

இதில் குத்துக்காரை பெருங்காரை என்கிற இரண்டினமுண்டு

ப - உ : இலை, பழம்.

சுவை—துவர்ப்பு, இனிப்பு, தன்மை- தட்பம், பிரிவு- இனிப்பு.

குணம் : இலைக்குக் குருதிக்கடுப்பு விலகும்.

"காரைத் தழைக்குக் கடுப்பிரத்தம் போம்புளியைச்
சோரப்பெய் தாக்கிச் சுவைத்தறிநீ."

(அ.கு.)

பழம்.

குருதிப்போக்கையும் கழிச்சலையும் நீக்கும்.

சீதக் கடுப்புஞ் செறிந்தவிரத் தக்கடுப்பும்
ஓதுமதி சாரமும்போ முண்மையே—மோதுகடல்
நீரைப் பருகுமுகி னேரளக யின்கொடியே
காரைப் பழத்திற்குக் காண்.

(அ.கு.)

வ - கு : காரையைப் புளியிட்டுச் சமைத்துண்ண இரத்தக்கடுப்பு விலகும்

பழத்தை உடைத்து, விரையை நீக்கி உலர்த்திக் குடிநீரிட்டு தினம் இரு. வேளையும் குடித்துவர, மேற்கூறிய நோய்கள் போம்.

## 185. கார்போகரிசி—Karpokarisi.

வே-பெ : கார்புவா அரிசி, பாகுசி/காப்புவா அரிசி.

**Psoralia Corylifolia.**

**Eng.** Babchi Seeds ;

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kárubógi-vittulu | Kan. | Vakuchu |
| | Bhávanchi-vittulu | Sans. | Vakuchi |
| | | Hind. | Bávanchiyan |
| Mal. | Karboga-ari | Duk. | Bavanchi |

இஃது இந்தியாவின் சமவெளிகளிலும் வங்காளத்திலும் கிடைக்கக் கூடியது. இதற்கு ஒருவித மணமுண்டு.

ப.-உ. : விதை.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம்—பிரிவு-கார்ப்பு.

செய்கை { மலமிளக்கி—லகுவ்ரேசநி—**Laxative.**
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.** }

**குணம்** :—இதைக் கடுவன், விரணம், சர்ப்பவிஷம், வாதசிலேஷ்மம், தினவு, யானைச்சொறி, கிரந்தி இவைகளுக்கு உபயோகிக்கலாம். இது பசியையுண்டாக்கும். குட்டத்தை விலக்கும். ஆனால், பித்தத்தைப் பெருக்கும்.

கார்ப்போக மாமரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சகுவ நஞ்சிவைபோம் பித்தமுண்டாம்—பார்மீதில்
வாத கபநமைச்சல் வண்சொறிசி ரங்குமறுஞ்
சீத மலர்க்குழலாய் செப்பு. (அ. கு.)

**வ.-கு** : கார்போகி, நீரடிமுத்து, கசகசா, பாதம் பருப்பு, கொப்பரை, கருஞ்சீரகம், காட்டுச்சீரகம் இவைகளை ஒன்று சேர்த்துக் காடிநீர் விட்டரைத்து, தேகத்தில் பூசி ஊறவைத்து, மூன்று மணி நேரஞ்சென்று இளவெந்நீரில் குளிக்க, சொறிசிரங்கு, அழுக்குப்படை, படர்தாமரை மற்றுமுள்ள சாதாரண சரும ரோகங்கள் குணப்படும்.

விதையுடன் பசும்பால் விட்டு அரைத்துத் தேய்த்துக் குளிக்கலாம் இதைத் தைலவருக்கங்களிலும் சேர்ப்பதுண்டு.

---

## 186. காவட்டம்புல்—Kavattampul.

**வே - பெ : காமாக்ஷிப்புல், மாந்தப்புல், சுன்னரிப்புல்.**

Andropogon Nardus.

**Eng :** Roosagrass, Citronella.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kamakshi-kasuvu, Kamanch-gaddi | Kan. | Ganda-hanchi-khade |
| | | Sans. | Bhustrina |
| Mal. | Kamakship-pulla, Chorap-pulla | Hind. | Ganjni-ka |
| | | Duk. | Ganjni-ka |

இஃது இந்தியாவில் பல இடங்களிலும் பயிராகும் ஒரு வகை நறுமணமுடைய புல். இதிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இதற்கு காவட்டம் புல்லெண்ணெய் Oil Citronella) எனபது பெயர்.

**ப-உ** : புல், எண்ணெய்.

**சுவை**—கைப்பு, விறுவிறுப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு—கார்ப்பு.**

**செய்கை** : { இசிவகற்றி—அங்காகர்ஷணநாசினி—**Antispasmodic.**
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—**Carminative.**
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.** }

**குணம் :** இது, மந்தம், செரியாமை, ஐயசுரம், கணமாந்தம், நாவெட்டிக் காய்ச்சல், கழிச்சல் ஆகியவைகளைப் போக்கும்.

மாந்தப்புற் பேதிகட்டு மந்தம சீரணத்தைச்
சாந்திசெய்யும் வந்தசுரத் தைப்போக்கும்—ஏந்திழையே !
காவட்டம் புற்குக் கணமாந்தம் பேதியறும்
நாவொட்டிக் காய்ச்சலும்போ நாடு. (அ.கு.)

**வ-கு :** புல்லைக் குடிநீரிட்டு 15 மி.லி. முதல் 30 **மி.லி.** வீதம் கொடுக்க, வயிற்று வலி, கழிச்சல் இவைகளைப் போக்கும். இதை அளவில் குறைத்துக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

**எண்ணெய் 3—6** துளி சருக்கரையில் கலந்து, வயிற்றுவலி, வாந்தி, வாந்திபேதி இவைகட்குக் கொடுக்க, மேற்படி நோய்கள் நீங்கும்.

எண்ணெய் ஒரு பங்கும், தேங்காய் எண்ணெய் இரண்டு பங்கும் சேர்த்து வலியுள்ள இடத்தில் மேலுக்குத் தேய்க்கலாம்.

———

## 187. காளான்—Kalan.

**Agaricus Campestris.**

**Eng : White agaric.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kukka-Godugu** | **Kan.** | **Alambu** |
| **Mal.** | **Kálán** | **Hind.** | **Chhattri** |

இது, மழைக் காலங்களில் வைக்கோல் போரிருக்குமிடங்களிலும், இலைச் சருகு முதலியவை குவிந்து கிடக்குமிடங்களிலும், மரங்களின் அடிகளிலும் முளைத்தெழும்பும். இதில் பல வகையுண்டு. **குடைக்காளான். மரக்காளான், முட்டைக்காளான், சீமைக்காளான், கடற்காளான்** முதலியன. இவைகளுள் கசப்புடையனவும், கசப்பில்லாதனவும் உண்டு. கசப்பில்லாத குடைக்காளான் இனத்தை ஏழைகள் சமைத்துச் சாப்பிடுவார்கள். குடைக்காளானுக்கு உட்புறம் வெளுத்திருக்குமாகில், அஃதே உண்பதற்கேற்றது.

இது சூதத்தைக் கட்டும்.

**சுவை**—துவர்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசநகாரி —Astringent.
மலநீராக்கி—ஜலவ்ரேசனி —Hydrogogue.
பாற்சுருக்கி—க்ஷீரநாசநி—Lactifuge.

**குணம் :** இஃது, இருமல், செரியாப்பேதி, இராவேர்வை **இவைகளைப்** போக்கும்.

**வ-கு :** காளானைக் குடிநீரிட்டு அம்மைசுரம் முதலிய சுரங்களுக்குக் கொடுக்க, எளிதில் கொப்புளங்களை உலர்த்தும்.

சிறு அளவாகக் கொடுக்க, செரியாக் கழிச்சலைப் போக்கும்.

இதை அரைத்து மார்பில் பற்றிட, முலைப்பால் சுரப்பதைக் குறைக்கும்.

அட்டைக்கடியினால் உண்டாகும் தீராக் குருதிப்பாய்ச்சலை நிறுத்தவும் இதை வழங்கலாம்.

———

## 188. காருக்கருணை—Karak-karunai.

Amorphophalus—Campanulatus

Eng. : Telugu potator Amorphophalus.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kanda-gadda<br>Manchi-kanda. | Kan. | Suvarna-guddah |
| | | Sans. | Arsaghna-kanda |
| Mal. | Chénak-kizhanna | Hind. | Zamin-kand |

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகிறது ; ஆயினும் தென்னாட்டில் மிகுதியாகப் பயிராகிறது. ஒரே கிழங்காக மிகப் பருமனாக இருக்கும். இவ் வினத்தில், காட்டுக்கருணை காறுகருணை, என வேறு இரு வகையுமுளது.

ப.-உ : கிழங்கு.

சுவைகரகரப்பு, தன்மை-தட்பம். பிரிவு-இனிப்பு.

செய்கை :
- உடற்றேற்றி-வியதாபேதகாரி-Alterative.
- உடலுரமாக்கி-போஷணகாரி-Nutritive.
- உரமாக்கி-பலகாரி-Tonic.

குணம் : இதனால், ஐய நோய்கள், வளி நோய்கள், குருதிமூலம் அக்னிமாந்தம் இவை போம். பசி உண்டாகும்.

ஞால மதிற்கபநோய் நாடாது வாதமறும்
மூல முளையிரத்தம் முன்பொழியும்—ஓலமிட்டு
மாறுக் கனல்மந்த மாறுமதி தீபனமாங் (அ.கு.)
காருக் கருணைதனைக் காண்.

வ-கு. : இக்கிழங்கைச் சமைத்துப் புசிக்க, மூலம் போகும்.

இதை நசுக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டினால், கட்டிகள் கரையும்.

இதை வேகவைத்து உலர்த்திப் பொடித்து மாவாக்கி, கூவக்கிழங்கு மாவிற்குப் பதிலாகச் சிதக் கழிச்சலுக்குக் கொடுத்துவரலாம்.

இதையே உலர்த்திப்பொடித்து, வேறு மருந்துகளுடன் சேர்த்து இலேகிய மாகக் கிளறித் தோலைப்பற்றிய நோய்களுக்குக் கொடுத்துதவலாம்.

---

## 189. காறுகருணை Karu-Karunai.

Typhonium orixense.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Durada-kanda-gadda | Mal. | Karach-chena |

இஃது, இந்தியாவிலுள்ள பள்ளத்தாக்குகளிலும், சதுப்பு நிலங் களிலும் வளருகின்ற ஒரு வகைக் கருணையினத்தைச் சேர்ந்தது.

சுவை—சிறுகைப்பு, கரகரப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : { காறலுண்டாக்கி-Acrid. வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.

குணம் : இதனால், கரப்பான், பொடிச்சிரங்கு, சொறி, கழலை, மூலம் இவைகள் நீங்கும். ஆனால், மந்தாக்கினி, கோழைக்கட்டு, நமைச்சல், செரியாமை முதலியன உண்டாம்.

கரப்பான் சிரங்குசொறி காணுக் கிரந்தி
யுரப்பாக்கு மூலநோ யோட்டும்—நிரைப்பான
மந்தமொடு கோழைதரு மாருத் தினவுநல்கு
மந்தமிகுங் காறுகருணை. (அ. கு.)

வ.-கு : இக்கிழங்கைச் சிதைத்துக் கட்டிகள் கரையக் கட்டலாம். மேலும், நச்சுப்பாம்புகள் கடித்துவிட்டதும் இதைச் சிதைத்து வைத்துக் கட்டலாம்.

---

## 190. காணும்வாழை Kanomvazhai.

**Cammelina Benghalensis**

ப-உ : கொடி.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை: { வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-Febrifuge. காமம் பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac. துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

குணம் : இதனால், முலையில் உண்டாகும் ஆராப்புண் உலரும். ஆண்மை பெருகும். இது சிறு நீர் எரிச்சலையும், குருதிப் போக்கையும் அடக்கும். ஆயினும் ஐயத்தைப் பெருக்கும்.

காணும்வா ழைக்குமுலைக் கண்குழிப்புண் ஆறிவிடும்
ஆணும் போகம் அதிகரிக்கும்—மானேகேள்
ஐயம் விளையும் அனல்தணியும் நீங்காத
பையுதிர மாறுமுன்னிப் பார். (அ. கு.

வ.கு. : இதை அரைத்துக் கட்டினால், முலையிலுண்டாகும் குழிப் புண்கள் மாறும். இதை உட்கொள்ள, குருதிக் கழிச்சலையும் தீ சுரத்தையும் நீக்கும். இதைச் சமைத்துண்ணப் பெண்ணிச்சையைப் பெருக்கும்.

---

## 191. கிச்சிலிக்கிழங்கு Kich-chilik-kizhangu

வே - பெ : பூலா, பூலாக்கிழங்கு, கச்சோலம், கச்சோரம், கர்ச்சூரம்.

**Curcuma Zedoaria**

Eng. The Round White Zedoary.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kich-chili-gaddalu, Kach-charam | Sans. | Kachùra |
| | | Arab. | Zuranbad, Aurùqul-kafur |
| Mal. | Kach-chólam, Kach-chùrik-kizhanna | Pers. | Zhuranbad |
| | | Hind. | Kachùr |

இது வெளி நாடுகளிலிருந்து நம் நாட்டுக்கு அனுப்பப்படுகிறது ; விரல கனம் உள்ள இக் கிழங்கினைச் சிறு துண்டுகளாக்கி உலர்த்திக் கடைகளில் விற்கப்படுகிறது. மிகுந்த மணம் உள்ளது. ; இதன் மணத்திற்காக தலே முழுக்கு எண்ணெய்களில் இது கூட்டப்படுகிறது ; இந்தியாவில் சில தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்பட்டு வருகின்றது.

**ப.உ. :** இலே, கிழங்கு.

**சுவை**—கைப்பு, அற்பகாரம், **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant**
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—**Carminative.**
- கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diruretic.**
- உடற்றேற்றி—வியதாபேதகாரி—**Alterative**
- மணமூட்டி—**Aromatic**

**குணம் :** கிச்சிலிக்கிழங்கால், கபநோயும், கீல் பிடிப்பும், விரணமும் நீங்கும்.

* * * * *

" (ஓட்டும்)நற் கிச்சிலியி ணெண்கிழங் குங்கபமும்

பூட்டுமுட மும்புண்ணும் போம்." (அ.கு.)

மேலும் இது, கை கால் கீல்களின் முடக்கு, வாய்நாற்றம், ஈரல் நோய்கள், இருமல், குன்மம், காமாலே முதலிய நோய்களேயும் நீக்கும். பசித்தீயைப் பெருக்கும்.

இதன் கிழங்குடன், திப்பிலி, இலவங்கம், அதிமதுரம் சேர்த்துக் குடிநீரிட்டு, இதில் கற்கண்டு அல்லது தேன் சேர்த்துக்கொடுக்க, இருமல் தணியும்.

உலர்ந்த கிழங்கு நலங்குமாவில் சேரும். இதனைத் தேய்த்துக் குளிப்ப துண்டு. வளி ஐய நோய்களுக்குச் செய்யும் எண்ணெய்களில் இது சேருவ துண்டு.

இதை வெங்காரத்தோடு சேர்த்து அரைத்து, அடிபட்ட சிதைவின லுண்டாகும் நோய்களுக்கு வைத்துக் கட்டலாம்.

---

## 192. கிச்சிலிப்பழம் Kich-chilip-pazham

**வே-பெ : கொழுஞ்சிப்பழம் (போஜனகஸ்தூரி)**

**Citrus ouarantifolia.**

**Eng. Orange fruit.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kichichilipandu**<br>**Kittaḷi-pandu** | **Kan.** | **Kittale-haṇṇu** |
| | | **Sans.** | **Nágaranga-phalam** |
| **Mal.** | **Madhura-naranna**<br>**Kólanji-nárakam** | **Arab.** | **Naranj** |
| | | **Pers.** | **Narang.** |
| | | **Hind.** | **Narangi** |

இது சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. முதல் முதல் சீன நாட்டிலிருந்து இஃது போர்த்துக்கேயரால் நம் நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டதெனச் சிலர் கூறுகின்றனர். ஆயினும், இஃது இந்தியா முழுவதிலும் பயிராகின்றது; முக்கியமாய் மலை அடிவாரப் பூமிகளில் வளரும்.

**முக்கிய குணங்கள் :**

இது சிறு மரம் அல்லது பெருஞ் செடியாகும். இளம் கொம்புகள் பசுமை கலந்த வெண்மையாக (greenish white) இருக்கும். இலைகள் கோள வடிவில் 3–6 அங். நீளமிருக்கும். மலர்கள் தூய வெண்மை நிறத்தில் காணப்படும். கனிகள் 2 அங். விட்டமுள்ளதாக இருக்கும்.

இவ்வினத்தில், **நாரத்தை, கடார நாரத்தை, துருஞ்சி நாரத்தை, பம்பளி மாசு, கமலா, சாத்துக்குடி** எனப் பல பிரிவுகளுண்டு. இவற்றுள் சில பெரிதாகவும், சில சிறிதாகவும்இருக்கும். **குட்டிக்கிச்சிலி** என்று வேறொரு வகையுமுண்டு. இவற்றுள் சில புளிப்புடனும் இருக்கும்.

**ப. உ. :** பூ, பழச்சதை, தோல்.

## பூ

**சுவை**—கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** { இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—**Antispasmodic**
துயரடக்கி—வேதனாசாந்தநி—**Anodyne**

**குணம் :** உடலிலுண்டாகும் நோயை விலக்கும்.

**வ. கு. :** பூக்களிலிருந்து தீநீர் வடித்து, அதனைத் தக்க அளவில் கொடுக்க, பித்த அனலைத் தணித்து, உடற்குக் குளிர்ச்சியைத் தரும்; உடல் வலியை நீக்கும். பூக்களைச் சருக்கரைக்ப்பாகு செய்து துணை மருந்தாகவும், வேறு மருந்துகளின் தீச்சுவையைக் குறைப்பதற்காகவும் வழங்குவதுண்டு.

## கிச்சிலி

இச்சிலி யின்கனி கேண்மையா யுண்டிடப்
பிச்சடர் நோயெல்லாம் பேயென வோடுமே
அம்மரப் பிஞ்சினி லாமூறு காயுணக்
கம்மெனும் போசனக் கத்தூரி யென்பரே. (தே. கா.)

(பொ - ள்) கிச்சிலிப்பழத்தை விருப்பத்துடன் உண்டுவரின், பித்தத் தினால் உண்டாகும் எல்லா நோய்களும் விலகும். கிச்சிலிப் பிஞ்சை ஊறுகாய் செய்து உண்ணில், அது, வாந்தி சுவையறியாமை முதலிய வற்றை நீக்கி, உணவில் மிகுந்த விருப்பத்தை உண்டாக்கும்.

## நாரத்தை-காய்

நரந்தையினூறுகாய் நாடோறு மயில
வரந்தைக் கணமெலா மக்கண மறுமே. (தே. கா)

(பொ - ள்) நாரத்தங்காயை ஊறுகாய் செய்து நாடோறும் உண்டு வர, நோய்க்கூட்டமெல்லாம் போம்.

## பழச்சதை

**சுவை**—இனிப்பு. **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை** :
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—stomachic

**குணம்** : இனிப்புக் கிச்சிலிப்பழம், நீர்வேட்கை, வாந்தி, சுரம், வாய்க குமட்டல், இளைப்பு இவைகளை நிறுத்தும். புளிப்புப் பழம், இருமலை உண்டாக்குமாகையால், இருமல் இருக்குங்காலத்தில் இதை உண்ணலாகாது.

**வ. கு** : பழச்சதையை யாவரும் பிரியமாக அருந்துவர். இஃது இரத்தத்தைச் சுத்தி செய்யும்; நாவிற்கு உருசியைத் தரும்; உணவு கொள்ளுகையில் இதைப் புசிப்பின், பித்தத்தைக் குறைத்து, தேக ஆரோக்கியத்தைத் தந்து, நல்ல ஜீரண சக்தியையும் கொடுக்கும். நோயுற்றெழுந்தோர்க்கு இப்பழரசம் மிகவும் இன்றியமையாதது; முக்கியமாய், இருமல், நீரிழிவு, மார்பு நோய் ஈரல் நோய் முதலியவைகளால் பீடிக்கப்பட்டுக் குணமடைந்தோர்க்கு இப்பழத்தின் இரசம் மிகவும் பயன்படும்; மேலும், இவ்விரசம் பித்த அதிசாரத்தை நிறுத்துஞ் சக்தியுடையது. சிறு குழந்தைகளுக்குப் பாலுடன் பழரசத்தையும் சேர்த்துக் கலந்து கொடுத்துவர, இது வயிற்றுக்கோளாறுகளை நிறுத்தும். குழந்தைகளுக்குண்டாகும், சோகை, கணை, உட்சூடு, மாந்தம் முதலிய நோய்களுக்கு இதன் சாற்றுடன் திராட்சைப்பழரசம் சமபாகம் கலந்து, தினமிரு வேளை காலை மாலை கொடுத்துவர, மேற்படி நோய்களைத் தீர்க்கும். உடலுக்கு நல்ல வன்மையைக் கொடுக்கும்.

## தோல்

**சுவை** - கைப்பு, விறுவிறுப்பு, **தன்மை** - வெப்பம் -**பிரிவு**-**கார்ப்பு**.

**செய்கை** :
- துவர்ப்பி—ஸங்கோசநகாரி—Astringent
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic
- உரமாக்கி - பலகாரி Tonic
- மணமூட்டி—Aromatic

**குணம்** : மந்தம், வாந்தி முதலியவைகளைப் போக்கிப் பசியை உண்டு பண்ணும். இனிப்புப் பழத்தைப் புசிக்க, உடற்கு வன்மை, செரிப்பு இவற்றை உண்டாக்கும். நோயில் படுத்தெழுந்தவருக்கு நல்லுணவாம். வாந்தி, கழிச்சல் உள்ளபோது இதன் சாற்றை வழங்க நன்மை பயக்கும். புளிப்புள்ளவற்றைச் சருக்கரையுடன் கூட்டி மணப்பாகு செய்து அருந்தலாம். அல்லது ஊறுகாய் வகை செய்து உணவுடன் கொள்ளலாம்.

**எண்ணெய்** : பழத்தோலிலிருந்து ஒரு வித எண்ணெய் எடுக்கலாம். இவ்வெண்ணெயில் 1—2 துளி சருக்கரையில் கலந்து கொடுக்க, இது நல்ல பசியை உண்டாக்கும். இதையே மேலுக்கும் தடவ வலி தீரும்.

பூவிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் நறுமணமுடையது. இதனை அருவருப்புள்ள மருந்துகளுக்கு மணமூட்டலாம்.

## 193. கிட்டிக்கிழங்கு—Kittik-kizhang

**வே.- பெ : சின்னிக்கிழங்கு.**

**Acalypha betulina**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chinni<br>Tsinni | Mal. | Chinni |

இது தென்னிந்தியாவில், நீரோடை, குளம், குட்டைகளில் பயிரா கின்ற ஆம்பல் கொட்டி இனத்தைச் சேர்ந்தது.

ப. உ : கிழங்கு.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**
செந்நீரினக்கி— Attenuent
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி— Stomachic
உடற்றேற்றி—வயதாபேதகாரி—Alterative

**குணம்** : இதனால், நாட்பட்ட வெள்ளை, ஐய நோய் போகும். மிகுந்த பசியும் உண்டாம்.

கிட்டிக் கிழங்கால் கிளர்தீ பனமுண்டாம்
எட்டிக் கிழமேகம் எகுங்காண்—துட்டஞ்செய்
பித்த சமனமுமாம் பேசில்கப நாசமுமாம்
நிர்த்த மயிலே ! நிகழ்த்து. (அ. கு.)

**வ. கு.** இதை வேகவைத்தும், வற்றலிட்டும், வறுத்தும் உண்பதுண்டு இது சில தைலங்களிலும் சேரும்.

**வாள்கோரை கிட்டிக் கிழங்கு.**

நரையானை யான்சதியி னுடான் சசியை
நரையானை யான்சதியி னட்பான்—நரையானைக்
கிட்டிக் கிழங்கையடல் கேட்டுணில்வெண் குட்டமறச்
கிட்டிக் கிழங்குண்டு கெல்.

(பொ - ள்.) நெய்ச்சிட்டிக் கிழங்கென்று வழங்கும் கிட்டிக் கிழங்கை, கறி வற்றல் செய்து உணவாகக் கொள்ள நரை, திரை மூப்பு, சாக்காடு களும், உடல் மெலிவும், வெண்குட்டமும் நீங்கும்.

---

## 194. கிடைச்சி Kidaichi

Eng. Aeschynomeneindica

(A watery plant.)

**வே - பெ : சடை, கிடை, நெட்டி.**

இஃது இந்தியாவில் ஏரி குளங்களின் ஓரத்தில் பயிராகும் செடி ஏழைகள்காதைவளர்க்கும் பொருட்டு இதை காதணியாகவழங்குவார்கள்

**சடைப்பூண்டு (காதணியோம்பி).**

கட்டி யெதிர்செவிக்குங் காயசித்தி யுண்டாக்கும்
வெட்டலின்றி லோகமெல்லாம் வேதிக்குங்—குட்டமறும்
ஆதரவுண்டாகுமிக வாக்கைக் கனுதினமுங்
காதணி யோம் பிக்கு வினே. (தேரன் - வெண்பா)

காதணியோம்பி இலை, உடல் வன்மையை உண்டாக்குவதுடன், குறை நோயைப் போக்கும். அன்றியும், வெள்ளி, பொன் முதலியவைகளைப் பற்பங்களாக்கவும், வேதிக்கவும் பயன்படும்.

இதன் இலை ரசத்தால் வெள்ளி பற்பமாகும். தேரையர் கரிசலில் இரசித பற்ப முறையைக் காண்க.

இதன் இலையை, ஆமணக்கு நெய் விட்டு வதக்கி வீக்கங்களுக்கு ஒற்றிட மிடலாம்.

---

## 195. கிரந்திதகரம் Kiranthithakaram

இது தென்னிந்தியாவில் வளரும் சிறு பூண்டினம்; எங்கும் கிடைக்கக் கூடியது.

**ப - உ** : இலை, விதை.

**செய்கை** : தாது வெப்பகற்றி - சமனகாரி - **Sedative.**

**குணம்** : இதனால், இரைப்பு நோயும் புண் வகைகளும் தீரும். ஆனால் இது தீக்குற்றத்தைப் பெருக்கும்.

சீறுபித்த நோயுந் திரையெறிதல் போலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும்—வீறிப்
பறந்தசர்க்க ரார்ப்புதமும் பன்னிப் புகுங்காற்
கிரந்திதக ரத்தாற் கெடும். (தே. கு.)

**வ - கு**: இதைக் குடிநீர் செய்து வழங்கலாம்.

விதையைப் புளித்த காடிநீர் விட்டரைத்துக் கட்டிக்கும், விரணங்களுக்கும் பூசலாம்.

## 196. கிரந்திநாயகம் Kiranthi nayagam

**வே. பே** : **சிலந்திநயகம், கிரந்திநாயகன், இரந்திநாயன்.**

இப்பூண்டு தென்னிந்தியா, இலங்கை முதலிய இடங்களில் பயிராகின்றது. எங்கும் கிடைக்கும்.

**ப - உ** : இலை

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**செய்கை**: நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide**

**குணம்** : இப்பூண்டினால், ஐயம், பாம்புநஞ்சு, கண்ணோய், கழலை உட்புண் ஆகிய இவைபோம்.

சீதமறு மாவிடமுந் தீருவிழி நோயகலும்
பூத மொடுமருளும் போகுங்காண்—மேதினியுள்
ஆயகத்துப் புண்கிரந்தி யாறுமயி லே! கிரந்தி
நாயகத்தி னுலே நவில். (அ.கு.)

வ - கு : இலையை அரைத்து ஒரு கொட்டைப்பாக்களவெடுத்து, பசுவின் வெண்ணெயுடன் கலந்து, காலை மாலை இரு வேளையாக உட்கொள்ள, இது குணத்தின் கீழ்க் குறிப்பிட்ட நோய்களைத் தணிக்கும். இவ்வாறு செயது அக்கிப்புண்ணுக்கும் தடவப் போம்.

---

## 197. கிளியூறல்—Kiliyural

**சுவை** - கைப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** - குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Rerfrigerant.**

**குணம்** - இது மணமுடையது ; வெப்பம், சுரம் முதலியவைகளைப் போக்கும்.

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பைத் தணிக்குங்—குணமார்
கிளியூறற் பட்டையது கீதம் பயிலும்
அளியூருங் கூந்தன்மின்னே ! ஆய். (அ.கு.)

வ - கு : இஃது, பெரிதும் வெப்பத்தைத் தணிக்கும் ; வெப்ப சுரத்தைப் போக்கும் ; தைலங்களில் சேரும் சரக்குகளில் ஒன்று.

---

## 198. கிலுகிலுப்பை—Kilu Kiluppai

**Crotolarsa Virrucosa**

வே. பெ. நரிமிரட்டி பேமருட்டி. வட்டைக்கிலுகிலுப்பை, வெதுப்படக்கி

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ghelagherinta | Sans. | Sonapushpi |
| Mal. | Kilukiluppi | Hind. | Ban-san |

இது, வெப்பமிகுந்த நாடுகளிலும், இலங்கையிலும் வளருகிற பூண்டு ; முக்கியமாய்க் காடுகளில் அளவுகடந்து வளர்ந்து கிடக்கும். இதன் காய் காய்ந்திருக்கும்போது, காற்றுவீசி அசைய, அதன் விதைகள் கிலு கிலு வென்ற ஒலியை வெளிப்படுத்தும். இவ்வொலியைக் கேட்கிற நரியானது மிரண்டுவிடுமாகையால், இப்பூண்டிற்கு நரிமிரட்டியென்பது பெயர் பாலும் !

**ப- உ** : இலை.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** :
- உமிழ்நீர்ச்சுருக்கி - **Anti-sialagogue**
- நுட்புழுக்கொல்லி - க்ருமிநாசநி - **Germicide.**

**குணம்**: இஃது, உமிழ்நீர்ப் பெருக்கைக் குறைக்கும் ; சொறி சிரங்குகளைப் போக்கும்.

வ - கு : இலையைக் குடிநீரிட்டு மேற்படி நோய்களுக்கு உள்ளுக்குக் கொடுத்தும், இலையையே அரைத்து, மேலுக்குப் பூசியும் குணப்படுத்தலாம்.

---

## 199. கீரிப் பூண்டு—Keerip-pundu

**வே : பெ :** கீரிச்செடி, கீரிபுரண்டான்.

**Ophiorhiza mongoose.**

**Eng : The mangoose plant.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sarpakshi-chettu | Kan. | Patala-garuda |
| | | Sans. | Nagasugandha |
| Mal. | Kiri-chedi | Hind. | Sarahati |

இஃது, இந்தியா இலங்கை முதலிய இடங்களிலுள்ள காடுகளிலும், மலைகளிலும் வளருகின்ற பூண்டு. கீரியும் பாம்பும் தம்மில் வைரிகளா தலால், கீரியும் பாம்பும் சண்டையிட்டு, பாம்பைக் கீரி கடித்துக் கொன்ற பிறகு, கீரி இப்பூண்டில் விழுந்து புரண்டு பாம்பின் நஞ்சைப் போக்கிக் கொள்ளுமெனக் கூருவாருமுளர்.

**ப-உ :** இலை, வேர்.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு**- கார்ப்பு.

செய்கை :
- உரமாக்கி—பலகாரி—**Tonic.**
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—**Stomachic.**
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—**Laxative.**
- உறக்கமெழுப்பி—நித்ராகாரி—**Soporific.**

**குணம் :** பசியைத் தூண்டிக் கழியச்செய்யும், தூக்கத்தை உண்டாக்கும். கடி நஞ்சுகளைப் போக்கும்.

**வ - கு :** இதன் வேரை, பாம்பு, நாய்க்கடி இவற்றின் நஞ்சுகளுக்கு வழங்கலாம்.

வேர்ப்பட்டையை அரைத்து, புன்னைக்காயளவு பாலிற் கலக்கிக் காலையில் மட்டும் மூன்று நாள் கொடுக்க, கழிச்சலை உண்டாக்கும். தூக்கம் வரும். வெறி நோய் போம்.

ஒரு பங்கு இலைக்குப் பத்துப் பங்கு நீர் விட்டுக் காய்ச்சி வடி கட்டி, 1/1 அழாக்கு வீதம் குடிக்க, பசியை உண்டாக்கி, உடற்பலத்தைக் கொடுக்கும்.

இதன் வேரைக் கையில் வைத்துக்கொண்டால், பாம்புக்கடியின் நஞ்சு உடலில் தங்காது என்று அறிஞர் கூறியுள்ளனர்.

## 200 கீரை—Kirai.

கீரை, பொதுவாக யாதாமொரு பூண்டினது இலை, எனக் கொள்ளப் படினும், இவ்விடம், முக்கியமாய் நாம் உண்ணும் உணவிற்காகவோ, அல்லது நோய்களைத் தீர்க்கும் பொருட்டுக் கையாளப்படும் மருந்துகளுக் காகவோ பயன்படுத்தும் புல், பூண்டு, செடி, கொடி, மரங்களின் இலைகள், இலைக்கொழுந்து, தண்டு முதலியவற்றையே விவரித்திருக் கின்றது.

உண்டாகு நன்மை யுரைக்க வசமன்று
கொண்டாடு நோய்போய்க் குணமாகி—யுண்டி
பலுக்க மலநீங்கிப் பந்தமற நன்மை
யிலேக்கறி யாங்கீரையில். (தேரன் வெண்பா).

உண்ணக்கூடிய கீரை வகைகளுள் அவரவர் உடலியல்பிற்கேற்ற கீரை களைச் சமைத்து உண்ணில், அது, நோய்கள் அணுகாவண்ணம் தடுத்தல் மட்டுமேயன்றி, மலக்கட்டையும் போக்கும்.

## 201. முளைக்கீரை—Mulaikkirai

Young Greens

சுவை : —இனிப்பு; தன்மை—தட்பம்; பிரிவு—இனிப்பு.

செய்கை : பசித்தூண்டி—ஜடராக்னிவர்த்தனி—Stomachic.
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.

குணம் : இஃது, இருமல் சுரத்தை நீக்கும் ; பசியைத் தரும் ; நாவுக் குச் சுவை அளிக்கும் ; யாவருக்கும் பயன்படும்.

தளர்ந்தவர்க்கும் பாலருக்கும் தக்கவய தோர்க்கும்
இளங்கீரை நாவுக் கிதமாம்—இளம்பு
சுரகாசம் போக்கு தொடர்பசியுண்டாக்கும்
பிரகாச மாயெடுத்துப் பேசு. (அ.கு.)

வ - கு : இதைச் சமையல் செய்துண்ண, நாவிற்குச் சுவையைத் தரும் ; இது யாவருக்கும் பொருந்தும் ; நல்ல பசியைக் கொடுக்கும் ; வெப்ப சுரத்தைத் தணிக்கும்.

---

## 202. கலவைக் கீரை—Kalavaikkirai

இது பலவகைக் கீரைகள் சேர்ந்தது.

Mixed Greens.

செய்கை : சிறு கழிச்சலுண்டாக்கி - லகுவ்ரேசநி - Laxative.

குணம் : இது, முக்குற்றத்தைப் போக்கி, உடல் வன்மையைப் பெருக் கும் ; குடல் வாயுவைப் போக்கும் ; பத்தியத்திற்கு ஏற்றது.

வாதபித்தஐயத்தை மாற்று மலமறுக்கு
மோதுகுடல் வாதமதை யோட்டுங்காண்—போதின்
பலகலவைக் கோதாய் ! நற பத்தியத்திற் கொவ்வும்
பலகலவைக் கீரையுண்டு பார்.

வ - கு : பல வகையான கீரைகளையும் சேர்த்துச் சமைத்து உண் ணல், மேற்கூறிய குணங்கள் உண்டாகும்.

---

## 203. புளிப்புக் கீரை—Pulippukkirai.

**Sour Green.**

**குணம் :** இது, வளிக்குற்றப் பெருக்கையும், சுவை இன்மையையும், ஊருதியழலையும் போக்கும் ; ஆனால், தீக்குற்றத்தைப் பெருக்கும்.

வாதமறும் பித்தமுறும் மாறு வரோசிவிடுஞ்
சீதமுட னேயகலுஞ் சேயிழையே !—போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனோடு காண். (அ.கு.)

**வ - கு :** புளிப்புச் சுவையுள்ள கீரைகளைச் சமைத்துண்ணில் மேற் கூறிய நோய்கள் விலகும்.

## 204. இன்பம் விளைக்கும் கீரைகள்.

**The Names of the Greens that excite sexual appetite.**

நறுந்தாளி, நன்முருங்கை, தூதுணம், பசலை, அறுகீரை இவற்றுள் யாதேனும் ஒன்றைப் புளி நீக்கிச் சமைத்து, நெய் சேர்த்துக் காலையில் மாத்திரம் நாற்பது நாள் உண்ண, ஆண்மை பெருகும்.

தாளி முருங்கைத் தழைதூ துளம்பசலை
வாளிலறு கீரையுநெய் வார்த்துண்ணி—லாளியென
விஞ்சுவார் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாங்
கெஞ்சுவார் பின்வாங்கிக் கேள். (அ.கு.)

---

## 205. சாணாக்கிக் கீரை—Chanakkikkirai.

**Eng : A kind of basil.**

இது கீரை வகையைச் சேர்ந்த ஒரு வகைப் பூண்டு.

**ப - உ :** இலை.

**சுவை** - கார்ப்பு, சிறுகைப்பு, துவர்ப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
- நுட்புழுக்கொல்லி—க்ருமிநாசநீ—Germicide.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தனி—Diuretic.

**குணம் ;** இதனால், கபம், பசித்தீ மந்தம், சுழிக்கணம், பெருவயிறு, புழு நெளிகின்ற புண் ஆகிய இவை போம்.

கோழையோடு மாந்தங் குழந்தைச் சுழிக்கணமும்
பேழையெனச் சொல்லும் பெருவயிறும் - கீழொருவர்
காணாக் கிருமிகளைக் கக்கு மழிபுண்ணுஞ்
சாணாக்கிக் கீரையிற்போஞ் சாற்று. (அ.கு.)

**வ - கு :** இக்கீரையைச் சமைத்து உண்ண, மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## 206. சிறு கீரை—Chirukirai.

**வே. பே. சில்லி.**

**Amaranthus Gangeticus.**

இது கீரைத்தண்டினத்தைச் சேர்ந்தது. இதைச் சிறிய கீரைத்தண்டு எனவும் கூறலாம். ஆகவே இதன் செய்கை குணம் முதலியன ஏறக் குறைய கீரைத்தண்டை ஒத்தே இருக்கும்.

**குணம்:** இதனல், கண் புகைச்சல், கண் காசம், படலம், இரசத்தா லுண்டாகும் நஞ்சு, புண், நீர் எரிச்சல், வீக்கம், அழல்நோய், நஞ்சுகள் ஆகிய இவை போம். அழகு உண்டாகும்.

கண்புகைச்ச னேத்திரநோய் காசம் படலம்
புண்கிரிச்ச ரஞ்சோபை பொங்குபித்த—மண்பரவு
தாவரவிடங்களும்போம் தாழாத் திருவுமுண்டாம
கூறுசிறு கீரைதனைக் கொள். (அ.கு.)

**வ-கு:** இக்கீரையைச் சமையல் செய்து சாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

சிறுகீரைச் சமூலத்தையும், மிளகுப்பொடி, உப்பு, நெய் இவற்றையும் சேர்த்துப் பக்குவம் செய்து ஒரு மண்டலம் வரைக்கும் உண்டுவர, புத்திக் கூர்மை, ஞாபகசக்தி இவைகள் உண்டாகும்.

**சிறுகீரை.**

சில்லியைப் பாகமாய்ச் செய்துதின் றிடவனற்
புல்லிய நோயெலாம் பொடிப்பொடி யாகுமே. (தே.க.)

(பொ—ள்) சிறுகீரையை உணவு முறைப்படி செய்து உண்ணில், அனல் (பித்த) நோய்கள் யாவும் ஒழிந்துபோம். நன்ருகச் சிறு நீரி றங்கும்.

**சிறுகீரை.**

சில்லியைச் சமைத்துணத் தேகநோ யிலதாய்
வல்லமை பேசிட வாய்க்குமுத் தமமே.

(பொ—ள்) சிறு கீரையை முறையே பாகஞ் செய்து புசித்து வந்தால் அது நோயைப் போக்கி, வன்மையைத் தந்து, இனிய குரலையும் உண்டா க்கும்.

## 207. பசறை—Pasarai

**Pnrtulacca puadrifida**

**வே–பெ: பசலே சிறுபசலே, சிறிபசலே.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sanna-pappu<br>Sanna-pavili | Sans. | Laghu-lonika. |
| | | Arab. | Baqlatul-yamaniah |
| Mal. | Cheru-basali | | |
| Kan. | Hali-bachcheli | Hind. | Chounlayi |

இது சதுப்பு நிலங்களில் பயிராகும் ஒருவகைபடர் பூண்டு இலைகள் ஒன்றுக்கொன்று எதிரெதிராகவும் தட்டையாகவும். நீளத்தில் 1l5 I13 அங்குளமுள்ளதாகவும், நீர் நிறைந்ததாகவும் இருக்கும்

**ப.உ.** : இலை, விதை.

**சுவை** : சிறு புளிப்பு. **தன்மை**—தட்பம். **பிரிவு**—இனிப்பு.

**செய்கை** : சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diuretic.**
பசித்தீத்தூண்டி—ஜடாராக்னிவர்த்தநி—**Stomachic**

**குணம்** : இதனால், நீர்க்கடுப்பு, நீரடைப்பு, ஒழுக்கு வெள்ளை, சுவையின்மை, வாந்தி ஆகியவைபோம்.

**வ. கு.** இலையையும் விதையையும் பருப்புக் கீரைகளை உண்பது போலவே வழங்கலாம். இக்கீரையைத் தினமும் சமையல் செய்து புசித்து வரின் மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

நீர்க்கடுப்பு நிரடைப்பு நீங்காத மேகமுமிவ்
வூர்க்கடுத்து வாராமல் கட்டுங்காண்—பார்க்கவொண்ணு
அற்பவிடை மாதே ! அரோசிசர்த்தி யைத்தொலைக்கும்
நற்பசறைக் கீரையது நன்று.

**பசரை**

**பசரையை யட்டுணப் பற்றறு மேகம்.** **(தே.க.)**

**(பொ-ள்)** பசரைக் கீரையைப் பாகப்படுத்தி **உண்ண அது** மேக **நோயைப்** பற்றறச் செய்யும்.

## 208. துயிலிக் கீரை.

**வே. பெ. துயிலைக் கீரை, துயுலி, தொயில்**

**Achyranthes polygonoides,**

இதுவும் கீரையினமே.

**சுவை** : துவர்ப்பு, சிறுபுளிப்பு. **தன்மை**—சீதம். **பிரிவு**—இனிப்பு.
**செய்கை** : வெப்பமுண்டாக்கி, உஷ்ணகாரி—**Stimulant.**

**குணம்** : இது, பசித்தீயைக் கெடுக்கும். இதனால் சிரங்கும், புண்ணும் உண்டாகும். பழஎருக்கட்டும் வெள்ளையும் நீங்கும்.

சீதம் விளையும் சிறுசிரங்கு புண்ணுமாங்
கரீது பழமலமுங் கட்டறுங்காண்—கீதக்
குயிலனையாய் ! வெட்டைபோம் கூறவழ கில்லைத்
துயிலி யிலைக்கறிக்குச் சொல்.

**(அ.கு).**

**வ.கு** : இக்கீரையை வேகவைத்துக் கறியாக்கி உண்ண, மேற்கூறிய நோய்கள் விலகும்.

---

## 209. கொடிப்பசலைக் கீரை Kodip-pasalai-kkirai

வே. பெ. கொடியலை, கொடிவசலை, கொடிப்பயலை, கொடிப்பசரை, கொடிவயலைக்கீரை, கொடிலை.

Basella rubra.

Eng. White basil or Indan Spinach.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Abubachehali<br>Alla-batsalla | Hind. | Mayal-ki-bhaji<br>Lal-bachche |
| Mal. | Basela-kira | Dub. | Sufed-bachla-ki-bhaji<br>Lal-bachle-ki-bhaki |
| Sans. | Potaki | | |

இது கீரையினம். இந்தியாவில் எங்கும் பயிரிடப்படுகிறது. இதில் **வெள்ளை சிவப்பு** என இரு வகையுண்டு. இதன் இலைகள் அகன்று நீளத்தில் 2 முதல் 5 அங்குலம் வரையுமிருக்கும். இலைக்காம்பின் நீளம் $\frac{1}{2}$ முதல் 1 அங்குலமிருக்கும். வேனிற்காலத்தில் புட்பிக்கும். இதைச் சாதாரணமாய் வேலியோரங்களிலும், தோட்டங்களிலும், வைத்துப் பயிராக்குகிறார்கள். இது சுற்றுக் கொடியாகப் படர்ந்தேறுந் தன்மையுடையது.

**ப—உ:** இலை.

**சுவை:** இனிப்பு. **தன்மை:** தட்பம். **பிரிவு:** இனிப்பு.

**செய்கை:**
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தநி—Diuretic.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.

**குணம்:** இதனால், புணர்ச்சியிலிச்சையும் ஐயமும் உண்டாகும். இது தாகத்தையும் சூட்டையும் தணிக்கும்: மலத்தை இளக்கும்.

போகம் மிகக்கொடுக்கும் போர்சேய் கபம்பெருக்கும்
ஆகமதிற் றுகமன லைத்தணிக்கும்—மாகுடரின்
மன்னு மலமிளக்கும் மாறு வுரிசை தருந்
தின்னுங் கொடிவசலை செப்பு. (அ.கு.)

**வ—கு:** இதை, பருப்புக்கீரையைப் போல வழங்கலாம்.

இதன் இலையை வதக்கி, **வீக்கம்,** கட்டி இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இதன் இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்து, ஓர் உச்சிக்கரண்டி வீதம் புகட்ட, குழந்தைகளுக்கு உண்டாகும் நீர்கட்டு நீங்கும்.

மிஞ்சின வெப்பத்துக்கு, இதன் இலையைச் சிதைத்துத் தலையில் வைத்துக் கட்டலாம்.

சிவப்பு இனத்தின் வேர்க் குடிநீர் அழலேத் தணிக்கும்.

இதை நீரிலிட்டுக் கழுவின் ஒரு விதக் குழகுழப்புப் பசை உண்டாகும். இதைத் தீராத தலைவலிக்குப் பூச, வெகு சீக்கிரத்திற் குணம் தரும். தூக்கமுண்டாகும்.

**பசரைக்குடி நீர்.**

மானேகேள் நீரடைக்கின் வாழும் பசரையுடன்
தானேநற் கத்திரியின் றன்னிலையும்—பாலேதனில்
ஒக்கக் கஷாயமிட் டோதும்வெங் காரமிட்டுண்
கக்கிக் கடலுடைக்குங் காண். (தே.கு.நூறு.)

(பொ—ள்) பசரைக்கீரை, கத்திரியிலை இவ்விரண்டையும் ஓரளவில் எடுத்துக் கலந்து குடிநீராகச் செய்து, அதில் வெங்கார பஸ்பம் சேர்த்து உண்ண, நீரடைப்பு என்னும் நோய் நீங்கும்.

" வசளை யுடையுண் வயமீறும் "

(பொ—ள்) வசளை இலைகளை நன்ருய் ஆய்ந்து, இலைக்கறியாய்ப் பாகஞ் செய்து, காலந்தவருமல் போசனத்துடன் புசித்து வந்தால், பராக்கிரமம் உண்டாகும்.

---

## 210. பண்ணைக்கீரை—Pannaik kirai (Plant)

**Celosia Albida**

**Tel.** **Erra-koddi-utta-totta-kura** **Hind. Pila-murghka.**

இஃது இந்தியாமுழுவதும் பயிரிடப்படும் செடியினம்; தானுகவும் வளர்ந்திடக்கும். இதில் அநேக விதமுண்டு: அதாவது சிறுபண்ணை நறும்பண்ணை, புற்பண்ணை, புனல்பண்ணை. இவற்றுள் நறும்பண்ணை தவிர, மற்றவை ஒரேயினத்தைச் சேர்ந்தவை. குணத்திலும் செய்கையிலும் ஒன்றுபட்டேயிருக்கும்.

ப—உ: இலை, பூ, விதை.

சுவை: சிறுதுவர்ப்பு, இனிப்பு. தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு.

செய்கை:
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative

குணம்: இக்கீரையானது, வயிறுமந்தம், கரப்பான், கழலை புண் இவைகளை நீக்கும்; மலத்தை இளக்கும்; குடலுக்கு வன்மையைக் கொடுக்கும்.

பண்ணையிளங் கீரையது பற்று மலமிளக்கும்
எண்ணுங் குடலுக் கிதங் கொடுக்கும்—பெண்ணேகேள்!
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றிவிடுங்
கோதங் கிலையதனைக் கொள். (அ.கு

**வ-கு :** இதனிலைக் கொழுந்தைச் சமையல் செய்து சாப்பிட்டு வர, மேற்கூறிய நோய்கள் விலகும். குடலுக்கு நல்ல வலுவைத்தரும்.

இதன் பூவைக் குடிநீரிட்டுக் குடிக்க, கழிச்சல் பெரும்பாடு இவைகள் குணமாகும்.

இதன் விதையைப் பொடித்து அல்லது பாலிலிட்டு வேகவைத்துச் சாப்பிட, இருமல், சீதபேதி, சொட்டு மூத்திரம் ஆகிய இவைகள் போம்.

---

## 211· பருப்புக்கீரை

**வே. பெ :( புசலி என்று மலையாள தேசத்திலழங்கும் வடலை**

**வயலைக்கொடி**

**Portulacea oleracea, Linn.**

**Common Indian Parselane.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Pappu-kura**<br>**Pedda-pavili-kura** | **Sans.**<br>**Arab.** | **Loni**<br>**Kourfa kara-ar** |
| **Mal.**<br>**Kan.** | **Kori chira**<br>**Duda gorai** | **Pers.**<br>**Hind.** | **Cholza**<br>**Khursa** |

**ப.உ. : இலை, விதை முதலியன**

இது கீரையினத்தைச் சேர்ந்தது; நம் நாட்டிலும் இலங்கையிலும் பண்படுத்தின நிலங்களில் பயிராகும்; இஃது இமாலயப்பருவத்தின் அடிவர்ரத்திலும் பயிராகின்றது எனத்தெரியவருகிறது.

**ப-உ-** இலை விதை முதலியன.

**சுவை :** —இனிப்பு, புளிப்பு. **தன்மை**—தட்பம். **பிரிவு**—இனிப்பு

**செய்கை:**
- சிறுதுவர்ப்பி-லகுலங்கோசனகாரி-**Astringent (mild)**
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-**Refrigerant.**
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-**Diuretic.**
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-**Demulcent.**
- வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-**Emollient.**

**குணம் :** இதனல் மிகுந்த அழல் போம். மேலும் சிறுநீர் நோய்கள் போம். உடலுக்குக் குளிர்ச்சி தரும். குடலைப் பற்றிய நோய்கள்போம்,

பிள்ளைப் பருப்பிலைக்குப் பித்தமறுங்—கொள்ளத்
தெரியுங் கடல்சூழ்இத் தேசத்தோ ருக்குக்
கரிய குழலங்கே ! காண். (அ-கு)

**இலை:**

வ-கு: இலையை நன்றாய்ச் சிதைத்து அக்கியின்மீதுபற்றிட, அவைகள் குணமாகும்.

இலைச் சாற்றை ¼ முதல் ½ ஆழாக்கு வரையில், தினம் இருவேளை உள்ளுக்குக் கொடுத்துவர, இது, நீர்ச்சுருக்கு, மூத்திரவெப்பநோய், சீதபேதி, இரத்தபேதி முதலிய நோய்களைத் தண்டிக்கும்.

இலையை அரைத்து நெற்றியின் மீது பற்றிட, வெப்பத்தாலுண்டான தலைநோய் போம்.

கல்லீரல் நோய்க்கு இதன் கீரையை வேகவைத்துச் சாப்பிடலாம்.

இதைப் பருப்புடன் சேர்த்துச் சமையல் செய்து சாப்பிட, வெப்பத்தைப் போக்கி, அழலையைத் தணித்து, எருவைக் கழிக்கும்.

**இலை, விதை.**

இலையையும், விதையையும் அரைத்து, தீச்சுட்ட புண், வெந்நீர் வேக் காட்டுப் புண், சொறி, சிரங்கு முதலியவைகளுக்குப் பூசிவர, இவை ஆறிப் போகும்.

**வசளை.**

"வசளை மோர்க்கறி செய்துண்ண நன்றாகும்." (தே.கா)

(பொ-ள்). வசளைக் கீரையை மோர்க் கறியாகச் செய்துண்ண, உடல் வலுக்கும்.

**விதை.**

விதையை 2 கிராம் முதல் 4 கிராம் எடை வரை எடுத்து அரைத்து இளநீரில், கலக்கி உள்ளுக்குக் கொடுக்க, சீதபேதிக் கழிச்சலிலுண்டாகும் உளைச்சல், முக்கல் முதலியவைகள் நீங்கும். மேலும், இது சிறுநீர் எரிச்சலைக் கண்டித்து, வெள்ளையையும் தணிக்கும்.

**தண்டு.**

இக்கீரையின் தண்டை அரைத்து, வேர்க்குரு, கைகால் எரிச்சல் முதலியவைகட்கும் போடலாம்.

---

## 212. பறட்டைக் கீரை Parattaik kirai.

**வே - பெ : பரட்டக்கீரை.**

**Juscticia Madurensis.**

இது கீரையினத்தைச் சேர்ந்தது ; தென்னிந்தியாவில் எங்கும் இடைக் கும்.

**சுவை**—சிறுகைப்பு, இனிப்பு, தன்மை—வெப்பம். **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை** : எருவிளக்கி—லகுவ்பேசநி—Laxative

**குணம்** : இதனால், ஐயநோயும், வளிப்பிணியும், கரப்பானும் போம். அழலை உண்டாகும்.

பரட்டைநறுங் கீரையது பத்தியத்திற் காகும்
வெருட்டுகின்ற பித்தம் மிகமீறும்—புரட்டுங்
கபமுடனே வாதங் கரப்பானும் ஏகுஞ்
சுப்பவன மாதே நீ ! சொல்.

(அ.கு.)

**வ-கு : இதைச் சமையல்** செய்து சாப்பிட்டுவர, மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## 213. பாற்சொரிக் கீரை—Parchorik kirai.

வே - பெ : பொற்றிக்கூரை, பாற்சொற்றிக்கீரை, பால்சொற்றிக்கீரை, பாச்சோத்திக்கீரை.

**Ruellia secunda.**

இது கீரை வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ : இலே.

சுவை :-இனிப்பு, தன்மை-தட்பம் பிரிவு-இனிப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.

குணம் : இதனால் வயிற்றுக் கடுப்பு, கழிச்சல், சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல் இவைகள் நீங்கும்.

வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தப் போக்கிவைநி றுத்துங்-குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே!
பார்சொரிக் கீரையது பார். (அ.கு.)

வ-கு : இலையைச் சமைத்துச் சாப்பிட்டுவர, மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

கீரையைச் சமையல் செய்து சாப்பிடுவது இந்நாட்டினர் வழக்கம்.

---

## 214. பிண்ணுக்குக் கீரை.

**Melochia corchorifolia.**

இந்தியா, இலங்கை முதலிய இடங்களில் இதுமிகவும் கிடைக்கும்.

ப-உ : கீரை.

சுவை-இனிப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை : சிறுநீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தநி—Diuretic.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.

குணம் : இதனால், எருவும் நீரும் நன்றாய் இழியும். வெள்ளைபோம் வாதக்குற்றம் பெருகும். கரப்பான் உண்டாகும்.

மலமிறங்கும் வாதமுடன் வன்கரப்பன் உண்டாம்
சலமிறங்கு மேகந் தணியும்—மலர்விழியாய்!
உண்ணுக்குக் கின்பமாம் ஓடுமனல் வெட்டையெலாம்
புண்ணுக்குக் கீரையுண்ட பேர்க்கு. (அ.கு.)

வ-கு : இதனை வேகவைத்து உட்கொள்ள, மேற்கூறிய நோய்கள் போம்.

---

## 215. புதினா Puthina.

வே - பெ : ஈயெச்சகீரை, பொதினா, புதியன்மூலி

**Mentha Sativa.**

**Eng. The Marsh mint.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pudina<br>Iga-ongili-kura | Sans. | Pudina |
| | | Arab. | Naanaaul-hind |
| Mal. | Putiyina | Pers. | Pudinah |
| Kan. | Chtni. maragu | Hind. | Pudina |

இது, இமாலய பருவதத்தைச் சேர்ந்த மேற்குச் சாரல் நாடுகளிலும், தென்னிந்திய வங்காளம் முதலிய இடங்களிலும பயிரிடப்படுகிற சிறு பூண்டு. இதில் பல இனங்களுண்டு. அவை Spear mint, Pepper mint, Mentha Viridis முதலியன. அவை இந்தியாவில் பல இடங்களிலும் பயிரிட்டு வளர்க்கப்படுகின்றன. அவைகளின் குணங்கள் பெரும்பாலும் ஒன்றுபட்டே இருக்கும்.

ப - உ : கீரை

சுவை-கார்ப்பும், துவர்ப்பும் தன்மை-சீதவெப்பம், பிரிவு-காப்பு.

செய்கை :
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic.
- சிறுநீர்ப் பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-stimulant.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி-Carminative
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-Antispasmodic.

குணம் : இதனால், மந்தாக்கினி குருதியழுக்கு, சுவையின்மை, வாந்தி செரியாமை போம்.

அருசி யொடுவாந்தி யக்கினி மந்தங்
குருதி யழுக்குமலக் கொட்டலிரியுந்
துதியதன்று சோறிறங்குந தொல்லுலகில் நாளும்
புதியனல் மூலி புகல்.

(அ.கு).

வ-கு : இதனை உலர்த்திக் குடிநீரிட்டு 30 மிலி. முதல் 60 மி. லிட்டர் வீதம் சுரநோய்க்குக் கொடுக்கலாம். மேலும் இதனால் காமாலே, விக்கல் முதலிய நோய்களும், வயிற்றுவலி முதலிய நோய்களும் போகும்.

இதனையும், கருப்பூரப் புல்லையும் ஓரெடையாக எடுத்து, குடிநீரிட்டுக் கொடுக்க, தலைவலி வாந்தி முதலியவைகள் நீங்கும். சுரமும் தணியும். இது சிறுநீரைப் பெருக்கும். நல்ல தூக்கத்தை உண்டாக்கும்.

மேற்படி குடிநீரைக் கொடுக்க, இது சூதகக் கட்டைப் போக்கி, அதனாலேற்பட்ட வயிற்று வலியையும் நீக்கும்.

இப்பூண்டினை நன்றாக உலர்த்திப் பொடித்துப் பல் துலக்கி வரலாம்.

இதன் இலையைத் துவையல் செய்துஉணவோடு உண்பதுண்டு.

இப்பூண்டிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கிறார்கள். இது மேனாட்டார் வழங்கும் **Peppermint** தைலத்தை ஒத்தது. ஆனால், காரம் சிறிது குறைந்திருக்கும்.

இதைத் தலைவலிக்குத் தடவலாம்.

உள்ளுக்குச் சிறிது நீரில் கலந்து கொடுக்க, இது வயிற்று வலியை நீக்கிப் பசியை உண்டுபண்ணும்.

---

## 216. புளிச்சிறு கீரை—Pulich-chirukirai.

**வே - பெ :** **காய்ச்சிரங்கு, காய்ச்சொறி, காய்ச்சுரை, புளிச்சக்கீரை, சணப்பு, காசினிக்கீரை, காச்சக்கீரை, காச்சிரக்கு, காச்சுரை.**

**Hibiscus Kannabinus.**

**Eng. Brown Indian hemp.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Ghongu-kura** | **Sans.** | **Machika Phalamla** |
| **Mal.** | **Pulich-cheera** | **Hind** | **Patsan.** |
| **Kan.** | **Pinidrike gida** | **Duk.** | **Ambadi** |

இதில் **காட்டுக்காய்ச்சுரை** என்று ஒரு விதமுண்டு. அஃது உணவிற்கு ஏற்றதன்று.

இதனை, உணவிற்காகவும், ஊறுகாய்க்காகவும் இந்தியர் மிகுதியாகப் பயிராக்குகின்றனர். **இஃது ஒருகுத்துச் செடியினம்**

**ப-உ :** இலை, பூ, விதை, நார்.

**சுவை**-புளிப்பு, **தன்மை**-சீதம், **பிரிவு**-புளிப்பு.

**செய்கை :**
இலை.
வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-**Emollient.**
மலம்போக்கி-**Laxative.**
விதை.
இன்பம் பெருக்கி-காமவர்த்தநி-**Aphrodisiac.**

**குணம் :** இதனால், சிறுக்கிருமலும், மந்தமும் நீங்கும். காயசித்தியும், புணர்ச்சியில் விருப்பமும் உண்டாகும்.

மேலும், இதனால் வளிநோய், அருசி, சீதளம், இரத்த பித்த, ரோகம், கரப்பான், வீக்கம், என்புச்சுரம் இவைகளும் நீங்கும்.

தேகசித்தி யாகுஞ் சிறுகாசம் மந்தமறும்
போகமுறும் விந்துவுநற் புஷ்டியுண்டாம்—வாகாம்
வெளிச்சிறுமான் நோக்குவிழி மென்கொடியே! நாளும்
புளிச்சிறு கீரையுணும்போது. (அ.கு.)

**வ-கு :** இதன் இலையை இடித்து, பெருங்கட்டிக்கு வைத்துக்கட்ட உடையும்.

இதைச் சமையல் செய்து சாப்பிடுவது வழக்கம்.

தெலுங்கு நாடுகளில், இதைப் பல முறையில் பக்குவஞ்செய்து உண வாகக் கொள்ளுகின்றனர்.

இதன் பூவின் சாற்றுடன் சிறிது மிளகும், சருக்கரையும் சேர்த்துக் கொடுக்க, வாந்தி போம்.

இதன் விதையை வேறு மருந்துகளோடு சேர்த்து உட்கொண்டுவர உடல் வலுக்கும்.

இதன் தண்டிலிருந்து எடுக்கும் நார், கோணிப்பைகள் செய்வதற்கும் அறுவை மருத்துவங்களில் டோ (Tow) என்னும் நாருக்குப் பதிலாக உபயோகப்படுத்துவதற்கும் பயன்படும்.

---

## 217. புளியாரை Puli-yarai.

வே - பெ : புளிக்கீரை, புளியாக்கீரை.

Oxalis Korniculatus,

Eng. The Indian Sorrel.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Puli-chintaku | Hind | Amboti pi-datti |
| Mal. | Puli-yarala | | |
| Kan. | Pullam-purachi-sappu | Duk. | Amboti-ki-bhaji |
| Sans. | Changeri | | |

இஃது இந்தியாவில் வெப்பப் பிரதேசங்களில் ஏராளமாய் வளர்ந் திருக்கும் படர் கொடியினம்.

ப-உ : இலை.

சுவை-புளிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
- துவர்ப்பி—ஸங்கோசணகாரி—Astringent.

குணம் : இதனால், மயக்கம், கழிச்சல், குருதிக்கழிச்சல், எருவாய்க் கடுப்பு, மூலம் இவை போம்.

பித்த மயக்கமறும் பேருலகின் மாணிடர்க்கு
நித்தமருள் வாதகபம் நேருமோ—மெத்தனவே
மூலக் கிராணியறும் மூல வுதிரமறுங்
கோலப் புளியாரைக் கு

(அ.கு.)

வ-கு : இலையைப் பிழிந்து சாறெடுத்துக் கொடுக்க. ஊமத்தை விடத்தாலுண்டான கொடுமை நீங்கும்.

இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, சுரத்தின் வெப்பகலும்.

இலையைச் சிதைத்து, அதிக வேதனையுள்ள கட்டி, வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட, இது குளிர்ச்சியை உண்டுபண்ணி நோயைக் குறைக்கும்.

இலையை வெந்நீர் விட்டரைத்து, பருக்கள், கொப்புளங்கள் இவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இலைக்குடிநீரை கண்ணில் விட்டுக் கழுவிவரக் கண்ணோய் நீங்கும்.

இலைச்சாறு 15 மி.லி முதல் 30 மி. லிட்டர் வரை, சீதபேதி, அடி தள்ளல் முதலியவைகளுக்குக் கொடுக்கப் போம். அல்லது இலையைப் பசுமோரில் வேகவைத்து, தினம் மூன்று வேளை கொடுத்து வரலாம்.

இலைச்சாறு எடுத்துச் சிறிது மிளகு பொடி சேர்த்து, வெண்ணெயுடன் கலந்து, புண்களுக்குத் தடவிவரப் போம்.

இதுவே, தோலிலுண்டாகும் தாமரைமுள், பாலுண்ணி, மறு முதலியவைகளுக்கும் தகுந்த மருந்தாகும்.

இதன் சமூலத்தை நீர் விட்டரைத்து. வெங்காயச் சாறு அவ்வெடை சேர்த்துக் காய்ச்சி, அழலாலுண்டாகும் தீராத் தலைவலிகளுக்குத் தலையில் போடலாம்.

புது இலைகளைக் கீரையாகச் சமையல் அல்லது துவையல் செய்து சாப்பிட்டுவர, இஃது குன்மத்தைக் கண்டிக்கும்.

கீரை.

..................................
................புளியாரை—பூத
கீரைவாத மேகமற, வெட்டுமுகின் மேலே
விரைவாந் மெண்ணவதின் மேல் (தே-ய.)

(பொருள்.) புளியாரைக் கீரையோடு, உப்பு, மிளகு, சீரகம், இவற்றை அளவுபடி கூட்டி உணவோடு கொள்ளினும் அல்லது கற்பமுறைபோல் புசிக்கினும், அண்டவாத பிணியும், மேகவெட்டையினால் வரும் நோய்களும் போம்.

---

## 218. மணலிக்கீரை—Manalik-kirai

வே-பெ: மணல்கீரை—நாவமல்லிக்கீரை.

Gisekia pharnaceoides,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Isuka-dasari-kura | Sans. | Valuka |
| | | Hind. | Balu-ka-sag |
| Mal. | Manalik-kira | Duk. | Balu-ki-bhej |

இக்கீரை பூண்டானது பஞ்சாப் சிந்து தென்னிந்திய முதலிய இடங்களில் ஏராளமாயுண்டு.

ப-உ: ...

**சுவை**-துவர்ப்பு, புளிப்பு, சிறுகைப்பு, **தன்மை வெப்பம் பிரிவு கார்ப்பு.**

**செய்கை :** புழுக்கொல்லி—க்ருமிநாசநி—**Anthelmintic.**
கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
**மலமிளக்கி**—வ்ரேசநி. **Aperient.**

**குணம் :** இதனால், வாதகோபம், மார்புசசளி, சிலேஷ்மரோகம், கிருமி ரோகம், பயித்தியதோஷம் ஆகிய இவைகள் நீங்கும்.

வாதமறும் நெஞ்சேறி வந்த கபம்விலகுஞ்
சீதமுட னேய்பலவுந் தீருங்காண்-போதவுள்ளே
வீறு கிருமியோடு மேவாப் பயித்தியம்போங்
கூறுமண லிக்கீரைக் கு. (அ.கு.).

**வ-கு :** இதன் சமூலத்தை நீர் விட்டு அரைத்து, **70** கிராம் அளவாக எடுத்து, நீரிற் கலக்கி அதிகாலையில் வெறும் வயிற்றில் மூன்று நாள் வரை கொடுத்து, இடையில் நான்கு நாள் விட்டு, மறுபடியும் மேற்படியாக இரு முறை (மொத்தத்தில் மும்முறை) கொடுக்க, இது குடலிற்றங்கி யிருக்கும் தட்டைப் புழுக்களைப் போக்குவதில் சிறந்த மருந்தாகும்.

இக்கீரையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்களைப் போக்கும்.

**இதைச் சமையல் செய்து சாப்பிடலாம்.**

## 219. முக்குளிக்கீரை—Mukkuḷik-kirai

**வே - பெ : கோழிமுளையான்**

**Portulaca pilosa.**

**இது ஒரு வகைக் கீரைச் செடி**

**ப-உ :** இலை.

**சுவை**-சிறு புளிப்பு, **தன்மை**-சீதம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை :** காமம்பெருக்கி—காமவர்த்தநி—**Aphrodsiac.**
பித்தமகற்றி—பித்தஹரகரி—**Antibilious:**

**குணம் :** இக்கீரையானது, ஐயம், புணர்ச்சியிலிச்சை, மிகுகழிச்சல் ஆகிய இவைகளை உண்டாக்கும் ; வெப்பத்தை நீக்கும்.

ஐயம் மிகக்கொடுக்கும் ஆர்ந்தபோகந்தருங்காண்
மெய்அனலை யெல்லாம் விலக்குமே-தையலே !
பேதியளிக்கும் பெருமுக் குளிக்கீரை
சீதம் விளைக்குமெனச் செப்பு
(அ.கு.)

**வ:கு** இந்தக் கீரையைச் சமையல் செய்துண்பவருக்கு, மேற்கூறிய குண-ங்கள் உண்டாகும்.

## 220. முள்ளிக் கீரை—Mullik-kirai

வே - பெ : குப்பைக்கீரை முள்ளுக்கீரை

Amaranthus spinosus,

Eng : Thorny Greens.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mundla-tola-kuara | Duk. | Kanto-mat. |
| Mal. | Mullan-chira | Kan. | Kanta-nati |

இஃது, இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராகின்றது ; தோட்டங்களிலும், பண்படுத்தப்படாத நிலங்களிலும் வளரும் ; இப்பூண்டு பச்சை சிவப்பு, முதலிய நிறங்களில் கிடைக்கும்.

(ப-உ) இலை, வேர், சமூலம்.

சுவை—கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.

குணம் : இது நீரைப்பெருக்கும் ; வெப்பத்தை உண்டாக்கும்; தங்கத்தைப் பற்பமாக்கும்.

நீரைப் பெருக்கிவிடு நீடனலைத் தானெழுப்பும்
பாரநறுந் தங்கத்தைப் பற்பிக்கு-நேரே
விடவிருக்கும் போற்றட்டை மேவுமல்குன் மாதே
அடவிநிற்கு முள்ளிக்கீரை. (அ-கு.)

இலை

வ-கு : இதனிலையை அரைத்து வீக்கம் கட்டி இவைகளுக்கு வைத்துக் கட்டினால், அவைகள் கரைந்து போகும்.

இலை, தங்கத்தைப் பற்பமாக்கும்.

இதன் இலைரசத்தையும், வாழைத்தண்டின் சாற்றையும் சமனாய்ச் சேர்த்து, பாம்புக் கடிக்கு உள்ளுக்குக் கொடுத்து வரலாம்.

வேர்.

வேரைச் சுட்டுச் சாம்பலாக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட, கட்டி உடையும்.

வேர் 134 கிராம் ஓமம் 8 கிராம், ஒரு சிறிய பூண்டு இவைமூன்றையும் சேர்த்தரைத்துக் கொடுக்க, வயிற்று வலி குணமாவதுண்டு

வேர் 70 கிராம் எடுத்து, முறைப்படி குடிநீர் செய்து, 30 மி.லி. கொடுத்துவர, வெள்ளை நீரடைப்பு இவை தீரும்.

இதனிலையையும் வேரையும் குடிநீர் செய்து கொடுக்க, இது நீரை உடைக்கும்.

**செடி.**

இதனை இடித்துப் பிழிந்து சாறெடுத்து, 30 மி.லி. வீதம் கொடுக்க தேள் கொட்டல், பாம்பு நஞ்சு முதலியன தீரும்.

இதன் சமூலத்தை, கொள்ளு, கடலை முதலியவைகளுடன் சேர்த்து வேகவைத்து பசுவிற்கு ஊட்ட, பால் மிகுதியாகச் சுரக்கும்.

## 221. வங்காரவள்ளிக் கீரை—Vankarai vallikirai

**வே - பெ : வங்காரவச்சி**

**Sesuvium assscendens**

இது கீரை வகுப்பைச் சேர்ந்தது. மழைக் காலத்தில் பயிராகும்.

**சுவை**—இனிப்பு, துவர்ப்பு, **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை :**
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.

**குணம் :** இதனால் வளிநோய் வயிற்றுப்புசம் இவை நீங்கும். கறுத்துச் சிக்கிய எரு, சிறு நீர், சரியாக இறங்கும். குடல் தூய்மை யாகும்.

மாரிக்கா லத்தாய வங்கார வள்ளையினுற்
பூரித்த வாதம் பொருமலொடு-காரித்
திறங்கா மலசல மிறங்கு மின் புண்டாம்
உறங்கா விழியணங்கே ! யுன்.

(அ.கு.

**வ-கு :** இக்கீரையைக் குடிநீரிட்டு அல்லது சமைத்துச் சாப்பிட, மேற் கூறியுள்ள நோய்கள் போம்.

இக்கீரையை, ஏழை மக்கள் சமைத்துண்பது வழக்கம். இஃது எங்கும் இடைக்கக் கூடியதாகையாலும், மழைக்காலத்தில் பெருத்துச் செழித்து வளருந் தன்மையுடையதாதலாலும் வேலை இன்றி வருந்தும் ஏழை மக்கட்க்கு இஃது இன்றியமையாத உணவாகிறது.

ஆகையால், " தாயுந் தகப்பனுந் தள்ளிவிட்ட காலத்திலே வாவென் றழைத்த வங்கார வச்சி." என்று ஒரு பழமொழி வழங்கிவருகிறது.

---

## 222. கீரைத் தண்டு—Kiraiththandu

**Amaranthus gangetics,**

| | | | |
|---|---|---|---|
| **Tel** | Tota kura | **Kan.** | Harvai |
| **Mal.** | Thandankira | **Sans.** | Haruka |

இந்தியாவில், இதன் இலைகளுக்காகவும், தண்டுகளுக்காகவும், நாட்டின் தோட்டங்களிலும், வீடுகளின் பின்புறங்களிலும் இது பயிரிடப்படும். இதில் வெண் கீரை செங்கீரை என்கிற பிரிவுகளுமுண்டு.

ப-உ : தண்டு, கீரை, வேர்.

சுவை—இனிப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { சிறுநீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தனி—Diuretic. குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant. மலமிளக்கி—லரவ்ரேசநி—Laxative. }

குணம் : இதனால், சிறுநீர் எரிச்சல், வெள்ளை, குருதிக்கழிச்சல், வயிற்றுக்கடுப்பு முதலியவை போம்.

தண்டுமெத்த வாய்வு தணியாத சீதளமாம்
விண்டுரைக்கில் சின்னோய்போம் விள்ளவோ-கொண்டக்கால்
நீர்க்கடுப்பு வெட்டையனல் நில்லாது நேரிழையே !
போர்க்கடுப்பி ரத்தமும்போம் போம். (அ.கு.)

வ-கு : இதன் தண்டு கீரை முதலியவற்றைச் சமைத்துச் சாப்பிட, மேற்கூறிய நோய்கள் போம்.

வெண்கீரைத்தண்டு

குணம் : வெப்பம், வெளி மூலநோய், எரிச்சல் இவைகளை நீக்கும்.

வெண்கீரைத் தண்டு வியாதியற்ற நற்கறியாங்
கண்காணு நோடிவிடுங் காந்தலெல்லாங் - கண்காணும்
மூலமதற் கேற்கும் முசியா எரிவகற்றுந்
தாலமதில் அக்குணத்தைச் சாற்று. (அ.கு.)

இதைக் குடிநீரிட்டு அல்லது சமையல் செய்து சாப்பிட்டுவர, மேற் கூறிய நோய்கள் போம்.

செங்கீரைத் தண்டு.

குணம் : இது, தீராத அழல் நோயையும், பெண்களுக்குண்டாகும் பெரும்பாட்டையும், முப்பிணிச் சுரத்தையும் போக்கும்.

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தங்காமல் ஓட்டிவிடுந் தையலர்க்குப் - பொங்கும
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கறியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான். (அ.கு.)

---

## 228. கீழ்க்காய்நெல்லி—Kizhkai-nelli.

வே - பெ : கீழ்வாய் நெல்லி, கீழாநெல்லி.

Phyllanthus niruri.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nela usirika. | Sans. | Bhumyamalaki |
| Mal. | Kizhanelli<br>Kizhkkayi-nelli | Hind. | Bhuin-anvalah |
| Kan. | Kiranelli-gida<br>Nelanelligida | Duk. | Bhuin-anvalah |

இஃது, இந்தியாவின் வெப்ப நாடுகளில், சதுப்பான எல்லா இடங்களிலும் வளரும்.

ப. உ. : எல்லாம்.

**சுவை**—துவர்ப்பு, கைப்பு, புளிப்பு, இனிப்பு, **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை** :
- வீக்கமுருக்கி - சோபாநாசநி - **Deobstruent.**
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic**
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - **Astringent.**
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - **Cooling.**

**குணம்** : இம்மூலிகையினால், வயிற்று மந்தம், தீக்குற்றத்தால் விளைந்த கேடு, கண்ணில் தோன்றும் நோய்க் கூட்டங்கள், குருதிக் கழிச்சல், நீரிழிவு, காமாலை, உடலில் உண்டாம் வெப்பு, உடலில் ஊறிய மேகம், சப்ததாதுகாத சுரம், தாது வெப்பம், நாட்பட்ட மேகப்புண் ஆகிய இவைகள் போகும்.

மேலும் இஃது. அசுத்த பத்தம், விழிநோய், நாவறட்சி, தாபம் இவைகளையும் நீக்கும் : வாதத்தைப் பெருக்கச் செய்யும்.

சீதமதி பித்தவிடஞ் செவ்விழியின் னோய்க் கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் - பூதலத்துள்
தாழ்வாய்ப் பணிந்தேகுந் தப்பாது பொய்யலவே
கீழ்வா யெனுநெல்லிக் கே.
கீழாநெ லிக்குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக்கா மாலைகளைச் சண்ணுந்தா - தேழனலுந்
தோக்கினன ஷந்தொலைக்குந் தொன்மேகம் போக்கிவிடுந்
தக்கவிர ணங்கெடுக்குந் தான்.
(அ.கு.)
"ஆமலகை வானு ளதிகமனை யோடுகுறை
யாமலகை யுண்டேனு யனலெங்கே."

(பொ - ள்.) பல பிணிகளினால் நொந்த உடல் மெலிந்து வெளுத்திருக்கும் கால், கீழாநெல்லியை அரைத்து, நல்ல பசுவின் தயிரில் கலந்து, நாளும் கற்ப முறையின்படி உண்ண, மேகவெட்டை முதலிய நோய்கள் யாவும் போம்.

## இலை.

வை. கு : இப்பூண்டின் இளங்கொழுந்தைக் குடிநீரிட்டுச் சீதக் கழிச்சலுக்குக் கொடுக்கலாம்.

இலையை உப்பு சேர்த்தரைத்துச் சொறி, சிரங்குகளுக்குப் பூச, இவை போகும்.

உப்பில்லாமல் அரைத்துச் சதைச் சிதைவுக்குப் பற்றிடலாம்.

இப்பூண்டின் இலையும் வேரும் நீங்கலாக, மற்றத் தண்டுகளை எடுத்துச் சாறு பிழிந்து விளக்கெண்ணெயில் கலந்து, கண்காச நோயுடையோர்களுக்குக் கண்ணில் விடலாம்.

## இலை - வேர்.

இலையையும் வேரையும் உலர்த்திப் பொடித்து, கழுநீரில் குழைத்து, புண்புரைகளுக்கும் வீக்கங்களுக்கும் பூசலாம்.

இவ்விரண்டையும் குடிநீரிட்டுச் சுரங்களுக்குச் சூட்டோடே கொடுக்க காய்ச்சல் தணியும்.

இதனையே ஆறின பிறகு குடித்துவர உடல் வலுக்கும், இது பசித் தீயை தீயைத் தூண்டும். இதன் இலை வேர் முதலியற்றை அரைத்து மோரில் கலக்கிக் கொடுத்துவரின், மஞ்சட் காமாலை, மேகநோய் இவைகள் போம்—உப்பு நீக்கவும்.

**வேர்.**

**வேரைக்கழுநீரில் அரைத்துக் கலக்கிப் பெரும்பாட்டிற்குக் கொடுக்க சுகமாகும்.**

**வேரைப் பச்சையாய் 17 கிராம் எடுத்து அரைத்து, பாலில் கலக்கிக், கொடுக்க காமாலை நோய் நீங்கும்**

**கீழாநெல்லித் தைலம்:** கீழாநெல்லியை நிழலிலுலர்த்தி, இடித்து எடுத்த தூள் 700 கிராம், நீர் 5,600 மி. லி. இதைக் காய்ச்சி 700 மி. லி-க்கு. குசறுக்கி, இதில் ஆவின் பால்700 மி. லி. நல்லெண்ணெய் 700 மி. லி சேர்த்து, 34 கிராம் சீரகத்தைப் பசுவின் பால் விட்டு அரைத்துச் சேர்த்து காய்ச்சி, பதத்தில் வடித்துக் கொண்டு, வாரம் இரு முறை தலை முழுகி வர, உட் சுரம், அழலை, கை கால் கண் எரிச்சல், நடுக்கல், தலை சுற்றல், வாந்தி முதலியன போம்.

## 224. செங்கீழா நெல்லி—Chengiizha-Nelli.

**வே. பெ : சிவப்பு கீழாநெல்லிக, சிறுகீழாநெல்லி, சிவப்புநெல்லி.**

Phyllanthus urinaria.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Erra-usiika | Kan. | Kempu-kiranelli |
| Mal. | Chiru-kizhuka-nelli<br>Chukanna-kizha-nelli | Hind. | Lal-bhuin-anvalah |
| | | Duk. | Lal-bhuin-anvaloh. |

இது, கீழ்க்காய் நெல்லி இனத்தைச் சேர்ந்தது; சிவப்பு நிற முடையது; ஆனால், நிமிர்ந்து சிறு சிறு பக்கக் கிளைகளைப் பெற்றிருக்கும்.

இதன் சுவை, குணம், வழக்கு இவைகள், கீழ்க்காய்நெல்லிக்குடையனவே.

இதனைக் குடிநீரிட்டு குன்ம நோய்க்குக் கொடுக்கலாம்.

---

## 225. குங்கிலியம்—Kungiliyam.

**வே - பெ : குங்குலியம், குங்கிலிகம், சருவரசம், குக்குலு, குக்கில், குக்கிலியம்.**

Shorea robusta (Resin of),

**Eng : Saul tree.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Guggilamu | Arab. | Qanquahar |
| Mal. | Kungiliyam | Pers. | Raal-moaabbar |
| Kan. | Guggala | Hind. | Dhuna<br>Damar |
| Sans. | Guggilam | | |

இது, தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சிமலை நாடுகளிலும் கோதாவரி, சிந்து தேசம், இமயமலையின் அடிவாரம் முதலிய இடங்களி லுள்ள காடுகளிலும் வளரும் ஒரு வகை மரத்தின் பிசின்.

இந்த மரத்துக்கு "கருமருது" என்பது பெயர். குங்குலியத் தில் வெள்ளைக் குங்குலியம் சிவப்புக் குங்கிலியமென இரு வகையுண்டு இவற்றுள் வெள்ளைக் குங்குலியம், பார்வைக்கு நிறமின்றியும் கலக்கமற் றுமிருக்கும். மற்றொன்று, மங்கல் வெளுப்பு, மஞ்சள் அல்லது பசுமை நிறம் பொருந்தியிருக்கும். இவ் விரண்டிலும் **நாட்டுக் குங்கிலியம், சீமைக் குங்கிலியம்** என இரு தொகுப்புண்டு. இவற்றுள், சீமைக் குங்குலியம் சிறப்பாகக் கொள்ளப்படுகின்றது. ஆனால், நாட்டுக் குங்கி யத்தில் நல்ல சரக்காயுள்ளது, சீமைச் சரக்கைத் தோற்கடிக்கும் என்பதில் ஐயமில்லை. இப்பிசின், கருப்பூரத் தைலத்திலும், சில **வித்து எண்ணெய்களிலும் கரையும்.**

மேற்படி மரத்தின் பட்டையில் சிறிதாகக் கீறி வடு உண்டாக்கின், அதி னின்றும் வடியும் பால் உறைந்து பிசின் ஆகும்.

பூனைககண் குங்கிலியம் (ரூமி மஸ்தகி) என ஒரு வகையுமுண்டு.

ப - உ : பிசின்.

**சுவை :** கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- கோழையகற்றி - சப்ஹரகாரி - **Expectorant.**
- சிறுநீர்ப் பெருக்கி - மூத்ராவர்த்தனி - **Diuretic.**

பொது.

**குணம் :** பெரும்பாடு, வெள்ளை, விலக்கிற புண், சீழ்ப் புண், எலும் பைப் பற்றிய புண் இவைகள் போம்.

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலில்
அரும்பிய புண் ணுறுமிவை யல்லால்—துரும்பாம்
எலும்புருக்கி புண்சீழும் ஏகும் உலகில்
சலம்பருகுஷ குங்கிலியத் தால். (அ.கு)

வெள்ளைக் குங்கிலியம் (சருவரசம்).

வெள்ளைக்குங்கிலியத்தால், வெள்ளையால்பிறந்த நீர் நாளப்புண் கொப்பூழ்ப்புண், சிறுமேகம், சுவாலைப்புண் ஆகியவை நீங்கும்.

வெள்ளை யளித்த மெனநாளப் புண்கமலத
தொள்ளைவிர மேகமுந் தோற்றுகினும்—உள்ளே
வருவரசலேமேற்புண் வெரினுஞ் சுவேதச்
சருவரச மேறபழியைச் சாற்று. (தே.கு.)

கருமை—செம்மைக் குங்கிலியம்.

கருமை, செம்மை என்னும் இரு விதக் குங்கிலியத்தால் காது, உதடு, மூக்கு முதலிய இடங்களிலுண்டாகும் நோய்கள், மேகப் புண் கட்டி, வாயுக்கட்டிகள், சூலை, திணைக்கழிச்சல், காணாக்கடி, நஞ்சு, இல் லிகைப்பு, நகங்களைப் பற்றிய புண் இவை போம்.

காததர நாசிநோய் கட்டிகடி மேகப் புண்
வாதவித்தி ரஞ்சூலை வன்குநகம்—ஓதிவையித்
திக்கி லிருக்கத் திடமுள்ள வோவுபயக்
குக்கி லிருக்கநமக் குள்.

அளவு—1200 மி. கி.—1800 மி. கி. (தே.கு.)

**வ - கு :** குங்கிலியத்தைப் பொடித்து 1 கிராம் வீதம் 120 மி. லி. பாலில் கலக்கி, நாளும் காலையில் சாப்பிட்டுவா, உடலும் வலுக்கும்.

குழந்தைகளுக்குண்டாகும் சீதக் கழிச்சலுக்கு, 1 கிராம் குங்கிலியப் பொடியுடன் சருக்கரை சேர்த்துக் கொடுத்து வரலாம்.

குங்கிலியத்தூள் 10 கிராம், மாம்பருப்புத்தூள் 20 கிராம் இலவம் பிசின் தூள் 8 கிராம், ஜாதிக்காய்த் தூள் 20 கிராம் இவைகளைக் கலந்து வேளைக்கு 130 மி. கி.—180 மி. கி. வீதம் கழிச்சலுக்குக் கொடுக்கலாம்.

**குங்கிலியக் களிம்பு :** குங்கிலியம் மெழுகு வகைக்கு 105 கிராம் எடுத்து இவைகளைச் சிறு தீயிட்டு உருக்கி இதில் 350 கிராம் நல்லெண்ணெய் சேர்த்து சூடாயிருக்கும் போதே வடிகட்டிக் கொண்டு, இதைத் துணியில் தடவி ஆறுப் புண்களின் மேல் போட்டு வரப் போம். இததுடன் கந்தகம், காசுக்கட்டி, வெங்காரம் இவைகள் சேர்த்துப் போட்டால், சிவந்த நிறமுண்டாகி எளிதில் ஆறும்.

இதைத் தணலில் போட்டுப் புகைக்க, நோயாளியிருக்குமிடத்திலும் சாக்கடை முதலியவிடங்களிலும் உண்டாகும் நாற்றம் நீங்கும். விஷ வாயுக்கள் போம்.

இதைச் சாராயத்தில் கரைத்து, அதன் அளவு முட்டை வெண்கரு சேர்த்துக் கலந்து, மேலுக்குப் பூச, வாதவலி முதலிய நோய்கள் சாந்தமாகும்.

இப்பிசினை நெய் விட்டுப் பொரித்து, தண்ணீரிலிட்டு நன்றுய் அடித்துப் பிசைந்து, ஆடையில் வடிகட்டி நீரை வடித்து, ஆடைமேல் தங்கி நிற்பதை எடுத்துத் தக்க அளவில் கொடுக்க, வெள்ளை நோய் போம். உடல் வலுக்கும்.

இக்குங்கிலியத்தைக்கொண்டு, குக்கில் குழிதைலம், குங்கிலிய வெண்ணெய், குங்கிலிய பற்பம், குங்கிலியத் தைலம் போன்றவைகள் செய்யலாம். இவைகள் மேகப்புண் வெட்டை முதலியவைகட்குப் பயன்படும்.

## பூனைக்கண் குங்கிலியம்.

இஃது, உருண்டு மஞ்சள் அல்லது பொன்னிறமுள்ளதாயும், பூனைக் கண் போலும் தோன்றும். இதன் எண்ணெய் வீக்கத்தைப் போக்கும்.

---

## 226. குங்குமப்பூ—Kunkumappu.

**வே பெ : குங்குமப்பூ, ஞாழல்பூ, காஸ்மீரம்.**

**Crocus sativus**

**Eng. Saffron.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kumkuma-puvvu, Kumkuma-kesaramu | Sans. | Bhavarakta, Kunkuma |
| Mal. | Kumkuma puvvu | Arab. | Zaafaran |
| | | Pers. | Zaafaran |
| | Kumkumada-puvvu | Hin. | Kumkum, Kesar |

இஃது crous இனத்தைச் சேர்ந்த பூண்டின் பூக்களிலுள்ள மகரந்தத் தாள்களேயாகும். இதன் நிறம் செம்மஞ்சள். இதை நீரிலிட்டால், சிறிது நேரத்தில் நீர் முழுவதும் செம்மஞ்சள் நிறம் பெறும். இப்பூண்டானது, வடமேற்கு நாடுகளிலும், இந்தியாவில் காஷ்மீரத்திலும் பயிராகின்றது. இஃது ஒரு விதவாசனையோடு சிறிது மினுமினுப்பாய் இருக்கும்.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—stimulant.
- பசித்தீத்தூண்டி—ஜடாாக்னிவர்த்தநி – stomachi.
- தயரடக்கி—வேதநாசாந்தநி—Anodyne.
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antisposmodic.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

**குணம்.** இதனுல், வெண்ணீர் (விந்து) குறைவு. நீர்வேட்கை, மேக நீர், சூலை, ஐயசுரம், தலைவலி, கண்ணில் விழுகின்ற பூ, கண்ணேய் வாந்தி, காதுநோய், நீர் ஏற்றம், வாயினிப்பு, சூலகத்தின் அழுக்கு முதலியன போம்.

விந்துநட்டந் தாகமண்டம் மேகசலஞ் சூலைகபம்
உந்துசுரம் பித்தங்கால் உச்சிவலி—முந்துகண்ணில்
தங்குமப்பூ வோடுறுநோய் சர்த்தியிவை நீங்கவென்றுல்
குங்குமப்பு ஓரிதழைக் கொள்.
குங்குமப்பூ வைக்கண்டால் கூறுகொண்ட பீநசநோய்
தங்குசெவித் தோடஞ் சலதோடம்—பொங்கு
மதுரதோ டந்தொலையும் மாதர் கருப்ப
உதிரதோ டங்களறும் ஓது.

(அ.கு.)

**வ - கு :** இதை, உணவுப் பொருள்களுக்கு நிறமுண்டாக்குவதற்கும், மணமுண்டாக்குவதற்கும் சேர்ப்பதுண்டு.

பிள்ளைத்தாய்ச்சிகள், இதை வெற்றிலையோடு கலந்து தின்ருலும், அல்லது பாலில் இட்டுக் காய்ச்சி அருந்திலும் பிறக்கும் பிள்ளை அழகாக பிரசவ வலி மிகவில்லாமலும் பிறக்குமென்பர். சூதகக்கட்டு, வலி முதலியவைகளும் நீங்கும்.

தலைவலி மூக்குகார்ப்பாய்ச்சல் இவைகளுக்கு, இதை முலைப்பாலில் உரைத்து நெற்றியில் பற்றுப் போடலாம். அல்லது இதை அபினி, விளாம் பிசின், பனைவெல்லம், இவைகளுடன் சேர்த்தரைத்து, ஒரு துண்டுத்தாளில் தடவிக் கன்னைப்பொறியின் மீது போட, வலி நீங்கும். மருந்துகளுக்கு இதைத் துணை மருந்தாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

குங்குமப்பூ 1 பங்கை, நீர் 80 பங்கில், ஊறப்போட்டு வடிகட்டி, வேளையொன்றுக்கு 30 மி.லி.—60 மி. லி. கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் விலகும்.

பிரசவம் எளிதிலாகாவிடின், ஒரு கழஞ்சு குங்குமப்பூவைச் சோம்புக் குடிநீரில் கரைத்துக் கொடுக்க, சிசு உடனே வெளிப்படும்.

பிள்ளை பிறந்தபின் ஒவ்வொரு 3 கிராம் வீதம் மூன்று வேளை கொடுக்க, இதனாலுண்டாம் குருதிக்கேடு நீங்கும்.

எட்டு கிராம் பூவை நீரிலரைத்து உருண்டை செய்து, உள்ளுக்குக் கொடுக்க மரித்த பிள்ளை வெளிப்படுமெனக் கூறுவர்.

தேனிலரைத்துப் பெண்குறி, எருவாய், காது இவைகளிலுண்டாகிற நோய்களுக்குப் பூச, சீக்கிரத்திலவைகள் மாறும். முலைப்பாலிலிழைத்து கண்ணில் விட்டுவர, கண்ணீரொழுக்கும், கண்ணைப்பற்றிய மற்ற நோய் களும் போம்.

நான்கு கிராம் குங்குமப்பூவை சுமார் 500 மி.லி. நீரில் சேர்த்துக் குடி நீராக்கிக் கொடுக்க, பசித்தீயைத் தூண்டும்.

---

## 227. குடசப்பாலை—Kudasap-palai.

**வே-பெ கசப்பு, வெட்பாலை, குளப்பாலை, குளப்பாலை.**

**Holarrhena antidysenterica.**

**Eng : The Kurchi ; Tellicherry Bark.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chedu-kodisha | Sans. | Kutaja |
| | | Arab. | Lasānul-aasāfir |
| Mal. | Kaipa-kotakap-pala | Pers. | Indar-jave-thalakh<br>Tukhme-ahare |
| Kan. | Korasigina-gida | Hind. | Karva-indarjow. |

**Note.—There are two kinds of வெட்பாலை in the bazaar, sweet and bitter, according to some native works and many native practitioners and druggists. they are the produce of one and the same plant, viz., Wrightia Tinctoria (வெட்பாலை) ; but this is contrary to the fact Tinctoria is found in several gardens of Madras and elsewhere, and always produces only one kind of seeds which are the sweet வெட் பாலை. The bitter வெட்பாலை is the produce of another plant called for Hrhena Antidysentrica or Vboluis.**

இது காடுகளில் வளரும் மரம். கறுப்பு வெள்ளை என இரு வகையுண்டு.

ப - உ : பட்டை, விதை.

சுவை- துவர்ப்பு, சிறுகைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - இனிப்பு.

பட்டை

செய்கை :
பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி—Febrifuge.
புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.

விதை.

அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி—Caaminative.
உரமாக்கி—பலகாரி-Tonic.
காமம்பெருக்கி—காமவாத்தநி—Aphrodisiac.
கற்கரைச்சி—பாஷாணபேதி—Lithontriptic.

குணம் : இதனால் வளிநோய், கழிச்சல், நீரிழிவு, வெள்ளை, கரப்பான், சிரங்கு இவைகள் போம். அன்றியும் சுரம் நீங்கும்.

வாதமறும் பேதிகட்டு மாருத நீரிழிவுங்
காதம்போ மேகங் கடக்குங்காண்—தீதடரப்
பொங்கு கரப்பானும் போகா விரணமும்போம்
இங்குகுட சப்பாலைக் கே.

சுவாசகா சம்பக்கச் சூலையதி சாரம்
அவாச வியர்ப்போ டனலந்—தவாத
கரப்பா னிவைவிலகுங் காரிகையே ! நாளும்
உரப்பாங் குளப்பாலை யுண்.

(அ.கு.)

வ - கு : பட்டையை முறைப்படி குடிநீரிட்டு 15 மி.லி.—30 மி.லி. வரை தினம் மூன்று வேளை கொடுத்துவர, கழிச்சல் வகை யாவும் போம்.

பட்டையைப் பிழிந்து சாறெடுத்து, இஞ்சிச்சாறு ஒரு நிறை சேர்த்து, அத்துடன் சிறிது சர்க்கரை சேர்த்துச் சாப்பிட, வயிற்றுநோய், மேகநோய் இவைகளைக் கண்டிக்கும்.

பட்டையைக் குடிநீரிட்டு வாய் கொப்புளிக்க, பல் வலி தீரும்.

பட்டைச் சாற்றை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, கரப்பான், சொறி, சிரங்கு முதலிய நோய்களுக்குத் தடவ, இது நன்மை தரும்.

பட்டையைச் சிதைத்து வலியுள்ள இடங்களில் வைத்துக் கட்ட, நன்மை பயக்கும்.

பட்டை 8 கிராம் வில்வப்பழச் சதை 8 கிராம், மாதுளம் பட்டை 4 கிராம் எடை இம்மூன்றையும் உலர்த்திப் பொடி செய்து, 1 கி.—2 கி. எடை விகிதம், தேனில் அல்லது சர்க்கரையில் கலந்து கொடுக்க, கழிச்சல்கள் போகும்.

———

## 8. குடியோட்டிப்பூண்டு—Kudiyattup-pundu

**வே - பெ : குருக்கம்செடி, பிரமதண்டி, பிரமதண்டு.**

**Bot. Name : Argemone mexicana**

**Fam : Popaueracear.**

**Eng : The Maxican Poppy ; The yellow thistle.**

| | | | | |
|---|---|---|---|---|
| Tel. | Brahma-daudi-chettu | Sana. | Brahmadandi | |
| | | | Srigala-Kanta | |
| Mal. | Brahma-dandi | Hjnd. | Bharbhand | Shlrajal-kanta |
| Kan, | (Arasina-umatta). Datturi Datturi-gida | Duk. | Bhiramdandi | Pila-dharura |

NOTE.—Datturl or Datturi giada is the canarese appellation under which the above plant is generally known in many districts of Mysore, Bangalore and Bal'ary and care should be taken not to confound this name with that of Datura Alba in several other languagesion account of the similiarity of the word Daturi.

இப்பூண்டானது இந்தியா முழுவதிலும் ஏராளமாய்ப் பயிராகிற செடி. இதில் முள் அடர்ந்து கிடக்கும்.

ப - உ : விதை, வேர், சமூலம், பால்.

சுவை—கைப்பு. தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**சமூலம்.**

குணம் : இதனால், புண்கள், கரப்பான், சிறு சிரங்கு, சில் விடங்கள் பொடி இருமல், வெண்ணீ, மேகம்,' பல்நோய், கடிநஞ்சு முதலியன தீரும்'

புண்ணோடு கரப்பான் பெகடிசிரங்கு சில்விடங்கள்
சண்ணிருமல் மேகவளி தண்மேகம்—அண்ணிற்
படியோட்டு மாவிடமும் பல்நோயுந்தீருங்
குடியோட்டுப் பூண்டாற் குலைந்து. (அ.கு.)

**பால்.**

இதனால், கண்கூசுதல், கண்குறுகல், கண்ணில் நீர் வடிதல், கண் வலி, கண் சிவத்தல் ஆகிய இவைகள் போம். ஆனாலும் இது தாங்கமுடியாத எரிச்சலை உண்டாக்கும். கண் சிவந்து சிறு குருக்களை உண்டாக்கும். (Gloecuma Trochoma) என்னும் நோய்க்கு இதன் பாலைக் குச்சியால் கண் மேலிமையினுட்பாகத்தில் தடவிவர, இந்நோய் போகுமெனக் கூறுவாரு முளர்.

கண்கூசல் கண்ணருகல் கண்ணொழுகல் கண்ணோதல்
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுங்—திண்ணச்
சரமதண்டனைப்பிளக்குஞ் சாயக்கண் மாதே !
பிரமதண்ட னற்பாகுப் பேர்ந்து.

## பிரமதண்டு.

.......................................................

..................................." மதியால்—கண்டவையும்
வையாரா யுண்மறைய வைகுவார் வாகடத்தை
வையாரா யுண்மறையவர்" (தே-ய).

(பொ-ள்) முருங்கைப் பிசின், நெய் இவற்றை முறையே ஒருவராகன் ¼ வராகன் எடையாய் எடுத்து, இவற்றுடன் பிரமதண்டு பூவிலிருக்கும் மகரந்தப் பொடியைக் கலந்து பத்தியத்துடன் சாப்பிட்டால், இது தோள்களிலும், பக்கங்களிலும் உண்டாகின்ற வாதநோய்களை நீக்கும்.

வ-கு : விதையைத் தூள் செய்து 4 இராம் எடை எடுத்து, தேன் அல்லது சருக்கரை கலந்து, தினம் மூன்றுவேளை கொடுத்துவர, இருமல் மார்புச்சளி போம்.

விதையைப் பொடித்துப் புகைத்துப் புகையை வாயிற்கொள்ள, பல்வலி பல் சொத்தை இவை தீரும்.

### விதை எண்ணெய்.

மலமிளக்கி —குடிவிரேசகரி—Laxative

தாதுவெப்பகற்றி—சமனகாரி Sedative

செய்கை.— குமட்டலகற்றி —வமனவியதாகினி Naustant
Aperent
Antiasthmatic

கோழையகற்றி —Expectorant

இவ் வெண்ணெயை 10 முதல் 15 துளி வீதம், தினம் 3 முறை சருக்கரை அல்லது நீரிற் கலந்து உட்கொள்ள இருமல் போம்.

30 துளி சருக்கரையில் கொடுக்க நன்றாகப் பேதியாகும். ஆனால் வாந்தி உண்டாகும்.

தவளைச்சொறி, தலைநோய், குறைநோய், மேகப்புண் இவைகட்கு வெளிப் பூச்சிடப்போம்.

### வேர்.

செய்கை :: { துயரடக்கி—வேதநநாசாந்தநி—Anodyne.
உடற்றேற்றி—வயதாபேதகாரி—Alterative.

வேரைப் பொடித்து ஒரு வராகனெடை கொடுக்க, தட்டைப்புழு விழும்

இதை முறைப்படி குடிநீரிட்டு, வேளைக்கு 30 மி.லி.—60 மி.லி. வீதம் தினம் மூன்று வேளை கொடுத்துவர, இருமல் போம். பச்சை வேரைச் சிதைத்துத் தேள்கடி வாயில் வைத்துக்கட்ட நஞ்சு நீங்கும்.

### இலை முதலியன.

இதன் சாறும், ஆடு தீண்டாப்பாளைச்சாறும், நெய்யும் கலந்து ஒரு தேக்கரண்டி வீதம், தினம் இருவேளை சாப்பிட்டுவர, வெள்ளை போம்.

இச்சாற்றிற்குச் சிறு நீரைப் பெருக்கும் செய்கை இருப்பதால், இதைச் சோகை பாண்டு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

12 கிராம் சாற்றைக் காலைதோறும் வெறும் வயிற்றில் 40 நாட்கள் சாப்பிட்டுவர, குறைநோய் தோலைப்பற்றிய நோய்கள் போம். வெளிக்கும் பூசலாம்.

பால்.

மேகப்புண் இவைகளுக்குத் தடவலாம். கண்ணிவிட, கண்ணிலுண்டாகும் சிவப்பு, வலி, கூச்சம், நீர்வடிதல், குறுகல் இவை நீங்கும்.

---

## 229. குதிரைக்குளம்படி—Kudiraik-kulampati.

வே - பெ : குளித்துப்பூண்டு-குளிரி.

**Sagittaria obtusifolia.**

இது நீர்க்கரை ஓரங்களில் பயிராகும் ஒருவகைப்பூண்டு.

இது ஒருநீண்ட தாவரம். இலைகள் செங்குத்தாக நிற்கும்; அம்பு வடிவமானது. இது சுமார் 2 அடி உயரம் வளரும். மலர்கள் $\frac{1}{2}$—$\frac{1}{4}$ அங். அளவுள்ளதாகக் காணப்படும். இதற்கு வீக்கத்தைக் கரைக்கும் குணமுண்டு.

**குணம் :** இதனுல், குதிரைவலி, முப்பிணி, தினவு போம்.

" குதிரைநடை வாயுசந்தி கூறுதின வும்போம்
குதிரைக் குளம்படியைக் கூறு " (அ.கு.)

**வ-கு :** இதை வேகவைத்து மேற்கண்ட நோய்களுக்கு ஒற்றிடமிடலாம் வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட வீக்கங் கரையும்.

---

## 240. குத்துக்காற் சம்மட்டி—Kuttukkar-chammatti.

வே - பெ : குத்துக்காரன் சம்மட்டி. இதற்குத் தக்க பெயர் வேறு சொற்களில் கிடைக்கவில்லை.

**Iodigof eratrista**

இது, தென்னிந்தியாவில் வெளிகளில் பயிராகும் ஒரு வகைக் குத்துச் செடி. இதைச் சேகரிக்கும்போது இருப்புக் கடப்பாரைக் கொண்டு இதன் வேரைக் குத்திக் கிளப்பக்கூடாது. இதன் வேர் இரும்பை இழுக்கும் குணமுள்ளது. ஆகையால், இதை மரக்குச்சியினுல் குத்திக்கிளப்பி எடுத்தல் வேண்டுமெனக் கூறுவர்.

**ப-உ :** வேர்.

**சுவை**—கார்ப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :** { வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி— timulant.
வீக்கமுருக்கி-சோபநாசனி—Dbseotruent.

**வேர்.**

**குணம் :** இதன் வேரினால், கொடூரமான மகா வாதக்கூட்டம், மேகக் கட்டிகள், திமிர்வாதம், மூர்ச்சையின் அயர் ஆகியனவகள் போம்.

சாரமுறு குத்தக்காற் சம்மட்டி வேரெனச்சொற்
கோரமுள்ள மாவாதக் கூட்டமெங்கே ?— வீரமுறு
மேகத் தொகுப்டெங்கே வீறுதிமிர் வாதமெங்கே
சோகத் தளர்ச்சியெங்கே ? சொல். (அ.கு.)

---

## 231. குந்திரிக்கம்—Kunthirikkam.

**வே - பெ :** குந்துருக்கம், குந்திலிங்கம், குமைஞ்சான், நறும்பிசின், பறங்கிச்சாம்பிராணி.

Boswellia serrata, .

Eng : Resin of Olibanum : Indian Frankincense.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Parangi-sāmbrāni<br>Anduga-pisunu | Kan. | Vishasha-dhoopa |
| | | Sans. | Salasi-niryāsa |
| | | Arab. | Kundur |
| Mal. | Valanku-chambrani<br>Kunthirukkam | Pers. | Kundur |
| | | Hind. | Kundur. |
| | | Duk. | Farangland |

இது, Frauknincense tree என்னும் ஒரு வகை மரத்தினின்றும் வடிகிற பிசின் உறைவதனால் உண்டாகிறது. இம் மரம் மத்திய இந்தியாவிலும், மேற்கரை நாடுகளிலுள்ள காடுகளிலும் ஏராளமாய் வளருகின்றது.

இது, பலவகையாய் உருண்டும், கட்டையாயும் இருப்பதுடன், நிறத்திலும் வேறுபடும். இதில் ரோஜனமும் பிசினும் உண்டு. இதற்கு நல்ல மணம் உள்ளது.

**ப.உ.-** பிசின், எண்ணெய்.

**சுவை**—கைப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு**—கார்ப்பு.

**பிசின்.**

**செய்கை :**
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னி வர்த்தநி—Stomachic.
- வியர்வையுண்டாக்கி—ஸ்வேதஹாரி—Diaphoretic.
- துவர்ப்பி—ஸங்கோஸனகாரி—Astringent
- குளிர்ச்சியாக்கி—சீதளகாரி—Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்தரவர்த்தநி—Diuretic.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி - Emmenagogu.
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.

**எண்ணெய்,**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant

**குணம் :** இதனால், இருமல், இரைப்பு, மேகக்கட்டி, நச்சுக்கடி, படர்தாமரை, சிரங்கு, நாட்பட்ட புண்கள் ஆகியவை போம்.

காசசு வாசங் கனத்தமே கக்கட்டி
வீசு விடக்கடிவி றுச்சுகுட்டம்—பேசு
படர்தா மரைசிரங்கு பண்ணடைவிர ணங்கள்
இடர் செய்யிற் குந்திரிக்கம் எந்து. (ஆ.கு.)

**பிசின்.**

**அளவு : 130 மி.கி. முதல் 1,300 மி.கி.**

**வ–கு :** இதை, நெய்யுடன் கலந்து வெள்ளை முதலிய வெப்ப நோய் களுக்குக் கொடுக்கலாம். இஃதே இருமல் நோயிலுண்டாகும் கோவழையை அகற்றும்.

இதை வேலம் பிசினோடு சேர்த்துச் சாப்பிட, வாய் நாற்றத்தைப் போக்கும்.

4 கிராம் வீதம், தினம் 2 அல்லது 3 வேளை ஆக நெடுநாள் சாப்பிட்டு வந்தால், மலட்டு நோயை விலக்கும்.

காமாலை, கழிச்சல், சீதபேதி, குருதிப்போக்கு, இவைகளுக்கும் இதைக் கொடுக்கலாம்.

மேக நோய்களுக்கு வெண்ணெயில் கொடுக்கக் குணம் தரும்.

**வெளிப்பிரயோகம்.**

இப்பிசினைத் தேங்காயெண்ணெயிலிட்டுக் காய்ச்சி, நாட்பட்ட புண்களுக்கு தடவி வரக் குணமாகும்.

பழச்சாற்றில் கரைத்தும் மேற்படி புண்களுக்குப் போடலாம்.

இதைப்பொடித்துப் புகையிட, கெட்ட நாற்றம் நீங்கும். இதை வெண் ணெயில் குழைத்துப் பற்றிட, அரையாப்பு நீங்கும். குழந்தைகளை நீராட்டி பின், இதைச் சாம்பிராணிக்குப் பதிலாகப் புகைத்துப் பிள்ளைக்குக் காட்டலாம். பறங்கிச்சாம்பிராணி, நல்லெண்ணெய், வெள்ளைமெழுகு வகைக்கு 32 கிராம் எடுத்து, சிறு தீயிட்டு உருக்கி வடிகட்டிக் கொண்டு, படர்தாமரை, கிரந்தி புண், நாட்பட்ட சிரங்குகள், கட்டி, பிளவை முதலியவைகளுக்கு மேலுக்குத் தடவலாம்.

**எண்ணெய்.**

**அளவு : 10 முதல் 20 துளி.**

இதை இளநீரில் கலந்து வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

தொண்டை நோய்கள், ஈரல்நோய், நாட்பட்ட இருமல் நோய் இவை களுக்கு இதை அளவுப்படி கொடுத்துவர, அந்நோய்கள் குணமாகும்.

———

## 232. குப்பைமேனி—Kuppai-meni.

**வே பெ அரிமஞ்சரி, பூனைவணங்கி, மேனி.**

**Acalypha indica.**

**Eng. Indian acalypha, Cat's struggle.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kuppi-chettu | Sans. | Arittamanjarie |
| Mal. | Kuppa-mani | Hindi | Kuppi |
| Kan. | Kuppigida | Duk. | Kupi |

NOTE.—The cat is supposed to be very fond of this plant, hence the meaning of the name cat's struggle (பூனைவணங்கி).

**வளரும் இடங்கள் (Habitat) :**

இப்பூண்டு இந்தியா முழுவதிலும் கிடைக்கும்; தோட்டங்களிலும் வழியோரங்களிலும், வளர்ந்திருப்பதைக் காணலாம். இஃது ஓர் அடி உயரமுள்ளது வடநூல்கள் இதனைப் பற்றியாதொன்றும் கூறவில்லை என்கிறார்கள். ஆயினும் **"மார்ஜலமோகினி"** என்கிற பெயர்மட்டும் தொகுத்துள்ளதாகக் காணப்படுகிறது.

**ப-உ :** இலை, வேர், சமூலம்.

**சுவை**—கைப்பு, கார்ப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :**
- துயரடக்கி—வேதநாசாந்தநி—Anodyne.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
- பெருமலம்போக்கி—விரேசனகாரி—Cathartic.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic.
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
- சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

**குணம் :** இதன் இலையால், பல்லடி நோய், தீச்சுட்டப்புண், பயிர் வகையின் நஞ்சு, வயிற்றுவலி, வளிநோய், மூலம், நமைச்சல், குத்தல், இரைப்பு, மூக்குநீர் பாய்தல், கோழை ஆகியவை நீங்கும்.

தந்தமூ லப்பிணிதீத் தந்திடுபுண் சர்வவிடம்
உந்துகுன்மம் வாதம் உதிரமூ—லந்தினவு
சூலஞ்சு வாசம் தொடர்பீந சங்கபம்போம்
ஞாலங்கொள் மேனியத னால். **(தே.கு.)**

**குப்பைமேனி.**

காந்திமெ யிலைக்கறி கனிவுட னயில மெய்
யாந்திமிர் வாதநோ யாதிகள் போய்விடும்.

**(பொ-ள்)** குப்பைமேனி இலையை உணவு முறையாய்ப் பிரியமுடன் புசித்துவரின், உடம்பிலுள்ள திமிர்வாதம் முதலிய நோய்கள் நீங்கும்.

## இலே.

**வ-கு :** இலையைப் பொடித்தோ, அல்லது குடிநீரிட்டோ, அல்லது இலையைச் சாறு பிழிந்தோ உள்ளுக்குக் கொடுக்கலாம்.

**அளவு :** சிறியவர்களுக்கு—இலே ரசம் அல்லது குடி நீர் 1 முதல் 4 தேக்கரண்டி வரை கொடுக்க, வயிற்றைக் கழியச்செய்யும், கோழையை அகற்றும், வயிற்றுப் புழுவைக் கொல்லும்.

இதனைப் பெரியவர்களுக்கு 15 மி.லி. முதல் 30 மி.லி., சிறியவர் களுக்கு 1 தேக்கரண்டிவீதம் கொடுக்க, வாந்தியாகும்.

இலேயைப் பொடித்துத் தக்க அளவாகக் குழந்தைகளுக்குக் கொடுக்க, மலப்புழுக்கள் வெளிப்படும். அல்லது இலேயையும், சிறிதளவு பூண்டை யும் சேர்த்தும் கொடுக்கலாம்.

இலேப் பொடி 950 மி.கி. 1,300 மி.கி. வரையிலும் கொடுக்க, அஃது இருமல் முதலிய நுரையீரல் நோய்களைப் போக்கும்.

இலேயையும் உப்பையும் சேர்த்து அரைத்துச் சொறி சிரங்குகளுக்குத் தேய்த்துக் குளித்துவர, அவை குணமாகும்.

இலேச்சாற்றை எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி வலிக்குத் தேய்த்து வரலாம்.

இலேயை அரைத்து, புண், நஞ்சுக்கடி, இவைகளுக்குப் போடலாம். அல்லது, இலேயை மஞ்சளுடன் கூட்டி அரைத்துப் பூசலாம்.

சுண்ணும்புடன் கலந்து, நோயுடன் கூடிய கீல் வீக்கங்களுக்கும் கட்டி களுக்கும் பூசலாம். இதையே காது வலிக்குக் காதைச் சுற்றிப் பூச, நோய் தணியும்.

இலேயுடன் உப்புச் சேர்த்துச் சாறு பிழிந்து, தினந்தினம் காலேயில் இரு மூக்குகளிலும் நசிய மிட்டு, குளிர்ந்த நீரில் தலே முழுகிவர, வெறி நோய் நீங்கும்.

இலேயை அரைத்துக் கழற்சிப்பிரமாணம் உருண்டை செய்து, எருவாய் வழியாய் உட்செலுத்த, நாட்பட்ட மலக்கட்டு நீங்கும்.

சாறு பிழிந்து இத்துடன் சிறிது வேப்பெண்ணெய் கலந்து, இறகில் தோய்த்துத் தொண்டையில் அல்லது உள்நாக்கில் தடவ, சிறு குழந்தை களுக்கு வயிற்றில் தங்கியிருக்கும் கோழைக்கட்டு, வாந்தியினுல் வெளிப் படும்.

இச்சாற்றையே தலேவலிக்கும் தடவலாம். இலேப்பொடியைப் படுக்கைப் புண்களுக்கு வைத்துக் கட்ட, புழுக்கள் சாகும்.

இலேச்சாற்றைச் சுண்டக்காய்ச்சி மெழுகு பதத்தில் எடுத்து 130 மி.கி. —260 மி.கி. கொடுக்க, குழந்தைகளுக்குக் காணும் இருமல் போகும்.

இலேயை அரைத்து மேகப் புண்களுக்கு வைத்துக்கட்டலாம்.

இலேயைக் குடிநீரிட்டு, சிறிது உப்புச் சேர்த்துக் குடிக்க, மலத்தைக் கழிக்கும்.

இலைமேனி யயிறிவிளக் கெண்ணெயின்மெய
யட்டியிலே மேனியை யா.

(பொ-ள்) குப்பைமேனியின் கீரையை ஆமணக்கு எண்ணெயில் தாளிதம் பண்ணி, ஒரு மண்டலம் கற்ப முறையாய் உண்க. அது வாய்வுடனே சேர்ந்த பொல்லாத சேத்துமபிணிகள் யாவற்றையும் போக்கி, உடல் நலத்தை உண்டுபண்ணும்.

**வேர்.**

வேரைக் குடிநீரிட்டு அல்லது வெந்நீர் விட்டு இடித்துச் சாறு பிழிந்து, தக்க அளவில் கொடுக்க, கழியச்செய்யும்.

வேரை அரைத்து சுமார் ஒரு கொட்டைப்பாக்களவு நீரிற் கலந்து 3 நாள் கொடுத்து உப்பில்லாப்பத்தியம் வைக்க, எலிவிடம் தீரும். ஆனால், வாந்தியையும் கழிச்சலையும் உண்டாக்கும்.

**சமூலம்.**

இதில் 105 கிராம் எடுத்து இடித்து, ஓர் ஆழாக்குத் திராட்சைச் சாராயத்தில் ஏழு நாள் ஊறவைத்து, இடையிடையே கிளறிவிட்டு, நன்றாய்ப் பிழிந்து சாறெடுத்து வடிகட்டி வைத்துக்கொண்டு, 20 துளி முதல் ஒரு தேக் கரண்டி வரை தேனிற் கொடுக்க, இது மேற்கூறிய குணங்களைக் கொடுக்கும்.

இதனால் செய்யப்பட்ட மேனித்தைலத்தை 7 கிராம்—28·35 கிராம் எடுத்து மணப் பாகில் கலந்து கொடுக்க, இருமி வெளிப்படும். இத்தைலத் தையே வாதநோய்களுக்கு மேலுக்குப் பூசலாம்.

---

## 233. குமிழமரம்—Kumizha Maram.

**Gmelina asiatica.**

இது, புதர்களிலும், காடுகளிலும், வேலி ஓரங்களிலும் பயிராகும் ஒரு வகைக் குத்துச் செடி வகுப்பைச் சேர்ந்தது. இதில் மூன்று இனமுண்டு: இவை **செங்குமிழ், நிலக்குமிழ், பெருங்குமிழ்.** இவற்றுள், இங்குக் கூறப் புகுவது பெருங்குமிழும் நிலக்குமிழுமாம். இதன் காய் பழுத்த வுடன் மஞ்சள் நிறத்தைப் பெறும்.

**ப-உ :** பழம்.

**சுவை**—கைப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு**. கார்ப்பு.

**செய்கை :** { வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.**
வெப்படக்கி.சுரஹரகாரி—**Febrifuge.**

**குணம் :** இஃது, அதிக வெப்பத்தையும், தலையிலுண்டாம் சுண்டுகளை யும் போக்கும்.

**வ-கு :** இப்பழத்தை நசுக்கி நீரிற் சேர்த்துக் கஷாயமிட்டு, அத்துடன் சமபாகம் எண்ணெய், பசுவின்பால் சேர்த்துக் கலக்கி, அதில் கிச்சிலிக் கிழங்கு, கசகசா, கார்போகவரிசி, காட்டுச்சீரகம், கருஞ்சீரகம் இவைகளைத் தயில முறைக்குரிய அளவு எடுத்துப் பசுவின்பால் விட்டரைத்துக் கலக்கி, சிறு தீயிட்டெரித்து, பக்குவ பாகத்தில் வடித்து, வாரத்துக்கிருமுறை தலையிலிட்டு மூழ்கிவர, உடல் வறட்சி நீங்கி உடல் மேனி பெறுவதுடன், தலையிலுண்டாகும் அரிப்புடன்கூடிய சுண்டுகளும் நீங்கும்.

**பெருங்குமிழ் குடிநீர்.**

சீர்பெரிய வேரின் வகை பெருங்குமிழு முன்னையோடு
சிற்றுமலி பேராமலி
சீரான பாதிரி நெருஞ்சில்சிறு வழுதலை
திடமான கூவிளையுடன்
பார்தனிற் புகழ்பெற்ற கோட்டமோ டேர்சுக்கு
பகர்கண்டங் கத்தரியுமே
"ாலினுந் தேனினும் மினியசொல் லைப்பெற்ற
பைங்கொடி கருங்கூந்தலாய் !

ஏர்பெருகு மருந்தெலாஞ் சமனு யிடித்துமே
யிதமா யுலர்த்தி மெள்ள
விருநாழி நீரிட்டெட் டொன்றுகக் காய்ச்சியே
யியலா யருந்து வீரெல்
வார்பெரிய திரிதோஷ சந்திதோ ஷங்களும்
வளரும்பிர தாப மூர்ச்சை
வராது வகையாக வுண்டவர்க் கேநாளும்
வளர்தேக தசமு ளம்மே.

**(பொ-ள்)** பெருங்குமிழ், முன்னை, சிற்றுமல்லி, பேராமல்லி, பாதிரி, நெருஞ்சில், சிறுவழுதலை, வில்வம், கோஷ்டம், சுக்கு, கண்டங்கத்திரி இவைகள் ஒவ்வொன்றையும் ஓர் எடை எடுத்துச் சேர்த்து, இரண்டு நாழி நீர் விட்டு, எட்டில் ஒரு பங்காகுமாறு காய்ச்சிப் பருக முப்பிணி' மூர்ச்சை முதலியன வாராதொழியும்.

**நிலக்குமிழ்.**

நிலக்குமிழ்வேர் சிறுதேக்கு தேவ தாரம்
நிலவேம்பு பர்ப்படாம் கடுக்காய் சுக்குத்
துலக்கமிகு முத்தமொடு வசம்பு நேராய்ச்
சொன்னநீ ரிருநாழி சுவரக் காய்ச்சிக்
கலக்கமிலாத் தேன்கூட்டிக் காயங் கூட்டிக்
கலந்துழக்கு மருந்துகொளக் கூடிய வையம்
விலக்கரிய வயிற்றுளைவு நோயும் தீரும்
வேதமுனி யுரைத்ததிது விளம்புங் காலே.

**(பொ-ள்)** நிலக்குமிழ்வேர், கண்டுபாரங்கி. தேவதாரம், நிலவேம்பு, பற்பாடகம், கடுக்காய், சுக்கு, கோரைக்கிழங்கு, வசம்பு முதலியவற்றை ஓர் எடையில் கொண்டு, இரண்டு நாழி நீர் விட்டு உழக்காய் வற்றக்காய்ச்சி அதனுடன் தேனும் காயமும் சேர்த்துப் பருகில், கொடிய ஐயம், வயிற்றுவலி, உளைப்பு (இழுப்பிருமல்) முதலியன நீங்கும்.

---

## 234. குருக்கத்தி—Kurukkath-thi.

**வே. - பெ குருகு-மாதவி.**

**Hiptage madoblota**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Madhavi** | **Sans.** | **Madhavi Latha**<br>**Madhavi Viruksha** |

ப-உ: பூ. இதில் மரம் பெருங் கொடி என இருவகை உண்டு.

சுவை—சிறு கைப்பு, சிறு இனிப்பு· தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு

செய்கை { குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.
இளைப்பாற்றி-Restorative.

குணம் : தலையிலுண்டாம் சூடு, நீர்வேட்கை, அழலை, ஐயப்புண்கள், நஞ்சுகள் ஆகியவைகளை நீக்கும்.

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருப்பித்தம் பல்விடமும் போக்கும்—வரிசேர்
கருக்கொத்த வாள்விழியாய் ! கைப்புமது ரஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம்.

(அ.கு).

வ-கு : குருக்கத்திப் பூவைக் குடிநீரிட்டுக் குடித்துவர, மேற்கண்ட நோய்களைப் போக்கும்.

பூச்சாறு இரும்பைப் பற்பமாகும்.

---

## 235 குருவிச்சி—Kuruvich-chi.

வே - பெ : குருவிச்சிப்பூண்டு.

Ehretia suxi olia.

இது குத்துச் செடி வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ: சமூலம்.

சுவை—துவர்ப்பு. தன்மை—தட்பம்—பிரிவு—இனிப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசநகாரி—Astringent.

குணம் : இருமல், பெருநோய், மலடு, மேகக்கரப்பான், மாந்தம், சீதக்கழிச்சல் இவை போம்.

குருவிச்சிப் பூண்டெனவே கூப்பிட்டாற் போதும்
வருவிச்ச குட்டம் மலடும்—ஒருமிச்ச
மேகக் கரப்பான் விடமாந்தம் சீதரத்தம்
பேதமறப் போமொருகாற் பேசு.

(அ.கு.)

வ-கு இதனைக் குடிநீரிட்டேனும், பொடித்தேனும் தக்க அளவில் உட்கொள்ள மேற்கண்ட நோய்கள் தணியும்.

---

## 236. குருவேர்—Kuruver.

வே - பெ : வெட்டிவேர், விழல்வேர், வீரணம், இருவேலி.

Coeus vettiveroides.

Eng. Cuscus grass.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vatti veri / Avvuuru-gaddi-veru | Sans. | Usheera / Veeranam |
| | | Arab. | Usir |
| Mal. | Vetti-veru | Pers. | Khas |
| Kan. | Lavancha | Hind. | Balah |

இது கோரைப்புல் போல நான்கு முதல் ஐந்து அடி வரை வளரும். வேர் கொத்துக் கொத்தாய் ஒவ்வொன்றும் மூன்று நான்கு அடிகள் நீளமுள்ளது. இதன் வேரை வெட்டி எடுத்தபின், புல்லையும், வேரையும் வெட்டி, நடுவிலுள்ள துண்டை மீண்டும் புதிதாக நட்டுப் பயிரிடுவதால், இது வெட்டிவேரென வழங்கலாயிற்று போலும். இதனையே விலாமிச்சு வேர் எனத் தமிழ் நாட்டின் தென் கோடியினர் கூறுவது வழக்கு. விலாமிச்சு, பூண்டு வகையில் சேர்ந்தது. இதன் இலை ஓமவல்லிக இலையைப் போலிருக்கும். இதன் வேர் கரு நிறம். இதற்கு நல்ல மணமுண்டு. இதனைக் குருவேர் என்று கூறுவர், முன்பு கூறியதைக் காட்டிலும், குறுகியிருப்பதால் இப்பேர் வந்தது போலும் ! இதைப் பெண்கள் தலையில் அணிவதுண்டு. இதனைத் தென் னாட்டினர் வெட்டிவேர் என்பர் இவைகளைக் தைலங்களில் சேர்த்துக் காய்ச்சி முடித்தைலமாக வழங்கலாம்.

ப - உ :வேர் ;

சுவை–இனிப்பு. தன்மை–தட்பம், பிரிவு–இனிப்பு.

செய்கை :
- உரமாக்கி–பலகாரி–Tonic.
- வெப்பமுண்டாக்கி–உஷ்ணகாரி–Stimulant.
- இசிவகற்றி–அங்காகர்ஷணநாசநி–Antispasmodic
- வியர்வை பெருக்கி–ஸ்வேதகாரி–Diaphor tic.
- சிறுநீர்ப்பெருக்கி–மூத்ரவர்த்தநி–Diuretic.
- ருதுவுண்டாக்கி–ருதுவர்த்தனகாரி–Emmenagogue.
- வெப்பகற்றி–ஜ்வரஹரகாரி–Febrifuge.

குணம் : வெட்டிவேரால் அழலாலுண்டாகிற தாகம், காமாலை, குருதி யழல், சுரம், தலைநோய், கழுத்துநோய், ஆண்மைக் குறைவு, வெறி நோய், கண் நோய், தீயால் வந்த புண், மூலைச்சிலந்தி, மூர்ச்சை, மேகக் கட்டி ஆகியவை நீங்கும்.

பித்தவி தாகம் சசிகா மிலங்கறைப் பித்தமனற்
ரத்திடு குட்டஞ் சிரநோய் களமடி தாதுநட்ட
மத்தம னற்புண் டனப்புண்வன் மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திர மேகத்தின் கட்டியும் போம் வெட்டி வேரினுக்கே.

(அ.கு.)

### வெட்டிவேர்விசிறி.

இதனால் வெறி நோய், உடல் எரிவு, நாவறட்சி இவைகள் நீங்கும். உள்ளக்களிப்பும் உண்டாகும்.

வாசவெட்டி வேர்விசிறி வன்பித்த கோபமொடு
வீசும் எரிச்சலையும் வீழ்த்துங்காண்—பேசுங்கால்
தாக மகற்றுஞ் சகல மனோக்கியமாம்
மோகமருண் மாதே ! மொழி. (அ.கு.)

அளவு : பொடி செய்த தூள் 195 மி.கி.—600 மி.கி.
ஊறல் நீர் 30 மி.லி.—65 மி.லி.

வ-கு: ஊறல் நீரை சுரம், வயிற்று நோய் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

இஃது தைலங்களிலும், தீக்குற்றத்தைப் போக்கும் பொடிகளிலும் இலேகியங்களிலும் சேரும். இதன் தட்டி வெப்பத்தை மாற்றும்.

---

## 237. குறட்டை—Kurattai.

வே - பெ : சவரி, பீனசக்குறட்டை, சவுரி.

Trichosanthes palmata.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Abuvva / Avvaguda-pandu | Arab. | Anbaghol / Hanzale-ahmar |
| Mal. | Kokatonti | Pers. | Hanzale-surke |
| Kan. | Avagude-hannu | Hind. | Lal-indrayan |
| Sans. | Mahakala | Duk. | Guda-Pandu |
| | | Cing. | Titta-aondpla. |

இது மரமேறுங் கொடி வகுப்பைச் சேர்ந்தது. 30 அடிக்கு மேல் கொடியாகப் படரும். இந்தியா முழுமையும் கிடைக்கக் கூடியது. இதில் பெருங்குறட்டை, சிறு குறட்டை (T-Incisa) என இரு வகையுண்டு. இவைகளின் குணங்கள் பெரும்பான்மையும் ஒன்றுபட்டேயிருக்கும்.

ப-உ : இலை, பழம், வேர்.

சுவை—கைப்பு. தன்மை—வெப்பம்—பிரிவு—கார்ப்பு.

இலை, வேர், பழம்.

செய்கை :
- மலநீராக்கி-வ்ரேசநி–Hydragogue.
- பெருமலம்போக்கி-விரேசனகாரி–Cathartic.
- தடிப்புண்டாக்கி–Counter irrient.

குணம் : பழத்தால் சிரநோய், உடற்கடுப்பு, நீர்ப்பீநசம் இவை நீங்கும்.

தலைவலிகு டைச்சல் சலப்பீந சங்கள்
குலைகுலைந்து காட்டிற் குடிபோம்—நிலைவா
ணவரிப் படிமாதென் றையுறுமெய்ம் மாதே !
சவரிப் பழத்தாற் சலைந்து. (அ.கு.)

வ-கு : பழத்தை நன்றாய் இடித்துத் தேங்காயெண்ணெயில் காய்ச்சி, காது, மூக்கு, செவி இவ்விடங்களிலுண்டாகும் புண் முதலியவை கட்கிட சுகமாகும்.

பழச்சாற்றை நல்லெண்ணெயோடு சேர்த்துக் காய்ச்சித் தலை முழுகி வர, தீராத் தலைவலி, ஒற்றைத் தலைவலி முதலியவை தீரும்.

இத்துடன் பூலாப் பழமும் சேர்த்துக் காய்ச்சித் தலையில் தடவிவர, முடி கருத்து வளரும்.

மேற்கூறிய எண்ணெயைக் காதில் விட்டுவர, வடியும் சீழ் நின்று போகும்.

பழம் நஞ்சாகக் கருதப்படுவதால், இதைச் சோற்றுடன் கலந்து காக்கைகளைக் கொல்லக் கொடுப்பதுமுண்டு.

இதன் வேரைக் குடிநீரிட்டு வெள்ளை நோய்க்குக் கொடுக்க, நோய் தணியும்.

இதன் இலைச் சாற்றைக்கொண்டு வெண்குட்டத்திற்குச் செய்யும் எண்ணெயை, அகத்தியர் பரிபூரணத்திற் காண்க.

இதனுடன் தும்மட்டி வேரைச் சமனெடை சேர்த்தரைத்துப் பிளவைகளுக்குப் பற்றிடலாம்.

கன்று காலிகளுக்குண்டாகும் ஈரல் வியாதிகளுக்கு, இதன் வேரை உள்ளுக்குக் கொடுப்பதுண்டு.

---

## 238. குறிஞ்சான்—Kurinchan.

வே - பெ : குரிந்தை.

Hoptage madabtte.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Malhave-tige<br>Vadla-yarala | Sans. | Mabdhavi<br>Atimukta |
| Mal. | Kurinja | Hind. | Huthee mookta<br>Kampti |

இஃது இந்தியாவின் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகிறது. இவ்வினத்தில் சிறுகுறிஞ்சான் பெருங்குறிஞ்சான் என இரு வகையுண்டு. இது கொடி வகுப்பைச் சேர்ந்தது. இவை இரண்டின் குணமும் ஒன்றேயாகும்.

---

## சிறுகுறிஞ்சான்—Chiru-kurinchan.

Gymnomasylvestris.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Poda-patra / Putla-podra | Meshasri Sans. | Sarpadarushtrik |
| | | Hind. | Chota-dudhilata |
| Mal. | Cheru kurinja | Duk. | Parpatrah. |

ப-உ : இலே, வேர்.

**சுவை—கைப்பு. தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.**

### கொடி.

**குணம்** : இஃது வளிசுரம், சந்நிசுரம் முதலிய சுரங்களேயும், முப்பிணியையும் போக்கும். அன்றியும், காணுக்கடி, நீர் வேட்கை, வாயிலுண்டாகும் சிறு புண்கள் (அக்கரம்) முதலியவற்றையும் நீக்கும்.

சிறுகுறிஞ்சான் வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிரம் இல்லாத மாதர்க்—குறுமுலகில்
அத்தி சுரமும் அகலாக் கடிவிடமும்
தத்தியக லத்தகர்க்குந் தான்.

வாதசுரஞ் சந்நிசுரம் மாருக் கபச்சுரமும்
பூதலம்விட் டோடப் புரியுங்காண்—மாதேகேள்
அக்கரங்கள் தீர்க்கும் அதிசுரந்தா கந்தொலேக்குந்
தக்க சிறுகுறிஞ்சாந் தான்.

(அ.கு.)

### வேர்.

இதனுல். நஞ்சுகள், வளி சுரம், இருமல், இரைப்பு இவை போம்.

சிறுகுறிஞ்சான் வேர்விடத்தைத் தீர்க்கும் அனிலத்
துறுசுரங்கள் வாதம் ஒழிக்குந்—தெறிபாணக்
கண்ணுய் ! இருமல்முதற் காசசுவக சந்தணிக்கும்
விண்ணு டருக்கிதனே விள்.

(அ.கு.)

### இலே.

**செய்கை**
- துவர்ப்பி-ஸ்ங்கோசனகாரி–Astringent.
- பசித்தீத்தூண்டி-ஜராக்னிவர்த்தநி–Stomachic.
- உரமாக்கி-பலகாரி-Tonic.
- குளிர்சியுண்டாக்கி–சீதளகாரி-—Refrigerant.

**வ-கு** : இலேயைக் குடிநீரிட்டு, சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலேயை நன்ருய் மென்றதன் பிறகு, நாவின் சுவை மங்கும். சருக்கரை போன்ற இனிப்புச் சுவைகளும், கைப்புச் சுவைகளும் தெரியா.

இலேயை விளக்கெண்ணெயில் வதக்கி நெறிக்கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம்.

**வேர்.**

| | |
|---|---|
| செய்கை | கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant. |
| | வாந்தியுண்டாக்கி-வமநகாரி--Emetic. |

வேரைப் பாம்புக் கடிக்கு, உள்ளுக்கும் மேலுக்கும் கையாள்வதுண்டு. இதன் தூளைப் புண்ணின் மீது தூவியும், அல்லது நீரில் குழைத்துப் பூசியும், வேரைக் குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுத்தும் பாம்பின் நஞ்சை மாற்றலாம்.

---

## 239. குன்மக்குடோரி—Kunmak-kudori.

இஃது ஆற்றோரங்களில் வளரும் செடி.

சுவை—கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

| | |
|---|---|
| செய்கை | கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant. |
| | அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative. |

குணம் : இதனால் சூலை, சுவாசம், இருமல், இளைப்பு நோய், குன்ம நோய் இவை நீங்கும்.

சூலையோ டீளை தொலையாக்கா சங்கயநோய்
காலனென்ற குன்மங் கலங்குங்காண்—ஞாலமிசை
நன்மைக் குரியகுண நல்குவமென் றுற்றிலுறுங்
குன்மக் குடோரிதனக் கு. (அ.கு.)

வ—கு : இதைக் குடிநீரிட்டுச் சாப்பிட்டு வர, மேற்கூறிய நோய்கள் நீங்கும். அல்லது பொடித்துச் சருக்கரையுடன் கலந்து இதை நாள் ஒன்றுக்குக் காலை மாலை இரு வேளையாக 1 முதல் 2 கிராம் வீதம் சாப்பிட்டும் வரலாம்.

---

## 240. குன்றி—Kuntri.

வே—பெ : குண்டுமணி, குன்றிமணி, குன்றிவித்து.

Eng : Jequirity.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Guri-ginja | Arab. | Aainuddabek * |
| | Guru-venda | Pers. | Chashme Khuros |
| | | Hind. | Gurj * |
| Mal. | Kunni-kuru | | |
| Kan. | Gul-ganji | Duk. | Gumchi |
| Sans : | Gunja | Cing. | Olinda-ata. |

இது கொடி வகுப்பைச் சேர்ந்தது ; இந்தியா முழுமையும் வளரும். இதில், வெண்மை, கருமை, செம்மை, மஞ்சள், நீலம் ஆகிய 5 விதங்களுண்டெனினும், முக்கியமாய் வெண்மை, கருமை, செம்மை ஆகிய இம் மூன்றுமே ஆட்சியில் உள்ளன. பூக்கள் வெண்மையாயிருப் பின் விதையும் வெண்மையாயிருக்கும். இதில் மலை வெண்குன்றி வேரையே அதிமதுரமெனச் சிலர் கூறுவர். ஆனால், அதிமதுரம் குன்றி, மணிச் செடியினின்றும் கிடைக்கக்கூடிய சரக்கன்று என்பது கீழ்வரும் குறிப்பினின்றும் கண்டு கொள்க.

In many works (Flora Andrica, Brownh's Telugu Dictionary ; Bailey's Malayalam Dictionary ; Garrets, Canarese Dictionary ; Reeve's " Carnatic Dictionary ; etc. ) . the names Yashtimadsuham and Ati madhuram are applied either to both the root of A. Precatorius and of Glycerrhiza glabra or to the former alone. This is incorrect as well as a source of confusion. The names belong only to the true liquorice root (G. glabra) and they cannot be correctly applied to the root of A precatorius unless the word Indian or Country is added to them as follows :—Nattu-yashti madhukam, Nattu-atimadhuram (Tel.) Nat-yoshti-madhukam. Nat-Atimaduram (Mal.) Nat-yashtimadhuka Nat-atimadhura (Can.).

I have repeatedly examined this root both in its fresh and dry conditions and found it to be far from " abounding insugar " as it is generally considered. It does not possess any sweetness at all until it attains a certain size or becomes pretty old, and even then it is not always distinctly perceptible to taste, nor the ' Sacch rine matter ' of any kind easily detectable by chem cal tests. Neverthelss, the root of ' A Precatorious ' is not only used in some bazars for adulteration with the root of ' G glabra ', but is also sold indiscriminately under the same names. It is quite possible, therefore, that these roots are sometimes confounded with each other, and this accounts for the misconception as to the amount of sugar in the root of A. Precatorius The following distinctions are sufficient to distinguish this root from the true Liquorice :—

| | *Glycorrhiza Glabra* | *Abrus Precatorius.* |
|---|---|---|
| 1. | Generally about the size of a large goose squill or of the little finger to the size of a large thumb. | Generally much smaller and seldom acquires the size of a finger. |
| 2. | Colour greyish or reddish brown externally, and yellow or slightly yellow internally. | Brown externally and white internally. |
| 3. | Taste sweet and mucilaginous. | Taste generally not distinctly sweet. |

The root of A. Precatorius however, still deserves the name of ' Indian or Country Liquorice ' because it yields an extract which is nearly similar in medic nal properties to the Extract of Glycerrhiza though somewhat bitterish in taste. I have succeeded in preparing an extract not only from the root, but also from the leaves of all varieties of A. Precatorius. The leaves being distinctly sweet, the extract they yield is much superior, both in taste and as a medicine.

Md. Sheriff Khan.

143284

ப-உ இலை: விதை,வேர்.

இலை.

| | |
|---|---|
| சுவை : | இனிப்பு. தன்மை—தட்பம்—பிரிவு—இனிப்பு. |
| | விதை. |
| | கைப்பு. தன்மை—வெப்பம்—பிரிவு—கார்ப்பு. |
| | வேர். |
| | சிறு கைப்பு, இனிப்பு, தன்மை—வெப்பம்—பிரிவு—கார்ப்பு. |

இலை.

மலமிளக்கி-லகுவ்ரேசநி-Laxative.
தாபமகற்றி-உக்ரரோகசமனகாரி-Antiphlogistic.
கோழையகற்றி-கபஹர்காரி-Expectorant.

விதை.

செய்கை : நீர்மலம் போக்கி-வ்ரேசனகாரி-Purgative.
உரமாக்கி-பலகாரி-Tonic.

வேர்.

வாந்தியுண்டாக்கி-வமநகாரி-Emetic.
கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.

LC N88.1

**குணம்:** சிவந்த குன்றிமணிப்பருப்பினால், கண்ணோய், அழல்நோய், மாறுநிறம், காமாலை, வியர்வையோடுங் கூடிய (வெப்பத்தைத் தருகின்ற) மூர்ச்சை சுரம், ஐயநோய் இவை நீங்கும். சுக்கிலம் பெருகும்.

நேத்திரநோய் பித்தம் நிறமழுங்கல் காமாலை
வேர்த்திடுதா பச்சோப வெப்புடனே—கோத்திட்ட
ஐயமுதல் யாவும்போம் ஆயிழையே ! காட்டிலுறை
செய்யகுன்றி யின்விதையைச் சேர். (அ.கு.)

இலை.

வ - கு : இலையை மென்று சாற்றை விழுங்குவதனால், குரற்கம்மல் நீங்கும்.

எண்ணெயுடன் இலைச்சாறு சேர்த்து, வலியுள்ள வீக்கங்களுக்குப் பூசி வர, வீக்கம் குறைந்து வலி நீங்கும்.

மார்புநோய், பக்கநோய் இவைகட்கு, அவ்விடங்களில் விளக்கெண்ணெய் தடவி அதன் மீது ஷ இலைகளை ஒட்டிவைக்க, ஒரு விதப் பரபரப்புண்டாகி நோயைத் தணிக்கும். அவை உள் நீரையும் இழுக்கும்.

இலைச்சாறு 2 பங்கு, கரிசலாங்கண்ணிச்சாறு 4 பங்கு, எண்ணெய் 4 பங்கு சேர்த்துக் காய்ச்சித் தலைமுழுகி வர, தலைக்குக் குளிர்ச்சி தரும்.

விதை - அளவு—பொடித்தூள் 16 மி. கி. முதல் 32 மி. கி. குன்றி.

இது நன்ருகக் கழியச் செய்யும். அதிக அளவில் நஞ்சாம்.

விதையைத் தனியாகவோ, மற்ற மருந்துகளுடனோ சேர்த்தரைத்து, அடிப்பட்ட வீக்கம், வலி, கீல்வாயு, பக்கவலி, முடியுதிரல் முதலியவைகளுக்கும், விதைத்தூளைக் கண் நோய்க்கும் வழங்குவதுண்டு.

வேர்.

பச்சைக்குன்றிமணி வேர், வெண்டைக்காய் இவற்றை வகைக்கு 34 கிராம் எடுத்து நன்ருய் நசுக்கி, 700 மி.லி. கொதிக்கிற வெந்நீரிலிட்டு, மூடி வைத்து, அரை மணி நேரம் கழித்து வடிகட்டி, சருக்கரை, கற்கண்டு அல்லது தேன் இம்மூன்றில் ஏதேனும் ஒன்றை 272 கிராம் கூட்டிச் சிறு

தீயிட்டு எரித்து, தேன் பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு, குழந்தைகளின் இருமலுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் 2 மணிக்கொருதரம் கொடுக்கப் போம். பெரியவர்களுக்குண்டாகும் சுரத்தோடுங்கூடிய இருமலுக்கு, இதில் 16 மி. லி. முதல் 35 மி.லி. வீதம், 4 மணிக்கொருமுறை கொடுத்தல் நன்று.

**வெண்குன்றி.**

வெண்குன்றி வேரினை வெண்மறி யமுரியிற்
பண்புற வுலர்த்தியப் பண்டமா சுணக்கடி
விடத்தினுக் களித்திட விடமறு தத்தேள்
விடத்தினுக் குந்தரும் விடாரிய தான் பெயர். (தே.கா.)

(**போ - ள்.**) வெள்ளைக் குண்டுமணிவேரை, வெள்ளாட்டு மூத்திரத்தில் ஊறவைத்து உலர்த்தி, பாம்பு, தேள் முதலியவற்றின் நஞ்சுக்குக் கொடுக்க, அஃது உடனே நீங்கும். இதற்கு விடதாரி என்பது பெயர்.

---

## 241. கூத்தங்குதம்பை—Kuth-than-kuthambai.

**ப - உ :** இலை.

**சுவை** கார்ப்பு—**தன்மை**—வெப்பம்—**பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :** வெப்பமுண்டாக்கி – உஷ்ணகாரி–**Stimulant.**

**குணம்:** இலையினல் சூலை நோய், சன்னி, வளிநோய் ஆகிய இவைகள் நீங்கும். இஃது அழல் குற்றத்தைப் பெருக்கும்; **மண்டூரத்தைச் சிந்தூரமாக்கும்.**

குத்துகின்ற நோய்போக்குங் கோரபித்தம் உண்டாக்கும்
அக்கிசெய்யுஞ் சந்நி யகற்றுங்காண்—சத்திக்கு
மாத்தங்கு வாய்வொழிக்கும் மண்டூரத் திற்குதவுங்
கூத்தங் குதம்பைக் குழை. (அ.கு.)

**வ - கு :** இதன் முழு பாகத்தையும் நிழலிலுலர்த்திப் பொடி செய்து, காலை மாலை 1 முதல் 2 கிராம் வீதம் உட்கொள்ள, மேற்கண்ட பிணிகள் தீரும். குடி நீரிட்டுங் கொடுக்கலாம்.

---

## 242. கூந்தற்பனை—Kunthar panai.

**வே-பெ :** **தாளிப்பனை, கொண்டைப்பனை, மலைப்பனை.**

**Caryota urens.**

**Eng : Sago palm.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Kondaa-jilugu | **Hind.** | Mari. * |
| **Mal.** | Chuntap-pana<br>Inam-pana * | **Duk.** | Salopa *<br>Marika–jhad * |
| **Kan.** | Beina | | |

இது பனைவருக்கத்தைச் சார்ந்தது ; இந்தியாவின் வடபாகத்திலும், அஸ்ஸாமிலும் ஏராளமாயுண்டு ; தென் இந்தியாவின் மலை நாடுகளிலும் வளருகின்றது.

ப - உ : விதை, கள்.

**சுவை** : இனிப்பு—**தன்மை**—சீதம்—**பிரிவு**— இனிப்பு.

**செய்கை** :
- உடலுரமாக்கி-போஷணகாரி-**Nutrient.**
- இன்பம் பெருக்கி-காமவர்த்தநி-**Aphrodisiac,**
- மலமிளக்கி-லகுவ்ரேசநி-**Laxative.**

**குணம்** : இதன் ஓலை எழுதுவதற்கும், சோறு மலத்தைக் கட்டுவதற்கும், பாளை மாமிசத்தை வளர்த்தற்கும் பயன்படும்.

எழுத்திற் கிடமா யிருக்குநெடுங் காலம்
வழுத்திலதன் மாழை மடலாற்—**கழுத்திலுறுஞ்**
சோறு மலமிறுக்குந் தூறுபா ளைப்பிழியா
மூறும்விடக் கிந்தாளிக் கோர். (அ.கு.)

**வ - கு** : இதன் ஓலை நீளமாயும் கெட்டியாயுமிருக்கும் ; குடைகள் செய்வதற்கும், எழுத்தாணியினுல் எழுதுவதற்கும் உதவும்.

இதன் குருத்துத் துவர்ப்பாயிருக்கும் ; மலத்தைக் கட்டும்.

இதன் பாளையிலிருந்து கள் இறக்குவதுண்டு. இக்கள்ளைக் காலையில் சாப்பிட உடற்கு ஊட்டம் தரும். மிகு அளவில் கழியச் செய்யும். இதன் வெல்லம் சிறுநீர் எரிச்சலைப் போக்கும். மரத்தின் நடுவிலிருக்கும் சோறு மிகவும் இனிப்புடையது. இதை உலர்த்தி மா எடுப்பதுண்டு.

விதையை உரைத்து நெற்றியில் பூச, ஒற்றைத் தலைவலி நீங்கும்.

விதையைத் தண்ணீர் விட்டு அரைத்து, தேள், நட்டுவாக்காலி முதலிய கடிகளுக்குப் பூசலாம்.

கள்ளிலிருந்து ஒரு வகைச் சாராயம் எடுக்கப்படுகிறது.

## 243. கூவைக்கிழங்கு—Kuvaik kizangu.

**வே-பெ : அரரூட்கிழங்கு, கூவாமாக்கிழங்கு, கூகைக்கிழங்கு.**

Curcuma angustifolia.

Eng : East Indian Arrow root.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ararut-gaddalu | Kan. | Koove-Gedde. |
| Mal. | Kuva<br>Kuva-kizhanna | Hind. | Tikhar. * |
| | | Duk. | Vilayati-ate-ké-gaddé. |

இது சற்றேறக்குறைய மஞ்சட் செடிபோலிருக்கும் ; இந்தியாவில் பல பாகங்களிற் பயிராகின்றதெனினும், முக்கியமாய் மலையாளம், தென் கன்னடம் முதலிய இடங்களில் ஏராளமாய்க் கிடைக்கும். மழைக்காலங்களில், மலைச்சாரல்களிலும், அதைச் சார்ந்த வெளிகளிலும் தானுய்ப் பயிராகின்றது.

நன்ருய் முதிர்ந்த கிழங்கை முறித்துப் பார்த்தால், அதில் மூன்று வட்டங்கள் காணப்படும். நடுமையத்தில் நீல நிறமாயும், அதற்

கடுத்தாற்போல் மங்கலான நீல நிறமாகவும், விளிம்பில் வெண்மையாக வும் இருக்கும். நீல நிறமான வட்டத்திலுள்ளதே முற்றியது. வெண்மை யாகவுள்ளது பிஞ்சு.

ப - உ : கிழங்கு - இதிலிருந்து மா எடுக்கிறார்கள்.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை**
குளிர்ச்சியுண்டாக்கி–சீதளகாரி **Refrigerent**
உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி–**Demwcent**
உடலுரமாக்கி–போஷணகாரி–**Nutrient**

**குணம்** ; இதனால், இருமல், சுரம், நீர்வேட்கை நீங்கும்-உடற்கு ஊட்டந் தரும்.

மேனியிடும் வாய்க்கு மிருதுவாம் ஆக்கியுண்ணத்
தானிருமல் வெப்பதிக தாகமிவை - ஏனிருக்கும்
அம்பே றிளங்கிழங்கி தியாவர்க்கு மாமணப்பூங்
கொம்பே ! கூ கைக்கிழங்கைக் கூறு. (அ.கு.)

**மா எடுக்கும்விதம்.**

**வ - கு** : நன்றாய் முதிர்ந்த கிழங்குகளைத் தண்ணீரிற் கழுவி, தோலைச் சீவி அரைத்து மாவாக்கியபின், ஒரு வாயகன்ற சட்டியில் நிறைய நீர் விட்டு, வாய்க்கு மெல்லிய துணிகட்டி, அத்துணியைத் தண்ணீர் மட்டத் துக்குக் கீழ் விட்டு, அத்துணியின்மேல் அம்மாவைக் கொட்டி, கையால் கரைத்துக் கொண்டேயிருந்தால், மா, சட்டி அடிக்குச் சென்றுவிடும். சட்டியில் துணியை நீக்கிவிட்டு, சட்டியில் படிந்திருக்கும் மாவை நன்றாய்க் கலக்கித் தெளிய வைத்துத் தெளிவை இறுத்தபின், மீண்டும் நீர்விட்டுக கலக்கித் தெளிவை இறுத்தல் வேண்டும். இவ்வாறு மூன்று முறை செய்து தெளிவிறுத்து வடிகட்டி, அடியிற் படிந்திருக்கும் மாவை வெயிலில் உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இம்மா மிகமெல்லியதும், எளிதில் செரிக்கக் கூடியது மாதலால், இதைக் கஞ்சிசெய்து நோயாளிகளுக்குக் கொடுக்கலாம். இது குழந்தை களுக்கும் கொடுக்க உதவும்.

**கஞ்சி** : மா 1 பங்கு, நீர் 30 பங்கு சேர்த்துக் கலக்கிக் கொதிக்க வைத்துக் கிளறிக்கொண்டேயிருந்து, பதத்தில் எடுத்து இக்கஞ்சியைச் சீத பேதியுடையவர்க்கும், சிறு நீர் நோயுற்றவர்களுக்கும் கொடுக்கலாம்.

**குறிப்பு** : மலையாளம் திருவிதாங்கூர் முதலிய இடங்களில் இம்மாவை ஏராளமாகச் செய்து, பிறதேசங்களுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்.

## 244. கேழ்வரகு—Kezhvaragu.

**வே–பெ : இராகி, கேவுரு, கேப்பை (பஞ்சந்தாங்கி,**

**Eleusine Coracana.**

**Eng. Ragi.**

**Tel.** Ragulu
**Mal.** Ragi
**Kan.** Ragi

**Sans.** { Soma, Rajika }
**Hind** { Mandua, Makra—(wild) }

இது, தானியவகையைச் சேர்ந்தது ; இந்தியாவின் எல்லா இடங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது.

ப-உ : விதை.

சுவை—இனிப்பு. தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசணகாரி—Astringent.
உடலுரமாக்கி—போஷணகாரி Nutrient. }

குணம் : இது, வாதத்தை அல்லது பித்தவாதத்தை உண்டுபண்ணும்.

சுத்த அனி லந்தன்னைத் தோற்றுவிக்கும் அல்லவெனில்
பித்தவனி லத்தைப் பிறப்பிக்குஞ்—சித்ரமலர்த்
தாழ்குழலே நீடுபஞ்சந் தாங்கியெனச் சொல்லுகின்ற
கேழ்வரகின் செய்தியிது கேள். (அ.கு.)

கேழ்வரகு.

கேழ்வர காக்கையைக் கிட்டியோம் பிடினும்
தாழ்வுறு பயித்தியச் சல்லிய மாகுமே.

(பொ—ன்) கேழ்வரகு கூழ் முதலியன உடம்பைத் தளர்ச்சியின்றிக் காப்பாற்றினும், அழல் நோயை உண்டாக்கும்.

கூழ்-களி.

கேழ்வரகின் கூழால், வாதப்பிரகோபமும் பித்தக்கிளர்ச்சியும் தணியும். பெருவயிறு குணமாகும்.

களியால் வாதம் அதிகரிக்கும். பலம் உண்டாகும்.

கேழ்வரகின் கூழாற் கிளர்வாத பித்தமொடு
வீழ்வயிறுஞ் சாந்தமென விள்ளுவர்காண்—காழாங்
களிக்குப் பலமுண்டாங் காணிலதி வாதந்
தளிர்க்கு மூலகிவிதைச் சாற்று.

வ-கு : இஃது எளிதில் செரிக்காது. ஆனால், உடலுக்கு மிகுந்த வலுவைக் கொடுக்கக்கூடியது. உழைப்பாளிகளுக்கு மிகவும் ஏற்றது.

இதன் தோல் கழிச்சலை உண்டாக்குமாதலின், இதனை நீர் தெளித்து ஊறவைத்து இடித்து, தோலைப் போக்கிப் பலவகை உணவாக்கிக் கொள்வது நன்று.

மாவை, தோசை, களி, அடை, கஞ்சி இவைகள் செய்து உண்ண நீரிழிவு குணப்படும்.

இம்மாவுடன், சிறிது சருக்கரை, பால் சேர்த்துக் கூழ் காய்ச்சி அல்லது களி கிளறிக் குழந்தைகளுக்கும், நோயுற்றோர்க்கும் கொடுக்க, உடல் நலமும் வலிவும் உண்டாகும். ஆனால் மலத்தைக் கட்டும்.

மாவைக் களி கிளறிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டினால் கட்டி சீக்கிரம் பழுக்கும்.

---

## 245. கொஞ்சி—Konchi

**வே-பெ : காட்டுக்கொஞ்சி**

**Glycomis pentaphylla**

இஃது இந்தியா, இலங்கை முதலிய இடங்களில் பயிராகும் சிறுமரம்.

ப.உ. : பட்டை.

சுவை : துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை: { துவர்ப்பி-ஸங்கோசனகாரி— Astringent
வெப்பமகற்றி-சுரஹரகாரி—Febrifuge }

குணம் : இதனால், பாலர் மாந்தம், வயிற்றுப்பொருமல், கணச்சூடு, ஆவிருதவாதரோகம் இவைகள் போகும்.

மாந்த மகற்றும் வயிற்றுப்பி சந்தவிர்க்கு
மாந்த கணச்சுரத்தை மாற்றிவிடும்—சேர்ந்த சிறு
வாதநோ யோட்டும் வனக்கொஞ்சுப் பட்டையது
மாதரசே , நீயுமுணர் வாய். (அ.கு.)

வ-கு : பட்டையைக் குடிநீரிட்டு 35 மி.லி. வீதம் காலை மாலை உட்கொள்ள மேற்படி நோய்கள் தீரும்.

---

## 246. கடற்கொஞ்சி—Kadar-Konchi

**Muraya exotica**

**Eng : Honey bush : Cosmetic box, China box.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Naga Golanga** | **Sans.** | **Ekangi** |
| **Mal.** | **Kattu-konchi** | **Hind.** | **Bibzar koonti** |

இது வங்காளம், தென் இந்தியா, இலங்கை முதலிய இடங்களிலும், இமயமலைச்சாரலிலும் பயிராகும் ஒருவகைக் குத்துச்செடி.

ப.உ : இலை, பூ, பட்டை.

சுவை—கைப்பு, துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : { பசித்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
உரமாக்கி—பலகாரி—Tonic.
மணமூட்டி—Aromatic. }

குணம் : இதனால், இருமல், நீர்வேட்கை உடலெரிச்சல், மயக்கம், கீல்வாதம், சுரம் போம்.

வ–கு : இலையை அல்லது பூவை ஒரு பங்குக்குப் பத்து பங்கு நீர் விட்டு அரை மணி நேரம் ஊறவைத்து எடுத்து, அதில் 15 மி.லி. முதல் 30 மி.லி. வரையிலும் கொடுத்துவர, மேற்கூறிய நோய்கள் போம்.

---

## 247. கொடிக்காக்கட்டான் விதை—Kodikkakkattan vitai

வே–பெ. : ஜிரிகி விரை, கொடிக்காக்கட்டான் விரை.

Ipomoea Hederacea.

Pharbitis Nil.

Eng. Pharbitis seeds ; Kaladana seeds.

Tel. { Jiriki-vittulu / Kolli-vittulu

Kan. Gouribija

Arab. Habbun-nil

Pers. Tukhma-nil.

Hind. Kala-danah

Duk. Kali-zirke-ke-binj.

இஃது இந்தியாவில் பல இடங்களில் பயிராகிற ஒரு கொடியின் விதை. இதில் வெண்மை, நீலம், சிவப்புப் பூக்களுடைய இனங்களுண்டு.

ப–உ : உலர்ந்த விதை.

சுவை—சிறுகைப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—காரம்.

செய்கை : { பெருங்கழிச்சலுண்டாக்கி—ஜலவ்ரேசநி—Cathartic. / புழுவகற்றி—க்ருமிநாசநி— Anthermintic.

குணம் : இது நாட்பட்ட மலம், வயிற்றுவலி இவைகளைப் போக்கும்

வ–கு : விதையை உலர்த்திப் பொடித்து 2 முதல் 4 கிராம் தனி தாயினும், வேறு மருந்துகளுடன் சேர்த்தாயினும் சாப்பிட, நீர் நீராகக் கழிச்சலை உண்டாக்கும்.

கொடிக்காக்கட்டான் விரைத்தூள் 70 கிராம், இந்துப்பு 70 கிராம், அரத் தைப்பொடி 17 கிராம் கலந்து 2 கிராம் முதல் 4 கிராம் வரை கொடுக்க, கழியச் செய்யும்.

குறிப்பு.—சிறுவர்களுக்குக் குறைந்த அளவில் கொடுக்கவும்.

NOTE.—See the remarks, under Clitorea Ternatia with reference to the Dukni name Zirhi and Tamil name Kakkanam or Kakkattan.

---

## 248. கொடிவேலி—Kodiveli

வே–பெ : அணிஞ்சில், அதிகநாரி, அதிபதுங்கி, அழல், உதாசனன், எரி, எழுநா, ஒலி, கருநாகம், கனலி, காரிமை, கொடுவேலி, கானில்ந் திரன், கானிலம், கொடிச்சி, சித்திரமூலி, சித்திரமூலம், சித்திரம், ஞெகிழி, தழல், திக்கு, திசைநா, வஞ்சதாரம், வன்னி, அக்னி, அதிசனசி உதகவன், சதாவேதா, சித்திரகம், தபனன், திகனு, வசகம், வன.மா, வன்னிபரியம், சித்ரகம், கொடிவன்னி, வலிவன்னி, திவிபிநாமம்.

## 249. கொடிவேலியில் மூன்று சாதிகளுண்டு.

1. கருங்கொடிவேலி
2. செங்கொடிவேலி
3. வெண்கொடிவேலி

குறிப்பு: இம்மூன்றின் குணமும் பெரும்பாலும் ஒன்றேயாகும்.

**பொதுக் குணம் :** இதனால், கட்டி, புண், கழலை, வளிநோய், அரை யாப்புக்கட்டி, குத்தல், சோபை, மூலரோகம், உதிரக்கட்டு, நீரேற்றம், பெரு வயிறு இவைபோம்.

கட்டிவிர ணங்கிரந்தி கால்கள் அரையாப்புக்
கட்டிச்சூ லைவீக்கங் காழ்மூலம்—முட்டிரத்தக்
கட்டுநீ ரேற்றங் கனத்த பெருவயிறும்
அட்டுங் கொடிவேலி யாம்.

இன்னும் இதனால், சூலைக்கட்டு, குறிப்புண், கிரந்தி, மேகப்புண் நெறிசுரம், நச்சுச்சுரம் முதலியவையுந் தீரும்.

(அ.கு.)

கட்டியே சூலைக்கட்டு கருதிடு குறிப்புண் கிரந்தி
ஒட்டுமே கரணத்தோடு முறுமரை யாப்பு மன்றி
விட்டிடா நெறிச்சு ரம்பின் வியன்விட மச்சு ரந்தான்
பொட்டெனப் பறந்து போகும் புகழ்கொடி வேலி கண்டால். (ஏடு)

---

### கருங்கொடிவேலி—Karunkodiveli

**வே-பெ :** கருங்கொடிவேர், கறுப்புச் சித்திர மூலம்.

**Plumbago Capensis.**

**Eng : Black coloured lead-wort.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nalla-chitra-mulam | Sans. | Krishna-chidraka<br>Nila-shikha |
| Mal. | Karutha kotiveli | Hind. | Kala-chitra |
| Kan. | Nila-chitramula | Duk. | Vdah-chitarmul<br>Sheetharaj<br>Vdah-chitramulam |

இது செடிவகையைச் சார்ந்தது; வீட்டுத் தோட்டங்களிலும், தென் இந்தியா முதலிய இடங்களிலும் கிடைக்கும்.

**ப-உ :** வேர்.

**சுவை :** கார்ப்பு, தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

**செய்கை :** உரமாக்கி—பலகாரி—Tonic.
பசித்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.

# செங்கொடிவேலி—Chekodiveli.

வே-பெ : சிவப்புச் சித்திரமூலம், கொடிமூலி, செங்கொடிமூலி.

Plumbago Rosea.

Eng. : Rose coloured lead-wort.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Erra-chltra-mulam | Arab. | Shitaraje-ahmar |
| Mal. | Chuvanna-kotuveli<br>Chenti-kotuveli | Pers. | Shitaraje-surkh |
| Kan. | Kempu-chitramula | Hind. | Lal.-chita<br>Lal-chitarmul |
| Sans. | Rakta-chitraka<br>Rakta-shikha | Duk. | Lal-chitarmul |

இஃது இந்தியா முழுவதும் கிடைக்குமெனினும், பெரும்பாலும் மேற்குத் தொடர்ச்சி மலைச்சார்பை அடுத்த இடங்களிலேயே கிடைக்கும். சிறசில தோட்டங்களில் இதை அழகுக்காக வைத்துப் பயிராக்குவதுமுண்டு.

ப-உ : வேர்.

சுவை—கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

உட்செய்கை : வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.

புறச்செய்கை : புண்ணாக்கி—வ்ரணகாரி—Caustic.
கொப்புளமெழுப்பி—துவக்ஸ்போடகாரி—Vesicant.

குணம் : இதன் குணம் கருங்கொடிவேலிக்குடையதே. ஆனால் சிறுநீர்க் கொதிப்புண்டாகாது.

இது, கபம், வீக்கம், கிரகணி, வாதம், வயிற்றுப்புழு, பாண்டு முதலிய வற்றையும், சூலை, வாய்வு, சுகசன்னி, மந்தசுரம், தலைநோய் ஆகியவைகளை யும் கண்டிக்கும்.

செஞ்சித்ரமூலம் செம்பைப் பற்பமாக்கும்.

சூலையும் வாய்வுஞ் சுகசன்னி மாந்தசுரஞ்
சீலசர நோய்வாதந் தீருங்காண்—கோலமயிற்
பேடனைய மாதே ! பிறங்குசெஞ்சித் ரம்மூலம்
சேடுசெம்பைத் துய்யபற்பஞ் செய்.

(அ.கு.)

## வெண்கொடிவேலி—Venkodiveli

**வே-பெ : வெண்சித்திரமூலம், வெண்கொடிமூலம்.**

**Plumbago Zeylanica.**

**Eng.—Ceylon lead-wort.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella-chitra-mulam, Agnimata | Sans. | Angi-shika, Chitraka-vrikshaha |
| Mal. | Tumpa-koduveli | Arab. | Shitaraj |
| Kan. | Chitra-mula | Pers. | Shitarak |
| | | Hind. | Chita, Chitra |

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது.

பெரும்பாலும் இது வேலிகளிலும் புதர்களிலும் பயிராகும்.

**சுவை :** கார்ப்பு, விறுவிறுப்பு, **தன்மை**–வெப்பம், **பிரிவு**–கார்ப்பு.

**செய்கை :** முறைவெப்பகற்றி–முறைவ்யாதிரோதி—Anti-periodic.
வியர்வையுண்டாக்கி–ஸ்வேதகாரி—Diaphoretic.

இதன் வேரின் பட்டையினின்றும் செய்யப்படும் குடிநீர் முதலியவை கட்கும் மேற்படி செய்கைகளுண்டு.

**குணம் :** கருங்கொடிவேலிக்குள்ள குணமே இதற்குமுண்டு.

**அளவு :** கால் முதல் அரை வராகனெடை.
அளவுக்கு மிஞ்சினால் விடமிக்கும்.

**வ-கு : (1) கொடிவேலிப்பொடி.**

கொடிவேலி வேர், புங்கன் வேர், ஆயில்பட்டை இவைகளின் பொடி வகைக்குப் பலம் ஒன்று, கடுக்காய், திப்பிலி, கடுகு, கருஞ்சீரகம் இவை களைச் சிறுவறுப்பாக வறுத்துப் பொடித்தது தனித்தனி வகைக்கு 6 கிராம் இவை யாவற்றையும் ஒன்றாகக் கலந்து வேளை ஒன்றுக்கு மூன்று விரல் அளவு நாற்பது நாட்கள் கொள்ள, கிரகணி, உதரவாயு, மூலவாயு, வாதவாயு, பட்சவாதம் முதலியன தீரும். அல்லது—

(2) கொடிவேலி கிராம் 36 சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம் சிறுதேக்கு, யானைத்திப்பிலி, கோஷ்டம், கடுகுப்பொடி இவை வகைக்கு கிராம் 1 ; பெருங்காயம், வசம்பு இவை இரண்டும் வகைக்கு கிராம் 18 இவைகளை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துச் சீனி சமன் கூட்டிக் கொள்ளவும். இதனால் மேற்கூறிய நோய்கள் போம்.

**அளவு :** ஒரு சிட்டிகை வெந்நீருடன் கொள்ளவும்.

(3) சித்திரமூலவேர்ப்பட்டை, மிளகரணை வேர்ப்பட்டை, நொச்சிவேர்ப் பட்டை இவை ஒவ்வொன்றையும் வகைக்கு 160 கிராம் எடுத்துப் பொடித்து, வெருகடி அளவு குளிர்ந்த நீரில் கொள்ள, சகல வாதமும் போம்.

**(4) கொடிவேலி வேர்ப்பட்டை, எருக்கன் வேர்ப்பட்டை, சங்கன் வேர்ப்பட்டை,** குங்கும்ப்பூ இவற்றை ஓரெடையாக எடுத்துப் பொடித்து வெருகடியளவு மூன்று நாள் காலை மாலை இரு வேளையும் சாப்பிட்டு, நான்காம் நாள் தலை முழுகி, தயிருஞ்சாதமும் சாப்பிட வலிப்புத் தீரும்.

**பத்தியம் :** உப்பு ஆகா.

(4) (அ) சித்திரமூலவேர்ப்பட்டை, அதிமதுரம், அதிவிடயம், இந்துப்பு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கருவேலன்பட்டை, கோட்டம், சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்விமுள்ளி இவைகளின் பொடி வகைக்கு 3 ரூபாயெடை எடுத்து, ஒன்றுய்க் கலந்து வைத்துக்கொண்டு, வேளைக்கு 1 முதல் 2 கிராம் வீதம், காலை மாலை இரு வேளையும் கொடுத்து வர, மஞ்சட்காமாலை, செரியாமை, செரியாக் கழிச்சல் முதலியவை நீங்கும்.

**(5) கொடிவேலி எண்ணெய் :** சித்திரமூலவேரைப் பச்சையாக எடுத்துப் பஞ்சுபோல நசுக்கி, எலுமிச்சங்காயளவு ஒருசேர் நல்லெண்ணெயில் போட்டு அடுப்பேற்றி, ஒரு கொதி வந்தவுடன் இறக்கி வடித்துக்கொள்ளவும். இத்தைலத்தை இரண்டு அல்லது மூன்று நாள் தலையில் வைத்துத் தலை முழுகிவர, நீர்ப்பீநசம், தும்மல், தீராத்தலைவலி இவைகள் தீரும். வாத நோய்களும் போம்.

(6) 250 மி.லி.நல்லெண்ணெயில், கொடிவேலி வேர்ப்பட்டை கிராம் 20 கருப்புக்கட்டி கிராம் 10 அரைத்துக் கூட்டி, மெழுகு பதத்தில் காய்ச்சிக் கடுகுடன் வேளை ஒன்றுக்கு ஒரு தேக்கரண்டி வீதம், கடும்பத்தியமாக மூன்று நாள் 6 வேளை சாப்பிட்டு, நான்காம் நாள் விட்டு, ஐந்தாம் நாள் தலைக்கு நீர் வார்த்து உப்பை வறுத்துக் கூட்ட அரையாப்பு நீங்கும்.

**(7) கொடிவேலித் தைலம்:** கொடிவேலி வேர் கிராம் 35 எடுத்து நான்கு படி நீர் விட்டு அரைப்படியாகக் குறுக்கி, அதில், பால் விட்டரைத்த கருஞ்சீரகம், தாளிசபத்திரி, தான்றிக்காய் வகைக்குப் கிராம் 35 நல் லெண்ணெய் படி அரை, பசுவின் வெண்ணெய் புன்னைக்காயளவு இவைகளைச் சேர்த்துப் பதமாகக் காய்ச்சி வடித்துதெடுத்துத் தலை மூழ்கிவர, ஆனந்தவாயு, சொறி, சிரங்கு, தினவு, குட்டம், அரையாப்பு, கிரந்தி, சூலை, புண்புரைகள், பிளவை, வீக்கம் இவைகள் தீரும்.

இத்தைலத்தை, கீல்வாதம், பட்சவாதம் இவைகட்குப் பூசக் குணமாகும்.

**(8) சித்திர மூலக்குளிகை :** சித்திரமூலம் ஒரு கழஞ்சு, பூரம் ஒரு கழஞ்சு, ஓமம் ஒரு கழஞ்சு. இம்மூன்றின் எடையுள்ள பனைவெல்லம் சேர்த்து, இரண்டு சாமம் அரைத்தெடுத்து, மிளகளவு உருண்டை செய்து, பத்து நாள் சாப்பிட்டுப் பத்தியம் இருந்துவர, விரணம், இரணக்கிரந்தி, யோனிப்புற்று, சூலை, கள்ளிப்பூக்கிரந்தி, லிங்கப்புற்று, பவுத்திரம், கன்னப்பிளவை, பக்கப்பிளவை, மார்சிலந்தி, விப்புருதி, மேகரணம், எட்டுவிதக்குன்மம் இவைகள் போம்.

சித்திரஞ்சேர் மூலமதே சீராக் கழஞ்சியொன்று
சுத்திரஞ்சேர் பூரமது வுங்கழஞ்சு—சத்தியங்கேள்
ஓம மொருகழஞ்சி யோதுபனை வெல்லமொடு
சாமமிரண்டு தானரப்பாய் தான்.

அரைத்து மிளகளவு அன்பான வுண்டைசெய்து
தரையிலொரு பத்துதினந் தானருந்த—நிரைகுழலே!
எதுக் கலைகிருய் புண்கிரந்தி புண்களோடு
மாதர்யோனிப் புற்றுமாறு மசம்.

மாறுமே சூலையெல்லாம் வரக்கள்ளி பூக்கிரந்தி
தீருமே லிங்கபுற்று பவுத்திரநீர்—சீறிடுங்
கன்னப் பிளவைபக்கம் காணும் படுப்பிளவை
என்னசொல்வேன் மார்சிலந்தி யோடும்.

ஓடுமே விப்புருதி ஓடுகின்ற குன்மமெட்டும்
நாடுதனில் மேகரணம் நாடாது—மாடுகளே
காடுதனில் மூலிகையைக் காணும லேனலைவீர்
வீட்டிலிருந் திம்முறைசெய் மின்.

(9) **கொடிவேலிக் குடிநீர்** : கொடிவேலி வேர்ப்பட்டை, பறங்கிட பட்டை, பிரப்பங்கிழங்கு, மிளகு இவை வகைக்கு மூன்று வராகனெடை எடுத்து இடித்து, 5,600 மி.லி. நீரிற்கலந்து 700 மி.லி. குறுக்கி, நாள் ஒன்றுக்கு மூன்றுதரம் 130 மி.லி. வீதம் சாப்பிட்டுவர, வாயுவினு லுண்டாகும் உடம்புக்குத்தல் போம்.

(10) **கொடிவேலிப்பற்று** : கொடிவேலிவேரை நல்லெண்ணெய், விட்டரைத்துப் பற்றுபோட, கருணைமூலம், அரையாப்பு, கண்டமாலை இவை கரையும்.

செங்கொடிவேலிப் பச்சைவேர்ப்பட்டையை நீர் விட்டரைத்து, பச்சரிசிமா சேர்த்து நன்றுய்க் கலந்து, சீலையிற்றடவி, அரை மணிநேரம் கொப்புளிக்கச் செய்யவேண்டிய இடத்தில் போட்டெடுக்க, 12 முதல் 18 மணி நேரத்துக் குள நான்கு புறமும் பரவிய கொப்புளமுண்டாகும். அக்கொப்புளங்களி லுள்ள நீரைப் போக்கித் தளிர் வாழையிலையை வைத்துக்கட்டிப் புண்ணை ஆற்றுவது வழக்கம்.

(11) கருப்பையை அகலமாக்குஞ் செய்கையை உண்டாக்க இதன் வேரை அவ்விடம் செலுத்தக்கருவை வெளிப்படுத்தும் வேர்ப்பட்டையை அரைத்து, ஒரு வராகனெடை அளவாக உட்கொள்வதும் உண்டு.

(12) இதன் வேர் உலர்ந்தால் வன்மை குறையும். இதை அரைத்து மேகப்படை, குட்டம் இவைகளுக்கு மேற்பூச்சாக வழங்கலாம்.

(13) கொடிவேலி வேரைப் பாக்களவு அரைத்து, பசுவின் பாலில் (கறந்த ஆவி மாறுமுன்) கரைத்துக் குடிக்க, பாஷாணத்தின் வீறு தணியும்.

## 249. கொட்டிக்கிழங்கு—Kottikkizhangu

**Aponogeton Mono-stachyon.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Melluni Padmam** | **Sans.** | **Makhavuna** |
| **Mal.** | **Kottik-kizhanna** | | **Padma** |

**குறிப்பு.**—இது நீரில் வளரும் பூண்டு. இதில் கருங்கொட்டி, காற்றுக்கொட்டி, கொட்டி என இம் மூன்று வகைகளுள் கொட்டி காற்றகொட்டி இவ்விரண்டின் கிழங்குகளை ஏழை மக்கள் உணவாக அருந்துவார்கள். கருங்கொட்டி உணவிற்கு ஏற்றதன்று. இதற்குப் பேய்க்கொட்டி என வேறு பெயரு முண்டு. இம்மூன்று வகைக் கொட்டிகளையும், அதனதன் பூவையும் இலையையும் கொண்டு பகுத்தறி யலாம். இவ்வகைகளே அல்லாமல் கொட்டி என்னும் பெயரைக்கொண்ட வேறொரு செடியுமுளது. அதற்குத் தண்டுகொட்டி என்பது பெயர் (Arumtrio—batum).

ப - உ : கிழங்கு.

சுவை - இனிப்பு - தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை: { குளிர்ச்சியுண்டாக்கி - சீதளக்காரி-Refrigerant
உரமாக்கி - பலகாரி -Tonic }

குணம் : இதனால் தேமல், வெள்ளை, உடல் கடுப்பு, உட்சூடு ஆகிய இவை போம்.

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடல்
ஒட்டிநின்ற மேகம் ஒழிக்குங்காண்—வட்டமுலை
மானே ! அகக்கடுப்பும் வந்தவழ லுந்தணிக்கும்
தானே யிதையறிந்து சாற்று. (அ.கு.)

வ - கு : இதை உலர்த்திப் பொடி செய்து, வெள்ளை அழல் முதலிய மேற்கூறிய நோய்களுக்கு, ஒன்று முதல் எட்டு கிராம் எடை கொடுக்கத் தீரும்.

இதைப் பொடித்து மாவாக்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிக்கலாம்.
இது செம்பைச் சுத்தி செய்யும்.

---

## கொத்தவரை—Kothavarai

வே - பெ : சீனியவரை.

Dolichos fabaeformis.

ப: உ : காய்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி -Diuretic

குணம் : இதனால், பயித்தியம், கபம், வாதக்கடுப்பு இவைகள் உண்டாகும். பித்தத்தால் நளிரை அகற்றும், மருந்தை முறிக்கும்.

கொத்தவரைக் காய்பித்தங் கூடாது பத்தியத்தில்
மெத்தெனவும் ஐயம் விளைக்குங்காண்—பித்தத்தால்
சீதம் அகற்றுமென்பார் தின்மருந்தைப் பாழாக்கும்
வாதக் குடைச்சலுறு மால். (அ. கு.)

வ - கு: இதைச் சமைத்துத் தின்பதனால், மேற்கூறிய கெடுதிகள் உண்டாகும்.

---

## கொத்தான்—Koththan

வே - பெ : விண்மதி வல்லி.

Cassytha filiformis

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pauchi tiga | Sans. | Akas-vall |
| Mal. | Akasa-valli | Hind. | Amarbeli |

இது, வங்காளம், முதல் கீழ்க்கரை வழியாகத் தெற்கே திருவிதாங்கூர் வரையிலும் வளருகின்ற ஒரு வகைக் கொடி.

ப - உ : சமூலம்.

சுவை: குழகுழப்பு, தன்மை - சீதம், பிரிவு - இனிப்பு.

செய்கை . { உரமாக்கி - பலகாரி - Tonic
உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative
குளிர்ச்சியுண்டாக்கி சீதளகாரி - Refrigerant

குணம் : இதனால், ஒழுக்குவெள்ளை, சிறுநீர் எரிச்சல், அழல் நோய் அயர்ச்சி ஆகிய இவை நீங்கும்.

சித்த மறிவார் செறிகுழலே ! நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டகாற்—சுத்தப்
பிரமேகம் உட்கிரிச்சம் பித்தம் இளைப்பும்
அறுமே தவறா தறி. (அ.கு.)

வ - கு: கொடியைக் குடிநீரிட்டுச் சாப்பிட, இது வயிற்றின் கோளாறு களைக் கண்டிக்கும் ; சிறு குழந்தைகளுக்குண்டாகும் கணை முதலிய நோய்களைக் குணமாக்கும்.

கொடியை உலர்த்திப் பொடித்து, நல்லெண்ணெயில் சேர்த்துக் குழைத்து காய்ச்சித் தலைக்குப் பூசினால், முடிகறுத்துச் செழித்து வளரும்.

இத்தூளோடு சிறிது வெண்ணெயும், இஞ்சிச் சாறும் சேர்த்துப் குழைத்து புண்களுக்குத் தடவலாம்.

இதன் சாற்றுடன் சிறிது சருக்கரை சேர்த்துக் கண்ணோய்க்குப் பூச லாம்.

இதன் சாற்றை அல்லது குடிநீரை உட்கொண்டுவர, உடல் வலுக்கும், விந்து கட்டும்.

---

## கொத்துமல்லி—Koththumalli

**வே - பெ : உருள் அரிசி, தனியா.**

**Coriandrum sativam.**

**Eng. Coriander seeds.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kotimiri | Sans. | Kustumbari, Dhanyaka |
| Mal. | Kotta-malli, Kottam-palari | Arb. | Kuzbarah |
| | | Pers. | Kashniz. |
| Kan. | Kottamari-bija | Hind. | Dhanya |

இதன் விதைக்காக இஃது இந்தியாவிலெங்கும் பயிரிடப்படுகின்றது. இது சிறு செடி வருக்கம்.

ப - உ : இலை, விதை.

சுவை - கார்ப்பு தன்மை - சீத வெப்பம் பிரிவு - கார்ப்பு.

செய்கை : { பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic
அகட்டுவாய்வகற்றி-கர்ப்பவாதஹரகாரி-Carminative
வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant
சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்திநி-Diuretic,

குணம்.

**விதை :** இதனால், உட்சூடு, நளிர்ச்சுரம், பயித்தியநோய், செரியாமை, வாந்தி, விக்கல், நா வரட்சி, பெரு எப்பம், புண் இவைகள் போம்.

கொத்துமல்லி வெப்பம் குளிர்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டம்—கத்தியெழும்
வாத விகார்மடர் வன்கர்த்த பிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று. (அ.கு.)

**கீரை :** இதனால், சுவையின்மை, தீக்குற்றத்தால் வரும் சுரம் முதலிய இவை போம். இது வன்மையும் விந்துவையயும் பெருக்கும்.

கொத்துமல்லிக் கீரையுண்ணில் கோரவ ரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்—சத்துவமாம்
வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதே! நீ காண். (அ.கு.)

**வ-கு :** இலை இரசத்தைப் பிழிந்த நடவ, பித்தத்தழும்பு இரத்த நோய் இவை நீங்கும்.

இதனிலையை எண்ணெய் விட்டு வதக்கி வீக்கம், கட்டிகளுக்குக் கட்ட அவை சீக்கிரம் கரைந்துபோகும். அல்லது பழுக்கும். இலைக் கொழுந்தை அரைத்துத் துவையலாக அருந்தலாம்.

விதையை வாலையிலிட்டு வடிதது எண்ணெய் எடுக்கலாம். இவ் வெண்ணெயை, வயிற்றுப்பொருமல், செரியாமை, கழிச்சல் இவைகளுக்கு கொடுக்கலாம். அளவு 1 முதல் 4 துளி.

விதை.

விதையை வறுத்துச் சாப்பிட குருதிக்கழிச்சலும், செரியாக்கழிச்சலும் காடியிற்சேர்த்துக்குடிக்க, சாராயவெறியும், சோம்புடன் கூட்டிச்சாப்பிட, எப்பமும் நீங்கும். இருதயம் வலிவுபெறும்.

அளவு : விதைத்தூள் 650 மி.கி. முதல் 2,000 மி.கி.

சந்தனத்துடன் அரைத்துப்பூச, பித்தத்தலைவலியும், தனியாக அரைத் துப் பற்றிடத் தலை வலி மண்டையிடி (கபாலசூலை) முதலியனவும், அரைத் துக் களிறிக் (poultice) கட்ட, நாட்பட்ட புண் பிளவை முதலியனவும் நீங்கும். குடிநீரிட்டுக் கொப்புளிக்க, தூத்திநோயும் போம்.

ஊறல்நீர்க் குடிக்கக் குழந்தை மார்தம்போம்.

கொத்துமல்லி, சந்தனம், நெல்லிவற்றல் இவற்றை ஓரளவாகச்சேர்த்து நீரில் ஊரவைத்துக் கொடுக்க, தலை சுற்றல் நீங்கும்.

யூநானி மருத்துவர்கள், இதை ஊறல் செய்து, பிரசவித்த பெண்கள் உடல்வன்மை பெறும் பொருட்டுக் கொடுப்பார்கள்.

விதையைக் குடிநீரிட்டு நன்றாய் ஆறியபின், கண்ணின் புண்களைக் கழுவி வர உலரும்.

விதையை வாயிலிட்டு மெல்ல, வாய் நாற்றம் நீங்கும்.

## 250. கொய்யா-Koyya.

**Psidium guaya Linn.**

**Eng : Guaya tree**

| | |
|---|---|
| Tel. Koyyo-pandu | |
| Mal. Pera | Sans. Perala |
| Kan. Perala Goyya | Hind- Lal-sufrium |

இஃது இந்தியா முழுவதும் பயிராகும் சிறு மரம். இதன் பழம் மிக்க சுவையுள்ளதாகையால், தோட்டங்களில் வைத்து வளர்க்கிறார்கள். இதில் இரு வகையுண்டு. (1) வெள்ளைக்கொய்யா, (2) சிகப்புக்கொய்யா. இவ்விரண்டு வித மரங்களின் செய்கை குணம் முதலியன ஒன்றேயாகும்.

ப .உ. : இலை, பழம், பட்டை, வேர்.

குணம் : இதனால், முத்தோடம், தலை மயக்கம், சுவையின்மை, மந்தம், வாந்தி, வயிறுப்பல், கரப்பான் உண்டாகும். வீரியம் பெருகும். கழிச்சல் உண்டாகும்.

திரிதோஷம் சென்னித் திருப்பம அரோசி
பெருமந்தம் வாந்தி பொருமல்—கரப்பானும்
மெய்யாய்ப் பரவுமலம் மெத்தவிடும் போகமுண்டாங்
கொய்யா பழத்தினாற் கூறு.

இலை வேர்.

சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

வ - கு : இலையைக் குடிநீர் செய்து வாந்திபேதிக்குக் கொடுக்கலாம்.

கருணைக்கிழங்கின் காறல் நீங்க, இதன் இலையைச் சேர்த்து வேகவைக்கலாம்.

இலையை வாயிலிட்டு மென்றால் பல் வலி போம்.

இதிலிருந்து ஒரு வகை எண்ணெய் எடுக்கிறார்கள்.

பழம் நாவிற்கு உருசியானது மிகுதியாகத் தின்றால் கழியச்செய்யும்

பழம்.

சுவை - இனிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - இனிப்பு.

இலை, பட்டை, வேர்.

செய்கை { துவர்ப்பி - ஸ்ங்கோஸ்னகாரி - Astringent.
பழம்.
உரமாக்கி - பலகாரி - Tonic }

பட்டை—வேர்

(அ.கு.)

இவைகளுள் ஏதாவதொன்றைக் குடிநீர் செய்து கொடுக்க, குழந்தைகளின் அதிசார பேதி நின்றுபோகும். செய்முறை—பட்டை அல்லது வேர் 34 கிராம் நீர் 400 கிராம் சேர்த்துக் குடிநீரிட்டு, ஒரு தேக்கரண்டி வீதம் கொடுத்து வரவும். மேற்படி குடிநீரை ஊழி நோயினுண்டாகும் வாந்திக்கும் கொடுக்கலாம்.

இக் குடிநீரைக் குழந்தைகட்குத் தோன்றும் அடித்தள்ளலுக்குக் கழுவலாம்; இதையே அழுகிய விரணங்களுக்கும், வாய் விரணங்களுக்கும் உபயோகித்துச் சுகம் பெறலாம்.

வெள்ளைக் கொய்யாவின் வேர்ப்பட்டை 17 கிராம், நீர் 272 கிராம் இதைப் பாதியாகச் சுண்டவைத்து வடிகட்டி, தேக்கரண்டி வீதம் குழந்தை களுக்குக் காணும் பேதியைக் கட்ட உள்ளுக்குக் கொடுக்கலாம்.

அதிசாரத்துக்கு இக் குடிநீரைக் கொண்டு பீச்சு செய்யலாம்.

**பழத்தைப் பிசைந்து கொட்டைகளை நீக்கி, வெல்லம் அல்லது சருக்கரை கூட்டிக் கிண்டி எடுத்ததை, அப்பம், தோசை, ரொட்டி இவைகளைத் தொட்டுத் தின்னுவதற்காக, கடைகளில் jam, jelly என்று விற்கின்றனர்.**

---

## கொள்ளு—Kollu

**வே - பெ : காணம், முதிரை.**

**Eng. Horsegram** **Dolichos biflorus.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Ulavalu** | **Sans.** | **Kulatha** |
| **Mal.** | **Muthiar** | **Hind.** | **Kulthee** |
| **Kan.** | **Huruli** | **Arab.** | **Hubbul-khilth** |

இச் சிறு கொடி இந்தியா முழுமையும் பயிராகிறது. இதில் நாட்டுக் கொள்ளு, காட்டுக்கொள்ளு என இரண்டு வகையுள்ளது. இதிலேயே கருமை, செம்மை, வெண்மை என மூன்று வகையுண்டு. இன்னும் பேய்க் கொள்ளு என வேறொரு வகையுமுண்டு.

**ப - உ :** விதை, சமூலம்.

**சுவை** - துவர்ப்பு, சிறுகைப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை :**
- துவர்ப்பி—**ஸங்கோஸனகாரி—Astringent.**
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diuretic.**
- உரமாக்கி—**பலகாரி—Tonic.**

**குணம் :** இதனால், பீசவாயு, பித்தகுன்மம், பயித்தியம் இவை உண்டாகும். நீரேற்றமும் நளிர்ச்சுரமும் போம். இது மருந்தை முறிக்கும்.

குடல்வாதங் குன்மமுண்டாங் கொள்மருந்தோ நாசம்
அடலேறு பித்தமிக ஆகுங்—கடுகடுத்த
வாதநீ ரேற்றமொடு மன்னுகுளிர் காய்ச்சலும்போஞ்
சாதிநறுங் கொள்ளுக்குத் தான். **(அ.கு.)**

**கொள்ளு**

**'குலத்தங் கபத்தினைக் கூற்றெனத் துரத்தும்.**
**(பொ - ள்.)** கொள்ளு சிலேஷ்மங்களைப் போகச் செய்யும்.

**(தே.கா.)**

கஞ்சி.

கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடித்துவந்தால், அதிகப்பசி, உடல் வன்மை, வீரியவிருத்தி இவை உண்டாகும்.

கொள்ளுந்தண் டுலமுமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதோ—எள்ளை
நசுக்கிப் பிழிபலமு நல்விந் துவுமே
வசிக்குங் கிழவர்க்கும் வை. (அ.கு.)

கொள்ளுச்சாறு.

சூடான கொள்ளுச்சாற்றால், இளைத்த உடல் பருத்து உரமடையும். வாத தோடம், பித்தகோபம், கிரகணி, குன்மம், சுரம், இரைப்பு, விழியைப்பற்றிய சில நோய்கள் ஆகிய இவைகள் நீங்கும்.

வற்றிய உடம்பு தூணும் வாதமும் பித்துங் குக்கி
சுற்றிய கிராணி குன்மங் சுரம்பல சுவாச காசம்
உற்றடர் கண்ணன் புண்ணோ டுறுபிணி யொழியும் வெப்பைப்
பெற்றிடுங் காணச் சாற்றாற் பெருஞ்சல தோடம் போமே. (அ.கு.)

வ - கு: இலையைப் பிழிந்து, 10 கிராம் சாறெடுத்து, அத்துடன் $2\frac{1}{2}$ கிராம் காசுக்கட்டி சேர்த்துக் குழைத்து, தினம் 3 வேளை கொடுத்துவரக் கழிச்சல் நீங்கும்.

34 கிராம் கொள்ளு, நாலு அல்லது ஐந்து முந்திரிப்பருப்பு இவைகளைச் சேர்த்து 600 கிராம் நீர் விட்டுக் காய்ச்சி, இரத்தபேதிக்குக் கொடுக்கலாம்.

1 பங்கு கொள்ளுக்கு 10 பங்கு நீர் விட்டுக் காய்ச்சி அத்துடன் 650 மி- கிராம் இந்துப்புச் சேர்த்துக் கொடுக்க, அஃது, இருமல், உள்ளுறுப்புகளிற் சேருகின்ற கற்கள் இவைகளைப் போக்கும்.

1-க்கு 10 நீர் விட்டு உண்டாக்கிய குடிநீர், பிரசவ அழுக்கை நீக்கும்.

இக்குடி நீரோடு, பெருங்காயம், சுக்கு முதலியவையும் சேர்த்துச் சாப்பிட, குன்மம் குணமாகும். விதையைத் தூள் செய்து கற்பூரங்கூட்டி மேலுக்குத் தடவிவர வியர்வை நீங்கும்.

கருங்கொள்ளை, காவிக்கல், காந்தக்கல், புற்றுமண் முதலியவைகளோடு சேர்த்து, முட்டை வெண்கருவினால் அரைத்து, ஆனைக்காலுக்குப் பற்றிடலாம்.

இதை, வீக்கம், கட்டி முதலியவைகளுக்கும் ஒற்றிடமோ பற்றோ இடலாம்.

---

## 255. கொள்ளுக்காய்வேளை—Kollukkaivelai

வே - பெ : காய்வேளை

| | | | |
|---|---|---|---|
| Eng. | Purple Tephrosises. | Kan. | Kaggi |
| Tel. | Vempali; Pampara chettu | Sans. | Puleehashtree |
| | | Hind. | Sarphaoka |
| Mal. | Kozhinnila | Duk. | Jangli-kulthi |

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய செடி. இது **கடினபூமி** யில் வளருகிறபடியால், இதை வேரோடு பிடுங்குகிறது கடினமாயிருக்கும். **இதில் பல விதங்களுண்டு :**

இருப்புக்காய் வேளை —**Galega villosa**
பூனைக்காய் வேளை —**Galega spinosa**
முட்காய் வேளை

இவைகள் ஒன்றிற்கொன்று வேற்றுமையின்றி, **குணத்திலும் செய்கை யிலும்** ஒன்றுபட்டு இருக்கும

ப - உ : இலை, விதை, வேர், வேர்ப்பட்டை.

**சுவை**—கார்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு

செய்கை:
- கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தநி—**Diuretic**
- வீக்கமுருக்கி—சோபாநாசநி—**Deobstruent.**

**விதை.**

- மலப்புழுவகற்றி—கிருமிநாசனி—**Anthelmintic.**

**வேர்.**

- உடலுரமாக்கி—தீபனகாரி—**Nutritive.**

**கொள்ளுக்காய் வேளை**

**குணம் :** இதனல், வாதாதிக்கமும், நாவறட்சியும், பல் நோயும், சொள்ளுவடியும் நோயும் போம்.

வாதமிக்க தென்பார்க்கும் வாய்வறட்சி யென்பார்க்கும்
மீதுதந்த மூலநோ யென்பார்க்கும்—ஓதமுற்ற
கொள்ளுக்கா தாரகபம் தோற்றியதென் பார்க்குமொரு
கொள்ளுக்காய் வேளைதனைக் கூறு. (அ.கு.)

**முக்காவேளை.**

**குணம் :** இதனல், மார்புநோய், நெஞ்சிற் கோழை கட்டல், இரைப்பு, வெப்பம், வீக்கம், நெறிக்கட்டல் இவைகள் நீங்கும். மேலும், கழிச்சல், வயிற்றுநோய், குன்மம், இரத்தமூலம், மந்தம், நாவறட்சி, சந்ததசுரம், உணவில் வெறுப்பு இவையும் போம்.

நாயாதி மந்தமதி சார மகிவறட்சி
போகாச் சுரந்தாபம் போக்கமருந்—தோகையிற்
சிக்காவே ளைப்பதத்தைத் தின்னச்செய் விக்கவென்றல்
முக்காவே ளைப்பதத்தை முன்.

**இலை.**

**வ - கு.** இதன் இலை 35 கிராம், கஞ்சா 65 மில்லி கிராம் எடுத்து அரைத்து, தயிரிற் கலக்கி உள்ளுக்குக் கொடுக்க, இரத்தமூலம் குண மாகும்.

இலை இரு பங்கு, மிளகு ஒரு பங்கு அரைத்துத் தயிரிற் கலந்து கொடுக்க, வெள்ளை நோய் போம்.

மூக்காவேளைக் கீரையைச் சமையல் செய்து சாப்பிடுவது வழக்கம்.

### விதை.

விரை ஒரு பங்கு, நீர் 10 பங்கு, சேர்த்துக் காய்ச்சிக் குடிநீராக்கி, குழந்தைகளுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் தினம் மூன்று வேளை கொடுத்து வர, வயிற்றுப் புழு விழும்.

விரையிலிருந்து எடுக்கும் எண்ணெய், சொறி சிரங்குகளுக்கு மிகவும் ஏற்றது.

### வேர்.

இதை மஞ்சளுடன் சேர்த்துப் பசுவின் பால் அல்லது கழுநீர் விட்டரைத்து, நெறிக்கட்டு வீக்கங்களுக்குப் பூசிக் கட்டிவைக்கப் போம்.

வேர் இரு பங்கு, மிளகு ஒரு பங்கு எடுத்துக் குடிநீரிட்டு, சுரங்களுக்கும் கல்லீரல், மண்ணீரல், குண்டிக்காய் இவைகளின் நோய்களுக்கும் கொடுக்கலாம்.

வேர்க் குடிநீரை, குன்மம், நாட்பட்ட கழிச்சல் முதலிய நோய்களுக்குக் கொடுக்கப் போம். வாய் கொப்புளிக்க வாய்ப்புண் போம்.

வேரைப் பொடித்துத் தேன் சேர்த்துக் குழப்பிப் புண்களுக்குப் பூசலாம்.

### வேர்ப்பட்டை.

இதை மிளகு சேர்த்து நன்ருய் அரைத்து உருட்டி, தீராத வயிற்று நோய்க்குக் கொடுக்க, நோய் போம்.

வேரைப் பொடித்து சிட்டிகை அளவு தினம் மூன்று வேளை நீரிற் சாப்பிட்டுவர, விதையின் வீக்கம் குறையும்.

இதன் வேர்ப்பட்டை வெள்ளியைப் பற்பமாக்கும்.

---

## கொறுக்காய்ப்புளி—Korukkaip-puli

**Gorcinia kambogia.**

**Mal.** **Korukkappuli**

இது, மேற்குக் கரையோரங்களில் பயிராகும் மர வகுப்பைச் சேர்ந்தது.

**ப-உ:** புளி.

**சுவை**—புளிப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை:** { அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
செரிப்புண்டாக்கி—ஜீரணகாரி—Digestive.

**குணமும் வழக்கும்:** புளியின் குணமே இதற்குமுண்டு. புளிக்குப் பதிலாக இதை உபயோகிக்கலாம்.

---

## 257. கொன்றை—Konrai

**Cassia**

கொன்றையில் பல வகைகளுண்டு : **சரக்கொன்றை சிறு கொன்றை செங்கொன்றை, கருங்கொன்றை, நரிக்கொன்றை** என ஒரு வகுப்பும் உண்டு **புலிநகக்கொன்றை, மந்தாரக்கொன்றை, மந்தார தொன்றை முட் கொன்றை** என மற்றொரு வகுப்பும் உண்டு. **மயிர்க் கொன்றை** யில் இரு பிரிவு உண்டு. ஒன்று **செம்மயிர்க்கொன்றை மற்றொன்று பொன்மயிர்க்கொன்றை.**

---

### சரக்கொன்றை—Sarak-konrai

வே - பெ : கொன்றை, கொண்ணே, பெருங்கொன்றை, **கிருதாமலம்** தாமம், மதலே, இதழி, கடுக்கை, ஆக்குவதம்.

Cassia fistula,

**Eng. : Indian Ladurnam, Pudding-pipe tree, Purging Cassia.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Rela-kayulu** | **Arab.** | **Khiyar-shanbar** |
| **Mal.** | **Konna** | **Pers.** | **Khizar-chanber** |
| **Kan.** | **Kakke** | **Hind.** | **Amaltes** |
| **Sans** | **Aragvadham** | | |

இஃது, இந்தியாவிலும் பர்மாவிலும் கிடைக்கக்கூடிய மர **வகுப்பைச்** சேர்ந்தது. இதன் பூ மஞ்சள் நிறமாயும், காய் ஒன்று முதல் **ஒன்றரையடி நீளமாயுமிருக்கும்.**

ப-உ. இலே, பூ, புளி, விதை, மரபபட்டை, **வேர்ப் பட்டை,**

**இலே.**

சுவை—துவர்ப்பு, சிறு கைப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு—கார்ப்பு, புளி**

செய்கை :
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—**Laxative.**
- புழுவகற்றி கிருமிநாசநி—**Vimieuge.**

**குணம் :** மலத்தைகழிக்கும்படர்தாமரையைப் போக்கும்.

**கொன்றை.**

பாண்டாங்கர் பூணுய்ப ... டித்து மேகத்தை
யாண்டாங்கக் கைக்குள்வச மாக்குமே—காண்டற்
குதவிசில செய்துடலே யோம்புமிது நீபார்
இதழியெனுங் கொன்றைபுவி யில் **(தே. வெண்பா.)**

மேக நோய்களேப் போக்கி **உடலே வன்மை ஆக்கும்.**

**வ. கு.** இலேக் கொழுந்தை **அவித்துப் பிழிந்த சாற்றில், ஓர் 150 மி. லி** எடுத்து சருக்கரை கூட்டி உட்கொள்ள, கிருமி, **திமிர்ப்பூச்சி இவைகள் மலத்துடன் வெளிப்படும்.**

இலையைத் துவையல் செய்து சோற்றுடன் கூட்டியுண்ண மலங்கழியும். இதைக் கடைந்தும் உண்ணலாம்.

இலையை அரைத்துப் படர் தாமரைக்குப் பூசலாம்.

## பூ.

**சுவை**—துவர்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.
**செய்கை :** புழுக்கொல்லி—கிருமிநாசநி—**Vermifuge**—

**குணம் :** இதற்கு, வெள்ளை, வெட்டை, பாண்டு, காமாலை, சொறி, கரப்பான், தேமல், குடல்வலி ஆகியவை நீங்கும்.

மேலும், வயிற்றுப் புழு, நீரிழிவு, குடலைப்பற்றிய நோய்கள்போம்.

மலக்கிருமி போகும் மதிநீர்க் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயும்—நிலத்திற்குள்
என்றைக்கும் வாடாத வின்ப மலர்க்கொம்பே!
கொன்றைப் பசுமலரைக் கொள். (அ.கு.)

**வ-கு :** பூவைத் தனித்தேனும், இதன் கொழுந்துடன் சேர்த்தேனும் அரைத்துப் பாலிற் கலக்கியுண்டால், வெள்ளை, வெட்டை, பாண்டு, காமாலை குணமாகும்.

பூவை, பழச்சாறு விட்டரைத்து உடம்பிற்றேய்த்துக் குளிக்க, தேமல், சொறி, கரப்பான், இவை தீரும்.

பூவைக் குடி நீரிட்டு உட்கொள்ள, வயிற்றுவலி, குடலைப்பற்றிய நோய்கள் விலகும்.

இதைத் தேனூறல் செய்துகொடுக்க, மலத்தை இளக்கி வெளிப்படுத்தும். இதைப் பாலுடன் கலந்து காய்ச்சி உட்கொள்ள, உள்ளுறுப்புகளை வன்மைப்படுத்தும். மெலிந்தோர்க்கும் மிகப் பலன் தரும்.

## புளி.

**சுவை**—புளிப்பு, இனிப்பு. **தன்மை.** வெப்பம், **பிரிவு**, **கார்ப்பு.**
**செய்கை :** நீர்மலம்போக்கி-விரேசனகாரி-**Purcative.**

**குணம் :** இதனால், வெள்ளை, மலக்கட்டு, குடல்வலி, குடலைப்பற்றிய மாசு, வெப்பம் ஆகியவை போம்.

வன்னனில மேகமலக் கட்டு குடல்வலி
துன்மலி னம்வெப்புத் தோன்றுங்கால்—இன்பம்
தருதமா லப்பரிம ளத்தனத்தாய்! இந்தக்
கிருதமா லப்புளியைக் கேள். (அ. கு.)

**வ-கு :** இது குழந்தைகட்கும், பிள்ளைதாய்க்கும், மெலிந்தவர்கட்கும், மிக நன்மை பயக்கும்; மலப்போக்கியுமாகும். இதைக் குறைந்த அளவில் கொடுத்தல் வேண்டும்.

புளியை, நீர் ததும்பவிட்டு ஆறு மணி நேரம் ஊறவைத்து அடிக்கடித் துழாவி, சீலையில் வடிக்கட்டிக் காய்ச்சி, மெழுகைப்போல் வரும் பொழுது எடுத்து அதில் 4 முதல் 8 கிராம் எடை வரையில் கொடுக்கப் பேதி ஆகும் அதிக அளவில், அஃதாவது 35 முதல் 70 கிராம் எடை

வரையிலும் கொடுக்க, நீர் நீராய்ப் பேதி ஆகும். அதனால், வாய்க் குமட்டலும், வயிற்றுக் கடுப்பும் பொருமலுமுண்டாகும். இக்குணத்தை மாற்ற, திரிகடுகுபோன்ற சரக்குகளோடு சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

இதை, நிலவாகைப் பொடி அல்லது சிவதைப் பொடியோடு சேர்த்து இலேகியமாகக் கொள்ள மேற்கண்ட துர்க்குணமிராது.

இப்புளியைச் சாதாரணப் புளியுடன் சேர்த்து, ஊறல் குடிநீராகச் செய்து மதுமேக நோயினர்க்குக் கொடுக்க மலங்கழியும், பித்தநீர் வெளிப்படும்.

இப்புளியுடன் உப்பு, புளி, மிளகாய், இஞ்சி முதலியவைகளைச் சேர்த்துத் துவையல் செய்து, இரவில் உணவுடன் கொட்டைப்பாக்களவு கொள்ள, காலையில் வயிறு கழியும்.

இப்புளியை மிளகு நீராகவும் செய்து சாப்பிடலாம்.

இதை நீரிலரைத்துக் கொதிக்கவைத்துப் பூசினால், கீல்பிடிப்பு முதலிய பிடிப்புகளும் தீரும்.

இதை அரைத்து உந்தியைச் சுற்றிப் பற்றிட, குழந்தைகளின் வயிற்றுப் பொருமல் நீங்கும். வயிறு கழியும்.

இத்துடன் கடுகுரோகணி சுக்கு, வாய்விடங்கம், பெருங்காயம், படிகாரம் அல்லது வெங்காரம். பொட்டிலுப்பு, அல்லது கம்பியுப்பு சுக்கை நீறு சேர்த்தரைத்து அடிவயிற்றில் பற்றிட, நீர்க்கட்டு நீங்கும்.

இப்புளியுடன் குல்கந்து, கொட்டைத்திராட்சை, சோம்பு, கொத்துமல்லி விதை சேர்த்துக் குடிநீரிட்டு, 75 மி. லி. முதல் 150 மி. லி. கொள்ள, வயிற்றுவலி, வயிற்றுக்கடுப்பு, வாய்க்குமட்டல் முதலிய தீக்குண மின்றியும், இளைப்பு ஆயாசமின்றியும் கழியச்செய்யும்.

இதைத் தேனூறல் செய்தும் வழங்கலாம்.

**விதை.**

**சுவை**—கைப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை** : நீர்மலம்போக்கி—விரேசனகாரி—**Purgative.**
வெப்பகற்றி—ஜ்வரஹரகரி—**Febrifuge.**

**குணம்** : வேர்ப்பட்டையின் குணம் இதற்குமுண்டு.

இம் மலரில் 'குல்கந்து' செய்யப்படுகிறது.

**மரப்பட்டை.**

**சுவை**—கைப்பு, துவர்ப்பு **தன்மை**- வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை** : மலமிளக்கி—மலகாரி—**Laxative.**
துவர்ப்பி—ஸங்கோஸனகாரி—**Astringent.**
எரிச்சல் உண்டாக்கி—**counter irritant.**

**குணம்** : இதனால் பெருநோய், புழு, சூலை, முக்குற்றம், செரியாமை ஆகியவை போம். இது கழியச்செய்யும்.

குட்டங் கிருமி கொடுஞ்சூலை வாதமையம்
துட்ட மலமருசி தூரப்போம்—தட்டிச்
சுரக்கின்ற பேதியுண்டாம் துய்க்கத் துவர்க்கும்
சரக்கொன்றைக் காரணங்கே! சாற்று.

(அ. கு.)

**வ. கு.** இதன் பட்டையையும் இலையையும் சேர்த்து, எண்ணெய் விட்டரைத்துப் பூச, அழிபுண்ணால் கை கால் சில்லிடல், கட்டி, படர்தாமரை முதலியன நீங்கும்.

இதன் பட்டையைக் குடிநீரிட்டு கொடுக்கக் கழியச் செய்யும், சுவையின்மையைப் போக்கும் ; முக்குற்றங்களைத் தன்னிலைப் படுத்தும்.

**வேர்ப்பட்டை.**

சுவை— கைப்பு, துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**செய்கை :**
நீர்மலம்போக்—சவ்ரேசனகாரி—**Purgative.**
உரமாக்கி—பலகாரி—**Tonic.**
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—**Febrifuge.**

**குணம் :** இது வண்டுகடி, தேமல், சொறி இவைகளைப் போக்கும். ஆனால், மிகுதியாகக் கழிச்சலையுண்டாக்கும் : சுரத்தையும் போக்கும்.

**வ-கு:** ஒன்று முதல் நான்கு வராகனெடை 4 முதல் 16 கிராம் வரை வேர்ப்பட்டையை அரைத்துப் பாலில் கலந்து கொடுக்க, இதனால் நன்றாகக் கழியும். மேற்குறித்த வண்டுகடி முதலியவையும் போம்..

---

## சிறு கொன்றை—Siru-Konrai.

**cam abroeses**

ப - உ : இலை, பட்டை.

சுவை - கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**செய்கை :** உரமாக்கி—பலகாரி—**Tonic.**

**குணம் :** இம்மரப்பட்டைக்கு, மண்டைச் சூட்டினாலுண்டான கண்ணோய், வெப்பம், உள்மூலம் இவை நீங்கும். வன்மையும் அழகும் உண்டாகும்.

சிறுகொன்றை நற்கசப்பாம் சென்னி அனலால்
ஊறுகின்ற கண்களினோ யோடே—பெருமுடலின்
உட்டினமுள் மூலமிவை ஓடும் அதிபலனும்
கட்டழகும் உண்டதனால் காண்.

(அ.கு).

**வ -கு :** இதனிலையை அரைத்து கண்களின் மீது வைத்துக் கட்ட கண்ணோய் நீங்கும்.

இதன் பட்டையில் 17 கிராம் முதல் 35 கிராம் வரையில் எடுத்துக் குடிநீரிட்டுக் கொடுக்க, இதனால், வெப்பம் உள்மூலம் நீங்கும். வன்மையும் அழகும் உண்டாகும்.

## செங்கொன்றை—Senkonrai.

ப உ. பூ; பட்டை.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** . { கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
புழுக்கொல்லி—க்ருமிநாசநி—**Vermicide.**

**குணம்** - பூவுக்குக் காது நோயும், பட்டைக்கு இரைப்பு, வெண்படையும் குட்டமும், நீங்கும்.

**வ - கு.** பூவை, நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதில் விட, காது நோய் நீங்கும்.

பட்டையை, 17 கிராம் முதல் 35 கிராம் எடுத்துச் சிதைத்துக் குடிநீர் செய்துகொடுக்க, இரைப்பு வெண்குட்டம் நீங்கும். வெண்குட்டத்திற்குப் பட்டையை நீர் விட்டரைத்துப் பூசிவர அது குணப்படும்.

## நரிக்கொன்றை—Narik-konrai.

ப- உ : பட்டை.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை.** புழுக்கொல்லி—க்ருமிநாசநி—**Vermicide.**

**குணம்** : இதனால், யானைச்சொறி, தவிட்டுக் கிருமிப்படை, **தினவுள்ள புண், புடை** இவை நீங்கும்.

பையவே ஊறிப் படரும்யா னைச்சொறியும்
நொய்யக் கிருமிகொண்டா நுண்புடையும்—மெய்யில்
அரிக்கின்ற வன்புடையும் ஆழிபுகு மாதே
நரிக்கொன்றை தன்னை நவில். (அ.கு.)

**வ. கு.** : பட்டையைப் புளித்த நீர் விட்டரைத்துப் பூசிவர, மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## மைக்கொன்றை—Maik-konrai.

**sia abovesens**

ப - உ : பூ, பட்டை.

**சுவை** - துவர்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** : வாதமடக்கி,—வாதஹரகாரி—**Anti-vata.**

**குணம்** : இதனால், குடல்வாதம், சூலை, மேகம் இவைகள் நீங்கும்.

குடல்வாதஞ் சூலை கொடுமேக மெல்லாம்
அடைவாகப் போக்க வலைந்தே—படிமீதில்
எக்கொன்றைத் தேடி நெஞ்சில் எண்ணம் இடுவானேன்
மைக்கொன்றை இங்கிருந்து மால். (அ.கு).

வ - கு : இதன் பட்டையை, 2 கிராம் முதல் 4 கிராம் எடை எடுத்துச் சிதைத்து 708 மி.லி. நீர் விட்டுக் குலுக்கி, காலை மாலைகளில் 170 மி.லி. அரையாழாக்கு வீதம் போதுமான நாள் வரையிலும் கொடுக்க, மேற் கண்ட நோய்கள் நீங்கும்.

இதன் பூவை அரைத்து 9 கிராம் எடுத்து வெண்ணெயுடன் கலந்து கொடுக்க, நாட்பட்ட மேகம் தணியும்.

**குறிப்பு** : மற்ற விதக் கொன்றைகள் **வழங்கப்படாமையால், ஈண்டு அவற்றைப்பற்றி வரையப்படவில்லை.**

## 258. கோடகசாலை—Kodaga salai

**வே: பெ: கோடாசூரி கோடாசுழி.**

**இஃது, எங்கும்** வெளிகளில் **தன்னிச்சையாய்ப் பயிராகும் ஒருவகைப் பூண்டு.**

**சுவை—கைப்பு, தன்மை** : வெப்பம், **பிரிவு**–கார்ப்பு.

செய்கை : வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி—**Febrifuge.**

**குணம்** : இதனால், மேகம், கொப்புளம், கழலை, குட்டம், பன்ன பித்தவாதக் கலப்பு, வாய்ப்புண் ஆகிய இவைகள் விலகும்.

கோடகசாலைக்குக் கொடியவனல் மேகமொடு
போடகங்கி ரந்திகுட்டம் புண்ணாறும்—நாடகஞ்செய்
யப்பித்த வாய்பு மலர்வாய் விரணமும்போம்
பொற்புற்ற பொன்னே ! புகல். (அ.கு.)

வ.கு : இதை அரைத்து, கொப்புளம், கிரந்தி, குட்டம், புண் இவைகளுக்குப் பூச, இவைகள் ஆறும்.

இதனை உலர்த்தி 17 கிராம் முதல் 35 கிராம் எடுத்துக் குடிநீரிட்டுக் கொடுக்க, சுரம், மேகம், பித்தவாயு, வாய்ப்புண் நீங்கும்.

---

## 259. கோட்டம்—Kottam

**வே பெ: கோஷ்டம், குரா, ஒலி.**

**Apaotsca Antout**

**Eng : Costus root.**

COSTUS SPECEOSUS

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kostam** | **Sans.** | **Koshtam** |
| | | **Arab.** | **Qusth** |
| **Mal.** | **Kottam** | **Pers.** | **Kosht** |
| **Kan.** | **Koshtam** | **Duk.** | **Pachak** |

இஃது இமயமலையின் வடமேற்கு நாடுகளில் பயிராகிறது. அந்நாட்டினர் அபினியைத் தெரிந்து கொள்ளாத காலத்தில், அபினிக்குப் பதிலாக இதனைப் புகை பிடித்துவந்தனர் என்பது கூறப்படுகின்றது. இப்புகையால் தூக்கமுண்டாகும். இதன் வேர், பூச்சி கடிக்காமலிருக்கவும் அதன் மணத்திற்காகவும் கையாளப்படுகின்றது.

இதில் இருவிதமுண்டு. வெண்கோட்டம் செய்கோட்டம்.

**ப-உ :** வேர்.

**சுவை**—கைப்பு, விறுவிறுப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு—கார்ப்பு.**

**செய்கை**
- பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி—**stomachic.**
- கோழையகற்றி - கபஹரகாரி—**expectorant.**
- உரமாக்கி - பலகாரி—**tonic.**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி—**stimulant.**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி—**diaphoreto**

**குணம்:** இதனால், கண், தாடை, வயிறு, கழுத்து, தலை, நா, வாய், இவ்விடத்திலுண்டாகும் நோய்கள், சுரம், அதைப்பு, வாயு, மூலமுளை, புண், இரைப்பு, எலி பாம்பு முதலியவைகளின் நஞ்சுகள், மேகக்கட்டி, பயித்தியம் இவை போம்.

நாட்டிலுறு வெட்டை நடுக்கம் எனுநோய்கள்
கோட்டமெனச் சொன்னால் குலையுங்காண்—கூட்டிற்
சுரதோடந் தொண்டைநோய் தோலாத பித்தம்
பரதேசம் போமே பறந்து. (அ.கு.)

திட்டிகவுள் அகடுகளஞ் சென்னி நாவாய்
செறிபிணிவெப் பதைப்புதா வர்த்தம் ஊதை

முட்டியெழு முளைவிரணம் சுவாச காசம்
மூடிகத்தோ டரவுமர விடங்கள் மேகக்
கட்டி அஜ கல்லிவிட பாகம் பூத
கணம்பால கிரகமொடு தாது நட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்தம் இவையொ ருங்கே
தொலையும்விர ணாிக்குச் சுகப்பே ருமே. (தே.கு.)

**அளவு :** 2 முதல 4 கிராம எடை.

**வ–கு :** கோட்டம் தனியா இவைகளை ஓர் எடை அரைத்துப் பூச, மண்டைப் புண் நீங்கும். அல்லது, கோட்டத்தை அரைத்து வெண்ணெயிற் கலந்து பூசலாம்.

**கோட்டைத்தைலம் :** இதை மூலத்துக்குத் தடவிப் புகையூட்டத் தீரும்.

**கோட்டைச்சுரசம்:** இத்துடன் வசம்பு தேன் கலந்துகொடுக்க, வெறிநோய் நீங்கும்.

**கோட்டைக்குடிநீர் :** நன்றாய் நசுக்கிய கோட்டம் ஒரு வராகனெடையில், (4 கிராம்) வெந்நீர் அரைப்படி விட்டு, இரண்டு மணிநேரம் மூடி வைத்திருந்து, பிறகு வடிகட்டிக்கொண்டு, வேளைக்கு 15 மி.லி. முதல் 20 மி.லி. வீதம், தினம் இரண்டு அல்லது மூன்று முறை கொடுக்க, மேற்கூறிய நோய்கள் நீங்கும். இத்தோடு தேன் வசம்பு இவைகள் சேர்த்துக்கொடுக்க, வெறிநோய் நீங்கும்.

கோட்டத்தை நாரத்தைச் சாற்றில் ஊறவைத்து உலர்த்திப் பொடி செய்து, தேன் கூட்டி, முகக்குரு, வங்கு இவைகளுக்குப் பூச குணமுண்டாம்.

## 260. கோதுமை—Kothumai.

வே. பெ: கோதும்பை, யவை.

**Triticum vulgare (Vill)**

**Eng. Wheat.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Godumulu | Sans. | Godumam |
| Mal. | Kothampam | Arab. | Hintah. |
| | | Pers. | Gandum |
| Kan. | Godhi | Hind. | Gehun |

இஃது இந்தியாவில் பஞ்சாப், மத்திய மாகாணம், பம்பாய் இராஜதானி முதலிய இடங்களில் ஏராளமாய்ப் பயிரிடப்படுகின்றது. மேல் நாடுகளில் இது முக்கிய உணவாகக் கொள்ளப்படுகின்றது: வட இந்தியாவிலும் வங்காளத்திலும் இதுவே முக்கியமான உணவாம். கோதுமையில் முக்கிய பலந்தரும் சத்து 100-க்கு 86·7 பங்கு உள்ளது. கோதுமை அரிசி, கோதுமை நொய், கோதுமை மா இவைகளே முக்கியமாய்க் கொள்ளப்படுகின்றன.

ப—உ: அரிசி.

**சுவை**—இனிப்பு, **தன்மை**—தட்பம், **பிரிவு**—இனிப்பு.

| | | | |
|---|---|---|---|
| | உடலுரமாக்கி-போஷணகாரி | - | Nutetve |
| **செய்கை;** | உள்ளழலாற்றி-அந்தர்-ஸ்நிக்தகாரி | - | Demulcent |

**அரிசி.**

**குணம்:** இது, நல்ல வண்மை, விந்து, பித்தம் இவைகளைப் பெருகச் செய்யும்; தனிவாதத்தையும் வெள்ளையையும் நீக்கும்.

கோதுமையின் நற்குணந்தான் கோதிற் பலங்கொடுக்கும்
தாதுவிர்த்தி யாக்குந் தனிவாய்வைச்—சேதிக்கும்
பித்தம் அளிக்கும் பிரமேகத் தைக்கெடுக்கும்
உத்தமமாம் என்றே உரை.

**கோதுமை.**

"பலுத்த கோதுமையும் பண்பெனலாகும்." (கோதுமை பலத்தைக் கொடுக்கும்.)

**கஞ்சி.**

வாதசுரம், மூக்கு நீர் பாய்தல், ஐயம், முப்பிணி இவைகளை விலக்கும்; உடலுக்கு வன்மை தரும்.

கோதுமைக் கஞ்சி கொடுஞ்சுரநீ ரேற்றமிவை
காதுமைக்குஞ் சந்நிக்குங் காதரமே—போத
வுடலுந் திடமா மொலிவண்டுங் கூற்றுங்
கடலும் பணிவிழியே! காண்.

**அடை.**

இதனால், உடல் வன்மையும், உதராக்கினியும், சுக்கிலதாதுவும் அதிகரிக்கும். சிலேத்துமகோபம் நீங்கும்.

தேகம் பலக்குமதி தீபனமு உண்டாகுநிறை
மோகம் பெருகுமைய மூர்க்கமறுங்—கோகமிகு
வோதி யடையும் உயர்கொங்கை மாதரசே!
கோதி யுடையைக் கொடு.

(அ.கு.)

வ-கு : இது உணவுப் பொருள்களிலெல்லாம் சிறந்தது. இதை ரொட்டியாகவும் அடையாகவும் சுட்டு உலகத்திலுள்ள மக்களுள் 2/3 பாகத் தார் அருந்தி வருகின்றனர். ஆகவே, இதை "உயிருக்கு ஊன்றுகோல்" எனலாம்.

குன்ம நோயினர்க்கு, சுட்டு நாலைந்து நாளான புளித்த ரொட்டி யையாவது, சுட்ட ரொட்டியையாவது கொடுக்க நன்று.

வயிற்றில் புளிப்புள்ளவர்கள், புதிய ரொட்டியையாவது, தவிட்டு ரொட்டியையாவது உணவாகக் கொள்ளலாம். அல்லது ரவைக் கஞ்சி மிகவும் ஏற்றது.

கபரோகிகளுக்கு, கோதுமைப்பால், அல்லது கோதுமைக் காப்பி மிகவும் குணந்தரும்.

**கோதுமைப்பால் :** 30 கிராம் கோதுமை நொய்யை, முந்தின நாளே நீரில் ஊறப்போட்டு, காலையில் எடுத்து நன்றாய் இடித்துப் பசையாக்கி, மெல்லிய துணியால் வடிகட்டிப் பிழிந்து, இரசத்தை எடுத்து வழங்கலாம்.

கோதுமை நொய்க் கஞ்சியானது, சுர நோயுடையவர்களுக்கும், நோயுற் றெழுந்தவர்க்கும், பெரும்பாடுடைய பெண்களுக்கும் மிகுந்த பயன் தருவதாகும்.

கோதுமையை வறுத்துத் தேன் சேர்த்து, இவ்வலி, முதுகுவலி இவற்றை உடையவர்களுக்குக் கொடுக்கலாம்.

கோதுமை மாவை, அக்கி, தாபிதம், நெருப்புப்பட்டவிடம், மீத்தோல் உரிந்துபோனவிடம் இவைகளில் பூசினாலும், தூவினாலும் எரிச்சல் தணியும்.

செம்பு, இரசம், நாகம், வெள்ளி, அயோடின் (Iodine) முதலியவை களின் நஞ்சைப் போக்க, கோதுமை மாவை நீரில் கரைத்து உள்ளுக்குக் கொடுத்தால், நஞ்சு முறிந்துவிடும்.

மாவைக் களிசெய்து கட்டிகளுக்கு வைத்துக்கட்டலாம்.

வியர்வைக் குருவுக்கு, இம்மாவைக் காடியிற் கலந்து பூசலாம்.

ஐயநோய்களுக்கு இதன் தவிட்டை வறுத்து ஒற்றடமிடலாம்.

நீரிழிவு நோயாளிகள், கோதுமைத் தவிட்டுரொட்டி, கோதுமை அடை இவைகளை உணவாகக் கொள்வது நன்மையாகும். ரொட்டியைப் பாலிலா வது வெந்நீரிலாவது ஊறவைத்துப் பிசைந்து கட்டிகளுக்கும் புண் களுக்கும்வைத்துக் கட்டலாம்.

---

## 261. கோபுரந் தாங்கி—Gopuram Tangi

**Andrographis echioides (Nees.)**

| | | |
|---|---|---|
| Tel. | Chalava-puri-kada<br>Gorre-chimidi | Mal. Mala-kulukki<br>Hind. Charayetah |

இஃது, இந்தியாவின் வெப்ப நாடுகளில் பெரும்பாலும் சுவரின் மேலும், உயர்ந்த மேட்டுப்பாங்கான இடங்களிலும் பயிராகும் பூண்டு; இது வங்கத்தைப் பற்பமாக்கும்.

ப-உ. இழங்கு.
சுவை. கைப்பு துவர்ப்பு தட்பம்
பிரிவு. கார்ப்பு

## 262. கோரை korai

வே–பெ : முத்தக்காசு.

Cyprus rotandus,

Eng. : Nut grass.

| | | |
|---|---|---|
| Tel. Tungamuste | | Sans. Mutha |
| Mal. Muththanna | | Hind. Mutha |
| Kan. Tangahullu | | |

இஃது, இந்தியாவில் எல்லாச் சமபூமிகளிலும் வளருகின்ற ஒரு **வகைப்** புல்லினம். இதன் கிழங்கிற்குக் கோரைக்கிழங்கு என்பது **பெயர்.** கோரையில் பல இனமுண்டு.

இவைகள் **சிறுகோரை பெருங்கோரை** என்பனவாம் **சிகோரையில்** **கிழங்குகளுண்டு.** பெருங்கோரையில் கிழங்குகள் **கிடைப்பதில்லை.**

**செய்கை :**
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி-**Astringent.**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**stimulant.**
- உரமாக்கி-பலகாரி-**Tonic.**
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-**Diuretic.**
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-**Diaphoretic.**
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி:**Demulcent.**
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-**Emmenagogue**
- புழுவகற்றி க்ருமிநாசநி–**Vermifuge.**

**குணம் :** இதனால், நளிர்ச்சுரம், குருதியழல் நோய், சுரவகைகள், நீர் வேட்கை, முப்பிணி, கழிச்சல், பயித்தியதோடம், பித்ததாகம், கபரோகம், குதிக்காலைப் பற்றிய வாயு, வாந்தி ஆகிய இவைகள் போம்.

சீத சுரந்தீர்க்குஞ் செம்புனல்பித் தம்போகும
வாத சுரந்தணிக்கும் வையகத்தில்—வேதைசெய்ய
வந்த பிணியையெலாம் வாட்டுமுத் தக்காசு
கொந்துலவும் வார்குழலே ! கூறு.
அதிசாரம் பித்தம் அனற்ருகம் ஐயம்
குதிவாதஞ் சோபம் கொடிய—முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலும் அவ்வவர்க்கெ லாங்குணத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு.

(அ.கு.)

### கோரைக் கிழங்கு

கோல வுணவைக் குமர னடலிலடு
கோல வுணவைக் கொடுக யத்தை—

**(பொ-ள்.)** கோரைக் கிழங்கின் மாவைக் கிரமப்படி **உபயோகிப்பின** காசநோய் குணமாகும்.

### கோரை கிழங்கு குடி நீர்

முத்தக் காசு பர்ப்படகம் முதிர்ந்த விலமிச் சிருவேலி
சுத்த சுக்கு சந்தனமுஞ் சுகமாய்க் காய்ச்சிக் குடிப்பீரேல்
சித்தப் பிரமை யுடன்பிறந்த தேனே மானே சேற்கண்ணுய்
பித்தத் துடனே வந்தசுரம் பேசா தோடிப் போய்விடுமே.

**(பொ-ள்)** கோரைக் கிழங்கு, பர்ப்படகம், விலாமிச்சு, வெட்டிவேர் சுக்கு, சந்தனம் இவற்றைச் சமமாய்க் கலந்து காய்ச்சிக் குடிக்கில், பித்த சுரம் பேசாது ஓடிப்போகும்.

முடித்துக் கனத்த கருங்குழலாய் முத்தக் காசு மாம்பட்டை
இடித்தும் பொடித்துப் பிட்டாக்கி யிறுகப் பிழிந்திட டதிவிடயம்
தடித்த இலவம் பிசினேடு தகமைப் பெறவே கொள்வாயேல்
துடித்து விழுந்த வதிசார சுரத்தைப் போக்குஞ் சொன்னேமே.

**(பொ-ள்)**. கோரைக் கிழங்கு மாம்பட்டை ஆகிய இரண்டையும், இடித் துப் பொடியாக்கிப் பிட்டுசெய்து, அதை நன்ருய்ப் பிழிந்தெடுத்த சாற்றில், அதிவிடயம் இலவம்பிசின் இவற்றைச் சேர்ந்து, தக்க அளவில் உட் கொள்ள, கழிச்சல் சுரம் தீரும்.

**வ-கு** : கோரைக் கிழங்கின் குடிநீரைக் கழிச்சல், குன்மம், வாந்தி, முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

இஞ்சி, கோரைக்கிழங்கு இவ்விரண்டையும் இடித்துத் தேன் விட்டரைத்து ஒரு சிறு சுண்டை அளவு கொடுக்க, சீதக்கழிச்சல்போம்.

பச்சைக் கிழங்கை அரைத்து மார்பில் பற்றிடப் பால் சுருக்கும். சேன் கடி வாயிலும் பற்றிடலாம். உடலில் பூசிவர, வியர்வை நாற்றம் விலகும்.

கோரைக் கிழங்கு, பேய்ப்புடல், திரிபலே, திராட்சை, வேம்பு, வெட் பாலே இவைகளே வகைக்குக் 8 கிராம் எடுத்து முறைப்படி குடிநீரிட்டுக் கொடுக்க, சுரம் நீங்கும்.

அபினி, கஞ்சா முதலிய நஞ்சுக்கு, கோரைக்கிழங்கு, இலேக்கள்ளி வேர், வசம்பு, சுக்கு இவைகளே வகைக்குக் 8 கிராம் எடுத்து, முறைப்படி குடிநீரிட்டுக் கொடுக்கப் போம்.

குழந்தைகளின் ஐயசுரத்திற்குக் கோரைசேர்ந்த மருந்து பயன்படும். இதைப் பால்வாகடத்தில் காண்க.

**கோரைக்கிழங்கு முழுகுநீர்** : கோரைக்கிழங்கு, திரிபலே, மருக்காரை, புங்கு, கொன்றை, வாலுழுவை, வாற்கோதுமை, ஏழிலேப்பாலே, கோஷ் டம், ஞாழல், மரமஞ்சள், வெண்கடுகு இவற்றை நீரிலிட்டுக் காய்ச்சி நீராடிவர, பெருநோய், சொறி, வீக்கம், பாண்டு நீங்கும்.

கோரைக்கிழங்கு, சீந்தில், மரமஞ்சள், அன்னபேதி, கோஷ்டம், வெள்ளீ லோத்திரம், கந்தகம், சாம்பிராணி, வாய்விடங்கம், மனேசிலே, தாள கம், அலசிப்பட்டை இவறறைப் பொடிதது, தேகத்தில் எண்ணெய் தடவி, அதன்பின் மேற்படி பொடியைத் தேய்க்க, சருமப்படை சிரங்கு நீங்கும்.

### கோரைப்பாய்.

இது சிறு பெருங்கோரைகளால் செய்யப்படும்.

**குணம் :** இதில் படுக்க, பசிமந்தம் சுரவேகம் நீங்கும். உடலுக்கு குளிர்ச்சியும் தூக்கமும் உண்டாகும்.

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மந்தமறும்
கூறிய தேகங் குளிர்ச்சியுறும்—வாருலகில்
நன்னித் திரைகூடு நாடாது ரூட்சையிதை
யுன்னிப் புவியி லுரை.

(அ.கு.)

---

## 263. கோவை—Kovai.

**Cephalandra india.**

**Coccinia ind**

| | |
|---|---|
| **Tel.** Bimbika, Donda | **Sans.** Bimbi |
| **Mal.** Kova | **Arab.**, **Pers.** Kabare-hindi |
| **Kan.** Tonde-balie | **Hind.** Kanduri-ki-bel |

இது கொடியினம்; இந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதில் இனிப்பு, கைப்பு என இருவகையுண்டு. கருங்கோவை என மற்றோர் இனமுமுண்டு. கோவையிலையின் உருவத்தையும் நிறத்தையும் கொண்டு மூவிரல்கோவை, ஐவிரல்கோவை, நாமக்கோவை என மூன்று விதமாகப் பிரித்திருக்கிறார்கள்.

**ப. உ :** இலை, காய், வற்றல், தண்டு, கிழங்கு.

**இனிப்புக்கோவை.**

**சுவை**—இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

**கைப்புக்கோவை.**

**சுவை**—கைப்பு. **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**பொது.**

**செய்கை :**
- கோழையகற்றி-கபஹகாரி-**Expectorant**
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-**antispasmodic**
- முறைவெப்பகற்றி-முறைவ்யாதிரோதி-**antiperiodic**

**இலை.**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**stimulant**
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-**Diaphoretic**

**இலை.**

**குணம் :** இதனால், கண் குளிர்ச்சி உண்டாகும். பெரும்புண், சிறு சிரங்கு, உடல் வெக்கை நீரடைப்பும் நீங்கும்.

கண்ணுங் குளிர்ச்சிபெறுங் காசமொடு வாயுவறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும்—நண்ணுடலும்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகுங்
கோதிலாக் கோவை யிலைக்கு.

(அ.கு.)

வ-கு: இலையைக் கொதிக்கின்ற வெந்நீரிலிட்டுச் சற்றுநேரம் சென்ற பின் வடிகட்டி, வேளைக்கு 35 கிராம், அல்லது இலையை உலர்த்திப் பொடி செய்து மூவிரல் அளவாவது கொடுக்க, மேற்சொன்ன பிணிகள் தீரும். அன்றியும், இரசவேக்காடும் குறையும்.

இதன் சாற்றுடன் வெண்ணெய் சேர்த்துச் சிரங்குகளுக்குப் பூசலாம்.

இலையை எண்ணெயில் கொதிக்கவைத்து, படை, சொறி, சிரங்கு. கொடியபுண் இவைகட்குப் பூசலாம்.

இதன் ரசத்தை, வியர்வை உண்டுபண்ணுவதற்கு உடலில் பூசுவது முண்டு.

### காய், வற்றல்.

குணம் : காயால், சுவையின்மை, நீங்கா வெப்பம், கபம், சுரம் இவை போம். வற்றலால் சுவையின்மையும் கரப்பானும் நீங்கும்.

வாயின் அரோசகம் போம் மாரு அழலையறும்
நோயிற் கபமகலும் நுண்ணிடையே·—தூயவதன்
வற்றற் கருசி மருவுகரப் பான்போகுஞ்
சுத்தக்கோ வைக்காயைச் சொல். (அ.கு.)

வ-கு : இளங்காயை வாயிலிட்டு மென்று துப்ப, நாக்கின் புண்கள் நீங்கும். காயைச் சமைத்துச் சாப்பிட, வெப்பம் நீங்கும். இதை ஊறுகாய் செய்தும் சாப்பிடலாம்.

### கிழங்கு.

குணம் : இதனால், முப்பிணி, மேல்களிலுண்டாம் குத்தல், அழலைநோய், நீரிழிவு, படைகள், நாப்புண், இளைப்பு, கோழை இவைகள் நீங்கும்.

முதமேதாடம் சூலைபித்தம் மூடுகுட்டஞ் சிக்குவைநோய்
எத்துசுவா சங்கபம் இனிப்புநீர்—இத்தனையுங்
கூட்டோ டகற்றுங் குளிர்ச்சியோடு காரத்தைக்
காட்டியகோ வைக்கிழங்கு காண். (அ.கு.)

வ-கு : கிழங்கின் சாற்றை ஓர் உச்சிக்கரண்டி முதல் மூன்று உச்சிக் கரண்டிவரைக் கொடுக்க, நீரிழிவு, படை முதலியன தீரும்.

கிழங்கின் சாற்றை நீரிழிவு மருந்துகளுக்குத் துணையாக வழங்கலாம்.

இதன் தண்டு அல்லது கிழங்கைக் கொடுக்க, நீர்க்கட்டை உடைத்து நீரை வெளிப்படுத்தும்.

---

## 264. கௌரிவாற்புல்—Gowrival pul.

இது, தோட்டவேலிகளில் பயிராகும் ஒரு வகைப் புல்; நிரம்பிய சுணையுடையது. இதன் கதிர் நீண்டு நிற்கும். இதிலும் சுணை அதிகம். சிறு பிள்ளைகள் விளையாட்டுக்கு இதன் கதிரைக் கொண்டு ஒன்றோடொன்றைப் பிணைத்து, குல்லாய் முதலியன போல் உருப்படுத்திக் களிப்படைவர்.

வ-கு : இதன் சாற்றினால் பாதரசம் மடியும்.

## 265. சங்கன்—Changan.

வே. பெ. சங்கஞ்செடி, **நற்சங்கன், முட்சங்கன்.**

Azima Tetcracantha

| | |
|---|---|
| Tel. Tella-upi | Sans. Kundali |
| Mal. Changan | Hind. Kalangur-kamai |

இஃது, தென்னாட்டின், கீழ்க்கரை ஓரங்களிலும், இலங்கையிலும் பயிராகும் ஒரு வகை முட்செடி. இலை தடித்தும், இலையின் நுனியில் முள்ளுள்ளதாயுமிருக்கும்.

ப- உ: இலை, வேர், பால்.

சுவை—கைப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை**
- சிறுநீர்பெருக்கி—மூதரவர்த்தநி-Diuretic
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி-stimulant
- துவர்ப்பி—ஸங்கோஸனகாரி—astringent
- உரமாக்கி—பலகாரி-Tonic
- முறைவெப்பகற்றி—முறைவயாதிரோதி—antiperiodic
- கோழையகற்றி—கபஹரிகாரி-Expectorant.

**குணம்** : இதன் இலைக்கும் வேருக்கும், சோபை, கரப்பான், வெப்பம் கழலை, குன்மம், கீல்வீக்கம், வாதகோபம், பித்தநோய், பல நஞ்சுகள் இவை நீங்கும். கண் துலக்கமும், மிகுதியும், குருதிப் பெருக்கும் உண்டாகும்.

வீக்கம் கரப்பான் விதாகம் கிரந்திகுன்மம்
ஊக்கமிகு சூலைவாய் வோடுபித்தத்—தாக்குவிடம்
வீறுமோ கண்துலங்கும் வீசுபசி ரத்தமுண்டாம்
கூறுசங்கம் வேரிலை கட்கு. (அ.கு.)

இதன் வேர்ப்பட்டைக்கு, கோழை, இருமல், ஐயச்சுரம், கடுப்பு, ஐய அதைப்பு, கிரந்தி, உட்சுரம், வளிநோய்கள், வயிற்றுப்புழுக்கள் ஆகியவை போகும்.

சங்கம்வேர்ப் பட்டை சளியிருமலேச் சுரத்தை
அங்கவா தக்கடுப்பை ஆடதைப்பைப்—பங்கமே
செய்யுங் கிரந்தியையுள் தீகால் கிருமியையிவ்
வையந் தனிலொழிக்கு மால். (அ.கு.)

இதன் வேர்ப்படைப் பாலுக்கு, வீக்கம், நீரேற்றம், **சுரவேகம்** ஆகியவை நீங்கும்.

" சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கும் நீர்வடிக்கும் (அ.கு.)

உங்குரசு வெப்பகற்றும் ஐயமில்லை.

### இலை.

**வ - கு :** இலையின் குடிநீரை வளிநோய்கட்கு வழங்கி வரலாம் இலையை அரைத்து அம்மைப் புண்களுக்குப் பூசக் குணமாகும். இதைக் கரப்பானுக்கும் பூசலாம்.

இதன் இலையையும், வேப்பிலையையும் ஓர் அளவாக எடுத்தரைத்து, சிறு புன்னைக்காயளவு பிரசவமான நாள் முதல் ஏழு நாள் வரையில் தினம் இரு வேளை கொடுத்துப் பத்தியம் வைக்க, பிள்ளைப் பெற்ற பின் உண்டாகும் அழுக்கின் தடையைப் போக்கும்.

இதன் இலைச்சாறு கோழையை வெளிப்படுத்தும்; இருமலைத் தணிக்கும்.

**சங்கம்.**

சங்கதட் சூரணஞ் சாப்பிட வெருகடி
யங்கவுள் ளிரணமு மரந்தையு மறுமே. (தேரன் - வெண்பா.)

**(பொ -ள்)** சங்கம் பட்டையைப் பொடித்து முறைப்படி உட்கொண்டு வந்தால், உடலினுள் உண்டான, புண்களும் ஏனைய நோய்களும் அகலும்.

**வேர்ப்பட்டை**

வேர்ப்பட்டையை இடித்துப் பிழிந்த பாலை, ஒன்று அல்லது ஒன்றரைப் பலமெடுத்து, அதற்கிருமடங்கு வெள்ளாட்டுப்பால் சேர்த்துக் கொடுத்துவர, சிறுநீரைப் பெருக்கி வெளிப்படுத்துவதுடன், உடல் வீக்கம், சுரவெப்பம் இவைகளையும் போக்கும்.

வேர்ப்பட்டையை அரைத்துப் பூசிவர, வீக்கங்கள் கரையும்.

பூதைக் குடிநீரிட்டுக் கொடுத்துவர, முறைச் சுரம், கீல்வீக்கம், கோழை, இருமல், ஐயச் சுரம், உட்சுரம் தணியும்

---

## 266. சடாமாஞ்சி —Jadamanji

**வே. பெ : சடாம்சி, ஜடமாஞ்சி, பைசாசி, சடிலை, மாமிசி, பூதகேசினி.**

**Valerinae raghizona**

**Nardostachys jatamansi.**

**Eng : Valerian root.**

| சீமைச் சடாமாஞ்சி. | | நாட்டுச்சடாமாஞ்சி. | |
|---|---|---|---|
| **Tel.** | **Jadamamsi** | **Tel.** | **Jatamamshi** |
| | | **Mal.** | **Jata-mamshi** |
| **Mal.** | **Manii** | **Kan.** | **Jeta-mavashi** |
| **Sans.** | **Jatmamsi** | | |
| **Arab.** | **Sumbuluttib** | **Arab** | **Sumbulutttibe-hindi** |
| **Pers.** | **Sumbuluttib** | **Pers.** | **Sumbulutttibe-hindi** |
| **Hind.** | **Vilayati-jatamasi** | **Hind.** | **Jatamasi** |
| **Duk.** | **Vilayati-jhatamansi** | **Dec.:** | **lotan.** |
| | | **Duk.** | **Jhata-mansi** |

**சீமை இனம் :** வட ஆசியா, வட காஸ்மீரம், சிந்து, பர்மா, இலங்கை முதலிய இடங்களிலும், நாட்டு இனம் : இமயம், காஸ்மீரம், பூத்தான் முதலிய பாகங்களிலும் பயிராகிற ஒரு வகைப் பூங்கோரை இனம்.

இதற்கு நீண்ட ஆணி வேரும் பல சல்லி வேர்களுமுண்டு. புதிய வேருக்கு இனிப்பும், அதிக காரமான மணமுமிருக்கும். நாட் சென்றால் நாற்றம் பெறும். இவ்விரண்டினத்திற்கும் குணம் சற்றேறக் குறைய ஒத்திருக்குமென்பது கொள்கை.

ப - உ : வேர்.

**சுவை** - (பச்சையில்) இனிப்பு (காய்ந்தபின்) கார்ப்பு, **தன்மை**- வெப்பம்

**பிரிவு** - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-timulant.
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-Antispasmodic.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.

**குணம் :** இதற்கு, சிலந்தி நஞ்சு, பழையசுரம், உட்சூடு, வாய்வு, கழிச்சல், கண்ணோய், இருமல், குருதியழல், இரைப்பு நீங்கும்.

குட்டஞ் சில்ந்திவிடம் கோர புராண சுரம்
உட்டினங்கால் பேதிகண்ணோய் ஒட்டிருமல்—சொட்டிரத்த
பித்தமிரைப் பேகும் பெருங்கோரை என்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சிலே சொல். (அ.கு.)

**வ- கு :** சீமை இனத்தைப் பொடி செய்து 10—20 குன்றியெடை நீரிற் கலந்து, நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்று முறை கொடுக்க, பழைய சுரம், சூதக வலிப்பு நீங்கும். முக்கால் வராகனெடை கொடுக்க, கோழையை வெளிப்படுத்தும்.

நாட்டு இனத்துச் சடாமாஞ்சியை நசுக்கி, இரண்டு வராகனெடை எடுத்து ஓர் ஆழக்கு வெந்நீரில் ஒரு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அரைக்கால் முதல் காலாழாக்கு வீதம் தினம் மும்முறை கொடுத்துவர, சூதக சந்தி வலிப்பு நீங்கும்.

இதிலிருந்து ஒரு வகை மஞ்சள் நிறம் பொருந்திய எண்ணெய் எடுக்கப்படும். இதை மேற்கூறிய நோய்களுக்குக் கொடுப்பதுடன், நரைமயிர் கறுப்பதற்கும் இதைத் தடவுவதுண்டு.

---

## 267. சணப்பு—Chanappu.

**வே - பெ : சணல்.**

**Crotaaria juncea,**

**Eng: Bengal hemp.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Janapa**<br>**Japumu.** | **Kan.** | **Shanabu**<br>**Pundi.** |
| | | **Sans.** | **Pulivanji.** |
| **Mal.** | **Janapa**<br>**Pulivanji** | **Hind.** | **San.** |
| | | **Duk.** | **Janab.** |

இஃது இந்தியாவில் பல பாகங்களிலும், முக்கியமாய் வங்காளம் மைசூர் தக்காணத்திலும் பயிரிடப்படுகிறது.

ப—உ: இலை, விதை, வேர்.

சுவை—கைப்பு, கார்ப்பு தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

இலை.

செய்கை { நீர்மலம்போக்கி-வ்ரேசனகாரி-Purgative.
ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.
வாந்தியுண்டாக்கி-வமனகாரி-Emetic.

வேர்.

துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

குணம்: இதற்கு அழல் நோய் நீங்கும். இது சூல் அமைப்பைக் கெடுக்கும்.

கைப்பும் உறைப்புங் கலந்திருக்குந் தின்றக்கால்
மெய்ப்புள்ள பித்தம் விலகுங்காண்—நெய்ப்பாங்
கருப்பங்களெல்லாம் கரைந்து விழுமே
உருப்பங்க மாஞ்சணப்புக் கோர். (அ.கு.)

வ-ரு: இதன் இலையை முறைப்படி குடிநீரிட்டு, ⅛—¼ ஆழாக்கு தினம் இரு வேளை கொடுத்துவர, சுரநோயும், வளிநோயும் சூதகக்கட்டும் போம்.

வேரைக் குடிநீரிட்டுக்கொடுக்க, வயிற்று வலி நீங்கும்.

விதையை நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சித் தலைக்குத் தடவி வர, மயிர் வளரும்.

---

## 268. சண்பகம் Shanbagam

Michelia champaca.

Eng : Golden or yellow Champa.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Champakamu. | Sans. | Champaka |
| Mal. | Champaka-pu | | |
| Kan. | Sampagà-kuvvu | Hind. | Champa |
| | | Duk. | Champa |

இது மர வகுப்பைச் சேர்ந்தது; இந்தியா முழுமையும் பயிரிடப்படுகின்றது. இதன் நறுமணமுள்ள பூவை, கோவிலில் பூசிக்கும் பொருட்டுப் பயிரிட்டு வருகிறார்கள்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

இலை.

செய்கை :

உடற்றேற்றி–வ்யாதபேதகாரி–Altrative.
முறைவெப்பகற்றி–முறைவ்யாதிரோதி–Antiperidoic
உள்ளழலாற்றி–அந்தர்ஸ்நிக்தகாரி–Demulcent.
வீக்கமுருக்கி–சோபாநாசநி–Deobstruent.
ருதுவுண்டாக்கி–ருதுவர்த்தநி–Emmenagogue.
பசித்தீத்தூண்டி–ஜடராக்னிவர்த்தநி–Stomachic.

பூ.

அகட்டுவாய்வகற்றி–உதரவாதஹரகாரி–Carminative.
சிறுநீர்ப்பெருக்கி–மூத்ரவர்த்தநி–Diuretic.
வெப்பமுண்டாக்கி–உஷ்ணகாரி–Stimulant.
உரமாக்கி–பலகாரி–Tonic.

பட்டை.

துவர்ப்பி–ஸங்கோசனகாரி–Astrigent.
உரமாக்கி–பலகாரி–Tonic.

வேர்.

நீர்மலமபோக்கி–விரேசனி–Purgative.

பூ.

குணம் : இதனால், வளித் தீ (வாதபித்த) சுரம், என்புச் சுரம் வெள்ளை, ஆண்மைக் குறைவு, கண் அழலை ஆகிய இவை போம். மனக் களிப்பு உண்டாகும்.

வாத பித்தம் அத்திசுரம் மாமேகம் சுத்த சுரந்
தாதுநட்டங் கண்ணழற்சி தங்காவே—மாதே கேள் !
திண்புறு மனக்களிப் பாந் திவ்யமனம் உட்டினஞ்சேர்
சண்பகப் பூவதற்குத் தான். (அ.கு.)

வேர்.

இது, வெப்பம், சுரம். கண் நோய்கள் ஆகியவைகளை நீக்கிப் பசியை உண்டாக்கும்.

தீராத வுட்டினத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசியெழுப்பும் நிச்சயமே—ஒருங்கால்
பண்புறுகண் தோடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
சண்பக மரத்தின் வேர் தான்.

(அ.கு.)

இலை.

வ - கு : இலைச் சாற்றைத் தேன் சேர்த்து வயிற்று வலிக்குக் கொடுக்கலாம். இளந்தளிரைச் சிதைத்து நீரில் கலந்து அந் நீரைக் கண்ணில் விட்டுவர, பார்வை தெளியும். இலையில் நெய் தடவி, அதில் ஓமத்தூள் தூவி, தலையில் வைத்துக்கட்டத் தலைக்கு அதிக குளிர்ச்சியைத் தந்து, வெப்பத்தினலுண்டாகும் தலை நோயைத் தணிக்கும்.

பூ.

பூவைக் குடிநீரிட்டு அல்லது ஊறல் நீர் செய்து, குன்மம், சுரம், ஒக்காளம் முதலிய நோய்களுக்கு 30 மி.லி. —60 மி.லி. வீதம் கொடுக்கலாம். மேலும் இது, வெள்ளை முதலிய மேக நோய்களையும், நீர்ச்சுருக்கையும் நிறுத்தும்.

பூக்களிலிருந்து நறுமணமுடைய அத்தர் செய்யலாம்.

பூக்களை எண்ணெயிலிட்டுப் பிசைந்து, தலை நோய், கண்ணோய், மூக்கடைப்பு முதலியவைகளுக்கு நெற்றியில் பற்றிடலாம். இதையே வீக்கம், வாதவலி முதலிய நோய்களுக்கு மேலுக்கு தடவலாம்.

**விதை.**

விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயை, வயிற்றுவலிக்கு மேலுக்குத் தடவ வலி போம்.

**பட்டை.**

பட்டையைப் பொடித்து அல்லது குடிநீரிட்டு, முறைச் சுரத்துக்குக் கொடுக்கலாம்.
பட்டை 1-பங்குக்கு நீர் 20 பங்கு கூட்டிக் குடிநீரிட்டுக் கொடுக்க நாட்பட்ட குன்மம் நீங்கும்.

குறிப்பு : "சண்பகம்" என்னுஞ் சொல்லுக்கு வேறு பெயர் செம்பங்கி" என்று வழங்கப்படினும், இது (சம்பங்கி) கொடிச் சம்பங்கி, கொடி சசம்பங்கி ஆகிய இரண்டையும் குறிக்கும்.

## 269. சதகுப்பை—Chatha-kuppai

வே - பெ : சோயிக்கீரை விதை, மதுரிகை.

Bot Name : Peucedanum, Graveolens, Berth.

Eng. The Dill.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Soyikuravittulu | Arab. | Shibbit |
| Mal. | Shatakuppa | Pers. | Shod |
| Kan. | Sabbasagi | Hind. | Suva |
| Sans. | Misi | Duk. | Soyi |

இது இந்தியாவின் வெப்ப நாடுகளிலும் ஐரோப்பாவின் தென் பாகங்களிலும் விளைகிறது. சமையலுக்காகத் தோட்டங்களிலும் பயிரிடப்படுகின்றது.

இது பூண்டு வகுப்பை சேர்ந்தது.

ப.உ. : இலை, பூ, விதை.

சுவை—இனிப்பு, கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு— கார்ப்பு.

**பொது.**

செய்கை:
- அகட்டுவாய்வகற்றி–உதரவாதஹரகாரி–Carminative.
- வீக்கமுருக்கி–சோபாநாசநி–Deobstruent.
- சிறுநீர்ப்பெருக்கி–மூத்ரவர்த்தநி–Diuretic.
- ருதுவுண்டாக்கி–ருதுவர்த்தனகாரி–Emmenagogue.
- வெப்பமுண்டாக்கி–உஷ்ணகாரி–Stimulant.
- பசித்தீத்தூண்டி–ஜடாரக்னிவர்த்தநி–Stomachic.

## இலை.

### இசிவகற்றி--அங்காகர்ஷணநாசநி—Antispasmode.

குணம் : இதனால், வளிநோய், குருதிப்போக்கு, தலைவலி, காதுவலி, மூக்குநீர்பாய்தல், கீழ்வாய்க்கடுப்பு இவைகள் நீங்கும். அன்றியும், இது பசியை உண்டாக்கும்; ஈரல், நுரையீரல் இரைப்பை இவைகளிலுள்ள சிக்கலை அறுத்து வன்மையைக் கொடுக்கும். ஆனால், சூட்டுடம்பிற்கு ஆகாது. விக்கல், வாந்தி, ஒக்காளம், தலைச்சுற்றல் ஆகியவற்றை உண்டாக்கும். இதற்கு முறிப்பாக எலுமிச்சை அல்லது புளிப்பு மாதுளைப்பழச் சர்ப்பத்துக் கொடுக்கலாம்.

வாதமொடு சூதிகா வர்தம் சிரசுநோய
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுரம்—ஓதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீநசம் போகும்
ஞாலச் சதகுப்பை நாடு.

(அ.கு.

## இலை.

வ-கு : இதைச் சிற்றாமணக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சியாகிலும், அல்லது இதன் தனிச்சாற்றையாகிலும் எடுத்துக் குழந்தைகட்குண்டாகும் மாந்த நோய்க்குக் கொடுக்கலாம் : மேலும் இதை, சூதகசந்நி, சூதகக்கட்டு காக்கைவலிப்பு இவைகட்கும் கொடுக்கலாம்.

உலர்த்திப் பொடி செய்து சர்க்கரையுடன் கலந்து, மூன்று சிட்டிகை கொள்ள, ஐயம், தலைநோய், காதுவலி, பசிமந்தம், கீழ்வாய்க்கடுப்பு, மூக்கு நீர்பாய்தல் இவை தீரும்.

இலையை எண்ணெய் தடவி வதக்கி, கட்டிக்கும், வீக்கங்கட்கும் போடச் சீக்கிரம் பழுக்கும்.

தோல் சிவக்கும்படி, இலையை இடித்துவைத்துக் கட்டலாம்.

இலையை உலர்த்திப் பொடித்து, நோயாளியின் படுக்கை அறையில் புகைக்கலாம்.

அளவு : இலை அரைத்தது ஒரு சுண்டை, அளவு இலைக்கஷாயம் 15 மி.லி. 30—மி.லி. இலைத் தீ நீர் 1—2 தேக்கரண்டி.

குழந்தைகளுக்குண்டாகும் இசிவு, வயிற்றுப்புழு இவைகளுக்கு, இலைச் சாற்றை 10 முதல் 20 துளி வீதம் தேன் அல்லது கோரோசனையுடன் கலந்து, 4 மணிக்குகொரு தடவையாகக் கொடுத்து, மேலுக்கும் பூசலாம்.

இலையைக் குடிநீர் செய்து, பிள்ளைபெற்றவளுக்குக் கொடுக்க, குருதி சிக்கலறும்.

## விதை.

இதை இடித்துப் பொடித்து 12 கிராம் முதல் 36 கிராம் வரை எடுத்து 340 கிராம் வெந்நீரில் ஊறவைத்துக் கொடுக்க, குழந்தைக்குண்டாம் மாந்தம், பெரியவர்கட்குண்டாம் வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல் முதலியவை போம். இத்துடன் சுண்ணாம்புத் தெளிநீர்ச் சேர்த்துக்கொடுக்க, இ. ·து அதிகப் பயன் கொடுக்கும்.

விதையை அரைத்து, வெந்நீராவியில் வேகவைத்து, இதன் வேருடன் கூட்டிக கல் வாயுவிற்குப் பற்றிடலாம்.

சதகுப்பை, கருஞ்சீரகம், மரமஞ்சள் இம்மூன்றும் வகைக்கு 35 கிராம், வெல்லம் 105 கிராம் சேர்த்தரைத்துக் கொட்டைப்பாக்களவு காலே, மாலே கொடுத்து, சோம்புக் குடிநீர் கொடுக்க, குருதிச்சிக்கலே அறுத்துக் சூலமையச் செய்யும்.

பூ.

சதகுப்பைப்பூ 1 பங்கு, நீர் 20 பங்கு குடிநீரிட்டு, மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இதைத் தீநீரிறக்கினுல், அத்தீநீர் மீது எண்ணெய் மிதக்கும். அதை 35 கிராம் வரையிலும் சருக்கரையுடன் கலந்து குழந்தைகளுக்கு மேற் கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## 270. சாரணே—Charanai.

இது பூமியை ஒட்டிப் பயிராகும் பூண்டினத்தைச் சேர்ந்தது. இதில் சில பிரிவுகளுண்டு.

(1) வெள்ளேச்சாரணே : **Trianthema decandra.** இதன் பூ வெண்மை யாகவே இருக்கும். இதற்குச் சத்திச்சாரணே, வெள்ளேச்சாரணே எனப் பெயர் வழங்கும்.

(2) சாறுவேளே : இதில் இரண்டு பிரிவுண்டு. ஒன்றுக்கு வெள்ளே நிறப் பூவும், மற்ருென்றுக்குச் சிவப்பு நிறப் பூவும் உண்டு. **Trianthema pendandra; T monogyna T. Portulacastrum T.**

சிறுசாரணே : **Trianthema triquetra.**

இவைகளேக் குறிக்க, சாரணே, சாறணே, சாறடை, சாறணத்தி, சாறு வேளே, வெள்ளேச்சாரணே, சத்திச்சாரணே, வெள்ளேச்சாரடை, சத்திச்சாட்ட ரணே என்கிற பல சொற்கள் வழங்குவதால், இடத்திற்குத் தகுந்தவாறு நோய்க்குணம் நோக்கி மேற்கண்ட நான்கு வகைகளுள், கொள்ளவேண்டி யதைப் பெற வேண்டும். ஒன்றுக்கு மற்ருென்றை வழங்குவதால், முழு நன்மை உண்டாகாதெனினும், சிறிது பலனுண்டாகும்.

---

## 271. சத்திச்சாரணே—Sattichcharanai.

வே. பெ: வெள்ளேச்சாரணே, வெள்ளேச்சாரடை, சத்திச்சாட்டரணே

விருச்சிகம்.

**Trianthema ecandra.**

**Fam : Ficoideae.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella-glhaijeru | Kan. | Jaija-soppu |
| | | Sans. | Punarnava |
| Mal. | Tavizhama. | Duk. | Bees-khupre |

ப—உ : இலை. வேர்.

சுவை : கைப்பு (உவட்டல்), தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு

செய்கை { கோழையகற்றி–கபஹரகாரி—Expectorant
மலமிளக்கி-லகுவ்ரேசநி—Laxatlve.
சிறுநீர்ப்பெருக்கி-முத்ரவர்த்தநி—Duretic.

இலை முதலியன.

குணம் : இது, கட்டி, மூலவாயு, கண்படலம், மார்பு நோய் இரைப்பு நோய், சூலைப் பின்னப்படுத்துகின்ற நோய்கள் ஆகியவைகளைப் போக்கும்

வித்திரிதி மூலம் விழிப்படலம் மார்புநோய்
தத்து சுவாசங் தனிக்கருப்பை—யுற்ற
கருச்சிதறச் செய்சூசி காவாத மும்போம்
விருச்சிகத்தின் பேரை விரி. (அ.கு.)

வேர்.

இதனால், ஐயம், நீரேற்றம், தேமல், தடிப்பு, குன்மம், வலி, சிறு சிரங்கு, வெள்ளை, இருமல் ஆகியவை போம்.

சீதஞ் சலதோடந் தேமல்த மும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வண்மேகம்—ஓதரிய
காசமுதல் நோயெல்லாங் கான்சா றடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில். (அ.கு.)

சாரடையின் குடிநீர்.

ஓடுகின்ற சாரடையு முப்பு மரிதகியும்
வாடுகின்ற வேர்க்கொம்பு மாகுடிநீர்—தேடி
மறுகமறு கக்குடிக்க வாய்க்கரப்பான் வீக்கம்
பறபறென் றேபோகும் பார். (தே.வெ.)

(பொ—ள்.) சாரடை, உப்பு, கடுக்காய், சுக்கு ஆகிய நான்கையும் கலந்து குடிநீரிட்டுக் குடிக்க, கரப்பானும் வீக்கமும் விரைவில் தீரும்.

சாரணை.

சாரண வேர்முதற் சமூலச் சூரணம்
பாரணர் செய்மல பந்தம தேகுமே.

(தே.கா.)

(பொ—ள்.) சார் வேளையை நிழலிலுலர்த்தித் தூள் செய்து முறையாக உட்கொள்ள, மலக்கட்டுப் போம்.

சமூலம்—இலை.

வ—கு : இதன் சாற்றால் இரு வங்கமும் பற்பமாகும். அகத்தியர் ஓரத்தினச் சுருக்கத்தில் கூறிய வாதராட்சதக் குளிகையை முடிப்பதற்கு இதன் சாறு இன்றியமையாதது. இதை நீக்கி, சாறுவேளை, மூக்குறட்டை இவைகளினொன்றின் சாற்றால் முடிப்பது சிறப்புடைய மருந்தாகாது.

இதனைக் குடிநீர் செய்து உட்கொண்டு வர, கீழ்க்காணும் பிணிகளை விலக்கும்.

இதன் இலைச்சாற்றை மூக்கிற் பிழிய, நீரேற்றம், ஒற்றைத் தலைவலி நீங்கும். கண்ணில் விட கண் பிணிகள் யாவும் தீரும். அன்றியும், காமாலை, வீக்கம், குன்மம், வயிற்றுளைச்சல் இவைகள் நீங்கும். நஞ்சுகளை

மூறியும். இரசத்தால், குருதி, அழல்களால் விளையும் தீங்குகள் விலகும். பசி அதிகரிக்கும், இதன் இலையை வேகவைத்து நெய்யில் வறுத்து தின்று வந்தாலும் மேற்கண்ட குணங்களைப் பெறலாம்.

இதன் இலையையும், ஆமணக்கு, சுரை இவைகளின் இலைகளையும் ஓர் எடை எடுத்துத் தீநீர்வடித்துக் கொடுக்க, ஐயத்தினாலுண்டாகும் வீக்கம் விலகும்.

இதன் இலைச்சாறும் எண்ணெயும் நேர் நேர் கூட்டிக் காய்ச்சிப் பூசிவர லில் வாயுகள் நீங்கும்.

நான்கு பலம் நிறையுள்ள காய்ச்சாத பசுவின் பாலில், அரைப் பலஞ் சாற்றைக் கலந்து கொடுக்க, கட்டுப்பட்ட நீரை உடனே இறக்கும்.

**வேர்.**

வேரைப் பால் விட்டரைத்துக் கால் பலம் வீதம் காலையில் மாத்திரம் உட்கொண்டுவர, விரை (பீஜ) வீக்கம் குணமாகும்.

முற்றின வேரை வெள்ளாட்டுப் பிச்சியில் ஊறச் செய்து, நந்தியாவட்டப் பூச் சாறு விட்டுத் தேய்த்துக் கண்களிலிட, கண் நோய்கள் 96–ம் நீங்கும்.

இதன் வேர், சுக்கு வகைக்குப் பலம் கால் எடுத்துக் குடிநீர் செய்து, கொடுக்கமந்தம் நீங்கும். (தே.–அந்.)

முதிர்ந்த வேரில் ஒரு குன்றியளவு தொடங்கி, நாடோறும் ஒவ்வொரு குன்றியளவாக உயர்த்தி உட்கொண்டு, நாற்பதாம் நாள் 40 குன்றியளவு உண்டதன்பின், 41-ஆம் நாள் தொடங்கி நாடோறும் ஒவ்வொரு குன்றியளவுகுறை உட்கொண்டே வந்து, 80–ஆம் நாள் ஒரு குன்றியளவில் நிறுத்த எவ்வித வாத ரோகங்களும், சுரங்களும்—முக்கியமாய் நெறிக் கட்டிச் சாமும் பீசங்களிலும் கால்களிலும் நீரிறங்கி வேதனை செய்யும் வீக்கம் லோதரமும் (நீராம்பலும்), மலக்கட்டு, நீர்க்கட்டு, வூசிகவாயு குன்மம் முதலியனவும் தீரும். இவ் வேரின் குடிநீரும் மேற்கண்ட நோய்களைப் போக்குவதில் பின் வாங்காது.

**சாறுவேளை—சிறுசாரணை.**

சத்திச்சாரணைக் குரிய குணங்கள் இவைகட்குமுண்டு ஆனல் அதற்குப பின்னடையும்.

இவற்றில் ஒன்றை இடித்துப் சாற்றைபபோக்கித் திப்பியை வைத்து கட்ட வீக்கம் காசிரத்த நாளத்தில் தங்கும தூர்நீர் இவைகளைப் போக்கும்:

## 272. சந்தனம்—Chandanam-

Santalum album

**Eng:** Sandalwood.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gandeapu-chkka | Sans. | Shri-gandha Chandanam |
| Mal. | Chandana, | Arab. | Sandale-a |
| | | Pers. | Sandale- |
| Kan. | Gadnhad chehke | Hind. | Chandan |

இது தென்னிந்தியா மைசூர் முதலிய இடங்களிலுள்ள மலைகளில் வளருகின்றது. இதில் செம்மை, மஞ்சள், வெண்மை என மூன்று வகை உண்டு. இது நல்ல மணமுள்ள மரம்.

ப - உ : மரம், எண்ணெய்.

சுவை : கைப்பு, சிறுதுவர்ப்பு. தன்மை - தட்பம், வெப்பம், பிரிவு இனிப்பு, கார்ப்பு.

செய்கை:
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- சிறுநீர்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- வியர்வைபெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- அழுகல்மணமகற்றி - பூதிகந்தநாசநி - Disinfectant.
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Cooling.

வகை.

மூன்று விதச் சந்தனத்துள் மருந்துகளுக்குச் சிவப்பு நல்லது ; மஞ்சள் நடுத்தரமானது, வெள்ளை - பயனற்றது.

மும்மையெனச் சொல்வார் முருகுசந்தப் பேதமவை
செம்மை மஞ்சள் வெண்மையெனத் தேர்முறையே—நன்மைதரும்
உத்தமமும் மத்திமமும் தம முமாகும்
தத்தை மொழியணங்கே ! சாற்று.

(அ. கு.)

மரம்.

குணம் : மரக்கட்டையை நன்முறையில் வழங்கின் அறிவும், மன மகிழ்ச்சியும், உடலழகும், ஒளியும், மாதரிடத்திச்சையும் உண்டாகும். வெள்ளை நோய் நீங்கும்.

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்புமெழிற்
பொற்செந் திருவருளும் பூதலத்துள்—மெச்சுஞ்
சருமழ வழகுந் தனிமோ கமுமாம்
பிரமிநோ யேகும் பிறழ்ந்து.

(அ.கு.)

சந்தனம்.

இதனால், முக்குற்றம், மனக்கலக்கம், உட்சூடு, ஒழுக்கு வெள்ளை, நாவறட்சி, நமைச்சல் இவை நீங்கும். உடல் வன்மை பெறும்.

கோதில் சந்தனஞ் சீதோஷ்ணங் கொண்டிருக்கும்
வாதபித்தம் ஐயம் மனப்பிரமை—ஓதுசுரம்
மேகம் தனித்தாகம் வெப்பு சொறி யும்போக்கும்
ஆகந் தனக்குறுதி யாம்.

(அ.கு.)

வ - கு : மருந்துகளுக்குச் செந்நிறமூட்டவும் இந்திர கோபத்திற்குப் பதிலாகவும் செஞ்சந்தனத்தைக் கையாளுவதுண்டு.

சந்தனக் கட்டையைப் பொடி செய்து காய்ச்சிய குடிநீர், மாந்தம், சுரங்கள், மார்புத் துடிப்பு இவைகளைப் போக்கும். மேலும் இக் குடிநீரைச் சுரத்தில் கொடுக்க வியர்வை கண்டு, தீவிர நாடி நடையைத் தன்னிலைப் படுத்தும்.

கட்டையை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, நமைச்சல், சொறி, சிரங்கு அக்கி, படர்தாமரை, தேமல், வீக்கம் இவைகளுக்கு மேல் பூசலாம்,

சுரத்தில் காணும் தலைவலி, புருவத்தின் வலி இவைகட்குத் தேனில் அரைத்து நெற்றியில் போடலாம்.

சந்தன அரைப்பைக் கலக்கித் தெளிந்த நீர் 24 கிராம், தண்டுலநீர், தேன், சருக்கரை கலந்து உட்கொள்ள, வயிற்றுப் பொருமல், சீதக் கழிச்சல், வெப்பம், நீர் வேட்கை இவை தணியும்.

சந்தனத்தூளை மைபோலரைத்துப் பாலில் கலந்து சீழ்வெள்ளைக்குக் கொடுப்பதுண்டு. இந்நோயினருக்கு நீர்வேட்கை இருப்பின், இளநீரில் சந்தனத் தூளை ஊறப்போட்டு வடித்துக் கொடுக்கலாம்.

சந்தனத்தூளைப் புகைத்து நறுமணம் வீசவும் பயன்படுத்தி வருகிறார்கள்.

**சந்தனத் தீநீர்** : வாலையில் வடித்தெடுத்த தீநீருக்கும், குடிநீராலுண்டாகும் நன்மை உண்டு.

**சந்தனத் தைலம்** : மேற்கண்ட தீநீரின்மீது மிதக்கும் தைலம் சந்தனத்தைலம் இத்தைலத்தால், வெள்ளை உட்சூடு இவை போம்.

அளவு—5—10 துளி.

**சந்தனாதித் தைலம்** : இதைத் தலை முழ்கிவர, உடல், கை, கால், கண் எரிச்சல் தீரும். செய்கின்ற விதத்தைத் தேரையர் தைல வருக்கச் சுருக்கத்தில் காண்க.

**சந்தன மணப்பாகு** : சந்தனத் தூள் 2, பங்கு நீர் 16 பங்கு இதை 4-ல் ஒன்றாகக் வற்ற வைத்துக் குடி நீராக்கி, இதன் எடைக்கு 3 பங்கு கற்கண்டு கூட்டிகாய்ச்சி வடிகட்டிக்கொண்டு, தேவையான அளவு பன்னீர் சேர்த்து உட்கொள்ள, மூலச்சூடு, பிரமேகம், சுரம் தீரும்.

**சந்தன ஊறல் நீர்** : சந்தனத்தூள் 8 கிராம், வெந்நீர் 260 மி.லி விட்டு மூடி, ஒரு மணி நேரம் ஊறிய பின் வடிகட்டி 15—30 மி.லி.வீதம் மேற் கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## 273. சந்திர நாயகம்—Sandi-nayakam

இஃது, ஒரு வகைப் பூண்டு இனத்தைச் சேர்ந்தது. இதன் பூ மஞ்சள் நிறமாயும், சற்றேறக்குறைய சிறுசாமந்திப்பூவைப் போன்று மிருக்கும். பூவைச் சுவைத்தால், மிகு விறுவிறுப்பும் காரமுமா யிருக்கும். இது சந்நிபாத சுரங்களிற் காணும் நாவறட்சியை நீக்கும்.

---

## 274. சவுக்கு மரம்—Savukku-maram

**Casuariana equisetifolia.**

**Eng : Casuarina or Tinian tree.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Chavuku-manu** | **Kan.** | **Sura** |
| | **Ela-chettu** | **Hind.** | **Jangli-saro** |
| **Mal.** | **Chavaka-maram** | **Duk.** | **Jangli-saru** |

இது வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டு இந்தியாவில் ஏறக்குறைய பயிராக்கப்படும் மரம். விறகுக்குப் பயன்படும் பொருட்டு, இம் மரத்தை

ஏராளமாய்ப் பயிரிட்டு வளர்த்து வருகின்றார்கள். இதை பாதையோரங் களிலும் வைத்து வளர்ப்பதுண்டு. மணற்பாங்கான பூமிகளில் இம் மரம் நன்றாய்ச் செழித்து வளரும்.

ப - உ : பட்டை.

**சுவை** - துவர்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை:** { துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
உரமாக்கி - பலகாரி - Tonic.

**குணம் :** சீதபேதி, அதிசாரம் இவற்றைப் போக்கும். உடலிற்கும் பலத்தை உண்டுபண்ணும்.

## 275. சவ்வரிசி மரம்—Chavvairsi maram

### METROXYLON SAGO.

Sagus laevus.

Eng : Sago.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sabbu-biyamu | Kan, | Sabbakki |
| Mal. | Chavuari | | |

இது பனை வகுப்பைச் சேர்ந்தது. இம் மரத்தின் நடுவிலுள்ள மரச் சோற்றை உலர்த்திப் பொடித்துச் சவ்வரிசி எடுக்கிறதாகக் கருதப்படுகின்றது.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை** { உரமாக்கி - பலகாரி - Tonic.
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant

**குணம் :** இதனால், பிரமேகம், எலும்பைப் பற்றிய மேகம், சீழ்மேகம், உதிரமேகம் இவை போம். சுக்கிலமும் கபமும் உண்டாகும்.

மேகமத்தி மேகஞ்சீழ் மேகரத்த மேகமும்போந்
தேகத்திற் றுதுவுஞ்சி லேஷ்மமும்உண் டாகுமெழிற்
செவ்வரிப்ப டார்ந்தவிழித் தேமொழிமா தே யுலகிற்
சவ்வரிசி யின்குணத்தைச் சாற்று.

(அ.கு.)

**வ - கு :** இதை வேகவைத்துக் கூழாக்கி, மெலிந்த தேகிகட்கும், கழிச்சல் உடையவர்களுக்கும் கொடுக்கலாம்.

---

## 276. சாதிக்காய்—Sathikkai

**வே - பெ :** குலக்காய், ஜாதிக்காய்.

Eng: Nut Meg

Myristica Officenalis.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Jakikaya | Arab, | Jojubuva |
| Mal. | Jajikkaya | Pers. | Jaurzoboyah. |
| Kan. | Jajikayi | Hindi | Jae-phal |
| Sans. | Jatphalam | Duk. | Japhal |

இது மலேயா, பினங்கு, மொலுக்கஸ் நாடுகளுக்கு உரிமையான மரம்; ஆயினும், இலங்கையிலும், மேற்குத் தொடர்ச்சி மலை நாடுகளிலும் செழுமையாகப் பயிரிடப்பட்டு வருகிறது. மரத்தின் காய் பழுத்த பின் சதைப்பற்றுள்ளதாய் இருக்கும். கொட்டையின் ஓட்டின் மேல் சற்றுச் சிவந்து மெல்லிய தோல் போல இடை விட்டுப் பதிந்து இருப்பது சாதிப் பத்திரி என்றும், ஓட்டினுள் உள்ள பருப்பு சாதிக்காய் என்றும் வழங்கப் படும். கொட்டையின் மேல் உள்ள சதை, புளிப்பும் துவர்ப்புங் கூடிய சாதிக்காயின் மணத்தைப் பெற்றிருக்கும். இதனை ஊறுகாயிட்டுத் தின்பதுண்டு. இதற்குக் குளிர்ச்சித் தன்மை உண்டு. நம் நாட்டில் கிடைப்பவை நெய்ப்பசை மணம் இவற்றுள் குறைந்து காணும். பொதுவாக இதற்கு நல்ல மணம் உண்டு.

**ப - உ :** காய்.

**சுவை** - துவர்ப்பு, கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - **Carminative.**
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - **Narcotic.**
- மணமூட்டி - **Aromatic.**
- காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**

**குணம் :** இதனால் விந்து குறைவு, பெருங்கழிச்சல், வாயுவினாலுண்டா கும் நோய், தலைவலி, இரைப்பு (சுவாசம்), இருமல் (காசம்), நாட்பட்ட கழிச்சல், வெப்பத்தை முன்னிட்டு வரும் பிணிகள் இவைகள் போகும். ஆனால், மயக்கத்தைத் தரும். மேலும் இது, வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், அக்கினி மந்தம் இவைகளையும் போக்கும்.

தாது நட்டம் பேதி சருவாசி யஞ்சிர நோய்
ஓதுசுவா சங்காசம் உட்கிரணி—வேதோ
டிலக்காய் வரும்பிணிபோம் ஏற்றமயல் பித்தங்
குலக்கா யருந்துவர்க்குக் கூறு.

**அளவு :** 320 மி.கி. — 1,000 மி.கி. எடை.

**வ - கு :** கறிமசாலையோடும், வெற்றிலைப்பாக்கோடும் இதைச் சேர்ப்பது வழக்கம்.

சாதிக்காய் 130 மி.கி., சுக்குத்தூள் 130 மி.கி., சீரகம் 325 மி.கி. இவற்றை நன்றாய்ப் பொடி செய்து, உணவுக்கு முன் சாப்பிட, வயிற்றி லுண்டாகும் வாயுவைப் போக்கி, செரிப்பை உண்டுபண்ணும்.

2 கிராம் தூளைப் பாலிற் கலக்கி, பெருங்கழிச்சலுக்குக் கொடுக்கலாம்.

**சாதிக்காய்த் தைலம் :** சாதிக்காய்த் தூளை நீரில் போட்டு, வாலையிலிட்டு வடிக்கின்ற எண்ணெய். இதைப் பல் வலிக்குப் பூசலாம். இதில் வெண் ணிறமும் ஒரு நல் மணமும் உண்டு.

அளவு :—1—5 துளி.

**சாதிக்காய்த் தைலம் :** (வேறு) சாதிக்காயைப் பொடித்து ஆவியிலவித்து சூட்டுடனிருக்கும்போது கசக்கிப் பிழிவதனால் வரும் எண்ணெயாகும். இது கிச்சிலிப் பழத்தோல் நிறமா யிருக்கும்; வாதப்பிணி, கீல்வாயுவைப் போக்கும். இதனால் கழிச்சல் வகையாவும் போம்.

**அளவு :** 1—3 துளி.

**ஜாதிக்காய்ப் பொடி:** ஜாதிக்காய், சணல், சூடன், ஏலக்காய், கிராம்பு, சித்திரமூல வேர் இவைகளின் பொடி வகைக்கு 4 கிராம் எடை எடுத்து, நன்றாய் விரவிக் கலந்து 3 முதல் 6 குன்றி வரையில், இருமல், வயிற்று வலி, ஒற்றைத் தலைவலி, பெரும்பாடு, சூதகவலி, வாதவலி முதலியவை களுக்குக் கொடுக்கலாம்.

ஜாதிக்காய் ஊறல் குடிநீர் வாந்தி பேதியி லுண்டாகும் நீர் வேட்கைக் குக் கொடுக்கலாம்.

சாதிக்காயை அரைத்துக் கண்ணைச் சுற்றிப் பற்றிடக் கண் ஒளியடையும்.

---

## 277. சாதிபத்திரி—Chat hi-paththiri

**வே. பெ : ஜாதிபத்திரி, வசுவாசி.**

**Myristica—officinalis.**

**Eng : Arillus of the nut (Maca).**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Japatri | Arab. | Bisbasah |
| Mal. | Jatipattiri | Pers. | Bazbaz |
| Kan. | Japatri | Hind. | Javatri |
| Sans. | Jatipatri | Duk. | Joutri |

குறிப்பு (Remarks) :

இது, சாதிக்காயின் ஓட்டின் மீது மூடிக்கொண்டு, பச்சையாயிருக்கும் போது செந்நிறமும், உலர்ந்த பின் செம்மஞ்சள் நிறமுமாயிருக்கிற பொருள். இதையும் கறிமசாலை, வெற்றிலைப் பாக்கு இவைகளில் சேர்ப்பது வழக்கம்.

**சுவை** : கார்ப்பு–துவர்ப்பு, **தன்மை**–வெப்பம், **பிரிவு**–கார்ப்பு.

**செய்கை:**
- காமப் பெருக்கி—காமவர்த்திநி—Aphrodisiac.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- உறக்கமுண்டாக்கி—நித்ராகரி—Hypnotic.

**குணம்** : இதனால், தாபசுரம், நிணபேதி, நீர்க் கழிச்சல் இவை போம். இது உடற்கட்டுகளை வலுக்கச் செய்யும். அழலை உண்டாக்கும்.

சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியும்
ஓதுகின்ற பித்தம் உயருங்காண்—தாதுவிர்த்தி
யுண்டாங் கிரகணியோ போதக் கழிச்சலறும்
பண்டாங் குறையே பகர். (அ.கு.)

**வ–கு** : சாதிக்காய்க்குள்ள குணமே இதற்குமுண்டு.

---

## 278. சாமந்திப்பூ—Shamantippu.

வே. பெ. சிவந்திப்பூ, செவந்திப்பூ, செவ்வந்திப்பூ.

Chysanthemum indicum

Eng. Chamomile flowers.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chamanti | Pers. | Gule daand. |
| Mal. | Jevanti-puva | Hind. | Gul-chuni-ka-l phu. |
| Kan. | Shyavantige-huvu | Duk. | Gul-chini-ka phul. |
| Sans. | Hevamntika-pushpam | | |

NOTE.—Gul-chini or Gul-chini is applied to the above plant in South India, but in Calcutta and many other places to Plumfes acminata.

இஃது எங்கும் வளரக்கூடிய பூண்டு. இதில், வெள்ளை, ஊதா, மஞ்சள், சிவப்பு முதலிய அநேக வகைகளுண்டு. சீமைச் சாமந்திப்பூவென வேறொரு பிரிவுமுண்டு. அதற்கு Anthemidies flowers என வழங்குவார். இச் சீமைச் சாமந்திக்குள்ள குணமே நம் நாட்டுச்சாமந்திக்குமிருப்பதனால்' இதைச் சாதாரணமாய்ச் சீமைச் சரக்குக்குப் பதிலாக வழங்கலாம்.

ப-உ: பூ.

சுவை - கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- மலமிளக்கி லகுவ்ரேசனி—Laxatirs
- வெப்கமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
- முறைவெப்பகற்றி—Antipesotic
- உரமாக்கிபலஹ—Tonie

குணம்: இதனால், சூதகக்கட்டு, சூதகச்சந்நி, உப்புசம், மந்தம் குளிர்சுரம், தலைவலி, குடைச்சல் இவை போம்.

வ-கு: இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் தீரும். சாமந்திப்பூ 17 கிராம், வெந்நீர் 340 கிராம் இதை 15 நிமிஷம் மூடிவைத்திருந்து வடிகட்டிக்கொண்டு, வேளைக்கு 51 கிராம் அல்லது 68 கிராம் கொடுக்கலாம். அதிக அளவில் கொடுத்தால் வாந்தியாகும்.

சுளுக்கு, வீக்கம் முதலியவைகளுக்கும் இதை ஒற்றிடம் கொடுக்கலாம். பூக்களை வாலையிலிட்டுத் தைலம் வடித்தெடுக்கலாம். இதில் வேளைக்கு 1 முதல் 5 துளி வீதம், சருக்கரையில் விட்டுக் கொடுக்கலாம்.
இத்தைலத்தைக் கீல்வாயு வீக்கம் முதலியவைகளுக்குப் பூசலாம்.

பூவிலிருந்து ஒரு வகை சத்து எடுக்கலாம். இதை 65 மி.கி. முதல் 520 மி.கி. அளவு மாத்திரையாகச் செய்து மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## 279. சாமை—Chami.

Panicum miliaceum.

Eng. Millet.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chema-Dhanyam | Sans. | China |
| Mal. | Chama | Hind. | China. |

இஃது இந்தியாவின் பல பாகங்களிலும் பயிரிடப்பட்டுவருகிறது. இதை ஏழை மக்கள் உணவாகக் கொள்வர்.

சுவை—சிறு இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி Demulcent.

குணம் : இதனால், நீர்வேட்கை, சுரம், மேகம், வளிநோய்கள் போம். உடலுக்கு அழகைத் தரும்.

உடலிலுறு தாகசுரம் ஓடும்மே கம்போம்
அடலினுறு வாதம் அகலுங்—கடலிலுறை
ஆமை யனையபதத் தன்னமே! மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான். (அ.கு.)

**சாமைச் சாதமும் கஞ்சியும்.**

இதன் சாதத்தினால் வாதம், கோழை, சோபை இவை போம். உடல் பெருக்கும். ஆனால், இது பித்தத்தைப் பெருக்கும்.

இதன் கஞ்சி முத்தோடத்தையும் போக்கும்.

சாமைச்சோ றுண்டால் தனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை—போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

வ-கு : இதைக் கஞ்சியாகச் செய்து சாப்பிட, கழிச்சலை நிறுத்தும். உடலைப் பலப்படுத்தும். இதைப் புற்கையாகச் செய்து வீக்கங்களுக்கும் பூசுவதுண்டு.

## 208.—சாம்பிராணி—Shambirani.

வே-பெ : பெண் குமைஞ்சான், தூபம், மலாக்காச் சாம்பிராணி.

**Eng : Benzoin.**

| | | | |
|---|---|---|---|
| Tel | Sambirani | Arab. | Luban |
| Mal. | Sambrani | Pers. | Hasnlubah |
| Kan. | Sambrani | Hind. | Oud |
| Sans. | Deva-dhupika | Duk. | Oud |

**குறிப்பு (Remarks)**

இது, சியம், ஜாவா, சுமத்திரா, போர்னியோ முதலிய நாடுகளில் விளை கிற ஒரு வகைச் செடியின் பட்டையிலிருந்து வடிந்து, உலர்ந்துபோன ஒரு வித நறு மணமும் கார்ப்புமுள்ள பிசின். இப்பிசினை வெட்டிப் பார்த்தால் சிறு மணிகளைப் போலத் தோன்றும்.

இதில் (Benzoic acid) "பென்சாயிக் ஆஸிட்" என்கிற சத்திருக்கிறது.

சுவை—கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை:
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
- தடிப்புண்டாக்கி—Countor-irritant.
- சிறுநீர்பெருக்கி—Diuretic.

**குணம்** : இது நாட்பட்ட இருமல், மார்ச்சளி, குன்மம் இவைகளைப் போக்குமென்பது கொள்கை. இதன் புகை, நுண்புழுக்களையும் கெட்ட நாற்றத்தையும் போக்கும்.

சாம்பிராணியை அப்படியே பொடி செய்து தனியாகக் கொடுப்பது வழக்கில் காணப்படவில்லை.

இதனால் வளி ஐய நோய்கள், கண்ணோய், நீங்காத் தலைநோய், நீர்ப்பீநசம் விலகும்.

வாதசீ தங்கண்ணோய் மாருத் தலைவலியும்
ஓதமுறு பீநசமும் ஒட்டுங்காண்—பூதலத்தில்
வேம்பிதுதான் என்ன மிருகசப்பை வாய்க்களிக்கும்
சாம்பிராணி என்னும் சரக்கு.

**வ - கு** : இதை வெந்நீர் விட்டரைத்து மேலுக்குப் போட வெப்பத்தைத் தரும். இதனால் நாட்பட்ட இரைப்பு, ஐயநோய்கள் போம்.

இதனால், சாம்பிராணித் தைலம், சாம்பிராணிப் பதங்கம் முதலியவைகள் செய்யலாம்.

**சாம்பிராணிக் களிம்பு.**

சாம்பிராணித்தூள் 1, பன்றி நெய் 4—பன்றி நெய்யை உருக்கி, அதில் சாம்பிராணியைச் சேர்த்து இடைவிடாது துழாவி, 2 மணி நேரஞ் சென்ற பின் வடிகட்டி, சக்கையை நீக்கி எடுத்துப் புண்களுக்குத் தடவப் போம்.

**சாம்பிராணிப் பதங்கம்.**

மலாக்கா சாம்பிராணியைப் பதங்கித்து எடுக்க, வெண்ணிறமான சிறிய கம்பிகளாய் இருக்கும். இதற்கு நல்ல மணம் உண்டு. நீரில் அதிகமாகக் கரையாது (சாராயத்தில் கரையும்) காற்றினால்; கெடாது. பதங்கம் சாம்பிராணியைவிட மிகக் காரமுள்ளது. ஊடுருவிப்பாயும் தன்மையும் உள்ளது. இதனைச் செய்யும் முறையைத் தேரையர் கரிசலிலும், அகத்தியர் பரிபூரணம் என்னும் நூலிலும் காணலாம். எரிக்கப் புகையும். இப்புகை இருமலையுண்டாக்கும்.

**அளவு** : 30 மி. கி.—130 மி. கி. எடை.

**சுவை** - கார்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை :
- கோழையகற்றி-காஹரகாரி-Expectorant.
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant.
- சிறுநீர்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - Antiseptic.
- கற்றுகளாக்கி - பாஷாணபேதநி - Antei-lithic.

**குணம்** : இது முக்குற்றத்தையும், இரைப்பு, மஞ்சட்காமாலை, குழந்தை கட்குக் காணுகிற சொட்டு நீர், சுண்ணம்பு கலந்து வெளிப்படும் சிறுநீர், நாட்பட்ட மார்ச்சளி முதலிய நோய்கட்கும், கொழுப்புகளைப் புளிக்காதபடித் தடுக்கவும், அழுகவொட்டாமற் பாதுகாக்கவும் வழங்கப்படுகின்றது.

வ - கு : இப்பதங்கத்தைத் தக்க அளவெடுத்துச் சருக்கரை அல்லது வெல்லப்பாகில் கலந்து மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

கால் ஆழாக்கு நீரில் ஓர் உழுந்தெடை கூட்டிக் கலக்கிப் புண்களைக் கழுவலாம்.

சூதகநோய்க்கும், கீல்வாயுக்கும் ½—1 உழுந்தெடை வரையில் வெற்றிலையில் வைத்து கொடுக்கப்போம்.

**சாம்பிராணித் தைலம்.**

வாய் அகன்ற ஒரு சட்டியில் ஒரு பலம் பளிங்குச் சாம்பிராணியை சிறு சிறு துண்டுகளாக நறுக்கிப்போட்டு, அடுப்பிலேற்றி, சட்டிவாய் பொருந்தும்படியான தட்டு ஒன்றால் மூடி, அதில் நீர்விட்டு, சிறு தீயிட்டு எரிக்கத் தைலம் பிறந்து, தட்டின் அடிப்புறத்தில் ஒட்டிக்கொண்டு படிந்திருக்கும். இதை வழித்து எடுத்துக் கொள்ளவும்.

இத்தைலத்தை, தலைவலி நீரேற்றம் இவைகளுக்கு நெற்றிலும், கன்னத்திலும் பூசலாம்.

**சாம்பிராணிப் பதங்கம் செய்முறை.**

ஒரு சேர் பளிங்குச் சாம்பிராணியைப் பாக்குபோல் உடைத்து ஒரு வாயகன்ற தோண்டியிலிட்டு, ஒரு காகிதத்தை நீண்ட குல்லாய்போலும், குல்லாயின் அடிபுறம் தோண்டியின் வாய் பொருந்தும்படியாயும் செய்து, பிசினியால் ஒட்டிச் சிறு தீயிட்டு இரண்டு நாழிகை எரிக்க, குல்லாய்க்குள் பதங்கம் படிந்திருக்கும். இதனைக்கொண்டு மாத்திரை செய்முறையை அகத்தியர் பரிபூரணத்தில் காண்க.

## 281. சாயமரம்—Chaya-maram.

**வே. பெ : செம்மரம், வத்தங்கிக் கட்டை, வர்த்தங்கிக் கட்டை**

**Hmatoxylon compechinum.**

**Eng : Logwood tree.**

**கவனிப்பு** : இன்பூறலுக்கும் "சாய வேர்" என்று ஒரு பெயரிருப்பதால், இடம் நோக்கிப் பொருள் கொள்ளவும்.

**Mal. Chemmaram.**

இம் மரச் சுவைகயின் உட்புறம்
சிவப்பும் மேற்புறம் கறுப்புமாக
இருக்கும் வாயிலிட்டுச் வைத்தால்
நாக்கு சிவப்பாகும்.

ப-உ. : மரச்சக்கை.

**சுவை**-துவர்ப்பு, **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி-ஸங்கோசனகாரி-**Astringent.**
உரமாக்கி—பலகாரி-**Tonic.**
வெப்பகற்றி-ஜ்வாஹரகாரி-**Febrifuge.** }

**குணம்** : இதை நாட்பட்ட கழிச்சல், சுரம், சீதபேதி, குருதிப்பெருக்கு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இரத்தப் பெருக்கொடு நாட்பட்ட பேதியிவை
மெத்தச் சுரத்தோ டொழியுங்காண்—இத்தலத்தில்
தூயமணிப் பூணொலிக்கும் தூமயிலே ! நாளும்
சாயவேர்ச் சக்கைதனைச் சேர்.

(அ.கு.)

வ-கு : சாயவேர்ச் சக்கைத் தூள் 35 கிராம், நீர் அரைப்படி இதை ஊறல் குடிநீர் செய்து, கருவாப்பட்டை 4 கிராம் எடை சேர்த்துக் குளிர்ந்த பிறகு வடிகட்டி, தினம் 35 அல்லது 70 கிராம் எடை வீதம் மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

பெரும்பாடு, சூலகத்து பிறந்த புற்று இவைகளாலுண்டாகும் குருதிப் பெருக்கையடக்கி, இதன் சூடான குடிநீரை உட்செலுத்துவதுண்டு.

## 283 சாரப்பருப்பு—Charap-paruppu.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Charapappu | Mal. | Mural |
| Sans. | Priyalu | | |

இது, காட்டு மாஞ்செடியின் பருப்பு.

**சுவை**-இனிப்பு, **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை** : இன்பம்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac.

**குணம்** : இதனால், நீர்ச்சுருக்கம நீர்க்கடுப்பும் நீங்கும். வெண்ணீர் இறுகும். இரசம் முதலிய நஞ்சுகள் நீங்கும்.

சாரப் பருப்பால் தனிமிசிரி யின்பருப்பால
நீரப் பருங்கடுப்பு நீர்ச்சீதந்—தீரத்
தொலையுமிர தங்கந்தி துய்த்தார்க்கு நன்குங
கலையும்விந் துவுக்கூக்கங் காண். (அ-கு.)

**வ-கு** : இதை வன்மையைப் பெருக்குவதற்காகச் செய்யும் இலேகியங்களில் சேர்ப்பதுண்டு. இதனோடு பசுவின்பால், சீனக்கற்கண்டு, குங்குமப்பூ முதலியவைகளைச் சேர்த்துப் பாயசம் செய்து சாப்பிட்டுவர, உடல் உறமாகும்.

## 284. சாலாமிசிரி—Shala-mishiri.

**Orchis mascula.**

**Eng. Salep Orchid.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sala-misir | Pers. | Saalab-misri |
| Mal. | Sala-mishri | Hind. | Saalab-misiri |
| Arab. | Saalab-misri | Duk. | Saalab-misiri |

இது, பெர்ஷியா தேசத்தில் பயிராகின்ற ஒரு வகைச் செடியின் கிழங்கு. (The dried root of Orchis mascula) மேனாட்டு வைத்தியத்தில் வழங்குவதாகத் தெரியவில்லை. யூநானி வைத்திய நூல்கள் இதைக் குறித்துச் சிறப்பாகக் கூறும்.

**ப உ** : கிழங்கு.

**சுவை**-இனிப்பு ; **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை**:
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

குணம் : இது சுக்கில விருத்தியையும், உடல் வன்மையையும் உண்டாக்கும்.

வ-கு : சாலாமிசிரி, சீமை தண்ணீர்விட்டான் கிழங்கு, சிங்காரக்கிழங்கு, இச் போகல்விரை,ந்தோல் என்னும் இந்நான்கினையும் தனித்தனியே பொடித்து, ஒரெடையாகக்கொண்டதில் இரண்டு கரண்டி (Teapoon) அளவு ஓர் ஆழாக்குப் பாலுடன் கலந்து, சிறு தீயில் காய்ச்சிக் கஞ்சி போலச் சருக்கரைக் கூட்டிக் குடித்துவர, உடல் வலுக்கும், சிறுநீரின் எரிச்சலையும், சச்சுருக்கையும் போக்கும்.

குறிப்பு : அன்னம், பாலையும் நீரையும் பிரிக்குமென்பதுபோல, இது நீரிலுள்ள உப்பைப் பிரித்து நன்னீராக்குமெனக் கூறப்பட்டிருப்பதால், இத்தகைய குணமுடைய கிழங்கையே பெறவேண்டும். ஏனெனில், சில கிழங்குகளையும், சில பிசின்களையும் பக்குவஞ் செய்து சாலாமிசிரி என விற்கப்படுகின்றது.

## சிவதை—Shivadai.

**Bot. name : Impmea turpethum, Br.**

**Fam : Convolvulaceae.**

**Eng - Turpeth root.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tegada. | Sans. | Trivrith<br>Tributa |
| Mal. | Trikolpa-konna | Arab. | Turbud |
| | | Hin. | Nisoth |
| Kan. | Tigade | Hind. | Nasvath |

**வளரும் இடங்கள்.—**

இஃது இந்தியா முழுவதும் வளருகிற பூண்டு.

குறிப்பு (Remarks)—இதில் வெள்ளை, கறுப்பு என இரண்டு வகையுண்டு. இதன் வேர், வெளிப்புறம் கருமையாகவும், உட்புறம் வெண்மையாகவும் இருக்கும். வெட்டுண்ட இருபக்கங்களிலும் பிசின் படிந்திருக்கும்.

ப-உ : வேர்.

சுவை-கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : நீர்மலம்போக்கி வ்ரேசநி Purgatibve.

### 31. வெண்சிவதை வேர்.

உள்ள மமூலம் உதவார்த்த மும்வயிற்றைக்
கொள்ளுபித்த வாதமுமபோங் கூறுங்கால்—பிள்ளைகட்குச்
செப்பு இரசமும்போந் தேனே ! யுலகத்துள்
தப்பில் சிவதைக்குத் தான்.

(அ-கு.)

இதனால், உள்மூலம், வயிற்றுள்ளுண்டாம் கேடுகள், தீவளி (பித்த வாத ) நோய்களும், சிறுபிள்ளைகளுக்குண்டாகும் சில நோய்களும் போம்.

கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை
இப்புவியில் நாடொட்டா திவ்வளவோ—செப்புதரச்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவதைதனை விள்.

(அ-கு)

கைப்புந் துவர்ப்புங்கலந்த வெள்ளைச் சிவதை, தீக்குற்றத்தைப் போக்கும். வயிற்றுப் புழுக்களை வெளியாக்கும்.

**கருஞ்சிவதை வேர்.**

காரமுடன் கைப்புமுண்டாங் காணு எலிவிடத்தைப்
பாரவனர் குன்மத்தைப் பற்றறுக்கும்—பாரில்
தெரிந்துரைத்தோம் பேதிகட் டுந்தே மொழியே !
கருஞ்சிவதைக் கந்தமது காண். (அ.கு.)

காரமும் கைப்புமுடைய கருஞ்சிவதை, எலிக்கடியால் பிறந்த நஞ்சையும, அனல் குன்மத்தையும் போக்கும்.

குறிப்பு.—மேற்கூறிய இரு வகை சிவதைகளின் பொதுக்குணம் ஒன்றே ஆயினும், கருஞ்சிவதை மிகுந்த கழிச்சலை உண்டாக்கும்.

வ-கு: இதன் பொடியை 2 கிராம்—4 கிராம் திராட்சையுப்பு அல்லது கல்லுப்புடன் சேர்த்துக் கொடுத்தால் கழியச்செய்யும்.

இதன் பொடி 372 கிராம், சருக்கரை 372 கிராம், திப்பிலி 68 கிராம் இவைகளைக் கலந்து, வேளையொன்றுக்கு 650 மில்லி கிராம் கொடுக்க, மேறகூறிய நோய்கள் போம்.

இது கழிச்சலை உண்டாக்கும். ஆதலின், இது குடிநீர் வகையிலும், பொடி, மாத்திரை, இலேகியம் முதலியவைகளிலும் சேரும்.

---

## 286. சிவனார்வேம்பு—Shivanar-vembu.

**வே பே : காந்தாரி.**

**Indigofera aspalathoides**

| | |
|---|---|
| **Mal. Manaveli** | **Kan. Shivamalli-gida** |

இது தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய பூண்டு.

**ப உ :** இலை, பூ, தண்டு, வேர்.

**சுவை :** கைப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி-**Stimulent.**
- **உள்ளழலாற்றி-அந்தாஸ்நிக்தகாரி-Demulcent.**

**குணம் :** இதனால், தோலைப்பற்றி வரும் படைகள், நாட்பட்ட புண, சொறி, சிரங்கு, பிளவை, கொடுமை செய்யக்கூடிய வளிநோய்கள், குறைநோய், மந்தம், பாம்பு நஞ்சு இவை நீங்கும். அழகுண்டாகும்.

**சிவனார் வேம்பு.**

குட்டஞ் சிரங்கு குறைப்புப் புசமாந்தை
கட்டப் பிணிகள் கழலுமே—திட்டம்
உரனிம்பங் காயத்துக் குண்டாகு மேலை
அரனிம்ப மென்னுமருந் தால். (தேரன்-வெண்பா.)

சிவனார் வேம்பால், குறைநோய் (குட்டம்), சிரங்கு, இரைப்பு, உப்புசம் விளமாந்தை முதலியன போம்.

சாய்க்குமிடிப் புண்பழம்புண் சர்மகுட் டம்பிளவை
தீக்கடுகால் வன்பெருநோய் சிந்துமா—நோய்க்கு
விதையாதி வேம்பினு மெய்க்கழகு காலே
உதையாதி வேம்பினு லுன். (அ-கு.)

வ-கு: இலையையும் பூவையும் குடிநீரிட்டுக் குடிக்க, அது தோலைப்பற்றிய படை முதலிய நோய்களை விலக்கும்.

வேரை வாயிலிட்டுச் சுவைக்க, பல் வலி, வாய்ப் புண் முதலியன நீங்கும்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, சொறி சிரங்கு முதலியவைக ளுக்குப் பூசப்போம்.

**சிவனார்வேம்புத் தைலம்** : இத்தைலத்தை உள்ளுக்குக் காசெடை கொடுத்து, மேலுக்குப் பூச, பெருநோய் படை முதலியவைகள் போம். இத் தைலத்துடன் சிவனார் வேம்புப்பொடி சேர்த்துக் கொடுக்க, பெரு நோய், வெடிசூலை, கரப்பான், நச்சுப் புண் தீரும்.

இதன் வேரை இடித்து வெண்ணெயில் குழைத்து வீக்கங்களுக்குப் பூசலாம்.

**சிவனார்வேம்புக் குழித்தைலம்** : சிவனார் வேம்பு வேர் 340 கிராம், வாலுழுவை அரிசி 340 கிராம் இவ்விரண்டையும் கருடன் கிழங்குச் சாற்று லரைத்து, வில்லை செய்துலர்த்திக் குழித்தைலமிறக்கவும்.

இதில் கற்பூரம் சிறிது கூட்டிக் குழப்பி, வெடிசூலை, நாட்பட்ட புண் அடிப்பட்ட புண் இவைகளுக்குப் பூசப் போம்.

---

## 286. சிறுநாகப்பூ—Chiru-nagappu.

வே-பெ : நாகம், நாகபுட்பம், நாகேசரம், கேசரம், சாம்பேயபக்,
கநகம், காஞ்சநம், ஏமம், ஆடகம்.

**Mesua ferrea.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Naga-kesara** | **Sans.** | **Naga-kesara** |
| **Mal.** | **Nakappuvu** | | |
| **Kan.** | **Naga-kesara** | **Hind.** | **Nag-kesar** |

இஃது, இமயம், கீழ் வங்காளம், ஆசாம், கீழ்த்தொடர்ச்சி, மல் தொடர்ச்சி மலைகள், பர்மா முதலிய நாடுகளில் பயிராகின்றது.

**ப-உ** : இலை, மொக்கு, பூ, விதை, வேர், பட்டை.

**சுவை-சிறுகைப்பு, துவர்ப்பு. தன்மை-தட்பம், பிரிவு-கார்ப்பு.**

செய்கை

பூ.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
அகட்டுவாய்வகற்றி-உத்ரவாதஹரகாரி-Carminative.
காய்.
மணமூட்டி-Aromatic.
காறலுண்டாக்கி-Acrid.
நீர்மலம்போக்கி—வ்ரேசனி—Purgative.
பட்டை.
சிறுதுவர்ப்பி-லகுஸங்கோசனகாரி-Astringent (Mild).
வேர் பட்டை.
மணமூட்டி-Aromatic.
வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி—Diaphoraic.

குணம் : இது வெள்ளை, இருமல், கழிச்சல் இவைகளைப் போக்கும்.

சிறுநாகப் பூவினது செய்கைதனைச் சொல்வோம்
குறியாகும் மேகத்தைக் கொல்லும்—நெறிவிட்டுத்
தீதாய்ச் செல்வாயுவையுந் தீர்க்குமிரு மற்போக்கும்
கோதாய் ! இதையறிந்து கொள்.

மேலும், நீரடைப்பு, குருதிப் போக்கு, புண், கொப்புளம், காலெரிச்சல் ஆகியவை போக்கும்.

இலை.

வ -கு : இலையைப் புற்கை செய்து தலையில் வைத்துக்கட்டக் குளிர்ச்சி தரும்.

இலையை அரைத்து, புண் கொப்புளம் இவைகளுக்குப் போடலாம்.

இலையைக் குடி நீர் செய்து கொடுக்க, விரல் காலடி இவைகளிலுண்டாகும் எரிச்சல் போம்.

மொட்டு.

இதை மணப்பாகு செய்து சீதக்கழிச்சலுக்குக் கொடுக்கலாம்

பூ.

பச்சைப் பூவை அரைத்து, வெண்ணெய் கற்கண்டுடன் கூட்டி உண்டு வர, குருதிப்போக்கை அடக்கும்.

பூ உலர்ந்தபிறகும் மணம் மாருதிருப்பதால், பொடி, இலேகியம், தைலம் இவைகள் மணம் பெற இதைச் சேர்க்கின்றனர். மணப்பூச்சுக் கலவைகளிலும் இது சேரும்.

உலர்ந்த பூவை நெய் விட்டரைத்து, கால்களில் காணும் எரிச்சலுக்குப் பூசிவரலாம்.

இப்பூவைச் சிறிது நெய் விட்டுக் காந்தாமல் வறுத்துப் பொடிசெய்து, தக்க அளவு (1—2 கிராம்) எடுத்து நெய் விட்டுக் குழப்பியுண்ண குருதிப் போக்கு, நாவறட்சி, வயிற்றுளைச்சல், இருமல், செரியாமை, மிகுதியாக வியர்த்தல் என்னும் நோய்கள் யாவும் போம்.

விதை.

இதன் விதை ஒரு பங்கு, சதாப்பிலை அரைப் பங்கு சோதத்தரைத்துக் கழற்சியளவு கொள்ள, முறைக் காய்ச்சல், வெள்ளை, இருமல் போம்

பட்டை.

இதை ஊறல் குடிநீர் செய்து உட்கொண்டுவர, உடல் வலுக்கும்.

---

## 287. சிறுபேயத்தி—Chiru-peyatti.

**Ficus Polycarpa**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chinna-verr-atti | Duk. | Chhota Jungli-anjir |
| Mal. | Cheriya kattatti | Hindi | Chota Jangli-anjir. |

இது, பர்மாவிலும், பினங்கு, சிங்கப்பூர் முதலிய இடங்களிலும் வளருகின்ற சிறிய மரம்; தென்னிந்தியாவிலும் பயிராகும்.

ப-உ: பட்டை, பழம், விதை.

சுவை: துவர்ப்பு, கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை:
- வாந்தியுண்டாக்கி-வமனகாரி—Emetic.
- முறைவெப்பகற்றி-முறைவ்யாதிரோதி—Antiperiodic.
- நீர்மலம்போக்கி-விரேசநி—Purgative.

குணம்: இது வாந்தியையும் பேதியையும் உண்டு பண்ணும்; பாலைச் சுரப்பிக்கும்; முறைச்சுரத்தைத் தணிக்கும்.

சிறுபேயத் திக்குப் பெரும்வாந்தி பேதியுமாம்
மறுபோ துதிசுரமும் ஏகுமே—நறுங்குடிலாள்
கொங்கையினற் பாலைச் சுரப்பிக்கும் பாரினில்
தங்கு விதைகனியி னால்.

(அ. கு.)

வ-கு: பட்டை, பழம், விதை இவைகளுக்கு வாந்தியை உண்டு பண்ணும் குணமுண்டு.

பழத்தைத் தின்றால், பால் சுரக்கும்.

கனியை உலர்த்திப் பொடித்து நீர் விட்டுக் கிளறி, கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம்.

நன்றாய் பழுத்த பழங்களின விதையை உலர்த்தி, காற்றுப் புகாமல் சீசாவில் அடைத்து வைத்து, அதில் 4 கிராம் கொடுக்க நன்றாக வாந்தியாகும்.

பட்டையை உலர்த்திப் பொடித்து, அதில் 2—4 கிராம் நீரில் கலக்கிக் கொடுக்க, வாந்தியாகும்.

ஷ பட்டைப் பொடி 650—1,300 மில்லி கிராம் வரையிலும் கொடுக்க, றைச் சுரம் நீங்கும். 325—650 மில்லிகிராம் வரையிலும் கொடுக்க, டல் வலுக்கும்.

இதன் பாலால் ரசம் பற்பமாகும்.

---

## 288. சிற்றாமுட்டி—Chirtamutti.

வே-பெ : சிறுந்தொட்டி, சிறுந்தொட்டி, சிறு குறுந்தொட்டி

**Pavonia Zeylanica.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chittamutti | Mal. | Kurrunthotti |
| Sans. | Bala | | |

இ. .து இலங்கையிலும், அந்தமான் தீவிலும் ஏராளமாக வளருகின்றது; தென்னிந்தியாவிலும் பயிராகும்.

ப-உ. சமூலம்.

சுவை - துவர்ப்பு , தன்மை - தட்பம். பிரிவு - இனிப்பு.

செய்கை : வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி—Emollient.

குணம் : இதனால் எலும்பு சுரம், அழல் நோய் இவைகள் நீங்கி கண்ணுக் கொளியுண்டாகும். மேலும் இது தைலங்களில் சேரும்

அத்தி சுரமுதல் அனந்தசுரம் பித்தமும் போம்
மெத்த விழிக்கொளியாம் வீறுதயி—லத்திற்காம்
நற்று மரைத்திருவு நாடு மெழிற்றிருவே !
சிற்றாமுட் டித்துரைச் செப்பு (அ-கு.

வை - கு : இதன் வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, இஃது அத்திசுரத்தை நீக்கும் அழல் நோயைக் கண்டிக்கும் ; சுர தாகத்தைப் போக்கும்.

இருபலே முக்கா வேளை யிசைந்தசுக் கதனிற் பாதி
யொருபடி தண்ணீ ரெட்டி லொன்றெனக் காய்ச்சிக் கொள்ளப்
பெருகிய கிராணி வாயு பெலத்திடுங் குன்ம ரோகம்
பொருவது தேசம் விட்டுப் போவது திண்ணந் தானே.

(பொருள்) சித்தாமுட்டி, பேரா முட்டி, முக்காவேளை கடுக்காய், நெல்லிக் காய், சுக்கு ஆகியவற்றை ஒரே அளவில் எடுத்து 1,400 மி.லி. தண்ணீரில் இட்டு, எட்டில் ஒன்றாய்க் குறுக்கி வடித்துக் குடித்துவரில், கிராணி, வாயு, குன்ம நோய் முதலியன போய்விடும்.

மிக்க சிற்று மல்லிபேரா மல்லி முள்ளி
வில்வவிலே கண்டங்காலி பாதிரித் தோலொ
தக்கநிலக் குமிழ்முத்த மகில்வேம் போடு
தகுமான திப்பிலியுங் கோஷ்ட மல்லால
சுக்குமிகு நெருஞ்சிலொடு தோடை சீந்தில்
சுகமான பர்ப்படகஞ் சரியாய்க் கொண்டு
பக்குவமா யிருநாழி நிரெட்டொன்றாய்ப்
பருகில்வெகு வாதசுரம் பறந்து போமே.

(பொருள்) சிற்றாமல்லி, பேராமல்லி, நெல்லிமுள்ளி, வில்வ இலே, கண்டங்காலி, பாதிரிப்பட்டை, நிலக்குமிழ், முத்தக்காசு, அகில், வேம்பு, திப்பிலி. கோஷ்டம், சுக்கு, நெருஞ்சில், ஆடாதோடை, சீந்தில், பர்ப்படகம் முதலிய வற்றைச் சம அளவாய் எடுத்துக்கொண்டு, இரண்டு நாழி நீர் விட்டு எட்டில் ஒரு பங்காகுமாறு பக்குவமாய்க் குறுக்கிப் பருக, வாதசுரம் பறந்துபோகும்.

சிற்ரு முட்டி பசும்பயறு சிறந்த படகம் வில்வமொடு
கொத்து மல்லி வகைச்சமனுய்க் குறுக நீர்விட் டெட்டொன்ருய்
மெத்தப் பருகப் பழவரிசி மெய்யாய்க் காய்ச்சி நீர்கொள்ள
நித்தந் துயர தோஷமது நிலேவிட்டோடும் நிச்சயமே.

(பொருள்.) சிற்ருமுட்டி, பச்சைப்பயறு, பர்ப்படகம், வில்வம், கொத்து மல்லி ஆகியவற்றைச் சமவெடையில் சேர்த்து, அதற்குத் தகுந்த நீர் விட்டு, எட்டில் ஒரு பங்காகக் குறுக்கி, பழைய அரிசிக் கஞ்சியுடன் கலந்து பருக, தோஷ சுரம் நீங்கும்.

சிற்ருமுட்டிவேர்ப் பொடி 360 கிராம் எடையை, 2,800 மி.லி. தண்ணீர் விட்டு 700 மி.லி. குறுக்கி, அதில், சுக்கு, மிளகு, ஏலம், வெட்டிவேர் வகைக்கு 18 கிராம் எடை அரைத்துப்போட்டு, நல்லெண்ணெய் 1 லிட்டர் விட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு, வாரம் இரு முறை தேய்தது முழுகிவர, கண் நோய்கள், வளி நோய்கள் தீரும்.

---

## 289. பேராமுட்டி—Peramutti.

**Pavonia odorata.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pedamuttavapulagamu | Sans. | Mahabala |
| Mal. | Peramutti | Hind. | Suganda-vala |
| Kan. | Bala-rakkasi-gida | | |

இது, பெரும்பான்மையாய் வட இந்தியா, வங்காளம் முதலிய இடங்க ளிலும், சிறுபான்மையாய்த் தென்னிந்தியாவிலும் வளருகின்றது; இது கஸ்தூரியின் மணம் சிறிது பொருந்தியுது.

ப-உ : சமூலம்.

சுவை—துவர்ப்பு. தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.
- அகட்டுவாய்வகற்றி—ஜடராக்னிவர்த்தகி—Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- வியர்வைப்பெருக்கி ஸ்வேதகாரி—Diaphoretic.

குணம் : இது, வளிசுரம், நீர்வேட்கை, குழந்தைகட்குக் காணும் மாந்தம், கணம், ஐயசுரம், தீக்குற்றம் இவைகளேப் போக்கும்.

வாதசுரம் தாகம் மதலேக் கணமாந்தம்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கும்—ஓதுநம்பாற்
சேராமுட் டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேராமுட் டித்தூரைப் பேசு.

(தே.கு)

உ-கு : இதன் வேரைக் குடிநீரிட்டு, சுரம், நீர்வேட்கை, சிறுநீர் எரிச்சல், இருமல், மாந்தகணம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இஃது வியர்வையைப் பெருக்கி அதனே வெளிப்படுத்திச் சுரத்தைத் தணிக்கும்.

## 290. சின்னி—Chinni.

**வே-பெ. இட்டிக் கிழங்கு.**

**Acalypha Fruticosa,.**

**Tel** Chinni **Dec.** Chinni-ka-jhar

இது, று செடி வகுப்பைச் சேர்ந்தது. இந்தியாவின் தென் திசையில் பயிராகும். இதில் சிறுசின்னி பெருஞ்சின்னி என இரு பிரிவுண்டு.

**ப-உ. :** இலை, வேர்.

**சுவை**—கைப்பு. **தன்மை**—வெப்பம். **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை.**
- செந்நீரிளக்கி—Attenuant.
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- பசித்தீத்தூண்டி—ஜடராாக்னிவர்த்தநி—Stomachic.
- நச்சரி—விஷநாசநி—Alexipharmic.

### சிறுசின்னி—Chiruchinni.

**குணம் :** இதன் இலைக்கு, வண்டு முதலிய கடி, நஞ்சு, இன்னதென வறியப்படாத காணுக்கடி நஞ்சு, இடுமருந்து, வெள்ளை, கணச்சுரம்,—மந்தம் ஆகிய இவைகள் போம்.

கடிவிடமுங் காணுக் கடிவிடமும் மாதர்
இடுவிடமும் ஓடுமிது வன்றி—நெடியவிழிக்
கன்னிகையே·மேகங் கணக்காய்ச்சல் மாந்தமும்போஞ்
சின்னி யிலைக்குத்.தெறித்து.

**வ-கு :** இதன் இலை பலம் காலுடன், ஒரு திரிப்பூண்டு, பத்து மிளகு சேர்த்து அரைத்துக்கொடுக்க, வண்டுகடி, காணுக்கடி, இடுமருந்து முதலியன போம். உப்பு புளி ஆகா.

இதன் இலையை மாத்திரம் அரைத்து, ஒன்று முதல் மூன்று சுண்டை யளவு கொடுத்துவர, செரியாமை, வாந்திப்பேதி, இவற்றைப் போக்கி பசியைத் தூண்டும். செந்நீரிளகும். பசிமிகும் உடல் தேறும்.

### சின்னிக்கிழங்கு—Chinnik-kizhangu.

ஊர்ப்பன்றி கறிக்கு ஒப்பாகிய சின்னி வேருக்குச் சின்னிக் கிழங்கு என்பது பெயர். இதனால், மூலநோய் குருதிக்கழிச்சல் நீங்கும். ஆனால், இது பொடிக் கழலையையும் புண்ணையும் விளைவிக்கும்.

சின்னிக் கிழங்கு சிறுசிரங்கு புண்வளர்க்கும்
உன்னிலது வூர்ப்பன்றிக் கொவ்வுங்காண்—அன்னமே !
மூல மறுக்குமிது மோதுரத்தஞ் சீழ்மாற்றும்
த்தால மறியுநிசந் தான். **(அ-கு.)**

இதன் வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, வெள்ளை, மூலம், கணச்சுரம், மாந்தம் நீங்கும்.

### பெருஞ்சின்னி—Perunj-Chinni.

சிறு சின்னியின் சுவையும் செய்கையும் இதற்குமுண்டு.

குணம் : இதன் இலைக்குக் காணுக்கடி நஞ்சும், கண்ணுக்குப் புலன் படக் கடித்த பற்பல நஞ்சுகளும் நீங்கும்.

காணுக் கடியுமெதிர் கண்ட விடக்கடியும்,
நாணு திருந்திடவும் ஞாயமுண்டோ—தோணு
வருஞ்சின் மதலைமொழி மாதரசே! கேளாய்
பெருஞ்சின்னி மூலியுண்ட பேர்க்கு. (அ.கு.)

வ-கு : சிறு சின்னியிலையை வழங்குவது போலவே, இதனிலையையும் மேற்படி நஞ்சுகளுக்கு வழங்கலாம்.

குறிப்பு : சிறு சின்னி இலையால் கெந்தி நீருகும்.

---

## 291. சிக்காய்—Cheek-kai.

**வே-பெ : சிகைக்காய், சீயக்காய்.**

**Acacia Concnna**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Cheeka | San. | Saptala |
| Mal. | Chiyakayi | Duk. | Sikakki |
| Kan. | Sheegae | Hind. | Kochi |

இஃது இந்தியா முற்றிலுமுள்ள காடுகளில் பயிராகும் கொடி இனத்தைச் சார்ந்தது.

ப - உ : இலை, காய்.

சுவை—இலை - புளிப்பு, காய் - கைப்பு, தன்மை - தட்பம், பிரிவு—கார்ப்பு.

அகச் செய்கை.

செய்கை
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—Aperient.
- வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic.
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.

புறச்செய்கை.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- புண்ணழுக்ககற்றி—வ்ரணசுத்திகாரி—Detergent.

குணம் : இது, கழிச்சலையும் வாந்தியையும் உண்டாக்கும்; முகர்ந்தால் தும்மலைப் பிறப்பிக்கும். பற்பல நெய்ச்சிக்குகளை போக்கும்

மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம் பேதியையுண்
டாக்கும் வமன மழைப்பிக்கும்—தேய்க்கும்
வகைநெய்ச்சிக் கைபோக்கும் மாதரசே! நாளும்
சிகைக்கா யதனைத் தெரி. (அ.கு.)

இதன் கொழுந்து தீக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தும.

வ-கு : இதன் கொழுந்துடன், உப்பு, புளி, மிளகு, மிளகாய் சேர்த்துத் துவைல் செய்து சாப்பிட, மேற்கூறிய நோய்கள் நீங்கும். இதுவே காமாலையையும் குணப்படுத்தும்.

இக்கொழுந்துடன் தக்க அளவு மிளகும், ஒரு திரி பூண்டும் சேர்த்தரைத்துக் கொடுக்க, மலச்சிக்கல் நீங்குவதுடன், சுரத்தையும் தணிக்கும்.

காயை ஊறற்குடிநீரிட்டுக் கொடுக்க, கழிச்சலை உண்டாக்கி மஞ்சட் காமாலையைப் போக்கும்.

**ஊறல்குடிநீர் முறை.**

விதை போக்கிய காய் பலம் இரண்டு (80 கிராம்) தனியா இரண்டு வராகனெடை 8 கிராம் சிற்றரத்தை ஒரு வராகனெடை (4) கிராம் இவைகளை நன்றாக சிதைத்து இரண்டு ஆழாக்கு 300 மி. லி. வெந்நீரிற் சேர்த்து இரண்டு மணிநேரம் சென்றபின் வடிகட்டி 30 மி.லி. முதல் 60 மி.லி. வீதம் கொடுக்கலாம்.

நன்றாய்ப் பொடித்த சீக்காய்த்தூள் பங்கு ஒன்றுக்கு, நாற்பது பங்கு நீர் சேர்த்துக் காய்ச்சித் தலை முடியைக் கழுவிவர, தலையிலுண்டாகும் சுண்டுகளைப் போக்கி, தலைமயிரை வளரச் செய்யும்.

எண்ணெயிட்டுத் தேய்த்த தலைமயிரின் நெய்ப்பை, சீக்காயரைப்புப் போக்கும். இதனால் உடலழுக்கும் போம்.

## சியக்கொடி.

மாறி யிரணங்கள் வற்றி வலியடங்கித்
தேறிக் குணமாகுந் தேகத்தி—லூறிரத்தம்
பாய வெளிராட்டின் பாலா லரைத்திட்ட
சீயக் கொடியாலே சீ (தேரன் - வெண்பா.)

சீயக்கொடியை வெள்ளாட்டுப் பாலில் அரைத்து, உருண்டையாகச் செய்து கொடுத்து வர, சீ பிடித்த புண்கள் சீமாறி வற்றி வலியடங்கும் இது, உடலிற் குருதியை ஊறச் செய்து, புண்ணையும் விரைவில் உலர்த்தும்

---

## 292. சீத்தா—Sith-tha

**Anona Squamosa.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Seetaphalam | Eng: | Custard apple. |
| Mal. | Sirpa | Sans. | Subha |
| Kan. | Sitapal | Hind. | Sharifah. |

இஃது, இந்தியாவில் தோட்டங்கள் பலவற்றுள்ளும் வைத்துப் பயிரிடப்படும் சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. இது மேற்கிந்தியாவிலிருந்து இங்கு புகுத்தப்பட்டது.

ப-உ : இலை, பட்டை, வேர், விதை, காய், பழம்.

பழம் : சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

மற்றவை—சுவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

இலை

செய்கை
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.

பட்டை.

- துவர்ப்பிஸங்—சங்கோசனகாரி—Astringent.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

வேர்.

- நீர்மலம்போக்கி—விரேசநி—Purgative.

விதை.

- புண்ணழுக்ககற்றி—வ்ரணசுத்திகாரி—Detergent

காய்.

- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

பழம்.

- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.

இலே.

**குணமும் வழக்கும் :** இலைச்சாற்றை மூக்கிற் பிழிய, மூர்ச்சை வலி போம்.

இலையை - நீர் விடாமலேயரைத்துப் புண்களுக்குப் பூச அவை எளிதில் ஆறும். உள்ளுக்குக் கொடுக்க, புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும்.

பட்டை.

பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடல் வன்மையோடு வளரும்.

வேர்.

வேர்ப்பட்டையை அரைத்து, தக்க அளவெடுத்து நீரில் கலந்து கொடுக்கக் கழியும்.

விதை

விதையைப் பொடித்துப் புண்களின்மீது தூவ, அவைகளிலுள்ள அழுக்கை அகற்றி, அவைகளை எளிதில் ஆற்றும்.

காய்.

காய் அதிக துவர்ப்புடையதால், இதைச் சீதக் கழிச்சல், கழிச்சல் நிறுத்த வழங்கலாம்.

பழம்.

இது தீக்குற்றத்தையும், ஐயத்தையும், மாந்தம், சித்தப்பிரமை ஆகிய வற்றையும், உண்டாக்குமெனினும், இதை மணப்பாகு செய்து வெப்பத் தைத் தணிக்க யூநானி வைத்தியர்கள் வழங்குகின்றனர்.

பித்தகப மெத்தப் பெருமந்த மேலாடுஞ்
சித்த மதி ற்றயக்கஞ் சேருங்காண்—நத்துலவும்
பூத்தானத் தாரும் புலன்கொடியே! பூவுலகிற்
சீத்தாக் கனிக்குணத்தைத் தேர்.

(அ.கு.)

---

## 293. சிந்தில் - Sindil

**வே-பெ :** அமிர்தவல்லி, சோமவல்லி, அமிர்தை. அமிர்தக்கொடி குண்டலி.

Cocculus cordifoluis.

Eng : Heart leaved moon seed.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tippa-tiga | Sans. | Guduchi |
| Mal. | Amruta | | |
| Kan. | Amruta-valli | Hind. | Gul-bc |

இது, கொடியினத்தைச் சேர்ந்தது ; மலையடிவாரத்தைச் சேர்ந்த நாடுகளிலும், மேலிந்தியா, பர்மா, இலங்கை முதலிய நாடுகளிலும் ஏராளமாயுண்டாகும்.

இதில் மூன்று பிரிவுகள் உண்டு : (1) சீந்தில், (2) பொற்சீந்தில், (3) **பேய்ச்சீந்தில்.** பேய்ச்சீந்தில் என்பது தான் **ஆகாசக்கருடன்** அல்லது **கொல்லன்கோவை** எனப்படுவது. இதனைத் தனித்துக் கூறப்பட்டுள்ளது.

ப-உ : இலை, கொடி, வேர் (கிழங்கு).

**சுவை**—கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை**
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—**Alterative.**
- முறைவெப்பகற்றி—முறைவியாதிரோதி— **Antiperiodic.**
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—**Aphrodisiac.**
- உள்ளழலரற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—**Demulcent.**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant (Hepatic.)**
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—**Stomachic.**
- உரமாக்கி—பலகாரி—**Tonic.**
- சிறுநீர்ப்பெருக்கி (சொற்ப)-அல்பமூத்ரவர்த்தநி-**Mild diuretic.**

### இலை

**குணமும் வழங்கும் :** இலையை அனலில் வாட்டிப் புண்களின் மீது போட்டுவர, புண்கள் கரைந்து சீக்கிரத்தில் குணப்படும்.

### கொடி.

முற்றிய கொடியே நற்பயன் தரும். இதனால் உடல் வன்மை பெறும்

### சீந்திற் குடிநீர்.

புகலுஞ் சீந்திற் பர்ப்படகம் பூசுஞ் சந்தம் விலாமிச்சந்
திகழ்வேர்க் கொம்பு மிருவேலி சிற்று முட்டி யுடன்காசுந்
தகவே யொவ்வொன் ஞேர்கழஞ்சு தண்ணீ ரிரண்டு நாழியிட்டுச்
சுகமாய்க் காய்ச்சிக் கொடுத்தக்காற் சோரும் பித்தஞ்சுரந்தானே.

(பொருள்) சீந்தில், பர்ப்படகம், சந்தனம், விலாமிச்சு, சுக்கு, வெட்டி வேர், சிற்றுமுட்டி, கோரைக்கிழங்கு இச் சரக்குகளை வகைக்கு ஒவ்வொரு கழஞ்செடுத்து ஒன்று கூட்டி, தண்ணீர் இரு நாழி விட்டுக் காய்ச்சிக் கொடுக்கின், (தீ) பித்தசுரம் விலகும்.

சீந்திற் றண்டுங் கடுக்காயுஞ் சிவதை வேருங் களிப்பாக்கும்
காய்ந்த சுக்கும் ரோகணியுங் கன்னிச் சருகுங் கலந்தெடுத்தே
எந்து மூலையாய் நீர்விட்டே யெட்டொன் ருக்கிக் கொள்கட்டு
மாந்த மான சுரந்தீரும் வியிறுங் கழியுங் கண்டாயே.

(பொருள்.) சீந்தில்தண்டு, கடுக்காய், சிவதைவேர், களிப்பாக்கு, சுக்கு கடகரோகணி, கற்றுழைச்சருகு இவற்றை ஒரே அளவில் எடுத்து, போது மான நீர் விட்டு, எட்டில் ஒன்ருகக் குறுக்கிக் குடிக்க, கட்டு மாந்த சுரம் நீங்குவதுமன்றி, கழிச்சலும் உண்டாகும்.

சீந்தில் வேரும் விலாமிச்சஞ் சிறுகாஞ் சொறியும் பர்ப்படகம்
ஆய்ந்த முத்தங் கொத்துமலி யடர்ந்த சுக்கும் நிலவேம்பு
சேர்ந்த வெட்டுங் குடிநீராய்ச் சிறுகக் காய்ச்சிக் குடிப்பீரேல்
வீர்த்த வெதுப்பை விடுவிக்கும் விடாதே விதியின் கொள்கையிதே.

(பொருள்.) சீந்தில் வேர், விலாமிச்சம், சிறுகாஞ்சொறி, பர்ப்படகம், முத்தக்காசு, கொத்துமல்லி, சுக்கு, நிலவேம்பு ஆகிய இவைகளை ஒரே எடையாகச் சேர்த்து, குடிநீர் செய்து பருக, வெதுப்பு (சுரம்) விலகும்.

இதற்குரிய செய்கைகள் யாவும் குன்றுதிருக்க வேண்டின் இக்கொடியில் கைப்பு மிகவேண்டும். இக்குணமேற்படுவதற்குக் கொடி முதிர வேண்டும் முதிர்ந்த கொடியைக் கோடைக்காலத்தில் சேகரிக்க வேண்டும். மற்றக் காலங்களில் சேகரிக்கப்படுவதற்கு இக்குணம் நிறைந்திராது.

நசுக்கிய சீந்திற்கொடி 35 கிராம் 300 மி.லி. குளிர்ந்த நீரில் சேர்த்து, ஒரு சாமம் ஊறியபின் வடிகட்டி, சிறிது இலவங்கப்பட்டை அல்லது கிராம்புப்பொடி கூட்டி 40 மி.லி. முதல் 50 மி.லி. வீதம் நாளொன்றுக்கு 2, 3 முறை கொடுக்கலாம்.

நன்றாய்ச் சிதைத்த சீந்திற் கொடி 34 கிராம், கொத்துமல்லி அதி மதுரம் வகைக்கு 4 கிராம், 300 மி.லி. சோம்பு பன்னீர்ப்பூ வகைக்கு ½ வராகனெடை, (½) கிராம் வெந்நீர் 2 ஆழாக்கு இவைகளை ஒன்று சேர்த்து, மணி நேரம் ஊறவைத்திருந்து, பிறகு வடிகட்டி வேளைக்கு 25 மி.லி. முதல் 50 மி.லி. வீதம் கொடுக்க, முறை சுரம், உப்புசம், நாட்பட்ட செரியாமை, வயிற்றுக் கோளாறுகள் ஆகியவற்றைப் போக்கும். உடற்கு வன்மையையும் தரும்.

### சீந்நில் சருக்கரை.

அமுதவல் லிக்கொடி யக்கார முண்டிடத்
திமிருறு மேகநோய்த் தீயெலா மாறுமே.

(பொருள்.) சீந்திற் சர்க்கரையால் கைகால் திமிர், மேகவெட்டை விலகும்.

மேகமெனு மாதபத்தால் வெந்த வுயிர்ப்பயிரைத்
தாக மடங்கத் தணித்தலால்—ஆகம்
அமர ரெனலிருக்க வாதரித்த லாலே
அமுதவல்லி சஞ்சீவி யாம்.

(தேரன்வெண்பா)

(பொருள்.) சீந்தில், மதுமேக மென்னும் நீரிழிவு நோயிலுண்டாகும் நீர் வேட்கையைத் தணிக்கும்.

இக்கொடியைக் கொண்டு, சீந்திலெண்ணெய், சீந்தில் நெய் போன்றவை செய்யப்படும்.

இக்கொடியிலிருந்து எடுக்கும் உப்புக்கு சீந்திற் சருக்கரை என்பது பெயர். இச்சத்து எடுக்கப்படும் முறை சிலவுண்டு. அவற்றைக் கீழ்க் காண்க :

### சீந்தில் சருக்கரை.

குட்டம் பதினெட்டும் குஞ்சரத்தின் ரேற்சொறியுங்
கட்டம் பெரிதாங் கயநோயும்—பட்டவுடன்
செந்தீமுன் பஞ்செனவே சீந்திலுப் போடனைந்த
தந்தா வளநீர்க்குச் சாம்.

(தேரன் வெண்பா)

பதினெண் வகையான குறை நோய்களும, யானைத்தோல் போன்ற சொறியும், கொடிய கபப்பிணிகளும் சீந்தில் உப்பைக் கொடுக்கில் அழியும்.

### சிந்திற் சருக்கரைச் செய்யும் முறை.

நன்றாய் இடித்த சீந்திற் கொடியைக் குளிர்ந்த நீரிலிட்டு, மறு நாள் கடைந்து திப்பியைக் கசக்கிப் பிழிந்து நீக்கி, வெயிலில் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் வைக்க நீர் தெளியும். அந்த நீரை இறுத்து

விட்டு, வேறு நீர் விட்டுக்கலக்கி மேற்கண்டபடியே நீரை இறுத்துச் சுண்ட விட்டு, மறுபடியும் மேறபடியாகவே செய்து நீரை இறுத்துவிடின் பின் அடியிற் படிந்திருக்கும் மாவே சீந்திற்சருக்கரையாம். இதை உலர்த்திக் கொண்டு வாயிலிட கைப்பிருக்கும். இதைச் சுரங்களுக்குப் பின் ஏற்படும் உடல் இளைப்பிற்கும், மண்ணீரல் வீக்கம் அல்லது வலி, காமாலை, இருமல், மூர்ச்சை, வாந்தி கோழைக்கட்டு ஆகியவைகளுக்கும் வழங்கலாம்.

இது, நாட்பட்ட சிறுநீர்ப் பையின் தாபிதங்களுக்கு மிகச் சிறந்தது அளவு 1 கிராம் முதல் 4 கிராம்.

## வேறு.

முற்றின சீந்திற் கொடியின் அடித்தண்டின் மேற்புறணியை நீக்கித் துண்டித்து, நிழலிற் காய்ந்தபின் கல்லுரலிலிட்டு இடித்துப் பொடித்து, அதில் 1,400 மி.லி. நீர் விட்டு நன்ருய் பிசைந்து பிசைந்து 5,600 மி.லி. கலக்கி அசையாமல் வைக்க, மா அனைத்தும் அடியில் படிந்திருக்கும். பிறகு மேல் தெளிந்த நீரை இறுத்துவிட்டு, மறுபடியும் மாவில் 5,600 மி.லி. வேறு நீர் விட்டு மேற்கூறியதுபோலவே பிசைந்து பிசைந்து வெயிலில் வைத்துத் தெளிந்த நீரை வடித்து விடவும். இவ்வாருகப் பத்து தரம் செய்து, பிறகு 16 பங்கு காடி நீருக்கு 1 பங்கு எலுமிச்சம் பழச்சாறு கூட்டிய நீரை, மேற்படி மா பங்கு 1-க்கு 4 பங்கு விட்டுக் கலக்கி, ஒரு நாள் முற்றும் வைத்திருந்து, மறுநாள் தெளிந்த நீரை இறுத்துவிட்டு, 16 பங்கு ஆவின் மோருக்கு 1 பங்கு எலுமிச்சம் பழச்சாறு சேர்த்துக் கலக்கியதை, மேற்படி மா பங்கு 1-க்கு 4 பங்கு விட்டுப்பிசைந்து, ஒரு நாள் மட்டும் தெளிய விட்டு மறுநாள் தெளிந்த நீரை இறுத்து, மாவை உலர்த்தி எடுத்துக்கொள்ளவும், இச்சத்துக்குக் கைப்பு அதிகமிராது.

இச்சத்து, படி ஒன்றுக்குப் பசுவின் பால் 1,400 மி:லி., வங்காளச் சீனி 700 மி.லி. கூட்டி வெயிலில் உலர்த்திக்கொள்ள, கைப்பு சிறிதுமின்றி மாறும். இது சிறந்த முறையாகும்.

(அ.இ. சுருக்கம்)

குறிப்பு : முற்றிய கொடியாயிருந்தால் சத்து வெண்மையாயிருக்கும்; முற்ருததாயிருந்தால் சத்து அழுக்கு வெண்ணிறமாயிருக்கும்.

இச் சத்தைக் கொண்டு செய்யப்படும் லேகியம், "அமுத சருக்கரை லேகியம்" எனப்படும். கறுப்பு அப்பிரக செந்தூரத்துக்கு இதைத் துணை மருந்தாகக் கொண்டு வழங்க, சுரம், மேகவெட்டை, அத்திசுரம், மண்டைச் சூடு, வெட்டை சுரம் நீங்கும். அன்றியும், குருதிப்பெருக் குண்டாம், தமரகம் வலுக்கும், உடற்கு ஊட்டம்தரும், விந்தூறும்.

மேலும் இச்சத்தைக் கொண்டு அடியிற் கண்டவை செய்யப்படும்.
சீந்திற் பொடி (சஞ்சூவிச் சூரணம்).
சீந்தில் சருக்கரைப்பொடி.

## சீந்திற் கிழங்கு.

இதனல், மேகம், குருதியழல் நோய், சுரம், பெருங்கழிச்சல், மாந்தம் கணம், நஞ்சு ஆகியவை போம். பசித்தீப் பெருகும், விடம் நீங்கும்.

சீந்திற் கிழங்கருந்தத் தீபனமாம் மேகவகை
போந்தவுதி ரப்பித்தம் பொங்குசுர—மாந்தம்
அதிசாரம் வெய்யகணம் ஆம்பலநோ யோடே
கதிவிடமுங் கெட்டுவிடுங் காண்.

(அ.கு.)

வ-கு : மேற்கண்ட நோய்களைப் போக்க இக்கிழங்கைக் குடிநீர் செய்தேனும், பொடி, நெய், இலேகியம் போன்றவை செய்தேனும் வழங்கலாம்.

## 294. பொற்சீந்தில்—Por-sindil

**குணம்** : பொற்சீந்திற் கிழங்கினால், நீரிழிவு, இளைப்பு நோய் (க்ஷயம்) நஞ்சுகள், குருதியழல் நோய், சுரம் ஆகியவை போம். காயசித்தி உண்டாகும்.

பொற்சீந்தி லின்கிழங்கு பொங்கு மதுமேகம்
எச்சுகய ரோகம் இளைப்புவிடம்—பச்சையாய்
ஓடிரத்த பித்தம் உயர்சுரங்க ளைக்களையுந்
தேடரிய மேனிதருஞ் சேர். (அ.கு.)

**வ-கு** : சீந்திற்கிழங்கைப் போலவே இதையும் மேற்கண்ட நோய்களுக்கு வழங்கலாம்.

## சீமை அத்தி (தேன் அத்தி)—Shimai-Atti ; (Ten Atti)

### FICUS CARCA

**Eng: Fig.**

| | | | |
|---|---|---|---|
| **Tal.** | Shima-atti<br>Tena-Atti | **Kan.** | **Shima-atti** |
| | | **Sans.** | **Angurah** |
| **Mal.** | Shima-atti | **Arab.** | **Anjir** |
| | | **Urdu** | **Anjir** |

இது, சிறு மர வகுப்பில் சேர்ந்த ஒரு வகை அத்தி.

இது, முதன் முதல் சிறிய ஆசியா (Asiaminor) விலிருந்து, மற்ற நாடுகளுக்குக் கொண்டுபோய் பயிரிடப்பட்டவைகளுளொன்று ; இப்பொழுது வடமேற்கு இந்தியாவில் ஏராளமாய்ப் பயிராகிறது. இத்தாலி, துர்க்கிஸ்தானம் முதலிய நாடுகளில் இதன் பழத்தை ஓர் உணவுப் பொருளாய்க் கொள்கின்றார்கள்.

இம்மரம் வருடத்திற்கிருமுறை பழம் தரும்.

மேல் நாட்டில் பயிராகும் மரத்தின் பழம், நம் நாட்டுப் பழங்களைவிட சதை உறுதி, மென்மை, பிசுபிசப்பு, இனிப்பு உள்ளது மங்கலான செங்கல்நிறம் பொருந்தியிருக்கும். ஆனால் விதைகள் குறைவு.

ப - உ : பால், பழம்.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

**பால்.**

செய்கை :
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

**பழம்.**

- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
- வரட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
- மலமிளக்கி—மலகாரி · Laxative.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

வ - கு : புடை அக்கரம் இவைகளுக்குப் பாலைத் தடவிவர, இவைகள் நீங்கும்.

படுக்கைக்கு முன் 2, 3 பழங்களைச் சாப்பிட்டுவர, மலபந்தம் நீங்கும். உடல் குளிர்ந்து பருக்கும். குருதி பெருக்கு உண்டாம்.

குறிப்பு : நிலவாகை முதலிய இலைகளில் சீமையத்திப்பழத்தையும் சேர்க்க, எளிதில் கழியச்செய்யும்.

## 295. சீரகம் - Chirakam

**வே - பெ : அசை, சிரி, உபகும்பபீசம், நற்சிரி, துத்தசாம்பலம், பிரத்தி-விகா, பித்தநாசினி, போசனகுடோரி, மேத்தியம்.**

**Cuminum cyminum.**

**Eng : Cumin Seeds or fruits.**

| | | | |
|---|---|---|---|
| | | Kan. | Jirlga |
| Tel. | Jilakarra | Sans. | Jirakams |
| Mial. | Jirakam | Hind. | Zira |

சீரகச் செடி, இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிராகிறது. இதற்கு ஒருவித மணமுண்டு.

ப - உ : விதை.

சுவை-கார்ப்பு-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
- வெப்பமுண்டாக்கி உஷ்ணகாரி—Stimulant.
- பசித்தீத்துண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Aslringent.

குணம் : இதனால், அழல் போம். வயிற்றுவலி, வாய்நோய், ஈரல் நோய் காசம், கல்லடைப்பு, குருதிககழிச்சல், இறைப்பு, கம்மல், மூக்குநீர் பாய்தல், வெறி, வளிநோய்கள் இவை விலகும். இஃது உடலுக்கு வலுவைத் தந்து, கண்ணுக்குக் குளிர்ச்சியையும் உண்டு பண்ணும்.

போசன குடாரி.

பித்தமெனு மந்திரியைப் பின்னப் படுத்தியவன்
சத்துருவை யுந்துரந்து சாதித்து—மத்தனெனும்
ராசனையு மீவென்று நண்பைப் பலப்படுத்தி
போசனகு டாரிசெயும் போர். (தேரன் வெண்பா)

இது, தீக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தி, வயிற்றின் மந்தத்தைப் போக்கி, பசியை உண்டாக்கி, உணவைச் செரிக்குமாறு செய்யும்.

வாந்தி யருசிகுன்மம் வாய்நோய்பி லீகமிரைப்
பேற்திருமல் கல்லடைப்பு லோசனமுட்—சேர்ந்தகம்மல்
ஆசனகு டாரியெனும் அந்தக் கிரகணியும்
போசனகு டாரியுண்ணப் போம். (தே.கு.)

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காயம் நெகிழாது கண்குளிருந் — தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே ! கைகண்ட தித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின். (அ.கு.)

.................................
.. ...........................—தாரோட்ட
வீக்கப் பிணியசன வேதிபுல்ல மெய்க்கதையே
வீக்கப் பிணியசனி மெய்.

(பொ - ள்.) சீரகத்தை நாட்டுச் சருக்கரையுடன் விடாது கடைப்பிடியாய் நாளும் உண்ணில், தேகம் வன்மை பெறும்; அன்றியும், மேலுதடு கிழுதடு இரண்டும் வீங்கிப்போனதினால் ஏற்பட்ட நோய் விலகும்.

சீரக கற்பம்

போசன குடாரியைப் புசிக்கில்நோ யெலாமறுங்
காசமி ராதக் காரத்தி லுண்டிட
(தேரன்-வெண்பா.)

(பொ-ள்) போசனக்குடாரி யென்னும் சீரகத்தைத் தனியே பாகப் படுத்தி உட்கொள்ளின், எல்லா நோய்களும் நீங்கும். அதனோடு கற்கண்டுத் தூள் சேர்த்துச் சாப்பிட, இருமல் நோய் விலகும்.

வ-கு : நன்றாய்ப் புடைத்தெடுத்த சீரகம் 170 கிராம் இஞ்சிச்சாற்றில் ஊறவைத்து உலர்த்தி, பிறகு முசுமுசுக்கைச் சாற்றில் ஒரு நாள் ஊற வைத்து உலர்த்தி எடுத்துக்கொண்டு, அத்துடன் ஏலம், சுக்கு, திப்பிலி. மிளகு, கோட்டம், நெல்லிமுள்ளி, நெற்பொரி, வில்வப்பழத்தோடு இவை களின் பொடி வகைக்கு 8 கிராம் எடை சேர்த்து ஒன்றாய்க் கலந்து, அதன் எடை வெள்ளைச்சருக்கரை சேர்த்து, வேளைக்கு 4 கிராம் முதல் 8 கிராம் எடை வீதம் தினம் காலை மாலை இரு வேளையும் கொடுக்க, மேற் கண்ட நோய்கள் போம்.

சீரகத்தைக் கையாந்தகரைச் சாற்றில் ஊறப்போட்டு எடுத்த பொடி 4 கிராம் எடை, சருக்கரை 2 கிராம் எடை, சுக்குப்பொடி 2 கிராம் எடை இம்மூன்றையும் கலந்து தினமிருவேளையும் உட்கொள்ள, காமாலை, வாயு, உட்சுரம் தீரும்.

சீரகம், சுக்கு, ஏலம், நெல்லிமுள்ளி இவைகளின் பொடி ஒரு நிறை யாய் எடுத்து, அவ்வளவிற்குப் பாதி சருக்கரை சேர்த்து, மூன்று விரல் அளவு காலை மாலை கொள்ள, தீக்குற்றம் தன்னிலையடையும்.

சீரகம், ஏலம், பச்சைக் கற்பூரம் இவைகளைப் பொடித்து ஓரளவாய் எடுத்து, நேர்நிறை சருக்கரை சேர்த்து மூன்று சிட்டிகை காலை மாலை சாப்பிட, மந்தவாயு தீரும்.

சீரகத்தைப் பொடித்து வெண்ணெயில் கொடுக்க எரி குன்மம் நீங்கும்

சீரகம், குறுந்தொட்டி வேர் ஓரெடை கூட்டிக் குடிநீர் செய்து சாப்பிட, மூன்று நாள் 6 வேளையில் குளிர்காய்ச்சல் நீங்கும்.

சீரகம் 34 கிராம் உப்பு தேவையான அளவு சேர்த்தரைத்து, நெய் விட்டுத் தாளித்து, தேன் அல்லது சருக்கரையுடன் கலந்து, வளி, தீக்குற்றத் தால் பிறந்த நோய்களுக்குப் பயன்படுத்தலாம்.

சீரகம் 51 கிராம், இதைப் பழச்சாற்றிலரைத்து, நல்ல வெல்லம் 17 கிராம் சேர்த்துப் பிசைந்து, புதுச் சட்டியில் அப்பி 3 நாள் வெயிலில் காய வைத்து எடுத்து, ஒரு சிட்டிகை அளவாக காலை மாலை 10 நாள் சாப்பிட, வெட்டை, கைகால் குடைச்சல், எரிச்சல், சூலை எரிச்சல் முதலிய நோய்கள் நீங்கும்.

சீரகத்தைச் சுண்ணாம்பு நீர் விட்டுக் கலந்து, சிறிது ஊறியபின் முறத்தி விட்டுத் தேய்த்துப் புடைத்துலர்த்திப் பழரசம் விட்டரைத்து, அரசிலையில் வைத்து வேகவைத்து ஆறவிட்டு, மறுபடியும் 6 முறை இப்படியே செய்து கொடுக்க, சிறு குழந்தைகளுக்குண்டாகும் கழிச்சல் நீங்கும்.

சீரகம் 200 கிராம் உலர்ந்த கற்றாழை 170 கிராம், பனை வெல்லம் 170 கிராம் இவற்றுடன் பால் நெய் தக்க அளவு சேர்த்து, இலேகியமாகச் செய்து சாப்பிட, வயிற்றுவலி, நீர்ச்சுருக்கு, எரிவு, வெப்பம், அசீரணம், கண்ணெரிவு, கை கால் உடல் எரிச்சல், ஆசனக் கடுப்பு, மலக்கட்டு இவை நீங்கும்.

34 கிராம் சீரகத்தை 1,400 மி. லிட்டர் நல்லெண்ணெயில் இட்டுக் காய்ச்சி, சீரகம் ஒடியத்தக்க பதத்தில் வடித்துக் கொள்ளவும். இதை தேய்த்துத் தலை முழுகிவர, கண் நோய், மயக்கம், வாந்தி. தலைவலி, மந்தம் முதலியன நீங்கும்.

340 கிராம் சீரகத்தை வல்லாரைச்சாற்றில் 4 நாள் ஊறவைதது, உலர்த்திப் பசுவின் பாலிலரைத்து 680 கிராம் பசுவின் வெண்ணெயில் கலந்து, ஒரு நாள் ஊறவைத்துக் காய்ச்சி, அதில் 340 கிராம் கற்கண்டு, திரிசுந்தம், அரத்தை, ஓமம் இவைகளின் சூரணம் வகைக்கு 17 கிராம் சேர்த்துக் கலந்து வைத்துக் கொண்டு, பித்தம், வயிற்றுவலி, அரோசகம், வாந்தி, அக்கினி மந்தம், விக்கல் இவைகளுக்கு 8 கிராம் முதல் 16 கிராம் வீதம் கொடுக்கலாம்.

ஆய்ந்து, சுண்ணாம்பு நீர் தெளித்துத் தேய்த்துப் புடைத்து உமியை நீக்கிச் சுத்தி செய்த சீரகம் 340 கிராம், 170 மி லிட்டர்புளியாரை இரசத்தில் ஊறவைத்து, வெயிலில் உலர்த்திக்கொள்ளவும். பின் எலுமிச்சம்பழம் நாரத்தம்பழம், பொன்னாங்காணி, முசுமுசுக்கை, கற்பூரவள்ளி, புளி மாதுளம்பழம், மணத்தக்காளி இவைகளின் இரசத்தில் முறையே ஊற வைத்து உலர்த்திக் கொள்ளவும். கடைசியாக 68 கிராம் இந்துப்பை இஞ்சிச் சாற்றில் கரைத்து அதில் மேற்படி சீரகத்தை ஊறவைத்து உலர்த்தி எடுத்துக்கொண்டு, வேளைக்கு 2—4 கிராம் எடை வீதம் உட்கொள்ள, வயிற்றுவலி, செரியாமை முதலிய நோய்கள் தீரும்.

**பஞ்சதீபாக்கினி லேகியம் :** சீரகம், சுக்கு, திப்பிலி, மிளகு, ஏலம், இவைகளின் பொடி வகைக்கு 288 கிராம், இரண்டு படி பசுவின் பாலில் 288 கிராம் பனை வெல்லத்தைக் கரைத்துப் பாகு செய்து, அதில் 65 பொடியைத் தூவி. நெய் மி. லிட்டர் விட்டுக் கிண்டி, தேவையான அளவு தேன் சேர்த்துப் பிசைந்து வைத்துக்கொண்டு, கொட்டைப் பாக்களவு சுவப்பிட்டு வர, வாயு, உளைவு, குத்துவலி, கடுப்பு, எரிச்சல், கழிச்சல்' பொருமல், நிணக்கழிச்சல் முதலியன தீரும்.

இதை மணத்திற்காகவும், செரிப்புண்டாவதற்காகவும் உணவில் சேர்ப்பது வீட்டு வழக்கம்.

---

## 296,—கருஞ்சீரகம் Karunjchirakam.

Nigella sativa

வே பெ ; அரணம், உபகுஞ்சிகை.

Eng : Black Cumin ; Small Fennel.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nalla-jilakarra | Sans. | Upakunchika<br>Krishna-jiraka |
| Mal. | Karinchirakam | | |
| Kan. | Kari-jirige | Hind. | Kulanji<br>Kala-zira |

இஃது இந்தியாவில் சற்றேறக்குறைய எல்லாப் பாகங்களிலும் பயிராகும்

ப. உ. : விதை. (இது சிறியவுருவமுடையது, மூன்று மூலை வடிவம், கரு நிறம்).

சுவை—கைப்பு, தன்மை-வெப்பம். பிரிவு-கார்ப்பு

செய்கை.
- அகட்டுவாய்வகற்றி-உதபவாதஹரகாரி-Carminative
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ர்வர்த்தநி-Diuretic
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue
- பாற்பெருக்கி-க்ஷீரவர்த்தநி-Galactogogue
- புழுக்கொல்லி.க்ருமிநாசநி-Anthelimntic
- பசித்தீத்தூண்டி-ஜடரக்னிவர்த்தநி-stomachic
- தூக்குணிப்புழுக்கொல்லி-கருமிக்ந-Parasiticide
- வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-Emolient

குணம் : மண்டைக் கரப்பான், புண், உட்சூடு, தலை நோய், கண்ணோய இவைகளும், சிரங்கு, வயிற்றுப் பொருமல், குன்மம், மார்புவலி, இருமல், வாந்தி, ஓக்காளம், வீக்கம், காமாலை ஆகியவைகளும் கருஞ்சீரகத்தால் நீங்கும்.

கருஞ்சீ ரகத்தான் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சிராய்ப் பீநசமு மாற்றும்—அருந்தினால்
காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை.

(அ. கு.)

வ.கு. : இதன் பொடியைக் காடியுடன் கலந்து உட்கொள்ள குடலிலுள்ள புழுக்கள் வெளிப்படும். இதையே 3—7 நாள் வரையில் காலை ½, மாலையில் 4 கிராம் வீதம் பைத்திய நாய்க்கடி, இதர நச்சுக்கடி இவற்றின் நஞ்சு தீரக் கொடுக்கலாம்.

நொச்சிக் குடிநீருடன் இதன் பொடியைக் கூட்டிக் கொடுக்க மேகப் பிடிப்பு, சுரம, விட்டுவிட்டு வருகின்ற சுரம் தணியும்.

இதை வெந்நீர் விட்டரைத்து, தலைவலி, கீல்வீக்கம், உடல் வீக்கம் இவைகட்கு மேற்பூச்சாய்ப் பூசக் குணமுண்டு. இதைக் காடி விட்டரைத்துப் புடைகளுக்குப் பூசலாம்.

பசுவின் நீர், அல்லது சிறுவர்களின் சிறு நீர் விட்டரைத்து வீக்கத்திற்குப் பூசக் குணமுண்டு.

தேன் விட்டரைத்துப் பிள்ளை பெற்ற பின் வரும் வலிக்குப் பூசலாம்.

இதை ஆற்றுத்துமட்டிச் சாறு விட்டரைத்து, இரு பக்க விலாக்களிற் பூச, குடலிற்றங்கிய புழுக்கள் வெளிப்படும்.

இதை அரைத்து நல்லெண்ணெயில் குழப்பி, கரப்பான், சிரங்கு இவைகளுக்குப் பூச, நன்மை தரும்.

இதன் பொடியைத் தேன் அல்லது நீரில் கலந்து கொடுக்க, மூச்சு முட்டல் நீங்கும். மோருடன் கலந்து கொடுக்க, விடா விக்கல் தீரும். சூதகக்கட்டு, சூதகச் சூலை இவைகட்கு 1 கிராம் அல்லது 3 கிராம் எடை வீதம் கொடுக்கலாம்.

இதன் தீநீர் அல்லது தைலத்தை முகர்ந்தாலும், பூசினாலும் ஐயத்தாலுண்டாகும் தலைநோய், மூக்குநீர் வடிதல், நரம்பைப்பற்றிய வலி, இடுப்பு வலி நீங்கும்.

இதன் தைலத்தை வெற்றிலையில் பூசித்தின்ன ஆண்மை பெருகும். ஆண்குறியில் பூசக் குறி பெருகும்.

## 297. காட்டுச்சீரகம்—Kattu-chira

**Vernonia antihelmintica.**

**Eng : Purple fleabane.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavi-jilakarra | Sans. | Vanajeerakam |
| Mal. | Kattu-jirakam | Hind. | Kalouji-jangli |
| Kan. | Vana-Jirige | | |

இஃது இந்தியா முழுவதிலும் வளரும் சிறு செடி.
ப-உ ; இலை, விதை, வேர்.
சுவை—கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை ;
- புழுக்கொல்லி க்ருமிநாசநி-Anthelmintic.
- பசித்தீத்தூண்டி-ஜடாரக்னிவர்த்தநி-stomachic
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி—Diuretic
- முறைவெப்பகற்றி—முறைவியாதிரோதி—antiperiodic
- உடற்றேற்றி—வயதாபேதகாரி – alterative

குணம் : காட்டுச் சீரகத்தால், உள்ளங்கைக் கரும்புள்ளி, வெள்ளை, வெறி, குன்மம் இவை போம். குளிர்ச்சியுண்டாகும்.

கைகறுப்பு மாறுங் கடியமே கம்போகும்
மெய்குளிரும் பித்தம் விளையுமோ—வெய்யகரிக
கோட்டுப் பணைமுலையாய் ! குன்மவா தந்தொலையுங்
காட்டுநற் சீரகத்தைக் காண்.

வ-கு. இலையை அல்லது வேரை அரைத்து வலிகளுக்கு மேலுக்குட் பற்றிடலாம்.

விதையைப் பொடித்து 3 கிராம் எடைத் தேன் அல்லது நெய் யில் கலந்து, தினம் இரு வேளை கொடுத்துப் பிறகு கழியச் செய்ய, வயிற்றுப் புழுக்கள் வெளிப்படும்.

இச்சூரணத்தைச் சிறிய அளவாகக் கொடுத்துவர, வயிற்றுப் பொருமல், இருமல் போம்.

இப்பொடியோடு மிளகுப்பொடி அல்லது எள்ளுப்பொடி ஓரளவு, சேர்த்து, 4 கிராம் எடை தினமும் காலையில் வெந்நீரில் சாப்பிட்டுவர, வெண்புள்ளி (வெண்குட்டம்) முதலிய நோய்கள் போம்.

விதையைப் பழரசம் விட்டு அரைத்து, சொறி சிரங்குகளுக்குப் பூசலாம். தலையில் தேய்க்கப் பேன்கள் சாகும்.

## 298. கேக்குவிதை—Kekku Vitai

வே. பெ . சீமைச்சோம்பு

Carum Carui,

Eng: Caraway seeds or fruits.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sima-sompu | Hind. | Vilayati-zirah |
| Mal. | Kekku-vitha | | |

இஃது, இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய மேல்நாடுகளிலும், இந்தியா வின் குளிர்ச்சியான மலை நாடுகளிலும் கிடைக்கும். நல்ல மணமுடையது. இதன் பழத்திலிருந்து எடுக்கப்படுகிற விதை மஞ்சள் நிறமுடையது.

ப-உ : விதை.

சுவை—கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : பசித்தீத்தூண்டி—ஜடராக்னி வர்த்தநீ—stomachic.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—stimulant.

குணம் : இதனால், வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, மந்தம் போம். இதை மருந்துகளுக்கு மணத்தைத் தரும் பொருட்டுச் சேர்ப்பதுண்டு.

இதிலிருந்து எண்ணெய், தீநீர் எடுக்கிறார்கள்.

சீமைச் சோம்புத் தீநீர் : 35 கிராம் சீமைச்சோம்பை, 700 கிராம் எடை சுத்த நீர் வாலையிலிட்டுப் பாதி வடித்தெடுத்துக்கொள்ளவும். இதில் 3 வேளைக்கு 34 அல்லது 68 கிராம் எடை உட்கொள்ள மேற்கூறிய நோய்கள் நீங்கும்.

சீமைச்சோம்பு எண்ணெய் : இது தீநீர்மீது படிந்திருக்கும். இதில ½—3 துளி வரையிலும் கொடுக்கலாம்.

## 299. பிளப்புச்சிரகம்—Pilappu-chirakam

**வே–பெ : சிமைச் சிரகம்.**

**Carum nigrum.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sima-jilakara | Kan. | Shima-jirige |
| Mal. | Shima-jiragam | Hind. | Shah-zirah |

இஃது இந்தியாவின் சில இடங்களில் பயிராகிறது ; முக்கியமாய் இறக்குமதி செய்யப்படும் பொருள்களுள் இஃதும் ஒன்று.

ப–உ : விதை.

சுவை—சீரகத்துக்குடையதே.

செய்கை : அகட்டு வாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative
சிறுநீர்ப் பெருக்கி—மூத்திரவர்த்தநி—Diuretic.
ருதுஉண்டாக்கி—ருதுவர்த்தனி—Emmenagogue.

**குணம் :** இதனால், நீங்கா வெறியும், வளிக்குற்றமும் நீங்கும். உடற்கு அழகுண்டாகும்.

உடலுக் கழகாம் உறைப்பித்தம் ஏகும்
அடலுறு வாதம் அதமாம்—கடிசேர்
தளவுநகைக் கோட்டுமுலைத் தையலே! நாளும்
பிளவுநறுஞ் சீரகத்தைப் பேண்.

வ–கு : நற்சீரகத்தை வழங்குவதைப்போல இதையும் வழங்கலாம்

## 300, பெருஞ்சிரகம்—Perunjchirakam;

**வே. பெ. : சோம்பு, வெண்சிரகம்.**

**Pimpinella anisum.**

**Eng : Anise seeds ; Anise fruit.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sopu<br>Pedha-jilakarra | Kan. | Sompu<br>Sopu-gida<br>Dhodda-jirige |
| Mal. | Perinchirakam | Sans. | Sthula-jeerakam |
| | | Pers. | Badiyan |

இது பூண்டு வகுப்பிற் சேர்ந்தது. இதன் வித்து வெண்ணிறத்துடன கலந்த சிறிது பச்சை நிறமுடையது ; நீண்டவுருவமைந்தது ; அடிகணத்து டேல் குறுகியிருக்கும் ; மணமுள்ளது ; 2/10 அங்குலம் நீளம், 1/10 அங்குலம் முதல் 2/10 அகலமுள்ளது. இந்தியாவில் எங்கும் பயிராகும் ; வட இந்தியா, பாரசீகம், ஐரோப்பாவின் நடுநாடுகள் இவ்விடங்களில் ஏராள ய்ப் பயிரிடப்படுகிறது.

ப–உ : பூ, விதை, வேர்.

**சுவை**—மணமுடன்கூடிய கார்ப்பும், இனிப்பும், **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :** { அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி—Carminative.
பசித்தீத்தூண்டி-ஜடாரக்னிவர்த்தநி—Stomachic.

**குணம் :** சோம்பு, கருவாய் நோய்கள், வயிற்றுவலி, சுரம், செரியாமை, வயிற்றுப்புசம், இருமல், ஈரல் நோய், இரைப்பு, குரற் கம்மல், மூக்கு நீர் பாய்தல் ஆகியவற்றை நீக்கும்.

யோனிநோய் குன்மம் உருட்சமந் தம்பொருமல்
பேனமுறு காசம் பிலீகமிரைப்—பீனஉரை
சேர்க்கின்ற வாதமுபோஞ் சீர்பெரிய சீரகத்தால்
மூக்குநோ யில்லை மொழி. (அ.கு.)

மேலும் சூதக வாயுவைக் கண்டிக்கும்.

**வ-கு :** இதை இளவறுப்பாக வறுத்துப் பொடித்து, வேளையொன்றுக்கு ½—2 கிராம் எடை வீதம் தனியாகவாவது, சருக்கரையுடன் கலந்தாவது தினம் இரு வேளை கொள்ள மேற்கூறிய நோய்கள் விலகும்.

**சோம்புத் தீநீர்.**

சோம்பு 1-க்கு நீர் 20 பங்கு விட்டு வாலையிலிட்டு வடிக்கத் தீநீரிறங்கும். 15 மி.லி.—20 மி.லி. வரையில் வழங்கலாம்.

**சோம்புத் தைலம்.**

தீநீரின்மீது படிந்திருக்கும் தைலம் சோம்புத் தைலமாகும். ½—3 துளி வேறு பொருள்களுடனும் சேர்த்துக் கொடுக்கலாம்.

**பெருஞ்சீரகப்பூ.**

இதிலும், சோம்பைப்போலவே தீநீரெடுத்து, அதற்குரிய அளவாகவே குழந்தைகளுக்கு வழங்க, கழிச்சல், வயிற்றுப்பொருமல், வயிற்றுப் புழு தீரும். இதை மருந்துகளுடன் சேர்த்துக்கொடுத்தால் வெகுட்டல் இரா.

## 301. சுக்கான்காய்—Chukkankai.

**வே-பெ: தும்மட்டிக்காய், கொம்மட்டி.**

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கும் கொடி.

**ப.-உ :** இலை, வேர், காய்.

**சுவை**—கைப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**இலை—வேர்.**

**செய்கை** { நீர்மலம்போக்கி-விரேசநி–Purgative.
**காய்**
கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
**அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-Carminative.**

**குணம்** காயால் வளிக்குற்றம் போகும். தீக்குற்றத்தை மிகுதிப் படுத்தும் என்பர். சுவையின்மை நோயைப் போக்கும்.

மைக்குழலே! நீ கேளாய் வாதமறும் பித்தமென்பர்
சுக்கான்காய் வற்றலது தொல்லுலகில்—கைக்கினர
வாயுவை நீக்கும் வருமருசி போக்கிவிடும்
நீயும் அறிவாய் நிசம். (அ.கு.)

**வ–கு :** இலை இரசத்துக்கும், வேரின் இரசத்துக்கும் கழியச்செய்யும் செய்கையுண்டு.

காயினல், இரைப்பு, குன்மம், இருமல் இவை நீங்கும். தீக்குற்றம் பெருகும். இதை வற்றலிட்டு உணவாகக்கொள்ளலாம.

## 302, சுக்காங்கீரை—Chukkanghkirai.

**வே–பெ :** சுக்குக்கீரை.

**Rumex vesicarius.**

**Eng : Yellow dock.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Pullaparaballi** | **Sans.** | **Amla-vetasam** |
| **Mal.** | **Pulivanchi** | **Hind.** | **Chukka** |

இப்பூண்டு எல்லாவிடங்களிலும் வளரும்; சென்னையில் உணவுக்காகப் பயிரிடுகின்றனர்.

**ப–உ :** இலை.

**சுவை**—இனிப்பு, **தன்மை** —தட்பம், **பிரிவு**—இனிப்பு.

**செய்கை** {
பசித்தீத்தூண்டித் ஜடராக்னிவர்த்தநி Stomachic.
துவர்ப்பி-ஸ்தம்போசனகாரி-Astringent.
தாதுவெப்பகற்றி-சமனகாரி-Sedative.

**குணம் :** ஈரலுக்கு வலுவைத் தந்து, பசித்தீயைப் பெருக்கும். பசித்தீயைத் தூண்டிப் புசிப்பைவுண்டாக்கும். சூட்டினலுண்டான வாயு, நெஞ்செரிச்சல் முதலியவைகளைக் கண்டிக்கும்; குருதிக்கழிச்சல், வெப்பால் உண்டான கழிச்சல் முதலியவைகளை நிறுத்தும்.

மேற்கூறிய நோய்கட்கு இதனை உணவுப் பொருளாகவே வழங்குகின்றனர்.

## 303, சுக்கு—Chukku,

வே. பெ. அருக்கன், அதகம், ஆர்த்ரகம் உபகுல்லம், உலர்ந்த இஞ்சி, கடுபத்திரம். சுக்கு. சுண்டி சொண்டி, சௌபன்னம். சௌவர்ணம், நவசுறு. நாகரம். மஹௌஷதம், விச்வ பேஷஜம், விடமூடிய அமிர்தம், வேர்க்கொம்பு.

Zingiber Officinals.

Eng : Dried Ginger.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sonti | Sans. | Nagaram |
| Mal. | Chukku | Hind. | Sonth |
| Kau. | Ona shunti or Sunti | Arab. & Per. | Znagebilarataba |

உலர்ந்த இஞ்சியே சுக்கெனப்படும்.

**ப-உ** : கிழங்கு (உலர்ந்தது).

**சுவை**—கார்ப்பு, **தன்மை** —வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை** : வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant**
பசிதீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—**Stomachic.**
அகட்டுவாய்கற்றி—உதரவாதஹரகாரி—**Carminative**

**குணம்** : சுக்கினால், செரியாமை, மார்பெரிச்சல், புளியேப்பம், வெப்பம் கீழ்வாய் நோய், இரைப்பு, இருமல், கழிச்சல், நீரேற்றம், குன்மம், வயிற்றுப்புசம், காதுக் குத்தல், முகநோய், தலை நோய், சூலைவலி, பாண்டு, வயிற்றுக் குத்தல், ஐயசுரம் போம்.

சூலைமந்தம் நெஞ்செரிப்பு தோடமேப் பம்மழலை
மூலம் இரைப்பிருமல் மூக்குநீர்—வாலகப
தோடமதி சாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோடம்ஆ மம்போக்குஞ் சுக்கு. (அ.கு).
வாதப் பிணிவயி றூதற் செவிவாய்
வலிதலை வலிசூலை வலியிரு விழிநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகமிடி கபமார்
சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
தெறிபடுமெனமொழி குவர்பு வி தனிலே
ஈதுக் குதவுமி தீதுக் குதவா

தெனும்விதி யிலைநவ சுறுகுண முணவே. (தே. .கு)

**வ**—கு : சுக்கைக் களி செய்து நெற்றிக்கிட, தலைவலியும், கழுத்தின் மீதிட தொண்டை வலியும், புருவத்தின் மீதிட அண்மைப் பார்வைக் கெடுதியும் நீங்கும்.

சுக்கு, கற்கண்டு வகைக்கு வராகனெடை ஒன்று, இரண்டையும் பொடி செய்து, காலை மாலை இரு வேளையும் இளநீரில் ஒரு சிட்டிகை கொடுக்க, சுமையெடுத்து உடம்பதிர்ந்து நெஞ்சுவலிப்பதும், மேல் மூச்சு காண்பதும் நீங்கும்.

ஏற்ற சுக்கோ டரத்தை யெருக்கம்வேர்
நாற்ற நொச்சிக் கொழுந்துட னூற்றமுஞ்
சேர்த்து நீருழக் காக்கித் தினங்கொளில்
மாற்ற லாஞ்சனி வாத சுரங்களே. (தேரன் வெண்ப)

**(பொ-ள்.)** சுக்கு, அரத்தை, எருக்கம் வேர், நொச்சிக் கொழுந்து, பெருமரப்பட்டை ஆகியவற்றை ஓ' எடை எடுத்து, தகுந்த நீர் விட்டு, அதை உழக்காய் வற்றச் செய்து நாளும் உண்ணில், சன்னி வாத சுரம் நீங்கும்.

நன்றான வேர்க்கொம்பு நற்சா ரடைவேரு
மொன்றாய்க் கியாழமிட் டுண்டுவிடில்—அன்றேதான்
ஓடுமே மந்த மொளியாமல் நாடகன்று
காடுதனிற் போகிவிடுங் காண்.

**(பொ-ள்)**. சுக்கு, சாரடைவேர் இவ்விரண்டையும் ஓர் எடையில் சேர்த்து குடிநீர் செய்து உண்ண, மந்தம் என்னும் நோய் நாட்டைவிட்டு

சுக்குக் கற்பம்

சுக்கினைப் பொடி செய்து சூரணமாக்கி
யிக்கிரத் திலுண்டிடவயிற் றெரிவுபோங்
குடிநீர் செய்ததைக் குடிநித நன்மையாம்.
(தேரன் வெண்பா.)

(பொ-ள்.) சுக்குத்தூளைக் கரும்பு இரசத்தில் சேர்த்துக் காலையிலுட் கொள்ள, வயிற்றெரிச்சல் நீங்கும். சுக்குக் குடிநீர் எப்போதும் உடலுக்கு நன்மையைச் செய்யும்.

சுக்குக் குடிநீர்.

சுக்குக் கடுக்காய் நீலவேம்பு சுகமாய் வேப்பந் தோல்சீந்தில்
கைக்கும் புடலம் பொடியதுவுங் கதிக்கு மொவ்வொன் றோர் கழஞ்சு
யொக்க நறுக்கி யிருநாழி யுழக்காய்க் காய்ச்சிக் குடிப்பீரேல்
தக்க விடமுஞ் சுரம்பலவுந் தான்விட் டோடுந் தப்பாதே.

(பொ-ள்) சுக்கு, கடுக்காய், நில்வேம்பு, வேப்பந்தோல், சீந்தில், பேய்ப்புடல் இவற்றை வகைக்கு ஒவ்வொரு கழஞ்சு எடுத்துப் பொடித்து ஒன்று சேர்த்து, இரண்டு நாழி நீர் விட்டு ஓர் உழக்காய் வற்றக்காய்ச்சிக் குடித்து வர, நச்சுக்காய்ச்சல் நீங்கும்.

சுக்குத்தூளில் முவ்விரல் அளவு, அப்போது கறந்த பசுவின்பால் 170 மி.லி. சேர்த்துக் கொடுக்கப் பசியுண்டாம்.

சுக்கு 1 பங்கு, இதைக் கையாந்தகரைச் சாற்றில் ஒரு நாள் ஊறப் போட்டும், ஏலம் 1 பங்கு இதை இஞ்சிச் சாற்றில் ஒரு நாள் ஊறப் போட்டும் இரண்டையும் ஒன்று சேர்த்து, மேற்படி இரண்டு சாற்றையும் ஒரெடையாகக் கூட்டி அதில் நனையவிட்டு, வெயிலில் 3 நாள் வைத்து, முதல் மூன்று நாளும் சுண்டிய சாற்றளவு விட்டு வந்து, நான்காம் நாள் முதல் சாறு விடாமலே வெயிலில் நனி உலர்த்திப் பொடி செய்து, காலை மாலை 1 கிராம் முதல் 2 கிராம் எடை நெய்யுடன் சேர்த்து உட்கொண்டுவர, ஆண்மை பெருகும். பழைய சாதம், புகையிலை கூடாது.

சுக்கை வாயிலிட்டு மெல்லப், பல்வலி போம்.

ஒரு சிறு துண்டு சுக்கைக் காதினுள் செலுத்த, காதடைப்பு, கனைப்பு, ஐயம் நீங்கும்.

சுக்கையரைத்து மூட்டு வீக்கங்களுக்குப் பூச, வீக்கம் நாளுக்கு நாள் குறையும்.

சுக்கை முறைப்படி குடிநீரிட்டு 4 மி.லி. 80 மி.லி. வீதம் நாளொன்றுக்கு இரண்டு மூன்று முறை உட்கொள்ள, மந்தம், வயிற்றுவலி, வாந்தி, நாட்பட்ட சுரம், வயிற்றுப்பொருமல் நீங்கும்.

கற்சுண்ணாம்பு, உப்பு, பசுஞ்சாணம் இவைகளால் தனித்தனியாக மூடி, கும்பிச் சாம்பலில் வேகவைத்தெடுத்த சுக்கைப் பொடி செய்து 2 கிராம் முதல் 4 கிராம் எடை நெய்யுடன் கலந்து கொடுக்க, பேதி, வயிற்றெரிச்சல், மந்தம் போம்.

சுக்கை மென்று சாரத்தை மாத்திரம் விழுங்க தொண்டைக்கட்டு குரற்கம்மல் நீங்கும்.

சுக்கை முதலாகக் கொண்ட முறைகள் : சௌபாக்யசுண்டி இலேகியம், கண்டாத்திரி இலேகியம், நாகராதிசூஷணம், சுக்குச்சூரணம், தயிர்ச் சுண்டி, சுக்குத்தைலம் முதலியன. (சித்தர் உரை விளக்கம் காண்க.)

சுக்கை மூலைப்பால் விட்டரைத்து, நெற்றியில் பற்றிட்டு நெருப்பனல் படும்படி காட்ட, தலைவலி நீங்கும்.

### சௌபாக்யசுண்டி

சுக்கு 280 கிராம் இதை மேல் தால் சீவிச் சிறு துண்டுகளாக வெட்டி, செம்முள்ளி, செந்திரா, முருக்கிலை, கரிசாலை, சிறு செருப்படை இவைகளின் சாறு வகைக்கு 350 மி. லி. இச்சாறுகளில் தனித்தனி ஊறப் போட்டு உலர்த்திப் பொடி செய்தவை, தக்கோலம், வாலுழுவை, சூகை நீறு, கரியபோளம், வாய்விடங்கம் தான்றி, நெல்லிவற்றல், திப்பிலி, திப்பிலிமூலம் இவைகளை இளவறுப்பாக வறுத்துப் பொடி செய்தவை வகைக்கு 35 கிராம் அமுக்கரு, பொன்முசுட்டைவேர் கண்டங் கத்திரிவேர், நன்னாரிவேர், நிலப்பனை இவைகளின் பொடி வகைக்கு கிராம் 70 இப் பொடிகள் யாவற்றிற்கும் அளவாகச் சருக்கரை. இதைப் பசுவின்பால் படி இரண்டுடன் கூட்டிக் காய்ச்சிப் பாகுபதத்தில், மேற்படி தூள்களைச் சிறுகச் சிறுகத் தூவி இலேகியபதமாக்கிக்கொள்க. இதில் நாளொன்றுக்குக் காலை மாலை இருவேளையும் 2 கிராம் முதல் ரூ. 8 கிராம் எடை அளவு கொள்ள, வெள்ளை, வளிநோய்கள், பசியின்மை, நீர் ஊறல் போன்றவை தீரும்.

உப்பு, புளி, புகை, பெண்போகம் இவைகளை நீக்கவும்.

---

## 304. சுண்டை—Chunda.

வே - பெ : மலைச்சுண்டை; கடுகி.

Verbacifolium. Solanum

Tel. Uste-kaya | Mal. Chundak-kaya

இது பெரும்பாலும் மலைகளில் பயிராகும் செடி. ஆனைச் சுண்டை என வேறொரு வகையுமுண்டு.

ப-உ : காய், வற்றல், வேர்.

சுவை : —கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை { கோழையகற்றி—கபஹகாரி—Expectorant
நுட்புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Germicide
பசித்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic

### சுண்டை

சுண்டையின் காயமந் துறையுட னயின்றிட
மண்டிய பயித்திய வலியெலா மகலுமே.

(தே-கா.)

(பொ-ள்.) சுண்டைக்காய் வற்றலைப் புசித்துவரின், தீக்குற்றத் தாலுண்டான ஏப்பம், வயிறூதல், வயிற்றுவலி முதலியன போம்.

காய்.

குணம் : நெஞ்சிற்றங்கிய ஐயம், நுண்புழுவால் உண்டான நோய்கள், வலிநோய்கள், வலிப்பெருக்கு இவை போம்.

நெஞ்சின் கபம்போம் நிறைகிருமி நோயும்போம்
விஞ்சுவா தத்தின் விளைவும்போம்—வஞ்சியரே !
வாயைக் கசப்பிக்கும் மாமலையில் உள்ளசுண்டைக்
காயைச சுவைப்பவர்க்குக் காண. (அ.கு.)

வற்றல்.

தீக்குற்றத்தால் உண்டான சுவையின்மை, வயிற்றுப்புழு, நிணக் கழிச்சல் சீதக்கட்டு நீங்கும். இது பசியை உண்டுபண்ணும். இதை மார்சசளி, செரியாக் கழிச்சல், மூலம் முதலியவைகளுக்கும் கொடுக்கலாம்.

பித்தஅ ரோசகம்போம் பேராப் புழுச்சாகும்
உற்ற கிராணியறும் உட்பசியாஞ்—சத்தியமாய்ப்
பண்டைக் குதஆமம் பற்றுமிங்கி யாரையுந்தான்
சுண்டைக்காய் வற்றலுண்ணச் சொல். (அ.கு.)

வ-கு : உலர்ந்த சுண்டைக்காயைப் போதுமான அளவு நன்றாய்ப் புளித்த மோரும் உப்புங் கலந்து காயவைத்து உலர்த்தி எடுத்துக்கொண்டு, இதைப் பதார்த்தமாக வற்றல் செய்து தின்பது வழக்கம்.

சுண்டை வற்றல், கருவேப்பிலை, மாங்கொட்டைப்பருப்பு, ஓமம், நெல்லி வற்றல், மாதுளோடு, வெந்தயம் இவற்றை ஓரெடை எடுத்துத் தனித்தனியே இளவறுப்பாக வறுத்துச் சூரணஞ் செய்து கூட்டி, மூன்று சிட்டி கைப் பொடியை, காலைமாலை இரு வேளையும் மோரில் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் விலகும்.

காயைச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டு வறுத்து, உப்பு, மிளகு, சீரகம் கறிவேப்பிலை, வெந்தயம் இவைகளையும் சிறிது வறுத்துக் கூட்டிப் பொடித்துச், சோற்றுடன் கலந்து, மூலம், மந்தம், செரியாமை இவைகளுக்குக் கொடுப்பதுண்டு.

வேர்ப்பட்டையைப் பொடிசெய்து தேங்காய்க் குடுக்கையில் வைக்க வேண்டும். இதனை ஒரு சிட்டிகை மூக்கிலிழுக்க, தலை நோய், நீரேற்றம், மண்டைக்குடைச்சல், ஒற்றைத்தலைவலி, மூக்கில் நீர்பாய்தல் இவை போம். முப்பிணிக்கும், மூச்சுத் தடுமாற்றத்திற்கும் செய்யும் மூக்குப்பொடி (நசியம்) க்கு இஃதோர் இன்றியமையாத சரக்கு.

சுண்டைவேர், தும்பைவேர், இலுப்பைப்பிண்ணாக்கு இம்மூன்றும் ஓர் எடை எடுத்துப் பொடிசெய்து முகர, முப்பிணி தீரும்.

ஆனைச்சுண்டை.

இதன் வேரைக் குடி நீர் செய்து வலி சுரத்துக்குக் கொடுப்பதுண்டு.

---

## 305, சுரை—Churai

**Lagenaria vulgaris.**

**Eng : Bottle Gourd.**

| | | | |
|---|---|---|---|
| | | Kan. | Kahisore |
| Tel. | Sorateega | San. | Alabu |
| Mal. | Chura | Hind. | Lanki |

இஃது இந்தியா முழுவதும் பயிராகிறது. இதில் இரு வகையுண்டு. ஒன்று இனிப்பு மற்றொன்று கைப்பு. கைப்புக்குக் காட்டுச்சுரை பேய்ச் சுரை என்ற பெயருண்டு. இஃது உணவுப் பொருள்களுள் (காய்வகை களுள்) ஒன்று.

ப-உ : இலை, கொடி, காய், விதை.

சுவை { கைப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு. கபட்டுச்சுரை.
சிறு இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு. }

**சாட்டு சுரை.**

செய்கை {
இலை.
நீர்மலம்போக்கி —வ்ரேசநி—purgative.
காய், விதை.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி - Cooling
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரதவர்த்தநி—Diuretic
உடலுரமாக்கி - போஷணகாரி—Nutritive
பித்தசமனி—பித்தசாந்தநி—Anti-bilious }

**காட்டுச் சுரை.**

செய்கை { வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic.
பெருமலம்போக்கி—வ்ரேசனகாரி—Cathartic. }

**கொழுந்து, இலை.**

குணம் : இதனால் நீரிறங்கும். வீக்கமும்போம். சோபை முப் பிணிகள் நீங்கும். இது கழியவுஞ்செய்யும்.

நீரிழியும் வீக்கம்போம் நேரே மலமிறங்கும்
பாரமுறு சோபை பறங்குங்காண்—தீராத்
திரிதோடம் போகுஞ் செறிந்த சுரையின்
உரிய கொழுந்திலையை யுண். (அ.கு.)

**காய்.**

காயால், சுவையின்மை, ஈரல் நோய்கள், மார்பு நோய் இவை உண்டாகும். உட்சூடு நீங்கும்.

வாதபித்தம் வாயருசி வன்பீலி கஞ்சீதம்
ஓதிருத்து நோயுமுண்டாம் உள்ளனல்போம்—ஓதத்
திருப்பாற் கடற்றிருவே ! தீக்குணத்தை மேவுஞ்
சுரக்காயைத் தின்பவர்க்குச் சொல். (அ.கு.)

**இலை, கொடி.**

இலையால் வீக்கம், நீர்க்கட்டு விலகும். கொடியால், வெறிநோய்கள் போகும்.

சுரையிலையோ சோபையோடு தோன்றுநீர்க் கட்டைத்
தரையிலையோ வைக்காமற் சண்ணுஞ்—சுரையினது
தண்டோபித் தத்தைத் தரிக்கவொட் டாதடிக்குங்
கண்டோ ருரைப்பார்கள் காண். (அ.கு.)

**கரை.**

........................
....................யாமலகை
சாகாச் சுரையால் தனுவாயு மார்வலிகஞ்
சாகச் சுரையானு சம். (தே.ய.வெ.

வ-கு : நீரேற்றமொன்னும் பைசாசு தன்மை வாய்ந்த பிணிகளை ஒழிக்க வேண்டில், சுரைக்கீரையை உள்ளிப் பூண்டு சேர்த்துச்சமைத்து ஒரு மண்டலம் புசித்து வரினும், அல்லது கொடியை மட்டும் குடிநீர் செய்து குடிப்பினும் நலத்தைக் கொடுக்கும்.

இலையைக் குடிநீரிட்டு, சருக்கரை கலந்து, காமாலை நோய்க்குக் கொடுக்கலாம்.

கொடியைக் குடிநீரிட்டு, வீக்கம், பெருவயிறு, நீர்க்கட்டு இவைகளுக்குக் கொடுப்பது வழக்கம்.

கொடியை, சிறுநீரைப் பெருகச் செய்யும் குடிநீர்களில் சேர்த்துக் கொடுப்பது வழக்கம்.

சுரைக்காயின் சதையை, வெப்பத்தினலுண்டாகும் தலைவலிக்கு நெற்றியில் வைத்துக் கட்டலாம். கை, கால் எரிச்சலுக்கும் இதைக் கட்டுவதுண்டு.

சுரைக்காய் குடுக்கையைச் சுட்ட கரியை, இரசவேக்காட்டுக்குக் கொடுக்கலாம்.

காட்டுச் சுரைக்காய்ச் சாம்பலுடன், தேன் சேர்த்துக் கண்ணிலிட மாலைக்கண் போம்.

இதன் சாற்றுடன் எண்ணெய் சேர்த்துக் காய்ச்சி, கண்டமாலைக்குப் போடக் குணமாகும்.

---

## 306. சுளுக்குநாயகம்-Chulukku-nayagam.

இது பூண்டுவகை ; இந்தியாவில் பல இடங்களிலும் கிடைக்கும்.

ப-உ : பூண்டு.

சுவை : துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை { வீக்கமுருக்கி—சோபநாசநி—Deobstruent.
வீக்கங்கரைச்சி—Resolvent.

குணம் : இதனல், புள்பார்வை, சுரமெலிவினல் வந்த சுளுக்கு, கை கால்களின் சுளுக்கு, குருதிகட்டிய கரடுகளும் தடிப்புகளும் போம்.

சுளுக்கு நாயகந் தோடஞ் சுரமொடு
சுளுக்கும் வாங்குந் தொடுத்தகை காலின்
சுளுக்குமேற் கரடுங் கரைத்திடும் சொன்னேம்
சுளுக்கு மேல்வீ ழிரத்தந்துடைக்குமே.

(அ.கு.)

வ-கு : இதனை அரைத்து மேற்கூறிய நோய்களுக்குப் பற்றிட அவைகள் அகலும்.

---

## 307. சூரியகாந்தி—Suriyakanthi

வே: பெ: சூரியகாந்தம்.

Helianthus Annue

Eng. : Sunflower.

Tel. Suryakanthi | Kan. Suryakanthi

இஃது இந்தியாவில் எல்லா இடங்களிலும் கிடைக்கக்கூடிய பூண்டு இதைத் தோட்டங்களில் அழகுக்காக வைத்துப் பயிராக்குகிறார்கள். பூ மஞ்சள் நிறம்.

ப—உ: பூ, விதை.

சுவை : துவர்ப்பு, கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு— கார்ப்பு.

செய்கை : வியர்வைப் பெருக்கி—ஸ்வேதகாரி— **Diaphoretic.**

குணம் : இதனால், முப்பிணி, வலி நோய், நீரேற்றம் போம்.

சந்திர ......................................
..................................—சந்திலும்
பாரிய வாதம் பருகுநீ ரேற்றமும்போம்
சூரிய காந்திக்குச் சொல்

(அ.கு.)

வ—கு : பூவைக் குடிநீரிட்டுக் குடிக்க, மேற்கூறிய நோய்கள் நீங்கும். விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயை வெளிக்கு வழங்கலாம்.

---

## 308. சூரை—Churai

**Zizphyus Rugosus**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Telumani-chettu | Mal. | Chura |
| | | Sans. | Kakoli |

இது காரை இனத்தைச் சேர்ந்த ஒரு வகையெனக் கூறலாம்.

ப—உ : வேர் அல்லது கிழங்கு, பழம்.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : காமம் பெருக்கி—காமவர்த்தநி—**Aphrodisiac.**
உடலுரமாக்கி—போஷணகாரி—**Nutritive.**

குணம் : இதனால் மந்தம், ஐயபெருக்கு, குடல்வலி உண்டாகும்

மந்தம் அதிகரிக்கும் வன்சீ தளஞ்சேரும்
உந்து குடல்வலியும் உண்டாங்காண்—முந்துநவில்
காரைப் பழத்தில் கதித்ததொரு பேதமுமாஞ்
சூரைப் பழத்திற்குச் சொல்.

வ—கு : பழம் குடலுக்கு ஒவ்வாது.

இதன் வேரை, சதாவேரிக் கிழங்கைப்போல, இலேகியங்களிலும் பொடி வகைகளிலும் சேர்த்து வழங்கலாம்.

---

## 309. செப்பு—நெருஞ்சில் Cheppu nerunjil

**Indigofera Enneaphylla**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Palleru | Kan. | Kennegilu |
| Mal. | Cheru-nerinchil | Sans. | Gokshura |

இஃது இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராகும் படர் கொடி வந்த சிறு பூவையுடையது. இதற்கு ஒன்பது இலைகள் உண்டு.

ப-உ : செடி, வேர், காய்.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuratic.
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.

குணம் : இதனுல், முக்குற்ற நோய்கள், சுரம், வெள்ளை, முதலிய நோய்கள் நீடித்த உட்சூடு ஆகியவை நீங்கும். இது சிறுநீரைப் பெருக்கும்.

செப்புநெ ருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண்—செப்பரிய
சுக்கிலமே கம்போக்குந் தொல்லை அனல்மாற்றும்
மிக்கு மருந்துநீ விள். (அ.கு.)

வ-கு : முள்ளை வெந்நீரில் ஊறவைத்து மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்க மிக்க பயனுண்டாகும். சிறுநீரைப் பெருக்கித்தள்ளும்.

இது செந்தூரமாக்கும் ஒரு பயிர் வகை. இரச வேக்காட்டை அடக்கும்.

---

## 301. செம்பரத்தை—Chemparattai.

வே. பெ : சப்பாத்து.

Hibiscus Rosa-Sinensis.

Eng. : Shoe Flower.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dasani-chettu | Sans. | Japa |
| Mal. | Chemparathi | Arab. | Angharoaq |
| Kan | Dasvaladagida | Hind. | Jasun. |
| | | Duk. | Jasut |

இது சைனுவுக்கும், வட இந்தியாவுக்கும் உரியதெனக் கூறுவர். ஆயினும், இது தென்னிந்தியாவின் தோட்டங்களில் வைத்துப் பயிரிடப்படுகின்றது. இதன் பூக்களின் நிறவேற்றுமையும், அடுக்குகளேயும் குறிப்பிட்டு, 12 விதங்கள் பம்பாய் முதலிய இடங்களில் இருக்கின்றதென அறிந்துள்ளோம். அவ்விடங்களில் இச்செடியை அழகாய்ப் பாதையோரங்களில் பயிரிட்டு வளர்க்கின்றுர்கள்.

ப-உ : இலே, பூ, வேர்.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம்,—பிரிவு—இனிப்பு.

செய்கை :
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.
- ஆண்மைபெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.
- வறட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demelcent.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

குணம் : இதனால் வெள்ளை, குருதிவெள்ளை, பெரும்பாடு, குருதியழல் நோய் இவை நீங்கும்.

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்த வெள்ளை வழுவழுப்பும்—வெம்பும்
பெரும்பாடு ரத்தபித்த பேதம் அகற்றும்
கரும்பா மொழிமயிலே ! காண். (அ.கு.)

வ–கு : இலைச்சாற்றைத் தண்ணீரிற் கலந்து வெள்ளை நோய்க்குக் கொடுக்கலாம் ; அல்லது குடிநீரிட்டுக் கொடுக்கலாம்.

பூவை முறைப்படி குடிநீர் செய்து அல்லது ஊறல்நீர் செய்து வேளைக்கு 35 மி.லி. வீதம் கொடுத்துவர, சிறுநீர் நோய்களைக் கண்டிக்கும் ; பெரும் பாட்டை நிறுத்தும் ; உடற்குக் குளிர்ச்சியைத் தரும்.

இக்குடிநீருடன் பால், சருக்கரை, ஓமம் சேர்த்து வெள்ளைக்குக் கொடுக்க லாம்.

பூவிதழ் ஒரு பங்கு, நீர் ஆறு பங்கு சேர்த்துச் சிறு தீயிட்டு எரித்து, நாலில் ஒன்றாகக் காய்ச்சிப் பிசைந்து வடிகட்டி, சீனிச்சருக்கரை சேர்த்து மணப்பாகு செய்து, இதில் 17 முதல் 35 கிராம் எடைவரையிலும் மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

செம்பரத்தம் பூவின் சாற்றுக்கு ஓரளவு தேங்காய் எண்ணெய் சேர்த்து, சிறு தீயிட்டு நீர் சுண்டும்வரை எரித்து எடுத்து, காற்றுப்படாமல் ஒரு குப்பியில் அடைத்து வைத்துக்கொண்டு, தலையில் தடவிவர, மூளை குளிர்ச்சி யடைந்து மயிர்கள் கருத்துச் செழுமையாய் வளரும்.

இதன் வேர்ப்பொடி, தாமரைக்கிழங்குப்பொடி, முள்ளிலவுப்பட்டைப் பொடி இம்மூன்றையும் ஒரெடையாக எடுத்து 4 கிராம் முதல் 6 கிராம் எடை வரை நீரிற் கலந்து உட்கொள்ள, பெரும்பாட்டை நிறுத்தும் ; சிறு நீரைப் பெருக்கும்.

இதன் வேருடன், ஆடாதோடை இலை சேர்த்துக்குடிநீரிட்டு இருமலுக்குக் கொடுக்கலாம்.

பூவின் மொக்கை உலர்த்திப் பொடித்து ஆண்மை பெருகவும், சிறுநீர் எரிச்சல் நீங்கவும் கொடுத்துவரலாம்.

———

## 311. செம்பருத்தி—Chemparuthi.

**Gossypium arboreum.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Erra-patti** | **Sans.** | **Raktakarps** |
| | | **Hind.** | **Nurma** |
| **Mal.** | **Chuvanna-paruthi** | **Pers.** | **Kapas** |

இச்சிறு மரவகையைத் தோட்டங்களில் அழகுக்காக வைத்து வளர்க் கிறார்கள். இதன் பூ பருத்திப்பூவின் வடிவத்தில் செந்நிறமாக இருக்கும். இது பருத்தி வகையைச் சேர்ந்தது.

ப-உ : இலை, பூ, காய், பட்டை.

சுவை : துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி—Cooling.
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
- சிறுநீர்ப் பெருக்கி-மூத்ரவர்த்தநி—Diuretic.

குணம் : இதனால், உடல் அழற்சி, குருதியழல் நோய், வயிற்றுக் கடுப்பு, நீரிழிவு, வெள்ளை, ஊழிக்கழிச்சல்கள், நீர்வேட்கை இவை நீங்கும்

செம்பருத்திப் பூஅழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீர்-றம்பனச்செய்
மேகத்தை வெட்டையை விடேசிமுதற் பேதியையுள்
காகத்தை ஓட்டிவிடுந் தா. (அ.கு.)

வ-கு : இலையை அல்லது பிஞ்சுக் காயைக் குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுக்கலாம். இத்துடன் ஏலக்காய், ஓமம், கருவாப்பட்டை முதலிய சரக்குகள் சேர்த்துக் குடிநீரிட்டருந்தக் கழிச்சல் நிற்கும்.

பூவின் இதழ்களை, தாய்ப்பாலில் அல்லது பசுவின் பாலில் ஊறவைத்துப் பிழிந்து எடுத்தச் சாற்றைக், குழந்தைகளின் கண்ணோய்க்கு வழங்கலாம்.

வேரைக் குடிநீரிட்டு நாட்பட்ட சுர நோய்களுக்குக் கொடுத்துவரலாம்.

---

## 312. செம்பை—Chempai.

**Sesbania aegyptiaca**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Sominda | Sans. | Jayantika |
| Mal. | Iththikkanni | Hind. | Jetrasin |
| Kan. | Karijeenangi-mara | Duk. | Ravasin |

இஃது இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராக்கப்படுவதும், தானாக வளர்ந்திருக்கக் கூடியதுமான சிறிய மரம், இதில் மூன்று விதமுண்டு. அவை கருஞ்செம்பை, மஞ்சள்செம்பை, செஞ்செம்பையாம்.

ப-உ : இலை, பூ, விதை, வேர்.

சுவை—கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி—Emmenagogue.
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி—Anthilmintic.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி—Diuretic.
- வீக்கங்கரைச்சி—Resolvent.

**கருஞ் செம்பை.**

குணம் : கருஞ்செம்பை இலையால், வெள்ளை, புண், கட்டி, கரப்பான் ஐயம், தீக்குற்றங்கள் ஆகிய இவைகள் போம்.

விப்புருதிப் புண்ணுறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமல் மேகந் தணியுங்காண்—வெப்பார்
கபரோக மேகுஞ் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலேமாதே ! எண். (அ.கு.)

பூ.

இதனால் தலைக்குத்தல், ஐயநோய், மூக்கு, நீர் பாய்தல், வாச தாடம், பீநசம் முதலிய நோய்கள் நீங்கும்.

தலைக்குத்த லையஞ் சலதோடம் வாதம்
உலைப்பீ நசமுமிந்த வூர்க்குள்—நிலைக்கா
தருஞ்சண் பகநாசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்பைப் பூவிருக்குங கால். (அ.கு.

செம்பையிலை.

கட்டிகள், வீக்கங்கள், நீரேற்றம், வளி ஐயம்
நீக்குற்றங்கள் ஆகியவை வகள் ஒழியும்.
கட்டி யொடுவீக்கங் காயத்துள் நீரேற்றம்
ஒட்டிவரு வாதகபம் ஓட்டுவது—தொட்டுவிடும்
அம்பையிலை வேலைவென்ற வங்கண் மடமாதே !
செம்பையிலை வேலையெனத் தேர். (அ.கு.)

வ-கு.—இலையை வதக்கி வீக்கங்களுக்கு வைத்துக் கட்ட, புழுத்து உடையும். மேலும், புண் வீக்கங்கள் முதலியவைகளுக்கு வதக்கிக் கட்ட நீரை இழுக்கும்.

பச்சையிலையின் ரசத்தை, வயிற்றுப் புழுக்களைப் போக்க வழங்குவதுண்டு.

இதன் இலையை, உப்பு குப்பைமேனி இவைகளோடு சேர்த்து அரைத்து, சொறி, சிரங்கு முதலிய நோய்களுக்குத் தேய்த்து முழுக்காட்டிவர குண மாகும். இத்துடன் இதன் பட்டையை அரைத்து உள்ளுக்கும் கொடுத்து வர வேண்டும்.

பூவை, எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைமுழுக, தலைப்பாரம், தலைக் குத்தல், மூக்கு நீர் பாய்தல் முதலியன நீங்கும்.

விதைகளை அரைத்து உள்ளுக்குக் கொடுக்க, செரியாக் கழிச்சல், பெரும் பாடு, கட்டி இவைகள் நீங்கும்.

வேரை நன்றாய் இடித்து, நீர் அல்லது காடியில் குழப்பித் தேள் கடி வாயில் வைத்துத் தேய்த்து வர வலி போம்.

---

## 313 செருப்படை—Cheruppadai.

**வே. பெ. செருப்படி, சிறுசெருப்படி.**

**Molugollotoides.**

| Sans. | Hamsapathi. | Tel. | Cheppu Thattaku |
|---|---|---|---|

இஃது இந்தியாவில் எப்பாகங்களிலும் வெயிற் காலத்தில் பயிராகும் ஒரு படர்கொடி. இஃது இரு வகைப்படும். **சிறு செருப்படை, பெருஞ்** செருப்படை.

ப-உ: பூண்டு.

சுவை—கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.

குணம் : இஃது, வளி, ஐயக்குற்றத்தால் பிறக்கும் நோய்கள், மந்தம். சூலை, குன்மம், வெள்ளைவீழல் ஆகிய இவற்றை நீக்கும்.

செருப்படைக்கு வாதமந்தஞ் சேர்வான மேகம்
இருப்படிகொள் பொல்லா இசிவும்—விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோற்று தொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

(அ.கு.)

வ-கு : மேற்கண்ட நோய்களைப் போக்க, இதைக் குடிநீராகவேனும் பொடியாகவேனும் செய்து வழங்கலாம்.

இஃது உலோக வகைகளைச் செந்தூரஞ் செய்ய உதவும்.

**செருப்படி.**

கூண்டோடே யற்றுவிழுங் குற்றிருமல் காணாது
மீண்டு மணுகாது மேகங்கள் —பாண்டியன்றூர்
சீதை யிவைரசத்தை தேனைப் பிரியாத
பாதுகைப் பதத்தாற் கபம்.

(தேரன் வெண்பா).

(பொ-ள்.) : வேம்பின் பட்டை, பொன்னாங்காணி, சிறு செருப்படி இவைகளின் சாற்றுடன் தேன் கூட்டிக் கலந்து கொடுக்க, குற்றிருமல், மேகநோய்கள் போம்.

---

## 314. செவ்வியம்—Chevuiyam.

**வே. பெ : கண்டீரை, சவிகை, சவியம்.**

இதுவே மிளகின் வேர். மிளகின் குணங்களும் இதற்குண்டு ஆனால் மிளகின் காரம் இதற்கிராது.

குணம் : செவ்வியத்தால், சூலை, சுவையின்மை, முப்பிணி, நாட்பட்ட சுரம், நீடித்த இருமல், ஈளை, வெறி, குரற்கம்மல், தொண்டை நோய் சுரம், எலும்பைப் பற்றி ஏறுகின்ற நஞ்சு ஆகியவைகள் போம்.

சூலை அருசிசந்நி தொல்லிருமல ஈளைபித்தம
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய்—மூலசுரம்
கவ்வியங்கத் தேறு கனதா பரவிடமுஞ்
செவ்வியங் கொள்ளவிடுந் தேர்.

(அ.கு.)

வ-கு : இதைப் பொடித்து நாள் ஒன்றுக்கு இரு முறை 1 கிராம் 2 கிராம் எடை கொடுத்துவரலாம். அல்லது குடி நீரிட்டு வழங்கலாம்

**செவ்வியம் எண்ணெய்.**

புகலுஞ் செவியம் புதுமுக் கடுகும்
இகவாய் விளங்க விவைகள்—மகிழ்ந்து
கருஞ்சீரஞ் சிற்றரத்தை கத்தூரி மஞ்சள்
சிறுதிப் பிலிமூலஞ் சேர்.

சேருஞ் சிறுநொச்சி சேர்பட்டை சாறுட்டிக்
கூறும்வெள் ளாட்டின்பால் கூட்டரைத்து—வீறுடனே
நல்லெண்ணெ யிற்காச்சி நன்ருய் முழுகிவரச்
சொல்லநீர்ப் பாய்ச்சலறுஞ் சொல்.

(பொ-ள்.) : செவ்வியம், திரிகடுகு, வாய்விளங்கம் கருஞ்சீரகம், சிற்ற ரத்தை, கத்தூரி மஞ்சள், சிறு திப்பிலி மூலம் முதலியவற்றை ஒவ்வொரு வகைக்கும் 8½ கிராம் எடுத்து சிறு நொச்சிப்பட்டைச் சாற்றையும். வெள்ளாட்டுப் பாலேயும் விட்டரைத்து 1,250 கிராம் நல்லெண்ணெய விட்டுக் காய்ச்சித் தலேமுழுகிவர, நீர்ப்பாய்ச்சல் நீங்கும்.

---

## 315. சேம்பு—Chembu.

வே-பெ : சாமைக்கிழங்கு, சேமைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு.

Arum oolocasia,

Eng. : Co co.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chamagadda | Kan. | Kesave |
| Mal. | Chempa | Hind. | Kachu |

இஃது இந்தியாவின் வெப்ப நாடுகளில் ஏராளமாய் வளருகின்றது மேலும், உணவுக்காகவும், இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டு வருகிறது. இதில் **வெண்மை, கருமை** முதலிய இனங்கள் உண்டு.

**ப-உ :** தண்டு, இளங்குருத்து, கிழங்கு.

**சுவை**-கரகரப்பு, இனிப்பு, **தன்மை**-தட்பம், **பிரிவு**-இனிப்பு.

**செய்கை :**
- குருதிப் பெருக்கடக்கி-ரத்தஸ்தம்னபனகாரி—**Styptic.**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—**Stimulant.**
- தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—**Rubefacient.**
- மலமிளக்கி—மலகாரி—**Laxative.**

**குணம்.**

**இலேக்கு**-மூலநோய் நீங்கும்.

"சேம்பிலேக்கு நற்புளியைச்சேர்த்துச் சமைத்துண்டால்
கூம்பிட்ட மூலமறுங் கூறு."

(அ.கு.).

**கிழங்கு**-கோழைக்கட்டையும், ஐயப்பெருக்கையும் உண்டாக்கும்; நல்ல மருந்தின் குணத்தைக் கெடுக்கும். இதை உண்பதால் வாயுவைப் பெருக்கும். உடற்குக் குளிர்ச்சி தரும்.

வாதகபத் தையுள்ளே வைத்திருக்குந் தின்றக்கால்
கோதிலாத் தொண்டைதனிற் கோழைகட்டும்—மாதரசே
உண்மருந்தின் நற்குணத்தை ஓட்டுஞ்சேம் புக்கிழங்கு
தண்மேக சாந்தியென்பர் தாம்.

(அ.கு.).

**வ-கு :** இலேயை அல்லது தண்டை, புளி சேர்த்துச் சமைத்துண்டால் மூலம் நீங்கும்.

இதன் கிழங்குகளை வீக்கங்களுக்கும், கட்டிகளுக்கும் வைத்துக் கட்டலாம்.

தண்டின் இரசம், வெட்டுக் காயங்களிலுண்டாகும் குருதியை நிறுத்தும். புண்களைச் சிக்கிரத்தில் ஆற்றும். காது வலி, காதுச் சீழ் முதலியவைகளுக்கு இதன் இரசத்தில் இரண்டொரு துளி விடலாம்.

குளவி முதலியன கொட்டின வாயில் இவ்விரசத்தைத் தடவ வலி நீங்கும்.

கருஞ்சேப்பந்தண்டு இரசத்துடன் உப்புச் சேர்த்து, நெறிக்கட்டிகளுக்குப் பூச, அவை அமுங்கும்.

சேம்புக்குப் புளி சேர்த்து சமைப்பதுண்பது நாட்டு வழக்கம். ஆனது பற்றியே, "சிறியார்க் கினியதைக் காட்டாதே, சேம்பிற்குப் புளியிட விடையாதே" என்னும் பழமொழியும் வழங்கலாயிற்று.

---

## 391. சேராங்கொட்டை—Cherangkottai.

**வே: பெ: சேங்கோட்டை, வல்லாதி, வல்லாதகி, எரிமுகி, பல்லாதகி, கிட்டாக்கனிக்கொட்டை, நந்திவித்து.**

Semicarpus anacardium,

Eng. Maricing Nut tree.

இது மர வகையைச் சேர்ந்தது, இமயமலைச் சாரலிலும், வங்காளத்தில் கீழ்ப்பாகத்திலும், இந்தியாவின் இதர வெப்ப நாடுகளிலும் பயிராகும்.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Jeedi—Ginglaa** | **Sans.** | **Bhallataka—Bijam.** |
| **Mal.** | **Chera** | **Arab.** | **Habukatha.** |
| **Kan.** | **Ger-kayl** | **Hind.** | **Bhilawan.** |

ப-உ கொட்டை, பருப்பு.

**சுவை.**—கைப்பு, விருவிருப்பு, தன்மை வெப்பம், பிரிவு கார்ப்பு.

செய்கை { உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—**Alterative.**
புண்ணுக்கி—விரணகாரி—**Caustic** }

**குணம் :** இது பெரு நோய், இளைப்பு நோய், நஞ்சுகள், சூலை, கலை, இவைகளைப் போக்கடிக்கும். மேலும் திமிர்ப்படை, கருப்புப் படை, வெண் படை (வெண்குட்டம்), தீராக்கடி, மூலம், வளி நோய்கள், குன்மம் இவைகளையும் விலக்கும்.

குட்டங் கயரோகங் கொல்லும் விடபாகந்
துட்டந் தருகிருமி சூலையும் போம்—மட்டலருங்
கூந்தன்மயி லேகிரந்திக் கூட்டம்போஞ் செங்கையில்
எந்துசேங் கொட்டைதனை யே. **(அ.கு).**

சேங்கொட்டை மெய்த்திமிரைத் தீராக் கடிவிடத்தைப்
பாங்கொட்டு மூலத்தைப் பற்றறுக்கும்—ஆங்கெட்டிக்
கொல்லும்வா தத்திஞெடு குன்மத்தை யும்மதனை
வெல்லும் அயிறகண்ணுய் விள். (அ.கு.).

இஃதன்றியும், இது சொறி, சிரங்கு, புண், கீல் பிடிப்பு, சூலை முதலிய நோய்களையும் போக்கவல்லது.

இக்கொட்டையில் பிசுபிசுப்புள்ள ஒருவித எண்ணெய உண்டு. இது கருநிறமுள்ளது. கொட்டையைச் சிதைத்துத் தண்ணீரில் சேர்த்துக காய்ச்ச, சற்றேக்குறைய 100-க்கு 32 பங்கு எண்ணெய் தேறும். இரண டொன்ருய் வெட்டி ஒரு மட்பாத்திரத்தில் போட்டுக் குழித்தைலம் எடுப்பது வழக்கம்.

குறிப்பு.—இக்கொட்டையை நசுக்கி எடுக்கும் எண்ணெய்க்குப் பால என்று கூறுவது வழக்கம். இப்பால் மிகவும் கெட்டது. உடலில் பட்டால் பட்டவிடங்களில் புண் உண்டாகும். சில வேளை இப்புண்கள் மிகத்துன் புறுத்தும். இப்பாலின் வாடை பட்டாலும், பெரும்பாலாருக்கு முக வீக்கங் காணுவதும் உண்டு. நீர் கொள்ளும். உடலின் சிறுநீரைக் குறைக்கும். உடல் முழுமையும் சிறு கொப்புளங்களும் உண்டாகும்.

இதனுலுண்டாகும், நஞ்சை முறிக்க, புளியிலைக் குடிநீரையேனும் அல்லது தேங்காய்ப்பாலையேனும் உள்ளுக்குக் கொடுக்கலாம். புளி, புங்கு இம்மரங்களின் காற்றுப்பட்டாலும் இதன் நஞ்சு முறியும்.

இதைத் தக்கபடி தூய்மைப்படுத்தி இதர சரக்குகளுடன் சேர்த்து முடித்த மருந்து பெருமை உடையது.

சுருங்கச் சொல்லின், யாவரும் மெச்சும் இரசத்தால் தீரும் பெரு நோய்களும், இக்கொட்டையால் தீருமெனக் கூறலாம்.

"சேரா தழகு வடிவினுக்குச் சேரு மதிகப் பசியுண்டாம்
சேங்கன் றென்ன வுரமுண்டாஞ் சேகண் டியைப் போல் தொனி
[யுண்டாம்
சேட னெனவே யின்பமெலாஞ் சேர்ந்தே அணைய மென்மேலும்
சேயின் முகம்போல் களையுண்டாம் சேர்க்கே தனன்போல்
எழிலுறுமே. (தே. க.).

தேரன் கரிசலில் கூறிய, சேராங்கொட்டை இலேகியத்தை முறைப்படி கொள்ளின் அழகும் பசியும் உண்டாம். செங்கன்றையொத்த உரம் எழும், செயபேரிகையின் ஒலியைப்போல் குரல் ஒலி பெருகும். ஆதி சேடனைப் போன்று இன்பந்துய்க்க வலிவுண்டாம். குழந்தையின் முகம் போல் களையும், மன்மதன் போன்ற எழிலும் உண்டாகும்.

காற்பாச மாகக் கடுப்புகா லின்முன்னே
காற்பாச மாகக் கதறுமே—காற்பாசஞ்
சேரா விரைக்கற்பஞ் சீராவா மெய்க்கதனுற்
சேரா விரைக்கற்பந் தின். (தே. ய.).

காலிலே விலங்கிருப்பதைப் போன்று நடக்கவொட்டாமறபடி கால்களை முடக்கும் வளிநோய்களும், அதனுலுண்டாகும் குத்தலும் பெருங்காற்றை எதிர்த்த பஞ்சாகும். காலனுடைய கயிறும் விரைந்து சேரா. உடற்கு மேன்மையும் அழகும் ஆகும். ஆதலால், "இதனை" கற்பமாகக் கொள்க என்பது முன்னோர் மொழியாகும்.

இதைக்கொண்டு இலேகியம். சூரணம், நெய் செய்ய அவைகள் நற் பயனைத் தரும்.

வல்லாதகி லேகியம்.

வ- கு :

(a) தூய்மை செய்தசேராங் கொட்டை. பறங்கிச்சக்கை, வகைக்கு 35 கிராம்.

(b) திரிகடுகு, திரிசுகந்தம், திரிமஞ்சள், ஓமத்துவயம். சீரகத்துவயம், சிற்றரத்தை, கொத்துமல்லி, சித்திரமூலம், தான்றிக்காய், சிறுதேக்கு இவை வகைக்கு 4½ கிராம்

(c) குங்குமப்பூ, கோரோசனை, கஸ்தூரி, வகைக்கு 2¼ கிராம்.

(d) எள்ளு, வெள்ளுள்ளி, கர்ச்சூரம், நெய் வகைக்கு 35 கிராம். வெல்லம் 350 கிராம், தேன் 17 கிராம்.

(a) இக்குறியிட்ட சரக்குகளைக் கல்லுரலிட்டு, கடப்பாரையால் மெழுகுபோல் இடித்து, (b)-யிற் கண்ட சரக்குகளின் மெல்லிய பொடியைச் சிறுகச் சிறுகக் கூட்டி இடித்து, அதன்பின் (d)-யில் உள்ளதைச் சிறுகச் சிறுகக் கூட்டிச் சாடிக்கையில் (c)-யைச்சேர்ந்தவைகளைச் சேர்ந்து இடித் திடித்து மெழுகுபோல (யாதொரு பளபளப்பு, மினுமினுப்பு இல்லாதபடி) ஒன்றுபட இடித்து நெற்குவியலில் 90 நாள் புதைத்து வைத்துப் பின் வழங்கவும்.

இது போன்ற பல முறைகளை அகத்தியர் வல்லாதி 600, காவியம் 5,100 முதலிய நூல்களில் காண்க.

---

பருப்பு.

முந்திரிக்கொட்டையைவறுத்து பருப்பு எடுப்பது போலவே சேங் கொட்டையிலிருந்தும் பருப்பு எடுக்கலாம். இஃது உடம்பிற்கு ஊட்டம் தரும் ; ஆண்மையைப்பெருக்கும்.

தூய்மைப்படுத்தும் வழி : (1) சேங்கொட்டையின் மேல் மரம்போல் உள்ளமுக்கைச் சீவி, சுண்ணாம்புக்கல் நடுவில் வைத்து, கள் அல்லது காடி விட்டுத் தாளித்துக் கழுவி எடுக்கவும். இவ்வாறாக மீண்டும் ஆறு முறை செய்யத் தூய்மையாகும்.

(2) புளி இலை, புரசம் பூ இவைகளின் குடிநீரிலும், பசுஞ்சாணிப்பாலி லும், கற்றாழைச் சாற்றிலும் முறையே வேகவைத்து எடுக்கலாம்.

(3) சேராங்கொட்டை ஓரளவுக்கு, இரட்டையளவு பனங்கள்ளும் சிகப்புப் பசுந்தயிரும் கூட்டி, ஒன்பது நாள் சூரியனில் காய்ந்தபின், கழுவி எடுத்தல் வேண்டும். இஃது தேரன் கரிசலில் கூறியுள்ளது.

## 317. சேவகனார் கிழங்கு—Chevaganar-Kizhangu.

Gloreoza Superba.

குணம் : இது ஐய நோய்களை அடியோடு போக்கும் ; மரணத்தைத் தரத்தக்க விடத்தையும் கண்டிக்கும்.

கபரோகந் தன்னைக் கடலில்விழச் செய்யும
அபமிருத்து வாய்விடத்தை யாற்றும்—இபமுலவும்
காவகநாடாக் கருங்குயிலே கண்டுரைத்த
சேவக னார்கிழங்க தே. (அ.கு.).

வ - கு : இதைக் குடி நீர் அல்லது பொடி செய்து உட்கொள்ள, மேற் கண்ட நோய்கள் விலகும்.

---

## 318. சோளம்—Cholam

Andropoan soregun.

| | | | |
|---|---|---|---|
| **Eng:** | **Maize** | | |
| **Tel.** | **Jonna** | **Kan.** | **Jola** |
| **Mal.** | **Cholam** | **Sans.** | **Joornakam** |

இஃது உணவு வகைகளுள் ஒன்று; தென்னாட்டிற்கே உரியது. பெருவாரியாகப் பயிரிடப்பட்டு வந்ததினாலேயே, "சோழ மண்டலம்" எனவும், அதைக் கொண்டே ஆங்கிலேயர் இந்நாட்டைச் சேர்ந்த கரைக்கு "கோரமண்டல் கோஸ்ட்" (Coramandel Coast) எனவும் பெயரிட்டனர் எனக் கூறப்படுகின்றது. இது, புன்செய் நிலத்தில் விளையும் ஏழை மக்களின் உணவாகக்கொள்ளப்படுகின்றது.

வகைகள் (Varieties).—இதில் கருஞ்சோளம், செஞ்சோளம், காக்காய்ச்சோளம், மக்காச்சோளம், வெள்ளை அல்லது முத்துச்சோளம், எனப் பலவகை உள்ளன. இவைகளுள் மக்காச்சோளம் மிகவும் சிறந்தது. இதை மேனாட்டார் உணவுக்காக வழங்கி வருகின்றனர்.

ப- உ : விரை.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

குணம் : { உடலுரமாக்கி - போஷணகாரி - Nutrient.
மலமிளக்கி - லகுவ் ரேசநி - Laxative. }

குணம் : இதனை உண்ணின், சொறி, சிரங்கு, கரப்பான் இவைகளையுண்டாக்கும்; மருந்தைக் கெடுக்கும்; ஆண்மையை உண்டாக்கும்.

சோளமெனப் பேர்படைத்த சோறுகளி னாலுடலில்
மீளச் சொறி சிரங்கு விர்த்தியதாம்—நாளுங்
கரப்பானும் உண்டாம் கனமருந்தும் பாழாம்
பரப்பனைய கண்மாதே! பார். (அ.கு.)

வ - கு : இதனை இடித்து மாவாக்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிக்கலாம். மாவைக் களியாகச் சாப்பிடலாம். பச்சைக் கதிர்களை வேகவைத்து அல்லது வறுத்துச் சாப்பிடுவது நாட்டுப் பழக்கம்.

இதைப் பொரியாகப் பொரித்து, மாவாக்கிச் சருக்கரை கலந்து சாப்பிடுகிறவர்களும் உண்டு.

இதன் தட்டு இனிப்புள்ளது. இதை ஆடு மாடுகள் மிக விருப்பமாய்த் தின்னும்.

அமெரிக்கா முதலிய மேனாடுகளில், இதன் புறவிதழ்களைக்கொண்டு ஒரு விதக் காகிதம் செய்கிறார்கள்.

மக்காச் சோளமானது மிக வன்மையைக் கொடுக்கக் கூடியது. ஆகையால், இதன் மாவையும் கஞ்சியையும் நோயுற்றார்க்கு வழங்கலாம்.

மக்காச்சோளத்தோடு தொங்கும் பட்டுப்போன்ற இதழ்களைக் குடிநீரிட்டுக் கொடுத்தால், நீரடைப்பு, நீர்ச்சுருக்கு முதலிய நோய்கள் போமெனக் கூறுவாரும் உளர்.

சோளக்கதிரிலுள்ள விரையை எடுத்தபின் உள்ள சடையை எரித்த சாம்பலுடன் சோற்றுப்புக் கலந்து கொடுத்தால், இருமல், கோர்ழைக்கட்டு கக்குவான் முதலியன போம் என்பதும் சிலரின் கொள்கை.

---

## 319. தகரை—Thagarai.

இஃது இந்தியாவின் வெப்ப நாடுகளில் ஏங்கும் பயிராகுஞ் சிறு செடி, இதில் பல வகைகளுண்டு. அவைகள் யாவும் கீழ்க் கூறப்பட்ட இரு வகுப்புகளுள் அடங்கும்.

(1) ஊசித்தகரை, (2) பேயாவாரை.

### ஊசித்தகரை—Usiththagarai.

வே–பெ : நாரத்தாரை.

**Cassia tora.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tagirisa | Sans. | Chankramarda |
| Mal. | Thakara | Hind. | Chakunda |
| Kan. | Tagasi. | | |

இவ்வகுப்பில், கருந்தகரை, காட்டுத்தகரை, வெண்டகரை என மூவி னங்களுண்டு. இவைகளின் செய்கை குணம் ஒன்றே. இதன் இலை ஒரு வித வெகுட்டலான நாற்றமுடையது.

ப- உ : இலை, வேர், விரை.

சுவை—கைப்பு, உவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - Aperient.
- நுட்புழுக்கொல்லி - கிருமிநாசநி - Germicide.
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Ferbrifuge.

### எல்லா தகரைகளுக்கும் பொதுப் பண்பு.

படர்தாமரை சொறி, மந்தம், எலும்புருக்கிச் சுரம் இவைகளைப் போக்கும்.

தகரைப் படர்தா மரையைச் சொறியைத்
தகர வடிக்குமந்தந் தன்னே—டிகலான
அத்தி சுரத்தையும் தஞ்செய்யு மிம்மூலி
யுத்தமமா மென்றே யுரை. (அ.கு.)

தகரை விரை.

வண்டுகடி, கடுவன், நாட்பட்ட நமைப்புடை, அனல் இவைகளை நீக்கும்.

வண்டு கடியுடனே வன்கடுவ னும்பலவாம்
பண்டு நமைப்புடையும் பண்டிதர்கள்—கண்டுரைக்காப்
பித்த அனலும் பெருத்த தகரைவிதைக்
கித்தரையுள் நில்லா திசை. (அ.கு.)

குறிப்பு : கீழ்க்காணும் வழக்குகள் எல்லாவகைத் தகரைகளுக்கும் சேர்ந்ததே.

வ - கு : இலை அல்லது வேரை, பழ இரசம் விட்டரைத்துப் படர் தாமரை, சொறி சிரங்குகளுக்குப் பூச அவை போம். பழ இரசத்துக்குப் பதில் காடி விட்டும் அரைத்துக் கொள்ளலாம்.

இதன் குடிநீரை ஒன்று அல்லது ஒன்றரைப் பாலடை அளவாகக் குழந்தைகட்குக் கொடுக்க, பல் முளைக்குந் தருவாயில் நேரிடுஞ் சுரம் நீங்கும். கழியச் செய்யும்.

இலை அல்லது வேரை அரைத்துச் சிற்றாமணக் கெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி, புண்களுக்குப் பூசப் போம்.

இதன் விரையை இலைக்கள்ளி இரசம் விட்டு ஊறவைத்து, பசுநீர் விட்டரைத்து, படர்தாமரைக்கும், சிறு கட்டிகளுக்கும் போடப் போம்

## பேயாவாரை—Peyavarai.

வே பெ : பேயாவிரை, பொன்னுவிரை.

**Cassia Occidentalis.**

Eng. Negro Coffee.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kasinda | Sans. | Kasamarda |
| Mal. | Nattuthakeara | Hind. | Kasunda |
| Kan. | Doddatagache | Duk. | Kasunda |

இது தகரையினம். இதன் செய்கை பண்பு முதலியன ஊசித்த தகரைக்குடையதேயாயினும், கீழ்க்காணும் பண்பு இதற்குச் சிறப்பு உண்டு.

ப - உ : இலை, விதை, வேர்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : நச்சரி—விஷநாசநி—Antidote,
நிர்மலம்—போக்கி—வ்ரேசநி—Purgative.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

குணம்: ஊசித்தகரைக்குடையதே

வ-கு: இதன் இலையைச் சமைத்துத் தின்பார்கள். இதனுல் கழிச்சலுண்டாகும்.

விரையை வறுத்துப் பொடித்துக் காப்பிக்கொட்டைக்குப் பதிலாக சிலர் வழங்குகின்றனர்.

இலையின் அளவு 6 கிராம் எடை.

வேரின் அளவு 2—4 கிராம் எடை.

இதன் இலை, விதை, வேர் கழிச்சலை உண்டாக்கும் தன்மை உடையதால், அளவறிந்து வழங்கல் வேண்டும். இதை அரைத்து சொறி, சிரங்குகளுக்கும் போடலாம்.

இதன் வேர்க்குடிநீர் நஞ்சை முறிக்கும். மேலும், நீரைக் கழிக்குந் தன்மை இதற்கிருப்பதால், இது பாண்டுநோய்க்கும் கொடுக்கப்படுகிறது.

---

## தக்காளி—Thakkali.

**Physalis minima.**

Eng. : Cape gooseberry.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kupanti | Sans. | Tankari |
| Mal. | Njodi-njotta | Hind. | Tulatipati |
| Kan. | Bandula | | |

இப்பூண்டு இந்தியா முற்றிலும் வளரக்கூடியது.
இது நாற்றக்காளி (பசுந்தக்காளி-நெய்த்தக்காளி), எருமைத்தக்காளி, பேய்த் தக்காளி) என இருவகைப்படும். இவை நீங்க, சீமைத்தக்காளி, என்கிற ஓர் இனமும், மணித்தக்காளி என்கிற மற்றோர் இனமு முண்டு.

**தக்காளி.**

சுவை - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு**- இனிப்பு.

**செய்கை** { உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—**Alterative.**
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diuretic.**
மலமிளக்கி—லகுவ்ரேசநி—**Aperient.**

**குணம் :** இது மேக நோய், சிறுநீர் எரிச்சல், வீக்கம் முதலிய நோய்களைப் போக்கி, உடலைக் காக்கும்.

**வ- கு :** இதைக் குடிநீரிட்டு மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம். இதன் செடியைக் காடியில் அரைத்துக் கட்ட, முலைப்பால் பெருகும்.

---

## 322. சீமைத்தக்காளி—Shimaithakkali.

**Eng. : Tomato.**

இது தென்னிந்தியாவில் வளமாய்ப் பயிராகிறது. இதன் காய், உருண்டை வடிவுடன் பச்சை நிறமாயிருக்கும். பழுத்தால் சிவப்பு நிறமாய் மாறும்.

**சுவை**- இனிப்பு, புளிப்பு; **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை :** குளிர்ச்சியுண்டாக்கி–சீதளகாரி–**Cooling.**
உரமாக்கி–பலகாரி–**Tonic.**

**குணம்** - உடலுக்குக் குளிர்ச்சியையும், குருதிப்பெருக்கையும் உண்டாக்கும்.

**வ - கு :** பழத்தை அநேகர் பச்சையாகத் தின்கின்றனர்.

பழத்தைப் பருப்பு முதலியன சேர்த்துச் சமையல் செய்துண்பது இந்நாட்டு வழக்கம்.

---

## 323. மணத்தக்காளி—Manaththakkali.

**வே. பெ. : மணித்தக்காளி, மிளகுத்தக்காளி, உலகமாதா, விடைக்கந்தம், வாயசம், காகமாசி.**

Solanu Nigrum,
Solanum rubrum,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kamanchi-chettu. | Kan. | Kakmunchi |
| Mal. | Manithakkalai | Sans. | Kakamachai |
| | | Hind. | Mako |

இதில் சிவப்பு கறுப்பு என இரண்டு இனங்களுண்டு. இவ்விரண்டு செடிகளும் இந்தியாவில் கிடைக்கக் கூடியன. குணத்தில் இவ்விரண்டுக்கும் பெரிதும் வேற்றுமை இல்லை.

**ப- உ :** இலை, காய்.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை :** { உடற்றேற்றி–வ்யதாபேதகாரி–**Alterative.**
சிறுநீர்ப்பெருக்கி–மூத்ரவர்த்தநி–**Diuretic.**
வியர்வைப்பெருக்கி–ஸ்வேதகாரி–**Diaphoretic.**
கோழையகற்றி–கபஹரகாரி–**Expectorant.**

**மணத்தக்காளி.**

**குணம் :** ஐயநோயால் உண்டாகும் நாப்புண் வேக்காடு நீங்கும். வற்றல் நோயாளிகளுக்கு ஆகும்.

காய்க்குக் கபந்தீருங் காரிகையே ! அவ்விலைக்கு
வாய்க்கிரந்தி வேக்காடு மாறுங்காண்—தீக்குள்
உணக்கிடு வற்றல் உறுபிணியோர்க் காகும்
மணத்தக்கா ளிக்குள்ள வாறு.

**வேறு**

மணத்தக் காளியுண மார்பினிற் பையுளின்
கணத்தினிற் புறப்படு கயமுத லறுமே. (தே. கா.)

(**பொ- ள்.**) மணத்தக்காளியைக் கறியாயேனும், வேறுவிதங்களாயேனும் உண்டுவரின், மார்பில் கோழை சேர்தல், இருமல், இளைப்ப (க்ஷயம்) முதலியன விலகும்.

**வேறு.**

........ விருந்தா.

மணத்தக் காளி யெனவுடல்வாழ வுயிர்நல்கு (தே. ய.)
மணத்தக் களியுண்ண வெகுவாய்.

(**பொ- ள்.**) மணத்தக்காளியினது காய், கனி, இலை, வேர் இவற்றை ஊறுகாய், வற்றல் குடிநீர் முதலியவைகளாக உட்கொள்ள நீண்ட வாழ்நாளும், நோயற்ற உடலுடனும் இருக்கச்செய்யும்.

**மணத்தக்காளிக்காய்.**

இளகக் கழியச் செய்யும் ; ஐயத்தையும், வளிநோயையும் போக்கும்.

மலமிளகுந் தானே மகாகபமும் போகும்
பலமிகுந்த வாதம்போம் பார்க்குள்—மலைபோற்
பணைத்துப்பூ ரித்தமுலைப் பாவாய்கேள் ! நல்ல
மணத்தக்கா ளிக்காயை வாழ்த்து. (அ.கு.)

**வற்றல்.**

நீர்க்கழிச்சலை உண்டாக்கும், வாந்தியைப் போக்கும், வாயிலைப்பு நீக்கும். நோயாளிகளுக்கு வற்றது.

நீர்ப்பேதி யாகும் நிலைவமனம் போம்வாயிற்
கூர்ப்ப இலைப்புமறுங் கூறுவதோ—பார்க்கிலினும்
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்
தக்காளி வற்றலுக்குத் தான். (அ.கு.)

**வ- கு :** இலைச்சாற்றில் 35 மி.லி. தினம் 3 வேளை கொடுக்க, நீரைப் பெருக்கி, நீர்ப்பாண்டு, பெருவயிறு, வாய்ப்புண், உட்சூடு இவற்றை அகற்றும்.

வற்றல் சுவையின்மையை நீக்கும். காயை உலர்த்தி வற்றல் செய்து நெய்யில் வறுத்தோ அல்லது குடிநீரிட்டோ கொடுக்க வாந்தியைப் போக்கிக் கழியச் செய்யும். கோழையை அகற்றும்.

வற்றல், 136 கிராம் கொதிக்கிற 700 மி.லி. வெந்நீரில் சேர்த்து, ஒரு மணி நேரம் மூடிவைத்திருந்து வடிகட்டி, நீர்க்கோவை நீர்ச்சுருக்கு முதலியவைகளுக்கு 35—80 மி.லி. அளவு கொடுக்கலாம்.

இதனால் செய்யப்படும் தைலம், இரைப்பு, இருமல், நோய்களைப் போக்கும். இதன் செய்முறையைச் “ சித்தர் உரை விளக்கம் ” என்னும் நூலில் காண்க.

## 324. தக்கோலம்—Takkolam

**வே - பெ:** கோலம், சிருதபலம். தக்கோலப்பொட்டு, இலதை கத்தூரிகை. தூரிகை

இதற்கு வேறு மொழிகளின் பெயர்கள் கிடைக்கவில்லை:

**சுவை** - துவர்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை
- வாதமடக்கி—வாதஹரகாரி—Anti-Vata.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.

**குணம்:** தக்கோலத்தினால் பாண்டு, சுரம், வாயைப்பற்றிய வளி நோய்கள் போம். உடல் வன்மை பெறும். ஆண்மை உண்டாம். தளர்ந்து வெளியாகும் எருவைக் கட்டும்.

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேரும்
தீண்டுமுப யாசியமுந் தீருங்காண்—நீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்தமல முங்கட்டும்
கோதகலுந் தக்கோலங் கொள். (அ.கு.)

**வ - கு:** தக்கோலப் பொட்டை உலர்த்திப் பொடிசெய்து 1—2 கிராம் எடை அளவு காலை மாலை உட்கொண்டுவர, பாண்டு, சுரம், வாயைப்பற்றிய வளி நீங்கும். இதைக் குடிநீரிட்டும் கொடுக்கலாம்.

மெலிந்த பெண்கள், இதனை வெற்றிலைபாக்குடன் கொள்ள மெலிவு நீங்கி வன்மை பெறுவார்கள்.

அடிக்கடி இளகிய கழிச்சல் உடையவர் இதைத் தக்க அளவில் கொள்ளலாம்.

---

## 325. தண்ணீர்விட்டான்—Thannirvittan

**Asparagus race morsus**

**வே பெ:** தண்ணீர்விட்டான், சதாவேலி, சதாவேரி, சதாமூலம் சதமுலை. சதாவரி, நீர்வாளி, நாராயணி, நீர்விட்டான், ஆகேருகம், வரிவரி, உதகமூலம், சிக்குவை, பறணை, பீருதந்தி.

**Asparagus Sartmenosus or A. Racemosus.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pillipeechara | Sans. | Shatavari |
| Mal. | Sataveri | | |
| Kan. | Satmula | Hind. | Satavare |

இது கொடியினம் இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராகின்றது. இவ்வினத்தில், **சீமைத்தண்ணீர் விட்டான்** என்ற ஒரு வகையுமுண்டு. இவ்விரண்டிற்கும் வேற்றுமை ஒன்றுமில்லை.

**ப - உ:** இலை, கிழங்கு.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
- பாற்பெருக்கி—சஷீவாத்தநி—Galactagogue.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
- இசிவகற்றி—அங்கரகர்ஷணநாசநி—Antispasmodic.

குணம் : இதன் கிழங்கு, நீரிழிவு, நாட்பட்டசுரம், எலும்புருக்கி நோய், வெண்ணீரை அழிக்கும் நோய், வெட்டை, உட்சூடு முதலிய வற்றை நீக்கும்.

நீரிழிவைப் போக்கும் நெடுநாட்சு ரத்தையெலாம்
ஊரைவிடுத் தோடவு ரைக்குங்காண்—நாரியரே ! ஆ
வெண்ணீர்பெய் சோமநோய் வெட்டை யனல்தணிக்குந்
தண்ணீர்விட் டான்கிழங்கு தான். அ.கு.

வ - கு : இலையை வேகவைத்து நெய் தடவி சிறு கொப்புளங்களுக்கு வைத்துக் கட்டலாம்.

இலைச்சாற்றுடன் பால் சேர்த்துக் கொடுத்துவர, வெப்பத்தைக் குறைத்து வெள்ளையை நிறுத்தும்.

கிழங்கைப் பாலில் வேகவைத்து அப்பாலை உட்புகட்ட, அழலால் உண்டான சுவையின்மை, செரியாக் கழிச்சல் முதலியன தீரும்.

கிழங்குச்சாறு 1 பங்கு, வெண்ணெய் 1 பங்கு, பால் 10 பங்கு இவற்றை நெய்யாகச் செய்து, சர்க்கரை, தேன், திப்பிலி சேர்த்துச் சாப்பிட, உடல் வலுக்கும். ஆண்மை பெருகும்.

கிழங்கைப் பொடிசெய்து, வேளைக்கு ஒன்று முதல் 8 கிராம் எடை தினம் இருவேளை கொள்ளலாம்.

தண்ணீர்விட்டான் கிழங்கின் இரசம் தேன் இவைகளைச் சேர்த்துக் குடித்து வர, வயிற்றிலுண்டாகும் சூலை நீங்கும்.

---

## 400. தமரத்தம்—Tamaraththam

**வே : பெ: தமரத்தை, தந்தசடம்.**

**Averrhoa carambola.**

**Eng : Chinese Gooseberry.**

| | | | |
|---|---|---|---|
| **Mal.** | **Tamaratta** | Sans. | **Karmaranga** |
| **Kan.** | **Derchuli** | Hind. | **Karmaranga.** |

இஃது இந்தியாவில் பல இடங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது

ப-உ : பழம்.

சுவை—புளிப்பு. தன்மை—தட்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை: மலமிளக்கி—மலகாரி—Laxative.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

குணம் : இதனால், வளிதீ, வளிஐயத்தால் வரும் வாந்தி, குரற்கம்மல் கண்ணோய், அறிவுகலக்கம், ஆண்மைக்குறைவு, தலைநோய், தீக்குற்றப் பெருக்கு இவைகள் போம்.

வாதபித்தம் வாதகபம் வாந்திகுரல் கம்மல்கண்ணோய்
தாதுநட்டம் பித்தந் தலைநோயோ—டோதுசித்தத்
துற்றபிர மையும்போம் ஒண்டொடியே ! மாபுளிப்பாம்
நற்றமரத் தம்பழத்தை நாடு.

வ-கு : இதனை, ஊறுகாயாகவும் கறிவகைகளாகவும் வழங்குவர். இது பசித்தீயைத் தூண்டும்.

பழத்தைச் சருக்கரையுடன் சேர்த்துப் பாகு செய்து அருந்த, உடலுக்கு குளிர்ச்சியைத் தரும் ; உடற் சூட்டையும் நீர் வேட்கையும் தணிக்கும்.

பழச்சாறு துணிகளிலுள்ள கரையைப் போக்கும்.

---

## 327. தரா—Thara.

வே-பெ : துரா, பம்பந்தரா, மதுகம்.

Fumaria parviflora.

Eng. : Common fumitory.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Chata-rashi | Hind. | Kshetra-parputi |
| Mal. | Thura | | |
| Sans. | Parpat | | Pitpapada |

இப்பூண்டு, இந்தியா முழுவதிலும் கிடைக்கக்கூடியது. இதில் செந்தரா என வேறோர் இனமும் உண்டு.

ப-உ : இலை.

சுவை—கைப்பு, துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை
- வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Disphoretic.
- சிறுநீர்ப் பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
- மலமிளக்கி—லகுவ்ரேசநி—Aperient.

குணம் : இது, புண், கழலை, முப்பிணி நோய்கள், கண்புகைச்சல், கண் காசம், சூதகக்கட்டு, ஆகிய இவைகளைப் போக்கும். பெண்களுக்கு முலைப் பாலைப் பெருக்கும்.

புண்கிரந்தி கட்டி பொருசந்நி கீடமும்போம்
கண்புகைச்சல் காசங்கதிக்குமென்பர்—பெண்களுக்குப்
பாலும் பெருகுமுள்ளே பற்றுதிரச் சிக்கல்விடும்
எலுந் தராவி னிலைக்கு. (அ.கு.)

### செந்தரா.

இதன் இலையால், மூலமூலம், சுவையின்மை, நீர்த்தாரையிறகூடு, நீர்விடாய், இளைப்பு ஆகிய இவைகள் நீங்கும். பசியுண்டாகும்.

அனில முளையும் அரோசகமு நீங்கும்
தனியான தோடமது தாழும்—கனிமொழியே !
வெந்தாரைச் சூடும் விடாயும்போம் தீபனமாம்
செந்தரா விண்தழைக்குச் செப்பு. (அ.கு.)

### தாராப்பூ.

வாசத்தி னுலுடலில் வாசஞ்செய் யுயிர்கட்கு
நேசத்தை நாளு நிகழ்த்தலாற்—பூசித்த
பேரா தரவு பிறக்கவுஞ் செய்தலால்
தாரா யுனைவளர்க்குந் தாய். (தேரன்—வெண்பா)

பூ. தன் மணத்தால் மனதிற்கோர் இன்பத்தை அளித்தல்போலத் தாரா தாயைப் போல உயிரை வளர்க்கும்.

வ-கு : இதை முறைப்படி குடிநீரிட்டு மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இதன் இலையைப் பொடித்துச் சிறிது மிளகுத்தூள் சேர்த்து, காமாலை சுரம் முதலிய நோய்களுக்குக் கொடுத்து வரலாம்.

இலையுடன் சிறிது மஞ்சள் சேர்த்தரைத்து, கட்டி பிளவைகட்கு வைத்துக்கட்ட அவைகள் பழுத்துடையும்.

இலையை உலர்த்திக் குடிநீரிட்டு குடித்துவர, இதனால் கழிச்சல் உண்டாகும். உடல் வலுக்கும். வெண்புள்ளி மாற இவ்விலையுடன் பன்னீர்ப்பூச் சேர்க்க வேண்டும்.

செந்தரா இலையை அரைத்துச் செம்புத் தகட்டிற்கு அப்பிப் புடமிட செம்பு வெட்டையாகும். அதன் களிம்பும் அறும்.

---

## 328. தருப்பை—Tharuppai.

**வே - பெ : தர்ப்பை, குசம், குமுதம், குசைப்புல், கூச்சம், தெற்பை, விசுவாமித்திரம்.**

**Poa-Cynosuriodes.**

**Eng. : Sacred-kusa-grass.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Darbha | Sans. | Kusa |
| Mal. | Tharba | Hind. | Kusha |

இஃது புல்லினம் இந்தியா முழுவதிலும் வளர்கிறது. இப்புல் இந்தியாவில் கடவுள் வழிபாடு, வைதீகச் சடங்கு முதலியவற்றிற்குப் பயன்படுகிறபடியால், இதற்கு "அருச்சனைப்புல்" என்று ஒரு பெயரும் வழங்குகின்றது.

ப.உ. : புல்.

சுவை—துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : { சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி—Diuretic.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent. }

குணம் : இதனால், சகலவித குற்றங்கள், சிறிய நஞ்சுகள், மிஞ்சின ஐயம்பெருகு, சுரங்கள், நீர்வேட்கை, நமைச்சல் ஆகிய இவை போம். இது வேள்விகட்குமாம்.

தோடஞ் சிறியவிடஞ் சோராக்க பப்பெருக்கஞ்
சாடுஞ் சகலசுரந் தாகமிவை—யோடும்
அரிப்பு மகலும் அடல்வேள்வி கட்காந்
தருப்பையெனும் புல்லுக்குத் தான்.

(அ.கு.)

வ—கு : இதை முறைப்படி குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் போம்.

---

## 329. தவசுமுருங்கை—Thavasu-murungai

**Adhatoda tranquebariensis.**

இது தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது.

ப-உ : இலே.

சுவை—துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.

பண்பு : இதனால் மூக்கு நீர்பாய்தல், உண்ணாக்கு நோய், ஐயம், இரைப்பு, பொடியிருமல் ஆகிய இவை நீங்கும்.

தவசுமுருங் கைத்தழைக்குத் தையலே கேளாய் !
அவசியம் பீநசம்உண் ணாக்கும்—உவசர்க்க
ஐயஞ்சு வாசகபம் அண்டாது குத்திருமல்
வையம் விடுத்தேகும் வழுத்து. (அ.கு.)

வ-கு : இலே இரசத்தை வேளைக்கு ஓர் உச்சிகரண்டி அளவு, மேற் கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இலேச்சாற்றைப் பிழிந்து 15—30 மி.லி. அளவு கொடுக்க, பிள்ளை பெற்ற அழுக்கு வெளிப்படும்.

இதன் சாற்றில் வெள்ளியைப் பழுக்கக் காய்ச்சி தோய்த்து வர வெட்டையாகும்.

## 330. தழுதாழை—Thazhuthazhai.

வே-பெ : தக்காரி, வாதமடக்கி, நந்தக்காரி.

**Clerodendron phlomoides.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Teaki | Sans. | Vata ghni |
| Mal. | Vathamadakki | Hind. | Urin |

வெப்பக் காடுகளில் எங்கும் வளர்ந்து வருகிற இச்சிறுமரம் இந்தியா முழுவதும் கிடைக்கும்.

ப-உ : இலே, வேர்.

சுவை—கைப்பு, துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

குணம் : பக்கவாத முதலிய 80 வளி நோய்கள், மூக்கடைப்பு நோய்கள் புடை, கழலே, ஐய சுரம், குடைச்சல் இவை நீங்கும். ஆனால் அழலே உண்டாக்கும்.

வாதப் பிடிப்பென்ற வற்காலி யைப்புவிபோற்
போதப் பிடிக்கும் புகலவற்றே—காத
அழுதாழைப் பீநசத்தை யுண்டா தகற்றும்
தழுதாழைப் பன்னமது தான்.

சேர்ந்த சொறிசிரங்குஞ் சேர்வாதம் என்பதும்போம்
ஆய்ந்திடிற் பித்தம் அதிகரிக்கும்—மாந்தமறும்
ஐயின் சுரந்தணியும் ஆனதழு தாழைக்கு
மெய்யின் கடுப்பும்போம் விள். (அ.கு.)

வ-கு : இலைச்சாற்றை அல்லது வேர்ச் சாற்றை எடுத்து, அதன் அளவுக்கு விளக்கெண்ணெய் சேர்த்து, மேக நோய்களுக்குக் கொடுத்து வரலாம்; அல்லது இலையைப் பொடித்துத் தனியாகவும் கொடுக்கலாம்.

இலைச்சாற்றில் 17 கிராம் காலை மாலை உள்ளுக்குக் கொடுக்க, அது சுரத்தைத் தணிக்கும். இத்துடன், இலை இரசத்தை மூக்கில் இரண்டொரு துளி விடலாம்.

இலையை நீரில் சேர்த்துக் காய்ச்சி வலியுள்ள இடங்களைக் கழுவலாம்.

இலை பொடித்ததை, ஆளி எண்ணெய் விட்டுப் பிசறி, சிறிது வெதுப்பிச் சூட்டுடன் வைத்துக் கட்ட, நெறிக்கட்டிகள் கரையும்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, பிடிப்புகளுக்குத் தடவி வரலாம்; அல்லது இலையில் விளக்கெண்ணெய் தடவி வெதுப்பி வைத்துக்கட்டலாம்.

---

## 321. தாமரை—Thamarai.

வே - பெ : அரவிந்தம், எல்லிமனை, சூரியநட்பு, பொன்மனை, விந்தம், புண்டரீகம், பதுமம், கமலம், நளினம், முளரி, முண்டகம், மாலுந்தி, சரோகம், கோகனகம், இண்டை, கஞ்சம், அப்புசம், அம்போருகம், சலசம், வனசம், வாரிசம், சரசிருகம், பங்கேருகம், சரோருகம், பங்கசம்.

Nelumbium speciosum,

Eng : The Sacred lotus.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tamara | Sans. | Pankaja |
| Mal. | Aravindam | Arab. | Nilufer |
| Kan. | Tavare | Pers. | Nifure. |

இது நீரில் வளரும் கொடி ; இந்தியாவில் குளங்குட்டைகளில் செழித்து வளருகின்றது. இப்பூவின் நிறவேற்றுமையைக்கொண்டு இதை வெண்மை, செம்மை, நீலம், மஞ்சள் என, நான்கு இனங்களாகப் பிரிக்கலாம். இதன் பூவிற்கு நறுமணமுண்டு. இப்பூவில் இலட்சுமி வாசஞ் செய்கிறாள் என்னும் நம்பிக்கை இந்துக்களுக்கிருப்பதால், இப்பூ மிகவும் போற்றப்படுகிறது.

ப-உ : பூ, விரை, பூத்தாள், கிழங்கு.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை

பூ

குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி—cooling.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
கோழையகற்றி-கபஹரகாரி—Expectorant.
தாதுவெப்பகற்றி-சமநகாரி—Sedative.

கிழங்கு.

உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

விதை.

உரமாக்கி-வன்மை உண்டாக்கி—Tonic.
உடலுரமாக்கி-போஷணகாரி—Nutrient.

### இலை.

**பண்பு** : இதன் இலையில் புசிக்கில், உடற்கு வெப்பத்தைத் தரும்; வளிநோயைப் பெருக்கும்; பசித்தீயைக் கெடுக்கும், தரித்திரத்தை உண்டாக்கும்.

தாமரைப்பன் னத்திலுண்டால் தாங்கரிய உட்டினமாம்
நாமவர் தஞ்சினந்து நண்ணுங்கான்—தூமமுரு
அக்கினிமந் தங்களுண்டாம் அன்றே மலர்த்திருவத்
திக்கினிலி ராளெனவே தேர். (அ.கு.)

### பூ.

**வே - பெ: இராசீவம், இறும்பு, மரைப்பூ.**

இது, வெப்பத்தாற் பிறந்த, விழி எரிச்சல், சுரம், நீர்வேட்கை ஆகிய இவைகளைப் போக்கும்.

பருத்தநற் றுமரைப்பூ பல்வாந்தி நோயைத்
துரத்திவிடும் இன்னுஞ் சொலவோ—கரத்தில்
எடுத்தணைக்கக் கண்குளிரும் ஏகுஞ் சுரமும்
எடுத்தவி தாகமும்போம் என். (அ.கு.)

### தாமரைப் பூத்தாள்.

"சண்டளையுஞ் சண்டனையுந் தள்ளமல ருள்ளுறையுண்
சண்டளையுஞ் சண்டனையுஞ் சார்." (தே.ய.)

(பொ-ள்.) தாமரைப்பூவின் மகரந்தப்பொடியுடன், சர்க்கரையும் தேனும் கூட்டி, விடியற்காலையில் நித்தியப்படி பத்தியத்துடன் புசித்து வந்தால், காது கேளாமை, அலி என்கிற பேடித்தனம், ஆண்மை இன்மை என்பவை நீங்கும்.

## வெண்தாமரைப்பூ.

### வெண்தாமரைப் பூ.

வெள்ளைத் தாமரைப்பூவால், ஈரலின் வெப்பமும், வெப்பமுள்ள மருந்துகளின் உட்சூடும் நீங்கும்.

ஈரலைப் பற்றிமிக ஏறுகின்ற வெப்பமும்போங்
கோர மருந்தின் கொடுமையறும்—பாருலகில்
தண்டா மணத்தையுள்ள தாழ்குழலே ! காந்தல்விடும்
வெண்டா மரைப்பூவால் விள்.

### விதை.

இதனால், அலசம், சுவையின்மை முதலியன போம். ஆண்மை பெருகும்

மந்தத் துவமகற்றும் வல்லருசி நீக்கிவிடும்
மந்தத் துறைதாது விற்கடலே—தந்திடும்பின்
னுன்னிலின்னுந் தோடகுணம் யாவுமோட் டுஞ்சலசந்
தன்னிலண் ணுக்கிரவுஞ் சம். (தே.கு.)

### கிழங்கு.

இது கண் ஒளி குளிர்ச்சி இவைகளைத் தரும், இருமல், தவளைச்சொறி, வயிற்றுக்கடுப்பு ஆகிய இவைகளை நீக்கும்.

கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித்தம்போக்கும்
எண்ணுங் குளிர்ச்சிதரும் ஏந்திழையே !—புண்ணுகளில்
தாமரைப்புண்ணும் போக்குந் தொந்திக்கடுப்பகற்றுந்
தாமரைக் கந்தமது தான். (அ.கு.)

தாமரைக்குளத்து நீர்.

இதனால், வளி நோய், நாட்பட்ட சுரம், நீர்வேட்கை ஆகியவைகள் வலுக்கும்.

தண்டா மரைக்குளத்திற் றங்கு புனலதனால்
உண்டாகும் வாதபித்த முண்மையே—பண்டான
வெக்கைநோய் மாறுது வீறுந் தவனமுமாம்
மைக்கருங்கண் மாதே ! வழுத்து. (அ.கு.)

வ-கு. பூ இரசத்தை, செரியாகக் கழிச்சல், நல் நோய் முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம். தமரகத்தை வன்மைப்படுத்தும்.

இதன் குடிநீரை, தீக்குற்றத்தால் பிறந்த சுரத்துக்குக் கொடுக்கலாம்.

தாமரைப்பூவின் தேன், கண் நோய்களை நீக்கும்.

பூவை மணப்பாகு செய்து, இருமல், குருதிப்போக்கு, குருதிமூலம் தக்கழிச்சல் இவைகட்குக் கொடுக்கலாம். அளவு 17 முதல் 35 கிராம் எடை. கிழங்கும் வளையமும் தையலங்களில் சேருகின்றன.

விரையைப் பொடித்து 1—2 கிராம் எடை உள்ளுக்குக் கொடுத்து வர, உடற்கு வன்மையைத் தரும்.

விரையைத் தேன்விட்டரைத்து நாக்கில் தடவி வர, வாந்தி, விக்கல் நிற்கும். இதன் இலையால் சங்கு பற்பமாகும்.

---

## 322. தாழை—Thazhai

வே-பெ : கண்டல், கேதகை, கைதை, பட்டிகை, பறிவை, மடி, முசலி, முடங்கல், முண்டகம், முடக்கன்.

Pandanus adoratissimus.

Eng : Fragrant Screw-pine.

| | |
|---|---|
| Tel. Mogali | Ketuka |
| Mal. Kaitha | Sans. Ketaki |
| Kan. Kedage | Hind. Ketgi. |

இது குத்துச் செடி வகுப்பைச் சேர்ந்தது.

இஃது இந்தியாவில் கடற்கரை யோரங்களிலும், நீர்ப்பாங்கான இடங்களிலும் செழித்து வளரும். இதில் செந்தாழை வெண்தாழை என இரு வகையுண்டு. செந்தாழை கிடைப்பதரிது.

ப-உ : இலை, பூ, சோறு, விழுது.

சுவை—துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை:
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerent.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-Antispasmodic.

குணம் : சோற்றினால் சூதகம் முறை தப்பாது உண்டாகும். பூ, பசித் தீயை உண்டாக்கும். விழுது, ஆண்மையையும், குருதிப் பெருக்கையும் உண்டாக்கும் ; வீக்க (சேர்கை) நோய்களைப் போக்கும்.

மடிச்சோற்றுன் மங்கையர்க்கு மாதாந்தப் பூப்பாம்
வெடிச்சபூநற் பசியை விளைக்குந்—தடித்தமுலை
சுக்கிலத்தை நெய்யைத் துலவிக்குஞ் சோபையெனும்
அக்குலத்தை நீக்கும் அறி. (அ.கு.)

பாய்.

தாழம்பாயில் படுப்பார்க்கு வாந்தி, தலைச்சுழற்றல், பாண்டுநோய், நீராமைக்கட்டி, சிறுநீர்ப்பெருக்கு, அழல்பெருக்கு, இவைகள் விலகும்.

தாழம்பாய் வாந்தி தலைச்சுழற்றல் பாண்டுபித்தம்
ஆழஞ்சேர் நீராமை யாம்பிணியும்—வீழுந்தண்
நீரிழிவும் போக்குமிக நேசித்த வர்க்குலகிற்
காரிழியுங் கூந்தமின்னே ! காண். (அ.கு.)

வகு : ஓலைகளினால் பாய் முடைந்து படுக்கைக்கு வழங்கலாம்.

தாழம் பூ.

பஞ்ச லவணங்கள் பந்திக்கத் தானமுதல்
எஞ்ச வுடனே யினையடக்கி—மிஞ்சுமணா
மாகலினு னஞ்சையுடை யாரையுமுள் ளாக்குந்தாழ
கேதகையின் பாக்கியத்தைக் கேள்.

(பொ-ள்) தாழம்பூ மணத்தால் நஞ்சையுடைய பாம்புகளைத் தம்முள்ளாக்குமேயாயினும், அஞ்சுப்புகளையும் கட்டுவிக்கும்.

பூவிலிருந்து எண்ணெய் எடுக்கலாம் ; இதைத் தலைவலி, உடல்வலி முதலியவைகளுக்கு மேலுக்குத் தடவலாம் ; இதைத் காதுவலிக்கும் இரண்டொரு துளி விடலாம்.

இதிலிருந்து திநீர், அத்தர், ஊறல்நீர் முதலியன செய்யலாம்.

ஊறல் நீரில் 2—4 கிராம் எடை உட்கொள்ள, மகிழ்ச்சியை உண்டாக்கும். உடல்வியர்க்கவும் இதை வழங்குவதுண்டு.

விழுதைப் பாலில் அரைத்துக் கொடுத்துவர மலடு நீங்கும்.

வேர்ச்சாறு 24 கிராம் சிறிது சருக்கரையும் கலந்து வெப்ப நோய்கட்கு கொடுக்கலாம்.

இதன் பூவை, பெண்கள் அழகும் மணமும் பெற, தலையில் வைப்பார்கள்.

பூவை மணப்பாகு செய்து குடிக்க, அஃது உடம்பிலுள்ள வெப்பத்தைத் தணிக்கும் ; அம்மை நோயை வரவொட்டாமற்றடுக்கும். இதன் செய்கை குங்குமப்பூவின் செய்கையை ஒத்தே இருக்கும்.

---

## 323. தாளிசபத்திரி—Thalisa-paththiri.

Eng: Flacourtia Calaphracta, Many spiked flacortia

| | |
|---|---|
| Tel. Talispatram. | Sans. Talisapathra. |
| Mal. Talisapatri. | Hind. Talispatri. |
| Kan. Talispatram. | |

இஃது ஒரு செடி வருக்கம்; இந்தியாவின் கடலோரங்களிலும் வங்காளம், நோபாளம், ஆஸ்ஸாம் முதலிய இடங்களிலும் வளருகின்றது.

ப-உ. : இலை.

சுவை— கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

இலை.

செய்கை :
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தினி—Stomachic.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹாரகாரி—Carminative.
- கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

பண்பு : இதை கழிச்சல், சுரம், நாட்பட்ட இருமல், இரைப்பு, வாந்தி, வாய்வு, அசீரணம், அத்திசுரம் இவைகளுக்கு வழங்கலாம். இதனால், சுகப்பிரசவ முண்டாகும்.

நாசி களப்பிணிகள் நாட்பட்ட—காசஞ்சு
வாசம் அருசி வமனங்கால்—வீசிவரு
மேகமந்தம் அத்திசுரம் விட்டேகுந் தாளிச்சத்தால்
ஆகுஞ் சுகப்பிரச வம். (அ.கு.)

அளவு : 2 கிராம் எடை.

வ-கு: இதைக் காடியிலரைத்துப் பூச, தலைவலி, கண்டமாலை இவை போம்.

இதைப் பொடித்துப் பல் தேய்க்க, பல்வலி நீங்கும்.

இலைத்தூளை ஆடாதொடை இலைச்சாற்றில் கலந்து சிறிது தேன், சேர்த்துச் சாப்பிட, இருமல் இரைப்பு நோய்கள் போம்.

தாளிசபத்திரி 8, மிளகு 4, சுக்கு 2, வால் மிளகு 1, சருக்கரை 15 பங்கு, இவைகளைச் சேர்த்துப் பொடித்து 3 கிராம் எடை வீதம் கொடுக்க, பசியின்மை முதலிய வயிற்று நோய்கள் விலகும்.

இலைச்சாறு 5 முதல் 10 துளி வரை நீரிலோ அல்லது முலைப்பாலிலோ கலந்து கொடுத்து வர, சுரந் தணியும். இதையே குழந்தைகளுக்கு, பல் முளைக்கிறதனாலுண்டாகும் இருமல், பேதி, சீதபேதி, சுரம் முதலியவை களுக்கும் வழங்கலாம்.

தாளிசம் 8, திரிகடுகு, திரிசுகந்தம், திரிபலை, திரிநிம்பம், சாதுர்ச சாதம் வகைக்கு 1, வெல்லம் 7 பங்கு இவற்றை ஒன்றாய்ச் சேர்த்துக் கழற்சியளவு வடகம் பிடித்து அக்கினி மந்தம், பழஞ்சுரங்கள், துர்ப் பலம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

பட்டையைக் குடிநீரிட்டு வாய்க் கொப்புளித்து வர, தொண்டைக் கம்மல் நீங்கி, வாய்ப்புண் மாறும்.

---

## 324. தாளிப்பனை—Thalip-panai.

| | |
|---|---|
| Tel. Shree-talamu | Sans. Alpayushi |
| Mal. Kudapana | Hind. Bhajarbettu |
| Kan. Shreetali | |

இது பனை வருக்கம். தென்னிந்தியாவில் வளருகின்றது.

ப - உ : ஓலை, காய்.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

செய்கை :
- உடலுரமாக்கி -போஷணகாரி - **Nutrient.**
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி - **Astringent.**

குணம் : ஓலை எழுதுவதற்குதவும். காய் உடற்கு ஊட்டத்தைத் தரும். சோறு வயிற்றைக் கட்டும்.

வ - கு: ஓலையை முடைந்து குடையாய்ச் செய்வதுண்டு. இஃது எழுதுவதற்கும் உதவும்.

இதன் காயை உலர்த்தி இடித்து, கஞ்சி காய்ச்சி ஏழை மக்கள் அருந்துவார்கள். இதனால் உடல் பெருகும்.

இம்மரத்தின் குருத்தடியிலிருக்கும் சோற்றைத் தின்றால் வயிறு கட்டும்.

---

## 325. தான்றி—Thantri.

வே- பெ : அக்ஷம் , அக்கந்தம், அக்காத்தான், அமுதம், அம்பலத்தி, ஆராமம், எரிகட்பலம், கந்தகட்பலம், கந்துகன், கலித்துருமம், களந்தூன்றி, சதகம், தாபமாரி. வாந்தியம், வித்தியம், விபீதகம், திறிலிங்கம், பூதவாசகம், தானிக்காய், தாணிக்காய்.

**Terminalia belerica.**

**Eng : Beleric Myrobalans.**

| | |
|---|---|
| **Tel. Thandra-kaya** | **Sans. Vebeethaki** |
| **Mal. Tanni-kai** | **Hind. Bhairah** |
| **Kan. Tanri-kayi** | |

இது மர வகுப்பைச் சேர்ந்தது.

இந்தியாவில் காடுகளிலும், மலை அடிகளிலும் உயர்ந்து வளரும். இதன் காய்க்குத் தான்றிக்காய் என்பது பெயர்.

ப - உ : இலை, பழம், விதை.

சுவை—துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - **Astringent.**
- கோழையகற்றி -கபஹரகாரி - **Expectorant.**
- மலமிளக்கி - லகுவ்ரேசநி - **Laxative.**
- உரமாக்கி - பலகாரி - **Tonic.**

குணம் : இதனால், சிலந்திநஞ்சு, ஆண்குறிப்புண், வெள்ளை, குருதியழல்நோய், வளி தீ குற்றங்களால் வரும் நோய்கள் போம். மேலும் இது, உடற்கு அழகையும் ஒளியையும் கொடுத்து முக்குற்றங்களையும் தன்னிலைப் படுத்தும்.

சிலந்திவிடம் காமியப்புண் சீழான மேகம்
கலந்துவரும் வாதபித்தங் காலோ—டலர்ந்துடலில்
ஊன்றிக்காய் வெப்ப முதிர பித் துங்கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால்.

ஆணிப்பொன் மேனிக் கழகும் ஒளியுமிகும்
கோணிக்கொள் வாதபித்தக்கொள்கைபோம்—தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகமறும் கூரு அனற்றணியும்
கண்டவர்க்கு வாதம் போம் காண்.

வ-கு : தான்றிக்காயைச் சுட்டு மேல்தோலைப் பொடித்து, அவ்வெடை சருக்கரை சேர்த்து, தினம் இரு வேளை 4 கிராம் எடை வெண்ணீரில் கொடுக்க, பல் வலி தீரும்.

தான்றிப் பொடியைத் தேனில் கலந்து கொடுக்க, அம்மை நோய் நீங்கும்.

அரைப்பலம் தான்றிக்காய்த் தோலை 170 மி. லி. நீரில் சேர்த்து மூன்றில் ஒரு பங்காகக் காய்ச்சி, தேன் 28 கிராம் சேர்த்துக் கொடுக்க இரைப்புத் தணியும்.

தான்றிக்காய்ப் பொடியுடன் அவ்வளவு வெள்ளைச் சருக்கரை கூட்டித் தேன் விட்டுப் பிசைந்து 4 கிராம் எடை வீதம் சாப்பிட்டுவர கண்ணுக்கு ஒளி உண்டாகும்.

இதன் தளிரை இடித்துச் சாறு பிழிந்து, துல்லியதான மெல்லிய சீலையை அதில் நனைத்து, நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு முப்பிணி நோயிலுண்டாகும். தொண்டைக்கட்டு, கோழைக்கட்டல், மேல் மூச்சு வாங்கல் முதலியவற்றிற்கு, 2 அங்குல சதுரமுள்ள மேற்படி சீலையை 15 மி. லி. அல்லது 30 மி.லி. நீரில் கசக்கிப்பிழிந்த சாற்றைப் புகட்ட நன்மையும் தரும்.

புண்பட்ட இடங்களில் இதன் பருப்பை உரைத்துப்பூச, புண்ணாறும்.

தான்றிப்பொடி, ப்ாறையுப்பு, திப்பிலிப்பொடி ஓரெடை கூட்டி மோர் விட்டு அரைத்துக்கொடுக்க, தொண்டைக் கம்மல் நீங்கும்.

தான்றிக்காயை நெய் விட்டு வறுத்து, கோதுமை மாவைப்பிசைந்து மூடி வெதுப்பி, வாயிலடக்கி வைக்க, தொண்டைப்புண், இருமல், கோழை, இவை விலகும்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் ஓர் அளவாகச்சேர்த்துக் குடி நீரிட்டுப் புண்களைக் கழுவி வரப் புண்கள் ஆறும்.

## 326. திப்பிலி—Thippili

வே- பெ : ஆர்கதி. உஸ்சரம், உலவைநாசி, காமன், குடாரி, கோலகம், கோலி, கோழையறுக்கி, சரம், சாடி, துளவி, மாகதி, கனை, சௌண்டி, தண்டுலி, கணம், கலினி, பாணம், பிப்பிலி, வைதேகி, அம்பு, ஆதி மருந்து.

Piper longum.

Eng : Long pepper.

| | |
|---|---|
| Tel. Pippilu | Sans Pippali. |
| Mal. Thippili | Duk. Pipliyan. |
| Kan. Hippili | Pers. Daraife-fil. |

இஃது கொடி வகை. இதனைத் தென்னிந்தியாவிலும், வங்காளத்தின் கீழ்ப் பாகங்களிலும் இதன் பழத்திற்காகப் பயிரிடுகிறார்கள். இதற்கு மிளகைப் பார்க்கிலும் காரம் மிக அதிகம். இதில் இரு வகை உண்டு. ஒன்று அரிசித் திப்பிலி, மற்றொன்று யானைத் திப்பிலி.

ப. உ. : காய், அரிசி.

பச்சை.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

சுவை.—உலர்ந்தது தன்மை—வெப்பம்—பிரிவு—இனிப்பு.

செய்கை வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant

அகட்டுவாயுவகற்றி—உதரவாதஹ்ரகாரி—Carminative

பச்சைத் திப்பிலி.

குணம் : இஃது ஐயத்தை உண்டாக்கும் ; அழலைப் போக்கும்.

உலர்ந்த திப்பிலி.

இதனால் இருமல், குன்மம், இரைப்பு, ஐயப்பிணி, ஈளை, பாண்டு, மயக்கம், சுவையின்மை, பொருமல், தலைவலி, மூர்ச்சை, நீரேற்றம், ஈரல்கட்டி, கழிச்சல், பெருவயிறு, முப்பிணி, குளிர் சுரம், மேகக் கட்டி, தொண்டைநோய், மூக்கு - காது - கண்நோய்கள், புழுநோய்கள், கண் இடுக்கு ஆகியவை நீங்கும். நீற்றவிந்து இறுகும்.

கட்டளைக்கலிப்பா.

இருமல் குன்மம் இரைப்பு கயப்பிணி
ஈளை பாண்டு சந்யாசம் அரோசகம்
பொருமல் ஊதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
பூரிக் குஞ்சல தோடம் பீலிகமும்
வரும லப்பெருக் கோடு மகோதரம்
வாதம் ஆதிமுத் தோடஞ் சுரங்குளிர்
பெருமா லைப்புரி மேகப் பிடகமும்
பேருந் திப்பிலிப் பேரங்குரைக்கவே.

வெண்பா.

ஆசனநோய் தொண்டைநோய் ஆவரண பித்தமுதல்
நாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்—வீசிடுவி
யங்கலாஞ்ச னஞ்சிதையும் அம்பாய் அழிவிந்தும்
பொங்கலாஞ்ச நங்கையர்கோட்போல். (தே.கு.)

திப்பிலி.

கட்டி யெதிர்நின்று கடுநோயெல் லாம்பணியும்
திட்டி வினையகலும் தேகமெத்த—புட்டியாம்
மாமனுக்கு மாமனென மற்றவர்க்கு மற்றவனாம்
காமனெனுந் திப்பிலிக்கும் கை.
(தேரன் வெண்பா.)

கடுமையான ஐயப்பிணிகளை அகற்றி, உடற்கு வன்மையை அளித்திடும்.

ஈளை யிரும லிரைப்புப் பசப்பிணிகள்
மாள வொழியாமல் வாட்டுமே—யாளுமுறை
பாங்கா யறிந்துசெய்வீர் பண்டிதத்தைப் பண்டிதரே
வேங்கைவாய்ப் பான்கணை மெய்.

(தேரன் வெண்பா.)

ஈளை, இருமல், இரைப்பு, உப்பிசம் முதலிய பிணிகளைப் போக்கத்தக்கவாறு திப்பிலியை ஆளவேண்டியதாம்.

வ -கு: திப்பிலி 70 கிராம், கையாந்தகரையிலை ஒரு பலம் இவ்விரண்டையும் 350 மி. லி. நீர் சேர்த்து நீரைச் சுண்டக் காய்ச்சியபின், நிற்கும் திப்பிலியையும் தழையையும் இளவறுப்பாய் வறுத்துப் பொடித்த எடைக்குச்சமமாகப் பொரிப்பொடி சேர்த்து, அவ்வெடை சர்க்கரை கூட்டி மூவிரல் அளவு காலை, மாலை சாப்பிட இருமல் தீரும்.

திப்பிலி 5-பங்கு, தேற்றான் விதை 3 பங்கு இவை இரண்டையும் நன்றாயரைத்துப் பொடித்து, கழுநீரில் 4 கிராம் எடை அளவு 3-நாள் காலைதோறும் கொடுத்துவர, வெள்ளை, பெரும்பாடு தீரும்.

திப்பிலிப்பொடி கடுக்காய்ப்பொடி ஓரெடை கூட்டி, தேன் விட்டுப் பிசைந்து, காலை மாலை இலந்தைக்காய் அளவு, மூன்று திங்கள் கொள்ள இளைப்பு நோய் தீரும் அல்லது திப்பிலிப்பொடி 45 கிராம் எடை, கடுக்காய்ப் பொடி 32 கிராம் இவ்விரண்டையும் கலந்து, தினம் மூன்று கழஞ்சு வீதம் தேனிற் கொடுக்கலாம்.

திப்பிலிப்பொடி மூவிரல் அளவை, கம்மாறு வெற்றிலைச்சாறும், தேனும் ஓரளவு கலந்ததில் உட்கொள்ள, கோழை. இருமல், சுரம் தீரும்.

திப்பிலிச் சூரணம் கால் பலத்தை 350 மி. லி. பசுவின் பாலில் விட்டுக் காய்ச்சிச் சாப்பிட்டுவர, இருமல், வாய்வு, மூர்ச்சை, மூப்பிணி இவைபோம்.

திப்பிலி 350 கிராம் எடை, மிளகு: சுக்கு வகைக்கு 175 கிராம், இருசீரகம் வகைக்கு 70 கிராம், அரத்தை 70 கிராம், இலவங்கப்பட்டை 35 கிராம், ஓமம் 70 கிராம், தாளீசம், இலவங்கப்பத்திரி, திரிபலை, இலவங்கம், ஏலம், சித்திரமூலம் இவை வகைக்கு 35 கிராம், இவற்றை இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து அவ்வளவு சருக்கரை கலந்து தேன்விட்டுப் பிசைந்து ஒரு சிட்டிகை அளவு 40 நாள் சாப்பிட்டுவர், இளைப்பு, ஈளை, இருமல், வாய்வு முதலியன தீரும்.

திப்பிலி 70 கிராம், மரகம், சுக்கு, ஏலம், திப்பிலிவேர், வாய்விடங்கம், கடுக்காய், மிளகு வகைக்கு 8½ கிராம், இவைகளை இளவறுப்பாய் வறுத்து, தேன், சருக்கரை அல்லது பனைவெல்லம், அவ்வளவு சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திலிறக்கிப் பிசைந்து, ஒரு பாக்களவு, தினம் இருவேளை, 40 நாள் சாப்பிட்டுவர, இரைப்பு, இருமல், தலை கிறுகிறுப்பு, ஈளை, நெட்டிருமல், இளைப்பு, நாவறட்சி இவை தீரும்.

## திப்பிலி கற்பம்.

.... .... மேற்கணை தனைக்கிளர் பொடியாக்கியே தேனிற்
குழைத்துணத் தேமல்போ மதியினில்.

(தே—கா.)

(பொ—ள்) திப்பிலியைத் தூள் செய்து ஒரு மாதம் வரைக்கும் தேனில் குழைத்துச் சாப்பிடத் தேமல் நீங்கும்.

திப்பிலி அரிசி.

இஃது, ஐயம், வயிற்றுப்புசம், மேகம், சுரம், இளைப்புநோய், இவைகளைப் போக்கும் ; விந்துவைப் பெருக்கும்.

திப்பலியின் றண்டுலஞ் சிலேத்மத்தைப் போக்கிவிடும்
உப்புசத்தை மேகத்தை ஒட்டுங்காண்—தப்பாமல்
வாத சுரந்தணிக்கும் மாகபரோ கந்தொலைக்கும்
தாதுவை வளர்ப்பிக்குஞ் சாற்று. (அ.கு.)

வ–கு : இதை, பொடித்துச் சர்க்கரையுடன் கலந்து வேளைக்கு 8—16 குன்றியளவு உட்கொள்ள, மேற்கண்ட பிணிகள் பேரம். நெய்யுடன் கூட்டி உண்ண, ஆண்மை பெருகும்.

---

## 327. திப்பிலிவேர்—Thippili—Ver.

வே. பெ : அம்பினடி கிரந்திவேர் கிரந்திகம், இந்திகம், தன்மன் தன்மூலம், திப்பிலிக்கட்டை, ரதிந்திகம்' தேசாவரம், நதிகாந்தை, நறுக்குவேறு, நறுக்குத்திப்பிலி, கண்டத்திப்பிலி, மோடி வேர்.

Eng : Long - pepper - Root.

Chavica Roxburgii.

| | |
|---|---|
| Tel. Pippili-mulam | Sans. Pippalee-moola. |
| Mal. Kattu-thippili. | |
| Kan. Hippili-beru | Hind. Felfelai-moya. |

இது, திப்பிலிக்கொடியின் வேர் ; சிறுமுடிச்சிகளுடன் நீண்டு மெல்லியதாயும் வெளுத்த மஞ்சள் நிறமாயுமிருக்கும்.

ப-உ : வேர்.

சுவை—பச்சையில்—இனிப்பு. தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு.

சுவை—உலர்ந்தபின்—கார்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

குறிப்பு : இதன் தன்மை திப்பிலியைவிடக் குறைந்தது.

செய்கை : பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்திநி—Stomachic.

குணம் : இதனால், நீர் வேட்கை, தீக்குற்றம், சோகம், நஞ்சச்சுரம், இருமல், மேகம், குரற்கம்மல், உடல் கடுப்பு இவை திரும். மேலும் மூர்ச்சை, நீங்கச் சுரம், இருமல், கழிச்சல், நோய்கள், பசித்தீக்கேடு, உடல்வலி, இவைபோம், நீரை வறட்டும். அழல் (பித்த) நோய்கட்கு ஆகா.

தாகபித்தஞ் சோகந் தணியாச் சுரமிருமல்
மேகங் குரற்கம்மல் மெய்க்கடுப்பும்—ஏகுந்தாண்
திப்பிலிமூ லங்கண்டத் திப்பிலிய தாம்நறுக்குத்
திப்பிலியென் றேயொருக்காற் செப்பு. (அ.கு.)

வ-கு : திப்பிலி வேரைப் பால் விட்டரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க குறுக்குவலி, நாவறட்சி, வளிநோய் தீரும்.

இதைப் பொடித்து மூக்கில் ஊத, மாரடைப்பு, மூர்ச்சை, மயக்கம் நீங்கும். இது கோழையை அறுக்கும் ; வாயுவைக் கண்டிக்கும்.

## 328. யானைத்திப்பலி—Anaittippili.

வே- பெ : அத்தித்திப்பலி ஆனைத்திப்பலி கரித்திப்பலி அலகம் கரிக்கனை களிரினம்பு கஜக்கணை மதகரிக்கணை

Scindapsus Officinalis

| | | | |
|---|---|---|---|
| Tel. | Enuga-pippallu, Gaja-pippallu. | Sans. | Gaja-pipali. |
| Mal. | Ana-thippili | Hind. | Gan-pipli. Bari-pipli. |
| Kan. | Dodda-hippalli | | |

இது திப்பிலியைப் போலவே கொடி வகையைச் சேர்ந்தது.

சுவை—கார்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- பசித்தீத்தூண்டி—ஜடாரக்னிவர்த்திநி—Stomachic
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelminintic.
- வியர்வைபெருக்கி—ஸ்வேதகாரி—Sudorific—(Diaphoretic)

குணம் : இதனால், வளி, ஐயநோய்கள், கரப்பான், குரற்கம்மல் மூக்கு நீர்ப்பாய்ச்சல் (நீர்ப்பீநசம்), சுவாசம் (இரைப்பு) நீங்கும். பசி உண்டாகும்.

வாதமறுந் தீபனமா மாருக் கபங்கரப்பான்
ஓதுகுரற் கம்மலியை யோடுங்காண்—பூதலத்திற்
சோனையைநேர் நாசினீர் தோலாச்சு வாசமும்போம்
யானையினற்றி திப்பலிய தால்.

(அ.கு.)

வ-கு : இதைப் பொடித்துச் சலித்து, தேனிற் குழைத்துச் சாப்பிட ஈளை, இருமல், இரைப்பு, குரற்கம்மல், ஐய நோய்கள் போம் வயிற்றுப் பொருமலும், செரியாக் கழிச்சலும் நீங்கும். மேற்கண்ட நோய்கள் தீர இதைத் தேனில் ஊறவைத்தும் வழங்கலாம்.

அளவு: ½ கிராம் முதல் 1 கிராம் எடை.

## 329. திராட்சி—Thrakshi.

வெ-பெ : அராவாரம், கொடிமுந்திரி, கொடிமுந்திரிகை, முந்திரிகை, திராகைஷ, மதுரசம், கோத்திரிகை, திராக்கம், பலோத்தமை

Vitis vinifera.

Eng : Grapes.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Draksha | Sans. | Draksha |
| Mal. | Draksha | Hindi. | Munakha. |
| Kan. | Draksha | Dak. | Munakha. |

இது ஒரு வகைக் கொடி.

குளிர்ச்சி பொருந்திய நாடுகளிலும் குளிர்ச்சியுள்ள மலைகளிலும் மிகுதியாகவும், செழிப்பாகவும் பயிராகும்.

இதனுள் கொட்டையுள்ளது ஒரு வகையும், கொட்டை இல்லாதது ஒரு வகையுமாம். கொட்டையுள்ளதைக் கொட்டைத் திராட்சி என வழங்குவர். இது நிறத்தைக் கொண்டு இருவகையாகப் பச்சைத் திராட்சி கருப்புத் திராட்சி எனப் பெயர்பெறும். பழத்துக்குள் இரசமும் சதையும் நிறைந்து, தோல்மிக மெல்லியதாகவிருப்பதால், பழம் மிகப் பளப்பளப்பாக இருக்கும். ஒவ்வொரு பழத்திலும் சிறிய விதைகள் உண்டு. பழக்குலைகள் கொத்துக் கொத்தாக, அடிகனத்தும், நுனி சிறுத்தும் மிக அழகாகவும் தொங்கும். பழங்களில் சில புளிப்பும், சில இனிப்புமுள்ளவை.

ப-உ : இலை, பழம்.

சுவை—இனிப்பு. தன்மை—தட்பம். பிரிவு—இனிப்பு.

பழம்.

செய்கை :

மலமிளக்கி-மலகாரி-Laxative.
குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.
சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
உடலுரமாக்கி-போஷணகாரி-Nutritive.

இலை காய்.

துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

வற்றல்.

உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
கழிச்சலுண்டாக்கி-மலமிளக்கி-Laxative.

குணம் : இஃது, எருவை இளக்கி வெளிப்படுத்தும்; குருதியைப் பெருக்கும்; வயிற்றுநோய் குருதிப்போக்கு முதலியவைகளை நிறுத்தும்; தமரகத்தை வன்மைப்படுத்திக் குளிரப்பண்ணும்.

பழவற்றல் மலத்தை இளக்கும், கோழையை அகற்றும்.

வற்றுப் பழத்தைத் பிழிந்து இரசத்தை ஒரு தேக்கரண்டி வீதம் காலை மாலை இருவேளையும் குழந்தைகளுக்கு கொடுத்துவர பல் முளைக்கும் போது உண்டாகும் கழிச்சலை நீக்கும்.

மேலும், இதை சுரம், இருமல், காமாலை, இளைப்புநோய் முதலியவைகளுக்கு வழங்கலாம். இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, நீர்வேட்கை வறட்டிருமல் தீரும். வெப்பமும் தணியும்.

குறிப்பு : திராட்சை இரசம் புளித்து நுரைக்கும் போது அடியில் தங்கி நிற்கும் உப்புக்குத் திராட்சை உப்பு என்பது பெயர். இது மிகவும் புளிப்பானது. இதனை கிரேப் சுகர் (grape sugar) அல்லது டார்டாரிக் ஆசிட் (Tartaric acid) எனக் கூறுவர். இது கழிச்சலையுண்டாக்கும்.

---

## 330. திரிபலை—Thiripalai.

வே-பெ : திரிபலம் முப்பிலை

| | |
|---|---|
| Tel. Thripalam | Kan. Thriphala |
| Mal. Muppala | Sans. Thriphala |
| Thrupala | Pers. Ithripal * |

கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய் ஆகிய இம்மூன்று, சரக்குகளில் கூட்டுறவே திரிபலையாம்.

சுவை—துவர்ப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசகாரி—Astringent.

குணம் : இம்மூன்றும், கூடியபின் இவற்றால் விலகும் நோய்களாவன:

ஊழ்வாய்ப்புண் இரைப்புப்பிசம் குன்மம், தோலைப்பற்றிய நோய்கள் குத்திருமல், பாண்டு, மூக்கிலுண்டாம் நோய்கள், வெள்ளை, புண், வெண்புள்ளி, வளிமூர்ச்சை, ஈரல் நோய்கள் நஞ்சு ஆகியவையாம்.

வித்திரதி நாசிநோய் வெண்குட்டம் ஆசனப்புண்
குத்திருமல் பாண்டுகுட்டம் குன்மமிரைப்—பெற்றுமத
மூர்ச்சைபிலீ கம்பிரமி மோடுருபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன். (தே.கு.)

அன்றியும், சீழ், ஊனீர் முதலியன கசிதல், பெருவயிறு, குருதியழல் ஆகியனவும் நீங்குமென்பர்.

வ-கு : இதைக்கொண்டு குடிநீர், இலேகியம், பொடி, எண்ணெய் முதலியவைகள் செய்து மேற்கூறிய நோய்களுக்கு வழங்கலாம்.

---

## 331. தில்லை—Thillai.

**வே-பெ : தில்வம்**

**Execaria agallocha.**

**Eng : Tigre's milk tree.**

| | |
|---|---|
| Tel. Tillamanu | Sans. Ugaru |
| Mal. Kametti | |
| Kan. Haru | Hind. Gangiva |

இஃது இந்தியக் காடுகளில் வளருகின்ற மரம். இம்மரத்திற்குப் பாலுண்டு. இப்பால் வெண்மை; இஃது உடலிற்படின் தடிப்பை உண்டாக்கும்.

ப-உ : பால், விதை.

சுவை—கைப்பு, கரகரப்பு. தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : { புண் உண்டாக்கி—Vesicant
நீர்மலம்போக்கி—விரேசநி—Purgative }

**வித்து.**

குணம் : விதையினால் எல்லா நஞ்சுகளும், திமிர்வாயும், ஐய நோய்களும், பெருநோய்களும் போம்.

தில்லம் விதைக்குச் சிறுவிடம் மகாவிடமுஞ்
செல்வஞ் செருக்குந் திமிர்வாய்வும்—வெல்லங்கொள்
வாரை வருத்துகின்ற வன்கபமுன் குட்டமுமிவ்
வூரைவிடுத் தேகும் உரை.

பால்

பாலினால், பக்கவாயு, முப்பிணி, சூலை, பெருநோய், மூடவாயு ஐவகை வலி, எண்பது வகை வளிநோய்கள் ஆகியவை போம்.

பாரிசவா தஞ்சந்நி பாதஞ்சூ லங்குட்டஞ்
சேருமுட வாதவலி சில்விடம்போம்—பேருரைக்க
இல்லையில்லை யென்றோடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி.

வ - கு : இஃது வழக்கில் காணப்படுவதில்லை. இதனைக் கொடிநஞ்சு என்று கூறுவாருமுளர்.

---

## 332. தினை—Tinai

**வே: பெ: இறடி, ஏனல், கங்கு**

**Panicum, Italifcum.**

**Eng : Italian millet.**

| | |
|---|---|
| Tel. Korralu | Sans. Kanku |
| Mal. Thina | |
| Kan. Navane-akke | Hindi : Samak Dana. |

இஃது இந்தியாவில் பயிராகும் ஒருவகை உணவுப் பொருள்.

ப - உ : விதை.

சுவை - இனிப்பு, தன்மை - வெப்பம், பிரிரு -கார்ப்பு.

செய்கை { உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
சிறுநீர்ப் பெருக்கி—மூத்ரவர்த்திநி—Diuretic.
துவர்ப்பி—ஸங்கோணகாரி—Astringent. }

அரிசி

குணம் : இது மிகச் சூடு உள்ளது. ஐயத்தையும், வளிநோயையும் போக்கும் ; ஆயினும் தீக்குற்றத்தைப் பெருக்கும் ; பசியை யுண்டாக்கும்.

சந்நிசுரம் ஐயந் தனிவாத மும்போகுந்
துன்னுபித் தத்தைமிகத் தூண்டிவிடுந்—தின்னப்
பினையும் பசியாம் பெருவீக்கம் நீக்குந்
தினையரிசி யின்குணத்தைத் தேர். (அ.கு.)

தினைமா. கஞ்சி, சாதம்

" மாத்தினை யைக்கொள் மைந்துறு மாக்கையே"
(தே. க)

(பொ - ள்.) தினையரிசி உடலுக்கு வன்மையைக் கொடுக்கும்.

மா, ஐயத்தை நீக்கும்.

சாதம், வன்மையைப் பெருக்கும் ; வாயுவைப் போக்கும்.

கஞ்சி, வீக்கங்களை ஒழிக்தம்.

திளைமா கபவாதந் தீர்க்குமதன் சாதம்
புளைபித்த மாயினுநற் போகந்—தனைக்கொடுத்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபை தோடமிதன்
பேதமெலாம் போக்குமெனப் பேசு. (அ.கு.)

வ-கு: இதன் அரிசியைச் சிலர், சமைத்து உணவாக அருந்துவர். இது வெப்பத்தை உண்டுபண்ணு மெனினும், உடலைக் காக்கும் தன்மை யுடையது.

இதன் கூழைப் பிள்ளை பெற்றவளுக்குக் கொடுக்கும் வழக்கம் இந் நாட்டில் உண்டு.

## 633 துத்தி—Thuththi

**வே-பெ: கக்கடி இக்கசி**

**Abutilon indicum,**

**Fam: The country mallow.**

| | |
|---|---|
| **Tel.** Tuttura benda | Sans. **Kanka—tika.** |
| **Mal. Thuththi** | |
| **Kan.** Navane-akke | Hind. Kanghi |

இஃது இந்தியாவின் உஷ்ணப் பிரதேசங்களில் பயிராகும செடி, இதில் அநேக சாதிகள் உண்டு.

| | |
|---|---|
| எலிச்செவித்துத்தி .. | Evolvus emarginatus |
| ஐயிதழ்த்துத்தி .. | A plant. |
| ஒட்டுத்துத்தி .. | Urena sinuata. |
| கண்டுதுத்தி .. | Sida acuminata |
| காட்டுத்துத்தி .. | Sida hirta. |
| கொடித்துத்தி .. | Sida montana. |
| சிறுதுத்தி or செந்துத்தி .. | Hibiscus obtusifolia. |
| நாமத்துத்தி .. | Sida cristata. |
| நிலத்துத்தி or வயற்றுத்தி | Sida cordifolia. |
| பண்யாரதத்துத்தி .. | A plant. |
| பெருந்துத்தி .. | Sida asiatica. |
| பொட்டகத்துத்தி or இரட்டகத் துத்தி. | Hibiscus abelmoschus. |

**ப-உ**: இலை, பூ, வேர், பட்டை.

**சுவை** - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

**செய்கை**
- உள்ளழலாற்றி அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- மலமிளக்கி—லகவ்ரேசநி—Laxative.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- **தாதுவெப்பகற்றி—சமனாரி—Sedative.**

## இலை

குணம் : இது மூலம், கட்டி, புண், முளைகள் புழுப்பட்டபுண் இவைகளைப் போக்கும்.

மூலநோய் கட்டி முளைபுழுப்புண் ணும்போகுஞ்
சாலவதக் கிக்கட்டத் தையலே !—மேலுமதை
எப்படி யேனும் புசிக்க எப்பிணியும் சாந்தமுறும்
இப்படியிற் றுத்தி யிலையை. (அ.கு.)

## பூ

இது, குருதி வாந்தி, இருமல் இவைகளைப் போக்கும். இதனால் ஆண்மை பெருகும். குளிர்ச்சி உண்டாகும்.

துத்தி மலரைதிதந் துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகும் மெய்குளிருஞ்—சத்தியமே
வாயால் விழுமிரத்தம் மாறும் இருமலரும்
தேயா மதிமுகத்தாய்! செப்பு.

## வித்து

இதனால், கரும்புள்ளி, பெருநோய், உட்சூடும் நீகும்,

கையிற்கா லிற்படர்ந்த கார்மேகம் போயொழியும்
மெய யிலுறுங் குட்டம்போம் வெப்பகலுந்—துய்யதிரை
யத்தினை யொத்தவிழி யாரணங்கே நாடடிலுள்ள
துத்தி விதையைச் சுவை.

வ-கு இலையை ஆமணக்கு நெய் விட்டு வதக்கி, ஒற்றிடம் கொடுத்துக் கட்ட மூலம், மூலத்தில் உண்டாகும் கட்டிகள், புண்கள் நீங் ம.

இலையைக் கொதிக்கிற தண்ணீரில் போட்டு வேகவைத்து, அந்நீரில் துணியைத் தோய்த்துப் பிழிந்து ஒற்றிடங்கொடுக்க வலிகள் தீரும்.

இலை அல்லது வேரின் குடிநீரால் வாய் கொப்புளிக்க பல் ஈறுகளிலுண்டாகும் நோய்கள் தீரும்.

இலையை எந்த வகையில் உண்டாலும், வெப்பத்தினால் உண்டாகும் எல்லா நோய்களும் நீங்கும்.

இலையின் சாறு 24 கிராமம் நெய் 12 கிராம் சேர்த்துக்கொடுக்க, அழற்சியால் உண்டாகும் கழிச்சல் போம்.

துத்தி இலையைக் குடிநீரிட்டு, பாலும் சர்க்கரையும் சேர்த்து உட்கொண்டால், கழிச்சலை உண்டாக்கி, கீழ்வாய்க்கடுப்பு, சூடு முதலியவைகளைத் தணிக்கும்.

இத்துடன் பருப்பு சேர்த்துச் சமையல் செய்து சாப்பிடுவது வீட்டு வழக்கம். மூலவாயுவுக்கு நன்மை தரும்.

இதன் இரசத்துடன் பச்சரிசிமாக கூட்டிக் களி கிண்டி, கட்டிகளுக்கு வைத்துக்கட்ட அவை பழுத்து உடையும்.

இதன் பூவை உலர்த்திப் பொடித்து, பாலும் கற்கண்டும் சேர்த்துச் சாப்பிட்டுவர, குருதிவாந்தி, அழல் நீங்கும். தேகக் குளிர்ச்சி உண்டாகும். ஆண்மை பெருகும்.

விதையை பொடித்துச் சருக்கரையுடன் கலந்து, மூவிரல் அளவு காலை மாலை உண்டுவர, கரும்புள்ளி, உட்சூடு பெருநோய் நீங்கும்.

விதையைக் குடிநீர் செய்து, மூலம், வெள்ளை, தந்தி வெள்ளை இவை ச்ட்கு வழங்கலாம்.

விதையைக் கரிநெருப்பில் போட்டு, அதனின்றும் எழும்பும் புகையை வயிற்றில் சிறு புழுக்களுள்ள குழந்தைகளின் கீழ்வாயில்படும்படி செய்ய புழுக்கள் வெளிப்படும்.

வேர் 35 கிராம், திராட்சைப்பழம் 17 கிராம், நீர் 700 மி.லி. சேர்த்துக் காய்ச்சி 170 மி.லி. ஆகச் சுண்டவைத்து வடிகட்டிக்கொண்டு, காலை, மாலை இருவேளையும் உட்கொண்டுவர, கேமச்சூடு, நீர்ச்சுருக்கு, தாகம் முதலியன தீரும்.

இதன் வேரைக்கொண்டு பரலைக்கடைய பால் சருக்கரையைப் போலாகும்.

---

## 334 தும்பிலிக்காய்-Thumblik kay

வே-பெ—தும்பி—பனிச்சக்காய்

Diospyros—embryopteris

Eng: Indian persimon Wild mangosteen

| | |
|---|---|
| Tel. Tumiki chettu | Kan. Bandadamara |
| Mal. Panicheni maram | Sans. Tinduka |
| | Hind. Taindu |

இம்மரம் இந்தியா முழுவதும் வளரும்; வங்காள நாட்டில் ஏராளமாக உண்டு. காய் ஏறக்குறைய இலந்தைக் காயளவு இருக்கும்.

ப-உ: பட்டை, பழம், விரை.

சுவை—துவர்ப்பு, புளிப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை: துவர்ப்பி-ஸங்கோஸனகாரி—Astringent

குணம்: கழிச்சல். குருதிக்கழிச்சல், வாய்ப்புண் முதலியவைகளை நிறுத்தும்.

வ-கு. பட்டையைச் சிதைத்து ஒரு மணிநேரம் ஊறவைத்து எடுத்த நீரை, கால் முதல் அரை ஆழாக்கு வீதம் முறைச்சுரத்துக்கு கொடுக்க லாம்.

ரயை நசுக்கிப் பிழிந்த சாற்றை 17—35 கிராம் வீதம் கொடுத்துவர, செரியாக்கழிச்சல், சீதக் கழிச்சல், தீரும் பட்டையைச் சிதைத்து வீக்கம், கட்டி முதலியவைகளுக்குக் கட்டலாம்.

பழத்தைத் தின்னலாம். இதனால் குருதியைப்பற்றிய நோய்கள் போம்.

பழத்தை ஊறல் குடிநீரிட்டு அல்லது கொதிநீரில் ஊறப்போட்டுக் கொடுக்க, செரியாக் கழிச்சல், சீதக்கழிச்சல் போம்.

இதையே கொப்பளித்துவர, பல், ஈறு முதலியவைகளிலுள்ள புண்கள் ஆறும். மேலும் வெள்ளை முதலியவைகளுக்குப் பீச்சு செய்யத் தணியும்.

## 3 5. தும்பை- Thumbai

**Eng: Leucus**

Tel. Tummi
Mal. Thumba
Kan. Thumba

Sans. Dronapushpi
Hind. Guma madhupati

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகும் ஒருவகைச் செடி. இதில் சிறுதும்பை ஆனைத்தும்பை அல்லது பெருந்தும்பை என இருவகை உண்டு.

ப-உ: இலை பூ.

**சுவை—இனிப்பு, கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.**

**செய்கை:**
- மலகாரி-லகுவ்ரேசநி-Laxative.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.

### இலை.

**குணம்:** இதனல், முப்பிணி, ஐயம், வளி இவைகள் நீங்கும். தலைவலி, மூக்கால் உண்டாகும் நோய்கள், நீர்வேட்கை, இருமல், ஈளை முதலிய ஐயப்பிணிகள் யாவும் போம். இதைப் புளியிட்டு கடைந்து உணவோடருந்தில், வெள்ளை, கண் புகைதல், கை, கால்களின் அசதி, தாகம், சோம்பல் இவைகளும், இதன் இலைச் சாற்றால் பாம்பு முதலிய நஞ்சுகளும் போம்.

சீறுகின்ற பாம்போடு சில்விடங்கால் சென்னிவலி
ஏறுகபம் மாந்தம் இருக்குமோ —நாறுமலர்க்
கொம்பனைய மாதே குளிர்சீத சந்நிவிடுந்
தும்பையிலை யென்றுரைக்காற் சொல்.

தும்பையிலை யையுண்ணுஞ் சோற்றுக்கெ லாங்கறியாய்
அம்புவியோர் மிக்க அருந்துங்கால்—வெம்பிவரு
மேகமொடு கண்புகைச்சல் வீறுகை காலசதி
தாகமதி சோம்பலறுந் தான். (அ.கு.)

### தும்பை.

ஐம்முகன் வெற்றியி னடையிலக் கறியுண
நைமுகப் பிணிகளின் நலியெலா மகலுமே.
(தேரன்-வெண்பா)

(பொ-ள்.): நல்ல தும்பையிலையைப் பாகப்படி சமையல் செய்து உண்ணின், வருத்தத்தைச் செய்யும் ஐய நோய்கள் நீங்கும்.

மீளாக் கப பிணியை மேலிட்ட சன்னிகளைத்
தூளாக்கித் தூரத் துரத்தலாற் கேள்—நசியக்
கைமுறையா னீரைக் கழட்டலாற் காய்ந்திடலால்
ஐமுகனார் வெற்றிபித்த மாம். (தேரன்-வெண்பா).

இது, தீராத ஐயப் பிணியையும், மருத்துவர்கட்கும் அடங்கா முப்பிணி (சன்னி) களையும் துரத்தியடிக்கும். இதன் இலைச் சாற்றை மூக்கில் பிழியில் சளியைக் கரைத்து வெளிப்படுத்தும், உடற்கு ஊட்டந்தரும். ஆயினும், உடலிற்கு வெப்பத்தை உண்டாக்கும்.

**பூ.**

தும்பைப் பூவினால், நீர்வேட்கை, முப்பிணி சுரம், கண் நோய் நீங்கும.

தாகங் கடிதொழியுஞ் சந்நிபா தங்களறும்
ஆகந் தனில்விழிநோய் அண்டுமோ —மாகந்த
வம்பைப்பீ றுங்குயத்து மாதே நின் செங்கரத்தால
தும்பைப்பூத் தன்னைத் தொடு. ((தே.கு.)

**வ-கு :** பாம்புக் கடி நஞ்சாலுண்டான மூர்ச்சையினின்றும் உணர்ச்சி பெற, இதன் பூ இரசத்தை மூக்கில் பிழிந்து விடுவதுண்டு. இதன் பின் இலையை உள்ளுக்குக் கொடுத்து, இச்சாற்றைக் கடிவாயிலும் விட நஞ்சு நீங்கும்.

இதன் பூவின் சாறு கொடுக்க, நீர்க்கோவை நீங்கும்.

சிறு குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்குப் பூச்சாறு 6 துளியை உலர்ந்த கர்ச்சூரக்காய்ப் பொடியுடன் கலந்து தினம் இரு வேளை கொடுத்துவர, நீர்க்கோவை, இருமல், கோழைக்கட்டு இவை போம்.

தீராத் தலைவலிக்குப் பூவின் சாற்றை இரண்டு துளி மூக்கிலிடலாம்.

முப்பிணிக்கு இதன் பூவை முலைப்பாலில் ஊறவைத்துக் கண்களிற் பிழியலாம்.

இப்பூவை எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலை முழுகிவர, தலைப் பளுவு, ஒற்றைத் தலைவலி, நீரேற்றம், மூக்கடைப்பு நீங்கும்.

## 336. துரிஞ்சிபீன்—Thurnjbin

### Alhagi maurorum.

இஃது, வட இந்தியா, டெக்காண் முதலிய இடங்களில் வளருகிற ஒருவித முட்செடியின்மீது உறைந்திருக்கும் பனி. மேற்படி செடியின் இலை, சிறு கிளை இவைகளின்மேல் மெல்லிய துணி போட்டுக் குலுக்குவதனால் கிடைக்கும். இது வெண்மஞ்சள் நிறமாய், கற்கண்டுத் துண்டுகளைப் போலிருக்கும். இதில் இனிப்புச் சுவையும் பொருந்தியிருக்கும்.

**சுவை**—இனிப்பு, **வீரியம்**—தட்பம், **பிரிவு**—இனிப்பு.

**செய்கை :** | நீர்மலம்போக்கி—வ்ரேசநி—**Purgative.**
| போஷணகாரி—உடலுரமாக்கி—**Nutritive.**

**குணம் :** இதனால், இருமல் மார்வலி, ஒக்காளம், சூட்டைப் பற்றிய சுரங்கள் ஆகியவை போம்.

**வ-கு :** மேற்கூறிய நோய்களுக்கு 1—2 கிராம் எடை வீதம் கொடுக்கலாம்.

இதைப் பசுவின் பச்சைப் பாலில் கரைத்துக் குடிக்க, ஆண்மை பெருகும்.

## 337 துவரை—Thuvarai

**வே-பெ : ஆடகி, காச்சி, ஆடகம், தோரை, சுராட்டம், மிருத்தாலகம், மிருத்தனம், யவை.**

**Cajanus indicus.**

**Eng : Dholl.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kandulu | Sans. | Tuvari |
| Mal. | Tuvara | Hind. | Arhar-dal. |
| Kan. | Togari | Duk. | Thuvar-ki-dal |

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டு வருகின்றது ; பயிர் வகையைச் சேர்ந்தது. இதில் பேய்த்துவரை என்றொரு வகையுமுண்டு.

ப-உ : இலை, விதை.

**சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.**

**செய்கை : உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.**

குணம் : பட்டினி முடிவிற்குப் பின் கொடுக்கும் உணவு, கொடுப்பதற்கும் பரிகாரத்திற்கும், உப்பில்லாப் பத்தியத்திற்கும், சுரத்திற்கும், முப்பிணிகளுக்கும், பஞ்சணையேகிடையாக எழுந்திருக்க வன்மையற்றவர் மெலிவிற்கும் உதவும்.

பஞ்சமுட்டிக் காமரும் பத்தியவி யஞ்சனமாம்
விஞ்சுரஞ் சந்நிகட்கு மெத்தநன்றும்—பஞ்சின்
விழுந்துவரை யாது மெலிந்தாரைத் தேற்றும்
கொழுந்துவரை யாயினீ கொள். (அ.கு.)

**மொச்சை, சோளம் பயறு துவரை.**

வாய்ப்புண். ஈற்றுப்புண் இவைகட்கு இதன் கொழுந்தை வாயிலிட்டு மென்று வரலாம்.

இலையையும், விரை முளையையும் மைப்போல் அரைத்து, மார்பில் வைத்துக் கட்டப் பால் சுரப்பு நிற்கும்.

விரையைத் தோல் நீக்கியபின் இதற்குத் துவரம்பருப்பு என்பது பெயர். இதை வேகவைத்து இரசம், கடையல், குழம்பு வகைகள் செய்து சாப்பிடுவது இந்நாட்டு வழக்கம்.

**துவரம்பருப்பு ரசம்.**

நவரை வாழைக் கனிபலவின்கனி
நல்ல மாங்கனி பாலொடு நெய்க்கறி
கவரிலப் பொழுதே மந்த மாம்பரி
காரங் கேட்கும் பயித்தியக் காரரே !
எவருங் காண்க வறைகுது மன்னத்தில்
இட்டுணுங்கறி தன்னுடன் கூடவே
துவரை நீர்மிள குள்ளியிட் டுக்கொளீர்
துட்ட வாதமுந் துஞ்சிடு முண்மையே (தே.கு.(

வுளிக்குற்றத்தைப் பெருக்கி, பசித்தீயைக் கெடுக்கக் கூடியதான வாழை, பலா, மா என்கிற முப்பழங்களையும், பால், நெய்க்கறிகளையும், அளவு கடந்து புசிக்கில், உடனே வயிற்றுக் கோளாறுகளாகிய பசித்தீக்கேடு முதலிய நோய்கள் உண்டாம். அப்போது துவரம்பருப்புக் கட்டியுறுத்த நீரில், மிளகு, பூண்டு முதலியன சேர்த்து ரசம் வைத்து, அதை நற்கறிகள் சேர்ந்த உணவுடன் சேர்த்துண்ணில் அவைகள் நீங்கும்.

(தே.கு.)

பருப்பை அரைத்து நெருப்பில் வைத்துக் கொதிக்க வைத்துக் கிளறி, வீக்கங்களில் வைத்துக் கட்ட அவை கரைந்து போம்.

பருப்பை எளிதாக வறுத்து நீர்விட்டு வேகவைத்தெடுத்த இரசத்துடன், உப்பு, புளி, காரம் முதலியன சேர்த்துப் பாகப்படுத்தி உட்கொள்ள அஃது ஐயத்தை நீக்கி, உடற்குப் பலத்தை உண்டாக்கும்.

துவரம்பருப்பைப் பலவகையாக உணவுப் பொருள்கள் செய்துண்பது இந்நாட்டுப் பழக்கம்.

## 338 துளசி—Thulasi

**வே–பெ : அரி, இராமதுளசி, கிருஷ்ணதுளசி, திருத்துளாய், துளவு, குல்லை, வனம், விருந்தம், துழாய், மாலலங்கல்.**

**Ocimum sanctum**

**Eng: Holy Basil.**

| | |
|---|---|
| Tel. Thulasi | Sans. Thulasi |
| Mal. Thulasi | Hindi. Thulasi |
| Kan. Thulasi | |

இது நாடு முழுவதும் பயிராகும் ஒரு மணமுள்ள செடி. இதற்கு மணமும் காரமுமுண்டு. இஃது ஏறக்குறைய 2—3 அடி உயரம் வளரும், இதில் **துளசி, நற்றுளசி, கருந்துளசி செந்துளசி, நாய்த்துளசி, நிலத்துளசி, கல்துளசி, முள்துளசி** எனப் பலவகைகள் உண்டு.

**ப–உ :** இலை, விதை.

**சுவை**—கார்ப்பு, **தன்மை**–வெப்பம், **பிரிவு**–கார்பபு.

**இலை.**

**செய்கை :**
வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி—Stimulant.
கோழையகற்றி-கபஹரகாரி—Expectorant.
வியர்வைப் பெருக்கி-ஸ்வேதகாரி—Diophoetic

**விதை.**

உள்ளழலாற்றி-அந்தர் ஸ்நிக்தகாரி—Demulcent

**துளசி.**

போலாட்டி வித்துதிரப் புண்பீனி சப்பிணியை
மேலாட்டி வித்து விளங்குமே—சால
வருந்து முடற்குவெப்பு வாராமெ லோட்டும்
பிருந்தமைப்ப யித்தியத்தைப் பேய். (தேரன்–வெண்பா)

துளசியை உட்கொள்ளில், அது பேய் போல ஆடுகின்ற வெறிநோயைப் போக்கும் ; மூக்கிலிருந்து நீர்பாயும் (பீனச) நோயைத் தடுக்கும் ; உடலின் வெப்பத்தை அகற்றும்.

**துளசி.**

துளசியி னிலைசரந் துய்த்திடச் சுரப்பிணி
யளவுநோ யினமெலா மறுவது திண்ணமே. (தே.கா.)

(பொ-ள்.) : துளசியிலை ரசத்தால், சுரநோய்க் கூட்டமெல்லாம் ஒழிந்து போம்.

**துளசி குணம்.**

மன்னனுக்குச் சீரளித்து மற்றவரைத் தாழவைத்துப்
பின்ன மிலாதுலைப் பேணியே—மன்னுநிலைப்
பேரணியப் பண்ணும் பிணிக்கு பிணியாகும்
தாரணியில் மாலலங் கல் (தே-வெண்பா.)

திருமாலின் மாலையாகிய துளசி, வளிக் குற்றத்தைத் தன்னிலைப் படுத்தி, ஐயக் குற்றத்தைக் குறைத்து, அதனால் உண்டாகும் பிணிகளையும் நீக்கி உடலைக் காக்கும்.

## நற்றுளசிNul-thulasi.

குணம் : இதனால், ஐயம், வயிற்றுளைச்சல், எலும்பைப் பற்றிய சுரம், நீர் வேட்கை, மாந்தம், சுவையின்மை, ஆகிய இவை போம். வெப்பத்தைத் தரும்.

ஐயம் வயிறுளைச்சல் அத்திசுரம் தாகமும்போம
பையசுர மாந்தம் பறக்குங்காண்—மெய்யாக
வாயின் அரோசகம்போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல். (அ.கு.)

## நிலத்துளசிNila—th-thulasi.

குணம்.—இதனால் கணச்சூடு பல அழல் நோய்கள், ஐய் சுரம், அழல் சுரம், சிறு குழந்தைகட்கு முலைப்பாலால் வரும் மாந்தம், மாந்தசுரம் இவை போம்.

நிலத்துளசி மாதர்தரு நீண்முலைப்பால் மந்தம்
வலுத்தசுரம் பித்தகணம் மாற்றும்—அலத்துகண
மாந்தசுரம் பித்தசுரம் மாபெரிய சீதசுரம்
சேர்ந்தோடச் செய்யுந் தெளி. (அ.கு.)

## நாய்த்துளசி—Naith-thulasi.

குணம் : குத்திருமல், கோழை, முக்குற்றம் இவைகளைப் போக்கி உடலைக்காக்கும்.

கபத்தோடு குத்திருமல் காணு தொழியும்
சபத்தைசெய் முத்தோடம் சாடும்—விபத்தழலைச்
சாய்த்துடலைப் போஷிக்கும் தாரணியில் உள்ளோர்க்கு
நாய்த்துளசி தன்னை நவில். (அ.கு.)

விருந்தா வனமே விலக்கவாரா பித்த
விருந்தா வனவை விபத்த—

(பொ-ள்.) துளசியின் ரசம், கற்பம் இவைகளை உட்கொண்டாலும், வேரின் ரசத்தை நல்லெண்ணெயுடன் கூடடித் தைலமாய் உபயோகித்தாலும் பயித்தியம், வாதப்பிணி, கபப்பிணி, சன்னி முதலியவைகள் விலகும்.

## கல்துளசி—Kal-thulasi.

குணம் : இது, தீச்சுரம், கட்டி, வண்டுகடி, காணுக்கடி கோழையைத் தள்ளுகின்ற ஐயசுரம் இவைகளைப் போக்கும்.

தாபச் சுரமுந் தனிவித் திரதிகளுஞ்
சோப சில்லிடமும் தோற்றுதே—கோபிச்சங்
குற்றுளசி லேட்டுமத்தால் ஊன்றுகா சம்பறக்குங்
கற்றுளசிப் பேருரைக்குங் கால். (அ.கு.)

## முள் துளசி—Mul-thulasi.

குணம் : இதனால், எலிநஞ்சு, வெட்டுப்புண், கபம் நீங்கும். நஞ்சுகள் கிளேக்காது.

எலிவிடம்போம் வெட்டுண் டிருக்கும் விரணக்
கிலிவிடும் விடங்கள் கிளேக்கா—உலவிவரு
மட்டுறச்சி வந்தமலர் மண்டபத்துள் வாழனமே!
முட்டுளசிப் பேரை மொழி. (அ.கு.)

## செந்துளசி—Chen-thulasi.

குணம் : இதனால் விடம், ஐயப்பெருக்கு, முக்குற்றம் இவைகளாலுண்டாகும் நோய்கள் போகும்.

செய்ய துளசிவிடம் தீர்க்கும் கபமறுக்கும்
வெய்ய கடிவிடத்தை விண்ணேற்றும்—தையலரே!
முத்தோடத் துண்டா முரணோட்டும் அவ்வழிசேர்
எத்தோட மும்போக்கு மெண். (அ.கு.

## கருந்துளசி—Kharun-thulasi.

குணம் : இதனால், இருமல், இரைப்பு,நெஞ்சிற் கோழை சேருவதனாலுண்டாகும் குறுகுறுவென்கிற ஒலி, வயிற்றுப்புழு, இருமலினால் நேரிடுங் கேவல், மார்ப்புச்சளி, சூலே, நஞ்சு, முப்பிணி இவைகள் நீங்கும்.

இருமலொடு நெஞ்சி விழுப்புச்சு வாசம்
கிருமி சலதோடம் கேவல்—மருமச்
சளிசூட்சை சூலேவிடம் சந்நியிவை போக்கும்
தளிரார் கருந்துளசி தான். (அ.கு.)

மேற்கூறிய துளசிவகைகளுக்கெல்லாம் வழக்குகள் ஒன்றுபோலேயாகும்.

வ-கு : துளசி இலையைப் பாலிலிட்டுக் காய்ச்சியுண்ண பாலிலுண்டான குற்றங்கள் விலகும். ஐயத்தைச் சேர்க்காமற்றடுக்கும்.

இலையை உலர்த்திப் பொடித்து மூக்கிலிடப் புழுக்கள் வெளிப்படும்.

பிட்டவியல் செய்து சாறெடுத்து, சிறிது கோரோசனை கூட்டிச் சிறு குழந்தைகட்குப் புகட்ட, இருமல் தீரும். ஐயக்கட்டு, மாந்தம், கணச்சூடு தணியும்.

தண்ணீர் சேர்த்துக் காய்ச்சி வியர்வைப் பிடித்தாலும், தலைமுழகச் செய்தாலும் ஐயம் நீங்கும்.

துளசி இலையை நம்மக்கள் திருமால் வணக்கத்தில் நீரிலிட்டும் தனித்தும் வழங்குவதுண்டு. அன்றியும், மாலையாகத் தொடுத்து கடவுளுக்கு இடுவதுண்டு. அந்நீரையும் இலையையும் உட்கொள்வதால், கோழை ஒழிவதுடன், அஃது உடம்பை வளர்க்கும் என்னும் கொள்கையும் உண்டு.

விதையைக் குளிர்ந்த நீரிலரைத்து உண்ணில், அது மண்குத்திநோய் என்னும் பிள்ளை பெற்றபின் அடிவயிற்றுள் உண்டாகும் குத்தலையும், குத்திருமல், வெள்ளை முதலிய நோய்களையும் போக்கும்.

---

## 339. தூதுவளை—Thuthulai

**வே–பெ.—தூதுவளை, அளர்க்கம் சிங்கவல்லி,**

Solanum tailobatum

| | |
|---|---|
| Tel. Mullamusti | Sans. Alarka |
| Mal. Mulkaththari | |

இது இந்தியாவில் எங்கும் பயிராகும் ஒரு வகைக் கொடி. இதற்கு சிறு முட்கள் உண்டு.

**ப-உ :** இலை, பூ, காய்.

**சுவை**—சிறு கைப்பு, கார்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant.**
- கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
- உரமாக்கி—பலகாரி—**Tonic.**

**தூது வேளை.**

தூதுவே ளையையுணத் தொக்கினிற் றெக்கிய
வேதையா நோயெலா மெய்யைவிட் டகலுமே. (தே.கா)

**(பொ-ள்)** தூது வேளையை, கற்பமுறையாகவேனும், கறியாகவேனும் உட்கொண்டுவர, உடலில் ஐயத்தால் ஏற்பட்ட நோய்கள் யாவும் நீங்கும்.

**சமூலம்.**

**குணம் :** தூதுளையிலை—உண்டிக்குச் சுவையைத் தரும். பூ—ஆண்மையைப் பெருக்கும். காய்—முக்குற்றங்களையும் நீக்கும். வேரும் கொடியும் இருமல், இரைப்பு முதலிய ஐயப்பிணிகளைப் போக்கும்.

தூது பத்திரி யூண்சுவை யாக்கும்பூ
தாது வைத்தழைப் பித்திடும் காயது
வாத பித்தக பத்தையு மாற்றுவேர்
ஓதும் வல்லிபன் நோயுமொ ழிக்குமே. (தே.கு.)

**இலை.**

**குணம் :** இதனால், ஐயத்தாலுண்டாகும் காதுமந்தம், காதெழுச்சி, இருமல், நமைச்சல், பெருவயிறு, மந்தம், முக்குற்றம், உடல் குத்தல் இவை நீங்கும். ஆண்மை பெருகும், உடல் வலுக்கும்.

காதுமந்தம் காதெழுச்சி காசந் தினவுமதம்
ஓதுமந்தம் முத்தோடம் உட்சூலை—தாதுநட்டம்
மீதுளைப் பத்திரியை மேவச்செய் வாராய்ந்தோர்
தூதுளைப் பத்திரியைத் துய்த்து. (தே.கு.)

பூ.

இதனல், உடல் பெருக்கம், ஆண்மை, வன்மை, தெளிவு உண்டாகும்.

புஷ்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ டாற்றன்மிகும்
முட்ட நரைத்து முதிர்ந்தவனைக்—கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவும் எண்ணமுற்றால்
தூதுளத்தின் பூவுண்ணச் சொல். (தே.கு.)

ஐயமுடன் பித்தம் அகலும் அரோசகம்போம்
தையலே! வாதம் தணியுங்காண்—வையமிசை
ஓதுங் குடல்வாதம் ஓடும் மலமிழியுந்
தூதுளங் காயுண்ணச் சொல். (அ.கு).

வ·கு : காயை வற்றலிட்டுப் பாகம் செய்து உண்டுவர, ஐயநோய் அழல்நோய், வளிநோய் முதலியன அணுகாது. குடல்வாதம் போம்.

பழம்.

இறுகிய மார்புச்சளி, இருமல். முக்குற்றங்கள், நீரேற்றம் இவை போம். இருமுறை வெளிக்குப் போம் பாம்பு நஞ்சு தீரும்.

கபக்கட்டு கோழை கதித்ததிரி தோடம்
குபுக்கென றெழும்புநீர்க் கோவை—கபுக்கென்
றழுத்துவிட மும்போம் அடர்தூது ளத்திற்
பழுத்துவிழும் காயையுண்டு பார். (அ.கு).

வ.வ- : இலைக் குடிநீரை, இரைப்பு இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

தூதுவேளை கற்பம்.

திருக்குளத்தை நன்றாக்கித் தின்னுவையே னல்ல
திருக்குளத்தைப் போலே திருந்துந்—திருக்குளத்தை
யெல்லாமிரவு வினை யென்னவருந் தூதுவளை
யெல்லா மிரவுமினி யென்.

(பொ-ள்.) தூதுவளைக் கீரை, வேர், காய், வத்தல், ஊறுகாய் இவற்றை நாற்பது நாட்கள் புசிந்துவரின், கண்ணில் ஏற்பட்ட தீக்குற்ற மிகுதி, மற்றக் கண்நோய்கள் யாவும் நீங்கும்.

தூதுவளைக் குடிநீர் .

தூதுவளை யிம்பூர வாடா தோடை சொல்சங்கின் வேர்சுக்கு
வீழிகூட்டி
மாதுவளர் திப்பிலியும் பர்ப்பாடகமும் வழுதலையுங் காலியுடன்
சமனே கொண்டு
ஏதுவுட னீர்நான்கு மெட்டான் றாக்கி யிதனுடனே தேன்
கலந்து மிசைந்தே கொள்ளத்
தீதுபுரி சுரமையின் சுரம்வர தத்திற் சேர்ந்தசுர மிவை
யனைத்துஞ் சேரா தென்னே.

(பொ-ள்.) தூதுவளை, இம்பூரல், ஆடாதோடை, சங்கன்வேர், சுக்கு, வீழி, திப்பிலி, பர்ப்பாடகம், வழுதுணைவேர், கண்டக்காலி இவைகளை ஓர் எடை எடுத்துச் சேர்த்து, நான்கு பங்கு நீர் விட்டு, எட்டில் ஒன்றாகக் குறுக்கி, இத்துடன் தேன் சேர்த்து உட்கொள்ளில், சுரம், ஐயசுரம் வளிசுரம் இவையனைத்தும் அணுகாதொழியும்,

இலையைப் பிழிந்து காதில்விட, காதடைப்பு காதெழுச்சி போம். இலை, துவையல், குழம்பு முதலியன செய்து உண்ண கோழைக்கட்டு அறும்.

இதனை நெய் காய்ச்சி ஐயநோய், இருமல்நோய் இவைகட்குக் கொடுத்துவரப் போம்.

---

## 340. தெங்குமரம்—Thenku-Maram

வே-பெ : தென்னைமரம், பூலோக கற்பகவிருட்சம், தென்னம்பிள்ளை, தென், நாளிகேரம், தாழை, இலாங்கலி, புல்மரம்

Cocos nucifera,

Eng : Coconut palm.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tenkayi-chettu | Sans. | Narikela |
| Mal. | Thenna | Hind. | Nariyal |
| Kan. | Tengina-gida | Pers. | Narjeel |

இம்மரம், இந்தியாவில் எங்கும் வைத்துப் பயிராக்கப்படுகின்றதெனினும், தென்னிந்தியாவில் மிகுதியாக கடற்கரையோரங்களிலும் இலங்கையின் எல்லாப்பாகங்களிலும் பர்மா, கீழ்வங்காளம் முதலிய இடங்களில் கடலடுத்த நிலங்களிலும், மலையாளத்திலும் ஏராளமாய்ப் பயிராகின்றது. மணற்பாங்கான நிலங்களே இதற்கு ஏற்றது. இஃது அதிக உயரமாய் 60—90 அடி வரையிலும் வளரும். தெங்கில் பல வகைகள் உண்டு. அவைகளுள் சிறந்தது செந்தெங்கு.

பிள்ளையானவன் தன்னைப் பெற்று வளர்த்த தாய் தந்தையர்களுக்கு அவர்கள் தள்ளாத, காலத்தில் எவ்வாறு கடமைப் பட்டுள்ளானோ அவ்வாறே, தென்னம் பிள்ளையும், தன்னை வைத்து வளர்த்தவர்களை தன் தலையிலுள்ள காய்களால் உதவிபுரிகிறது என்பதை “ தளரா வளர்தெங்கு, தாளுண்ட நீரைத் தலையாலே தான்த ருதலால் கண்டு கொள்க. தென்னைமரத்தின் எல்லா உறுப்புகளும் பயனுள்ளவை. ஆனதுபற்றியே இதற்குக் “ கற்பகவிருட்சம் ” எனவும் பெயரிட்டுள்ளார்கள்.

இதன் மட்டைகள் ஒன்றன்மேலொன்றாய் அடுக்காகப் பரவியிருக்கும். ஓலைகள் இணைக்கப்பட்டிருக்கும் தண்டிற்கு மட்டை என்பது பெயர். இதனிலைகளை ஓலை என்றும், இதன் பூ தோட்டினின்றும்வெளிப்படாததற்கு முன், பாளை என்றும் பெயர் பெறும். இப்பாளையைச் சீவிக் கள்ளெடுக்கலாம். பாளை வெடித்து அதனின்றும் பூ வெளிப்படும். இப்பூ முதிர்ந்து பிஞ்சாகும். இப்பிஞ்சுக்குக் “ குரும்பை ” என்பது பெயர். இக்குரும்பை முதிர்ந்து தேங்காய் ஆகிறது. நாட்செல்லச் செல்ல இவை பழுத்துக் கீழே விழும். முதிராத இளந்தேங்காய்க்கு “ இளநீர் ” என்பது பெயர். தேங்காயை மூடியிருக்கும் மட்டைக்குக் “ குதம்பை ” என்பதும் பருப்பை மூடியிருக்கும் கடின ஓட்டிற்குச் “ சிரட்டை ” அல்லது “ கொட்டாங் கச்சி ” என்பதும் பெயர்.

ப-உ : இலை, குருத்து, பூ, பாளை, காய், வேர்கள், ஓடு (சிரட்டை).

பாளை—வேர்.

**சுவை**—துவர்ப்பு. **தன்மை**—தட்பம். **பிரிவு**—கார்ப்பு.

காய்.

**சுவை**—இனிப்பு. **தன்மை**—தட்பம். **பிரிவி**—இனிப்பு.

பூ.

செய்கை

உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.
பசித்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

இளநீர்

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refringerant.
உள்ளழலாற்றி—அந்தர்ளநிக்தகாரி—Demulcont.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Aperient.
அற்பச்சிறுநீர்பெருக்கி—லகுமூத்ரவர்த்தநி—Mild Diuretic.

வழுக்கை

சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தனி—Diuretic.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

தேங்காய்ப்பால்

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
மலமிளக்கி—லகுவ்ரேசனி Aperient.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

கள்

வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி— Stimulant.
மலமிளக்கி—லகுவ்ரேசனி—Laxative.

வேர்

சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தனி—Diuretic.

பாளை (பூ)

**குணம்** : இளம்பாலைப் பூவால், வெள்ளை, உட்காய்ச்சல், மேகப் குருதியழல், பெரும்பாடு, நஞ்சுநோய் ஆகியவை நீங்கும்.

மேகம் அகக்கொதிப்பு வீறுவி ரத்தபித்தம்
வேக அசிர்க்கரநோய் வீழபிரமி—தேகத்தில்
வின்னம்பாலிக்கும் விடபாகம் போகவென்றால்
தென்னம்பாளைப்பூவைத் தின்.

அ.கு.

தென்னம்பாளைக் குடிநீர்.

தெங்கம் பாளை மொட்டுமுதற் சிதற விடித்துத் திறமாகப்
பொங்கு மூலமேற் பிட்டாக்கிப் பிழிந்து தேனு முடன்கலந்தே
எங்கும் புகலு மதிவிடய மிலவம் பிசின்மே விட்டிருந்த
பங்கப் படுத்து மதிசார சரத்தைப் போக்குஞ் சொன்னோமே.

(தே—குடிநீர்.)

(பொ—ள்) தென்னம்பாளை மொக்கை, நன்றாக இடித்து, இதனை நீராவியில் வைத்துப் பிட்டாக்கி, இதைப் பிழிந்தெடுத்து, தேன் அதிவிடயத்தூள், இலவம்பிசின் இவற்றைக் கலந்து அருந்த, கழிச்சல் சுரம் நீங்கும்.

**குருத்து.**

குருத்தால், ஐயவலியும், மேல்வாய் முளையில் கொட்டும் குருதியும் நீங்கும்.

" தென்னங் குருத்தால் சிலேத்ம வலிநீங்கும்.
மன்னுதிர மூலமது மாறுங்காண் " (அ.கு.)

**கள்.**

தென்னங்கள்ளானது மயக்கத்தையும் குளிர்ச்சியையும் தரும். முக்குற்றத்தையும் உண்டாக்கும்.

" தெங்கின்மது சீதந் திரிதோட முண்டாக்கும்
மங்கிவிடுகள்குலையே யாம். " (அ.கு)

மேலும் இஃது ஆண்மைப் பெருக்கம், நளிர்ச்சுரம், பாண்டு சோபை, வளிநோய்கள், அழலநோய்கள், குருதிக்கழிச்சல், பெருங்கழிச்சல், கரப்பான் ஆகிய இவைகளை உண்டாக்கும். அறிவைக் கெடுக்கும்.

நாதவிந் தூறு நளிர்பாண் டொடுசோபை
வாதபித் தங்கிராணி வன்கரப்பான்—பேதியிவை
பொங்கி யதிகரிக்கும் புத்திகெடு மேகமுண்டாந்
தெங்கின்மது விற்கென்றே செப்பு. (அ.கு.)

**கற்கண்டு**

இதனால், தொண்டைக்குள் திமிர், குருதியில் அழுக்கு, சொறி இவை உண்டாம், ஐயப்பெருக்கும், அத்துடன் வளிக்குற்றக் கூட்டும், உடற்கு அயர்வும், மந்த அறிவும் உண்டாம்.

நெஞ்சிற் றிமிருஞ்செந் நீரிலழு க்கும்புடையும்
அஞ்சுகப வாதமொடு வாதமுமே—விஞ்சுமிளந்
தொங்கினதே கர்க்கயர்வுந் தூயபுத்தி மந்தமுமாம்
தெங்கினது கண்டாற் றெளி. (அ.கு.)

**வெல்லம்.**

இதனால், செரியாமந்தம், வீக்கம், நீரேற்றம் இவை பெருகும்.

" தெங்கின்வெல் லத்தாற் செரியாக் குணஞ்சோபை
அங்கமுறு நீரும் அதிகரிக்கும். "
நல்ல வெல்லம் பழந்தண்ணீர் நாழியில்
வல்லபாதி ரிப்பட்டை மகிழ்ந்துணத்
தொல்லை வாரி சுவரிடுமே நீரிழி
வில்லை யில்லை யிராமன்கைப் பாணமே. அ. கு:

(பொ—ள்) தெங்குவெல்லம், பாதிரிப்பட்டை, இவ்விரண்டையும நாழி நீரிற்கலந்து குடித்துவர, நீரிழிவு என்னும் நோய் இல்லாதொழியும

**தேங்காயெண்ணெய்.**

இலாங்கலி யெண்ணெயு மண்ணெயைப் போன்றே
பொலாங்கு செய்திடும் போற்ற லொண்ணுதே. (தே—கா)

(பொ—ள்.) தேங்காயெண்ணெயும், நல்லெண்ணெயைப் போன்றே பத்தியத்திற்குக் கெடுதியை உண்டாக்கும்.

## தேங்காய்ப்பால்.

சுவை மிகுந்த, இப்பாலைச் சோற்றில் கலந்துண்ணின் விருப்பமுண், டாம். உடல் வன்மை பெறும். ஆயினும், வளிதீ, குற்றங்களையும் கரப்பான் நோயையும் உண்டாக்குமென அறிக. மேலும், சேராங்கொட்டை வாய்ப் இரசம், பூரம், பாடாணம் முதலிய நஞ்சுகளால் உண்டான வீரம், வாய்ப்புண்ணையும் போக்கும் என்பது வழக்கு.

வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுமிகவிருத்தியாந் தாழ்குழலே —போதநல்ல
அன்ன மிறங்கு மதியுருசியுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி. (அ.கு.)

## தேங்காய் நெய்.

தேங்காய் நெய்யால், தீப்பட்ட புண்ணும், பல்நோய் படர்தாமரை, சிரங்கு, ஆகியவைகள் போம். தலைமயிர் வளரும்.

தேங்காயி னெய்யதனுற் றீயால் வருபுண்போம்
பாங்காகக் கூந்தற் படர்ந்தேறு—நீங்காத
பல்லடியின் னோயும் படர்தா மரைசிரங்கும்
அல்லறப் போமென் றறி. (அ.கு.)

## பிண்ணாக்கு.

தேங்காய்ப் பிண்ணாக்கினால், நமைச்சல், சிரங்கு, புண், நீங்காத கரப் பான், வயிற்றுப்புழு, ஆகியவைகள் உண்டாகும்.

சொறிசிரங்கு புண்ணுமாந் தோலாக் கரப்பான்
மறுவாக்கும் மேனியெலாம் மாதே!—சிறுக
வயிற்றிற் புழுவினங்கள் மாரு துதிக்குஞ்
சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல் (அ.கு.)

(வ-கு.) தென்னம் இளம்பாளையை வெட்டி அதன் மடல் போக்கிப் பூவை இடித்துச் சாறு பிழிந்து, 85 மி.லி. எடுத்து, அதன் எடை தயிரும், ஒரு பலம் பழரசமும் சேர்த்துக் தினம் இரண்டு அல்லது மூன்று வேளை கொடுக்க, வயிற்றுக்கடுப்பு, நீர்ச்சுருக்கு, குருதி அல்லது சீழ் கலந்திழியும் கழிச்சல் ஆகியவை தீரும். புளியாகாது.

## கள்.

பூம்பாளையிலிருந்து கள் எடுக்கிறார்கள். புளிக்காத கள்ளைப் பிள்ளைத் தாய்ச்சிக்குக் கொடுக்க, பிறக்குங் குழந்தை அழகாக இருக்கும்.

குறைந்த அளவில் கொடுக்க வயிற்றுக் கடுப்புத் தீரும். தென்னங் கள்ளைக் கவலையொழிக்கவும், இளைப்பைப் போக்கவும் கொள்வதுண்டு. இதனால் மயக்கமுண்டாகும்.

## ✓ இளநீர்.

இதை அருந்த நீர் வேட்கை தீரும். மேலும், இதைச் சிறுநீர் பெருக்கு மருந்துகளுடன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இது, சில குளிர்ச்சித் தைலங்களிலும், கண் நோய் மருந்துகளிலும் சேர்க்கப்படுகின்றது.

## தேய்காய்.

வே : பெ : திரியகழி, முக்கண்ணன், முடியரசன்.

### தேங்காய்.

வே - பெ: திரியஷி ,முக்கணன், முடியரசன்,

இதைத் துருவிப் பிழிந்த பால் இனிப்பாக விருக்கும். ஆனால் அழலை உண்டாக்கும். இப்பாலைக் காய்ச்சி எண்ணெய் எடுக்கலாம்.

இப்பாலைக்கொண்டு வாய் கொப்புளித்துவர, வாய்ப்புண், தொண்டைப் புண் முதலியன தீரும்.

இப்பாலைக் காய்ச்சி, அதில் வரும் எண்ணெயை நெருப்புச் சுட்ட புண் களுக்கும், வேறு புண்களுக்கும் போட்டுவர, சீக்கிரம் உலரும். மேற்படி எண்ணெயைத் தலையில் தடவிவர, மயிர் வளரும்.

தேங்காயிலிருந்து இரண்டு விதங்களில் எண்ணெய் எடுக்கலாம். 1 உலர்ந்த கொப்பறைத் தேங்காய், 2—தேங்காய்ப்பால்.

(1) கொப்பறையிலிருந்து ஆட்டி எடுக்கும் எண்ணெயை, கறிபதார்த் தங்கள் தாளிப்பதற்கும், தலையில் தேய்த்துக் கொள்வதற்கும் மலையாள தேசத்தார் அதிகமாய் கையாண்டு வருகிறார்கள்.

(2) தேங்காயைத் துருவிப் பிழிந்த பாலைக் காய்ச்சி எடுக்கும் எண்ணெயை, தலைக்கும், கறிக்கும் பயன்படுத்துவதுண்டு. தலை மயிர நன்றாக வளரும். அன்றியும், புண்களுக்கு காய்ச்சும் எண்ணெய்களில் இது சிறப்பாகச் சேரும்.

**சிரட்டைத் தைலம் செய்முறை :** சிரட்டையைச் சிறு துண்டுகளாக்கி, ஒரு பானையிலிட்டுக் குழித்தைலமாக இறக்கலாம். இத்தைலத்தைத் தேங்காய் எண்ணெயுடன் கலந்தேனும் அல்லது அப்படியேயாயினும் பூசி வர, படர்தாமரை, அரைப்புற்று, தேமல் முதலிய தோலைப்பற்றிய நோய்கள் நீங்கும்.

தேங்காய்ப் பிண்ணாக்கைக் கன்றுகாலிகள் உணவாகக் கொள்ளுவ துண்டு.

இதை, கருஞ்சீரகம் முதலிய சரக்குகளுடன் அரைத்து, உடம்பில் தேய்த்துக் குளித்துவரத் தோலைப் பற்றிய நோய்கள் நீங்கும். ஆனால், இஃது உணவிற்கு ஏற்றதன்று ; குணத்தின் சொல்லிய நோய்களைப் பிறப்பிக்கும்.

### குருத்து.

இளங்குருத்து சுவையுள்ளது. அதைத் தின்றால், ஐயத்தை நீக்கிக் கீழ்வாய்க் குருதிப் போக்கை நிறுத்தும்.

### வெல்லம், கற்கண்டு.

இவை, கள்ளினின்றும் காய்ச்சி எடுக்கப்படுவன வாகும் ; உடற்கு அவ் வளவு ஏற்றதல்ல, இவற்றைத் தின்றால், குணத்தின் கீழ்க் கண்ட நோய் களுண்டாகும் எனப் பெரியோர் கூறியிருக்கின்றனர்.

### ஓலை.

ஓலையை முடைந்து வீட்டுக்கு வேய்ந்து, கூரையாக்கிக் கொள்ளலாம்.

### வேர்.

இதைக் குடிநீரிட்டுப் பெண்களுக்குண்டாகும் பெரும்பாடு நோய்க்குக கொடுப்பதுண்டு.

---

## 341. தேக்கு—Thekku.

**வே. பெ. சாகம், சாதி.**

**Tectona grandis.**

**Eng. Teak tree.**

**Tel.** **Tekkoo**

**Mal.** **Thekku**

**Kan.** **Tegu**

**Sans.** **Sala**

**Hind.** **Sagwan**

**வளர்ச்சி (Habit) :—**

இம்மரம் இந்தியா, பர்மா, மலேயா முதலிய நாடுகளிலுள்ள காடுகளில் ஏராளமாய் வளருகிறது.

ப-உ : மரக்கட்டை

(வெளிப்பிரயோகம்)

**செய்கை :** குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி - **Refrigerant.**
தாதுவெப்பகற்றி—சமனகாரி - **Sedative.**

**வ-கு :** மரக்கட்டையை நீர் விட்டு இழைத்துச் சோரங்கொட்டை முந்திரிக்கொட்டை முதலியவைகளின் நஞ்சை நீக்க, மேலுக்கு வழங்கலாம்.

விரையிலிருந்து எடுக்கும் எண்ணெய் முடியை வளரச் செய்யும்.

வீடு கட்டுவதற்கும், வீடுகளில் வழங்கும் மரச்சாமான்கள் செய்வதற்கும் இம்மரம் சிறந்ததாய்க் கருதப்படுகிறது.

இதன் இலைச்சாற்றால் ரசம் கட்டலையாகும் என்பர் சிலர்.

---

## 342. தேட்கொடுக்கு—Thel-kodukku.

இது, சிறுதேட்கொடுக்கு பெருந்தேட்கொடுக்கு என இருவகைப்படும்.

### சிறுதேட்கொடுக்கு—Chiru-Thel-kodukku.

**Heliotropium indicum.**

**Eng. Heliotrope.**

**Tel.** **Nagadani**

**Mal.** **Tel.-kodukka**

**Sans.** **Vrisechikalee**

**Hind.** **Hatta-juri**

இஃது இந்தியாவின் பல பாகங்களிலும், நமைப்புள்ள நிலங்களிலும், வெளிகளிலும் பயிராகக் கூடியது. தைத் திங்கள் முதல் சித்திரைத் திங்கள் வரையில் பூக்கும்.

**ப - உ :** இலை, பூ.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**செய்கை :** சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic**
வரட்சியகற்றி - ஸ்நிக்தகாரி - **Emollient.**

## தேள் கடை (தேள் கொடுக்கு).

வங்கத்தி னீர்வாங்கும் வாத குருவாகும்
தங்கத்தைக் காண்பிக்கும் தப்பாது —எங்க
மரிச்சு விடாமல் வளர்க்குமெந் நாளும்
விருச்சிகக் கூலமிது மெய். (தேரன்-வெண்பா).

தேள் கொடுக்கு இலே, ஈயத்தின் நீரை வாங்கிக் கட்டுவிக்கும் வாதத்திற்குக் குருவாகும். இரசவாத வேதைகளால் பொன்னும் செய்யலாம்.

**பொதுப் பண்பு :** இதனால் நமைச்சல், நாட்பட்டபுண், கரப்பான், குழந்தைகளுக்குண்டாம் கணம் மாந்தம், காணுக்கடிவிடம் ஆகிய இவை நீங்கும்.

தேள்கொடுக்குண் டாயிற் றினவடங்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாம்—கீட்பட்ட
மாந்த கணமுமறும் மானிலத்துட் சில்விடம்போம்.
போந்தமருந் தாகும் புகல். (அ.கு.)

## சிறுதேட்கொடுக்கு

**பண்பு** : இதனால், சொறி, சிரங்கு, விரணப்புண், கரப்பான், கீல் வாதம், கொறுக்குப்புண், மாந்தம், ஒழுக்கு வெள்ளை, அழல், வெட்டை எலும்புருக்கி ஆகியவை போம்.

சிறுதேட் கொடுக்கதனற் சேயிழையே ! கேளாய்,
சொறிசிரங்கு புண்கரப்பான் சூலை—கொறுமாந்தை
மேகவெட்டை பித்தவெட்டை மீளா வெலும்புருக்கி
ஆகம் விட் டோடு மறி. (அ.கு.)

## பெருந்தேட்கொடுக்கு

**வே - பெ : சுடுகாடு மீட்டான்.**

**குணம்** : நுண்புழு, புண்கிரந்தி, மேகப் புண், கருங்கிரந்தி ஆகிய இவைகள் போம்.

சுடுகாடு மீட்டான் எனப்பெரியோர் சொல்லும்
நெடியபெரும் தேட்கொடுக்கால் நீரார்—பொடிக்கிருமி
புண்கிரந்தி மேகப்புண் பொல்லாங் கருங்கிரந்தி
விண்கரந்து போகாதோ விள். (அ. கு.).

**வ - கு:** இதன் இலையை அரைத்துப் பூசிவர, சொறி, சிரங்கு, கரப்பான், புண், காயப்பட்டபுண், கொறுக்குப்புண், ஈறுகட்டல், முகப்பரு இவை குணப்படும்.

இலையை அரைத்து ஒன்று முதல் மூன்று வராகனெடை உட்கொள்ளசுரம் விலகும்.

இலையையும் பூவையும் குடிநீராய்ச் செய்து வாய் கொப்புளித்துவர, தொண்டைப்புண், தொண்டை இறுக்கம், தொண்டையிற் காணும் வலி நீங்கும். இந்நோய்களுக்கு இரண்டு மணி நேரத்திற்கொருகால், அரை ஆழாக்கு விகிதம் உட்கொண்டாலும் நன்மை உண்டாம்.

இலேச்சாற்றைக் காதிற் பிழியச் சீவடிவதும், கண்ணிலிடக் கண் சிவத்தலும் நீங்கும். தேள் கொட்டிய நஞ்சு நீங்க, கொட்டிய வாயில் இலேச்சாற்றைப் பூசலாம்.

இதன் காயைக் குடிநீரிட்டுக் கொடுக்க இரைப்புத் தணியும்.

---

## 343. தேவதாரு—Devadaru.

வே-பெ : தேவதாரம், தூண், இருதாரு, தாரு, தாரம், தேவத சுரர்மரம், பத்திரதாருகம்.

CedrusDeodars,

Eng. Himalayan Cedar.

| | |
|---|---|
| Tel. Davadaru | Sans. Devadaru |
| Mal. Thevatharam | Hindi. Deodar |
| Kan. Devadari | |

இஃது, நம் நாட்டிலுள்ள குளிர் காடுகளில் உயர்ந்து வளரும் மரம் இதில் சரளதேவதாரு என்கிற ஒரு வகையுமுண்டு.

ப - உ : பட்டை, கட்டை.

சுவை - பட்டை—துவர்ப்பு
கட்டை சிறுகைப்பு
} தன்மை- வெப்பம், பிரிவு - கார்ப்பு.

பட்டை.

செய்கை : துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
வெப்பகற்றி - ஜ்வஹரகாரி - Febrifuge.
கட்டை.
அகட்டு வாய்வகற்றி உதரவாதஹரகாரி—Carminative.

குணம் : பீநசம், பழயசுரம், நீரேற்றம், உடல் வெப்பம் நீங்கும்.

தேவதா ரக்குணந்தான் சேர்ந்துவளர் பீநசத்தைக்
காவகத்தி லோட்டுங் கரப்பலவே—மாவலவர்
சொல்லும்பு ராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மனற்றணிக்கு மெய். (அ.கு.)

மேலும், இதனை இருமல், பல்வலி, இரைப்பு, வலி, காதிரைச்சல். நடுக்குவாயு, சுரம் இவைகளுக்கும் வழங்கலாம்.

வ - கு : இம்மரத்தின் பட்டையைக் குடிநீரிட்டு, சுரம், கழிச்சல், சீதக் கழிச்சல் இவைகளுக்கும் கொடுக்கலாம்.

இப்பட்டையைத் தூள் செய்து புண்களின்மீது போட, அவைகள் குணமாகும்.

இம்மரத்திலிருந்து வடித்தெடுக்கும் கறுநிற எண்ணெய், புண், கரப்பான வெடிப்பு முதலியவைகளுக்கு மேல் பூசப் போம்.

கட்டையைப் பால் விட்டு உரைத்துக் கொதிப்பித்துத் தலையில் அப்பி வைக்க, மயக்கம், கிறுகிறுப்பு, தூக்கமின்மை விலகி, நல்ல தூக்கம் உண்டாகும்.

இக்கட்டையின் பொடியோடு, சுக்கு, பொட்டிலுப்புச் சேர்த்து நீர் விட்டுக் குழைத்து, வீக்கங்களுக்குப் போட, வீக்கங் கரையும்.

தலைநோய், தலைபாரங்களை விலக்கக்கூடிய எண்ணெய் முறை பலவற்றிலும், இது சேரும்.

மணத்தை உண்டாக்க இதைப் புகைக்கலாம்.

---

### 344. சரளதேவதாரு—Sarala Devadaru.

ப - உ : கட்டை.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- மணமூட்டி-Aromatic.
- அழுகலகற்றி-தாதுக்ஷிணரோதி-Anti-Septic.
- நாற்றமகற்றி-பூதிகந்தநாசநி-Deodorant.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.

குணம் : இதன் கட்டையினால், தொண்டைக்கம்மல், ஐயநோய்கள், பல்நோய், இரைப்பு, ஐவகை வலி, காது நோய், நடுக்குவாயு, ஐயச்சுரம் முதலியன நீங்கும்.

சரளமெ னுந்தேவ தாருவினாற் கண்ணீர்
விரளமா குங்குபமும் வீடுந—தாளவெயிற்
றுமயஞ்சு வாசவலி யண்ணுதம் கம்பக்காற்
போமச் சுரத்துரமும் போம்.

வ - கு : இக்கட்டையை இடித்து ¼ முதல் ½ பலமெடுத்துக் குடிநீர் செய்து, காலை மாலை உட்கொண்டுவர, மேற்கண்ட நோய்கள் தணியும். பொடி செய்தும் கொடுக்கலாம்.

இதன் மெல்லிய பொடியைப் புகைத்து முகத்திற்படும்படி செய்ய ஐயநோய், பல்வலி, ஐவகைவலி தீரும்.

---

### 345. தேற்றான்—Thettan.

வே - பெ : இல்லம், கதகம், சில்லம், தேறு.

Strychnos Potatorum.

Eng : Clearing nut tree.

| | |
|---|---|
| Tel. Chilla–chettu | Sans. Kataka. |
| Mal. Tetta–maram | Hind. Nirmali. |
| Kan. Chali–mara | Pers. Chilbinj. |

இம்மரம் பர்மா, வங்காளம், தென் இந்தியா முதலியநாடுகளில் வளருகின்றது.

வளர்ச்சி—(Habit)

ப – உ : பழம், விதை.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு – கார்ப்பு.

பழம்

- வாந்தியுண்டாக்கி - வமநகாரி – Emotic.
- சீதபேதிப் போக்கி - Antidysentric.

### விதை.

செய்கை :
- உடற்றேற்றி—வ்யாதாபேதகாரி—**Alterative.**
- உரமாக்கி—பலகாரி—**Tonic.**
- பசி த்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—**Stomachic.**
- உள்ளழலாற்றி—அந்தாஸ்நிர்தகாரி—**Demulcent.**
- சிறு கோழையகற்றி—லகுகபஹரகாரி—**Mild Expectorant.**

### பழம்.

**குணம் :** இதனல், இரைப்பு, இருமல், முப்பிணி முதலியன போம் ஆனல், இது வாந்தியையும், கழிச்சலேயும் உண்டாக்கும்.

தேற்றான் கனி தனக்குச் சேயிழையே! வன்காசந்
தோற்று தொழியுஞ் சுவாசமும்போஞ்—சாற்றின்மிக
வாந்தி பெருகும் மலம் போம்முத் தோடத்தைச்
சேர்ந்தபிணிகளும் போஞ் செப்பு. (அ.கு.)

### தேற்றான்.

இல்லத்தின் காயத ளெவ்வித முன்னினு
மல்லொத்த ருத்திர வாயுநோய் தீருமே.

(பொ-ள்.) தேற்றான் பழத்தோலே எவ்விதமாகப் புசிக்கினும், ருத்திரவாயு நீங்கும்.

### தேத்தான்.

இல்லா மலக மிரண்டு மயின்றானே
யில்லா மலக மிருக்குமே—இல்லாமல்
வாழைக் கனியும் வடையு மிழுதுமுண்பான்
வாழைக் கனியுன்வைத் தவன் (தே—யமக வெண்பா.)

(பொ-ள்.) தேத்தான் வேர், விரை, பட்டை, இலே, கனி, காய் இவைகளையும், மெல்லி மடத்தின் வேர், விரை, பட்டை, ஈர்க்கு, காய், கனி, வற்றல் இவைகளையும் கற்ற முறையின்படி ஊறுகாய், துவையல், குடிநீர், முதலியவைகளாகச் செய்து, தக்க பத்தியத்துடன் வழங்கினல், பல்லே, சூலேவலி, மேக வுட்டணம், பாண்டு பெருவயிறு, மூலம், பெரும்பாடு, சோகை, மூர்ச்சை, வாயு, தனுர்வாயு முதலிய பிணிகள் நீங்கும்.

### விதை.

விதையினல் வெள்ளே, வெட்டை, உட்சூடு மிகுபசி, வயிற்றுக்கடுப்பு, சிறுநீர் எரிச்சல், புண் ஆகியவை நீங்கும். மந்தம் உண்டாகும். இது, கண்ணுக்கு நன்மருந்தாகும்.

கூற்றென் றுரைக்குவிழிக் கோமளமே! எப்போதும்
ஊற்றும் பிரமியமும் உட்புண்ணும்—ஆற்றவிலால்
வெட்டை அகக்கடுப்பும் வீறி வரிற்றேற்றாங்
கொட்டைதனே நீயெடுத்துக்கொள்.
தேற்றும் விதையதுதான் தீபனத்தைப் போக்குமனல்
ஆற்றுமிரு கண்ணுக் கருமருந்தாம்—கூற்று
யிருத்துங் கிரிச்சரத்தை எங்குமிலா தோட்டுங்
குருத்துவ முண் டாக்குங் குறி. (அ.கு.(

**வ – கு :** கொட்டையைப் பசுவின்பாலில் ஒரு நாழிகை ஊறப்போட்டு நீரில் கழுவி உலர்த்திக்கொள்ளவும்; அதன் எடைக்கு நாலு பங்கு சிறு கீரைச் சாற்றை விட்டு அரைப் பாகம் சுண்ட எரித்து, நீரில் கழுவி எடுக்கத்

தூய்மையாம் இதனைப் பொடித்துத்தக்க அளவில் (1) 325—620 மி.கி. அளவு) கொள்ள சீதக்கழிச்சல், உடலில் உண்டாம் குத்தல், வலி முதலியவை போம். உடற்கு வன்மை உண்டாகும்; ஆண்மை பெறும். இதனால் செய்யும் இலேகியம் செய்முறையைச் சித்தர் உரை விளக்கத்தில் காண்க.

உலர்ந்த பழத்தின் பொடி 325—455 மி.கி. வரை கொடுத்துவர, சீதக்கழிச்சலை நிறுத்தும்.

பழத்தின் ஓட்டைப் பொடித்து அல்லது குடிநீர் செய்து, சீதக்கழிச்சல், இருமல், நீரிழிவு ஆகியவற்றிற்கு உரிய மருந்துகளிற் சேர்த்துக் கொடுக்க நன்மை தரும்.

## விதை.

இதைத் தண்ணீரில் உரைத்துக் கரைத்தால், அத்தண்ணீர் தெளிந்து நிற்கும்.

இதைப் பொடித்து பாலிற்கலந்து உள்ளுக்குக் கொடுக்க, நீர்ச்சுருக்கு, வெட்டை முதலியன தீரும். நீரிழிவிற்கும் கொடுக்கலாம்.

இத்துடன் கருப்பூரஞ் சேர்த்துத் தேன் விட்டு அரைத்து, மெழுகாகச் செய்து கண்ணிற் போட்டுவர, கண்ணிற் பீளை தள்ளல், நீர் வடிதல் ஆகியவை போம்.

இத்துடன் இந்துப்பைச் சேர்த்தரைத்துக் கண்ணிலிட, கண் சிவத்தல் நீங்கும்.

இதன் பொடியைத் தேனிற் கலந்து கட்டிகளின்மீது பூசிவர, கட்டிகள் சீக்கிரம் பழுத்து உடையும். நீரிற் கலந்து தினமிருவேளை உட்கொண்டு வர, மார்புச்சளி, கோழைக்கட்டு இளகி வெளிப்படும்.

சிறிய அளவில் குழந்தைகளுக்குக் கொடுத்து வரலாம்.
"தேற்றுங் கொட்டையிட்டுத் தேற்று மைந்தரை" என்னும் மேற்கோளா லறிக.

தேற்றான் விதை 170 கிராம் திரிகடுகு, திரிபலை, சிற்றரத்தை, சீரகம் வகைக்குப் 17 கிராம் எடுத்துப் பொடியாக்கி, அத்துடன் சர்க்கரை 136 கிராம், ஆவின்பால் 1400 மி.லி. கரைத்துப் பாகு காய்ச்சி, மேற்படி பொடிகளையும் ஆவின் நெய் ஒரு படியையும் கலந்து, நன்றாகக் கிண்டிக் கீழ் இறக்கி வைத்துக்கொண்டு, தேன் 700 மி.லி. விட்டுக் கிளறி எடுத்து, ஒரு கொட்டைப் பாக்கு அளவு காலை மாலை இரு வேளையாக, நாகபற்பத்துடன் இருபது நாள் உட்கொண்டு வர, இளைப்பு நோய், இருமல், எலும்புச் சுரம் முதலியன போம். உடற்கு ஊட்டம் உண்டாகும். ஆண்மை பெருகும்.

### தேற்றான் விதை குடிநீர்.

தேற்றான் விரைகடுக்காய் செப்பரிய வாவாரை
யேற்ற விளாம்பிசினோ டித்தனையுங்—கோற்றொடியாய்
பங்கா யறுகாற் பசுவின்மோ ரிற்பருகப்
பொங்கி வரு நீரிழிவு போம்.

(பொ - ள்.) தேற்றான் விதை, கடுக்காய், ஆவாரை, விளாம்பிசின் இவை நான்கையும் ஓரெடையாக எடுத்து, பசுவின் மோரில் கலந்து ஒரு நாளைக்கு ஆறு முறை பருகிவர நீரிழிவு நீங்கும்.

---

## 346. தொட்டாற்சுணுங்கி—Thottar-chunungi.

**வே - பெ**: தொட்டால்வாடி, தொட்டாற்சுணங்கி, தொட்டாற்சுருங்கி இலச்சகி.

**Mimosa pudica.**

Eng. Semsitive or humble plant.

| | |
|---|---|
| Tel. Attapatti-chettu | Sans. Namaskari. |
| Mal. Thindar-mani | |
| Kan. Nachike-gida | Hind. Lajalu. |

இப்பூண்டு, இந்தியாவின் வெப்ப நாடுகளில் கிடைக்கின்றது.

ப - உ : இலை, வேர்.

**சுவை** - இனிப்பு, துவர்ப்பு, கைப்பு ; **தன்மை** - வெப்பம் ; **பிரிவு** கார்ட்பு.

செய்கை :

**இலை.**

உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - **Alterative.**

உரமாக்கி - பலகாரி - **Tonic.**

**வேர்.**

காமம்பெருக்கி - காமவர்த்தநி - **Aphrodisiac.**

**குணம்** : இது நீரிழிவை நீக்கும். பெண்களைத் தன் வழிப்படுத்தும். உடலில் ஓடுவது போல் ஆங்காங்குக் கழலைப் போல் கட்டி நோயைக் கொடுப்பதான ஓடு வாயு என்னும் நோயைப் போக்கும்.

மேகநீ ரைத்தடுக்கு மேதினியிற் பெண்வசியம்
ஆகவுன் னிலகும் அதுவன்றி—தேகமிடை
கட்டாகக் கட்டுகின்ற காலைத் துரத்திவிடும்
தொட்டாற் சுருங்கியது சொல்.

**வ - கு** : இலைச்சாற்றைச் சிலைப்புண்களிற் பாய்ச்சிக் கட்டிவரப்போம்.

இதன் இரசத்தைக் குதிரை நீருடன் ஓர் அளவாகச் சேர்த்து, கண்ணிலிட்டுவர, படலம் நீங்கும்.

இலையை நீரிற் காய்ச்சி, இடுப்பு நோய்க்கும், குண்டிக்காய் வலிக்கும் ஒறறடமிடத்தணியும்.

இலையையும் வேரையும் உலர்த்திப் பொடித்து, பாலில் 4—8 கிராம் எடை சேர்த்துக் கொடுக்க நீரிழிவு நீங்கும்.

---

## 347. நங்கை—Nankai.

**சிறியாநங்கை—Chiriya—Nankai.**

Polygala Grinersis.

Eng. Milk wort.

இது தென்னிந்தியாவில் வளரும் ஒரு பூண்டு ; இது **சிறியாநங்கை, பெரியாநங்கை** என இருவகைப்படும்.

ப-உ : பூண்டு.

சுவை —கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை : உரமாக்கி-பலகாரி..Tonic
உடற்றேற்றி-வ்யதாபேதகாரி—Alterative

குணம் : இஃது உடற்கு வலிவைத்தரும், பெண்களைத் தன்வசப் படுத்தும் ; உடற்கு அழகைத்தரும் ; வெங்காரத்தை அடலையாக்கும்.

சிறியாநங் கைத்தழையைச் சேவித்த பேரைப்
பிரியார் மடந்தையர்கள் பின்னும்—அறியதில்
பங்கணமும் நீறும் தனியழகு முண்டாகும்
திங்கள்முக மாதே ! தெளி. (அ.கு.)

வ-கு : இதன் இலையை அரைத்து ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்துப் பாலுடன் கலந்து காலையில் உட்கொள்ள, உடல் வலுக்கும்., இவர்களைப் பெண்கள் இச்சைகொள்வர்.

இலையை உலர்த்திப் பொடித்து, அவ்வளவு சருக்கரை கூட்டி காலை மாலை இருவேளையும் 2 முதல் 4 கிராம் எடை உட்கொண்டு வர, உடல் வலுக்கும் ; அழகு பெறும். பாம்புக்கடிக்கு, இதன் இலையைக்கைப்புச் சுவை தோன்றுமட்டும் தின்னும்படி கொடுத்துவர, கடி நஞ்சு நீங்கும்.

இதன் சாற்றில் சிறு கண் நாகத்தை உருக்கி உருக்கிச் சாய்த்து வர, அதன் சீறல் அடங்கி, கண்ணடைந்து கட்டும். அவ்வாறே சீறியெழும் நல்ல பாம்பும், இதனைக்காணின், அடங்கும். ஆதலால், "சிறியா நங்கையைக் கண்டவுடன் சீறிய நாகங் கட்டழியும்" என்கிற முதுமொழியும் வழங்கும்.

---

## பெரியாநங்கை—Peria–Nankai.

### Polygala Elongata.

இது தென் இந்தியாவில் கிடைக்கும் பூண்டு.

ப-உ : பூண்டு.

சுவை—கைப்பு, வீரியம்—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

: மலமிளக்கி-லகுவரேசநி – Laxative
: பித்தமகற்றி—Anti·bilious.

பண்பு : இதனால் அழல்நோய் போம். கழிச்சல் உண்டாகும். இதைக் கொண்டு பற்பங்கள் செய்யலாம்.

பெரியாநங் கைத்தழைக்குப் பித்தமென்ப தெல்லாந்
தெரியாம லோடுமிது திண்ணம்—பிரியா
மலமறுக்கும் பற்பவகை வைப்பதற்கு மாகுஞ்
சிலைநுதலே • நன்ருய்த் தெரி. (அ.கு.)

வ-கு : இதனிலையை அரைத்து 4½ கிராம் எடை உட்கொள்ள அழல் நோய்கள் தணியும். வயிறு கொட்டும்.

இதன் சாற்றால் பல பற்பங்கள் செய்யலாம்.

### 4 . நஞ்சறுப்பான் —Nancharuppan

வே-பெ : நஞ்சுமுறித்தான், கொண்டைச்சாணி, கொடிப்பாலை

Tylophora Indica.

இது ஒருபூண்டு.

ப-உ : பூண்டு.

சுவை—கைப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :** நச்சரி-விஷநாசரீ-Antidote

**பண்பு** : இப்பூண்டினுல், எல்லா நஞ்சு வகைகளும் போம்.

தொடுநஞ்சு நாவாரத் துய்க்குநஞ்சு மற்ருே
ரிடுநஞ்சுந் தாவரநஞ் சேறிப்—படுநஞ்சுங்
கூண்டுடனே காதோ குயின்மொழியாய் நஞ்சறுப்பான்
பூண்டுதனே நீயெடுக்கும் போது. (அ.கு.)

பாம்புக்கடி, இடுமருந்து, வெள்ளை, எட்டி முதலியவைகளை உண்பதால் உண்டாகும் நஞ்சு வகைகள் யாவும் போக இதன் குடிநீரைக் கொள்க.

---

### 349. நத்தைச்சூரி—Naththai-churi.

வே–பெ. கடுகம், குழிமிட்டான், சூரி, தாருணி, தொலியாகரம்பை, நத்தைச் சுண்டி.

Spermacose Hispidah.

Eng. Shaggy buttonweed.

| | |
|---|---|
| Tel. Madana-chettu | Sans. Madan Ghanta |
| Mal. Thartavel | Hind. Madana Ghanti |

இது பூண்டு வகை : இதன் வேர் நன்னுரி வேரைப்போலிருக்கும்.

ப-உ : விதை, வேர்.

சுவை : இனிப்பு, துவர்ப்பு, தண்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

**வேர்**

செய்கை : உடற்றேற்றி—வ்யாதாபேதகாரி—Alterative.
உரமாக்கி—பலகாரி—Tonic.

**விதை**

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Cooling.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demuleelnt.

**குணம்** : விதையினுல் பெருங்கழிச்சல், சீதபேதி இவை நீங்கும். வேர் உடலைத் தேற்றும்.

வ-கு. விதையை இலேகியமாகச் செய்து 2—4 கிராம் எடை வீதம் காலை மாலை இரு வேளையும் சாப்பிட்டுவர, கழிச்சல் வகைப் போம். விதையைக் காப்பிக்குப் பதிலாகப் பயன்படுத்தலாம். வேரை நன்னாரி வேரைப் போன்று வழங்கலாம்.

**நத்தைச் சூரித் தைலம்.**

ஓடுநத்தைச் சூரி யுருவிவேர் வன்னிவேர்
நாடுவே லிப்பருத்தி நல்லவேர்—கூடுகின்ற
தூதுவளை வேருந் துலங்குவிளாப் பாகல்வேர்
ஈதெல்லாம் வேர்ப்பட்டை யேறு.

ஏறும்வேப் பம்பட்டை யேற்றகடுக் காய்மிளகும்
நாலும்வெள் ளுள்ளியுட ளுட்டியே—கூறும்
வசம்புடனே திப்பிலியும் வார்ந்தகுப்பை மேனி
கசங்காத துத்திவேர் காண்.

காணு மருந்தெல்லாங் கல்வத்தி லேயரைத்துப்
பூணுநல் லெண்ணெயிட்டுப் பூண்டெரித்து—வேணுமென
உள்ளருந்தி மேற்பூச வோடுமெய் யின்சுரமுங்
கள்ளமுள்ள சன்னி கழன்று.

(பொ-ள்.) நத்தைச்சூரி, நாயுருவி வேர், வன்னிவேர், உத்தாமணிவேர், தூதுளை வேர், விளாவேர், பாகல் வேர், வேப்பம்பட்டை, கடுக்காய், மிளகு, வெள்ளுள்ளி, வசம்பு, திப்பிலி, குப்பைமேனி, துத்திவேர் இவற்றை ஒரே அளவில் சேர்த்துக் கலவத்தில் இட்டு அரைத்து, இதை நல்லெண்ணெயி லிட்டுக் காய்ச்சி, உள்ளுக்கு உண்டும், மேலுக்குப் பூசியும் வரின், காய்ச்சல், முப்பிணி முதலியன விலகும்.

---

## 350. நந்தியாவட்டம்—Nanthiyavattam.

வே-பெ: நந்திபத்திரி, நந்தியாவர்த்தம், பட்டிடை, வலம்புரி, சுயோதனன் மாலை.

**Tabernoe montana Coronaria**

**Eng.** East Indian Rose-bay Ceylon-Jasmine.

| | |
|---|---|
| **Tel.** Nandivardhanamu | **Kan.** Maddarasagida |
| | **Sans.** Nandivraksha |
| **Mal.** Nandiyavertam | **Hind.** Chandni |

இது பெருஞ்செடி வகுப்பைச் சேர்ந்தது. பூக்கள் வெண்மையாய் ஒற்றை அல்லது இரட்டையாயிருக்கும். ஒற்றடுக்குப் பூவே சிறந்தது. இது பாலுள்ள செடி.

ப-உ : பால், பூ, வேர்.

**பூ.**

சுவை : கைப்பு, தன்மை—தட்பம், பிரிவு—கார்ப்பு.
பால், வேர்.
கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**வேர்.**

| | |
|---|---|
| செய்கை : | புழுக்கொல்லி க்ருமிநாசநி—Anthelmintic |
| | தோற்றுயரடக்கி-சர்மவேதநாசாசாந்தநி Local Anodyne |
| | தடிப்புண்டாக்கி-பால்—Arritent |

**நந்தியா வட்டம்.**

நேத்திர வாயுகமழ் நேத்திரப்புண் வெட்டருகல்
நேத்திரங்க பாலசன்னி நீசவினைக்—கோத்திரங்கள்
மாள நொருக்குதலால் வாகடர்கைக் கேற்றவச்ர
வாளாஞ் சுயோதனனுர் மாலே. (தேரன் வெண்பா)

**பூ.**

**குணம் :** இதனல், கண், காசம், படலம், கரும்பாவை, மண்டைக்குத்தல் ஆகியவை போம்.

காசம் படலம் கரும்பாவை தோடமெனப்
பேசுவிழி நோய்கடமை பேர்ப்பதன்றி—ஓசை தரு
தந்திபோ லேதெறித்துச் சாருமண்டை நோயகற்றும்
நந்தியா வட்டப்பூ நன்று. (அ.கு.)

நந்தியாவட்டைப் பூவால், கண்களில் உண்டாகும் வினைகள் (நோய்கள்) யாவும் போம்.

**பால்.**

பாலில் எண்ணெய் விட்டு நன்ருய்க் கலந்து, நெற்றியில் தேய்க்கக் கண் வலி நீங்கும். வெட்டுக்காயங்களில் பாலைப் பூச, சீழ் பிடியாது. எளிதில் ஆறும்.

**பூ.**

**வ-கு.** பூவின் சாற்றைத் தனியாகவோ அல்லது எண்ணெய் கலந்தோ கண்ணில்விட கண்ணெரிச்சல் நீங்கும்.

**வேர்.**

வேரை வாயிலிட்டு மென்ருல் பல்வலி நீங்கும். வேரை, நீர் சிறிது விட்டரைத்து உள்ளுக்குக் கொடுக்க, வயிற்றுப்புழு சாகும்.

---

## 351. நரளை—Naralai

**வே.பெ. :** சுகம்பல், நறளை,

**Vitis lanata**

**Eng. Woolly Heart Vina.**

இது கொடியினம்; தென்னிந்தியாவிலெங்கும் கிடைக்கும். கிழங் குண்டு. இதில் சிறுநரளை, பெருநரளை, எனச் சில வகுப்புகள் உண்டு. யானைத் தடிப்பு என வேறொரு வகையுமுண்டு, இதற்குப் புளிநரளை, யானைத்தடிச்சல் என வேறு பெயர்களுமுண்டு.

**ப-உ :** இலை, கிழங்கு இவற்றின் பண்பு ஒன்றே.

**கிழங்கு.**

**சுவை**—புளிப்பு, துவர்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**இலை.**

| | |
|---|---|
| செய்கை | காரலுண்டாக்கி—Acrid |
| | துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent |

**குணம்:** இதன் இலை, பெண்கள் வயிற்றில் உருளுகின்ற குருதிக் குன்மத்தைப் போக்கும்.

இதன் கிழங்கானது, மேகம், சீறுகரப்பான், அழிபுண், முளைமூலம், இவற்றைப் போக்கும். அன்றியும், செம்மைக் களிம்பறத் தூய்மையாக்கும் என்றும், இலிங்கத்தைத் தூய்மையாக்கும் என்றும் தேரன் நூல் கூறும்.

நரளையிலை தன்குணங்கேள்! நாரியர் வயிற்றில்
உருளிரத்தக் குன்மம் ஒழிக்கும்—நரளைக்
கிழங்குக்கு மேகமொடு சீறு கரப்பான்
புழுங்குபுண் மூலமிவை போம்.

புளிநரளை யின்கிழங்கோ பொன்போலச் செம்பை
தெளிவாகச் சுத்தியது செய்யும்—வெளியான
மூல முளையறுக்கு முந்துசுவைக் சேதுவுமாம்
கோல மடமயிலே! கூறு. (அ.கு.)

**வ-கு:** இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, குருதிக்குன்மத்தைப் போக்கும்.

இதன் கிழங்கு இலிங்கத்தையும், செம்பையும் நன்றாகச் சுத்தி செய்யும்.

கிழங்கை உலர்த்திப் பொடித்து சருக்கரையுடன் கலந்து 2—4 கிராம் எடை வீதம் நோய்க்குத் தக்க நாளளவு உட்கொண்டுவர, மேகம், கரப்பான், அழிபுண், முளைமூலம் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

---

## 352. நரிவிளா-Narivila

**வே - பெ.:** நிலவிளா நெரிவிளா.

Limonla Assidicima

இது சிறிய படர்தற் செடி. தென்னிந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதற்குக் **குட்டிவிளா** என்று ஒரு பெயருமுண்டு.

**ப-உ:** இலை.

**சுவை**—சிறு கைப்பு, கார்ப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை:** வெப்பகற்றி——ஜ்வரஹரகாரி—Febrifuge.

**குணம்:** இதனால், அழல்குற்றமும், கண்சுரம், நாவறட்சி, புண்சுரம், தீக்குற்றம், மாறுவெள்ளையும் ஆகிய இவைகள் நீங்கும்.

அழன்றகண வேக மதிதாகந் தீருஞ்
சுழன்றுவரு பித்தந் தொலையும்—உழன்று
பொருநிலமே கத்துடனே புண்சுரமும் போகும்
அருநிலவி ளாவுக் கயர்ந்து. (அ.கு.)

**வ-கு:** இதன் இலையை வெந்நீரில் ஊறவைத்து, சுரம், நீர்வேட்கை ஆகிய இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இதன் இலையுடன், சிறிது கச்சோலம், எலரிசி, கஸ்தூரிமஞ்சள் சேர்த்தரைத்து, குழந்தைகளைக் குளிப்பாட்டும்பொழுது உடலில் பூசி நீரிட்டுக் கழுவிவர, தோலில் யாதொரு குற்றமுமின்றி அதற்கு மேணி தரும். சொறி, சிரங்கு உண்டாகா.

---

## 353. நறுவிலி—Naruvili.

வே.பெ. : நறுவலி, நறுவிளி, நறுவுளி, சிதம்.

Cordia angustifolia

Eng. Sebestem plum.

| | |
|---|---|
| Tel. { Botuku / Nakkaeru | Sans. Sleshmataka |
| | Arab. Dibaka |
| Mal. Naruviri | |
| Kan. Mannadike | Hind. Lasora |

இஃது இந்தியா முழுவதும் வளருகிறதெனினும், வங்காளத்தில் மிகுதியாகப் பயிரிடப்பட்டு வருகிறது.

இம் மரம் மிகு செழிப்பாய் வளர்ந்துநிழல் கொடுக்கக் கூடியது. பட்டை சாம்பல் நிறமாயும், பல வெடிப்புகளுள்ளதாயுமிருக்கும். குலை குலையாய்க் காய்த்துத் தொங்கும். இம்மரத்தின் பழங்களின் சுளையானது குழ குழப்பாய் இருக்கும். இதில் சிறு நறுவிலி, பெருநறுவிலி என்று இரு வகை உண்டு. ஆயினும் செய்கையும் குணமும் ஒன்றேயாகும்.

ப-உ : இலை, பழம், கொட்டை, பட்டை.

இலை, பட்டை.

சுவை—துவர்ப்பு, சிறுகைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

பழம்.

சுவை—சிறு இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை :
- இலை பட்டை
  - துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
  - உரமாக்கி—பலகாரி—Tonic.
- பழம்.
  - உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

குணம் : இதனிலையினல் இரைப்பு நீங்கும். வேருக்கு எலும்புருக்கி போம். பழத்துக்குக் குருதியழல் நோயும் வெள்ளையும் போம்.

நறுவலியி லைக்கிரைப்பு நாசமவ் வேர்க்கு<br>
மறுவில் எலும்புருக்கி மாறும்—நறுவலியின்<br>
தன்பழமி ரத்தபித்தஞ் சார்மேக முந்தீர்க்கும்<br>
இன்புறயா வர்க்குமி சை.

(அ.கு.)

வ-கு : இதன் இலையைப் பொடி செய்தாவது அல்லது குடி நீரிட்டாவது சாப்பிட, இரைப்பு நீங்கும்.

இலையைப் பிழிந்து சாறெடுத்து முகததல காணும்பரு அல்லது கொப்புளங்களுக்குத் தடவப் போம்.

பழத்தை ஊறுகாய் செய்து சாப்பிடலாம். இதை இருமலுக்குக் கொடுத்துவர, இருமல் தீரும்.இது நெஞ்சில் கோழையை அகற்றுவதுடன், ஆண்மையைப் பெருக்கும்

கொட்டையைப் பொடித்து, எண்ணெயில் குழைத்துப் படை, தேமலுக்கு பூசலாம்.

கொட்டையைக் குடிநீரிட்டு வாய் கொப்புளித்துவர, பல்லரணை,பல்லசைவு, ஈறுகட்டு இவைகள் நீங்கும்.

பட்டையை இடித்துச் சாறு பிழிந்து, தேங்காய்ப் பாலில் கலக்கி குடிக்க கடினமான வயிற்றுவலி போம்.

---

## 354. நன்னாரி—Nannari.

வே - பெ : அங்காரிமூலி, நறுநெட்டி, பாதாளமூலி, கோபாகு, சாரிபம், பாற்கொடி நீறுண்டி, கானனுசாரி, கிருஷ்ணவல்லி, சாரியம்.

**Hemidesmus indicus**

Eng. Indian Sarasaparilla.

| | |
|---|---|
| Tel. Sugandhi | Sans. Sariba |
| Mal. Nannari | Hind. Magrabu |
| Kan. Sugandha-paladà | Duk. Nàt-ka-ushbah |

இஃது இந்தியா முழுவதும் தானகவே பயிராகின்ற ஒரு கொடி, இதில் பாலுண்டு. இதன் வேரின் மேற்புறம் கருமையாகவும், உட்புறம் வெண்மையாகவும், நல்ல மணமாகவும், சிறு கசப்பாகவும் இருக்கும். இதை உலர வைத்துக் கடைகளில் விற்பார்கள்.

ப - உ : வேர்.

**சுவை - இனிப்பு-சிறுகைப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.**

செய்கை :
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி —Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- வியர்வைப் பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.

**குணம் :** இதனுல், அழல் நோய் வண்டுகடி போம். மேலும், நீரேற்றம், நீர்வேட்கை, வாய்நீர்ச்சுரப்பி, புணர்ச்சியின் சூடு, நீரிழிவு, கிரந்தி, சுரவேட்கை இவை தணியும்.

சலதோடம் பித்தமதி தாகம் உழலை
சலமேறு சீதமின்னுர் தஞ்சு—டுலகமதிற்
சொன்னமது மேகம் புண் சுரமிவையெ லாமொழிக்கும்
மென்மதுர நன்னாரி வேர். (தே.கு.)

**நன்னாரி.**

அங்கா ரிகைமூலி யர்ச்சியத்தோ டுண்ணநித்தி
யங்கா ரிகைமூலி யாளுமே—யங்காரி
பற்றுது. (தே - ய - வெ.)

(பொ - ள்.) நன்னாரியின் வேர், இலை, கொடி, காய், பூ இவைகளை நெய்யுடனே வதக்கி வறுத்துக்கொண்டு, சிறுபுளி, மிளகு, லவணம் இட்டு, துவையல் வட்கம் முதலியவைகளாய்ப் பாகம் செய்து ஒரு மண்டலம் வரைக்கும் பத்தியத்துடன் உட்கொள்ள, பித்தமேக அழல் குற்றத்தால் வந்த வெள்ளை அக்குள் நாற்றம், வியர்வை நாற்றம் முதலியவைகள் அகலும்.

வ - கு : நன்னாரிவேரை வெந்நீரில் ஊறவிட்டு 30 மி.லி. வீதம், தினம் 2—3 தடவை கொடுத்துவர, நாட்பட்ட வளிநோய், மேகப்புடை, செரியாமை இவை நீங்கும்.

இக் குடிநீரைச் சூடாகவே சாப்பிட ஆண்மை பெருகும்.

இத்துடன் பாலும் சருக்கரையும் கூட்டிக் குழந்தைகளுக்குக் கொடுக்க லாம்.

**நன்னாரி.**

காமவல் லியனடிக் கறியுணப் பித்தமா
நேமமே கப்பிணி நிலேகுலேந் தகலுமே. (தே. கா.)

(பொ - ள்.) நன்னாரிவேரை உணவு முறையாய்ச் சமையல் செய்து உண்ண, தீ (பித்த) மேகம் முதலியன ஒழிந்து போகும்.

வேரை உலர்த்திப் பொடித்துப் பசுவின் பால் சேர்த்து, நீர்ச்சுருக்கு முதலிய வெப்ப நோய்களுக்குக் கொடுக்கலாம். மேற்படி நோய்களுக்கு, நன்னாரிவேர் சீரகம் சேர்த்துக் குடிநீரிட்டும் குடிக்கலாம்.

நன்னாரி வேரை இடித்து 136 கிராம் எடை எடுத்து, அத்துடன் 700 மி.லி. வெந்நீர் விட்டு, நாலு மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அதில் 952 கிராம் சீனிச் சருக்கரை சேர்த்து, சிறு தீயிட்டு எரித்து இறக்கி, வேளைக்கு 1—2 தேக்கரண்டி வீதம் நீரில் கலந்து உட்கொள்ள, வெப்பம் தணியும். நன்னாரியை வாழை இலேயில் சுற்றிக் கட்டி, கும்பிச் சாம்பலுள் புதைத்து வைத்து, எடுத்து நரம்பு நீக்கி, அத்துடன் வெல்லம், சீரகம் சேர்த்தரைத்துக் கொடுக்க, நீர் எரிச்சல் நீங்கும்.

வேரின் இரசத்தைக் கண்ணில்விட, கண்ணுக்குக் குளிர்ச்சியைத் தரும்.

நன்னாரி, அதிமதுரம், கருநெய்தல், கோட்டம், வசம்பு இவற்றைக் காடி விட்டரைத்து, எண்ணெய் கலந்து மேல் பூசிவர, ஒற்றைத் தலேவலி நீங்கும்.

இதைக் கற்றாழைச் சோற்றுடன் கலந்துண்ண, வண்டுகடி போம்.

**மருத்துவப் பரிசிலனே (Clinical Trial) :—**

---

## 355, நாகதாளி Nagathali.

**வே. பெ : சப்பாத்துக்கள்ளி.**

Opuntia dillenii.

**Eng.** The Prickly-pear.

| | |
|---|---|
| **Tel.** Nagajamudu | **Sans.** Vidhara-vishvasaraka |
| **Mal.** Nagatali | **Hind.** Nagphana |
| **Kan.** Shivaram-kalli | **Duk.** Chappal-sund. |

இஃது நம் நாடு முழுதும் தானகவே வளருகிற செடி. இதில், மிகக் கூர்மையான முட்கள் உண்டு. இது கள்ளி வருக்கத்தைச் சேர்ந்தது. இதன் பூ மஞ்சள் செந்நிறமாயும், இதன் காய் செந்நிறம் பொருந்திய தாயுமிருக்கும்.

ப-உ: இலை, பழம்

சுவை : இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.

குணம் - இது, நஞ்சுகள், வளிக் குற்றத்தால் பிறந்த நோய்கள் முதலியவற்றைப் போக்கும்.

செந்துவி டங்கள் செடிவிடங்க ளைத்தொலைக்கும்
நொந்திடச்செய் வாதத்தை நூறுங்காண்—முந்தவெகு
வேகமா லிக்குமடி வேல்விழிமாதே! பணைத்த
நாகதா ளிக்குணத்தை நாடு.

(அ - கு.)

வ - கு : இலையிலுள்ள முட்களைச் சீவிப் போட்டுச் சிதைத்துப் புண்களின் மீது வைத்துக் கட்ட, புண்கள் உலரும். இதையே கண் நோய்களுக்கும் வைத்துக் கட்டலாம்.

பழத்தை வேகவைத்துப் பிழிந்த சாற்றை அல்லது பழரசத்தை மணப்பாகு செய்து, ஒரு தேக்கரண்டி வீதம் நாளொன்றுக்கு 2 அல்லது 3 தடவைக் கொடுத்துவர, இருமல் நோய்களும், வெள்ளையும் தணியும். ஆனால் சிறு நீர் சற்றுச் சிவந்து இழியும்.

---

## 356. நாகமல்லி Naga-mali.

Rhinacathus Commumin

மே–பெ: நாகமல்லிகை, அனிச்சை.

Fam : Acanthaceae.

| | |
|---|---|
| Tel. Negamalle | |
| Mal. Nagamalli | Sans. Yuthikapurni |
| Kan. Nagamallige | Hind. Palak-juhi |

இந்தியாவின் எல்லா விடங்களிலும் இச் செடி பயிரிடப்பட்டு வருகிறது.

ப-உ: இலை, வேர்.

சுவை - கைப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- நுட்புழுக்கொல்லி—க்ருமிநாசினி—Germicide
- காமபெருக்கி–காமவர்த்தனி–Aphrodisiac
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Srimulant
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Aerative

பண்பு : இதன் வேரால், ஒழியாத தினவும், நெருங்கிய புடைகளும் நீங்கும். நுண்புழுக்கள் சாகும்.

சீராரு நாகமல்லி கைச்சிவையைக் கண்டக்காற்
றீரா நமைச்சல் செறிபுடைக—ணீராருஞ்
சன்னம் புழுச்சங்கந் தங்காவாஞ் சரம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

வ - கு : இதன் இலையை மென்று தின்ன, பாம்பு விடம் நீங்கும்.

இலை அல்லது வேரை அரைத்து, எலுமிச்சம்பழச் சாற்றுடன் கலந்து, மேற்கண்ட நோய்களுக்குப் பூசலாம்.

வேரைப் பாலில் வேகவைத்துச் சாப்பிட ஆண்மை பெருகும்.

---

## நாணல் Nanal.

**Saccharum spontaneum,**

**Eng : Thatch grass.**

| | |
|---|---|
| Tel. Kikkisa | Kan. Baroo |
| Mal. Nanal-pullu | Sans. Kakekshu |
| | Hind. Kasa |

இது புல்லினத்தைச் சேர்ந்தது ; ஆறு, குளம், குட்டை முதலிய நீர் நிலை ஓரங்களில் நெருக்கமாய் உயர்ந்து வளர்ந்து, காற்றினால் ஆடி அசைந்து கொண்டிருக்கும். இதில், பெருநாணல், சிறுநாணல் என இரு வகை உண்டு.

ப - உ : அடித்தண்டு (கரும்பு), வேர்.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

கரும்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant
- பித்தமடக்கி-பித்தசாந்தினி-Antipitta

வேர்

- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தனி-Diuretic
- பாறபெருக்கி-க்ஷீரவர்த்தநி-Galactagogue

கரும்பு.

பண்பு : இதன் சாற்றினால், வெறி நோய், வாந்தி, சுவையின்மை, வயிற்றிலெழு நோய், இரைப்பு, பாண்டு இவை நீங்கும். மிகுதியாகப் பருத்த உடல் மெலியும்.

வாயுபித்தம் வாந்திநீர் மாறும் அதிதூல
நோயு ளெழும் வயிற்றி னோய் கலங்கும்—ஓயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கும்
நாளுநா ணற்கரும்பி னால்.

(அ.கு.)

வ - கு: மேற்கண்ட நோய்கள் தீர, இதன் சாற்றைத் தக்க அளவில் கொடுக்கலாம்.

நாணல்.

நாணல் சாற்றாலும் குடிநீராலும் அழல் நோய் போம்.

---

## 356. நாபி Nabi.

வே-பெ : நாவி, நாபம், வசநாபி (பச்சைநாபி)—மருவிய குற்றத்தால் இப்பெயர்), வத்சநாபி, விடம், மருதம்

Aconitum ferox.

Eng : Indian aconite..

| | |
|---|---|
| Tel. Vatsanabhi | Sans. Vatsanabi |
| Mal. Vatsanabhi | |
| Kan. Vatsa-nabhi | Hind. Bachhnag |

இஃது, இமயமலையின் அடிவாரம் முதலிய நாடுகளில் பயிராகும் செடி. இதன் நிறத்தைப் பற்றி, இது நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவையாவன :

1. வெண்நாபி
2. செந்நாபி
3. நீலநாபி
4. கருநாபி

ப - உ : உலர்ந்த கிழங்கு.

**சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.**

**செய்கை :**
- வியர்வைப்பெருக்கி - ஸ்வேதகாரி - Diaphoretic.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- முறை வெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Anti-periodic.
- துயரடக்கி - வேதனுசாந்தனி - Anodyne.
- தாபகமற்றி - உக்ரரோகசமனகாரி - Anti-phlogistic.
- வெப்படக்கி - Antipyretic.
- மூர்ச்சையுண்டாக்கி - நித்ராகாரி - Narcotic.
- தாதுவெப்பகற்றி - சமனகாரி - Sedative.

**குணம் :** நாபியின் பொதுக்குணம்.

இது, கீழ்வாய்க் கடுப்பு, செரியாமை, ஐயப்பிணிகள், பெருநோய், குன்மம், தேள் நஞ்சு ஆகியவற்றைப் போக்கும்.

வாதவலி மந்தமறல் மாறுக் கபப்பிணிகள்
ஓதுகுட்டு குன்மந்தேள் ஓடுங்காண்—காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வனேகுழலே !
சுத்திசெய்த நாவியின்பேர் சொல். (அ.கு.)

### வெண்நாபி

இதற்குப் பெருநோய், காணுக்கடிநஞ்சு, சூலே, மார்பை வீங்கச் செய்கின்ற நோய்கள், குன்மம், சுரம் இவை தொலேயும்.

குட்டங் கடிசூலே கூடுபுரி வன்கிருமி
துட்டகுன்ம வாதந் தொலேயுங்காண்—வட்டமுலேப்
பெண்ணே ! சுரந்தணியும் பேருலகத் தார்பகைக்கும்
வெண்ணவி தன்னே விரும்பு. (அ.கு.)

### 2. செந்நாபி, வசநாபி, பச்சைநாபி

இது குறைநோய், நஞ்சு, முப்பிணி, குன்மம், எலும்பின் சூடு, சுரம் நீர் வேட்கை இவைகளே விலக்கும்.

கடியதொரு குட்டம் கனத்த விஷசந்நி
கொடியதொரு குன்மம் குலையும்—படியில்
தளிரத்தி வெப்புடனே தாகசுரம் தீரும்
வளர்பச்சை நாவிதனை வாழ்த்து. (அ.கு.)

### 3. நீலநாபி.

இதற்கு நாவொட்டிக் காய்ச்சல், நமுகிய ஈரல், புண், புழுநோய், வல்லைக்கட்டி, கவிசை தீரும்.

எண்ணுச் சுரம்போ மிறங்கும்பி லீகமறும்
புண்ணுறும் ஊறும் புழுவொழியும்—தண்ணரும்
வல்லை கவிசையென வையகத்தோர் சொல்லிடுநோய்
இல்லையொரு கார்நாவிக்கே. (அ.கு.)

### 4. கருநாபி.

இதனுல், சுரம், முப்பிணி, தலைநோய், எரிப்புழு, பாம்புகடி, உள்புண், குறைநோய், தேள்நஞ்சு நீங்கும்.

காய்ச்சல் தலைநோய் கனத்தசந்நி பாதமெரி
பூச்சி விடக்கடியுட் புண்குட்டம்—கூச்சலிடுங்
காத்திரத்தே ளுங்குடிபோம் காரளகப் பைங்கொடியே !
சூத்திரநா விக்குத் துவண்டு. (அ.கு.)

வ - கு : இது, முப்பிணிக்காகச் செய்யும் மாத்திரைகளில், ஒரு முக்கிய ன சரக்காய்ச் சேர்ந்து மேற்கூறிய நோய்களை விலக்கும்.

நாபி, கெந்தி, மிளகு, லிங்கம், வெண்காரம் இவை வகைக்கு 4 ராம் எடை, திப்பிலி 8 கிராம் எடை இவற்றை ஊமத்தை இலைச்சாறு விட்டு அரைத்து, மிளகு அளவு மாத்திரைகளாகச் செய்து, ஒன்று அல்லது இரண்டு மாத்திரை வீதம் கொடுக்கலாம். பேதியாக வேண்டுமேல், சிறிது வாளம் சேர்த்துக்கொள்க. அதனுல் முப்பிணியும் போம்.

நாபி, சாதிபத்திரி, மிளகு, இலிங்கம், இலவங்கம் அல்லது கருவாப் பட்டை வகைக்கு 4 கிராம், அம்பர் 2 கிராம், கத்தூரி 1 கிராம் எடை எடுத்து, இவற்றை அரைத்து, மிளகு அளவு மாத்திரை செய்து, வேளைக்கு ஒரு மாத்திரை வீதம், இருமல் இரைப்பு முதலிய நோய்களுக்கு வழங்க லாம்.

நாபி 8 கிராம் எடை, அக்கராகாரம் 8 கிராம் எடை, இந்துப்பு 20 கிராம் எடை இவற்றைத் துளசிச் சாற்று ல் மெழுகுபோல் அரைத்து, கை கால் வீக்கங்களுக்குப் பூசலாம்.

நாபி, அபின் இரண்டும் ஓரெடை எடுத்துச் சாராயம் விட்டு, மெழுகு போல அரைத்து, நரம்புச்சிலந்திக்கு வைத்துக்கட்ட புழு வெளிப்படும்.

இதை குறைநோய், பாரிசவாயு முதலிய நோய்களுக்கும் வழங்குவ துண்டு.

---

## 359. நாயுருவி—Nayuruvi

வே பெ : அபமார்க்கி, காஞ்சரி, சனம், சிகிசிரம், கதிரி, கரமஞ்சரி, சிறுகடலாடி, சுவானம், அபாமார்க்கம், நாய்குருவி, கிருஷ்ணபன்னி சகரிகம், செகரிகம், கேசரிகம், கேசரீகம், கொட்டாவி, விட்டிறுக்கி, சேகவி, நாயரஞ்சி, மாமுநி

**Achyranthes aspera.**

**Eng : Rough Chaff or Prickly Chaff.**

**Tel. Uttareni**

**Mal. Kadalad**

**Kan. Uttaranee**

**Sans. Apamarga**

**Hind. Chir-chir**

இஃது இந்தியாவில் எங்கும் வளரக்கூடிய **பூண்டு. இதில் செந்** நாயுருவி என்றொரு வகையுமுள்ளது. இது "படருருக்கி" **என்றும்** வழங்கும்.

ப - உ : செடி.

சுவை - கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு- கார்ப்பு.

செய்கை :
- துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.
- முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி -Ant-per-odic.

குணம் : வேரினால் அழகுண்டாகும். இலை, கீழ்வாய்க் குருதிப்போக்கையும், கழிச்சல், ஐயநோய், வியர்வை, வெள்ளை இவைகளையும் போக்கும். அரிசி பசியைப் போக்கும். முழுச் செடி, பிள்ளை பெற்றவர்களுக்குண்டாம் அழுக்குத் தடையைப் போக்கும் ; வங்கத்தைச் சிந்தூரமாக்கும்.

மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கி யின்வேரால் வசிய முண்டாம்,
இலைமூல உதிரமந்தம் பேதிகபம் வியர்வுசந்தி யிறங்கு மேகம்
மலையேறும் படிபுரியு முள்ளரிசி பசிமாற்றும் வனச மூலம்
பலமாதர்க் குள்ளழுக்கை நீக்குவங்கச் சிந்தூரம் பண்ணுமாதோ
(தே.கு.)

## செந்நாயுருவி.

இதனால், வீக்கம், பாண்டு, காமாலை இவை நீங்கும். சூதகத்தைத் தடைசெய்யாது வழக்கப்படி உண்டாக்கும்'

ஓதமுறு சோபை யுயர்பாண்டு வைப்போக்குந்
தீதறுகா மாலைநோய் தீர்க்குமினூர்—சூதகநீர்
பொய்ப்புறுகா லத்தனைப் பொங்குவிக்குங் காரமொடு
கைப்புறுசெந் நாயுருவி காண். (அ.கு.)

குறிப்பு : இவ்விரு வகைகளிலும் செந்நாயுருவி சிறப்புடையது.

வ-கு : வேல் செடியைக் குடி நீரிட்டு19 மி.லி.—35 மி.லி. வரை யிலும் கொடுத்துவர, சிறுநீரைப் பெருக்கித் தள்ளும்.

வேர் ஊறல் நீர்—வயிற்று நோயிற்கு நன்று.
இலைச்சாறு, வயிற்றுவலி, சொறி இவைகளை நீக்கும்.

இலையை அரைத்து வெல்லமும் சேர்த்து அல்லது இலையுடன் மிளகு பூண்டு சேர்த்தரைத்து, சுரத்துக்குக் கொடுக்கலாம்.

இலையை நீர் விட்டரைத்துச் சிறு கடி நஞ்சுகளுக்குப் பூசலாம்.

இலைச் சாற்றை வெயிலில் வைத்து வற்றச்செய்து மெழு போலாக்கி அத்துடன் சிறிது அபின் சேர்த்துக் கொறுக்குப் புண்ணிற் போடப்போம்

வேர்ப் பொடியுடன் சிறிது மிளகு பொடியும், தேனும் சேர்த்துக் கொடுக்க இருமல் நீங்கும்.

வேர்ச்சாம்பல் 325 மி. கிராம் எடை வெல்லத்தில் கொடுக்க, எளிதில் பிரசவம் உண்டாகும்.

பச்சை வேரால் பல் துலக்கிவர, பல் அழுக்குகள் நீங்கி அழகுண்டாகும்.

நாயுருவிச் சாம்பல் தெளிநீர் 4000 கிராம் எடை, நாயுருவிச் சாம்பல் 250 கிராம் நலலெண்ணெய் சேர் இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். இத்தைலம் செவிடு, காதிற்சீழ் முதலிய வைகளை நீக்கும். மூக்கில் விட, மூக்கினின்று வடியும் குருதி போம்.

இச்சாம்பலினின்றும் மிக்க காரமான செயநீர் எடுக்கலாம். வங்கத்தை மடிக்கும் மூலிகைளில் இஃதும் ஒன்று.

நாயுருவி விதையை அரிசி கழுவிய நீருடன் உட்கொண்டு வந்தால் மூலம் நீங்கும்.

ஷ விதையைப் பாயசங்களில் சேர்த்து உட்கொள்ள, மூளை நோய்களை நீக்கும். மற்றும் இதனால் அடியிற்கண்ட பலன்களைப் பெறலாம்.

சோம்புகின்ற மண்டூரஞ் சுத்தபொடி நாயுருவிச்
சாம்பல் மிளகுபொடி தான்சரியாய்—தேம்பிடவே
இட்டமுடன் கூடி யிதனிற் கழஞ்சுகொள்ள
அட்டகுன்ம மோடு மலைந்து.

(பொ-ள்.) நாயுருவிச் சாம்பல், மண்டூரப்பொடி, மிளகு இம் மூன்றையும் ஒரு அளவாகக் கூட்டி ஒரு கழஞ்சளவு கொள்ள, எண்வகைக்குன்ம நோய்களும் போம்.

நாயுருவி முற்றினதாய் நறுக்கி மிக்க
    நற்பசுவின் கோமயத்திற் போட்டுப் பாண்டம்
வாயிலிட்டுப் பூப்புடத்திற் றயிலம் வாங்கி
    வைத்ததனை வெற்றிலையில் மென்று தின்ன
நோயிற்பெரு மந்தார சுவாச காசம்
    துனுக்கிருமல் ஈளைகண்டத் துடிப்பு நீங்கும்
காயமதைப் பலக்கவைக்குஞ் சித்தர் சொன்னார்
    கருணையிது தப்பாது கண்டு தேறே (யா. வை.)

முற்றிய நாயுருவியை நறுக்கிப் பசு நீரில் ஊறப்போட்டு உலர்த்தி, குழித்தைலம் வடித்து, அதில் ஒன்றிரண்டு துளி வெற்றிலையில் பூசிததின்ன, இருமல், ஈளை, இரைப்பு நோய்களைப் போக்கி உடற்கு ஊட்டந்தரும்.

## 360. நாவல்—Naval.

வே-பெ: நவ்வல், நம்பு, சம்பு, சாதவம், ஆருகதம், நேரேடு, நேரேடம், சாட்டுவலம், சாம்பல், சுரபிபத்திரை.

**Eugenia Jambolana,**

**Eng: Jambul.**

| | |
|---|---|
| **Tel.** Nerādu | **Sans.** Jambu |
| **Mal.** Gnaval | **Hin.** Jamuns |
| **Kan.** Neralu | **Duk.** Jamoon |

இம்மரம், நம நாடு முழுமையும் வளருகின்றது. இதில் வெள்ளை நாவல், கொடிநாவல் குழிநாவல், கருநாவல், சம்புநாவல் எனப் பல வகையுள்ளன.

ப-உ : எல்லாப்பொருளும்.

சுவை :—துவர்ப்பு. தன்மை-தட்பம், பிரிவு-கார்ப்பு.

பொது.

செய்கை : துவர்ப்பி–ஸங்கோசனகாரி–Astringent.
பழம்.
பசித்தீத்தூண்டி–ஜடராக்னிவர்த்தநி–Stomachic,
சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி–Diuretic.
உடலுரமாக்கி–Tonic.
சிறுநீர்க்கழிச்சல்.

பட்டை.

குணம் : பட்டையினால், வாயிற்பிறக்கும் நோய்கள், இருமல், பெரும்பாடு, ஈளை, குழந்தைகளுக்குண்டாகும் புள் முதலிய குற்றம் (தோடம்.),

ஆசியநோய் காசம் அசிர்க்கரஞ்சு வாசவினை
கேசமுறு பால கிரகநோய்—பேசரிய
மாவியுங்க லாஞ்சனமிவ் வன்பிணியெ லாமேகும்
நாவலுறு பட்டையத னால். (அ.கு.)

வேர்.

இதனால், வளிநோய்கள், கரப்பான், புண், நீரிழிவு, குருதிக் கழிச்சல் முதலியனவும், சுரமும் போம்.

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமொடு
ஓதமுறு நீரிழிவு முந்துரத்த—சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவலன் வேரதனை நாடு. (அ.கு.)

பழம்.

நாவல்பட்டை.

பட்டையினி லூட்டிப் படிகார மிந்துப்பு
எட்டிரட்டி யாகவரைத் துண்டைசெய்து—ரெட்டைப்
பிரமிரசந் தேனைப் பெரும்பாடு போகும்
வருடையுதி ரத்தைநா வல். (தேரன் வெண்பா.)

நாவற் பட்டைக்குக் குறும்பாட்டின் குருதியை விட்டு ஊறவைத்து எட்டுப்பங்கு கொண்டு, அத்துடன் படிகாரம் இந்துப்பு இரண்டு பங்கு கூட்டி அரைத்து, உருண்டை செய்து, இரட்டைப் பிரமிச்சாறும், தேனும் சேர்த்துத்தரின் பெரும்பாடு என்னும் நோய் போம்.

இதை முறைப்படி குடிநீர் செய்து உட்கொள்ள, நீரிழிவு கழிச்சல்வகை போம். வாய்ப் புண்ணுக்கும், இதைக்கொண்டு வாய் கொப்புளிக்க உலரும்.

இதை அரைத்து, அடிப்பட்ட வீக்கம், கட்டி முதலியவற்றின் மேற்போட அவை அமுங்கும்.

இதன் சாற்றைப் பெரும்பாட்டுக்கு வழங்கலாம்.
இதுவே எட்டி நஞ்சுக்கு மாற்றாகும்.
இதன் பட்டைச் சாற்றினால் இரும்பு செந்தூரமாகும்.

---

இதனால், கடுவன், கரப்பான், மாந்தம் இவை உண்டாம். நீரிழிவு, வெப்பம், வாயு, கடுப்பு, நீர்வேட்கை இவைகள் நீங்கும்.

மாந்தம் விளையும் வலிகரப்பா னுண்டாகும்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமோ—நாந்தலொடு
வாய்வுங் கடுப்பும் வருங்கொதிப்புந் தாகமும்போம்
தூயநா வற்பழத்தால் சொல். (அ-கு.)
சம்புவின் கனியதள் சாப்பிடப் படியு நோய்க்
கும்பெலா மாறிடுங் கூச்சமில் லாமலே.
(தே.கா.)

(பொ-ள்.) நாவற்பழத்தின் மேற்றோலை எந்த முறையாயேனும் உட்கொள்ள நீர்பெருக்கு, நீர்வேட்கை நீங்கும்.

நீர்.

நாவல் வேர் ஊறிய நீரானது, கழிச்சல் நீரிழிவு நீக்கும். உடற்குக் குளிர்ச்சியையும் ஆண்மையையும் தரும். ஐயம், சுரம், மந்தம் இவைகளைப் பெருக்கும்.

நாவல்வே ரூறுசல நாளுமதி சாரத்தை
மாவலிய மேகத்தை மாற்றுங்காண்—பூவுலகில்
விந்தோ டசீதம் வீறுபலம் வெப்பையம்
மந்தமிவை யுண்டாக்கு மால். (அ-கு.)

வெண்நாவற்பழம்.

வெள்ளை நாவற்பழம், குருதியையும் வெண்ணீரையும் பெருக்கும். உள்வெப்பை அகற்றும்.

உதிரமொடு விந்துவையும் உண்டாக்கும் உள்ளே
அதிரழல் தன்னை அகற்றும்—பதியதனிற்
கண்ணு வலியார்க்குங் கதிக்கநோக் குந்திருவே !
வெண்ணாவ லின்கனியை விள். (அ-கு.)

சம்புநாவற்பழம்.

சம்பு நாவற்பழத்தால், வளி, தீக்குற்றங்கள் மிக வெப்பத்தை உண்டாக்கும். நீர்வேட்கை நீங்கும்.

அனில அழலும் அரும்பித்த வெப்புந்
தனியுலவுந் தாகமுந் தயங்கும்—தனிவேடன்
அம்புநா ணுங்கண் அணியிழையே ! கானிலுறுஞ்
சம்புநா வற்கனிக்குத் தான். (அ-கு.)

கொழுந்து.

வ-கு : கொழுந்து சிவனார் கிழங்கின் நஞ்சை முறிக்கும் ; கழிச்சலைப் போக்கும்.

நாவற்கொழுந்தை ஏலத்துடன் சேர்த்தரைத்து ஆட்டுப் பாலில் கலந்து கொடுக்க, செரியாக் கழிச்சல் போம்.

நாவற்கொழுந்துச்சாறு, மாவிலைச்சாறு இவ்விரண்டையும் கலந்து கடுக்காய்ப்பொடியுடன் சேர்த்து, ஆட்டுப் பாலில் கொடுக்கச் சீதக் கழிச்சல் போம்.

**விதை.**

விதையைத் தூள்செய்து வேளைக்கு 2—4 கிராம் எடை கொடுக்க நீரிழிவு நீங்கும்.

இதன் தூளுடன், மாம்பருப்புத் தூளையும் சேர்த்துக்கொடுக்க, சிறு நீரைப் பெருக்கும்.

இக்கொட்டையை மிகுந்த அளவிலுண்ண நஞ்சாம். அந்த நஞ்சுக் குறிகளையும், அதன் முறிப்புகளையும் நஞ்சு நூலில் பார்க்க.

**பழம்.**

இதன் சாற்றைப் பிழிந்து, ஒரு புட்டியில் ஒரு திங்கள் வரையில் மூடிவைத்திருந்து, அதன்பின் எடுத்துக் கொடுக்க, நீரிழிவிலுண்டாம் நீர்வேட்கை போம்.

பழத்தினுலுண்டாகும் தீங்கை முறிக்க, நெல்லிக்காயை மென்று தின்று குளிர்ந்த நீர் குடிக்க வேண்டும் :—அகத்தியர் நஞ்சு முறிவு.

பழச்சாற்றை மணப்பாகு செய்துகொடுக்க, பசியை உண்டாக்கு வயிற்றுப் போக்குகளை நிறுத்தும்.

## 361. நிலக்கடம்பு—Nilak-Kadambu.

**வே-பெ :** குயக்காலம், குயகாயம், கோகனம்.

Asareum Europalum.

நம் நாடுகளில் பயிராகும் பூண்டு, இலை அகன்று மேற்புறம் பச்சை நிறமாயும், கீழ்ப்புறம் நீலமஞ்சள் நிறமாயும் இருக்கும். பூக்கள் இந்திரநீல வருணமாயும், வாயிலிட்டால் உரப்பாயும், விருவிருப்பாயும், மணமாயுமிருக்கும்.

**ப-உ :** பூண்டு.

**சுவை**-கார்ப்பு, விருவிருப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை :**
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-Carminative.

**குணம் :** வாயுகளைக் கண்டித்துச் சிறுநீரைப் பெருக்கும். காமாலை, வீக்கம் இவைகளைப் போக்கும். மேலும், கல்வாயு, பல்வலி, தலைவலி, நரம்பிசிவு இவற்றையும் அகற்றும்.

**வ-கு :** இதனைக் குடிநீரிட்டு 70—140 மி.லி. அல்லது பொடி செய்து 1—2 கிராம் எடை மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

## 362, நிலக்குமிழ்—NilakKumizh

**Gmelina Asiatica**

| | |
|---|---|
| **Mal.** Nilak-kumizh | **Hind.** Nagphhul. |
| **Kan.** Komatha | **Duk.** Badara |

இஃது, இந்தியாவின் தென்னாட்டிலும் வங்காளத்திலும் பயிராகும் பூண்டினத்தைச் சார்ந்தது.

ப-உ : இலை, வேர்.

சுவை-சிறுகைப்பு, துவர்ப்பு. தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
மணமூட்டி—Aromatic }

குணம் : இதன் இலையும் வேரும், கழிச்சல், விழி சொருகல், ஐயப்பெருக்கு, வாதக்கடுப்பு, கொட்டாவி, மந்தம் ஆகியவற்றைப் போக்கும்.

பேதியோடு கண்சொருகல் பேராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம்—ஓதச்
சலக்குமிழை யொத்த தனக்கருங்கண் மாதே!
நிலக்குமிழைக் கையிலெடு நீ. (குஅ.).

வ-கு : இதன் இலையும் தளிரும் கனத்துக் குழகுழப்புள்ளதா யிருப்பதால், நீரில் சேர்த்து அலச நீரும் குழகுழப்புத் தன்மையடையும். இதைக் கொடுத்துவர, வெட்டை, நீர்ப்பைத்தா பிதம், நீர்க்கடுப்பு நீங்கும்.

இதன் வேரை அரைத்துக் கொடுத்துவர, கழிச்சல் முதலியன போம்.

மேலும் இது, சீல்வாயு, கவுட்டு வீக்கம், வெள்ளை இவைகளையும் போக்கும்.

இதைப் போர்த்துக்கேயர், எல்லா நச்சுக்குணங்களையும் போக்க உபயோகப்படுத்தியதாயும் தெரியவருகிறது.

## நிலப்பனை Nilappanai

வே - பெ : வாராகி, முசலி, திரளாரம், திரகத்தாரு, திரணராசன், சகியம், தாலமூலி, தலைத்தாது, நிலவிழுமி, நேயம், குறத்தி, சரியம், சித்தி.

Curculigo orchioides.

Eng : Black musale.

| | |
|---|---|
| Tel. Naelatadi | Sans. Musale |
| Mal. Nieppana | Hind. Musalikana |
| Kan. Neladali | |

இஃது, இந்தியா, இலங்கையின் வெப்ப நாடுகள் ஆகியவற்றுள் ஏராளமாக பயிராகின்றது.

ப-உ : கிழங்கு. வேர்.

சுவை-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { உரமாக்கி—பலகாரி—Tonic.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
வரட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient. }

குணம் : இதனால், நீரிழிவு, வெப்பம், வெண்புள்ளி, கரும்புள்ளி, விலாக்குத்தல், ஒழுக்குவெள்ளை, கண்நோய்கள் இவை போம். ஆண்மையு முண்டாகும்.

மேக வனல்தணியும் வெண்குட்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே!—போகாத
சூலைமே கங்களோடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சால நிலப்பனைக்குத் தான். (அ.கு.)

வ-கு : இதன் கிழங்கின் மேல்தோலையும், உள் நரம்பையும் போக்கி, உலர்த்திப் பொடித்து 8 கிராம் பொடியுடன் சருக்கரை கூட்டிப் பாலுடன் கலந்து, காலை மாலை உட்கொள்ள, மேற்கூறிய நோய்கள் போம்.

நிலப்பனக்கிழங்கு, சீந்தில் சருக்கரை, பூனைக்காலி, நெருஞ்சில், இலவம்பிசன், நெல்லிவற்றல், சருக்கரை ஓர் எடையாய் எடுத்துக் கலந்து, வேளைக்குக் கால் பலம் வீதம் பாலுடன் உட்கொள்ள ஆண்மை பெருகும்.

நிலப்பனஞ்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு, நெய் ஓர் அளவாகக் கூட்டி, எரித்து வடித்துக் காலை மாலை 8—34 கிராம் கொடுக்க, எலும்புருக்கி நோய் கணைச்சூடு முதலிய நோய்கள் தீரும்.

## நிலப்பூசினி Nilappusini

### Ipomea digitata.

| | |
|---|---|
| Tel. Nola-gummudu | Sans. Vidari |
| Mal. Palmuthukua | |
| Kan. Nelakumbala | Hind. Bilai-khand |

இந்தியாவில் பயிராகின்ற சிறு பூண்டின் கிழங்கு.

இது இந்தியாவில் எங்கும் வளர்கிறது.

ப-உ : கிழங்கு.

சுவை-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- மலமிளக்கி—மலகாரி—Laxative.
- பித்தநீர்ப்பெருக்கி—பித்தகாரி—Chologogue.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
- பாற்பெருக்கி—க்ஷீரவர்த்தநி—Lactagogue.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

குணம் : இதனால், தளர்ந்த உடல் இறுகும். இளைத்த உடற் கட்டுகள் செழுமையாகும். மேனி ஒளிரும். எருக்கட்டு போகும். நுட்பமான அறிவுமுண்டாகும்.

மெய்யிறுகும் தாதுகளும் வீறுமதி தேச்சுமாம்
நொய்யவுட லம்பருக்கும் நுண்ணறிவாம்—பைய
மலப்பூச வேகு மலர்த்திருவே ! நல்ல
நிலப்பூசி னிக்கிழங்கி னால்.

வ-கு : இது, பெரும்பாலும் ஆண்மை, வன்மை, அழகு முதலிய வைகளைப் பெருக்குவதற்காகச் செய்யும் இலேகியங்களில் சேரும்.

பச்சைக் கிழங்கினின்றும் சாறு பிழிந்து, அத்துடன் பசுவின் பாலும் சருக்கரையும் கலந்து, 68 கிராம் முதல் 136 கிராம் வரை, காலைதோறும் சாப்பிட்டுவர, ஊட்டம் தரும். இதனால் ஆண்மை பெருகும்.

இதன் சாற்றுடன், மல்லி, வெந்தயம், சீரகம், சருக்கரை சேர்த்துச் சாப்பிடப் பால் பெருகும்.

கிழங்கை உலர்த்திப் பொடித்துத் திராட்சைச் சாற்றில் கொடுக்க, பாலைப்பெருக்கும். இதன் பொடியுடன் நெய் அல்லது தண்ணீர் விட்டான் கிழங்கின் நெய் சேர்த்துக் கொடுக்க உடல் பருக்கும்.

கிழங்கின் பொடியுடன், சருக்கரை வெண்ணெய் கலந்து காய்ச்சி இலேகிய பதமாகச் செய்து கொடுக்க, பெரும்பாட்டைப் போக்கும்.

---

## 365 நிலம்புறண்டி Nilampurandi

இச்செடிவருக்கம், தென்னிந்தியாவில் சில பாகங்களில் பயிரா கின்றது.

ப-உ : இலை.

சுவை : கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : நச்சரி—விஷநாசநி—Antidote.

குணம் : இஃது நஞ்சு நோய்களை ஒழிக்கும் ; ஆண் மக்களைப் பெண்கள் தம் வழிப்படுத்த உதவும்.

" அலம்புரண்ட நோயகற்றும் ஆள்வசிய மாக்கும்
நிலம்புறண்டி மூலி நினை."

வ-மு : இதனைக் குடிநீரிட்டு அல்லது இடித்துச் சாறு பிழிந்து, தக்க அளவாகக் கொடுக்க நஞ்சுகள் நீங்கும்.

---

## 366, நிலவேம்பு NilaVembu

வே - பெ : சிரட்குச்சி, காண்டகம், கிராதம், கிரியாத்து, கிராகதி, நாட்டுநிலவேம்பு, அநுரியதித்தம், காண்டம், கோகணம்.

Audragraph[i]s panicnlate
Eng Chinetho

| | |
|---|---|
| Tel. Nelavemu | Sans. Kirathathikta |
| Mal. Nilaveppa | Duk. Charayatha |
| Kan. Nelavepu | Hind. Kiryat |

இஃது ஒரு சிறு செடி. இதில் சீமை நில வேம்பு அல்லது சூரத்து நிலவேம்பு என்று வேறொரு வகையுமுண்டு, இதற்குச் சிரட்டா (Chiretta) என்று மேனாட்டார் கூறுவர். சுமார் மூன்றடி நீளமுள்ள இதன் தண்டானது, உருண்டு வழவழப்பாயும், பழுப்பு நிறமாயும், கிளைகளுள் ளதாயுமிருக்கும். நாட்டு நிலவேம்பானது, வேரோடுங்கூடி ஒன்றரை அடி நீளமாகவும், நான்கு மூலைகளுள்ளதாகவும், கொஞ்சம் கறுப் பாகவும் இருக்கும். இந்தியாவில் எல்லாச் கடைகளிலும் சாதாரண மாகக் கிடைக்கக்கூடியது. இவ்விரண்டு வகை நிலவேம்பிற்கும் செய்கை குணம் ஒன்றேயாகும்.

ப-உ. : இலை, தண்டு.

சுவை : கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
உரமாக்கி—பலகாரி—Tonic.
உடற்றேற்றி—வயதாபேதகாரி—Alterative.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

குணம் : இதனால், வளிசுரம், நீர்க்கோவை, சுரங்கள், மயக்கம் இவை நீங்கும். புத்திக்குத் தெளிவுண்டாகும்.

வாதசுரம் நீரேற்றம் மாற்றுஞ் சுரதோடங்
காதமென ஓடக் கடியுங்காண்—மாதரசே!
பித்த மயக்கறுக்கும் பின்புதெளி வைக்கொடுக்கும
சுத்தநில வேம்பின் தொழில். (அ.கு.)

வ-கு : மேற்கூறிய நோய்களுக்கு, நிலவேம்பு 15 கிராம் எடை இச்சிலித்தோல் 195 மி.கி., கொத்துமல்லி 195 மி. கி. இவைகளை வெந்நீரில் சேர்த்து மூடி, ஒரு மணி நேரம் சென்றபின் வடிகட்டி 15—30 மி.லி. வீதம் தினம் 2—3 முறை கொடுக்கலாம்.

இதன் இலைச்சாற்றைக் குழந்தைகட்குண்டாகும் வயிற்றுப் பொருமலுக்கும், கழிச்சல்கட்கும் வழங்கலாம்.

சிதைத்த நிலவேம்பு 16 கிராம், வசம்புத் தூள் 4 கிராம் எடை, சதகுப்பை விதைத்தூள் 4 கிராம் எடை, கோரைக்கிழங்கு 17 கிராம் எடை இவைகளை உழக்கு வெந்நீரில் சேர்த்து, ஒரு மணி நேரம் ஊறவைத்து எடுத்து, வடிகட்டி 15—30 மி.லி. தினம் 2 அல்லது 3 வேளை கொடுத்து வரலாம்.

சிதைத்த நிலவேம்பு 34 கிராம், வெந்நீர் 700 மி.லி. கிராம்புத்தூள், கருவாப்பட்டைத்தூள் அல்லது பொடித்த ஏலம் இவற்றில் ஏதேனும் ஒன்றில் 4 கிராம் எடை எடுத்து ஒன்று கூட்டி, 6 மணி நேரம் ஊறவைத்து வடித்து, 15—30 மி.லி. வீதம் தினம் 2, 3 முறை கொடுத்து வர, முறைசுரம், குளிர்ச்சுரம், கீல்பிடிப்பு, செரியாமை இவை போம். வன்மை தரும்.

---

## 367. நிலவாமணக்கு Nilavamanakku

Tel. Dundiga | Hind. Lal-cheranda

இது குளத்தோரங்களிலும், நீர் நிலைகளின் ஓரங்களிலும் விளையும் ஒரு சிறு செடி.

ப-உ : செடி.

சுவை : கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : நீர்மலம்போக்கி—வ்ரேசநி—Purgative.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

குணம் : இதனால் மூட்டு வீக்கம், கைகால் பிடிப்பு, ஈரல் நோய்கள் முதலியனவகள் போம்.

வ-கு : குழந்தைகட்கு உண்டாகும் மண்ணீரல் கல்லீரல் வீக்கங்களுக்கு இதன் வேரைத் தண்ணீரில் ஊறவைத்து, வடித்த நீரைக் கொடுத்துவரலாம்.

சாறு பிழிந்து கண்ணில் விட, கண்நோய்கள் குணப்படும்.

## 368 நிலாவாரை Nila-varai.

வே - பெ : நிலஆவாரை, நிலவாகை, நாட்டுநிலாவிரை, ஆலகாலம், கமதாயம், தாளினி, ஆவரை, ஆவாகை, குயத்தினலகை.
Cassiaanceolata

Country senna of (Indian or Tinnevelly senna).

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nela-tangedu | Arab. | Sanna—hindi. |
| Mal. | Nila-vaka | Hind. | Sunnamakai. |
| Kan. | Nela-varike | Duk. | Nat-ki-sona. |

இச்செடி இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் வளருகிறதெனினும், தென்னிந்தியாவில் திருநெல்வேலியில் பயிராகின்றதே சிறந்ததெனக் கண்டறியப்பட்டிருக்கிறது. இதில் சீமை நில ஆவாரை, சூரத்து நில ஆவரை அல்லது சென்னமுக்கி (Senna mukki) "Senna alexandria" என்று வேறொரு வகையுமுண்டு. மேற்கூறிய சரக்கு, இந்தியாவிலிருந்தும் அரேபியாவிலிருந்தும் வெளிநாட்டிற்கு ஏராளமாய் ஏற்றுமதி செய்யப்பட்டு வருகின்றது. இவ்விரு வகை நில ஆவாரைக்கும் செய்கை, பண்பு முதலியன ஒன்றேயெனினும், வடிவில் சிறு வேற்றுமைகளுண்டு.

ப- உ : இலை.

சுவை—கைப்பு (வெகுட்டல்), தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : நீர்மலம்போக்கி - வ்ரேசநி—Purgative

குணம் : இதனால் மூலவாயு, வெப்பு, இரந்தி, குன்மம், நாட்பட்ட மலச்சிக்கல் இவைகள் நீங்கும்.

நிலாவாரை யின்குணந்தான் நீகேள் மயிலே !
பலமூல வாயுவெப்பு பாவைச்—சிலஇரந்தி
பொல்லாத குன்மம் பொருமுமலக் கட்டுமுதல்
எல்லா மகற்றுமென எண்.

(அ.கு.)

குறிப்பு : கல், மண், காம்பு, காய் இவைகளை நீக்கி, இலையை மாத்திரம் எடுத்துப் பசுவின் பாலில் பிட்டவியல் செய்து, நிழலில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

மேற்கூறியபடி செய்து எடுத்த இலைக்கு, குமட்டல், வயிற்றுவலி, முதலியன இரா.

நிலாவிரை.

அ... நிலாவாரை யாதார மாக்குவது
...நில வாவாரைக் கற்பகமே—தானதுகேள்
வேராதி யாவற்றும் வேந்திர மிளகுசுக்கு
காரையிலை காற்பிணியோ கம்.

(தேரன் வெண்பா)

நிலாவாரையின் வேர் முதலியவற்றோடு பிரப்பங்கிழங்கு, மிளகு, சுக்கு, காரையிலை இவற்றைச் சேர்த்தரைத்து உருட்டிக்கொடுக்க, வளிக்குற்றத்தால் வரும் நோய்கள் போம்.

வ - கு : மெலிந்தவர், முதிர்ந்தவர், சிறுகுழந்தைகள் இவர்கட்கு கொடுக்க, சிறந்த கழிச்சல் மருந்தாகும்.

அளவு : (பொடி) 650 மி.கி.—1,950 மி.கி. எடை.

நிலாவாரைப் பொடி ஒன்று, சுக்கு, மிளகு, ஓமம், வாய்விடங்கம், இந்துப்பு இவற்றின் பொடிகள் வகைக்குக் கால் சருக்கரை 2¼ பங்கு கலந்து வைத்துக்கொண்டு, 4-8 கிராம் எடை கொடுக்க, வயிற்றுப்புசம் வயிற்றுவலி நீங்கிக்கழியும்.

நிலாவாரை 34 கிராம், சுக்குத்தூள் 1,950 மி.கி. இவைகளை இரண்டு ஆழாக்கு வெந்நீரில் சேர்த்து, ஒரு மணிநேரம் ஊறவைத்து வடித்துக் கொடுக்கவும்.

அளவு : 30—60 மி.லி.

குறிப்பு : இதன் குடிநீருடன் இந்துப்புச் சேர்த்தும் கொடுக்கலாம். வயிற்றுக்கடுப்பு இராது. சூடுகையாயிருக்கும் போது, பாலும் சருக்கரையும் சேர்த்துக்கொடுக்கலாம். இஃது இனிப்பாயிருப்பதால், குழந்தைகட்கும், மெலிந்தவர்கட்கும் நன்மை தரும். நிலாவாரைக் குடிநீருடன் காடி சேர்த்து உடலில் பூசிவர, சொறி, சிரங்கு, புடை, தேமல், ஆறுப்புண் நீங்கும். மயிர் உதிர்வது நிற்கும். தேன் கலந்து ஒருவாரம் உட்கொள்ள, கால்பிடிப்பு கீல்பிடிப்பு (வாதம்) போகும். மருதோன்றி இலையோடரைத்துப் பூச, மயிர் கறுக்கும்.

---

## 369. நின்றுற்சிணுங்கி—Nintar-Chinungi.

வே - பெ : நின்றுசிணுங்கி.

இது, தென்னிந்தியாவில் வளரும் ஒருவகைப் பூண்டு.

ப - உ : பூண்டு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : நச்சரி விஷநாசநி—Antidote.

குணம் : பாம்பு நஞ்சை நீக்கும். பெண்களைத் தன்வழிப்படுத்த வழங்கலாம்.

"நின்றுற் சிணுங்கியது நீலவிடம் போக்குமினுங்
குன்றுந் தனத்தியரைக் கூட்டுவிக்கும்." (அ.கு.)

இவன் சாற்றைப் பாம்புநஞ்சு கடிகளுக்கு உள்ளுக்குக் கொடுத்து வெளியிற் பூச நஞ்சு முறியும்.

---

## 370. நீரடிமுத்து—Naradi-muththu.

வே - பெ : நீரடி, நீரெட்டி முத்து.

Hydnocarpus igdhiara, Blume.

(Eng. Jangli Almond.)

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nirudu | Sans. | Tuvarakaha. |
| Mal. | Maravtotti | Hind. | Jangli-badar |

இஃது ஒரு வகை மரத்தின் விதை; தென்னிந்தியாவில், மலபார், திருவாங்கூர், இலங்கை முதலிய இடங்களில் விளைகிறது; வ்விதை சிறுத்து மேல் தோலோடுங் கூடி, சாம்பல் கலந்த கபில நிறமாயும், எண்ணெய்ப்பசையுடையதாயுமிருக்கும்.

ப - உ : விதை.

சுவை—கைப்பு, வெகுட்டல், தன்மை- வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- புண்ணழுக்காற்றி—வ்ரணசுத்திகாரி— Detergent.
- கிருக்குணிப்புழுக்கொல்லி—க்ருமிக்நி—Para Siticide

குணம் : இதனால், கழலை, பெருநோய், வாதரோகம் தோலைப்பற்றி வரும் சொறி, சிரங்கு, நமைச்சல் நீங்கும். ஆனால் உடலின் அழலை மிகும்

நீரடி முத்திற்கு நீங்காக் கிரந்திகுட்டம்
போரிடு வாதமுமே போகுங்காண்—காரடுக்கும்
மென்குழலாய் ! பித்தம் மிகுமனலம் உண்டாகும்
முன்கிளர்ந மைச்சலறு முன். (அ.கு.)

அளவு : இதன் தைலம் 195 மி.கி.—1,170 மி.கி.

வ - கு : இதன் பருப்பைத் தயிரில் ஊறவைத்து எலுமிச்ச பழச் சாற்றில் அல்லது காடியில் குழைத்து உடம்பில் தடவி, உலர்ந்தபின், வராட்டிப் பொடியிட்டுத் தேய்த்துக் குளித்துவர, சொறி சிரங்கு தீரும்.

நீரடிமுத்து, கசகசா, கொப்புரை, காட்டுச்சீரகம், கருஞ்சீரகம், கார்போக வித்து, பிரமதண்டுவித்து இவைகளைச் சேர்த்துப் புளித்த நீர் விட்டு அரைதது, உடலில் பூசி, 3 அல்லது 4 மணி நேரம் சென்றபின் இள வெந்நீரில் குளிக்க, சொறி, சிரங்கு, நமைச்சல், தவளைச்சொறி, படைகள் முதலிய நோய்கள் தீரும்.

**நீரடிமுத்து நெய்.**

குணம் : இந்நெய்யை மேலுக்குப் பூசினாலும், உள்ளுக்குக் கொடுத தாலும், வளிக்கூட்டம், சிரங்கு, சொறி, பெருநோய், சூலை முதலியவை நீங்கும்.

பூசுகுடி வாதகணம் பொங்கு கிரந்திபுடை
வீசுகுட்டம் சூலையிவை விட்டேகும்—தேசஞ்சச்
சீரடியை யொத்தநடைத் தெய்வ மடமயிலே !
நீரடிமுத் தின்னெய்யை நீ. (அ.கு.)

மேல்நாட்டு மருத்துவர்கள் பெருநோய் மருத்துவத்தில், நீரடிமுத்து எண்ணெயிலிருந்து எடுக்கும் (Ethyl easter) என்னும் எண்ணெய்ச் சத்தும், கற்பூரமும், ஆளிவிரை எண்ணெயும், கிரியேசோட் என்னும் மருந்தும் கூட்டி, ஊசி வழியே சதையிலும், தோலின் கீழும், தோலின் நடுவிலும் செலுத்திவருகின்றனர். ஆராய்ச்சியில் புதிது புதிதாகப் பெரு நோய்க்குப் பல மருந்துகள் கண்டறிந்தும், நீரடிமுத்து எண்ணெயின் வழக்கு இன்னும் போகவில்லை.

---

## 357. நீரலரி—Niralari.

**Polyganum barlatum.**

Tel. Niruganneru
Mal. Vellaththalari Kan. Kondemalli.

இது தண்ணீரோரங்களில் வளரும் ஒருவகைப் பூண்டு.

ப - உ : பூண்டு.

சுவை—துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசனகாரி - Astringent.
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.

பண்பு : வயிற்றுவலி, கழிச்சல் இவைகளைப் போக்கும்.

வ - கு : இலை, தண்டு முதலியவைகளைச் சேர்த்தரைத்துப் புண்களின் மீது போட, அவை குணமாகும்.

விதையை ஊறவைத்த நீர், வயிற்று வலியைப் போக்கும்.

வேரைக் குடிநீரிட்டுக் குடிக்க, கழிச்சலைப் போக்கி, உடற்கு நல்ல குளிர்ச்சியை உண்டுபண்ணும்.

---

## 372. நீர்ப்பிரமி—Nir-Brahmi.

**Herpestis monniera.**

**Eng : Thyme-leaved Gratiola.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Shambrani Chettu | Sans. | Mandukaparni. |
| Mal. | Nirbrahmi. | | |
| Kan. | Nirbrahmi. | Hind. | Barambhi. |

இக்கொடியானது நீர் நிலையோரங்களில் படர்ந்து வளரும்.

ப - உ : பூண்டு.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை :
- நரம்புரமாக்கி-பலகாரி(நாடி)—Nervine tonic.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- மலமிளக்கி—மலகாரி—Laxative.

**வளரும் இடங்கள் (Habit) :—**
இது தற்போது இந்தியாவில் எங்கும் பயிராகிறது.

குணம் : இது, நீரைப் பெருக்கும் ; கழிச்சலையுண்டாக்கும் ; இஃது தேக வன்மையைத் தரும்.

இலையைச் சாறுபிழிந்து, நெய் சேர்த்துக் காய்ச்சியோ, அல்லது இச் சாற்றுடன் 2 வராகனெடை 8 கிராம் கோட்டத்தைப் பொடித்துச் சேர்த்துத் தேன் கலந்தோ கொடுத்துவர, இசிவு நோய், புளியேப்பம் முதலிய நோய்கள்போம்.

இலையை வெண்ணெயில் பொரித்துத் தொண்டைக் கம்மல் தீர சாப்பிடலாம்.

இப்பூண்டை அரைத்துக் கொதிக்கவைத்து நெஞ்சில் பூசக், கோழை கட்டு நீங்கும்.

இலைச்சாறும், மண் எண்ணெயும் சேர்த்துக் கீல் வாயுகளுக்குப் பூசலாம்.

இலையைச் சிற்றுமணக்கெண்ணெய் விட்டு வதக்கி, வீக்கங்களுக்கு ஒற்றட மிட்டு அதையே அவ் வீக்கங்களின் மீது வைத்துக் கட்டிவர, வீக்கங் கரையும்.

இலையைப் பச்சையாகவே நரித்தலை வாயு கண்ட கீல்களில் கட்டி வைக்க சில மணி நேரம் சென்றபின் எரிச்சலை உண்டாக்கும். அப்பொழுது அதனை அவிழ்த்தெடுத்துப் பார்க்கில் சிவந்து காணும். இவ்வாறாக விட்டு விட்டுக் கட்டிக்கொண்டு வர, வீக்கம் கரைந்து நடக்கச் செய்யும். இதன் இலைச்சாற்றைக் கொண்டு செய்யப்படும் நெய், பிரமிநெய் என வழங்கும்.

---

## 373. நீர்ப்பூலா—Nirpoola.

**Phyllanthus multiflorus**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nallapurugudu | Kan. | Sanna-kage-soppu. |
| Mal. | Kattu-Niruri | | |
| Hind. | Kamuni * | | |

இது இந்தியாவின் கீழ்க்கரை மேற்கரை நாடுகளில் வளரும் பூண்டு.

ப - உ: இலை, வேர்.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

| | |
|---|---|
| செய்கை: | உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.<br>குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.<br>சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic. |

குணம்: இதனால், மாந்தம், கணச்சூடு, வயிற்றுப்பொருமல், சிறுநீர்க்கட்டு, சொறி, சிரங்கு, ஆகியவை தீரும்.

மாந்தங்க ணம்பொருமல் மாறுச் சலத்துடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண்—எந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழுந்திருவே ! பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை. (அ.கு.)

மேலும், இஃது உடலைத் தேற்றும் ; குளிர்ச்சியைக் கொடுக்கும் ; சிறுநீரைக் கழியச் செய்யும்.

வ - கு : இலைச்சாறு ஒரு தேக்கரண்டி எடுத்து, சருக்கரை அல்லது கற்கண்டு சேர்த்து, நாள் ஒன்றுக்கு மூன்று முறை சாப்பிட, சிறு நீர் நன்ருய் இறங்கும். உடலிலெழும் அனல் தணியும்.

வேரைக் குடிநீரிட்டு வேளைக்கு 15—30 மி.லி. வரையிலும் தினம் இரு வேளை கொடுக்க, உடம்பைத் தேற்றும்.

இலைச்சாற்றுடன், கருப்பூரம், வால்மிளகு இவை சேர்த்து மாத்திரை செய்து, வாயிலடக்கிவர, ஈறுகட்டு, புண் முதலியன போம்.

இதை சிறுநீரைப் பெருக்குகின்ற மற்ற சரக்குகளுடன் சேர்த்தாவது, அல்லது தனித்தாவது வழங்கலாம்.

---

## 374. நீர்முள்ளி—Nirmulli.

வே. பெ : நிதகம், இக்குரம், காகண்டம், துரகதமூலம், முண்டகம்.

Hygrophila spinosa

Astercantha Longifolia

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nirugobbi | Sans. | Kokilaksha. |
| Mal. | Vayalchulli | | |
| Kan. | Kollavalike<br>Kalavankabija | Hind. | Talmakhana * |

இஃது இந்தியா முழுவதும் நீர்ச் சுரப்புள்ள (ஈரமுள்ள) இடங்களில் தானுகவே வளர்ந்து கிடக்கும். இதில் முட்கள் நிறைந்திருக்கும். இதன் விதை, வேர் முதலியன கடைகளில் கிடைக்கும்.

ப - உ : செடி, பூ, விதை.

சுவை - இனிப்பு, சிறுகைப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

இலை.

செய்கை:
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
பூ—வேர்.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
சிறுநீர் பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
உரமாக்கி—பலகாரி—Tonic.
விதை.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic,
காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

விதை.

குணம்: இதனால், வெள்ளை வீக்கம், கழிச்சல், உடற்சோர்வு நீங்கும். உடல் ஊட்டமும், ஆண்மையும் பெறும்.

விந்துவுமாம் தாதுவுமாம் மேகரோகந்தொலையும்
உந்து மதிசாரம் ஒழியுங்காண்—வந்துடலில்
ஏரியநீர் வீக்கம் இறங்கும் இளைப்புமறும்
கூறியநீர் முள்ளிவிதைக் கு. (அ.கு.)

சமூலம்.

இதனால், பாண்டு, குளுப்பை, நீர்க்கோவை, நீரேற்றம், வீக்கங்கள் இவை விலகும்.

பாண்டு குளுப்பையறும் பாரிலுறு நீரேற்றம்
மாண்டுவிடும் நீர்க்கட்டு மாறுங்காண்—பூண்டதொரு
வீக்கமெல்லாம் நீராய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய்! சாற்று.

வ-கு: உலர்ந்த செடியைச் சாடியில் ஊறவைத்து, மூன்றுநாள் கழித்து எடுத்து வடிகட்டி, 1—3 தேக்கரண்டி வீதம், பாண்டு, பெருவயிறு, பருமநோய இவைகட்குக் கொடுத்துவரலாம்.

இதனை வேறு நீர் போக்கி மருந்துகளுடன் சேர்த்துக் குடிநீரிட்டுக் கொடுக்க, நீர் நன்றாக இறங்கி, மூத்திர வியாதிகள் நீங்கி, தேகத்தி லுள்ள கெட்ட நீரும் வற்றிப்போகும்.

குடிநீர்.

நீர்முள்ளி, நெரிஞ்சில், சுரைக்கொடி, வெள்ளரிவித்து, பறங்கிச்சக்கை, மணத்துக்காளி வற்றல், சோம்பு, கொட்டை நீக்கிய கடுக்காய், தான்றிக் காய், நெல்லிக்காய், சுரக்கொன்றைப் புளி வகைக்கு பலம் ஒன்றாகக் கொண்டு, ஒன்றிரண்டாக இடித்ததில் ஒரு கையளவு எடுத்து, 1,400 மி.லி. நீரிட்டு எட்டொன்றாக்கி காலை மாலை குடிக்க, வீக்கங்கள் பெருவயிறு நீங்கும். சிறுநீர் இறங்கும். மலம் கழியும்.

இதன் விதை உடல் வன்மையைத் தரும். மேகம், மூலம், உடற் காங்கை, நீர் எரிச்சல், இவைகளை நீக்கும்.

விதையைப் பாலில் அல்லது முந்திரிச் சாராயத்தில் ஊறவைத்து சருக்கரை கலந்து கொடுக்க, ஆண்மை பெருகும்.

விதையை வன்மை தரும் இலேகியங்களில் சேர்த்துக்கொள் கின்றனர்.

## 375. நீர்மேல் நெருப்பு—Nirmel Neruppure.

**Ammnia vesicatorius**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Agni-vendra-paku | San. | Agni-garba. |
| | | Hind. | Dadmari |
| Mal. | Kallur-vanch | Duk. | Aginbuti |

இப்பூண்டு சதுப்பு நிலங்களில் வளரக்கூடியது.

ப- உ : பூண்டு.

சுவை—கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : கொப்புளமெழுப்பி—தவக்ஸ்போடகாரி—Vesicant.
நமைச்சலுண்டாக்கி—Irritant.

குணம்: கிராவளிக் குற்றத்தால் வரும் நோய்கள், குருதிக் குறைவினு லுண்டாகும் திமிர் வாயு இவை போகும்.

வாதமகா ரோகம் வரினுங் கறையல்கி
மீதடர வன்றிமிரே மேவுகினும்—ஓதரிய
சீர்மேல் நிலம்பரவு தெய்வ மடமயிலே !
நீர்மேல் நெருப்பை நினை. (அ.கு.)

வ -கு : இலேச் சாற்றுடனே, அல்லது இதைச் சுட்ட சாம்பலுடனே, எண்ணெய் சேர்த்து, கரப்பான் முதலிய சிரங்குகளுக்குப் போட, அவை போம்.

இலையை உடலில் பற்றவைத்துக் கொப்புளமெழுப்பலாம். பச்சையாக வாவது, உலர்ந்த பின்னாவது சுக்கு, கோரைக் கிழங்கு சேர்த்து முறைப்படி குடிநீரிட்டு 15 மி.லி. தினம் இருவேளை கொடுத்துவர, முறைசுரம் நீங்கும். வளிநோய் தணியும்.

இலேச்சாற்றை நீர் சேர்த்து ஆடுமாடுகளுக்குக் கொடுக்க, அவைகளின் ஆண்மை குறையும் என, கொங்கண நாட்டார் கண்டறிந்திருக்கின்றனர்.

---

## 376. நுணா Nuna.

வே. பெ : மஞ்சணத்தி, மஞ்சணுத்தி, தணக்கு, நுணவு

**Morinda tinctora**

**Eng : Indian Mulberry.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Maddi-chettu | Kan. | Tagate mara |
| | | Sans. | Achuka |
| Mal. | Kadappilava | Hind.* | Achhi |

நுணா.

இஃது நம் நாட்டில் பயிராகும் மரம்.

இதனைப் பிளக்கின் மஞ்சள் நிறமாக இருக்கும்.

ப - உ : இலே, காய், பட்டை, வேர்.

சுவை—கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு

இலை - காய், பழம்.

செய்கை : வீக்கமுருக்கி—சோபநாசிநி—Deobstruent
ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue
உரமுண்டாக்கி—பலகாரி—Tonic
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
குவர்.
பெருமலம்போக்கி—விரேசனகாரி—Cathartic.

(தே.கா.)

குணம் : இதன் பட்டை, கரப்பான், ஐய சுரம், புண், கழலை இவைகளை யும், இலை, மந்தம் மேகம் இவைகளையும் ஒழிக்கும். ஒளியைத் தரும்.

பட்டை கரப்பனொடு பாரச்சி லேஷ்மசுரம்
ஒட்டிநின்ற புண்கிரந்தி ஓட்டுங்காண்—மட்டலரை
ஏந்து நுணாவின் இலைமந்தம் தீர்த்துநல்ல
காந்திதரு மேகமடுங் காண். (அ.கு.(

வ - கு : **நுணாப் பட்டைத் தைலம்**—(தன்வந்தரி தைலம் 500).

பட்டை 680 கிராம், நீர் 5,600 மி.லி. இதை எட்டில் ஒன்றாகக் குறுக்கி, இத்துடன் இளநீர் 700 மி.லி. பழச்சாறு 700 மி.லி. எண்ணெய் 2,100 மி.லி. கூட்டி, தைலமாக இறக்கித் தலைமுழுகிவர, காய்ச்சல், முறை காய்ச்சல், குன்மம், புண், அரையாப்பு, கழலை முதலியன போகும்.

**மாந்தத்துக்குப் பச்சிலைச்சாறு**—(பாலவாகடம்).

நொச்சிலைச்சாறு, பொடுதலைச்சாறு, நுணாவிலைச்சாறு, வேலிப்பருத்திச் சாறு இந்நான்கும் ஓர் எடை கலந்து கொடுக்க ஒடு மாந்தம் போம்.

**மாந்தத்துக்குக் கருக்குக் குடிநீர்**—(பாலவாகடம்).

நுணாயிலை, நொச்சியிலை, வேலிப்பருத்தியிலை, கழற்சிக்கொடியிலை, வகைக்கு ஒரு பலம் எடுத்து, சட்டியிலிட்டு வறுத்துக் கருக்கி, நீர் ஒரு படி விட்டு அடுப்பேற்றி, ஓமம், வசம்பு, சுக்கு, மிளகு, பொடுதலை, பெருங் காயம், திப்பிலி ஆகியவற்றை நல்லெண்ணெயில் சிவக்க வறுத்துப் பொட்டணங்கட்டி அந்நீரிற் போட்டு, எட்டிலொன்றாகக் காய்ச்சி, ஒரு சங்கு (8 கிராம்) அளவு கொடுக்க, மாந்தமெல்லாம் போம்.

பா - வா : நுணாவிலை, ஓமம், பொடுதலையிலை, நொச்சியிலை, வேளை வேர், பூண்டு, வசம்பு, இவற்றை நறுக்கி வறுத்துக் குடிநீர் செய்து கொடுக்க, மாந்தம் நீங்கும்.

பா - வா : நுணாவீர்க்கு, உத்தாமணியிலை, வேளைவேர், நொச்சியிலை, பொடுதலையிலை, முருங்கையீர்க்கு, ஓரெடையெடுத்து வறுத்து, நீர் விட்டு அத்துடன், ஓமம், திரிகடுகு, வசம்பு சேர்த்து 1/8 குறுக்கி வடிகட்டிக் கொடுத்துவர, மாந்தம்போம்.

**போர் மாந்தக் குடி நீர்**

பா - வா : நுணா, நொச்சி, மா, புளி, வேம்பு, கொடிவேலி இவை களின் ஈர்க்கு, பொடுதலைக் கொடி வகைக்கு ஒரு பலம், பூண்டு, திப்பிலி, ஒரு துட்டெடை இவற்றைப் பாண்டத்திலிட்டுத் தண்ணீர் 5,600 மி.லி. விட்டு 700 மி.லி. யாக வற்றவைத்து, 8 கிராம் விகிதம், காலை மாலை மூன்று நாள் கொடுத்துவர, போர்மாந்தம் நீங்கும்.

**மாந்தகண எண்ணெய்.**

பா - வா : நுணா இலைச்சாறு 1,400 மி.லி. சிற்றாமணக்கெண்ணெய் 1,400 மி.லி. உள்ளிச்சாறு 1,400 மி.லி., வில்வக்கொழுந்து 68 கிராம்

கருஞ்சீரகம் 8 கிராம், கடுக்காய் 16 கிராம் வெங்காரம் 8 கிராம் இவற்றோடு நெய்யையும் சாற்றையும் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்சி, அதில் வில்வக்கொழுந்து, கருஞ்சீரகப்பொடி, கடுக்காய்ப்பொடி இவற்றைச் சேர்த்துப் பின் வெங்காரத்தைப் பொரித்துக் கொதிக்கும் போது சேர்த்துப் பதத்தில் வடித்துக்கொண்டு, 8 கிராம் புகட்ட, மாந்த கணங்கள் எல்லாம் போம்.

**மாந்தகண சுர எண்ணெய்**

பா - வா : நுணாவிலை அரை படி, சிற்றாமணக்கெண்ணெய் ஒரு படி, உள்ளிச்சாறு 356 மி.லி., வெந்தயம் 17 கிராம் இவற்றை அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொண்டு,கால் பலம் வீதம் கொடுக்க, மாந்த கண சுரம் நீங்கும்.

நுணாவிலைக்கற்கம், நல்லெண்ணெய் ஒரெடை சேர்த்துக்காய்ச்சி, இறக்கிக் கற்கத்தை உள்ளுக்கும், எண்ணெயை வெளியிலும் போட, வெண் புள்ளி நீங்கும்.

நுணாக்காய், உப்பு ஒரெடை எடுத்து, ஒரு குடுவைக்குள் வைத்துச் சீலை மண் செய்து, பத்து வரட்டியில் புடம் போட்டு எடுத்துப் பொடித்துப் பல் துலக்கி வர, பல் சொத்தை, பல்லரணை முதலிய பல்நோய்கள் போகும்.

காயைப் பிழிந்து சாறெடுத்துத் தொண்டையில் பூச, தொண்டை நோய் நீங்கும் அல்லது மணப்பாகு செய்தும் குடிக்கலாம்.

பழத்தையும் இலையையும் குடிநீரிட்டுக் கொடுக்க, சூதகத்தைச் சரிப் படுத்தும்.

வேருக்குக் கழிச்சலை உண்டாக்கும் தன்மை உண்டு.

இம்மரத்தினின்று ஒரு வகைச் சாயம் எடுக்கிறார்கள்.

மரப்பட்டையைச் சிதைத்து வெந்நீரில் சேர்க்க, ஒரு வித செம்மஞ்சள் நிறமாக நீர் மாறும். இதில், வேட்டி குட்டைகளைத் துவைத்துக் காயப் போடச் சாயமேறும். பார்வைக்கு அழகாகவிருக்கும்.

நுணாவின வூறுகாய் நுகரவே தனையெலாங்
கணுடவி போய்விடுங் காயநன் றாகுமே.

(பொ-ள்.) நுணாவை ஊறுகாய் செய்து கற்பமுறையாய்த் தினந் தோறும் புசித்துவர, எல்லா நோய்களும் நீங்கும், உடல் வலுக்கும்.

---

## 377. நெட்டிலிங்கம்—Nettilingam

இஃது, ஓங்கி வளருகின்ற பெரிய மரம் ; இந்நாட்டில் சாலையோரங் களிலும், வீடுகளிலும் வைத்துப் பயிராக்கப்படுகின்றது. இதையே சிலர் அசோகு என்று தவறாகச் சொல்லுகின்றனர்.

**ப-உ :** பட்டை.

**சுவை**—துவர்ப்பு, **தன்மை**—தட்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை** { உரமாக்கி—பலகாரி—Tonic.
துவர்ப்பி—ஸ்ங்கோசனகாரி—Astoringent.

**குணம் :** இதனால் கிரகணி, அதிசாரம், சீதபேதி, பெரும்பாடு முதலியன தீரும்.

**வ-கு :** பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்படி நோய்கள் நீங்கும்.

பட்டையைக் காடிநீரிலிட்டு ஒரு நாள் ஊறவைத்துக் கோதை நீக்கி, வடித்த நீரால் புண் புரையைக் கழுவ இவை குணமாகும்.

## 378. நெய்ச்சிட்டி—Neichatti

**Vernonia cinerea.**

**Eng: Ash coloured Flea bane.**

**வே. பெ: நெய்ச்சிட்டி, சகதேவி, தேவகந்தம், சிற்றிலே**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Mertila-karni.** | **Kan.** | **Sahadevi.** |
| | | **S** | **Sahadevi.** |
| **Mal.** | **Puvankuruntal.** | **Hind.** | **Shadevi.** |

இப்பூண்டு வங்காளத்திலும், இந்தியாவின் கீழ்க்கரை மேற்கரை யோரங்களிலும் வளருகின்றது.

ப-உ : சமூலம்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

சமூலம்.

செய்கை { வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diapharetic.
விதை
உடற்றேற்றி வ்யரதாபேதகாரி—Alterat've.
புழுக்கொல்லி க்ருமிநாசநி—Anthelmintic.
நச்சரி –விஷநாசநி—Antidote.

குணம் : இஃது, ஆண்மையையும், அழகையும், கண் ஒளியையும், பசியையும் உண்டாக்கும். நாவறட்சி, வெள்ளை, உட்சூடு, இரச கெந்தகம், முதலியவற்றால் உண்டான வாய்ப்புண், அழற்சி, வாந்தி இவைகளை நீக்கும். வேப்பெண்ணெய்க்குரிய கசப்பை விலக்கும்.

நெய்ச்சட்டி யென்றால் நிறையுமெய்யு சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே!—வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டையழ லுந்தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான். (அ.கு.)
தூயழகு றப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந்—தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக் கிடும்வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு. (தே.கு.)

வ-கு : இதனைக் குடிநீரிட்டுக் குடிக்க, இது மேற்கூறிய நோய்களைப் போக்கும்; நற்குணத்தைக் கொடுக்கும்; சுரத்தைக் கண்டிக்கும். இலையைச் புற்கைசெய்து போட, நரம்புச் சிலந்தி மாறும். பூவின் ரசம், கண் சிவப்பை மாற்றும்.

வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடலிலுண்டாகும் வீக்கங்கள் நீங்கும். விதையைப் பொடித்து வெல்லத்தில் வைத்துக்கொடுக்க, புழுக்கள் சாகும்.

விதையைக் குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுக்க, இது தோலைப்பற்றிய நோயைத் தீர்ப்பதுமன்றி, அவர்கள் உடலையும் தேற்றும்.

## 379. நெய்தற்கிழங்கு—Neitharkizhangu.

வே. பெ: ஆம்பல், கயிரவம், குமுதம், கைரவம்.

Nymphea alba.

Eng : White water lily.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tellakaluva | Sans. | Kumudam. |
| Mal. | Nirmabal | Hind. | Nilofar. |
| Kan. | Bile-Naidile | Duk. | Alliphul |

இது குளம் குட்டை முதலிய நீர்நிலைகளில் வளருகின்ற பூண்டு; இந்தியா முழுவதும் கிடைக்கும். இதில் அநேக விதங்களுண்டு.
ப-உ : பூ, வேர், கிழங்கு.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம் பிரிவு—இனிப்பு.

செய்கை :

பூ.

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.

கிழங்கு.

உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.

குணம் : இதனால், அக்கிப்புண், எரிச்சல், முக்குற்றம் வெள்ளை குருதிக்கழிச்சல், அழல் நோய் ஆகியவை போம். விழிக்குக் குளிர்ச்சியும், ஆண்மையும் உண்டாக்கும்.

கண்ணுங் குளிருமக்கி காணுது காந்துபித்தம்
எண்ணுந்தோ டம்மேகம் ஏகுங்காண—பெண்ணே!
வயிற்றுக் கடுப்பிரத்த மாறுநெய்த லுக்குப்
பயித்தியம்போம் விந்தூறும் பார். (அ.கு.)

வ.-கு. : 50 கிராம் பச்சை பூ இதழ்கள், அல்லது 25 கிராம் உலர்ந்தபூ, 35 கிராம் சருக்கரை, 170 கிராம் நீர் இவற்றைச் சேர்த்து மணப்பாகு செய்து கொடுக்க, கண்ணுக்குக் குளிர்ச்சியையும், தலை மூளைக்குத் தெளிவையும் தந்து, வெப்பத்தையும் தணிக்கும். தமரகத்துப் பெரு ஓட்டத்தை தன்னிலைப்படுத்தும்.

பூவினுள் அமைந்திருக்கும் மகரந்தத்தூள்களை உலர்த்திக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடல் எரிச்சல் பெரும்பாடு இவைகள் தணியும்.

விதைகளை உலர்த்திக் குடிநீரிட்டுக் கொடுக்க, நீரிழிவில் காணும் நீர் வேட்கை தணியும்.

வேர், கிழங்கு இவைகளை உலர்த்திப் பொடித்து, சருக்கரை பால் சேர்த்து, மூலம், வயிற்றுவலி முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

## 380. நெருஞ்சில்—Nerunjil

வே - பெ : திரிகண்டம். திரிகண்டகம், திரிதண்டம், நெருஞ்சிபுதும், அசுவசட்டிரம், சுவதட்டம், கோகண்டம், காமரசி, சுவாதுகண்டம், கிட்டிரம், கோண்டம், சுதம்.

Tribulusterrestris,

Eng : Small Caltrops.

| | |
|---|---|
| | Sans. Gokshura. |
| Tel. Palleru. | |
| Mal. Nerunji | Hind. Gakhru |

குறிப்பு—(Remark)—

இது, தரையில் படரும் ஒரு வகை முட்செடி. முட்கள் மாட்டின் கொம்பைப் போன்று பிரிவுடையன. பூக்கள் மஞ்சள் நிறமாயிருக்கும். இதில் சிறு நெருஞ்சில், பெருநெருஞ்சில், அல்லது யானைநெருஞ்சில் என்னும் பிரிவுகளுமுண்டு. நெருஞ்சிலுக்கு யானைவணங்கி என மற்றொரு பெயருமுண்டு.

இவைகள் குணத்தில் மிகுதியாய் மாறுபடுவதில்லை.

ப. உ. : செடி முழுமையும்.

சுவை-துவர்ப்பு, இனிப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி— Demulcent.
- உரமாக்கி—பலகாரி Tonic.
- ஆண்மைப்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

### நல்ல நெருஞ்சில்.

குணம் : இதனால், சொட்டு நீர், சுரவெதும்பல், கல்லடைப்பு, நீரடைப்பு, முடவாயு, வெள்ளை, சிறுநீர் எரிச்சல், முக்குற்றம், நீர்வேட்கை, வெப்பம் ஆகியவைகள் நீங்கும்.

நல்ல நெருஞ்சிலது நாளுங்கி ரிச்சாரத்தை
வல்ல சுரமனலை மாற்றுங்காண்—மெல்லியலே!
மாநிலத்தில் கல்லடைப்பும் வாங்காத நீர்க்கட்டும்
கூனுறுமெய் வாதமும்போக் கும். (அ.கு.)
மேகவெட்டை நீர்ச்சுறுக்கு வீறுதிரி தோடம்புண்
வேகாசுர தாகவெப்பம் விட்டொழியும்—போகந்
தருஞ்சின் மதலைமொழித் தையலே ! நல்ல
நெருஞ்சி லதனை நினை. (அ.கு.)

### நெருஞ்சில்வித்து.

இதனால், சிறு நீர்க்கட்டு, சிறுநீர் எரிச்சல், சதையடைப்பு, கல்லடைப்பு ஆகியவை நீங்கும்.

சொல்லொண்ணா நீர்க்கட்டு துன்மா மிசமருகல்
கல்லடைப்பெ னும்பிணிகள் கண்டக்கால்—வல்லக்
கருஞ்சினவேற் கண்மாதே ! காசினிக்குள் நல்ல
நெருஞ்சிநறும் வித்தை நினை. (அ.கு.)

### யானைநெருஞ்சில்.

இதனால், மேகம், வெண்புள்ளி, கல்லடைப்பு, எலும்புருக்கிநோய் முதலியன தீரும். உடம்பெரிச்சல், நீர்வேட்கை, அழல் இவையும் நீங்கும்

மேகத்தைப்போக்கிவிடும் வெண்குட்டந் தானொழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண்—நாகத்தாந்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே!
யானை நெருஞ்சிலது. (அ.கு.)

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே! எலும்புருக்கி மாற்றுங்காண்—மேனிதனில்
உள்ள எரிச்சல் உழலையுள் தாகமொடு
தள்ளுபித்த மும்போக்குந் தான். (அ.கு.)

### செப்பு நெருஞ்சில்.

இதனால், முப்பிணி, வெப்பம், வெண்ணீர் நோய் இவைகள் போம்.

செப்புநெ ருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டுங்காண்—செப்பிரிய
சுக்கிலமே கம்போர்க்குந் தொல்லையனல் மாற்றும்
மிக்கு மருந்துநீ விள். (அ.கு.)

### சிறுநெருஞ்சில்.

வ-கு: இதன் காயையும் வேரையும் பச்சரிசியோடு வேகவைத்து கஞ்சியை வடித்துச் சருக்கரை கூட்டி, வெள்ளை, நீர்க்கடுப்பு இவைகளுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம்.

நசுக்கிய நெருஞ்சிக்காய் 68 கிராம் கொத்துமல்லிவிதை 8 கிராம் நீர் 680 கிராம் இவைகளை நேர் பாதியாய்ச் சுண்டவைத்து வடிகட்டி, 40 மி.லி. வீதம் தினம் இருவேளை கொடுத்துவர நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, நீர் எரிச்சல் முதலியன நீங்கும்.

இதன் விதை நீரைப் போக்கும். இதர சரக்குகளுடன் சேர்த்தும் கொடுக்கலாம்.

விதை 103 கிராம் வால்மிளகு, சிறுநாகப்பூ, ரேவல்சின்னி, வெடியுப்பு வகைக்கு 35 கிராம் இவைகளை நன்றாய்ப் பொடித்துச் சேர்த்து வைத்துக் கொண்டு, இதில் 1—2 கிராம் கொடுத்துவர, தமரக நோயோடு கூடிய வீக்கங்கள் நீங்கும்.

விதையுடன் சிலாசத்தும் சேர்த்துச் சிறுநீர்க்கட்டு நோய்க்குக் கொடுக்கலாம்.

காயோடுங்கூடிய செடியை இடித்து, வெள்ளாட்டின் பாலில் ஊறவைத்துப் பிழிந்து வடிகட்டி, தேன் சேர்த்துக் கொடுத்துவர, ஆண் தன்மையைப் பிறப்பிக்கும்.

நெருஞ்சில் $12\frac{1}{2}$ சேர், நீர் 64 சேர் இவற்றை நாலிலொன்றாய்க் காய்ச்சி வடிகட்டி, $6\frac{1}{4}$ சேர் சருக்கரை சேர்த்துக் காய்ச்சிப் பாகாக்கி, அத்துடன் சுக்கு, மிளகு, திப்பிலி, கருவாப்பட்டை, ஏலம், சிறுநாகப்பூ, சாதிக்காய், வெள்ளரி விதை வகைக்கு 16 தோலா மூங்கிலரிசி $\frac{1}{2}$ சேர் இவைகளை நன்றாய்ப் பொடித்து, மேற்கூறிய பாகுடன் சேர்த்துக்கிளறி இலேகியமாக்கிக் கொள்ளவும். இதில் 24 கிராம் வீதம் கொடுக்க, சிறுநீர் எரிச்சல், நீரடைப்பு, சதையடைப்பு முதலியன நீங்கும்.

நெருஞ்சி சமூலம் 10, திரிகடுகு வகைக்கு 5,இலவங்கம் 4, ஏலம் 4, குங்குமப்பூ 1, சாதிக்காய் 3, கச்சக்காய் 4, மூங்கிலரிசி 5 பங்குகளாச் சேர்த்துக் குடிநீரிட்டு, வேளைக்கு ½ முதல் 1 பலம் வரை கொடுக்க, நீர் எரிச்சலோடுங்கூடிய வெள்ளை நோயின் சார்பாய் உண்டாகிற ஆண்மை யின்மையை நீக்கி, ஆண் தன்மையை உண்டு பண்ணும். அனலை மாற் றும்.

நெருஞ்சில் 10, இலவங்கப்பட்டை 5, ஏலக்காய் 6, சருக்கரை 10 பங்கு கள் இவற்றைச் சேர்த்துத் தூளாக்கி, 1 கிராம் இரும்புச் செந்தூரத்தோடு கொடுக்க, காமாலை நோய் நீங்கும்.

---

## 381. நெல்—Nel,

**வே-பெ: தோரை, வை, விரிகி செந்நெல், சாலி, வரி,**

**Oryz asativa.**

**Eng: Paddy (The husked seed is called Rice.)**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vari. | Arab. | Arruz. |
| Mal. | Nella | | |
| Kan. | Bhatha | Hind. | Chaval |
| Sans. | Vrihi | Duk. | Dhan. * |

இஃது, இந்தியாவின் நன்செய் நிலங்களில் விளையும் பயிர்; பர்மா; சீனு, சயாம், முதலிய இடங்களிலும் ஏராளமாகப் புயிரிடப்பட்டு வருகின் றது. உலகத்திலுள்ள மக்களுள் சுமார் 2/3 பங்கினர் இதை உணவாகக் கொள்ளுகின்றனர். நெற்களில் அநேக வகைகள் உண்டு. அவைகளின் பெயரைக் கீழ்க் காண்க. அவற்றிற்குத் தக்கபடி குணக்குற்றங்களும் உண்டு. வடிவத்திலும், எடையிலும், நிறத்திலும், பண்பிலும் ஒன்றிற் கொன்று வேற்றுமையுண்டு. இதிலுள்ள உமியைப் போக்கியபின் அரிசி யாகிறது. இதைப் பச்சரிசியாகவும், புழுங்கலரிசியாகவும் செய்து உண்பர்

**ப-உ: அரிசி, தவிடு, உமி.**

**சுவை-இனிப்பு; தன்மை; தட்பம்; பிரிவு- இனிப்பு.**

**செய்கை:**

**அரிசி.**

உடலுரமாக்கி—போஷணகாரி—**Nutrient.**

**கஞ்சி**

உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—**Demulcent.**
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—**Refrigerant.**

**கார் அரிசி**

**குணம்:** மந்த குணமுள்ள காரரிசி, உடல் பெருக்கையும், வளிக் குற்றத்தையும் வன்மையையும் தரும். இதனால் கரப்பான் உண்டாகும் என்பர்.

காரரிசி மந்தங் கனப்புடலில் தூலிப்பும்
பாரறிய வாயுவையும் பண்ணுங்காண்—நேரே
கரப்பானென் பார்பொருந்திற் காயமது மெத்த
உரப்பாகும் என்றே யுரை. (அ.கு.)

## மணக்கத்தை, வாலான், கருங்குறுவை அரிசி.

இம்மூன்றும் புண்ணையும், சிறுநஞ்சுகளேயும் நீக்கும். கரப்பானை உண்டாக்கும்.

மணக்கத்தை வாலன் கருங்குறுவை மூன்றும்
பிணகுட்டைச் சில்விடத்தைப் போக்கும்—இணக்கமுற
ஆக்கியுண்டாற்கரப்பான் ஆகுமென் பார்கள்சிலர்
பார்க்குள் இதையெண்ணிப் பார். (அ.கு.)

## ஈர்க்குச்சம்பா.

கடவுளுக்குப் படைத்தற்காக வழங்கும் ஈர்க்குச்சம்பா அரிசி, நாவுக்குச் சுவையையும், பார்க்கவிருப்பத்தையும் தரும்; கொஞ்சம் தீக்குற்றத்தையும் உண்டுபண்ணும்.

ஈர்க்குச்சம் பாஎன் றியம்பும் அரிசியது
நார்க்குக் கதியுரிசை நல்குங்காண்—பார்க்குமிடத்
தெல்லார்க்குங் காதல் இயற்றுமற்பப் பித்தமென்பார்
வில்லாரும் பூசைகட்காம் விள். (அ.கு.)

## புழுகுசம்பா.

இதனுல், வனப்பும், காந்தியும், பெரும்பசியும், வன்மையும் உண்டாகும். தாகம் நீங்கும். இஃது உடற்கு அழலேயைத் தரும்.

புழுகுசம் பாவரிசி பூதலத்தில் உண்பார்க்
கழகுமொளி யுஞ்சேர்வ தன்றி—அழலாம்
பசிதாகந் தீரும் பலமுமிக உண்டாம்
முசிவே துடற்சுகமா முன். (அ.கு.)

## கோரைச்சம்பா.

இது, வெறி, உட்சூடு, வெள்ளை, நமைச்சல் இவைகளை நீக்கும்; குளிர்ச்சி என்பார்.

கோரச்சம் பாநற் குளிர்ச்சியென்பார் பித்தத்தைப்
பேரா அழலேப் பிரித்தோட்டுந்—தீராத
மேக மொடுதினவை வீட்டுஞ் சுகங்கொடுக்கும்
மேக முறைகுழலாய்! விள். (அ.கு.)

## குறுஞ்சம்பா.

இஃது, அழல் குற்றம், கரப்பான், ஆண்மை இவைகளைப் பெருக்கும். உடலில் குத்துகின்ற வளிநோயை நீக்கும்.

குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யுய
வெறுங்கரப்பான் உண்டாக்கும் மெய்யில்—நொறுங்கச்செய்
வாதமருள் வாயுவினை மாற்றும்போ கங்கொடுக்குஞ்
சீதவன சத்திருவே! செப்பு. (அ.கு.)

## மிளகுச்சம்பா.

இது நன்மையைக் கொடுத்து, பசித்தீயை வளர்க்கும் பெருவளி முதலிய பலவித நோய்களை அகற்றும்.

மிளகுச்சம் பாவரிசி மென்சுகத்தைச் செய்யும்
அளவில்பல் நோயை அகற்றும்—களகளெனத்
தீபனத்தைத் தூண்டிவிடுந் தீரா வளிதொலைக்குஞ்
சோபனத்தைச் செய்நகையாய்! சொல். (அ.கு.)

### சீரகச்சம்பா.

இனிப்புள்ள சீரகச்சம்ப அரிசியை உண்டவனுக்கு, மீளவும் உண்டதற்குள் பசியைத் தூண்டும். அது வளிநோய்களைப் போக்கும்.

சீரகச்சம் பாவரிசி தின்னச் சுவையாகும்
பேரகத்து வாதமெல்லாம் பேருங்காண்—வாருலகில்
உண்டவுட னேபசியும் உண்டாகும் பொய்யலவே
வண்டருறை பூங்குழலே ! வாழ்த்து. (அ.கு.)

### காளான்சம்பா.

இஃது, உடலுக்கு மலைபோன்ற உறுதியையும் நன்மையையும் உண்டாக்கும் ; சிற்சில வளிநோய்களை நீக்கும்.

காளான்சம் பாவரிசி கல்லையொத்த மாபலத்தைக்
கேளாம லேகொடுக்கும் கேளின்னும்—நீளும்
அனிலத்தைப் போக்கிவிடும் ஆரோக்கி யத்தை
நனிலத்தில் செய்துவிடும் நாடு. (அ.கு.)

### மைச்சம்பா.

**Bot. name : Oryza sp.**

**Fam : Gramninal (Monocot).**

இதனால் சுவையின்மை வாந்தி வளித்தி முதலிய குற்றங்களால் உண்டாகும் நோய்கள் ்பாம்

மைச்சம்பாத் தண்டுலத்தால் வாயருசி போயொழியும்
வெச்சென்ற வாதபித்தம் மெய்யைவிடும்—நச்சுந்
தனிவாயு வுஞ்சுரக்குஞ் சர்த்தியும்போம் இன்பக்
கனிமொழியே ! நன்ருகக் காண். (அ.கு.)

### கோடைச்சம்பா.

இதனால், முக்குற்றத்தால் பிறந்த வாத வலியும், உடலிலுள்ள சிற்சில நோய்களும் விலகும்.

கோடைச்சம் பாவரிசி கொண்டாற் றிரிதோட
வாடைக் கதிக வலியுமுண்டோ—நீடும்
உறுப்பிலுள நோயெல்லாம் ஓதாமல் ஏகும்
கறுப்பிலுயர் வார்குழலே ! காண்.

### காடைச்சம்பா.

இதனால், மேகமனலமும், சில நோய்களும் நீங்கும். உடற்குவன்மை தரும்.

காடைச்சம் பாவரிசி கண்டுதரி சித்தவர்க்கு
நீடுற்ற மேகமனல் நிற்குமோ / —காடைப்
பறவைபோல் நோயும் பறக்கும் பலத்தின்
உறவையெவர் சொல்வார் உரை. (அ.கு.)

### மல்லிகைச்சம்பா.

இஃது வாய்க்குச் சுவையையும், உறுதியையும் தரும். கரப்பான், வெள்ளை மேகம், கண் எரிச்சல் ஆகியவைகளைப் போக்கும்.

மல்லிகைச்சம் பாவரிசி வாய்க்குரிசை யாயிருக்கும்
நல்லது மெய்க்கு நலஞ்செய்யும்—பொல்லாக்
கரப்பானை மேகத்தைக் கண்ணழலை நீக்கும்
உரப்பாம் பலங்கொடுக்கும் உன். (அ.கு.)

### இலுப்பைப்பூச்சம்பா.

இதனால், தீக்குற்றத்தால் விளைகின்ற சிற்சில நோய், தலைக்கொதிப்பு நீர்வேட்கை, வெப்பம் இவைகள் உண்டாகும்.

பித்த மிகப்பெருக்கும் பேருலகில் யாவருக்கும்
உற்ற தலைவலிநோய் உண்டாக்குஞ்— சத்தியமாய்த்
தாக மெடுப்பிக்கும் தழலிலுப்பைப் பூச்சம்பா
ஆகமதில் நோய் வளர்க்கும் ஆய். (அ.கு.

### மணிச்சம்பா.

இஃது நீரிழிவை விலக்கும்; உடற்கு நன்மை பயக்கும்; மூத்தோரை யும் இளையவரையும் வளர்க்கும்; பசியை உண்டாக்கும்.

நல்ல மணிச்சம்பா நாடுகின்ற நீரழிவைக்
கொல்லும் மிகுந்தசுகங் கொண்டளிக்கும்— மெல்லப்
பசியளிக்கும் மூத்தோரைப் பாலர்களை நாளும்
முசியாம லேவளர்க்கும் முன். (அ.கு.)

### வளைதடிச்சம்பா.

இதனால் வளி, தீக்குற்றங்களின்பெருக்கு, வயிறு உளைதலுடன் உப்புசம், கரப்பான், மிகுமந்தம் உண்டாகும்.

வளைதடிச்சம் பாவிற்கு வாதபித்தம் உண்டாம்
உளையும் மடிபொருமி யுப்பும்—கொளகொளெனத்
தானே கரப்பானுந் தாங்கொணு மந்தமுமாந்
தேனே ! யிதனைத் தெளி. (அ.கு.)

### கைவரைச்சம்பா.

இதனால், உடற்கு மலைபோன்ற வன்மையும், ஆண்மையும் உண்டாகும் இஃது உடற்கு நன்று.

கைவரைச்சம் பாவரிசி கண்டால் அவரவர்தம்
மெய்வரையாம் என்றும் மிகுபலமாம்——மையல்
அடையாதென் பார்கள் அடர்சுக் கிலமும்
உடையா ததிசுகமாம் ஓது. (அ.கு.)

### செஞ்சம்பா.

இஃது கிளைக்கின்ற சிரங்குகள், பெரும்புண், யானைச்சொறி இவற்றை உண்டாக்கும் ; மிகுபசியைக் கொடுக்கும்.

செஞ்சம்பாத் தண்டுலத்தால் தீராச் சிறுசிரங்கும்
விஞ்சுபுண்ணும் வன்சொறியும் மெய்க்கணியாம்—விஞ்சும்
அதிகபசி தானே அணங்கரசே ! இந்தப்
பதியதனில் நாளும் பகர். (அ.கு.)

### கல்லுண்டைச் சம்பா.

சுவையுள்ள இதை உண்பவர்க்குப் பேசுந் திறமையைத் தரும் ; குத்துச் சண்டைக்காரரும் எதிர்க்கக்கூடாத வன்மையை உண்டாக்கும்.

கல்லுண்டைச் சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்ட பேரெதிர்க்க வாய்க்குமோ—வில்லுண்டை
போலுரையாம் நல்ல புசபலமாம் இன்சுவையாம்
பாலனைய மென்மொழியே ! பார். (அ.கு.)

## குண்டுச் சம்பா,

இதனால் பசித்தீ கெடும். கரப்பான் உண்டாம். நீர்வேட்கை பாம்.

குண்டுச்சம் பாவரிசி கொண்டுண்ணும் பேர்களுக்குப்
பண்டையில்லா மந்தநோய் பாரிக்கும்—அண்டுபடாத்
தாகமெல் லாமொழியும் தையலே! வன்கரப்பான்
தேகமெல் லாம்பரவுஞ் செப்பு. (அ.கு.)

## குன்றிமணிச் சம்பா.

இதை உண்ணில், வளி நோய்கள் விலகும் உடல் வலுக்கும், ஆண்மை பெருகும்.

குன்றி மணிச்சம்பா கொண்டால் அனில மறும்
வென்றி தரும்பல மிகுக்குங்காண் — துன்றியநோய்
எல்லாம் பறக்குமுறை இந்திரியப் புஷ்டியுண்டாம்
நல்லா ரறிய நவில். (அ.கு.)

## அன்னமழகி.

மிகுந்த சுவையுள்ள அன்னமழகி அரிசி, சகல சுரங்களையும், வெப்பத்தையும் போக்கி, உடற்கு நன்மை பயக்கும்.

அன்ன மழகியரி ஆரோக்கிய ங்கொடுக்குந்
தின்ன வெகுருசியாஞ் செப்பக்கேள்—இந்நிலத்து
நோயனைத்துந் தூளாய் நொறுங்கத் தகர்த்துவிடுந்
தீயனலைப் போக்குந் தெளி. (அ.கு.)

## அரிசிகளின் பொதுப்பண்பு

நிலத்திலே விளைகின்ற நன்செய் புன்செய் பயிர் வகைகளின் பெய ரையும், சுவையையும், அளவிடுதற் கரிதேயாயினும், அவற்றைப் பார்த், வரையிலும், உண்பதற்கு சுவை பொருந்தியனவையே யாகும்.

செந்நெல் வகைகுஞ் சிறுதா னியவகைக்கும்
இந்நிலத்தி லுண்டோ இலக்கென்ப—உண்ணுங்கால்
கண்டமட்டி லேபெயராங் கண்ட அவரவர்கள்
உண்டமட் டிலேசுவையாம் ஓது.

## பச்சை அரிசி பொதுப்பண்பு

பத்தியத்தில் விலக்கான பச்சை அரிசியினால், மந்தம் உண்டாம். மிகுந்த வன்மை உண்டாகும். பித்த எரிச்சல் நீங்கும்.

சுத்த அனிலமந்தந் தோன்றுமெரி பித்தம்போம்
பத்தியத்தில் எண்ணார்கள் டண்டிதர்கள்—மெத்தவுமே
வைச்சுமை தாங்க வலியுண்டாந் தேகத்திற்
பச்சரிசியைப் புசித்துப் பார். (அ.கு.)

## புழுங்கல் அரிசி பொதுப்பண்பு.

இஃது, குழந்தைகள், வளி நோயினர், மருந்துண்போர் இவர்களுக்கு உதவும். உடலுக்கு உறுதி இல்லை.

புழுங்கல் அரிசியது புத்திரர்க்கும் ஆகும்
அழுங்குகின்ற வாயுவிற்கும் ஆகும்—ஒழுங்காய்
நிலைத்தபத்தி யத்திற்கும் நீட்டலாம் மெய்க்குப்
பலத்தைக் கொடுக்காது பார். (அ.கு.)

### பழமை அரிசி பொதுக் குணம்.

இதனைச் சிறியவர் முதல் முதியவர் வரையில் உண்ணலாம். இஃது உடற்குக் குளிர்ச்சி தரும். ஐயநோய் உற்றோர்க்கும் ஆகும். இதனால், சில நோய்களும் போம்.

பழவரிசி மூத்தோர்க்கும் பாலர்கட்கும் ஆகும்
அழல் மிகவும் ஆகும் அருந்தில்—நிழலைப்போல்
ஆகும் உடல்குளிர்ச்சி ஐயமறும் நோயுற்றோர்க்
காகும்பன் னோய்போம் அறி. (அ.கு.)

### கஞ்சிகள்.

### இருமுறைவடித்த கஞ்சி (புனற்பாகம்).

அரிசி ஒரு பலம், நீர் 700 கிராம் சேர்த்து 20 நிமிடம் கொதிக்கவைத்து வடிகட்டி, மீண்டும் அவ்வாறே செய்து, நீரை வடித்துக் கொஞ்சம் சருக்கரையும் ஒரு தேக்கரண்டி பழச்சாறும் சேர்த்து, சுரம், பெரியம்மை, தட்டம்மை, வெள்ளை, நீர்ச்சுருக்கு முதலிய நோய் உற்றோர்க்குக் கொடுத்தல் நல்லது.

மேற்படி கஞ்சியைப் பழச்சாறு நீக்கிக் குன்ம நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இதனால், வளி முதலிய மூன்று குற்றங்களும், சுரவெப்பமும் போகும் இது, குடிப்பதற்கு இன்பமும் உடற்கு ஊட்டமும் தரும்.

புனற்பாக முத்தோடம் போக்கு மருந்தின்
அனற்பாகந் தன்னை யடக்குந்—தனிக்குணங்கள்
அம்மட்டோ ? வாய்க்கிதமா மாரோக்கி யங்கொடுக்குங்
கம்மிட்ட பூவனமே ! காண். (அ.கு.)

### முடிச்சுக் கஞ்சி.

80 மி. லிட்டர் அரிசிக்கு 2,800 மி.லி. நீர் விட்டு, 17 கிராம் சுக்கைத் தோல் நீக்கித் துண்டுத் துண்டாக்கி, ஒரு துணியில் முடிந்து அதில் போட்டு, நாலிலொரு பங்காய்க் காய்ச்சிய கஞ்சியின் தெளிவே முடிக்கஞ்சாம். சுரம், வெப்பம், சிவந்து இறங்குகின்ற சிறுநீர், தீக்குற்றத்தால் உண்டான சிற்சில நோய்கள், குடலைப்பற்றிய செரியாமந்தம் முதலிய நோய்கள் நீங்கும். பசித்தீப் பெருகி, புசிப்பில் விருப்பம் உண்டாகும்.

வாயுசுர நீரிரத்த மாறும் பசியெழும்பும்
ஓயும்பல பிணிகள் உண்மையே—ஆயுங்கால்
உண்டி பருத்திடுமெய் யுள்நோய் ஏகும்முடிச்சுச்
சுண்டியினீர்க் கஞ்சியினுற் சொல். (அ.கு.)

### வடிகஞ்சி, உறைகஞ்சி, கொதிகஞ்சி.

சாதத்தினின்றும் வடித்தெடுக்கப்பட்ட கஞ்சிகள் எல்லாம் மந்தமே யானாலும் விழிக்குக் குளிர்ச்சியாகும். இவற்றால் பெருகிய தீக்குற்றம் நீங்கும். ஆனால், தயிரைப் போலுறைந்த கஞ்சியானது வளியையும் ஐயத்தையும் பெருக்கும். சோறு வேகும் போது எடுக்கின்ற கொதித் தண்ணீர்க் கஞ்சியானது நீர்ச் சுருக்கைப் போக்கும்.

கஞ்சியெலா மந்தமவை கண்ணுக்குத் தான்குளிர்ச்சி
விஞ்சிவரும் பித்தமது விட்டகலும்—உஞ்சும்
அதிகஞ்சி வாயு அதிசீதஞ் சேர்க்குங்
கொதிகஞ்சி வெட்டையைப்போக்கும். (அ.கு.)

### கஞ்சி அன்னம்.

வடித்த கஞ்சியும் அன்னமும் சேர்த்துக் குடிக்கில், உடல் பருக்கும். ஒளியும் ஐயப்பெருக்கும் உண்டாகும். பித்தம் வெப்பம் நீங்கும்.

கஞ்சியன் னத்திற் காயம் பருத்திடு
மஞ்சி வெப்ப மகலுஞ்சி லேஷ்மமோ
விஞ்சி யுற்றிடு மேனி மினுத்திடும்
பஞ்சி போலப் பறந்திடும் பித்தமே. (தே. கு.)

### பால், பொரிசேர்ந்தகஞ்சி, சுடுகஞ்சி.

பசுவின் பாலில் பச்சரிசி சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியால், தீக்குற்றத்தா லுண்டான எரிச்சல் நீங்கும். அறிவும் ஆண்மையும் பெருகும். நெற் பொரிக் கஞ்சியால் தீங்குற்றம் போகும். சோற்றைவடித்தெடுத்த சுடு கஞ்சியால் நீர்வேட்கையும், வளிநோய்களும் போம். கழிச்சல் உண்டாகும்.

சுரைதரு பாலில் வெந்த சோறுறு கஞ்சி கொள்ளில்
எரிதரு பித்தந் தாழும் எழுமதி விந்து வுந்தான்
பொரிதரு கஞ்சி பித்தம் போக்கிடுஞ் சுடுகஞ் சிக்குத்
தரிதரு மலமு வாய்வுந் தாகமும் போகுங் காணே. (அ.கு.)

### கொள்ளுக்கஞ்சி.

கொள்ளும் அரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சியைக் குடிக்கில், மிகு பசியையும் எள்ளைக் கையால் கசக்கிப் பிழியும்படியான வன்மையையும். ஆண்மைப் பெருக்கையும் கிழவர்களுக்கும் உண்டாக்கும்.

கொள்ளுத்தண் டுலமுமாய்க் கூட்டியடுங் கஞ்சியது
கொள்ளுங்காற் றீபனத்தைக் கூறுவதோ—எள்ளை
நசுக்கிப் பிழிபலமு நல்விந் துவுமே
வசிக்குங் கிழவர்க்கும் வை. (தே. கு.)

### நெற்பொரி.

நெல்லைப் பொரித்து உமி போக்கி எடுத்து, கஞ்சி காய்ச்சி நோயாளி களுக்கும் கொடுக்கலாம். முக்கியமாய் வயிற்று நோய், வெள்ளை, நீர்ச் சுருக்கு, சுரம் முதலிய நோயாளருக்கு இது வன்மைதரும். நீர்வேட்கை, வமனம், மந்தம், பெருவயிறு, கழிச்சல், சுவையின்மை முதலிய நோய் களும், மூர்ச்சையும் நீங்கும்.

நெற்பொரியைத் தின்றால் நெடுந்தாகம் வாந்திமந்தம்
மற்பித்த வாதமத மூர்ச்சை—பற்பலவாம்
பேதி யருசியிவை பேருலகை விட்டொழியுஞ்
சாதி மடமயிலே • சாற்று. (அ.கு.)

### நெற்பொறி குடிநீர்.

நெற்பொரியும் பசும்பயறும் வில்வ முன்னை
நேரியசீ ரேலமுடன் சுக்கு நெல்லி
முற்படவே யிளநீர் விட் டெட்டொன் றாக்கி
முதிர்நீரை யுற்றறருந்த முதிர்ந்து போண
சொற்பெரிய சத்திகுன்மஞ் சுரத்தின் சத்தி
துயரமுடன் கிறுகிறுப்பு மூழலை மூர்ச்சை
இப்படியில் நீங்குமென இமையோர் முனிவர்
மிசைத்தனர்பண் ணருந்தமிழ் ழடியைக் கண்டே.

(பொ- ள்) நெற்பொரி, பச்சைப்பயறு, வில்வம், முன்னை, ஏலக்காய், சுக்கு, நெல்லிமுள்ளி இவைகளை ஓர் எடை எடுத்துச் சேர்த்து, இள நீர் விட்டுக் காய்ச்சி, இதை எட்டில் ஒரு பங்காய்க் குறுக்கி, இந்நீரைக் குடிக்கில் நாட்பட்ட வாந்தி ; குன்மம், கிறுகிறுப்பு, உழலை, மூர்ச்சை முதலியன நீங்கும்.

**பொரியுண்டை.**

பாகில் சேர்த்துப்பிடித்த நெற்பொரியுண்டையை உண்ணில், வாந்தி, வெறி, வளி நோய், ஐயநோய் முதலியவை தொலைந்து போகும்.

சர்த்திபித்த வாதந் தணியும் வலுத்தெழுந்த
சுத்தகப வாதந் தொலையுங்காண்—மெத்த
வரியுண்ட வேல்விழியாய் ! வையகத்திற் சாலிப்
பொரியுண்டை நன்றுய்ப் புசி. (அ.கு.)

**மா.**

அரிசியை நீரில் ஊறவைத்தெடுத்து இடித்து மாவாக்கி, அம்மாவை, தீப்பட்டபுண், கொப்புளம் முதலியவைகளின் மேல் தூவிவர, அதனின்றும் ஊறிவரும் நீரை இழுத்துப் புண்ணை ஆற்றும். மேலும், வேர்க்குரு, மேகக்கரப்பான் முதலிய சிறு சிரங்குகளின் மீது தூவி வர, அதினின் றெழும் வெப்பத்தையும் நமையையும் குறைக்கும்.

**புற்கை.**

மாவைக் களி கிண்டி புற்கை செய்து கட்டிகளின் மீது வைத்துக் கட்ட, அவை பழுத்து உடையும் ; வலியும் குறையும். அழுகின புண்களின் மீது வைத்துக்கட்ட, அஃது அவற்றிலுள்ள அழுகிய சதையைப் போக்கிப் புதிய சதையை வளர்க்கும். அதைப் புற்கை செய்து போடுமுன், சிறிது விளக்கெண்ணெய் தடவிச் சூட்டுடன் ஒரு தினத்தில் 3 தடவையாவது போட வேண்டும்.

நெஞ்சில் கோழை கட்டி இருமலினல் வருந்தும் நோயினருக்கு, இந்த மாக்களியைச் சூட்டுடன் முதுகில் இரு தோள் எலும்பு களுக்கு நடுவிலும், மார்பிலும் பற்றிட்டு ஓர் இரவு முழுவதும் விட்டுவைக்க வேண்டியது. இக்களியுடன் சிறிது கடுகுத்தூள் சேர்த்தல் நன்று. [4 பங்கு மாவுக்கு 1 பங்கு கடுகுத்தூள்] பற்றிடுதற்குமுன் மார்பிலும் முதுகிலும் சிறிது எண்ணெய் தடவவும்.

**அரிசி மாவுக்களி.**

தேவையான பச்சரிசி மாவை ஒரு வாயகன்ற சட்டியில் போட்டு, அடுப்பு மேலேற்றிக் கொஞ்சம் தண்ணீர் விட்டு விடாமல் கிளறி, பதத்துக்கு வந்தவுடன் எடுத்து, வெள்ளைத்துணியின் மேல் 1 அல்லது ½ அங்குல கனம் அதைத் தடவி, கொஞ்சம் தேங்காய் எண்ணெய் அல்லது விளக்கெண் ணெயை அதன் மேல் பூசி, கட்டி, சீழ்க்கட்டி, அரையாப்பு முதலியவை களுக்கு வைத்துக்கட்ட நன்மை தரும்.

**தோசை.**

உழுந்து, அரிசிமா சேர்த்துச் செய்த தோசையானது, பித்த கோபத்தை யும், வாத சேத்தும தொந்தத்தையும் நீக்கும்.

மிகுத் தெழுந்த பித்தத்தை வீறு தடக்கும்
அகத்துள் அனிலகபம் ஆற்றுஞ்—சகத்திலுறு
தேசைப் பெறுமயிலே ! தேமொழியே ! மாழத்தின்
தோசைக் குணமிதெனச் சொல். (அ.கு.)

## சம்பாரத் தோசை.

மேலும், பெருங்காயம், மிளகு, இஞ்சி, கருவேப்பிலை முதலிய பரிசுத்த முள்ள பல சம்பாரஞ் சேர்த்த தோசையினால், வாததோடமும், பைத்திய சிலேத்தும கோபமும் விலகும். சுக்கில விருத்தியும் உண்டாகும்.

காயமிளை இஞ்சி கருவேப் பிலைமுதலாந்
தூயபல காரமிட்ட தோசைக்கு—வாயுவிலை
பித்தகப வேகப் பெருக் கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திருவே சொல். (அ.கு.)

## சுத்த இட்லி, சம்பார இட்டலி.

உழுந்து அரிசி ஆகிய மாக்களால் செய்த சுத்த இட்டலியினால் அழல் நீங்கும். காரஞ் சேர்ந்த மேற்படி மாக்களால் செய்த சம்பார இட்டலியை உண்ணில் முக்குற்றங்கள் பெருகாது.

வெறுமாவின் இட்டலிக்கு வேகமறுங் காரம்
பெறுமாவின் இட்டலியைப் பேசில்—அறுமனிலம்
ஐயபித் தங்கள் அதிகரிக்கு மோமாரன்
நய்ய 'வெய்யுங்கண்ணாய் ! நவில். (அ.கு.)

## பிட்டு

அரிசிமாவில் பிட்டு செய்து உண்பவருக்கு, வன்மையும், உளளில் வளி வெப்பமும் உண்டாகும். பெண்களின் மங்கைப் பருவகாலத்தில் மித மின்றி ஒழுகுகிற குருதி கட்டுப்பட்டுத் தெளிவை உறும்.

செம்புனலுங் கட்டுந் தெளியும் உரமாகும்
வெம்பனிலம் உட்புறத்தில் வீறுங்காண்—செம்பழத்தை
வட்டைப் பழிக்கும் வன்முலைமா தே ! யரிசிப்
பிட்டைப் புசிப்போர்க்குப் பேசு. (அ.கு.)

## முறுக்கு.

அரிசி மாவினால் செய்யப்பட்ட முறுக்கு, ஐயம், தீ என்னும் குற்றங் களைப் பெருக்கும். வளிக் குற்றத்தைத் தன்னிலைப்படுத்தும்.

ஐயமொடு பித்தம் அதிகரிக்குந் தாழாத
செய்ய அனிலஞ் சிறிதடங்கும்—வையம்
நிறுக்குமிகு கற்பையுறு நேரிழையே ! நாளும்
முறுக்கின் குணமா மொழி. (அ.கு.)

## மோதகம்.

அரிசி மாவினால் செய்யப்படும் மோதகம் அல்லது கொழுக்கட்டை, வளிப் பெருக்கையும், மந்தத்தையும், ஐயப் பெருக்கையும் உண்டாக்கும்.

வாதமுறு மந்தமிகு மாருத வெப்பமுமாஞ்
சீத கபவிருத்தி சேருங்காண்—தீதுறுகட்
மோதகமுஞ் செப்பும் பொருப்பு நிகர்முலையாய்
மோதகமுண் பார்க்கு மொழி. (அ.கு.)

## தேன்குழல்.

தேன் குழலினால், ஐயவளிக் கலப்பும், வெட்பமும், மிகுநீர் வேட்கையும் உண்டாகும். பசி கொஞ்சம் மந்தப்படும்.

ஓங்குங் கபவாதம் உட்டினமு மீறிவரும்
வாங்குஞ் சலங்கொஞ்ச மந்தமுமாந்—தேங்குமிசை
ஆன்குழலு மியாழுமிக வஞ்சுமொழிக் கிஞ்சுகமே !
தேன்குழலுக் காங்குணத்தைர். (அ.கு.)

### அதிரசம்.

அதிரசத்தினுல் ஐயமும் தீயும் மிகும். உடலை ஓம்புவதற்கான சுத்த வாதம் சுழித்து உள்ளடக்கும்.

ஐயமொடு பித்தம் அதிகரிக்கும் எக்காலுந்
துய்ய அனிலஞ் சுழிக்குங்காண்—சையத்
தெதிரசத்தை யூர்வோ னெனுங்கற்பு மாதே !
அதிரசத்தை நன்ருய் அறி. (அ.கு.)

### அவல்.

நெல்லைச் சிறுக நனைத்து உலர்த்தி, சிறிது வறுத்து இடிக்க, தட்டையாகி அரிசி வேறு உமி வேருகும். தட்டையான அரிசிக்கு அவல் என்பது பெயர். இதை நனைய வைத்து நன்ருய்க் கழுவி, குழைய வேகவைத்துத் தயிரில் கொடுக்க, சீதக் கழிச்சல் போம்.

இதை வேக வைத்து வடித்த தண்ணீரை, சீதக் கழிச்சல், பெருங் கழிச்சல், குடல் வலி போன்றவைகளுக்குக் கொடுக்கப் போம்.

### சேர்க்கை அவல்.

அவலில் பாலும் நெய்யும் சேர்த்துண்டால், உடற்கு வன்மை உண்டாகும். அதைத் தயிரில் கலந்துண்ணில் மந்தம் உண்டாகும். மோரில் சேர்த்து உண்டால், அயர்வு, நீர் வேட்கை விலகும். நீரில் ஊற வைத்து உண்டால், மிக்க வாயு உண்டாகும். புளி சேர்த்துண்ணில், பித்த நோய் நீங்கும்.

பானெய்சேர்த் துண்ணில் பலமாந்தி கண்மாந்தம்
தானெய்து மோரயர்வு தாகமெரி—வேனிருக்கு
மப்புளியு மஞ்சுங்கா லாகு மிறையொழியு
மெப்புளியு பித்திலவ லில். (தே.கு.)

### அன்னம், மா, அவல் முதலியவற்றின் பலாபலம்.

அறுசுவையோடு புசிக்கின்ற சோற்ருல், உடலுக்குண்டாகிற வன்மையை விட, எட்டுப் பங்கு அளவான வன்மை மாவும் அவலும் புசிக்கிறதினுலுண்டாகும். இவ் விரண்டை விட, எட்டுப் பங்கு பலம் பாலும் பழமும் உண்பதனுலும், இதைவிட எட்டு மடங்கு வன்மை, கிழங்கு வகைகளையும், களி, மீன் முதலியவற்றைச் சாப்பிடுவதனுலும், இவை எல்லாவற் றையும் விட மேல் எட்டுப் பங்கு பலம் பற்பல நெய்கள் சாப்பிடுவதனுலும் உண்டாகும்.

சோறுக்கெண் கூறாக்கந் தூமா வவலிவைக்கெண்
கூறாக்க முப்பழம்பால் கொள்ளிவைக்கெண்—கூறாக்க
மூன்பலமி வைக்கெண்கூ றாக்கஞ் சுகாசுகத்துந்
தான்பலவ கைத்துப்புந் தான். (தே.கு.)

### சோறு.

பழைய அரிசியைத தவிடு நொய் போகும்படி நன்ருகத் தீட்டி, முழு அரிசியாய் ஆய்ந்து எடுத்து, இளவெந்நீரால் கழுவிச் சற்றேஆற வைத்து அரிசிக்கு மூன்று பங்கு நீர் விட்டு, அடுப்பேற்றி அது நுரை கட்டிக் கொதிக்கும்பொழுது, அரிசியை அதில் போட்டு, முக்காற் பங்கு வெந்தவுடன் கரண்டியால் துழாவி வடித்துக்கொண்டு, மறுபடியும் தணலில் வைத்து, நீர் வற்றிப் பக்குவமாய் இருக்கும் சமயத்தில் வடித்துக் கொள்வதே சோறு. இஃது உணவுக்கு ஏற்றது ; இது வளி, தீ, ஐயம் என்னும் மூவித தேகிகளுக்கும் உதவும் ; பத்தியத்திற்கும் ஆகும் ; அன்றியும், குடலைப் பற்றிய நோய்கள் முழுமையையும் விலக்கும். இதனுல் குற்றமில்லை.

சுத்தவன்னங் குற்றமில்லை தோடங் களையகற்றும்
முத்தரத்தே கிக்குமது முக்கியங்காண்—பத்தியத்திற்
காகுமது முப்பிணிக்கும் ஆம்வியஞ்ச னங்கலந்துண்
ஏகுமுள்நோ யெல்லாமிரங் கி. (அ.கு.

## நன்றாய்ச் சமையாத சோறு.

நட்டரிசிச் சோற்றைப் புசிக்கில், நீரும் எருவும் கட்டும், மறுநாளும் செரிக்காது, உடலிலும் பரவாது.

நன்ருச் சமையா நடுத்தண்டு லச்சோறு
தின்றால் மலசலமுஞ் சிக்குமென்ப—தொன்றேகேள்
மற்றையநா ளுஞ்செரிக்க மாட்டா ததுவுடலிற்
சற்றும்வியா பிக்காது சாற்று. (அ.கு.)

## குழைந்த சோறு.

அளிந்துபோன சோற்றைப் புசிக்கில், பிரமேகம், இருமல், மந்தம், பீநசம் இவை உண்டாகும். இஃது உடற்கு ஊட்டமும் தராது.

குழைந்தசோ றுண்ணிற் கொடுமேகங் காசம்
அழுந்துமந் தாக்கினியு மாறும்—விழுந்திடச்செய்
துர்ப்பலமும் பீநசமுந் தோன்றும் அரிவையர்க்குட்
பொற்பரு மாதே ! புகல். (அ.கு.)

## மிகுசுடுகை அன்னம்.

இஃது, குருதியழல், நீர்வேட்கை, மயக்கம், வெறிநோய், பெருவயிறு இவைகளை உண்டாக்கும்.

அதிசுடுகை யன்னம் அரத்தபித்தம் தாகம்
பிதிரேறு சித்தப் பிரமை—மதரோகம்
என்றுரைக்கு நோய்கட் கிடங்கொடுக்குந் தப்பாது
குன்றுரைக்கும் பூண்முலையே ! கூறு. (அ.கு.)

## கொஞ்சம் சுடுகையுள்ள அன்னம்.

இஃது முப்பிணிகளையும், மூக்கைப்பற்றிய நோயையும் நீக்கும் வாய்க்குச் சுவையும், உடற்கு வன்மையும் தரும்.

அற்பச்சூட் டன்னம்வா தாதிகளாற் பீநசத்தால்
உற்பவித்த நோயை யொழித்துடற்கு—நற்பலத்தைச்
செய்யும் அருசிதனைத் தீர்க்குஞ்சர் வோத்தமமாம்
பெய்யுவளைக் கைமாதே ! பேசு. (அ.கு.)

## பச்சரிசிச் சோறு

இது, வன்மையையும், குழந்தைகட்கு மாந்தத்தையும் உண்டாக்கும்; அழலைத் தணிக்கும்; சிறுநீர் எரிச்சலை நீக்கும்;- இது வலியை உண்டு பண்ணும்.

பச்சரிசிச் சோறு பலங்கொடுக்கும் வாயுமென்பார்
நிச்சயமா கப்பித்தம் நீங்குங்காண்—அச்சமற
மூத்திரக்கி ரிச்சரத்தை முன்பொழிக்குஞ் சேய்க்குமந்த
மாத்திரமுண் டாக்கும் வழுத்து. (அ.கு

## புழுங்கலரிசிச் சோறு.

இதைப் புசிக்கில் வாயுவைப் பெருக்கும்; இது வன்மையைத் தாரா நோயை வரவொட்டாமற்படி தடுக்கும்; இது நோயாளருக்கு நன்று.

தென்புவியி னுளுஞ்செ ரித்துவள ருஞ்சாலி
வனபு புழுங்கல் வடிச ம்—முன்புணவே
வாயுவிலே யத்தால் ரியும்வன் றேயுமிலே
நோயுடையார்க் காமே நுவல். (அ.கு.)

**பாலும் அன்னமும்.**

பாலும் சோறும் உண்டால், அழல், நீர்வேட்கை விலகும். கொஞ்சம் மந்தம், உடல் பருமன், உடல் வன்மை இவை உண்டாகும். இதைக் குழந்தை முதல் கிழவர் வரை உண்ணலாம்.

பாலுமன்ன மும்புசிக்கிற் பன்னுபித்தந் தாகமறும்
மேலுமற்ப மந்தமென்பார் மேனியிடும்—ஞாலமதில்
அப்பொழுதே தாதுவிர்த்தி யாகுஞ் சிசுவாதி
யெப்பருவத் தர்க்குமா மெண். (அ.கு.)

**நெய் அன்னம்.**

நெய்யும் சோறும் கலந்துண்ணில், வன்மை, விழிக்குக் குளிர்ச்சி, சீரணம் இவை உண்டாகும். அழல் நோய்கள் தணியும். இது பத்திய உணவாகும்.

வெறுநெய்யுஞ் சோறுமுண்ணில் வீறுபந் நண்ணுங்
கிறுகிறுத்த பித்தநோய் கிட்டா—தறிவிக்கிங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சி காட்டுமிகச் சீரணமாம்
உண்ணற்குப் பத்தியமா முன். (அ.கு.)

**எண்ணெய் அன்னம்.**

சோற்றில் நல்லெண்ணெய் சேர்த்துண்ணில், வன்மையும், ஆண்மையும், நல்ல பசியும் உண்டாகும். இது வளி, கபக்குற்றங்களால் உண்டான மேக நோய்களுக்கு நன்று.

எண்ணெயுஞ் சோறுண்ணில் என்றைக்கும் மாபலமாம்
பெண்ணுக் கிளையாத பீடுமுறுஞ்—சண்ணுகின்ற
வாதகப மேகம்போ மாறுப் பசியெழுப்பும்
பூதலத்து ளும் புகல். (அ.கு.)

**புளித்த சோறு.**

புளித்த பழைய காடிச் சோறு வெப்பமாம்; தீக்குற்றத்தைப் போக்கும்; இது மந்தத்தினால் வெளுப்பாக இறங்கும் கழிச்சலையும், வாந்தியையம் நீக்கும்.

புளித்தபழங் காடியன்னம் பொங்கனலா நாளுந்
தளிர்த்தபித்த கோபத்தைச் சாடும்—வெளுத்தமல
மந்தத்தை நீருக்கும் வாந்தி தனையொழிக்கும்
அந்த முறுமணங்கே! யாய். (அ.கு.)

**ஊசிய சோறு.**

ஊசிய சோற்றை உண்ணில், உடனே தூக்கமும், வளியும், பித்தஐயப் பெருக்கும் உண்டாகும். இது நொந்து நூலிழைந்த தாகையால் புசியாதிருத்தலே நன்று.

ஊசலன்னம் உண்டால் உடனே வருமுறக்கம்
பேசுவதேன் வாதம் பிரபலமாம்—ஆசித்துச்
சீதளமும் பித்தமும்வி சேடிக்கும் வள்ளையொத்த
காதளவு நீள்விழியாய்! காண். (அ.கு.)

**தயிர்ச் சோறு.**

இஃது உடலின் அழலையும் தீக்குற்றத்தையும் விலக்கும்; உடலைக் காக்கும்.

ஆறு வுஷ்லகற்று மார்ந்தபித்த நோய்போக்குந்
தேருத மெய்யைமிகத் தேற்றுங்காண்—மாரு
மதியோகை கொள்ளும் வதன மயிலே !
ததியோ தனமேலாஞ் சாற்று. (அ.கு.)

### மாமிசஞ் சேர்த்துச் சமைத்த அன்னம்.

ஊன் சேர்த்துச் செய்த சோற்றைப் புசிக்கில், மிகு ஆண்மையும் மந்தமும் உண்டாகும். இஃது ஐயத்தைப் போக்கும்; தீக்குற்றத்தைக் குறைக்கும்; புண் நோயினருக்கு ஆகாது.

ஊனமைத்த அன்னமுண்ணில் உண்டாம் அதிகபலம்
போனமே தோதாதும் பூணுங்காண்—ஆனல்
விரணநோய்க் காகா மிகுமந்த க்ஷீணந்
தருணகப பித்தசம னம். (அ.கு.)

### மோர் சோறு.

மோரும் சோறும் கலந்து புசிக்கில், பசித் தீயைத் தூண்டுவதுமன்றி சிறு நீர் எரிச்சல், நீர்வேட்கை, கழிச்சல் இவைகளைப் போக்கும்.

மோருமன்ன மும்புசிக்கின் மூளும் பசிமேக
நீருங் குதாங்குரமு நீள்பாண்டும்—பேராத
தாகங் கிராணி சலமேறு வீக்கமும்போம்
ஆகவிர ணத்தில்விலக் காம். (அ.கு.)

### பழஞ்சோறு.

இரவில் நீரூற்றிய சோற்றை அந் நீரோடு விடியற் காலையில் அருந்த, ஆண்மை பெருகும். பசித்தியெழும். தேக ஒளியுண்டாகும். வெறி நோய் போம்.

பழஞ்சோற்றை யந்தப் பழையநீரா காரக்
கொழுஞ்சேர்க்கை யோடுதயங் கொள்ளில்—எழுந்தாது
பித்தவா தம்போம் பெரும்பசியா மெய்யெங்கும்
மெத்தவொளி யுண்டாகு மே. (அ.கு.)

### மோர் சேர்ந்த பழையது.

பழையதுடன் மோர் சேர்த்து உண்பவர்களுக்கு, உடல் எரிச்சலும், பித்தம் பிரமை முதலிய நோயும் நீங்கும். ஐயப் பெருக்கும் தூக்கமும் மிகும்.

மோரும் பழையதுமாய் மோடெடுக்க உண்டார்க்குந
தீரும் எரிச்சலெலாஞ் சேயிழையே !—தீராத
பித்தப் பிணியும் பிரமைநோ யும்பறக்கும்
உற்றகபந் தூக்கமிகு முன். (அ.கு.)

### கட்டுச்சோறு.

இதை விடாது புசித்து வரின், உடல் முற்றிலுங் குத்தல், கல்லடைப்பு, இரைப்பு, இருமல், கண்டமாலை முதலிய நோய்கள் உண்டாகும். வெள்ளை யும், வெள்ளையுடன் குருதிக் கழிதலும் போம்.

சூலைசுக்கி லாஸ்மரிசு வாசக சங்கண்ட
மாலை முதலியநோய் வந்தணுகு—மாலுலகில்
துட்ட மிரத்தமொடு தொன்மேக மும்பறக்குங்
கட்டமுதை நீயுண்ணுங் கால். (அ.கு).

## பொங்கல் வகைகள்.

பொங்கல் என்பது அரிசியினின்றும் நீரை வடித்தெடுக்காமல் அந்தப் படியே பொங்க வைத்து எடுக்கிற சோறு. பச்சரிசிப் பொங்கல் புசிக்கில் மந்தம், வயிற்றுப் பெருமல், உடல்வலி, வெப்பம் இவற்றை உண்டாக்கும். சம்பாவரிசிப் பொங்கல் உடற்கு வன்மை தரும்.

பொங்கலெலா மந்தம் பொருமலெனு நோய்விளைக்கும்
அங்கமெலாம் வாதமுண் டாக்குமன—லங்கெடுக்குஞ்
சம்பாநற் பச்சரிசித் தன்பொங்கல் தாதுவிர்த்தி
யென்பார் பெரியோர்க ளெண். (அ.கு.)

## பச்சைப்பருப்புப் பொங்கல்.

பச்சைப்பருப்புப் பொங்கலால், ஆண்மையும் வாயுப் பெருக்கமும் உண் டாக்கும். அழல் தணியும்.

போகமிக உண்டாகும் பொங்கியபித் தந்தணியும்
தேகமதில் வாதமிகச் சேருங்காண்—வாகார்
பொருப்புப்போல் விம்முமுலைப் பூங்கொடியே ! பச்சைப்
பருப்புப்பொங் கற்சோற்றைப் பார். (அ.கு.)

## சருக்கரைப் பொங்கல்.

இஃது சுவையின்மை, வாந்தி, வெறி இவைகளை விலக்கும்.

வாயின் அரோசகத்தை மாற்றிவம னம்போக்கும்
ஆயில்பித்த கோபத்தை யாற்றுங்காண்—நேயச்
செருக்கரைச்செந் தாளாற் றிருத்துமட மாதே !
சருககரைப்பொங் கற்பாதந் தான். (அ.கு.)

## பாற்பொங்கல்.

பாலும் அரிசியுமிட்டுப் பொங்கின சோற்றால், வளி நோய் உண்டாம். இதில் நெய்யும் சருக்கரையும் சேருவதனால் ஐயம் மிகும். சுரத்தினு லுண்டான சூடும் குருதியழலும் நீங்கும்.

ஒப்பிலாப் பாலில் வெந்த உயர்சுவை யன்னத் தாலே
வெப்பிலா வாத முண்டாம் வெவ்வழற் பித்தந் தாழும்
தப்பிலா இதில்நெய் வெல்லஞ் சார்ந்திடுந் தன்மை யாலே
செப்பிலாக் கபமே லாடுஞ் செம்பித்த மொடுக்குங் காணே. (அ.கு.)

## மிளகு பொங்கல்.

இதனை உண்பதனால், ஐயம், அழல், பொருமுகின்ற வாயு, குடலிரைச்சல் இவை விலகும். பசி உண்டாகும்.

மிளகோ தனமருந்த விம்முகின்ற வாதம்
இளகும் பசியு மெழும்புங்—களகளெனக்
கூவும் வயிற்றின் குடலிரைச்ச லுங்கபமுந்
தாவுபித்த முந்தணியுஞ் சாற்று. (அ.கு.)

## புளிச் சோறு.

புளிச்சோற்றால் வாந்தி, சுவையின்மை, வெறி போம்.

வாந்தி யுரமொழியும் வாய்நீர்ச் சுரப்பேகும்
சாந்தியுறுப் பித்தமது சாந்தியாம்—வாய்ந்த
அளியோ வயிலோவென் றையுறச்செய் கண்ணாய் !
புளியோ தனத்தாற் புகல். (அ.கு.)

## கடுகுச் சோறு.

கடுகும் புளியுஞ் சேர்த்தமைத்த உண்டி உண்டால், வளிக்குற்றமும் ஐயக்குற்றமும் நீங்கும்.

உரியகடு கும்புளியு மொவ்வக் கலந்தே
அரியமணத் தோடமைத்த வன்னம்—அருந்திறல்
வாதமொடு ஐயமும்பின் வாங்கி விழுந்தோடும்
சீத மலர்த்திருவே ! தேர். (அ.கு.)

எள்ளுச் சோறு.

இதனை உண்டால், வளித்தீக்கூட்டு நோய்கள் விலகும். ஐயம்பெருகும். உடல் வன்மையும் உண்டாகும்.

செப்பரிய வாதபித்தத் தீமையக் லுங்கபம
துப்பி வளரு முடலிறுகு—முப்பழத்தின்
கள்ளோதுஞ் செய்ய கனிமொழியே நீ கேளாய் !
எள்ளோ தனத்திறு லே.

உழுந்தோதனம்.

உழுந்துச் சோற்றால் ஐயவளிக் கலப்பு நோயும், மந்தமும், உடல் வன்மையும் பெருகும்., தீக்குற்றம் குறையும்.

எஞ்சுகப வாதமிக எறுமதி மந்தமுறும்
விஞ்சுபித் தந்தாழு மெய்யுரக்கும்—அஞ்சும்
எழுந்தோதம் புக்கு மினியநடை மாதே !
உழுந்தோ தனத்திற் குரை. (அ.கு.)

அரிசி மது.

அரிசியைத் தண்ணீர் விட்டு அரைப்பாகம் வெந்தபின் இறக்கிவைத்து, சில மண் செய்து சில நாட்கள் சென்றபின் எடுத்துப்பார்க்கின், புளிப்பேறி யிருக்கும். இந்நீரைச் சிலர் கள்ளுக்குப் பதிலாகக் குடிப்பர். இதைச் சாராயமாக்கி அருந்துவதுமுண்டு. இதைக் குடிப்பதனுல், ஐயத்தையும் நீரேற்றத்தையும் உண்டாக்கும்.

"சாலி மதுவாதத் தாற்சளிநீ ருண்டாக்கும்"

என்பதால் அறிக. (அ.கு.)

தவிடு.

அரிசியைத் தீட்டிப் புடைத்தெடுக்கும் தவிட்டை, வெல்லம் முதலியவை சேர்த்து ஏழை மக்கள் தின்பதுமுண்டு.

இதை "வாய்த்தவிடும் போய் அடுப்புத் தீயும் கெட்டகதை" என்பதால் அறிக. இது மிக்க பலம் கொடுக்கத் தக்கது என்று, மேல்நாட்டார் கருதுகின்றனர். இதனில் வைடமின் "பி" (B1) உண்டு.

இத்தவிட்டை நீர் விட்டுக்குழைத்து, ஆடு, மாடு முதலியவைகளுக்கும், புள்ளினங்கட்கும் உணவாக வழங்குவதுண்டு.

தாள்.

நெல்லின்தாள் கன்று காலிகளுக்குச் சிறந்த உணவாகிறது.

வேர்.

நெல்லின் வேரைப் பச்சையாகப் பிடுங்கிக் கழுவிக் குடிநீரிட்டுக்கொடுக்க, வாந்தி, விக்கல் போம்.

உமி.

நெல்லின் உமி செடிகொடிகளுக்கு உரமாகின்றது. மேலும் அடுப்பிலிட்டு எரிக்கலாம்.

நீசிநீர்.

இரவில் சோற்றில் நீர் விட்டு வைப்பதை பழையது எனவும், அதில் உள்ள நீரை நீசிநீரென்வும் வழங்குவர். இந்நீசிநீர்த் தெளிவைக் குடிக்கின், வளி, தீ, ஐயக்குற்றங்களால் உண்டான வறட்சிகள், வெப்பம் நீங்கும். ஆண்மையும் அழகும் பெருகும்.

வாதபித்த ஐய வறட்சிகளை மாற்றிவிருந்
தாதுவுமுண் டாக்குந்தா கம்போக்கு—மாதர்மெச்ச
வாராகா ரங்கொடுக்கு மாமதுரத்தைக் கொடுக்கு
நீரரகா ரத்தெளிவு நீர். (அ.கு.)

நாகனம்.

வ.பெ—நகம்.

இது தென்னிந்தியாவில் கிடைக்கும்.

(குறிப்பு)—நேர்வாளத்துக்கு நாகனம் என்ற பெயருமுண்டு. ஆகையால் இடம் நோக்கிப் பொருள் கொள்ளவும்.

ப - உ : சமூலம்.

சுவை : கார்ப்பு, துவர்ப்பு, வீரியம் - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி.

குணம் : இதனால் சிரஸ்தாபரோகம், சலதோடம், தலைக்குத்தலுடன் இடிப்பு, மலட்டுநோய், வீக்கம், நீங்காத கண்ணோய், பெருவயிறு இவை போம்.

> வலைவலிநீர் ஏந்நறந் தலையிடிப்பு குத்தல்
> தொலையா மலட்டுநோய் சோபை—நிலைவிழிநோய்
> பாகணச்சொன் மின்னே! பரும்உதர ரோகமும்போம்
> நாகணத்தி னாலே நலில். (அ:கு.)

வ - கு : இதைக் கஷாயமிட்டுச் சாப்பிட மேற்கூறிய நோய்கள் போம். எளிதாக வெதுப்பிச் சூரணம் செய்தும் உபயோகிக்கலாம்.

## 382. நெல்லி—Nelli

**வே - பெ : ஆமலகம், ஆலகம், ஆம்பல், ஆமரிகம், தாத்தாரி, தாத்திரி கோரங்கம், மிறுதுபலா, மீதுந்து.**

**Phyllanthus emblica.**

**Eng : Indian Gooseberry.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Usirika** | **Sans.** | **Amalaki** |
| **Mal.** | **Nellikay** | **Hind.** | **Amlika** |
| | | **Arab.** | **Amlaj.** |
| **Kan.** | **Nellikai** | **Pers.** | **Amila.** |

இது தென்னிந்தியாவில் ஏராளமாக வளருகின்ற மரம்.

முக்கியமாக மலைநாடுகளில் உண்டாகும், இதன் பழம், பச்சையாயிருக்கும்போது வெண் மஞ்சள் நிறமாகவும், உலர்ந்தபின் கருப்பு நிறமாகவும் இருக்கும். இதற்கே "நெல்லி முள்ளி" என்று பெயர். நெல்லிமரவகையில், கருநெல்லி என்றும் அருநெல்லி என்றும் வேறிருஇனங்களும் உண்டு.

ப - உ : இலை, பூ, பட்டை, வேர் காய், விதை.

சுவை - புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, தன்மை : தட்பம், பிரிவு - இனிப்பு.

**செய்கை :**

**இலை, பட்டை, காய்ந்த பழம்.**
**துவரப்பி-ஸங்கோசனகாரி-Astringent.**

**பூ.**
**குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.**
**மலமிளக்கி-மலகாரி-Laxative.**

**பழம்.**
**குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant**
**சிறுநீர்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diretic.**
**மலமிளக்கி-மலகாரி-Laxative.**

**குணம் :** நெல்லிக்காயைப் பகற்போதுண்ணில், வெறி, ஐயநோய், பீநசம், வாய்நீர்ச் சுரப்பு, வாந்தி, மயக்கம், தலைச்சுழலல், மலபந்தம் பிரமேகம் இவை போம். காமன் போன்ற அழகுண்டாகும். அதன்புளிப் பால் துவர்ப்பால் ஐயமும் நீங்கும்.

பித்தமன லையம் பீநசம்வாய் நீர் வாந்தி
மத்தமலக் காடும் மயக்கமுமில்—ஒத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னுட்கா லந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ. (தே.கு.)

நெல்லிக்காய்க் குப்பித்தம் நீங்கு மதன்புளிப்பால்
செல்லுமே வாதமதிற் சேர்துவரால்—சொல்லுமையம்
ஓடுமிதைச் சித்தத்தில் உன்ன அனலுடனே
கூடுபிற மேகமும் போங் கூறு. (வே.கு.)

## நெல்லிமர வேர்.

இதனால் வாந்தி, சுவையின்மை, முக்குற்றங்களால் உண்டான கேடு இவைகள் போம். வயிறு கழியும். பத்தியக் கேட்டால் உண்டான கேடுகள் யாவும் நீங்கும்.

வமனம் அரோசியறும் வாதமுதன் மூன்றுங்
சமன முறுமலமுஞ் சாறும்—அமானசுரம்
புல்லிவரு தோடசந்நி பொல்லாச் செயலும் போம்
நெல்லிமர வேரை நினை. (அ.கு.)

## நெல்லி.

இல்லா மலக மிரண்டு மயின்றனே
யில்லா மலகமிருக்குமே—இல்லாமல்
வாழைக் கனியும் வடையு மிழுது முண்பான்
வாழைக் கனியுன் வைத்த வன். (தே. ய.வெ.)

**பொ - ள்.** நெல்லிமரத்தின் வேர், விரை, பட்டை, ஈர்க்கு, காய், கனி, வற்றல் இவைகளை கற்ப முறைப்படி ஊறுகாய், துவையல், குடிநீர் செய்து, தக்க பத்தியத்துடன் உபயோகித்தால், பல்லை, மகோதரம், சூலைவலி, மேக உஷ்ணம், பாண்டு, பெருவயிறு, மூலம், பெரும்பாடு, சோபை, மூர்ச்சை, வாயு, தனுர்வாயு முதலிய பிணிகள் நீங்கும்.

## நெல்லிமுள்ளியின் குணம்.

நாவுக்குச் சுவையைத் தருகின்ற நெல்லிமுள்ளியால், உட்சூடு எனும் புருக்கி நோய், குருதியழல் நோய், பெரும்பாடு, வெறி நோய், நீரருகல், வாந்தி, வெள்ளை, ஆண்குறிக் கொப்புளம் ஆகிய இவைகள் விலகும். இதை அரைத்து தலை முழுகக் கண் குளிரும்.

ஆகவன லஞ்சசிஅ சிர்க்கென்பு ருக்கிகண்ணேய்
தாக மதிரபித்தந் தாது நஷ்டம்— மேகனத்தின்
இல்லிமுள்ளி போலருகல் எண்கா மியவியங்கம்
நெல்லிமுள்ளி யாற்போ நினை. (தே.கு.)

நல்லநெல்லி முள்ளியது நாக்குக் குருசிதரும்
அல்லல்விரி பித்தம் அகற்றுமதை—மெல்லத்
தலை முழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
ஓலையிழிமே கங்களும் போம் எண். (தே.கு.)

### கருநெல்லி மரத்தின் குணம்.

இது கிடைப்பது அரிது ; முப்பிணி வகைகள் யாவற்றையும் போக்கும் உடலை அழியாமற்படி காக்கும். இதனால் மனக்களிப்புண்டாம் என்பர்.

பதினெந் தெனுஞ்சந்நி பாதந் தயக்கம்
மதிநைந் திடச் செய்வினை மாறும்—பதியிற்
சநித்த கருவுருவந் தானும்வே ருகுந்
தனித்தகரு நெல்லி மரத் தால். (தே. கு.)

### நெல்லிக்கறி.

மூப்புளகா யந்தணிந்து மோகம் பிறக்குமிள
மாப்பிளை போ லேயழகு வாய்க்குமே—சேப்புவருங்
கோமயமுறுங்கறியை கொள்ளவி ரண்டுபங்கா
யாமலக முண்ணமுறை யால்.

(தேரன்-வெண்பா.)

மூப்படைந்தவரும், இளமையுடைய மாப்பிள்ளையைப்போல் அழகுடன் இருக்க வேண்டின், நெல்லிக்கனியை பாகஞ் செய்து உண்ணுதல் வேண்டும்.

வ- கு : நெல்லிக்காயை த் துவையல் செய்து சாப்பிட, சுவையின்மை, வாந்தி இவைகளைப் போக்கும்.

நெல்லிவற்றலைக் குடிநீர் செய்து கொடுக்க, மயக்கம், தாகம், ஓக்காளம் இவை நீங்கும்.

இலைக் கொழுந்தை அரைத்து மோரில் கலந்து சீதக்கழிச்சலுக்குக் கொடுக்கலாம். நெல்லி வற்றலைக்குடி நீர் செய்து சீனி கூட்டிப் பால் சேர்த்துச் சாப்பிட, சூடு, ஆண்குறிப்புண், வாந்தி தீரும்.

### நெல்லிக்காய் இலேகியம்.

2,100 கிராம் நெல்லி வற்றலை 44,800 மி.லி. (45 லிட்டர்) தண்ணீரில் போட்டு எட்டொன்ருய் வற்றவைத்து வடித்திறுத்ததில், 855 கிராம் சருக்கரையைக் கூட்டிப் பாகு செய்து, அதில் அதிமதுரம், கூகைநீர், முந்திரிப்பழம் வகைக்கு 70 கிராம், பேரீச்சம்பழம், திப்பிலி வகைக்கு 105 கிராம் இவைகளை அரைத்து நெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் தேன்விட்டுப் பிசைந்து, வேளையொன்றுக்குப் புன்னைக்காய் அளவு கொள்ள, வாந்தி, காமாலை, பாண்டு, வறட்சி, திமிர்வாயு, சோகை, நீர்ச்சுருக்கு, குன்மம், உடம்பெரிவு தீரும்.

3,400 கிராம் நெல்லிவற்றலை, தூணி நீரில் போட்டு எட்டொன்ருய் வற்ற வைத்து, அதில் 340 கிராம் சர்க்கரையைப் போட்டுப் பாகு செய்து, அதில் சுக்கு, ஓமம், திப்பிலி, மூலம், கிராம்பு, தக்கோலம், ஏலம், குங்கிலியம், வாய் விளங்கம், சீரகம், கொத்துமல்லி, கூகை நீர், அதிமதுரம் வகைக்குப்பலம் ஒன்று இடித்துத்தூவி, ஒரு படி நெய்விட்டுக் கிளறி மெழுகு பதத்திலெடுத்து வைத்துக் கொண்டு, வேளையொன்றுக்கு ஒரு கொட்டைப்பாக்கு அளவு சாப்பிட்டு வர, மேகம், எலும்பைப் பற்றியசுரம், உழலை, காந்தல், நிணக் கழிச்சல், பொருமல், இருமல், ஈளை தீரும்.

மேலும் நெல்லிக்காயைக் கொண்டு செய்யும் முறைகள் பல உள. அவை, தலைமுழுக்கு எண்ணெய், இலேகியம், பொடிவகைகள், குடிநீர் வகைகள், நெய் முதலியன்வாம். இன்னும் இதர முறைகளுமுள. இவையல்லாமல், த்விதிய ப்ராஹ்மிய ரஸாயனம், ச்யவனப்ப்ராச ரஸாயனம், சதுர்த்தாமலக ரஸாயனம், ஆமலகக்ருதம், ஆமலாகவலேஹம், த்விதீய மலாகவலேஹம், கேவலாமலகரஸாயனம், லோஹரஸாயனம் என்னும் இவை போன்றசெய்முறைகளுமுள, அவற்றைப் பிற நூல்களில் காண்க

### நெல்லிக்காய்த் தைலம்.

நெல்லிப்பழச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, கற்றாழைச்சாறு, சிறு கீரைச்சாறு, ஆவின் பால் இவைகள் வகைக்கு 2800 மி. லி. செவ்விளநீர் 11,200 மி.லி. எள்ளெண்ணெய் 4,200 மி.லி. இவைகளும், அதிமதூரம், கோட்டம், ஏலம், குரோசானி, பச்சிலை, பூலா, கத்தூரி மஞ்சள், சாதிக் காய், சாதிப்பத்திரி, திரிகடுகு, திரிபலை, இலவங்கப் பத்திரி, இலவங்கப் பட்டை, பூஞ்சாந்து, சோம்பு, வால் மிளகு இவைகள் வகைக்கு கழஞ்சு 3 ஆவின் பாலில் அரைத்து, மேற்படி சாற்றை எண்ணெயுடன் கலந்து, சிறு தீயில் எரித்து வடித்துத் தலை மூழ்கி வர, கண் மறைவு, மாலைக் கண், கண்நோய் 96, வெட்டை, கைகால் காந்தல், அழல் குற்றத்தால் உண் டாம் நோய்கள், உடம்பெரிவு இவை நீங்கும்.

### நெல்லிமுள்ளி இலேகியம்.

நெல்லிமுள்ளி 700 கிராம், 44,800 மி.லி. (45 லிட்டர்) ஆற்று நீர் விட்டுக் காய்ச்சி 5,600 மி.லி. வற்ற வைத்து வடித்தெடுத்து, சருக்கரை 855 கிராம் போட்டு பாகு வரும் தருணத்தில், அதிமதூரம், கூகை நீறு, திராக்ஷை வகைக்கு 68 கிராம், திப்பிலி பேரீச்சங்காய் வகைக்கு 102 கிராம் இவைகளை மெல்லியதாய்ப் பொடித்து அதிலிட்டு 700 மி.லி. தேன்விட்டுக் கிளறி எடுத்து, புன்னைக்காய் அளவு காலை மாலை இருவேளை யும் இருபது நாள் சாப்பிட்டுவர, காமாலை, பாண்டு, அழற்சி, வறட்சி திமிர் வாயு, சோகை, நீர்ச்சுருக்கு, குன்மம், உடம்பெரிவு நீங்கும். பகை, உப்பு இவைகளை நீக்கவும்.

### நெல்லிமுள்ளியின் குடி நீர்.

பாரிசைந்த நெல்லிமுள்ளி பண்பான சூவிளையுஞ்
சீரிசைந்த சீரகமுஞ் சேர்ந்தசுக்கும்—வேரிசைந்த
சித்தமுட்டி நெற்பொரியுஞ் சேர்த்துக் கியாழமிடில்
பித்தசத்தி விட்டுப்போம் பேசு.

(பொ - ள்) நெல்லிமுள்ளி, வில்வம், சீரகம், சுக்கு, சிற்றாமுட்டி வேர். நெற்பொரி இவைகளை ஒன்று கூட்டிக் குடி நீர் செய்து பருகில், பித்த சத்தி நீங்கிப்போம்.

### 383. நேர்வாளம்—Nervalam.

வே - பெ : வாளம், நேபாளம், சோபி, சேவாலம், சம்பரி, சித்துருப சிறுகுறிஞ்சி, தந்தி, தெந்தி, நாகதெந்தி, நாகதெந்தி. நாகணம்.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nàpàlam | Arab. | Hab-ul-salatin. |
| Mal. | Nérvalam | | |
| Kan. | Jàpala-beeja | Pers. | Bed.-anjir-e-khati. |
| Sans. | Danthi | Hind. | Jamalgotta. |

இஃது நேபாளத்தில் மிகுதியாகப் பயிராவதால், இதற்கு நேபாளம் என்னும் பெயரும் உண்டு; இலங்கை, மொலூக்கஸ் முதலிய நாடு களிலும்பயிரிடப்படுகிறது. இதன் கொட்டை சற்றேறக்குறைய ஆமணக்குக் கொட்டையைப் போல இருக்கும். கொட்டையை உடைத்தெடுத்த பருப்பு மருந்தாகக் கொள்ளப்படுகிறது. பருப்பின் நடுவில் இலை உண்டு. மிகவும் நஞ்சாகையால் இதனை நீக்கி வழங்கல் வேண்டும். பருப்பு எண்ணெய் உடையது; பெருங்கழிச்சலை உண்டாக்கும். இதன் நாற்றம் வாய்க்குமட் டல், வாந்தி, கழிச்சல் இவற்றை உண்டாக்கி உடலில் சிறு கொப்புளங் களையும் உண்டாக்குவதுண்டு.

மேல்நாட்டார் இவ்விதையினின்றும் எண்ணெய் எடுத்து மிகச்சிறிய அளவில் வழங்குகின்றார்கள். இவ்வெண்ணெயின் அளவு ½—2 துளி யாகும்.

ப - உ : விதை.

சுவை—வெகுட்டலுடன் கூடிய கைப்பு. தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { நீர்மலம்போக்கி-வரேசநி-Purgative.
தடிப்புண்டாக்கி-ரேஷாணகாரி-Rubefacient.

குணம் : கழிச்சல் வுண்டாகும், மலாசயத்தைப் பற்றிய பல பிணிகளும், வளி நோயும் போகும்.

வயது முதிர்தோர், சிறு குழந்தைகள், சூல் கொண்ட பெண்கள், நீரிழிவு நோயினர், வன்மை இல்லாதவர் ஆகிய இவர்களுக்கு இதனால் செய்யப்பட்ட மருந்துகளைக் கொடுப்பது நன்றன்று.

## வாளம்.

எந்த வியாதி யினங்களையுஞ் சாடிமல
பந்த வினையைப் பரிபரித்து—வந்தவெப்பை
பாபியென மாட்டுதலால் பாடாண வெம்மையினும்
சோபிமக சோபியென்று சொல்.

(தேரன்-வெண்பா).

வாளமானது, நஞ்சுத்தன்மையை மிகுதியும் பெற்றிருப்பினும், மலத்தை வெளிப்படுத்தி நோய்களைப் போக்கும்.

ஓதி லுதவத் துறுமலம்பன் னோய் விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும்—வாதமறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே ! பண்டிதர் சொல்
நேர்வாளக் கொட்டைதனை நீ.

(அ.கு.)

உரைத்திடு வாத நோய்க்கு முரைகெடு விஷஞ்சந் நீக்கும்
நிரைத்திடு சூலை குன்ம நீண்டிடு மலக்கட் டிற்குங்
கரைத்திடு வாளந் தன்னைக் கதித்திடு மேகத் திற்கும்
அரைத்திடு பித்தத் தோர்க்கும் அகற்றிடு அதனைத் தானே.

குறிப்பு : இதனைத் தனித்து வழங்குவதில்லை.

மேலும், வளி நோய், முப்பிணி, குடைச்சல், வயிற்று நோய், நீங்கும் மேகம் அழல் ஆகியவைகளுக்கு வழங்கலாகாது.

## தூய்மையாக்கும் வழி.

(1) பசுவினது எருவின் பால் 156 கிராம், பசுவின் நீர் 156 கிராம், பழச் சாறு 156 கிராம் இம்மூன்றிலும், நேர்வாளம் ஒரு பலத்தை ஒரு துணியில் முடிந்து போட்டு, தனித்தனியே ஒவ்வொன்றிலும் வேக வைத்து எடுத்து, ஓட்டையும், தோலையும் உள்ளிலையையும் நீக்கிப் பசுவின் நெய் விட்டு வறுத்து எடுக்கவும்.

சோபியெனும் நேர்வாளம் புனித மாகில்
சுராருந்தும் மருந்தாகும் மருந்தாகாது
பாபியஃதே யாகுமஃ தாகா விட்டால்
பண்ணுமுறை எப்படியென் றெண்ண வேண்டாம்
ஆபிரச மாபிரச அருண நாலொான்
ருக்யிதி லிதை முடிந் தடுவா யோர் நாள்
நீபிறகு எடுத்துடைத்து மேலுள் போக்கி
நித்தியமா யதை யுலர்த்தி வைத்துக்கொள்ளே. (தே.கா.)

**வேறு.**

(2) நேர்வாளம் 35 கிராம், நெல்லிப் பழச்சாறு, கையாந்த கரைச்சாறு, பசுவின் எருநீர் இம்மூன்றும் வகைக்கு 85 கிராம் ஆகச் சேர்ந்த 255 கிராமையும் சட்டியிலிட்டு சீலை கட்டி அதன் மீது பருப்பை வைத்து ஒரு சாமம் எரித்து, முளை போக்கி, நிழலிலுலர்த்தி முன்போலவே மேலும் இரண்டு முறையாக மொத்தம் மூன்று முறை செய்து, பசுவின் நெய் விட்டு வறுத்து எடுக்கவும்.

ஆமலகை யாந்தகரை யாமலகத் தின்மழை
யாமலகை யாந்தகரை யத்திடவி—யாமலகை
பத்தரையு மையரையு பார்த்திருதி சோபியடு
பத்தரையு மையரையும் பார்.

இதன் நஞ்சாதற்கு முறிப்பு :

சீரகத்தைத் தேன் விட்டு வறுத்து, தண்ணீர் விட்டுக் காய்ச்சிய குடிநீர் கொடுக்கப்போகும்.

இதனைத் தமிழ் நாட்டில் மருத்துவர் பெரிதும் வழங்குகின்றனர் சரிவரத் தூய்மைப் படுத்தாமல் செய்யும் மருந்துகள் இழுக்கை விளைவிக்கும். முறைப்படி தூய்மைப் படுத்திச் செய்யின் பெயரும் புகழும் உண்டாம் ஆதல் பற்றியே "சுரரருந்தும் மருந்தாகும்" எனத்தேரன் கூறினர் போலும்.

## 384. நொச்சி—Notchi.

**வே -பெ : இந்திரசூரியம், நித்தில், நிர்க்குண்டி, நொர்க்குண்டி,** சிந்துக **சிந்துவாரம்.**

**vltex nigunku**

**Eng. Five leaed chaste tree**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Vàvili** | **Sans.** | **Nirgundi.** |
| **Mal.** | **Notchi** | **Hind.** | **Sambhalu** |
| **Kan.** | **Billneki** | **Duk.** | **Shanbali** |
| | | **Hindi** | **Nirgundi.** |

இஃது இந்தியா முழுவதும் வளருகின்ற ஒரு சிறியமரம்.

இதில் கருநொச்சி, நீர்நொச்சி, வெண்நொச்சி எனப் பிரிவுகள் உ . **வெண்ணொச்சி** எங்கும் கிடைக்கக்கூடியது. **கருநொச்சி** கிடைப்பது அரிது **நீர்நொச்சி** தாமிரவருணி ஆற்றங்கரையிலுண்டு.

**ப - உ :** இலை, பூ, வேர், பட்டை.

**சுவை** - கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு. **தன்மை** - வெப்பம், **பிரிவு**- கார்ப்பு.

**செய்கை :**

**பொது.**
உடற்றேற்றி வ்யதாபேதகாரி—**Alterative.**
புழுவகற்றி (குடல்) க்ருமிநாசநி (கோஷ்ட்)-**Vermifuge.**

**வேர்**
வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—**Febrifuge**
கோழையகற்றி—கபஹரகாரி—**Expectorant.**
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—**Diuretic.**

**பூ**
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.**
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—**Refrigerant.**

**குணம் :** இதனல் முப்பிணியும் வளி நோயும் போகும்.

"..........................க ர நொச்சிற் பட்டையது
துள்ளுசந்நி வாத மகற்றும்." (அ.கு.)

வ - கு : நொச்சியிலையைக் குடிநீரிட்டு வளிச் சுரங்களுக்கு கொடுக்க லாம். குளிர்சுரம், முறைசுரம் இவைகள் தணியும்.

நோயா கலியை நொடிக்கு ளருந்தவெம்மை
யோயா மணுளு முயர்த்துதலுக் —காய
வந்தமுதல் நண்பாகி வாதத்தை யேயுறவாற்
சிந்துவா] [ரங்கனலுந் தீ.

(தேரன்-வெண்பா.)

வெல்லம் சேர்த்துக் காய்ச்சிய நொச்சிக்குடிநீர், உடலின் வெம்மையை (சூட்டை)ப் போக்கி, நாளுக்கு நாள் உடல் வன்மையைப் பெருக்கி, வளிக் குற்றத்தைத் தன்னிலேயில் நிற்கச் செய்யும்.

நொச்சியிலேயை நீரிலிட்டுக் காய்ச்சி, பிள்ளை பெற்றவர்களைக் குளிப்பாட்டு வதுண்டு.

வெந்நீரில் இலேயைப்போட்டு வேகவைத்து நிராவி பிடிக்க, வியர்வை உண்டாகி சுரம் தணியும். வளிக்குற்றத்தால் உண்டான உடல் வலி முதலியனவும் போம்.

தலைவலி, பீநசம் முதலியவைகளுக்கு இதனிலேயைத் தலையணையாக வழங்கக் குணமாகும். அல்லது இலேயைச் சுக்குடன் சேர்த்தரைத்துக் கன்னப் பொறிகளில் பற்றிடத் தலைவலி தீரும்.

இலேயை அரைத்து மண்ணீரல் வீக்கங்களுக்குப் பற்றிடலாம்.

இலேச்சாற்றுல் எண்ணெய் செய்து தலையில் தேய்த்து முழுகிவர, கழுத்து நெறிகட்டு நாளடைவில் போம்.

இதன் சாறு " நிர்க்குண்டித்தைலம் " போன்ற தைலங்களுடன் சேர்க் கப்படுகிறது.

இலேயை வதக்கி ஒற்றடமிட, வீக்கம் கீல்வாயு முதலியன தீரும்.

நொச்சி பொடுதலே, நுணு முதலியன சேர்த்துக் குடிநீர் செய்து குழந்தைகளின் மாந்தத்துக்குக் கொடுக்கலாம்.

நொச்சியிலேச் சாறு, கரிசிலாங்கண்ணிச்சாறு, துளசிச்சாறு இவைகளை ஓர் எடை எடுத்து, ஓமத்தைப் பொடித்துச் சேர்த்து ஊறவைத்து, வேளைக்கு 6 கிராம் வீதம், வளிநோய்க்குக் கொடுக்கலாம் அல்லது நொச்சிலேச்சாறு 6 கிராமில், சிறிது மிளகும் நெய்யும் கலந்தும் கொடுக்கலாம்.

24 கிராம் இலேச்சாறும், 24 கிராம் பசுநீரும் சேர்த்து தினமும் காலேயில் கொடுக்க, இடப்பாட்டீரல் வீக்கம் குறையும்.

வேர்க்குடிநீர் வளிநோயைப் போக்கி, நீர்ப்பை அழற்சியையும் நீக்கும். மேலும், இதை வயிற்றுவலி, வயிற்றுப்புழு நோய் முதலிய நோய்களுக் கும் கொடுக்கலாம்.

பூவை உலர்த்திப் பொடித்து, சிறிது பன்னீர், கற்கண்டு அல்லது தகுந்த துணை மருந்துகளுடன் சேர்த்துக் கொடுக்க, குருதி வாந்தியை நிறுத்தும்.

நொச்சி, மிளகு, பூண்டு, இலவங்கம் சேர்த்து, சிறிதளவாய் மென்று தின்ன, இரைப்பு நோயின் எழுச்சி அடங்கும்.

**நொச்சி.**

**சிந்து வார்த்துணருஞ் சிதக் கழிச்சலறச்**

**சிந்து வார்த்துணைருஞ் சினிநெயுள்.**

(பொ - ள்.) சீதக்கழிச்சலினுல் உண்டாகும் கடுப்பு நீங்க வேண்டுமா யின், நொச்சிக்கொழுந்து, சுக்குத்தூள் இரண்டையும் சேர்த்து மத்தித்து, சர்ககரை கலந்து, பசுவின் நெய் விட்டுககிளறி, ஒரு மண்டலம் புசித்து வரின், அக்கடுப்பை எக்காலமும் வாராமல் தடுக்கலாம். இதனுல் உடலும் வன்மையுறும்.

---

## 385. பச்சிலை—Pachchilai

வே பெ : தமாலதளம், மட்டிலை, பசும்பிடி..

Zanthochymus piotorlns

| | | | |
|---|---|---|---|
| Kan. | **Kama-Kasturi.** | Tel. | Pachchake. |
| Sans. | Patram. | Mal. | Pachchila. |

இஃது ஒரு மணம் உள்ள இலை.

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- கோழையகற்றி—கபஹரகாரி —Expectorant.

**குணம்** - பச்சிலையை, புண், பரு, பேன் இவைகளைப் போகக தேய்த்துக் குளிக்கலாம்.

" பச்சிலைக்குக் கந்தம் பரிமளிக்கும் அவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச்—சொச்சமற
ஒட்டும்." (அ.கு.)

**வ - கு :** இதன் மணத்திற்காக எண்ணெய் முறைகளில் சேர்ப்பதுண்டு.

பச்சிலை, பூலாங்கிழங்கு, கத்தூரிமஞ்சள், சடாமாஞ்சில், வாய்விடங்கம், கசகசா, காாபோக அரிசி, சந்தனம், கிச்சிலிக்கிழங்கு, கோரைக்கிழங்கு இவைகளைப் பொடித்து ஒன்ருய்க் கலந்து வைத்துக்கொண்டு, எண்ணெயில் குழைத்துப் பூசி தலை முழுகினுலும், பொடியைத் தனியாகத் தேய்த்துக் குளித்தாலும் வியர்வைககுரு, சொறி, தினவு, கற்ருழைநாற்றம் போம.

## 386. பண்ணிமோந்தான் கிழங்கு Pannimonthan-Kizhangu.

வே–பெ : முள்ளிக்காய், சிங்காரி

Trapa bispinosa

Eng : Water Chestnut (Indian).

| | | | |
|---|---|---|---|
| Tel. | Parigadda | Sans. | Sringataka |
| Mal. | Mullikkaya | Hind. | Singhara |

இதன் காய்க்கு முள்ளுண்டு. சில இடங்களில் வளரும் இப் பூண்டிற்கு இரண்டு முட்களும், வேறு சில இடங்களில் வளர்வதற்கு நாலுமுட்களும்

உண்டு. முட்கள் நேர் எதிர் பக்கங்களில் இருக்கும். பருப்பின் மேலோடு பச்சையாய் இருக்கும்போது மெல்லியதாகவும், முதிர்ந்த போது கடின மாகவும் இருக்கும். பருப்பு மிக இனிப்புள்ளது. இது இந்தியாவில் எங்கும் ஏரிகளிலும், குளம் குட்டைகளிலும் வளர்கிறது. இது தண்ணீரில் வளரும் ஒரு வகைப் பூண்டு ஆகும்.

ப - உ : பருப்பு.

**சுவை** - இனிப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- வீக்கம்பரப்பி—Discutient.

**குணம் :** இது வெட்டை நீர்வேட்கை முதலியவற்றை நீக்கி, உடலுக்கு வன்மையையும் ஆண்மையையும் தரும்.

வ-கு : இதன் இளந் தண்டை அரைத்துப் புற்றுக்களின் மீது வைத்துக் கட்ட, அவை ஆறும்.

இளந் தண்டின் சாறெடுத்து, கண் நோய்களுக்குக் கண்ணில் விடலாம்.

பச்சை பருப்பு மிகவும் சுவையானது. இதைத் தின்ன, உடலிலெழும் அனல் குறையும்.

முற்றின பருப்பை வறுத்து இடித்து மாவாக்கி உணவாக அருந்துவார்கள். இம் மாவினால், கழிச்சல், உடல் எரிச்சல் இவை நீங்கும்.

இம் மாவோடு பால் சேர்த்துச் சாப்பிட, உடலைப் பெருக்கி வன்மையைக் கொடுக்கும்.

மேற்படி விதை 24 கிராம், கருஞ்சீரகம் 12 கிராம், வெள்ளைச் சருக்கரை 36 கிராம் இவைகளைச் சேர்த்துக் கலந்து ஏழு பாகமாக்கி, நாளொன்றுக்கு ஒரு பாகம் வீதம் ஏழு நாட்கள் கொடுக்கப் பெரும்பாடு நீங்கும்.

---

## 397. பப்பாய் Pappai.

**Carica papaya**

**Eng : Papaw tree.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Boppayi | Arab. | Amba-hindi |
| Mal. | Pappàlam | Pers. | Amba-hindi. |
| Ka | Pappaye | Hind. | Popaiyah. |

இம்மரம், சாதாரணமாக இந்தியாவிலுள்ள எல்லாத் தோட்டங்களிலும் பயிராகிறது ; மலைச்சார்பான நிலங்களில் மிகச் செழிப்பாக வளருகிறது.

ப - உ : காய், விதை, பால்.

**காய், விதை, பால்.**

**சுவை** - கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

பழம்.

சுவை - இனிப்பு, **தன்மை** - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**காய், பால்.**

| | |
|---|---|
| செய்கை | ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue |
| | புழுக்கொல்லி—க்ருமிநாசிநீ—Athelmintic. |
| | பசித்தீத்தூண்டி—Stomachic. |
| | **பழம்.** |
| | கழிச்சலுண்டாக்கி—மலகாரி—Laxative. |
| | உரமாக்கி—பலகாரி—Tonic. |
| | சிறுநீர்பெருக்கி—மூத்திரவர்த்தநி—Diuretic. |

பாலினல் வயிற்றுப் புழு, குன்மம் இவை போகும்.

வ - கு : இலையை வெந்நீரில் போட்டெடுத்து, நரம்புத் தளர்ச்சு, நரம்பு வலி முதலியவைகளுக்கு ஒற்றிடமிடலாம். அல்லது நெருப்பில் வாட்டி வைத்தும் கட்டலாம்.

இலையை நசுக்கி வெதுப்பி, வீக்கம் கட்டி முதலியவைகளுக்கு வைத்துக் கட்டலாம்.

பிஞ்சுக் காயைக் கீறினல் பால் வடியும். இப் பாலிலிருந்து ஒரு வகைச் சத்துள்ள உப்பு எடுத்து, வயிற்று வலி, குன்மம், செரியாமை முதலிய நோய்களுக்குக் கொடுக்கின்றனர்.

பாலுடன், வெங்காரமும் நீரும் சேர்த்துக் குழப்பி, மைக்குரு வேர்க்குரு போன்ற தோலில் எழும்பும் குருவிற்குத் தடவ, அவை விழுந்துவிடும்.

இப்பாலுடன் சிறிது படிகாரம் சேர்த்துக் கரப்பானுக்குப் போட, அவை குணமாகும்.

பால் ஒரு தேக்கரண்டி, தேன் ஒரு தேக்கரண்டி, வெந்நீர் 40 மி.லி. இவைகளை ஒன்றுபடக் கலந்து, நன்ருய்க் குளிர்ந்தவுடன் சாப்பிட்டு, 2-மணி நேரம் கழிந்த பின் ஆமணக்கெண்ணெய் 68 கிராம், பழரசம் 34 கிராம் கலந்து சாப்பிடப் புழுக்கள் விழும். மீளவும் வேண்டுமானல் இரண்டாம் நாளும் சாப்பிடவும். 3 முதல் 7 வயதுக் குழந்தைகளுக்கு 1 உச்சிக் கரண்டி கொடுக்கலாம். இதனல் வயிற்று வலி காணின், சருக்கரையும் தண்ணீரும் கலந்து வேண்டிய அளவு குடிக்க, உடனே நீங்கும்.

வயிற்று, வலி குன்மம் முதலியவைகளுக்கு, இப் பாலைச் சருக்கரை கூட்டின நீர் அல்லது சருக்கரை சேர்ந்த பாலுடன் கூட்டிக் கொடுக்கலாம்.

பழத்தைத் தினமும் புசித்து வந்தால், நன்ருகக் கழியும். வயிற்று வலியும் தீரும்.

காயை உலர்த்தியாவது அல்லது உப்பிட்டு உலர்த்தியாவது சாப்பிட, வலப்பாட்டீரல், இடப்பாட்டீரல் முதலியவற்றின் வீக்கங்கள் குறையும்.

காயைத் தோல் நீக்கிச் சமையல் செய்து சாப்பிடுவது சிலர் வழக்கம். இது மூலைப்பாலைப் பெருக்கும்.

---

## 388. பயறு Payaru.

Phaseolus mungo

வே.பெ. சதிநகம், சதிநம்.

Eng: Peas, Pulse.

இது தானிய வகையைச் சேர்ந்தது. புன்செய் நிலங்களில் விளையும் இதில் அநேக சாதிகளுண்டு. அவை யாவன:

| | |
|---|---|
| 1. சிறுபயறு, பச்சைப்பயறு .. | Phaseolus mungo. |
| 2. எலிப்பயறு, பனிப்பயறு, காட்டுப், பயறு, நரிபபயறு. | Phaseolus trilobatus. |
| 3. துலுக்கப்பயறு, நன்னிப்பயறு, | Phaseolus aconitifolius. |
| 4. காராமணி .. .. .. | Dolichos catiang. |
| 5. தட்டைப்பயறு .. .. .. | Doichos (diferent Kinds of.) |
| 6. சடைப்பயறு .. .. .. | A variety of Dolichos. |
| 7. மின்னிப்பயறு .. .. .. | |
| 8. மொச்சை .. .. .. | Dollichos tetraspermus. |
| 9. பயற்றங்காய் .. .. .. | Dolichos tranquebaricus. |

மேற்கூறிய பலவகைப் பயறுகளில், நாம் மிகுதியும் கொள்ளக்கூடிய சிலவற்றையே இங்கு குறிட்பிட்டிருக்கிறோம்.

---

## பச்சைப்பயறு Pachchai-poyaru.

வே.பெ: சிறுபயறு, பாசிப்பயறு. முற்கம்.

Phaseolus mungo.

Eng.: Green gram.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pacha pesalu | Sans. | Mudgam |
| Mal. | Cherupayara | Hindi | Moong. |
| Kan. | Hesaru | | |

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டு வருகின்றது; காயாய் இருக்கும்போது மேற்றோல் பச்சையாகவும் காய்ந்த பின்பு கறுப்பாகவும் மாறும்.

ப. உ.—விதை.

சுவை இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு இனிப்பு.

| | |
|---|---|
| சய்கை | உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.<br>குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant. |

குணம் : பச்சைப்பயறு, தீக்குற்றத்தை நீக்கும் : வாயுவத் தரும் ; குளிர்ச்சி என்பர்.

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
அச்சமற நாளும் அற்றுங்காண்—கச்சு வு
கொங்கை மடமாதே ! குளிர்ச்சியென்பார் எப்போதுந்
தங்குவா தத்தைத் தரும்.

வ. கு. : இதை வேகவைத்து அல்லது வறுத்து உண்பது வழக்கம். மிகுதியாகச் சாப்பிட்டால் கழிச்சல் உண்டாகும்.

இதை வறுத்து ஒன்றிரண்டாக உடைத்து வேகவைத்து, வடிகட்டின தைச் சிறிது உப்பும் காரமும் சேர்த்து நோயிற்றெழுந்தோருக்குக் கொடுக்கலாம்.

தலையிலுள்ள எண்ணெய் பசையை எடுக்க, இதை இடித்தெடுத்த தூளைத் தேய்த்துக் குளிக்கலாம். இது, தலைக்கும் கண்ணுக்கும் குளிர்ச்சியை உண்டுபண்ணும்.

இதன் மாவை வெந்நீர் விட்டுக் களியாகக் கிளறி மார்பில் பற்றிட பால்கட்டுக் குறைந்த, வீக்கமும் குறைந்துபோம. மார்பின் நெறிக் கட்டிகளும் குறையும்.

இதன் மாவை பலகைகை உணவாகச் செய்தும், பருப்பை ஒன்றிரண்டாக உடைத்து அரிசியுடன் சேர்த்துக் கஞ்சியாகக் காய்ச்சியும் உண்பது நாட்டு வழக்கம்.

---

## நரிப்பயறு —Narip Payaru.

வே. பெ. : எலிப்பயறு காட்டுப்பயறு.

**Phaseolus trilobatus.**

**Fam : Papilionaceae. (Leguminosae).**

**Mal. Naripayara | Sans. Mudgaparni**

இது சாதாரணமாக எங்கும் பயிராகிப் படர்ந்து வளரும். இலை மூன்று பிரிவுகளுள்ளது. இதன் காய்கள் பாசி பயற்றைவிடச் சிறியன. கறுநிறமுள்ளன.

ப-உ : இலை, விதை.

சுவை : இனிப்பு, தன்மை, தட்பம், பிரிவு இனிப்பு.

செய்கை : | கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
| குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Regrigerunt.

குணம் இதனால், தீ, ஐயப் பெருக்கு அடங்கும். வெள்ளை, நீர் எரிச்சல், கரப்பான் இவை போகும்.

நரிப்பயற் றங்கொடிக்கு நாடாது பித்தந்
தரிப்புறா ஐயமெல்ல ந் தாழும்—இருடபொழிக்கும்
மேகவெட்டை பித்த வெட்டை மீளாக் கரப்பனிவை
யாகம்விட்டோடு மறி. (அ.கு.)

LC 143284

வ - கு : இதன் இலையைச் சமைத்துத் தின்பது நாட்டு வழக்கம். செடியை அரைத்துப் பாலில் கலக்கிக் குடிக்க வெட்டை நீங்கும்.

காயை வேகவைத்துக் கற்கண்டு சேர்த்துப் பாலில் கலக்கிக் குடிக்க கபத்தைப் போக்கும். பருப்பைச் சமைத்து உண்ணலாம்.

---

## Delichas one of the difference kinds of
## தட்டைப்பயறு.

**Eng : Flat Bean.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Alachandalu | **Sans.** | **Simhi** |
| **Mal.** | Thattapayaru | | |
| **Kan.** | Alsande | **Hindi,** | **Sim.** |

இது கொடியினம். இந்தியாவில் எங்கும் கிடைக்கக் கூடியது.

உ - உ : விதை.

சுவை - துவர்ப்பு, இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை: கோழையகற்றி–கபஹரகாரி–Expectorant.
ஆண்மைபெருக்கி–காமவர்த்தநி–Aphrodisiac.

குணம் : இது பசித்தீயை கெடுக்கும் ; முக்குற்றங்களைப் பெருக்கும். (அ.கு.)

" தட்டைப் பயறு மந்தம் சந்நிதரும்."

வ - கு : விதையை வேகவைத்துத் தின்ன, உடல் வன்மை பெறும்.

---

## மொச்சை—Motchai.

**Dolichos Tetraspermus.**

இஃது இந்தியாவிலெங்கும் கிடைக்கக்கூடியது ; கடைகளில் கிடைக்கும். இதில் நாட்டுமொச்சை பாம்புமொச்சை என இரண்டு உண்டு.

ப உ : காய், கொட்டை.

சுவை - இனிப்பு, தன்மை - சீதம், பிரிவு - இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி–சீதளகாரி–Refrigerant.

### மொச்சைக்காய்.

குணம் : இதனால், திரிதோஷம், வாதம், க்ஷீணமலம் இவைகள் விருத்தியாகும். மிகுதியான சூடும் தணியும்.

அனிலபித்த வையம் அனைத்தையுமுண் டாக்குந்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டும்—அனுதினமுங்
கொச்சைமலத் தைப்பெருக்குங் கோரவுட்டி னந்தணிக்கும்
மொச்சைக்காய் செய்யு முறை.

(அ.கு.)

### மொச்சைக்கொட்டை.

இது திரிதோஷங்களையும், இரைச்சலைத் தருகின்ற ஆவிருதவாயுவையும் உண்டாக்கும்.

அனிலபித்த ஐயம் அனைத்தையுமுண் டாக்கும்
தொனியெடுக்க வாயுவினைத் தூண்டுந்—தனிவேள்
குனிக்குஞ் சிலைப்புருவக் கோதையே ! நாளும்
இனிக்குமொச் சைக்கொட்டை யே. (அ.கு.)

வ - கு : இதை வேகவைத்துப் பெரும்பாலும் பதார்த்தவகைகளுக்கு வழங்குவது நாட்டு வழக்கம்.

இதைச் சிறிது நேரம் ஊறவைத்துத் தோல் போக்கி, இரண்டாய்ப் பிளந்து, உப்பு, காரம் கூட்டியுலர்த்தி, நெய் விட்டு வறுத்துண்பதும், உப்பு, காரம் சேர்க்காமலே வேறு காய்கறிகளுடன் சேர்த்துச் சமைததுண்பதும் நாட்டு வழக்கம்.

மொச்சையை உரைத்துப் பாலுண்ணி முதலியவற்றின் மீது பூசிவர அவைகள் மறையும்.

## பயற்றங்காய்—Payatrangai.

Dolichos Tranquebaricus.

இது வட இந்தியாவில் ஏராளமாயுண்டு. இதன் காய் மிகவும் உருசிகரமானபடியால், இதைத் தோட்டங்களிலும் வைத்துப் பயிராக்குவார்கள்

ப - உ : காய்.

சுவை - இனிப்பு, தன்மை - சீதம், பிரிவு - இனிப்பு.

செய்கை: உடலுரமாக்கி—போஷணகாரி-Nutritive.

பயற்றங்காய்.

"சுவையுறு பயற்றின் காய்க்கறி மிகநன்றே." (தே. கா.)

(பொ - ள்). பயற்றங் காயைக் கறியாக்கி உண்ணில் நன்மை பயக்கும்.

குணம் : உடலுக்குக் குளிர்ச்சி தரும் ; வெப்பமகற்றும் ; உடலைப் போஷிக்கும்.

வ - கு : இதைச் சமைத்து உண்ணலாம்.

## 389. பருத்தி—Parutti.

வே. பெ : ஆச்சாதநபலே, பரி, உத்திரி, காற்பாசம், பன்னல்.

Gossypium herbaceum.

Eng : Indian Cotton Plant.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pratti | Sans. | Karpasa |
| Mal. | Parithi | | |
| Kan | Hatti | Hind. | Kapas |

இச்செடியானது, இந்தியாவிலும் இலங்கையிலும் ஏராளமாகப் பயிராக்கப்படுகின்றது. இதன் விளைபொருளாகிய பஞ்சானது உடைகள் செய்ய மிகப் பயன்படுகின்றபடியால், இஃது இந்நாட்டில் ஏராளமாகப் பயிரிடப்பட்டு வெளியூருக்கும் ஏற்றுமதியாகிறது.

இதில் வெண்பருத்தி ஆடை செய்வதற்குப் பயன்படுகிறதே ஒழிய மருந்திற்காக மிகுதியும் பயன்படுவதில்லை. ஈதன்றி, செம்பருத்தி கொங்கிலவு, இலவு எனச் சில இனங்களும் உண்டு. செம்பருத்தியும், கொங்கிலவும் மிகுதியாகக் கையாளப்படுகிறது.

ப - உ : இலை, பூ, பிஞ்சு, விதை, பட்டை, வேர்ப்பட்டை.

சுவை - துவர்ப்பு, இனிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

இலை, பூ, பிஞ்சு.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
உரமாக்கி—பலகாரி—Tonic.
விதை.
மலமிளக்கி—மலகாரி—Laxative.
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
காமம்பெருக்கி—காமவர்த்தநி Aphrodisiac.
பட்டை, வேர், வேர்ப்பட்டை.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி - Emmenagogue.
உள்ளழலகற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.

## பருத்தியிலை, மொக்கு.

குணம் : இவற்றினால் சீழ்வெள்ளை, குருதிவெள்ளை, குருதியழல்நோய் புண், வீக்கம் இவைகளும் நீங்கும்.

பருத்தியிலை மொக்கிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லாம் மாறும்—பருத்த
விரத்தபித்தத் தோடு விரணவீக் கம்போம்
அரத்தவிதழ் மாதே ! யறை. (அ.கு.)

## பருத்தி மெத்தை.

பருத்தி மெத்தையில் படுக்க, குருதியையும் ஆண்மையையும்பெருக்கும். சுரம் உற்றோர்க்கு நன்றன்று.

"அலர்பருத்திப் பஞ்சி னணையோ—உலவிரத்தம
சந்துக ளைப்பெருக்கும் மேல்விரக முண்டாக்குங்
விந்துசுரத் தையழைக் கும்" (அ.கு.

வ - கு. : இலை அல்லது மொக்கை ஒரு பலம் எடுத்தரைத்து, 80 மி.லி. பசுவின் பாலில் கரைத்துண்ணில், வெள்ளை நோய்க் கூட்டங்களும், குருதி யழல் நோய், புண், வீக்கம் முதலியனவும் போம்.

இலை, ஊறல், நீர் கழிச்சல் வகைகளை நீக்கும்.

24 கிராம் அல்லது 36 கிராம் எடை இலைச்சாற்றைப் பசுவின் பாலில் கலந்து, சீதக்கழிச்சல் மூலம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலைக்கொழுந்தை உலர்த்திக் குடிநீரிட்டுக் கழிச்சல்களுக்குக் கொடுக்கலாம்.

கொதி நீரில் மேற்படி உலர்ந்த இலைக்கொழுந்தைப் போட்டு சீதக் கழிச்சலுண்டாகும் மூக் கலைத் தணிக்க, எரு வாயில் ஆவி பிடிக்கலாம்.

இலையை அரைத்துக் கட்டிகளுக்கு வைத்துக்கட்ட சீக்கிரம் பழுக்கும்.

கடுகுடன் அரைத்துத் தேள் கடிவாயில் பற்றிட, வலி குறைந்து போகும்.

பூவை மணப் பாகு செய்துகொடுக்க, கழிச்சல்கள்போம்.

பூவை அரைத்து, தீக்கொப்புளம், சுடுநீர்க் கொப்புளம் முதலியவைகளுக்குப் பற்றிட, எரிச்சல் அடங்கும்.

பூவையும் பிஞ்சையும் குடிநீரிட்டு, ஊமத்தை நஞ்சை முறிக்கக் கொள்ளலாம்.

பஞ்சினால் ஆடைகள் நெய்து உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

அன்றியும், பஞ்சை, புண்கள், வெந்நீர் விரணங்கள், சீழ்கட்டி முதலிய விரணங்களின் மேல் வைத்துக்கட்டி, காற்றுப் புகவிடாமல் செய்யின், சீழை வறட்டும்.

பஞ்சிலிருந்து, "கன் காட்டன்" (Gun Cotton) உம், அதிலிருந்து கொலோடீன்" (Collodion) உம் செய்யலாம். இம்மருந்தை வெட்டுக் காயங்களின்மீது தடவ, அந்த இடம் சீக்கிரம் வறண்டுபோம். அவ்விடத்தில் ஒருவகைச் செதிள் போன்ற ஒன்று மூடிக்கொண்டு, புறக்காற்று நுண்புழு முதலியன உட்புகாதபடி காக்கும்.

பஞ்சை எரித்துச் சாம்பலாக்கிப் புண்கள் மீது தூவ, அவை சீக்கிரத்தில் ஆறும்.

மூக்கிலிருந்து குருதி வடிதலும் ஈற்றினின்றும் சோரி யொழுகல் முதலியவற்றிற்கு, பழைய பஞ்சைப் புகைத்து மூக்கின் வாயிலாகப் புகையை உள்ளுக்கு இழுத்து, பிறகு இலைச்சாறு இரு தேக்கரண்டி சருக்கரை ஒரு தேக்கரண்டி குழைத்துச் சாப்பிட, குருதி நின்று போகும்.

---

## 390. செம்பருத்தி—Chemparuththi.

**Gossypium arboreum.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pamidi-patti | Sans. | Japakusuma. |
| Mal. | Chemparithi | Hind. | Deo-Kapas. |

இஃது, இந்தியாவிலுள்ள தோட்டங்களில் வைத்துப் பயிராக்கப்படும் செடி; பருத்தி இனத்தைச் சேர்ந்தது.

ப - உ : இலை, பூ, விதை, வேர்.

**பட்டை.**

சுவை - துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - கார்ப்பு.

**இலை, பூ, விதை.**

இனிப்பு, துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு -இனிப்பு.

**பொது.**

செய்கை : துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

**பூ.**

குணம் : இது உடலின் அழற்சி, குருதியழல், வயிற்றுக் கடுப்பு, வெண்ணீரை நீராகச் செய்கின்ற மேகம், வெட்டை, நீர்வேட்கை, கழிச்சல் முதலியவைகளை நீக்கும்.

செம்பருத்திப் பூஅழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீற்—றம்மனஞ்செய்
மேகத்தை வெட்டையை விளுசிமுதற் பேதியையுள்
தாகத்தை ஓட்டிவிடுந் தான். (அ.கு.)

வ-கு: பருத்தியின்கீழ்க் கூறிப வழக்குகளே இதற்கும் உரியன எனினும், கீழ்க்காணும் விசேஷ வழக்குகளைக் கூறினும் மிகையாகாது.

காட்டுச் சீரகத்தை இதன் இலைச் சாற்றால் அரைத்து, சுர சார்பாய் உண்டாகின்ற சொறி, சிரங்கு, கரப்பான. படை முதலியவைகளுக்குப் பூச, அவை உலர்ந்து போகும்.

இலையை அரைத்துப் பாலில் கலக்கி, நீர்ச்சுருக்கு, நீரெரிச்சல், நீரடைப்பு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

இலைக்கொழுந்தை மேற்கூறியபடி அரைத்துப் பாலில் கலக்கி, சீதக் கழிச்சல் வெள்ளை முதலிய நோய்களுக்கு வழங்கலாம்.

பூவிதழ்களை நசிக்கி முலைப்பாலில் தோய்த்து, சிறு குழந்தைகளுக் குண்டாகும் கண்ணோய் முதலியவைகளுக்குக் கண்களில் விட்டுவர, அந் நோய நீங்கும்.

விதை 17 கிராம் சீரகம், 8½ கிராம். சோம்பு 8½ கிராம். மூங்கிலுப்பு 2 கிராம் இவை யாவையும் ஒன்றாய் இடித்து, நீர் இட்டு அரைது ஒரு துணியினால் வடித்திறுத்து, அந்நீரைத் தினம் நாலைந்து முறை நோயின் வன்மைக்குத் தக்கபடி கூட்டியும் குறைத்தும் கொடுத்துவர, வெள்ளை வெட்டை முதலிய நோய்கள் குணமாகும்.

செம்பருத்தி வேர்ப்பட்டை, சாதிக்காய், வால்மிளகு, கற்கண்டு, வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துக் குடிநீர் செய்து, நாற்பதுநாள் சாப்பிட்டுவர, ஆண்மை தரும்.

செம்பருத்திக் காய்ச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, ஆவின்பால் ஓர் அளவு கூட்டி, வெள்ளைச் சருக்கரை சேர்த்துத் தினம் இரு வேளை, மூன்று நாள் சாப்பிட, பல வித செந்தூரப் பற்பங்களின் வீறு தணியும்.

விதையை அரைத்து 1 முதல் 3 கிராம் எடை பாலில் கரைத்துக் கொடுக்க, ஆண்மை பெருகும். பால் பெருகும்.

மேல் ஓட்டை நீக்கிப் பருப்பை நன்றாய்ப் பொடித்து மாவாக்கி, இரண்டு தேக்கரண்டி பாலில் கொடுத்துவர, மூளைக்கு வன்மையைக் கொடுத்து, நரம்புகளுக்கு உறுதியையும் தரும்.

விதையைச் சிதைத்து வெந்நீரில் ஊறவைத்து இறுத்து, பாலும் சீனி யும் சேர்த்துக் சூட்டுடன் கொடுக்க, முறைசுரம் தணியும். சீதக் கழிச்சல் நிற்கும்.

விதையை அல்லது பட்டையை இடித்துப் பொடித்து, சுக்கு நீரில் குழைத்து விரை வீக்கத்துக்குப் பற்றிடலாம்.

விதையினின்று எடுக்கிற எண்ணெய், சவுக்காரம் (ஸோப்புகள்) செய்வ தற்கும், சமையல் செய்வதற்கும் மிகவும் பயன்படுகிறது இது தலைவலி யைப் போக்கி மூளை வெப்பத்தைத் தணிக்கும். இவ்வெண்ணெயில் பசு வின் நெய்யைவிட, உடலைக் காக்கும் வன்மை மிகுதியும் உண்டு எனபது கண்டறியப்பட்டிருக்கிறது.

## 391. பலா—Pala.

வே-பெ : சக்கை, பலவு, பலாசம், வருக்கை, ஏகாரவல்லி.

**Artocarpus integrifolia.**

Eng. :—Jack Tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Panasa | Zana. | Panasa |
| Mal. | Pilava | Hind. | Kathal |
| Kan. | Halasu | | |

இஃது இந்தியாவிலெங்கும் பயிராகும் மரம்; காடுகளில் தானாய் வளருகிறது; நாடுகளில் நட்டும் பயிரிடப்படுகிறது. இதில் ஆசினிப்பலா, கூழைப்பலா, வருக்கைப்பலா எனச் சில வகைகளுண்டு.

ப - உ : இலை, காய், பழம், விதை, பால், வேர்.

இலை, காய், விதை, பால், வேர்.

சுவை - துவர்ப்பு, தன்மை, வெப்பம் - பிரிவு - கார்ப்பு.

பழம்.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

இலை, காய், விதை, பால், வேர்.

செய்கை :
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
- பழம்.
- மலமிளக்கி-மலகாரி-Laxative.
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
- உடலுரமாக்கி-போஷணகாரி-Nutrient.

இலை.

குணம் : பலாவிலையில் உண்டால், அடங்கிய தீக்குற்றம் மிகுந்த வூழால் வந்த பெருவயிரும் குன்ம நோயும் நீங்கும்.

பலாவிலையி லுண்ணப் பதுங்கிநின்ற பித்தங்
குலாவி யெழும்பிக் குதிக்கும்—உலாவிவரு
கன்ம மகோதரநோய் காணு தகலாத
குன்ம மகலுங் குறி. (தே கு.)

பிஞ்சு.

இதனால், நீர்வேட்கையும் அழலையும் நீங்கும். ஆண்மையும் செரியாமை வயிற்றுநோய் இவைகளுமுண்டாகும்.

தாகம்போம் வந்தபித்தஞ் சாந்தமாம் ஆடவர்க்குப்
போகம் மிகப்பொழியும் பொய்யன்றே—மூகம்
அலசமந்தங் குன்மமிவை அண்டிவருஞ் சொன்னேன்
கலசப்ப லாப்பிஞ்சுண் காண். (அ.கு.)

காய்.

இது, பசித்தீயைக்கெடுத்து, வாயுவைப் பெருக்கும்; கோழைக்கட்டு இரைப்பு, இருமல் இவற்றை வருவிக்கும்; ஆண்மையைத் தரும்.

உண்ணில்மிகு மந்தம் உறுதியாம் வாதநோய்
அண்ணும் இளைப்பிரைப்பும் அண்டுங்காண்—வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காழ வாரிதியே சொல். (அ.கு.)

பலா.

பசைக்கனி வளிப்ப யித்திய மாங்கா
யினமுறு வாதமென் றியம்புவர் பிடகர்.

(பொ - ள்.) : பலாப்பழம் வளிவெறி (வாத யைத்தியம்) யைப் போக்கும் என்றும், பலாக்காய் வளிநோயை உண்டாக்குமென்றும் மருத்துவர் சொல்லுவர்.

பழம்.

இது, வாத ஐய திக்குற்றங்களேயும், கரப்பானேயும், முன்பில்லாத பிணிகளேயும் உண்டாக்கும்.

தித்திக்கும் வாதசி லேத்மபித்தம் உண்டாக்கும்
மெத்தக் கரப்பான் விளேவிக்குஞ்—சத்தியமாய்ச்
சேராப் பிணியையெலாஞ் சேர்க்கும் ஒருநொடியிற்
பாராய் பலாவின் பழம். (அ.கு.)

கொட்டை.

கருக்கிய பலாக்கொட்டையினுல், அள்ளு மாந்தம், குடலில் தங்கிய ஐயத தாலுண்டாகின்ற எருச்சிக்கல், கள் குடியர்களுக்குண்டாவதுபோல் நெஞ சில் புளியேப்பம், கற்போல் வயிறு கெட்டிப்படல், அதில் ஒற்றைச் சாணளவு இருப்புச் சலாகை செருகினது போன்ற வலி இவைகளுண்டாகும்.

அள்ளேறு நீள்குபரி னப்பான் மலங்கட்டுங்
கள்ளேறு நெஞ்சர்நெஞ்சாங் கல்லகட்டி—னுள்ளே
சலாக்கொட்டை யிட்டசுகந் தானுங் கருக்கும்
பலாக்கொட்டை யிட்ட பலன். (தே. கு.)

வ - கு : இலேக் கொழுந்தை அரைத்துச் சிரங்குகளுக்குப் பூச, அவை போம்.

இலேயைக் கோத்து அதில் உணவு கொள்ளலாம்.

பிஞ்சு மிகத் துவர்ப்புள்ளது. இதைச் சமைத்துத் தின்பது நாட்டு வழக்கம். வேக வைத்துத் தின்பதுமுண்டு. ஆண்மை உண்டாகும். நீர் வேட்கையும் அழலும் போகும். ஆனல் இது மநதிக்கும். செரியாமை யையும், வயிற்று நோயையும் உண்டாககும் எனக் கூறப்பட்டிருக்கின்றது

பழம் மிகவும் சுவையானது. ஆனல், இலகுவில் செரிக்காது. முப் பழங்களில் இஃது ஒன்ருகக் கருதப்படுகின்றது. மிகுதியாகப் புசிக்கின் நஞ்சுத் தன்கம அடையும்.

கொட்டைகளே வறுத்து அல்லது சுட்டுத் தின்னலாம். ஆனல், எற்ற தன்று.

மரத்தினின்றும் பால் எடுக்கலாம். இப்பால் மிகவும் பசை உள்ளது. இத்துடன் காடி சேர்த்துக் குழைத்து நெறிக்கட்டிகளுக்குப் பூச, அவை அமுங்கும் ; அல்லது பழுத்துச் சீக்கிரத்தில் உடையும்.

வேரைக் குடிநீரிட்டு கழிச்சலுக்குக் கொடுக்கலாம். இதை அரைத்துச் சொறி சிரங்குகளுக்குப் பூச அவை போகும்.

---

## 392. பலாசு—Palasu.

வே. பே : புரசு, பிரமதாரு, முருக்கு, கிஞ்சுகி, கிருமிநாசம், சிரா. பலாசம், புறைசு, புரோசு, புனமுருக்கு, வாதபோதம், வானபத்தியம்

**Butea frondosa.**

**Eng. :—Bastard Teak.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Moduga | Sans. | Palah |
| Mal. | Murukkamaram | TPers. | Dharakhte-palasiha |
| Kan. | Muttagamara | Hind. | Dhara |

இம்மரம் இந்தியாவின் மலைநாடுகளில் ஏராளமாய் வளரும்.

ப - உ : இலை, பூ, விதை, பட்டை, பிசின்.

**பொது.**

கவை - துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**விதை.**

கவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**இலை.**

செய்கை :

துவர்ப்பி—ஸங்கோசநகாரி—Astringent.
உரமாக்கி—பலகாரி— Tonic.
காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

**பூ.**

காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி— Diuretic.
தூய்மையாக்கி—மலினநிவர்த்தநி—Depurative.

**விதை.**

மலமிளக்கி—மலகார்—Laxative.
புழுக்கொல்லி—க்ருமிநாசினி—Anthelmintic.

**பிசின்.**

துவர்ப்பு—ஸங்கோசநகாரி—Astringent.

**மரம்.**

குணம் : இது, முக்குற்றங்களையும், வயிற்றுநோய், வயிற்றுப்புழு, கழிச்சல், உடல் குடைச்சல் ஆகிய இவைகளையும் நீக்கும். பசித்தீயை உண்டாக்கும்.

புரசுவா தம்பித்தம் பொங்குகபங் குன்மம்
இருமி யுடனே கிராணி—பெருவலிநோய்
ஓட்டுமதி தீடனத்தை உண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய் ! தெளி.

**பிசின்.**

இது, சில்கள், நரம்புகள், மார்பு ஆகிய இவைகளுக்குப் பலத்தை கொடுக்கும். ஆண்மையையும் அறிவையும் பெருக்கும்.

சந்திகட்கு நாடிகட்குந் தங்குசுக்கி லந்தனக்கும்
புந்தியுரங் கட்குமுரம் பூட்டுங்கா—ணுந்து
சரமதனுக் காகமநூல் சாற்றுமலர் மாதே !
பிரமதரு விற்சம்பி சின். (அ.கு.)

**விதை.**

இதனால், வயிற்றுப்புழு, உடல்வலி, படர்தாமரை, வயிற்றுவலி, (குன்மம்), வயிற்றிரைச்சல், கரப்பான் இவை நீங்கும். அழல் உண்டாக்கும்.

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீதம்
நியத்தபடர் தாமரையும் நீங்கும்—வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பான் மாறும்பித் துண்டாம்
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து. (அ.கு.)

**இலை.**

வ - கு : இலையைக் குடிநீரிட்டு, அல்லது பொடி செய்து சாப்பிட வயிற்றுநோய், கழிச்சல் முதலியவை நீங்கும்.

இலையை அரைத்துப் பூச கட்டிகள் அமுங்கும். புற்றுகளின் வளர்ச்சியை நிறுத்தும்.

**பூ.**

பூவை நீர்விட்டு வேகவைத்து கட்டிகள் மீது வைத்துக் கட்ட, அவை அமுங்கும். விரை வீக்கத்துக்கு இப்பூவை நசிக்கிக் கொதிக்க வைத்துப் பற்றிடலாம்.

பூவை வேகவைத்தக் குடிநீரை வடித்து, சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க, சிறு நீர் நன்ருக இழியும். அளவு 40—80 மி.லி.

**விதை.**

விதையை நீரில் ஊறவைத்து மேல் தோலை எடுத்து விட்டு உட்பருப்பை உலர்த்திப் பொடித்து, 260 மி.லி. வீதம் தேனில் கலந்து, தினம் மூன்று வேளையாக மூன்றுநாள் சாப்பிட்டுப் பின் நான்காம் நாள் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட, கழிச்சலோடு குடலிலுள்ள புழுக்கள் விழும்.

விதையைப் பொடித்து பழச்சாற்றில் கலந்து, படை முதலிய நோய்களுக்குப் பூசலாம்.

**பட்டை.**

பட்டைச்சாற்றையும் இஞ்சிச் சாற்றையும் கலந்து சாப்பிட, பாம்புக்கடி நஞ்சு நீங்கும்.

பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, தலைப்பளு, நீர்க்கோவை, இருமல் முதலியன போம்.

பட்டையைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கற்கண்டு சேர்த்து, வாயிலிட்டு மெல்ல, நீர் வேட்கை நீங்கும்.

**பிசின்.**

இதை நன்ருகப் பொடிசெய்து 130 மி.கி. முதல் 650 மி.கி. வரை சிறிது இலவங்கப் பொடியுடன் சேர்த்துக் கொடுக்க, சீதக்கழிச்சல் முதலியன நீங்கும்.

இதையே அதிக அளவாகக் கொடுக்க, குருதி வாந்தி, குருதிநீர் இவை நீங்கும்.

பிசினை நீரில் கரைத்து அதைத் தொண்டையில் பூச, தொண்டைப்புண் மாறும்.

---

## 393. பல்லிப்பூண்டு—Pallippundu.

வே பெ : கொல்லைபல்லி, பல்லிப்பூடு

**Strigo Lutea**

**Maay Kollpttli**

இப்பூண்டு, சாதாரணமாய்த் தண்ணீர்க் கசிவுள்ள சதுப்பு நிலங்களில் ஏராளமாய் வளருகின்றது ; இது தானிய நிலங்களில் பயிர்களினூடே வளர்ந்து பெருகி, விளைவைக் கெடுத்து, நற்பயன் பெற வொட்டாமற் செய்து குடிகளைக்கெடுப்பதால், "கொல்லைப்பல்லி, குடிக்குச் சகுனி, என்ற பழமொழி வழங்குகிறது. இதல் வெண்மை, செம்மை, மஞ்சள் நீலம் என நான்கு வகை உண்டு

ப - உ : பூண்டு.

சுவை - துவர்ப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : நச்சரி - விஷநாசநி (Antidote)

குணம் : இதனால், பாம்பு நஞ்சு, சுரம், வளித்தீக்கலப்பு, பல்வலி இவை போம். பாடாணமும் தாளகமும் தூய்மையாகும்.

வல்லிடந் தோடசுரம் வாயுபித் தங்களோடு
பல்வலியும் பஞ்சாய்ப் பறக்குங்காண்—நல்லோர்பால்
சொல்லிப்பார் பாடாண தாளகமுஞ் சுத்தியதாம்
பல்லிப்பூண் டுண்டாயிற் பார். (அ.கு.)

வ - கு : இதைக் குடிநீர் செய்து கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

இதன் சாற்றுற் சுருக்கிட, பாடாணமும் தாளகமும் தூய்மையாகும்.

இதை அரைத்துப் பெரிய தேங்காய்ப் பிரமாணமெடுத்து அதன் மத்தியில் பாடாணத்தைப் புதைத்துத் தக்க தீயிட, பற்பமாகும்.

இதனால் தங்கம் நீறும்.

---

## 394. பவளமல்லி.

வே - பெ : பரிசாதம், பாரிஜாதம்.

**Nyctanthes atbor-tristis, Linn.**

**Eng. :—Night Jasmine.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pagadamalle | Sans. | Pariyataka |
| Mal. | Manjapumaram | | |
| Kan. | TParijata | Hind. | Harsinghar |

இது, தழைத்து வளரும் ஒரு சிறு மரம் ; இந்தியா முழுமையும் காடுகளில் தானக வளரும்.

:—இதன் பூ நறுமணமுடையது. இதற்காகவே இதை வீட்டிற்கடுத்த இடங்களில் வைத்து வளர்த்து வருகிறார்கள், ஏறக்குறைய மல்லிகைப் பூவின் உருவத் தையும் மணத்தையும் பெற்றிருக்கும். காம்பு, மஞ்சட் கலந்த செம்மை நிறத்துடன், அஃதாவது பவள நிறத்தை ஒத்திருப்பதால், இதற்குப் பவளமல்லி எனப்பெயர் வழங்கி

வருகிறது. இம்மரம் வருட முழுவதும் புட்பிக்குமாயினும், மாரி காலத்தில மிகுதியாய்ப் பூக்கும். இதன் இலையின் மேல் பாகம் கறுத்தப் பசுமை நிறத்துடன் சுரசுரப்பாய இருக்கும்.

ப - உ : இலே, வேர்ப்பட்டை.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

இலே.

செய்கை :
- மலமிளக்கி-மலகாரி-Laxative.
- பித்தநீர்ப்பெருக்கி—பித்தகாரி-Cholagogue.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.

வேர்ப்பட்டை.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- பித்தசமனி-பித்தசாந்தநி-Antibilious.

குணம் : இதனல், சுரம், வயிற்றுப்புழு, வளிநோய், முதுகுவலி முதலியவை தீரும்.

வ - கு : இளங்கொழுந்தை இஞ்சிச் சாற்றில் அரைத்து, முறை சுரத்துக்குத் தினம் இரு வேளை கொடுக்கத் தீரும்.

இலேயை வெந்நீரிலிட்டு நன்ருய் ஊறவைத்து தினம் இரு வேளை கொடுத்துவர, முதுகுவலி சுரம் இவைகள் போம்.

இலேச்சாற்றுடன் சிறு உப்பிட்டு, சிறிது தேனும் கலந்து கொடுக்க, புழுக்கள் விழும்.

இலேயைக் குடிநீரிட்டுக் கொடுக்க, ஐயம் போம். மலம் கழியும்.

விதையைப் பொடி செய்து எண்ணெயில் குழைத்து, தலையிலுண்டாம் சொறி, சிரங்கு, நமைச்சல் இவைகளுக்குத் தடவிவர, இவைகள் ஒழியும்.

வேரை அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுக்க, மேகம் நீங்கும்

## 395. பூசணே —Parankkikai

வே - பெ : பூசணி, சருக்கரைப்பூசனே, சருக்கரைப்பறங்கி, பறங்கிக்காய், பூழியபலம்.

**Cucurbita maxima,**

Eng:—Red Gound

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gummadi-kaya | Kan. | Kumbala |
| | | Duk. | Harardana |
| Mal. | Chakkara-kumbala | | |
| | | Hind. | Kaddu |

இது கொடி வகை. இதன் இலே பெரிதாய், ஐந்து குறுகிய பிளவுகளேயுடையது. காயின் மேல் தோல் பச்சையாயும், பழுத்தவுடன் பழுத்த மஞ்சள் கூடிய சிவப்பு நிறத்தை உடையதாயும், உட்பாகம் மஞ்சள் நிறமான சதைப்பற்றுள்ளதாயுமிருக்கும். காய் மிகப்பெரிய உருண்டை வடிவமாகவும் முள்ளது. காயின் மேல்-கீழ்ப்புறம் குழிந்திருக்கும் ; பக்கங்களில் ஓடுகிற வரிகள் ஆழ்ந்திருக்கும். இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்பட்டு வருகிறது. நாட்டுப்புறங்களில், கூரைகளில் இக்கொடியைப் பயிரிடுவார்கள். இதில் கோடைப் பூசணே அல்லது குழிப்பறங்கி என வேருெரு வகையுமுண்டு.

ப-உ : காய், விதை.

சுவை-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.
உரமாக்கி

குணம் : இஃது, அனலால் வரும் அழற்சியையும், மிகு பித்தத்தையும் நீக்கும் : நல்ல பசியையும் ஐயத்தையும் விளைவிக்கும்.

அனலழலை நீக்கும் அதிபித்தலம் போக்குங்
கனலெனவே வன்பசியைக் காட்டும்—புனராரும்
மிக்க வையம் உண்டாக்கும் மென்கொடியே எப்போதும்
சர்க்கரைப்ப றங்கிக்காய் தான் (அ.கு.)

### குழிப் பரங்கிக்காய் (கோடைப் பூசுனி).

குழிப் பூசனிக்காயால் வாதக் கடுப்பு, ஐயப் பெருக்கு வளிசூலை மாந்தம் இவை உண்டாகும்.

வாதக் குடைச்சலுறும் மாருத ஐயமுமாம்
போதவளிச் சூலையுண்டாம் பொற்கொடியே —ஓதுங
குழிப்பறங்கிக் காய்க்குக் குளிர்ச்சி நிறையும் !
பழிக்கடுத்த மாந்தமிகும் பார் (அ.கு.)

### பூசுணை—கூழ்பாண்டம்—அரை.

பூசுணைக் காயனல் புண்மைகூழ்பாண்டமு
மேசுரைக் காய்கப மிலைக்கறி நன்மையாம் (தே.கா.)

(பொ-ள்) : பெரும் பூசுணைக்காய் சூட்டைத் தரும். கலியாணப் பூசினிக்காய் கெடுதியையும், சுரைக்காய்கபத்தையும் உண்டாக்கும். இவற்றின் இலைக் கறி உடம்பிற்கு நன்மையைச் செய்யும்.

வ-கு.—இக்காயை அநேகர் கறியாய்ச் சமைத்து உண்பது வழக்கம்.

உட் சதையை விதை நீக்கி வேக வைத்துப் பிசைந்து, புண்களின்மீது வைத்துக் கட்ட, துர்நாற்றம் நீங்கிச் சதை வளர்ச்சி உண்டாகும்.

உட்சதையை விதை நீக்கி வெயிலில் நன்ருகக் காய வைத்து இடித்து இலேகியமாக்கிக் கொடுக்க, குருதிவாந்தி, கோழை இவைகளை நிறுத்தும்.

பழுத்த காயின் காம்பை எடுத்து நன்ருய் உலர்த்தி, நீரில் அரைத்துக் கொடுக்க, நஞ்சுகள் நீங்கும்.

சதையை உலர்த்திச் சீரகம் சேர்த்திடித்துச் சிறிது கற்கண்டுடன் உண்ண, வேனிற்கால வெப்பத்தாலுண்டாகும் அழற்சி தணியும்.

ஒரு பலம் விதையை வறுத்துச் சருக்கரை கலந்து, இரவு படுக்கைக்குப் போகுமுன் தின்று, மறு தினம் காலையில் ஆமணக்கெண்ணெய் சாப்பிட்டு வெற்நீரருந்தி வர, தட்டைப்புழு செத்துவிடும்.

விதையை 16 கிராம் முதல் 32 கிராம் எடுத்துக் குடிநீரிலிட்டுச் சாப்பிட, அது வெள்ளை முதலிய நோய்களைப் போக்கும் ; சிறு நீரைப் பெருக்கும்.

விதையினின்றும் ஒரு வகை எண்ணெய் எடுக்கிருர்கள்.

---

## 396. பறங்கிப்பட்டை—Parankip-pattai

வே - பெ : மதுஸ்மிகம், மதுஸ்மீகி, சீனப்பட்டை, பறங்கிச்சக்கை.

Smilax chinensis.

Eng. :—China root.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pirangi-chekka | Sans. | Madusnuhi |
| Mal. | Pavu | Hind. | Chobchini |

இது, சீனு, ஜபபான் முதலிய தேசங்களுக்குரியதே ஆனும், இந்தியாவிலும் ஏராளமாகப் பயிரிடப்படுகின்றது, கடைகளில் சாதாரணமாய் விற்கப்படும்.

ப - உ : கிழங்கு.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை:
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Alterative.
- மேகப்பிணிவிலக்கி-Antisyphilitic.
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiae.
- தூய்மையாக்கி-மலினநிவர்த்தநி-Depurative.

குணம் : இதனுல் நீர்வேட்கை/ பற்பல வளிநோய், புண், பிளவை, நீரிழிவு, கடிவிடம், சிரங்கு, மூலமுளை, முடவாதம், குறைநோய், ஐயம் பகந்தரப்புண், வாந்தி இவை நீங்கும். ஆண்மை உண்டாம்.

தாகம் பலவாதந் தாதுநட்டம் புண்பிளவை
மேகங் கடிகிரந்தி வீழ்மூலந்—தேகமுடன்
குட்டை பகந்தரமேற் கொள்வமனம் போம்பறங்கிப்
பட்டையினை யுச்சரித்துப் பார். (தே.கு.)

வ - கு : இதைப் பொடி செய்தேனும், குடிநீரிட்டேனும் கொடுத்துவா, மேற்கண்ட நோய்கள் போம்.

### பரங்கிப்பட்டைச் சூரணம்.
அகஸ்தியர் காவியம் 1,500.

இதனுல் புண், கரப்பான், சூலே, வெட்டை, மந்தம், அதிகழிச்சல், சோணி, உப்புசம், வயிற்றிரைச்சல் தீரும்.

### பறங்கிப்பட்டை இரசாயனம்
அகஸ்தியர் இர–சுருக்கம்.

இதனுல் கிரந்தி, புண், சூலே, கண்டமாலே, வளிநோய், வெள்ளை கொருக்கு, ஐயநோய், ஆகிய 96-ம் நீங்கும்.

### பறங்கிப்பட்டை இலேகியம்.
அக. காவியம் 1,500.

பறங்கிப்பட்டை 170 கிராம், ஓமம், அதிவிடயம், குரோசானி ஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, மிளகு, திரிபலே இவை வகைக்கு 8½ கிராம் பொடி செய்து, பரல் தளரவிட்டுப் பிசறி, நெய் படி ஒன்று விட்டுக் கிளறி, இளக்கி அடுப்பேற்றிச் சிறு தீயில் ஒரு கடிகை வெந்தபின், கிண்டிக் கிண்டி மெழுகு பக்குவத்தில் சீனி 204 கிராம் சேர்த்துக் கிண்டி 3 நாள் சென்ற பின், நாளொன்றுக்கு இரண்டு வேளே தான்றிக்காயளவு நாற்பது நாள் கொள்ள, மேற்கூறிய நோய்கள் எல்லாம் போம்.

## 397. பற்பாடகம் –Parpatakam

வே-பெ: சீதம், பற்படாம்.

Mollugo cerviana,

| | |
|---|---|
| Tel. Parpataka | Sans. Parpatakam |
| Mal. Parpatakam | Duk. Hazardana |
| Ka. Parpataka | Hind. Taph-jhad |

இப் பூண்டு இந்தியா முழுவதும் கிடைக்கக்கூடியது : வெப்பநாடுகளில் ஏராளமாயுண்டு.

ப-உ : பூண்டு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை
- மலமிளக்கி—மலகாரி—Laxative.
- பசித்தீத்தூண்டி—ஜ்டராக்கினிவர்த்தநி—Stomachic.
- அழுகலகற்றி—தாதுசீணரோதி—Antiseptic.
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
- வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.

குணம் : இதனால் சுரநோய்கள், வெறி நோய்கள், தாகம் , பித்தம் போம். விழிக்குக் குளிர்ச்சி உண்டாகும்.

சீதவா தச்சுரமுந் தீராத தாகமும்போம்.
போதவிரு கண்குளிரும் பொய்யலவே—பூதலத்துள்
வற்பார் பயித்தியமு மாபித்த முந்தொலேயும்
பற்பாட கத்தையுண்ணிப்[பார்] (அ.கு.)

வ - கு : இதை முறைப்படி குடிநீரிட்டுக் கொடுக்க, சுரந் தணியும். மேலும் இது சூலக அழுக்கை வெளிப்படுத்தும்.

இதன் வேரை எண்ணெயில் போட்டுக் காய்ச்சி கீல்வாயு முதலிய வீக்கங்களுக்குத் தேய்க்கலாம்.

இதை நீரில் ஊரவைத்துக் கொடுக்க, நீர் எரிச்சல், கண்ணெரிச்சல் தீரும், தங்கிய சூலக அழுக்கு வெளிப்படும்.

இதனைப் பால் விட்டரைத்துத் தலைக்குத் தடவி, சிறிது நேரங்கழித்து நீர் விட்டு மூழ்கிவர, கண்ணெரிச்சல் நீங்கிக் கண்கள் குளிர்ச்சியடையும்.

---

## 398. பனை—Panai

வே-பெ : தாலம், கரும்புறம், ஏடகம், காமம், தருவிராகன், தாளி.

Borassus flabelliformis,

Eng : Palmyra Palm, Brab tree.

| | |
|---|---|
| Tel. Tàti | Sans. Tàla |
| Mal. Pana | |
| Kan. Pané-amra | Hind. Tàr |

இஃது இந்தியா முழுவதும் தானாக ஓங்கி வளரும் மரம். இலைகள் (ஓலைகள்) மட்டை, பூ, வேர் இவைகள் மருந்துகளுக்குப் பயன்படுகின்றன.

உ - ப : குருத்து, ஓலை, பூ, நுங்கு, பழம், மட்டைகள், சுழங்கு.

இலை, மட்டை, வேர்.

சுவை - துவர்ப்பு, இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

பூ.

சுவை - துவர்ப்பு - தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

கள்.

சுவை - இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு—இனிப்பு.

இலை மட்டை.

செய்கை

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent
ஆண்மை பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac

நுங்கு.

சிறுநீர்ப்பெருக்கி—மூத்திரவர்த்தநி—Diuretic.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient

மது.

சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant

கள்.

வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
தாபமகற்றி உக்ரோசகசமநகாரி—Antiphlogistic

குருத்து.

குணம் : இதனால் குருதி மூலமும், கழிச்சலும் உண்டாகும.

"பனங்குருத்து தின்றாற் பகருதிர மூலங்
கனம்பெருகும் பேதியுமாங் காண்." (அ.கு.)

பூ.

இது, வாதகுன்மம், நீரருகல், பல்நோய், பழயசுரம் இவைகளைப் போக்கும்.

பனையிலுறு பூவதுதான் பங்கமுறுக் குன்ம
வினையகற்றும் நீர்க்கட்டை மீட்கும்—முனையான
பன்னோய் ஒழிக்கும் பழஞ்சுரத்தைப் போக்கிவிடும்
மின்னே இதனை விளம்பு. (அ.கு.)

நுங்கு.

நெய்தல் நிலப் பனையினது இளங்காயிலுள்ள நுங்கின் நீரானது, வியர்வைக் குருவை நீக்கும். பசியைத் தரும். தோலுடனே இருக்கும். நுங்குசீதக்கழிச்சலை விலக்கும்.

நீர்வார் வியர்க்குருவை நீக்குமன லாக்குந்தோற்
சார்வா மயஞ்சீதந் தானொழிக்குஞ்—சேர்வார்.
விழிக்கரையாந் துஞ்சளிக்கு மென்சுரத மானே!
கழிக்கரையாந் தாளியிளங் காய். (அ.கு.)

பழம்.

தினமும் பனம்பழத்தையே உணவாக உண்டால், கரப்பான், அழுகிய ரங்கு, எருக்கட்டு, பித்தவாயுவால் பிறந்த நோயினங்கள் ஆகியவை உண்டாகும்.

நாளும் பனம்பழத்தை நல்லமுதாய் உண்ணுங்கால்
ஆளுங் கரப்பான் அழுகிரந்தி—நீளுமலஞ்
சிக்கும்பித் தத்தில்வளி சேருதலால் நோய்க்கணமு
மிக்கும்ப லக்குமெனச் செப்பு. (அ.கு.)

**ஓலைவிசிறி.**

பனையோலை விசிறியினால் வளிநோய்களும் ஐயநோய்களும் அழல் நோய்களும், சுவையின்மைநோயும், நீங்கும்.

பனைவிசிறி தன்னாற் பருத்தொரு வாத
வினையுமைய நோயும் விலகுங்—கனைபித்த
நோயு மருசியென்ற நோயுங் குடியேகுந்
தேயுமிடை மாதே! தெளி. (அ.கு.)

**கள்.**

பனங்கள்ளால் உடற்கு வன்மையும் ஆண்மையும் உண்டாகும். நீர் வேட்கை போம். இதில் பாடாணவகைகள் தூய்மையாகும்.

விந்துதிர மூறுமதி வெப்புடனே தாகம்போம்
பந்தமாந் தாதுவுமோ பாரிக்கும்—உந்துபித்தந்
தோன்றும்பா டாணங்கள் சுத்தியுமாந் தோகைமின்னே!
என்ற பனைமதுவிற் கே. (அ.கு.)

**கற்கண்டு.**

பனங்கற்கண்டு, மேகசுரம், அம்மையின் வெப்பம், நீர்ச்சுருக்கு, தாகம் இவற்றை நீக்கும்.

மேக வனலுமிக வீசுமசூரிகையால்
ஆக முறுகனலு மாறுங்காண்—மேகனத்தில்
தங்கிவரு நீர்ச்சுருக்குந் தாகவெப்ப முந்தணியும்
இங்குபனங் கற்கண்டுக் கே. (அ.கு.)

**வெல்லம்.**

பனை வெல்லத்தால், முக்குற்றத்தால் வரும் நோய்களும், முப்பிணி, சுவையின்மை குன்மம் இவைகளும் நீங்கும்.

"—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சந்நிநோய்
வல்லருசி குன்மமறு மால்" (அ. கு.)

**பனைவெல்லக்குடிநீர்**

வல்ல சுரம்பெரு மாந்தம்போந் தோஷம்போஞ்
சொல்லவெகு மேகம்போஞ் சோகைபோம்—நல்லாய்கேள்
தாலவெல்லஞ் சுக்குடனே சற்றே நிலக்குமிழுங்
காலமே காய்ச்சியுணக் கால்.

(பொ-ள்) பனைவெல்லம், சுக்கு, நிலக்குமிழ் ஆகிய மூன்றையும், குடிநீர் செய்து, காலையில் குடித்துவரின், சுரம், மாந்தம், தோஷம், மேகம், சோகை முதலியன போகும்.

**கிழங்கு.**

பனங்கிழங்கால், எலும்புச்சூடும் மேகங்களும் போகும். குளிர்ச்சியும் வனப்பும் உண்டாகும்.

"பனங்கிழங்கால் அத்திவெப்பு பன்மேகம் போகும் (அ. கு.)
இனுங்குளிர்ச்சி யோடழகும் எய்தும்."

வ - கு : இதன் ஓலை எழுத்தாணியால் எழுத உதவும். காகிதம் வழக்கத்துக்கு வருமுன், இலக்கியம், இலக்கணம் முதலிய பல கலைகளும் இவ்வோலையிலேயே வரையப்பட்டுள்ளன.

மேலும் இவ்வோலைகள் வீட்டிற்குக் கூரையாகப் பயன்படுகிறது

ஓலையினால், பாய், விசிறி, சிறுபெட்டிகள், இன்னும் பலவித வீட்டுச் சாமான்கள் செய்கிறார்கள். ஓலையைச் சாயம் தோய்த்துச் செய்கிற சிறிய ஓலைப்பெட்டிகள் மிகவும் அழகு பொருந்தியவைகளாயிருக்கும்.

சாயந்தோய்த்த ஓலையைச் சுருட்டிச் சில பெண்கள் காதில் அணிந்து கொள்வதுமுண்டு.

ஆணங்காயைச் சுட்டு நீரில் கலக்கித் தெளிந்த நீரைக் காய்ச்சில் உப்பு உரையும். இதனை மூன்று முறை காய்ச்சி எடுத்த உப்பை சிறு அளவில் கொடுக்க, சிறுநீரைப் பெருக்கும். வலப்பாட்டீரல், இடப்பாட்டீரல் நோய் கள் போம்.

மட்டைச்சாறு நேத்திரநோயை அகற்றும்.

மட்டையினின்றும் ஒருவகைத்தும்பு (நார்) எடுத்துத் துடைப்பம் (Broom) செய்கிறார்கள்.

இளங்குருத்தைத் தின்னலாம். மிக இனிப்பாக இருக்கும். ஆனால் கழியச் செய்யும்.

இம்மரத்தைப் பீமனுக்கு ஒப்பாகவும், பீமனை இரசத்துக்கு ஒப்பாகவும் கூறியுள்ளதனால், இதன் குருத்துச் சாற்றினால் இரசம் பற்பமாகும்.

பூவைப் பதப்படுத்தி, அதன் முனையைச் சீவி வாய்வழியாய் வடியும் நீரைக் குடுவைகளில் தங்கும்படி செய்து எடுப்பார்கள். இதற்குக் கள் என்பது பெயர். அக்குடுவையில் கொஞ்சம் சுண்ணாம்பு தடவினால் புளிக் காது. இதற்குப் பதநீர் அல்லது பனஞ்சாறு என்று கூறுவார்கள். புளிக் காத கள் அல்லது பதநீரைக் காலையில் 40 நாள் இடைவிடாது சாப்பிட்டுவர மேக நோய் தணியும்.

" இரேவதிவரன்மாலைமந்திரம்
இருத்திடுமேகவனங்குப்பையெல்லாம்." (தே.கா.)

பதனிநீரிலிருந்து வெல்லம், கற்கண்டு, சருக்கரை முதலியவை செய்து வருகிறார்கள்.

இக்கள்ளினால் பாடாணங்கள் தூய்மை ஆகும்.

பூவைச் சுட்ட சாம்பல் புண்களைப் போக்கும்; உள்ளுக்குக் கொடுக்க சிறுநீர்ப் பெருக்கை உண்டாக்கும்; கழியச் செய்யும்.

இதன் காயை முதிராததற்கு முன் வெட்டி, உள்ளிருக்கும் நுங்கையும் நீரையும் சாப்பிட, குளிர்ச்சியைத் தரும். வேனிற்கால நீர்வேட்கைக்கு மிகவும் ஏற்றது.

காய் முதிர்ந்தால், கொட்டை கனத்துக் கடினமாகி, மேல் சதை பழுத்து அதிகச் சுவையுடனிருக்கும், இப்பழம் மிக்க மந்தத்தை உண்டு பண்ணும். ஏழைகள் இப்பழத்தைச் சுட்டோ, வேகவைத்தோ தின்பார்கள்.

இதன் கிழங்கு மிக்க வன்மையைத் தரும்.

கிழங்கை உலர்த்தி இடித்து மாவாக்கி, அத்துடன் தேங்காய்ப்பால், உப்பு முதலியவை சேர்த்து, பிட்டவியல் செய்து தினமும் உண்டுவர, உடல் வன்மையைத் தரும்.

கிழங்கை வேகவைத்துத் தோல் உள்முளை முதலியன நீக்கி, துண்டுத் துண்டாக வெட்டி, நன்றாகக் காயவைத்து உலர்த்தி எடுத்து, இடித்து மாவாக்கிப் பலகாரங்களை செய்து சாப்பிட, உடல் பருமனையும், உடல் வன் மையையும் பெறும்.

**பனைவேர்.**

பாண்டியன்ரு ரோமமூவர் பண்ணியமா கத்துடங்குப்
பாண்டியன்ரு ரோமமூவர் பண்ணியதாம்—பாண்டியன்ருர்
நேத்திரத்தான் மாலையற நீர்குடியட் டானகரு
நேத்திரத்தான் மாலையற நீ.

(பொ-ள்.) பனை மரத்தின் வேரை நறுக்கிப்போட்டு, அதற்கு இரண்டு பங்கு நீர் விட்டுச் சூரிய புடத்தில் வைத்து, பின்பு அடுப்பேற்றித் தீபாக்கினியாகக் காய்ச்சி இறக்கிய நீரைக் கிரமப்படி காலை, மாலை, உச்சி ஆகிய மூன்று வேளையும் உட்கொள்ளில், மேற்குறிப்பித்த பிணிகள் நீங்கும்.

---

## 399. பன்னீர்ப்பூ—Pannir-Pu.

**வே. பெ. குலாப்பூ, ரோஜாப்பூ, சிற்ருமரை.**

Rosa Gallica,

| | | | |
|---|---|---|---|
| Eng. | | The Rose flower, or The Persian Rose. | |
| Tel. | Roja-Puvvu, Golabi-Puvvu | Kan. | Gulabipuvu |
| Mal. | Pannirpuva | Hind. | Gulabkephul |

இது முட்கள் நிறைந்த ஒரு வகைக் குத்துச்செடி. பூக்களின் நிற வேற்றுமையில், வெள்ளை, இளஞ்சிவப்பு, நற்சிவப்பு, மஞ்சள், பச்சை, கலப்பு நிறம் போன்ற பூக்கள் புட்பிக்கும் செடிகளை நாம் பல இடங்களிலும் பார்க்கிறேம். இவ்வகைச் செடி ரோஜாக் காடுகளிலும் வளருகிறது; இச்செடி இந்தியாவில் எங்கும் பயிரிடப்படுகின்றது. காட்டு ரோஜாச் செடி : இதன் பூ, பார்வைக்கு மிக்க அழகாய்ச் சிவந்த நிறத்துடன் காணப்பட்டபோதிலும், நறுமணமுடையதன்று.

ப-உ : பூ.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை—சீதம், பிரிவு—இனிப்பு.

செய்கை:
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-Carminative.
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant:

குணம் : இதனால், சுரம், தாகம், ஒக்காளம், கீழ்வாய் எரிச்சல், வெள்ளை, வயிற்றிசிவு இவை போம். கழிச்சலை உண்டாக்கும்.

சிற்ரு மரைப்பூவால் சேர்த்தமலக் கட்டுவிடும்
ஒற்றவெப்பு தாகமதி ஒக்காளஞ்—சற்றுவிடா
மூல எரிவுரத்த மூத்திரம் வயிற்றிசிவும்
ஞாலம்விட் டேகும் நவில். (அ.கு.)

**பன்னீர்.**

இஃது குளிர்ச்சியைத் தரும், இளைப்பைப் போக்கும், வளி ஐயக் குற்றங்களைத் தன்னிலையடையச் செய்யும். மனக் கலக்கத்தைப் போக்கும்.

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசந்நிக்
கிந்நீருண் எகும் இளைப்புமறுஞ்—சந்நிகளும்
வாதபித்த ஐயமொடு மானே! வியாகுலமும்
பூதலம்விட் டேகும் புகல். (அ.கு.)

வ-கு : பூவிதழ்களைக் கொண்டு பன்னீர், வெந்நீர், ஊறல்நீர் மணப்பாகு, குல்கந்து, அத்தர் முதலியவைகள் செய்து வழங்கலாம்.

**பன்னீர் :** பூவிதழ்கள் 1,500 கிராம் ([illegible] கிலோ), நீர் 4,200 மி.லி. (4¼ லிட்டர்) வாலையிலிட்டுக் காய்ச்சிப் [illegible] இறக்கிக் கொள்ளவும். இதை, சந்தனங்களோடு மணத் திர[illegible]ும், களிம்பு, இலேதம் முதலியவைகள் உறவாகவும் சேர்த்துக் கொள்ளவும்.

சிவப்புப் பூவிதழ்கள் 8 கிராம், வெந்நீர் 340 கிராம் சேர்த்து அரை மணி நேரம் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும். இதனுடன் உப்பு பேதி மருந்துகளையும் கசப்பு மருந்துகளையும் சேர்த்துக் கொடுக்க, வெகுட்டலிராது. சுரம், நீர்வேட்கை, ஓக்காளம் இவை நீங்கும்

உலர்ந்த பூவிதழ்கள் 150 கிராம் எடை 1,250 கிராம் வெந்நீரிலிட்டு, 12 மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அதில் 650 கிராம் சருக்கரை சேர்த்துக் காய்ச்சிப் பதத்திலிறக்கி வடிகட்டிக்கொண்டு, 51 கிராம் பன்னீர் சேர்த்துக் கொள்ளவும். இதை 17—25 வீதம் நீரில் கலந்து கொடுக்க வயிற்றுவலி, வெள்ளை, உடல் வெப்பு இவை நீங்கும்.

சிவப்புப்பூவின் பச்சை இதழ்க 680 கிராம், கற்கண்டுத்தூள் 2,040 கிராம் கூட்டி இடித்து மெழுகுபோல் வரும்பொழுது எடுத்து, அதில் ஒரு தேக்கரண்டி அளவு கொள்ள யிறு நோகாமல் கழியச் செய்யும்.

பன்னீர் 238 கிராம், மீன் கொழுப்பு 51 கிராம், வாதுமை எண்ணெய் 306 கிராம், ரோஜாப்பூ எண்ணெய் 10 துளி இவைகளைச் செவ்வையாகக் கலந்து வைத்துக்கொண்டு, டண்களை ஆற்ற மேலுக்கு வழங்கலாம். நறுமணமாயிருக்கும்.

பூக்களிலிருந்து ஒரு வகை நறுமணம் பொருந்திய எண்ணெய் எடுப்பதுண்டு. இதற்கு அத்தர் எனப் பெயர்.

---

## 400. பாகல்—Pakal

**வே. பெ. காரவல்லி, கூரம் கூலம்.**

**Memordica charntia**

**Eng. : Bitter gourd**

| | |
|---|---|
| Tel. Kākara | Sans. Karavalli |
| Mal. Pāval | Sushavi |
| Kan. Hagala | Hind. Keràla |

**வளரும் இடங்கள் (Habitat) :**

இது கொடி வகையைச் சேர்ந்தது ; இந்தியாவில் பயிராகும். இதில் கீழ்க்கண்ட வகைகள் உண்டு.

1. பழுப்பாகல் அல்லது காட்டுப்பாகல் .. M. Dioica.
2. கொம்புப்பாகல் .. .. .. A variety.
3. கொல்லம்பாகல் அல்லது வேலிப்பாகல் Bryonia Garcini.
4. நரிப்பாகல் .. .. .. .. A variety.
5. நாய்ப்பாகல் .. .. .. .. Bryonia Maysorensis.
6. நிலப்பாகல் .. .. .. .. M. Humilis.
7. மிதிப்பாகல் .. .. .. .. M. Muricata.

இவற்றுள் பழுப்புப்பாகலின் பண்பைக் காட்டுப்பாகலின் கீழ்க்காண்க.

கொல்லம்பாகல், இது பாகலில் பெரிய இனம் ; நீண்டுபெருமலாய் இருக்கும்.

**கொல்லம்பாகல்** அல்லது வேலிப்பாகல், நரிப்பாகல், நாய்ப்பாகல், இம்மூன்றும் குத்துக்காடுகளிலும், வேலியோரங்களிலும் படர்ந்து வளரும். இவைகளின் காய் மிகச் சிறியதாகவும் மிகக் கைப்புள்ளதாகவும் இருப்பதுமன்றி, மற்றைய பாகல் இனங்களைப் போலப் பெரிதும் வழங்குவதில்லை.

நிலப்பாகல், மிதிப்பாகல் இவ்விரண்டும் மிகப் பெரிதும் மிகச் சிறிதுமில்லாமல், நடுத்தரமாய்த் தரையில் படர்ந்து வளரும். காய்கள் ஏராளமாய்க் காய்க்கும். இவைகளைச் சமையல் செய்து உண்பது இந்தியர்களின் வழக்கம். இங்கு, மேற்கூறிய பாகல் இனங்கள், எல்லாவற்றின் பண்புகளையும் பொதுவாகக் கூறப்படும்.

ப-உ : இலை, பழம், விதை.

சுவை : கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

இலை.

செய்கை
- புழுக்கொல்லி—கருமிநாசநி—Anthelmintic
- பாற்பெருக்கி-க்ஷீவர்த்தநி—Lactagogue

பழம்

- உரமாக்கி-பலகாரி—Tonic
- பசித்திதூண்டி—ஜடராக் னிவர்த நி—Stomachic
- வெப்பம் உண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- பித்தசாமனி-பித்தசாந்தநி—Antibilious
- மலமிலக்கி-மலகாரி—Laxative.
- உடற்றேற்றி-வயதாபேதகாரி—A!teratiive

விதை

- புழுக்கொல்லி--க்ருமிநாசநி—Anthe'mintic

இலை.

பொதுக்குணம் : இது முக்குற்றங்களின் பெருக்கை அடக்கும் ; கழிச்சல் உண்டாக்கும் ; புழுக்களை வெளியாக்கும். இதனால் பாதரசவேகம் முறியும்.

பிறியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோடம்
முறியு மிரதம் முறியுங்—குறியாத
மாகற் புடைய மடமயிலே ! எப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து. (அ.கு.)

பழம்.

வெம்பி விழாத பாகற் பழத்தினால், சுரம், வெள்ளை, இருமல், இரைப்பு, மூலம், முக்குற்றம், குட்டம், வயிற்றுப்புழு இவை நீங்கும்.

சுரமேகங் காசஞ்சு வாசமொடு மூலந்
திரிதோடங் குட்டமிவை தீருங்—கிருமியறும்
மோகப் புணரியெனு மொய்குழலே ! வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார். (அ.கு.)

கொம்புப்பாகற்காய்.

கொம்புப்பாகற்காய் நல்ல மருந்துகளை முறிப்பதுமன்றி, சீதளிக் குற்றங்களையும், கரப்பானையும் உண்டாக்கும்.

மருந்துகளின் நற்குணத்தை மாற்றும். அஃதொன்றே
திருந்தவலி வாதத்தைச் சேர்க்கும்—பொருந்துபித்தங்
கூட்டுமத பத்தியத்தைக் கொண்டிருக்கும் வன்கரப்பான்
காட்டுக்கொம்புப் பாகற் காய். (அ.கு.)

**நாய்ப்பாகல்.**

இது பீநசத்தை நீக்கும்; சாதிலிங்கத்தையும் பாடாணத்தையும் தூய்மை செய்யும்.

நாய்ப்பாக லின்குணத்தை நன்று யுரைக்கக்கேள்
வாய்ப்பான பீநசத்தை மாற்றுங்கான்—மாய்ப்பாக
லிங்கமதைச் சுத்திசெயும் நேரிற்பா டாணத்தைப்
பங்கமறச் சுத்திசெயும் பார். (அ.கு.)

**மிதிப்பாகற்காய் அல்லது காரவல்லி.**

இதனால் வளி தீகுற்றம் பெருகும். கரப்பான் உண்டாக்கும். இது பாதரசம், அரிதாரம், பாடாணம் முதலியவைகளின் நஞ்சை முறிக்கும்.

பித்தமொடு வாதப் பெருக்கைமிக உண்டாக்குந்
தத்துகரப் பானைத் தருவிக்கும்—பற்றிரத
தாரபா டாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய். (அ.கு.)

**காரவல்லி.**

காரவல் லிப்பெயர்க் காய்க்கறி பித்தமாம்
பேருற மாருதப் பெருமையைப் பெருத்திடும். (தே.கா.)

(பொ-ள்.) பாகற்காய்க்கறி, தீக்குற்றத்தையும், வளிக்குற்றத்தையும் போக்கும். ஏப்பத்தை வருவிக்கும்.

வ-கு : 30 கிராம் இலைச்சாற்றைக் கொடுக்க, கழிச்சலும் வாந்தியும் உண்டாகும். கழிச்சலும் வாந்தியும் அளவுக்கு மிஞ்சினால், அவற்றை நிறுத்த நெய்யும் சாதமும் சாப்பிடவும்.

✓ மிளகை இதன் இலை இரசத்துடன் சேர்த்தரைத்துக் கண்ணைச் சுற்றிப் பற்றிட, மாலைக்கண் நீங்கும்.

கை கால் எரிச்சலுக்கு, இலைச்சாற்றை உள்ளங்கால் உள்ளங்கையில் பூச, எரிச்சல் குறையும்.

ஒரு தேக்கரண்டி இலைச்சாற்றுடன், சிறிது மஞ்சட்பொடி சேர்த்துச் சிறுது குழந்தைகளுக்குப் புகட்ட, வாந்தியாகி ஒக்காளம் நீங்கும். இதுவயிற்றி லுள்ள மாசுக்களை நீக்கி, வயிற்றைச் சுத்தஞ் செய்யும்.

இதனிலைச்சாறு, ஆனைப்புளியிலைச்சாறு, பழுத்த வெற்றிலைச்சாறு, நாவற்பட்டைச்சாறு இவைகளை ஒரெடை சேர்த்து, அச்சாற்றில் சிறிது வசம்பு உரைத்துக் குழந்தைகளுக்கு 7-நாள் வரையிலும் கொடுக்க, மண் ணீரல், கல்லீரல், கட்டிகள் கரைந்து போகும்.

காயைச் சமையல் செய்து, அல்லது வற்றலாக்கி வறுத்து உண்பது நாட்டு வழக்கம்.

பழத்தை வளி நோய், ஈரல் நோய் இவைகளுக்கு வழங்கலாம். இதனால் குருதிப் பெருக்கம், களைப்பு, ஆயாசம் நீங்கும்.

இலை பழம் இரண்டையும் சேர்த்து, காமாலை, குட்டம், மூலம் முதலிய நோய்களுக்கு வழங்கலாம்.

பழத்தைப் பிழிந்து சாறெடுத்துச் சருக்கரை சேர்த்துப் புண்களுக்குப் பூசுவதுண்டு.

மேற்படி சாற்றைச் சருக்கரை கலந்து குடிக்க, சூதக வலி நீங்கும்.

கொடியுடன், கருவாப்பட்டை, திப்பிலி அரிசி, நீரடிமுத்தெண்ணெய் சேர்த்தரைத்து, அழுகிய புண்கள், சிரங்குகள் முதலிய நோய்களுக்குப் பூசலாம்.

இலையை உலர்த்திப் பொடித்து, பெருநோய்ப்புண்களுக்கு மேலுக்குத் தூவலாம்.

## 401. பாதம்பிசின்—Badam-Pisin

இது பாரசீக தேசத்தில் வளரும் மரம். இதனின்றும் ஒரு வகைப் பிசின் எடுத்து இந்நாட்டிற்குக் கொண்டுவரப்படுகின்றது. இதற்குப் "பாதம் பிசின்" என்பது பெயர். இது வெண்மை அல்லது மஞ்சள் நிறமாய் இருக்கும்; அகலமாயும், தகடுகளாயும், மணமும் சுவையு மாயும் இருக்கும்; எளிதில் பொடியாகாது.

**ப-உ :** பிசின்.

**சுவை :** இனிப்பு, **தன்மை**—தட்பம், **பிரிவு**—இனிப்பு.

**செய்கை :** உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—**Demulcent.**

**குணம் :** இதற்கு, இருமல், கழிச்சல் இவை நிற்கும்.

**வ-கு :** இதனை, நீரில் கரையாத மருந்துகளுடன் சேர்த்துக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

இப் பிசினில் கொஞ்சம் வாயில் போட்டு அடக்கி, இரசத்தை விழுங்கிக் கொண்டிருக்க, பொடி இருமல் தணியும்.

இப் பிசின்தூள், கருவேலம்பிசின்தூள், கோதுமைத்தூள் வகைக்கு 4 கிராம், சருக்கரை 12 கிராம் நன்றாகக் கலந்து, வேளைக்கு 24—கிராம வீதம், தினம் இரு வேளை இருமல், கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

---

## 402. பாதிரி—Pathiri

**வே.பெ. :** கன்னி; பாடலிமரம், பாடலம், புன்காலி.

**Setreospermum suaveolens,**

| | |
|---|---|
| Tel. Kaligottu | Sans. Patala |
| Mal. Pàthiri | |
| Kan. Padiri | Hind. Peader |

இஃது, இந்தியாவில் கிடைக்கக்கூடிய மரம்; வெப்ப நாடுகளில் பெரிதும் பயிராகிறதில்லை. இதன் பூவிற்கு "மதனகாமேஸ்வரப்பூ" என்பது பெயர்.

**ப-உ:** இலை, பூ, பட்டை, வேர்.

**சுவை :** துவர்ப்பு, **தன்மை**—தட்பம், **பிரிவு**—இனிப்பு.

**செய்கை :** சிறுநீர்ப் பெருக்கி—**Diuretic.**
வெப்பகற்றி—**Febrifuge.**

குணம் : இதனுல் தீச்சுரமும் மேகமும் நீங்கும். பெண் வசிய முண்டாகும்.

பித்த சுரந்தணியும் பெண்வசியம் உண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண்—மெத்தவுமே
மாதுரியம் நீங்கா வசன மடவனமே!
பாதிரியின் பூவையுண்டு பார். (அ.கு.)

**வேர்.**

இதனுல், நீரிழிவு, கரப்பான், உழலே, கண், காது, கை, கால்களைப் பற்றிய எரிச்சல், நீரிழிவுக் கட்டிகள், புண்கள், எருவாய் முளைகள், சொறிசிரங்கு, வயிற்று மந்தம், ஐயவளிக்கூட்டு இவை போம்.

பாதிரியின் வேர்குணந்தான் பார்க்கில் மதுமேகம்
ஓதுகரப் பானுழலே யோடிவிடும்—மாதேகேள்!
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவும்
நிண்ணயமாய்ப் போகும் நிசம்.

மேகத்தால் வந்த மிகுபிளவை மாவிரணம்
போகத்தால் வந்த பொருமூலம்—ஆகத்தில்
வந்தசொறி யோடுகப வாதமந்த மும்போகும்
கொந்தடரும் பாடலத்தாறு கூறு. (அ.கு.)

வ-கு : இதன் இலைச்சாற்றுடன் பழச்சாறுங் கலந்து, தலையில் ஊற வைத்துப் பின் தலைமுழுகி வர, தீக்குற்றத்தைப் போக்கி வெறி நோயை நீக்கும். மேற்கூறிய மருந்தை உள்ளுக்குக் குடிக்கவும் கொடுக்க லாம்; இவ்விலையைக் குடிநீரிட்டுந்தரலாம்.

பூவைக் குடிநீரிட்டு அல்லது அரைத்துச் சாப்பிட, மேகம் தணியும், சுரம் நீங்கும்.

பூவின் சாற்றைத் தேன் கலந்து உட்கொள்ள, விக்கல் நீங்கும்.

பட்டை ஒரு பங்கு, நீர் பத்துப் பங்கு சேர்த்து ஒரு மணி நேரம் ஊற வைத்து, 15 மி.லி. முதல் 30 மி.லி. விதம் காலை மாலை உட்கொள்ள, வயிற்று வலி, இருமல், சோபை முதலியன நீங்கும்.

வேரைக் குடிநீரிட்டாவது அல்லது உலர்த்திப் பொடி செய்தாவ கொடுக்க அது மேற்கூறிய நோய்களை விலக்கும்.

---

## 403. பார்லி—Barley

**Hordeum Vulgare.**

**Eng. Barley.**

| | |
|---|---|
| **Tel. Ba.li-biyam** | **Sans. Yavam** |
| **Mal. Barley** | **Hind. Indarjau** |
| **Kan. Jave-godhi** | **Duk. Jowhn** |

இது, வட இந்தியாவில் பயிரிடப்பட்டு வருகின்ற உணவு வகைபச் சேர்ந்தது. இதில் பார்லி சீமைப்பார்லி என்று இரு வகை உண்டு. சீமைப் பார்லியை மேனுட்டார் ஏராளமாகப் பயிர் செய்து, அரிசியாக்கி இந்தியாவிற்கு இறக்குமதி செய்கிறுர்கள். இந்த அரிசியானது முட்டை வடிவமாகவும், வெண்மை நிறமாகவும், மடிப்புள்ளதாகவும், சிறிய தாகவும் இருக்கும்.

ப-உ : விதை.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : { உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent. உடலுரமாற்றி—போஷணகாரி—Nutrient. சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic. }

குணம் : இஃது உடலைத்தேற்றும் ; சிறுநீரைப் பெருக்கும் ; நீர் வேட்கையை அடக்கும் ; செரிப்பை உண்டுபண்ணும்.

வ- கு: 85 கிராம் அரிசியை 1400 மி.லி. தண்ணீரில் கொதிக்கவைத்து, 700 மி. லி. வற்றவைத்து வடிகட்டி, தொண்டைப் புண், எரிச்சல், சுரநோயில் காணும் நீர் வேட்கை இவைகளுக்குக் கொடுக்கலாம். இத்துடன் சிறிது சருக்கரையும் பழ இரசமும் சேர்ந்தால், நாவிற்குச் சுவையாயிருக்கும். பால்சேர்ப்பின் பழச்சாறு சேர்த்தல் கூடாது.

விரைவுடன் கூடிய அத்திப்பழம் 85 கிராம், அதிமதுரம் 16 கிராம் எடை மேற்கூறியபடி செய்த அரிசிக் கஞ்சி 1400 மி.லி. இவற்றை அடுப்பேற்றி 350 மி.லி. வற்றவைத்து, வடிகட்டிக் கொடுக்க, உடலுக்கு வன்மை தரும் ; வயிறு கழியும்.

தாய்ப்பாலற்ற குழந்தைகளுக்கு, பார்லி அரிசிக் கஞ்சியும் பாலும் சமனெடை சேர்த்துக் கொடுக்கலாம். அளவுக்கு மிஞ்சிக் கொடுத்தல் ஆகாது.

அரிசியைக் கஞ்சி காய்ச்சி அருந்த, இருமலையும் நீர் எரிச்சலையும் தணிக்கும்

---

## 404. பாலை—Palai

**வே-பெ சிவனி, சிவந்தி.**

பாலை என்னும் பெயரின் சார்பில் அநேக வகைகள் உண்டு. அவை : கொடிவகையில்—ஊசிப்பாலை, மரவகையில்—எழிலைப்பாலை, குடசப்பாலை (குளப்பாலை), தீம்பாலை, மலைப்பாலை, வெட்பாலை முதலியன. இவற்றுள் எழிலைப்பாலை, குடசப்பாலை (குளப்பாலை) இவற்றைப்பற்றி முன்னமே எழுதப்பட்டுள்ளன. இவை நீங்கலாக மற்றவை இங்கு எழுதப்படும்.

### ஊசிப்பாலை—Usip-palai

**Oxystelma esculentum.**

இது ஒரு கொடி வருக்கம்.

ப-உ : இலை.

சுவை : இனிப்பு, தன்மை—சீதம், பிரிவு—இனிப்பு.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant. உரமாக்கி—பலகாரி—Tonic. }

குணம் : இதனால் வெள்ளை, நீர் எரிச்சல் நீங்கும், கண் குளிர்ச்சியும், தேக புஷ்டியும் உண்டாகும்.

மேக மகலும் விழிகுளிரும் நாளத்தின்
வேக மகலுமங்க மேனியிடும்—மோகமண
வாசிப்பா லைப்பருவ மாந்த்ரைலீக் குங்கொடியே !
ஊசிப்பா லைப்பன்ன முண். (அ.கு.)

வ-கு : இதன் கீரையைச் சமைத்துண்டாலும், குடிநீர் செய்து உட்கொண்டாலும் மேற்கண்ட நோய்களைத் தணிக்கும்.

இஃது ஓங்கிவளரும் ; இதன் பழம் சிற்றீச்சம் பழத்தின் அளவாக மஞ்சள் நிறத்தோடு மிக இனிப்பாகவும், பால் நிறைந்தும், இருக்கும்: உண்ணின் உதட்டில் ஒட்டிக்கொள்ளும். செங்கல்பட்டைச் சார்ந்த பொன்னேரிக்கடுத்த பலைவனம் என்னும் ஊரிலுள்ள சிவன் கோவிலுள் (தலவிருட்சமாக) பழைய மரம் ஒன்று இருக்கிறது.

## தீம்பாலை—Thimpalai

**வே - பெ : தூறுவாதி**

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய பெருமரம்.

ப-உ : பழம், பட்டை.

**சுவை : துவர்ப்பு, இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.**

**செய்கை :** { குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—**Refrigerant.**
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.**

**மரம்.**

**குணம் :** இதனால், வெள்ளை, முப்பிணி, நஞ்சுகள், நீர்வேட்கை, கண்ணோய், வாந்தி, பித்தம், நீரேற்றம், இரத்தக்கழிச்சல் இவை நீங்கும்.

மேகவெட்டை சந்நி விடபாகம் நேந்திரநோய்
தாகமுத்தோ டஞ்சர்த்தி சாரனலம்—வேகமோ
டேறுசலம் பீநசமி ரத்தமுந்தீம் பாலையெனுந்
தூறுவா திக்கலுஞ் சொல். (அ.கு.)

**பழம்.**

இதனால், கருங்கரப்பான், ஐயப்பெருக்கு, கழலை இவை போம். மிகு பசி உண்டாகும்.

வாத கரப்பனறும் வல்லசிலேஷ்மமும்போம்
வேதுகிரந்தியுஞ்சாம் மென்பசியாம்—ஓதுமதன்
கோலைப் பழித்தவிழிக் கோதாய் ! இனிமையுள்ள
பாலைப் பழத்தாலே பார். (அ.கு.)

வ-கு : பட்டையைக் குடிநீரிட்டு வேளைக்கு 40 மி.லி. சாப்பிட்டுவர மேற்கூறிய பிணிகள் விலகும்.

பழத்தைச் சாப்பிட, வெப்பந்தணியும், பசி உண் ம்

## மலைப்பாலை—Malaip-palai.

**வே-பெ : வரைப்பாலை.**

இது மலைகளிலும் காடுகளிலும் வளர்கிற மரம் ; இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடியது.

ப-உ பட்டை.

சுவை—இனிப்பு, துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

**செய்கை :** { அகட்டுவாய்வகற்றி— உதரவாதஹரகாரி—**Carminative.**
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்மதநி— **Stomachic.**

**குணம் : இது, விக்கல், ஐவகை வலி, வாந்தி, வயிற்றுவலி, வித்து, கருங்கரப்பான், மந்தம் இவைகளை நீக்கும்.**

விக்கல்வலி வாந்திகுன்ம மீறுபக்கச் சூலையொடு
மைக்கரப்பான் மந்தமிவை மாறுங்காண்—மைக்கண்
நிரைப்பாலை யொத்தமொழி நேரிழையே! கேளாய்
வரைப்பாலை யையுண்ட வர்க்கு. (அ.கு.)

வ-கு : பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்களைப் போக்கும்.

## வெட்பாலை—Vetpalai

**Wrightia tinctoria.**

**Eng : Sweet Indrajoo.**

| | |
|---|---|
| Tel. { Ankudu, Kodisha } | Kan. Kutaja |
| | Sans. Hyamaraka |
| Mal. Kutakappàla | Hind. Mitha Iindrajao |
| | Hindi. Indràjan |

இஃது இந்தியாவில் எங்குங் கிடைக்கக் கூடியது. இதில் கசப்பு, இனிப்பு என இருவகையுண்டு. கசப்பு வெட்பாலைக்குக் குடசப்பாலை என்பதும் இனிப்பு வெட்பாலைக்கு "வெட்பாலை" என்பதும் பெயர். இதனைக் குடசப் பாலையின் கீழ்ப் பார்க்க.

ப - உ: விரை—பட்டை.

சுவை - இனிப்பு, துவர்ப்பு. தன்மை—குளிர்ச்சி. பிரிவு - இனிப்பு

**விரை, பட்டை.**

செய்கை :
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
- வெப்பகற்றி—ஜ்வரஹரகாரி—Febrifuge.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.

**விதை.**

குணம் : இதனால், தீவளி கூட்டு நோய்களும், கடுவனும், குடலைப் பற்றிய நோய்களும், வயிற்றுப் பொருமல் ஆகியவைகளும் போகும். அன்றியும், இதனைக் குருதிக்கழிச்சல், சீதக்கழிச்சல் இவைகட்கும் வழங்கலாம்

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத—முப்புசத்தைக்
காணும லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணுர் முலையாய் புகல். (அ.கு.)

**மரம்.**

சூட்டையும் இனிப்பையும் பெற்றிருக்கும் வெட்பாலை, வலியையும் முப்பிணியையும் நீக்கும்.

அக்கினியை வைத்திருக்கு மார்ந்தவா தம்போக்குந்
திக்குள்திரி தோடத்தைத் தீர்த்துவிடுஞ்—சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த காண மடமயிலே
வெட்பாலை நன்மருந்தாம் விள். (தே.கு.)

வ-கு : இலையை வாயிலிட்டு மெல்ல, பல்வலி நீங்கும்.

இலையை அல்லது பட்டையை முறைப்படி குடிநீரிட்டுக் கொடுக்க, மேற் கண்ட நோய்களைப் போக்கும்.

---

## 405. பால் மரம்—Pal-Maram

பால் தருகின்ற மரங்களில் இரு வகை உண்டு. நாம் பருகத்தக்க நற்குணமமைந்த பாலுள்ளது ஒன்று; பருகத்தகா துற்குணமமைந்த பாலுள்ளது மற்றொன்று. பருகத்தகுந்த பால்மரமென்னும் அமுத விருட்சம் இந்தியாவில் இருக்கிறதாகக் காணப்படவில்லை. ஆனால் தென் அமெரிக்காவிலுள்ள ஒரு குன்றின் சார்பில், பால்மரம் ஒன்றுள்ளது என்று, தாமஸ்கெரன்ஸ் (Thomas Kerns) தமது அர்கானு ஆப் நேச்சர் (Arcana of Nature) என்னும் புத்தகத்தில் வரைந்துள்ளார். இம்மரம் வளருகின்ற இடத்தில் மழை பெய்கிறது மிகவும் அபூர்வமாம். இம்மரத்தின் இலைகள் எப்பொழுதும் வாடிவதங்கி உலர்ந்திருக்கும். வேர்கள் பருமனாக பாறைகளினூடே சென்றிருக்கும். ஆனால் இம்மரம் நாளுக்கு நாள் மிகவும் செழித்து ஓங்கி வளர்ந்துகொண்டே இருக்கும். இம்மரத்தின் அடிப்பாகத்தைக் கீறினால் அதனின்றும் நாவிற்கு இதமான நற்சுவையுள்ள பால் வடியும். சூரியோதய காலத்தில் ஏராளமாய் இப்பால் கிடைக்கும். இப்பாலைப் பருகவென்று அக்கம் பக்கத்தார் தினமும் காலையில் அம்மரத்தினடிக்குச் செல்வார். இம் மரத்தின் பெயர் பசுமரம் என்றும் கூறுவதுண்டு.

தென்னிந்தியாவில் கொல்லி மலைச்சாரலில் "கனக எருமை விருட்சம்" என்று ஒரு மரமிருக்கிறது. இம்மரம் மிகவும் அபூர்வமானது; புளிய மரத்தையொத்து, வக்கணத்தி இலையைப்போன்ற இலைகளையுடையதாயி ருக்கும். பூவின் அடிப்புறம் சிவப்பாயும், மேற்புறம் வெண்மையாகவும் உட்புறம் சிறு சிவப்பாயுமிருக்கும். இது காட்டரளிப் பூப்போன்றுள்ளது. இதன்பால் மிகக்காரமானது. தில்லம் பாலைக் காட்டினும் கொடியது. இப் பால் பட்ட இடம் புண்ணாகும். இம்மரத்தினின்றும் பால் எடுக்கும் விதட அதிசயமானது. மரத்தின் அருகில் நின்று கன்றைப்போலக் கனைத்துப் பின் மரத்தைக் கொத்தி ஒரு கிண்ணத்தை அடியில் வைத்தால், பால் அக்கிண்ணத்திற் வடியும் என்கிறார்கள். எருமைக் கன்றுபோலக் கனைத் துப் பால் எடுப்பதால் இதற்குக் கனக எருமை மரம் எனப் பெயரிடப் பட்டதாம்.

இதன் பாலினால் 64 வகைப் பாடாணங்களும் சுத்தமாகும். மேலும் மெழுகு நீற்றினம் முதலியவைகள் செய்யலாம் என்று சித்தர் நூல் களில் காணலாம்.

---

## 406. பால் வள்ளி—Pal valli

Ichnocarpus frutescens

Eng :—Black creeper.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nalatiga | Kan. | Gowriballi |
| Mal. | Pàlvalli | Hind. | Dudhilata |

இது கொடியினம், இந்தியா முழுவதும் வளரும்.

ப - உ: சமூலம், கிழங்கு.

சுவை - இனிப்பு. தன்மை - தட்பம். பிரிவு - இனிப்பு.

செய்கை :
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- சிறுநீர்ப் பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.
- உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.

மூகுணமும் வக்கும் நன்றாிக்குடையதேயாகும்.

## 407. பாவட்டை—Pavattai

வே. பெ. : பற்பணம.

Pavetta indica.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Paputta-vargras | Kan. | Pavate |
| | Nooni-papoota | Sans. | Pappana |
| Mal. | Malliamothu | Hind. | Kankra |

இது எங்கும் கிடைக்கும், குத்துச்செடிவகுப்பை சேர்ந்தது.

ப- உ : இலே, காய், வேர்.

சுவை - கைப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { மலமிளக்கி—மலகாரி— Laxative.
உரமாக்கி—பலகாரி—Tonic.

### இலே.

குணம் : இதனுல், வளி, ஐயக் கூட்டால் பிறந்த நோய்கள், தாகசுரம், முப்பிணி இவை நீங்கும். பசி உண்டாகும்.

சீதவா தங்களறுந் தீபனமோ உண்டாகும்
வாதங் கபமொழியும் வார்குழலே—போதவே
ஆவட்டைத் தாகசுரம் அற்றுவிடுந் தோடம்போம்
பாவட்டைப் பத்திரிக்குப் பார். (அ கு.)

### காய்.

இதனுல், வளி சுரம், அருசி, சீதக்கடுப்பு, ஐயக்குற்றம், கழிச்சல் இவை நீங்கும்.

வாத சுரம்தணியும் வாயருசி ஏகவிடுஞ்
சீதக்கடுப்பகலுந் தேமொழியே!—வாதுபுரி
பித்தவதி சாரமொடு பேராக் கபமுமறும்
உற்றபா வட்டங்காய்க்கு. (அ.கு.)

வ - கு : இலேயைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோய்கள் போகும்.

இலேயை வதக்கி வைத்துக் கட்ட, கீழ்வாயிலுண்டாகும் எரிச்சல் தணியும்

காயை வற்றலிட்டும் கறியாகவும் சமைத்துண்டால், காயின்கீழ்க் குறிப்பிட்ட நோய்கள் விலகும்.

வேரைக் குடிநீரிட்டு 40—80 மி. லி. தினமிரு வேளே கொடுகக, ஈரல் நோய்கள், வாதசுரம், சுவை அறியாமை போம். இத்துடன் சிறிது சுக்குச் சேர்த்துச் சோகை நோய்க்குக் கொடுக்க, நீரை இறக்கும்.

### பாவட்டை வேர்க் குடிநீர்.

கூறுகின்ற பாவட்டை கொண்டதே ரண்டமுடன்
வீறுடன்வே லிப்பருத்தி வேரிவையுங்—காறுகின்ற
நன்மிளகுங் கூட்டி நயமாக் கியாழமிட்டுண்
சென்மயிலே யாமசுரஞ் செப்பு.

(பொ - ள்) பாவட்டை வேர், சிற்றுமணக்குவேர், உத்தாமணி வே.ர) மிளகு முதலியவற்றை ஒரெயடையாகக்கூட்டி, இடித்துக் குடிநீர் செய்து குடித்துவர, செரியா சுரம் என்றும் வாராதொழியும். (தே, குடிநீர் 100)

வேர்ப் பொடியை ஒரு 4 கிராம் எடுத்து, சிறிது சுக்குச் சேர்த்துச் சருக்கரை கலந்து சிறு குழந்தைகளுக்குப் புகட்ட, வலப்பாட்டீரல், இடப் பாட்டீரல், வீக்கம் நீங்கும்.

வேர்ப்பொடி, சுக்குத் தூள் இவ்விரண்டையும் ஒரெடை சேர்த்து, கழு நீரில் கலக்கிப் பெருவயிற்றுக்குக் கொடுக்க, நீரை வற்றச்செய்யும்.

---

## 408. பிசின்பட்டை—Pisin-pattai

**வே-பெ : மயிலாலக்கடி, டீக்காமல்லி.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Nara-mamidi** | **Hind.** | **Maidà-lakri** |
| **Mal.** | **Pisin-patta** | | |

இஃது இந்தியா முழுவதும் வளருகின்ற ஒரு சிறிய மரம் ; எப்பொழுதும் பச்சையாகவே இருக்கும். பட்டை ஓர் அங்குல கனமுடையது.

**ப - உ :** பட்டை.

**சுவை** - துவர்ப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை ;**
- உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி —Demulcent.
- சிறுதுவர்ப்பி—லகுஸங்கோசனகாரி—Mild-astringent.
- வறட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient.
- துயரடக்கி—வேதநாசாந்தநி—Anodyne.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

**குணம்** : இது, சதையையும் குருதியையும் பற்றிவருகின்ற வாயுவையும், உடலின் வெப்பத்தையும் போக்கும்.

தசையிலுஞ் சோரி தனிலும் பரந்தே
வசிபோற்குத் திக்குடையும் வாய்வை—நிசமாகக்
கொல்லும் உடம்பின் கொதிப்பை யொருநொடியில்
வெல்லும் பிசின்பட்டை விள். (அ.கு.)

**வ - கு :** பட்டையைப் பச்சையாகவோ அல்லது உலர்ந்ததாகவோ எடுத்து, பால் அல்லது வெந்நீர் விட்டரைத்துக் கலக்கி, அடிபட்டு நொந்த வீக்கங்களுக்குச் சிறிது சிறிதாக விடலாம். இதையே துணியில் தோய்த்துக் காயங்களுக்கு வைத்துக்கட்ட, சீக்கிரத்தில் ஆறும்.

பட்டையை அரைத்து நஞ்சுக் கடிகளுக்கு மேலுக்குப் பற்றிட, நஞ்சு நீங்கிப்போம்.

பாலில் கலக்கி, கழிச்சல வகைகளுக்கு கொடுக்கலாம்.
ஆண்மையை பெருக்கவும் பயன்பெறும்.

---

## 409. பிடங்குநாறி—Pidan-gunari

**Premnatomentosa.**

**வே-பெ ; கிருஷ்ணபாலே, புறங்கைநாறி**

இம்மரத்திற்குப் 'புறங்கை நாறி' என்பது பெயர். இப்பெயர் மருவி, பிடங்கு நாறி என்றாயிற்று. இது. தென்னிந்தியாவில் எங்கும் வளரு கின்றது.

**ப-உ :** இலே.

**சுவை**-கார்ப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு**-கார்ப்பு.

**செய்கை :** பசித்தீண்டி—ஜடாக்கினிவர்த்தநி—Stcmahei.

**குணம்** : இதனால், செரியா மந்தமும், நீர்க்கோவையும் போம். பசித்தீப்பெருகும். புத்திக்குத் தெளிவும் உண்டாகும்.

பிடங்குநா றிப்பன்னப் பேச்சை யெடுக்கில்
அடங்கு மலசமஃ தன்றித்—தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும் வாங்கிவிடும் நீடுசட ராக்கினியாந்
தேர்ச்சியுறும் புத்திக்குத் தேர். (அ.கு)

**வ-கு** : இதன் இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்கப் பசியுண்டாகும். மந்தம் நீங்கும்.

இதன் இலை 2, 3, கடுக்காய்த் தோல் 6 கிராம், கறிமஞ்சள் 3 கிராம் சேர்த்துக் குடிநீரிட்டு வழங்க, கல்லீரல் மண்ணீரல் **வீக்கம் கரையும்.** **நீர்க்கோவை** போம்.

## 410. பிரண்டை—Piranadai

**வே-பெ: வச்சிரவல்லி.**

**Vitis quadrangularis, wall.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Nalleru** | **Hind.** | **Harshankar** |
| **Mal.** | **Peranda** | Sans. | Asthisamhari |
| **Kan.** | **Vajraballee** | | |

இஃது, இந்தியா, இலங்கை முதலிய இடங்களின் வெப்ப பாகங்களில் ஏராளமாய் உண்டாகிற கொடியினம்.

இதில் ஓலைப் பிரண்டை, உருட்டைப் பிரண்டை, முப்பிரண்டை, **சதுரப் பிரண்டை**, களிப்பிரண்டை, திம்பிரண்டை, புளிப்பிரண்டை என சில பிரிவுகளுண்டு. முப்பிரண்டை கிடைப்பதரிது.

**ப - உ** : தண்டு, வேர்.

**சுவை**—கார்ப்பு, தன்மை - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை** :
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - **Alterative**
- ருதுவுண்டாக்கி - ருதுவர்த்தநி - **Emmenagogue.**
- பசித் தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி - **Stomachic.**

**குணம்** : இதனால், எருவாய்தினவு குருதி மூலம் ஒழியும். மேலும் மந்தம், குன்மம், வளிக்கழிச்சல், குருதிக் கழிச்சல், ஐயப் பெருக்குமூளை மூலம், கால் ஒய்ச்சலாகியவைகள் நீங்கும். பசி உண்டாகும்.

பிரண்டையைநெய் யால்வறுத்துப் பின்னரைத்து மாதே!
வெருண்டிடா தேற்று விழுங்கில்—அரண்டுவரும்.
மூலத் தினவடங்கும் மூலவி ரத்தமறும்
ஞாலத்தி னுள்ளே நவில்.
மாந்தம் வயிற்றுவலி வாயுவதி சாரமுள
சேர்ந்த மூ லங்கபமுட் செம்புனற்போக்—கோய்ந்தநடை
யெல்லா மகலும் எழும்பும் அதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா.

(அ.கு.)

**பிரண்டை.**

வச்சிர வல்லி வடகந் தனைத்தின
வுச்சித மாக வொழியுங் கபப்பிணி,

(பொ-ள்) வச்சிரவல்லி வடகத்தை உணவு முறையாயேனும், மருத்துவ வகையாலேனும் உட்கொள்ள, ஐய நோய்களும், செரியாமையும் போம். (தே. கா.)

**களிப்பிரண்டை.**

இதனால், ஐயம்போம், தீக்குற்றம் பெருகும், கரப்பான், காணுக்கடி, சிலந்தி இவைகளின் நஞ்சு நீங்கும். ஆண்மை உண்டாகும். உடற்கு உரம் தரும்.

ஐயமறும் பித்தம் அணுகாம லோடிவிடுந்
தையலார் போகமிலச் சாருங்காண்—பையக்
கரப்பான் விலகுங் கடிசிலந்தியும் போம்.
உரப்பாங்க ளிப்பிரண்டை யுண். (அ.கு.)

**பிரண்டைக்குடி நீர்.**

பசும் பிரண்டையுடன் பேரிலந்தை வேப்பலகும்
பூசும் புரசுவித்து மோதகமும்—வாசனையாய்
கொள்ளீர்க் கஷாயங் குணமாம்வாய் வுக்கிருமி
விள்ளீர் நழுவுமென வீழ்ந்து.

(பொ-ள்) பிரண்டை, பேரிலந்தை, வேப்பீர்க்கு, முருக்கன் விதை, ஓமம், இவைகளைக் குடிநீரிட்டுக் குடிக்க, வாய்வு போம். வயிற்றுப் புழுக்கள் வெளிப்பட்டு விடும்.

**களிப்பிரண்டை**

.........................................
...... ................ ...........யாயில்
வரிசையாக் கற்குறிகர் வல்லியட் டுண்மெய்க்கு
வரிசையாக் கத்தையுற வை.

களிப்பிரண்டை கணுநீக்கி உணவுப்பொருளாக மிளகு, உப்பு முதலியவற்றைச் சேர்ந்தது உணவாகப் புசித்து வந்தால், பிணியினால் நொந்து மெலிந்த உடல் வன்மை பெரும்

## தீம்பிரண்டை, புளிப்பிரண்டை.

**இனிப்புப் பிரண்டையால்,** செரியாமந்தம், சீதக் கழிச்சல், இரைப்பு, கொட்டாவி, விக்கல், ஐயப்பெருக்கு இவை போகும். **புளிப்பிரண்டையால்** உடல் வெளுப்பு, மார்பு நோய், வயிற்றுவலி, இருமல் இவைகள் விலகும்.

தீம்பிரண்டை தன்னாற் செரியாமந் தம்ஆமந்
தேம்பிரைப்பு விக்கலையுந் திண்வாதம்—போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல்.

வ-கு : இதன் இளந்தண்டை நெய் விட்டு வதக்கி, அரைத்துத் துவையல் செய்து தின்பது நாட்டு வழக்கு. இதனால் சுவையின்மை, வயிற்றுப் பொருமல் முதலியன போம். தீபனம் உண்டாகும்.

பிரண்டையை நெய் விட்டு வறுத்து அரைத்துக் கொட்டைப் பாக்கு அளவு 8 நாள், காலை, மாலை சாப்பிட்டுவர, எருவாயின் தினவும், குருதிப் போக்கும் ஒழியும்.

இளந்தண்டை இலையுடன் உலர்த்திப் பொடித்து, சுக்குத்தூள் மிளகுத்தூள் சிறிது சேர்த்துச் சாப்பிட, வயிற்றுநோய் செரியாமை நீங்கும் இதையே பாலில் கலந்து சிறிது கற்கண்டு சேர்த்து அருந்த, உடலைத் தேற்றி, வன்மையைக் கொடுக்கும்.

பிரண்டையைச் சி ~! தீயிலிட்டு வதக்கிச் சாறு பிழிந்து, காதில் இரண்டொரு துளி விட, காதுச் சீழ் மாறும். மூக்கில் விட, மூக்கில் வடியும் குருதி யாறும். இச்சாற்றைத் தகுந்த அளவில் கொடுக்க, சூதகத்தைச் சரிப்படுத்தும்.

சிறு துண்டுப் பிரண்டையை சுண்ணும்பு நீரில் ஊறவைத்து வேளைக்கு ஒன்றிரண்டு சாப்பிட, பசியைத் தூண்டும்.

வேரை உலர்த்திப் பொடித்து 2 கிராம் கொடுத்துவர, முறிந்த எலும்புகள் சீக்கிரம் கூடும. இதை வெந்நீரில் குழைத்து மேலுக்குப் பற்றிடலாம்.

## 411. பிரப்பங்கிழங்கு—Pirappan-Kizhangu.

வே-பெ : வேத்திரத்தாள், சூரல்கிழங்கு, சாதிக்கிழங்கு.

இது பிரம்புக் கொடியின் கிழங்கு.

ப-உ : கிழங்கு.

சுவை - கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- கோழையகற்றி—கபஹாரி—Expectorant
- வாதமடக்கி—வாதநாசகி—Antivatha

குணம்: இதனால், பல்லாட்டம், வளிப்பெருக்கு, கீல்பிடிப்பு, ஐயநோய் இவை நீங்கும்.

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
உந்துசூ லைப் பிடிப்பை யோட்டுங்காண்—வந்து
கரப்புந் திறப்புமெனக் காட்டுநகை மாதே !
பிரப்பங் கிழங்கதனைப் பேணு. (அ.கு.)

வ-கு : இதன் கிழங்கைக் குடிநீர் செய்தேனும், பொடி செய்தேனும் தக்க அளவில் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் தீரும். பரிசவாயு போம்.

---

## 412. பிரமியவழுக்கை—Piramiya--Vazhukkai.

வே - பெ : பிரமி, சப்ததளை, நீர்பிரமி, சாரசுதி, வாடிகம், திராயந்தி, வாக்குபவம், சருமம், விவிதம், சாம்பிராணிப் பூண்டு.

**Vaccopa monieri**

**Eng.—Thyme-leaved gratiola.**

| | |
|---|---|
| Tel. Sambaraun | Sans. Manduga-brahmi |
| Mal. Bimi | |
| Kan. Bramhi | Hind. Barambhi |

இக்கொடிப்பூண்டு, நீர்க்கசிவுள்ள சதுப்பு நிலங்களில் வளரும; இந்தியா முழுவதும் கிடைக்கும்.

ப - உ : பூண்டு.

சுவை - துவர்ப்பு, கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- இன்பம்பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- கோழையகற்றி - கபஹரகாரி - Expectorant.
- எருவிலக்கி - மலகாரி - Laxative.
- சிறுநீர்ப் பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.

குணம் : இதனால், கீல்களில் ஐயம் பெருக்கடைவதால் பிறந்த வலி; கால் பிடிப்பு, கைகால் எரிவு, கடுப்பு, மலபந்தம், வீக்கம் முதலியன போகும்.

கீலின் பசையாற் கிளைத்த வலிவீக்கங்
காலின் பிடிப்பொடுகை காலெரிவு—மேலிலெழு
வாதத்தா நோவு மலக்கட்டுஞ் சோபையும் போஞ்
சீதத்தாஞ் சப்தளைக்குச் சேர். (அ.கு.)

வ-கு : இலைச்சாறு 6 கிராமுடன் நெய் சேர்த்துக் காய்ச்சியாவது, மேற்படி சாற்றுடன் 4 கிராம் கோஷ்டத்தூள் சேர்த்தாவது கொடுக்க, தீக்குற்றப் பெருக்குத் தணியும்.

இலையை வெண்ணெயில் வதக்கிச் சாப்பிடத் தொண்டைக் கம்மல் நீங்கும்.

இலையைத் தண்டுடன் இடித்துச் சாறு பிழிந்து, ஒரு மேசைக் கரண்டியளவு கொடுக்க, எரிச்சலோடுங் கூடிய நீர்ச்சுருக்கு நீங்கும்.

இலையை நசுக்கி வேகவைத்து நெஞ்சில் பற்றிட, நெஞ்சில் கட்டிய கோழை வெளிப்படும்.

இலைச்சாற்றை ஒரு தேக்கரண்டியளவு கொடுக்க, சிறு குழந்தைகளுக் குண்டாகும் இருமல் தணியும்.

இத்தாவரத்திற்குண்டான குறிப்புகளை மூலிகை நீர்ப்பிரமியில் காணவும்.

இலையை விளக்கெண்ணெய் விட்டு வதக்கி, வீக்கங்களில் வைத்துக் கட்ட, வீக்கந்தணியும்.

இவைகளல்லாமல் பிரமிய மணப்பாகு, பிரமிநெய் முதலியவைகள் செய்து மேற்கூறிய நோய்களுக்குக் கொடுக்கலாம்.

---

## 413. பிராய்—Piray.

வே - பெ : குட்டிப்பலா.

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கக்கூடிய சிறு மரம். இதன் இலை மிக வரட்சியுள்ளது.

ப - உ. :—இலை, பால்.

இலை.

சுவை :—துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

பால்.

சுவை :—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

குணம் - இலை—சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல்களையும், பால்—கால் வெடிப்புகளையும் போக்கும்.

வ - கு : இதன் இலையின் நரம்புகளைப் போக்கி, பசுவின் நெய்யிலிட்டு வறுத்து, பனங்கற்கண்டு கூட்டி அரைத்து, 1—2 கிராம் வீதம் ஒரு நாளைக்கு மும்முறை கொடுத்து வர, சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல், தீரும்.

கைகால்களில் காணும் வெடிப்பு மாற, இதன் பாலைத் தடவி வரலாம்.

குறிப்பு : இம்மரத்துப் பட்டைக் குழித் தைலம், பாடாணத்தைக் கட்டும் மெழுகுமாக்கும்.

இதன் இலேயைக்கொண்டு, யானைத் தந்தத்தாற் செய்யப்படும் பொருள் களைத் தேய்த்து மெருகிடலாம்.

---

## 414. பிலிம்பி—Pilimbi.

**வே - பெ : புளிச்சி.**

**Averrhoa bilimbi.**

| | | |
|---|---|---|
| Tel. Pulusukayulu | Hin. | Belambu |
| Mal. Vilimbi | Dak. | |
| Kan. Bimblee | | |

இது தோட்டங்களில் வைத்துப் பயிராக்கி வரும் சிறு மரம்; இந்தியா விலும் இலங்கையிலும் வளருகின்றது.

ப - உ : காய்.

சுவை - புளிப்பு, துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை :
- துவர்ப்பு - ஸங்கோசனகாரி - Astringent.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி- Stomachci.
- குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

குணம் : எருவாய்முளை, நீர்வேட்கை, வெப்பம் இவைகளை அடக்கும்.

வ - கு : இதன் காயைப் புளிக்குப் பதில் கறி வகைகளுக்குச் சேர்ப்பது நாட்டு வழக்கம். இதை ஊறுகாயாகச் செய்து சாப்பிடுவதுமுண்டு.

துணிகளில் பற்றிய கறைகளை இது போக்கும்.

பழுத்த பழத்தின் இரசம் ஒரு பங்கு, அதேயளவு நீர், சருக்கரை மூன்று பங்கு சேர்த்து, சிறு தீயிட்டு எரித்து மணப்பாகு செய்து, அதில் ஒரு கரண்டி வீதம் கொடுத்துவர, சுரதாரம் நீங்கி, சுரமும் தணியும்.

---

## 415. பிளவைகொல்லி --Pilavai-kolli.

இது வெளிகளில் தானகப் பயிராகும் செடி வகையைச் சேர்ந்தது.

ப - உ : இலே.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : புழுக் கொல்லி - க்ருமிநாசனி - Anthelmentic.

குணம் : இதனல், சிறு சிரங்கு, கழலே, ஒழுக்குவெள்ளை, உளை மாந்தை, நீரிழிவுப் பிளவை முதலியன தீரும்.

> பிளவைகொல்லிப் பூண்டிருந்தாற் புண்விரணம் பேரும்
> அளவையுறு மேக மடங்கும்—உளமாந்தை
> ஆருப் பிளவைகட்டி எல்லாம் உலர்ந்திடுமே
> மாருக் கவினணங்கே! வாழ்த்து. (அ-கு.)

வ - கு : இதை நீர் விடாமலே அரைத்து, சொறி சிரங்கு, பிளவை களின்மீது பூசிவர, அவைகள் ஆறும்.

---

## 416. பீதரோகிணி—Pitharohini.

வே - பெ : உரோகிணி

Thalictrum foliolosum,

Eng.—Gold Thread.

| | |
|---|---|
| Mal. Bithagam | Perr. Asprak |
| Sans. Peetharohinee | Hind. Pilijari. |

இஃது இமயமலைச் சாரலில் அகப்படுகிற ஒரு வகைப் பூண்டு. இது பயிராகும் இடங்களில் இதை "பிலஜாரி" என வழங்குவார்கள். ஹமாயூன் மலை நாடுகளிலும் இது வளருகின்றது. அங்கு இதற்கு "மொமீரி" என்பது பெயர். இது, காகத்தின் இறகு போன்று கனமாயும், நாருள்ளதாயுமிருக்கும். இதற்கு வெளிப் புறத்தில் மஞ்சள் நிறமும், உட்புறத்தில் கருநீல நிறமும் உண்டு.

பீதம்—பொன். பொன் மஞ்சள் நிறம். இதன் இலையின் வெளிப் புறமும் மஞ்சள் நிறம். ஆகவே இது பீதரோகணி எனக் காரணப் பெயர் பெற்றது.

ப-உ : வேர்.

சுவை—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- உரமாக்கி - பலகாரி - Tonic.
- எருவிலக்கி - மலகாரி - Laxative.
- உடற்றேற்றி - வ்யதாபேதகாரி - Alterative.

பண்பு : இதனால், கருவிழி நீல காசம், கிருஷ்ண மண்டலம, இமையைப் பற்றிய நீர்ப்பில்லம், கண்ணருகல் நோய், அக்கி நோய் இவை தீரும்.

படர்நில காசம் படலமொடு பில்லந்
தொடரிமைக விற்றேன்றுந் தோடம்—அடரும்
அருவியெனச் சொல்லுகின்ற அக்கிநோ யேகும்
ஒருபீத ரோகிணியை யுன். (அ.கு.)

அன்றியும், இதை முறைக் காய்ச்சலுக்கும் செரியாமைக்கும் கொடுக்க லாம்.

இதைத் தேனில் உரைத்துப் பூச, தேமல் முதலிய படைகள் போகும். கட்டிகள் கரையும். தோல், மென்மையுற்று ஒளி பெறும்.

இதை மூக்கிலிட, நீரேற்றம் முதலிய தலையைப் பற்றிய நோய்கள் விலகும்.

கண்ணிலிட, கண் புகைச்சல் மாறும்.

குடி நீரிட்டுக் கொடுக்க, வயிற்று நோய் காமாலை நீங்கும்.

ஊறல் நீரைக் கொண்டு கண்ணைக் கழுவ, கண் நோய்கள் நீங்கும்.

பொடி செய்த வேர் 37.5 மி. லி. நாளுக்கு மூன்று வேளை நீரில் கலந்து கொடுக்க, முறைசுரம் நீங்கும்.

அளவு : வேர்த்தூள் 375-650 மி. கி.

எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைக்கிட்டு மூழ்கிவர, கண் நோய் அணுகா ; கண் துலங்கும்.

## 417. பீநாறிமரம்--Pinarimaram.

வே : பெ : பெருமரம்.

**Sterculia foetida.**

**Eng.—Poon tree.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Kalukaranga.** | **Kan.** | **Penarimara** |
| | | **Sans.** | **Poothekam** |
| **Mal.** | **Pottakavalam** | **Hind.** | **Jangli-Badam** |

இம்மரம் மலை அல்லது காடடர்ந்த நாடுகளில் வளரும். இந்தியா விலெங்கும் கிடைக்கும்.

ப - உ : இலை, விதை, பூ, பட்டை.

**சுவை** - கைப்பு, **தன்மை**- வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
மலமிளக்கி - மலகாரி - **Laxative.**
சிறுநீர்ப் பெருக்கி - மூத்ரவர்த்தநி - **Diuretic.**
வியர்வைப் பெருக்கி - ஸ்வேதகாரி - **Diaphoretic.**

**விதை.**

**குணம் :** இதனால், சொறி, சிரங்கு, சுரம் முதலியவைகள் போம்.

வ - கு : இதன் விதையிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கின்றார் கள். இவ்வெண்ணெயை உட்புகட்டியும், வெளியில் பூசியும் வரின் சொறி, சிரங்குகள் தீரும்.

பட்டை.

இதனால், கழிச்சல் நோய்களும், வயிற்றைப் பற்றிய நோய்களும், குருதி நோய்களும், வளிக்குற்றப் பெருக்கால் வரும் நோய்களும் போம். இஃது உடலை வளர்க்கும்.

பெருமரப் பட்டையது பேதி கிராணி
மருவிரத்த நோயினத்தை மாற்றுந்—திருவே
நடலைபுரி வாதத்தை நாடாத கற்றும்
உடலையிரட் சிக்குமென வோது. (அ.கு.)

**வ-கு** : இலை, பட்டை முதலியவைகளை முறைப்படி குடி நீர் செய்து கொடுக்க, அது வியர்வையை உண்டாக்கிச் சுரத்தைத் தணிக்கும். சிறு நீரைப் பெருக்கும். மற்றும் மேற்கண்ட நோய்களைப் போக்கும்.

## 418. பீர்க்கு—Pirkku

வே-பெ : கோசவதி

**Luffa ocutaugula.**

Eng. :—Ribbed luffa.

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | Birakaya | Sans. | Kosavathee |
| **Mal.** | Pichchakam | | |
| **Kan.** | **Hirekai** | Hind. | **Turai** |

இஃது ஒரு கொடியினம், தென்னிந்தியாவில், ஏராளமாக வளருகின்றது. இஃதன்றி, இதில்—நுரைப்பீர்க்கு பேய்ப்பீர்க்கு. என இரு வகையுண்டு. பேய்ப்பீர்க்கு ; உணவுக்கு ஏற்றதன்று, கசப்புடையது, வாந்தியை உண்டாக்கும். நுரைப்பீர்க்கைச் சிலர் உண்பர்.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

காய்.

செய்கை :
- உள்ளழலறறி—அந்தர்ஸ் நிக்தகாரி—Demulcent
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தறி—Diuretic
- உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.

விதை
- நீர்மலம்போக்கி—வ்ரேசநி—Purga-tive.
- வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic.

குணம் : காயினால் : நீரேற்றமுண்டாம். தீக்குற்றம் ஒன்றாக இருந்தது மூன்றாக உயரும். வளி 'தீ' ஐயக் குற்றங்களைப் பெருக்கும்

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதமுறுங் காண்பித்தம்
ஒன்றுமூன் றாக உயருமே—மன்றலணிக்
காரளகக் கச்சுமுலைக் காரிகையே ! வாதகபம்
நேரளவைத் தாண்டும் நினை. (அ.கு.)

பீர்க்கு.

பீர்க்கின் காய்கறி பேதமிலா துண்ப
பார்க்கு ளெவர்க்குமாம் பத்தியக் கறியாம். (தே-கா.)

(பொ-ள்) பீர்க்கங்காயை உணவு முறையாக பாகப்படுத்தி உட்கொள்ளில் அது யாவருக்கும் மிகுந்த பத்திய உணவாகும்.

வ-கு : காயைச் சமைத்துண்ணலாம்.

இலையை அரைத்து அழுகிய புண்களுக்கு வைத்துக் கட்ட, அவை போம்.

இலையைச் சாறு பிழிந்து கண்ணில் விட சிறு குழந்தைகட்குண்டாகும் கண்ணோய் நீங்கும்.

இலைச் சாற்றை வெதுப்பி ஒரு தேக்கரண்டி வீதம், நீரிழிவு நோய்க்குக் கொடுக்கலாம்.

பேய்ப்பீர்க்கு விதை எண்ணெய் இலிங்கத்தை மெழுகாக்கும்.

வேரைக் குடி நீரிட்டுச் சோகைக்கு கொடுக்க, வீக்கம் குறையும்.

---

## 419. பீளை—Pilai

இது பூண்டு இனத்தைச் சேர்ந்தது ; உழவிற்குப் பின் பயிரிடாத நிலங்களிலும், வெளிகளிலும் 1—2 அடி உயரம் வளரும். இலைகளுக்கு நடுவில் வெண் நிறப்பூ உண்டு.

## சிறுபீளை—Chiru peelai

வே-பெ : சிறுகண்பீளை, கற்பேதி, பாஷாணபேதி, கண்பீளை :—Aerva lanata.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pindi-konda | Sans. | Pashanabhed |
| Mal. | Cherupila | | |

ப-உ : முழுப்பூண்டு.

சுவை : கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- கற்கரைச்சி—Lithoutriptic.

குணம் : இது, பாண்டு, பெரும்பாடு, நீர் எரிச்சல், முப்பிணி, நீரடைப்பு, கல்லடைப்பு, குடற்சூலை, குருதிச்சூடு ஆகியவைகளைப் போக்கும்.

பாண்டுபெரும் பாடு பகர்மூத்தி ரக்கிரிச்சம்
பூண்டதிரி தோடமிவை போகுங்காண்—தாண்டிப்
பறியவே ளைத்துரத்தும் பார்வையின்கண் மாதே !
சிறியபீ ளைக்குச் சிதைந்து.

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
போரடரி ரத்தகணம் போக்குங்காண்—வாரிறுக்கும்.
பூண்முலையே ! கேளாய் பெருந்துஞ் சிறுபீளை
யாமிதுகற் பேதி யறி. (அ.கு.)

வ-கு : இதன் இலைச்சாற்றில்—1/8—1/4, ஆழாக்கு வீதம் குடித்து வர பெரும்பாடு, கல்லடைப்பு, நீரடைப்பு, நீர் எரிச்சல் போம்

கஞ்சி வகைகளுளொன்றில் இதன் வேரைச் சேர்த்துக் காய்ச்சிக் குடித்து வர, சூல் கொண்ட பெண்களுக்கு வலுவைத் தரும்.

சிறுபீளை வேர்ப்பட்டை, பனைவெல்லம் வகைக்குப் பலம் ஒன்று, எடுத்துக் கூட்டி மைபோலரைத்து, ½ ஆழாக்குப் பசுவின் பாலிற் கலந்து, காலை மாலைகளில் உட்கொண்டுவர, கல்லடைப்பு, நீரடைப்பு, பெரும்பாடு முதலியன நீங்கும்.

### சிறுபீளை சமூலக் குடிநீர்.

கக்குஞ் சிறுபீளை கார்நெருஞ்சி மாவிலிங்கை
விக்கும்பே ராமுட்டி வேருடனே—யொக்கவே
கூட்டிக் கியாழமிட்டுக் கொள்ளவே கல்லடைப்பு
காட்டிக் கழன்றோடுங் காண்.

(பொ-ள்) சிறு பீளை சமூலம், சிறு நெருஞ்சி, மாவிலங்கை வேர், பேராமுட்டி வேர் இவைகளை ஓரெடை எடுத்து, போதிய நீர் விட்டு, எட்டில் ஒன்றாய்க் குறுக்கிப் பருக, கல்லடைப்பு நீங்கும், நீரிழியும்.

மேற்கூறிய குடிநீர்களை வெங்காரம், சீனக்காரம், வெடியுப்பு, சிலாசத்து, கல்நார், நண்டுக்கல், விரால்மீன் தலைக்கல் இவைகளின் பற்பத்திற்குத் துணைமருந்தாகக் கூட்டினால், கல்லடைப்பு முதலியன போம்.

## பெரும்பீளை—Perum-Pilai

வே-பெ ; பெரும்பூளை.

குணம் : சோபை, பைசாசம் முதலிய சங்கைதோடம், கல்லடைப்பு முதலியன தீரும்.

பாடாண பேதியெனப் பன்னுபெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண்—நாடறிய
பேய்பூத மும்போகும் பேசிற் பலபிணிபோந்
தூயோ ரறிவரிதைச் சொல்.

(அ.கு.)

வ-கு : சிறுபீளையை வழங்குவது போலவே இதனையும் வழங்லாம்.

---

## 420. புகையிலை—Pugaiyilai

வே-பெ : பிரமபத்திரி, கஞனந்தி, பிரமம்.

Nicotiana tabacum.

Eng.—Tobacco.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pogaku | Sans. | Tamrakuta |
| Mal. | Pokala | Arab. | Tanbak |
| | Puk-yila | Pers. | Tanbaku |
| Kan. | Hogesoppu | Hind. | Tamaku |

இஃது அமெரிக்காவுக்குரிய பயிரென்பர். ஆனால், இஃது இப்பொழுது இந்தியாவிலும் பர்மாவிலும் பயிராகின்றது. பர்மாவில் பயிராவதும், இந்தியாவில் கோதாவரி ஆற்றிலுள்ள சிறு தீவுகளில் (இவைக்கு லங்கா எனப் பெயர் வழங்கும்) பயிராவதும் மிக்க காரமுடையது எனச் சொல்லப்படுகின்றது. இதன் இலைக்குப் புகையிலை என்பது பெயர். இது புகைபிடிப்பதற்கு வழங்குவது பற்றி இப்பெயர் பெற்றது. இதன் பச்சையிலைக்கு உலர்ந்த பின்னுள்ள அவ்வளவு மணம் இராது.

இதனின்றும் எடுக்கும் உப்பு மிகுந்த கெடுதி செய்யும். இதற்கு நிக்கோடைன் (Nicotine) என மேனாட்டார் கூறுவார்.

இதில் பொட்டிலுப்புப் போன்ற சத்து இருக்கிறதாகையால், இதன் உப்பை நீர்க்கட்டு, பெருவயிறு, ஈசல் நோய் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

உ-ப : இலை.

சுவை-கைப்பு, கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை :
- இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodic.
- வாந்தியுண்டாக்கி—வமநகாரி—Emetic.
- சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- தலைநீர்போக்கி—சிரோவிரேசநி—Errhine.
- மலமிளக்கி—மலகாரி—Laxative.
- தாதுவெப்பகற்றி—ஸமநகாரி—Sedative.
- உமிழ்நீர்பெருக்கி—த்ரவாசுகாரி—Sailogogue.
- மூர்சையுண்டாக்கி—நித்ராகாரி—Narcotic.
- அழுகலகற்றி—தாதுக்ஷீணரோதி—Antiseptic.

பண்பு : இது, வாய், வறட்சி, அழல் நோய், வன்மைக் குறைவு ஆண்மை அழிவு இவைகளை விளைவித்து, நல்ல மருந்தையும் முறிக்கும்.

மருந்தை முறித்துவிடும் வாய்வறளச் செய்யும்
திருந்து பலவீனஞ் சேர்க்கும்—பொருந்து பித்தம்
உண்டாக்கும் விந்தழிக்கும் ஓது புகையிலையைக்
கண்டார்க்கும் ஆகாது காண். (அ.கு.)

மருந்துக்கு ஆகாப்பொருள்களில் இஃதுமொன்று. ஆனால், அளவோடு சில நோய்களுக்குத் தனியே வழங்கலாம்.

**இசிவு நோய்களுக்கு** : உள்ளுக்குக் கொடுக்காமல், வெளிக்குத் துவாலை இடலாம்.

**கட்டிகள், வீக்கங்கள்,** இவைகளால் உண்டாகும் எரிச்சலும் வலியும் குறைதற்குப் புகையிலையை அவைகளின் மீது போடலாம்.

**இரைப்பு, இருமல்** : இவைகளால் உண்டாகும் துன்பங்கட்கும் தூக்கமின்மைக்கும் சுருட்டு பிடிக்கச் செய்வதுண்டு. உலர்ந்த ஊமத்தம் பூவுடன் சேர்க்க மிக நன்மையுண்டாகும்.

**இறுகிக் கொண்ட குடலிறக்கம், எருக்கட்டு, நீரடைப்பு** இவைகளுக்கு புகையிலையைக் குடிநீரிட்டு பீச்சாக வழங்கலாம்.

சுருட்டுப் பிடித்தால், சிலருக்கு வயிறு கழியும். ஆனால், இது மயக்கத்தையும் ஆயாசத்தையும் தரும். வறட்சியை உண்டாக்கும், பசித்தீயைக் கெடுக்கும்.

சிறு குழந்தைகட்குக் காணும் எருக்கட்டுக்குப் புகையிலைக் காம்பை எருவாயில் வைக்கும் வழக்கம் இந்நாட்டில் உண்டு.

**பல்வலிக்கு** : ஒரு துண்டுப் புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டால், உமிழ் நீர் வடிந்து பல் வலி தணியும். பழக்கமில்லாதவர்க்கு வாந்தி உண்டாகும்.

**கரப்பான், சொறி, சிரங்கு** முதலிய நோய்களுக்கு இதன் குடிநீரை மேலுக்கு வழங்குவதுண்டு. ஆனால், வாய்க்குமட்டலும் வாய்நீரூறலும் உண்டாகும்.

**குறிப்பு.** :—தமரகத் தொழிலைக் குறைக்குந் தன்மை இதற்கிருப்பதால், அளவிற்கு மிஞ்சின தமரகத் துடிப்பும், மார்பு நோயும் நேரிடும். ஆயாசமும் அதிகப்படும். மயக்கம், வறட்சி இவைகளுந் தொடரும். ஆகையால், மிக்க மெலிந்தோர்கட்கும், குழந்தைகட்கும், கிழவர்கட்கும் எவ்வகையிலும் இதை வழங்கலாகாது.

### புகையிலைக் குடிநீர்

புகையிலை 650 மி. கி. வெந்நீர் 250 மி.லி. அரைமணி நேரம் ஊறவைத்து வடிகட்டவும்.

### புகையிலை உப்பு.

இதன் காம்புகளையாவது, அல்லது இலையுடன் காம்புகளையாவது நன்றாய் ஈரமின்றி உலர்த்தி, வெண்மையாய்ச் சுட்டுச் சாம்பலாக்கிச், சாம்பல் ஒரு பங்குக்கு நாலு பங்குச் சுத்த நீர் விட்டு, மூன்று நாள் கலக்கிக் கலக்கி வெயிலில் வைத்து, நாலாம் நாள் தெளிவிறுத்துக்கொண்டு சிறு தீயிட்டுக் குழம்பு போல வரும் வரையில் காய்ச்சி, சூரிய வெப்பத்தில் வைக்க உப்பாகும். இது வெண்ணிறம் பொருந்தியது. நிறம் வேறுபட்டிருப்பின், மறுபடியும் நீர் விட்டுக் கரைத்துத் தெளிவிறுத்து

முன் போலச் செய்து கொள்ளவும். இவ்வுப்பைத் தனித்தாவது அல்லது மற்ற நீரை உடைக்கும் உப்புடன் அல்லது வேறு மருந்து களுடன் கூட்டியாவது அளவுப் படி கொடுக்க நீர்க்கட்டுடையும். பெரு வயிறு போன்ற நோய்கள் தீரும்.

### வெடியுப்புச் சுன்னம்.

வெடியுப்பு ஒரு பங்கு, புகையிலை இரண்டு பங்கு எடுத்து, புகையிலை யைத் துண்டுத் துண்டாக வெட்டிக் கத்தரித்து, ஒரு சட்டியில் கொஞ்சம் பரப்பி, அதன் மீது வெடியுப்பைப் பரப்பி, இவ்விதமாகவே அடுக்கடுக்காய்ப் பரப்பி, கடைசியில் புகையிலையைக் கொஞ்சமதிகமாய்ப் பரப்பி, வெளியில் வைத்துக் கொளுத்திவிட, வெடியுப்பு ஒரு வகைச் சுன்னமாகும். இச்சுன்னத்துக்கு நேர் பாதி நவச்சாரங் கூட்டி, பீங்கானிற் பரப்பிப் பனியில் வைக்க, நீரிறங்கும். இந்நீரில் நாலிலொருபங்கு பொரித்த வெண்காரமும், படிகாரமும் கூட்டி எரிக்கச் சுன்னமாகும். இதில் ஒரு குன்றியளவு தக்க அனுபானத் தில் கொடுக்க, நீர்க்கட்டு உடையும்.

புகையிலையைச் சுட்ட சாம்பலை, வெண்ணெயுடன் கலந்து புண்களின் மீது பூசப் புண்கள் உலரும்.

இதன் புகை, நுண்புழுக்களைக் கொல்லும்.

இதைப் பொடியாகச் செய்து, மூக்குத் தூளாக இடவும், உலர்ந்த இலைத் துண்டுகளை வெற்றிலை பாக்குடன் சேர்த்து வாயிலடக்கவும். இதர மணம் தரும் பொருளுடன் சேர்த்து உக்கா பிடிக்கவும் பயன் படுத்துகிறார்கள்.

இதைத் தீநீராக வடித்தால் அந்நீரின் மீது எண்ணெய் படியும். இதில் “ நிக்கோடைன் ” என்ற நஞ்சுண்டென்பர்.

புகையிலையை, நீரில் நன்றாய்க் கசக்கிப் பிழிந்து வடிக்கட்டியதைக் கொடுக்க, பாம்புக்கடி நஞ்சு நீங்குமென்பர்.

---

## 421. புங்கு—Pungu.

வே - பெ : புன்கு, பூந்தி கரஞ்சகம், கரஞ்சம்.

Pongamia glabra

Eng.—Indian Beech.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ganuga | Hind. | Korang |
| Mal. | Punga | | |
| Kan. | Hnoge-gida | Sans. | Karanja |

இது சாதாரணமாய் இந்தியா முழுவதும் பயிராகக் கூடிய மரம். இதில் காட்டுப் புங்கு என்றொரு வகையுமுண்டு. இரண்டிற்கும் குணம் ஒன்றே.

ப-உ : இலை, பூ, விதை, வேர், எண்ணெய்.
**சுவை :** கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

பொது.

செய்கை :
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- உடற்றேற்றி—வ்யுதாபேதகாரி—Alterative
- நுண்ணிப்புழுவகற்றி—Parasiticide.

எண்ணெய்.

- அழுகலகற்றி—தாதுக்ஷீணரோதி—Antiseptic.
- வெப்பமுண்டாக்கி— உஷ்ணகாரி—Stimulant.

## புங்கு விதை.

குணம் : இதனல், கால் புண், கிரந்தி, கரப்பான், காது நோய், முப்பிணி, கண்ணோய் இவைகள் நீங்கும். மேலும் இது மலத்தைக் கட்டும். காட்டுப்புங்கின் விதையினுல், தேமலும், புடையும் கீல்களைப் பற்றிய வாய்வும் போம்.

புங்கின்விதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
அங்கசந்நி கண்ணோய்க்கும் ஆம்பேதி—யுங்கட்டும்
காட்டுப்புங் கின் விதைக்கு கண்டதே மற்சொறிமேய்ப்
பூட்டுப்பங் கின்வாய்வும் போம். (அ.கு.)

## வேர்.

இது, வாதக்குடைச்சல், மூர்ச்சை, வரட்சுரம், வாதகுன்மம், குருதி யினுல் பிறக்கின்ற நோய்கள், புண், புரையோடல், பாம்பு நஞ்சு இவைகளை நீக்கும்.

வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோய்—ஓதகின்ற
பண்புரையும் வல்விடமும் போகும்திரண்டருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார். (அ.கு.)

## புங்கு.

புங்குமேற்படி புசித்திட விருமனே
யுங்கெடு மீளையு மொழியுநிச் சயமே (தே-கா.)

(பொ-ள்) புங்கம் வேர்ப்பட்டையைப் புசித்துவரின், இருமல், ஈளை முதலியன ஒழியும்.

## மரப்பால்.

புங்கம் பாலானது புண்ணையும் வாய்வையும் நீக்கும் உடலுக்கு பொன் போன்ற ஒளியை உண்டாக்கும்.

" " ———————————

........................................—கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம் போன் மெய்யளிக்கும் தான். (அ.கு.)

## நெய்.

இதனல் அழகும் ஒளியும் உண்டாகும் ; கரப்பானும் சொறி ; சிரங்கும் ஒழியும்.

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந்—திங்கண்முக
மானே ! கரப்பான்போம் வந்த சொறியுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று. (அ. _ .).

## இலை.

வ- கு: புங்கு, புளி, நொச்சில், மா. வேம்பு, பொடுதலை, உததாமணி, கருவேம்பு, நா.த்தை, சங்கஞ்செடி, அவுரி, பொன்னுவரை இவைகளின் இலை, ஈர்க்கு வகைக்கு 35 கிராம் எடுத்து நீர் 1,400 மி.லி. விட்டு, அதில் கடுகுரோகணி, இந்துப்பு இவைகளைச் சிறு பொட்டலங்களாகக் கட்டிப் போட்டு, தீயெரித்துக் குடிநீராக வற்றவைத்து மாந்த கணங் களுக்குக் கொடுக்கலாம்.

## பூ.

புங்கம்பூ 1,400 மி.லி. வேண்டிய அளவு நெய் விட்டு வறுத்து எடுத்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு, ஒரு சிட்டிகை அளவு நாற்பது நாள் உண்ண, மேகம் இருபதும் நீங்கும். பத்தியம் புளி, புகை, வாய்வுப் பொருள் ஆகாது.

புங்கம்பூ, புளியம்பூ, வசம்பு, உள்ளி, சீரகம், வெட்பாலை அரிசி, நன்னாரி வகைக்கு 35 கிராம் பசுவின் பால் 700 மி. லி. எண்ணெய் 1,400 மி.லி. இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்க, கரப்பான் பதினெட்டும் தீரும்.

## விதை.

புங்கம் விதை, அழிஞ்சில் விதை வகைக்கு 1,400 மி. லி. முல்லை வேர் 2½ கிலோ, கற்றாழை வேர் 10 கிலோ இவைகளை ஒரு பாண்டத்திலிட்டுக் குழித் தைலமிறக்கி, கடுகளவு உள்ளுக்கிந்து மேலுக்கும் பூசி வர இதனால், நரை மூப்பு நீங்கி, உடல் வலுக்கும். பாண்டு மேகம் முதலிய நோய்களும் நீங்கும்.

## வேர்.

புங்கம் வேரைப் புறணி நீக்கி, மெல்லியதாகச் சீவி பால் பிழிந்து, அதற்கு நேர் தேங்காய்ப் பால் சேர்த்துக் காய்ச்சி வைத்துக் கொண்டு, ஒரு மெல்லிய துணியில் நனைத்து, பிள்வை, ஆறாத புண்கள், மேகப் புண்கள் ஆகியவைகளுக்கு போட்டுவர, அவை சீக்கிரத்தில் ஆறிப் போகும்.

புங்கம் வேர், சங்கம் வேர், சிற்றாமணக்கு வேர் வகைக்கு 35 கிராம் விளக்கெண்ணெய் 1,400 மி. லி. பூண்டுச் சாறு 350 மி. லி. கடுகுரோகிணி 9 கிராம் முடக்கத்தான் 17 கிராம் இவைகளுள் முதல் மூன்று வேர்களையும் அரைத்து விளக்கெண்ணெயில் கலந்து, பின் மற்ற சரக்குகளையும், சாற்றையும் சேர்த்து கலக்கிச் சூரிய புடம் வைத்து, தக்க அளவாக உள்ளுக்குக் கொடுத்து வர, சூலை, புண், கரப்பான் முதலியன தீரும்.

## எண்ணெய்.

புங்கம் நெய், வேப்பம் நெய், ஆமணககம் நெய், புன்னை நெய் எண்ணெய் இவை வகைக்கு 700 மி. லி. சேர்த்து, அதில் வெள்ளுள்ளி, வசம்பு, பெருங்காயம், சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், கிராம்பு, சதகுப்பை, கடுகுரோகணி, சித்திரமூலம் வகைக்கு 17 கிராம் எடுத்து இவைகளைக் காடி விட்டரைத்து, மேற்கூறிய எண்ணெயுடன் கலந்து, அத்துடன் காடி 2,800 மி.லி. சேர்த்து அடுப்பேற்றி எரித்து, மெழுகு பதத்தில் இறக்கி வைத்துக் கொண்டு அதில் 1 கிராம் வீதம் கொடுத்து மேலுக்குத் தடவிப்பிடித்து வர, வளி நோய் எண்பது. மேகம், சூலை, இசிவு, சூதகவலி ஆகியவை தீரும்.

N.B.—புங்கம் நெய் ; புங்கம் விதையிலிருந்து எடுக்கப்படுவது.

---

## 422. புடல்—Pudal.

வே. பெ: புடோல், சோத்தினி.

Trichosanthes anguina

Eng.—The Serpent Cocumber.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Potla | Sans. | Chinchindaha. |
| Mal. | Pudala | | |
| Kan. | Padavala | Hind. | Chechenda. |

இது கொடி வகை. காய்கள் நீண்டு பச்சையாகத் தொங்கும். நாடுகளில் ஏராளமாகப் பயிரிட்டு வருகிறார்கள். இவ்வினத்தில் கொத்துப் புடல், நாய்ப்புடல், பன்றிப் புடல், பேய்ப் புடல் எனப் பல வகைகளுண்டு. இவைகளுள் கொத்துப்புடல், நாய்ப்புடல் இவ் விரண்டும் குத்துச்செடியாக வளரும். பன்றிப் புடல் கொடியாக விருந்தபோதிலும் , புடலின் காயைப் போலன்றி, நீளம் குறுகியதா யிருக்கும். பேய்ப்புடல் மிகவும் கசப்புடையது. ஆதலால் இதனை உண்பதில்லை.

ப-உ : காய்.

சுவை-இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி—Refrigrent.
காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

காய்.

குணம் : இதனால் ஆண்மை, ஐயம், வெறி இவைகள் பெருகும்.

போகம் விளையும் பொருந்தி வளருமையம்
ஆகமதிற் பித்த மணுக்குங்காண்—மேக
புடலங் கவியளகப் பாவாய் கேளனும்
புடலங்காய்க் குள்ள புகழ். (அ.கு.)

பன்றிப் புடலங்காய்.

இதனால் கரப்பான், சொறி சிரங்கு, ஐயம் உண்டாம். காணுக்கடி, சிலந்தி முதலியவைகளின் நஞ்சு உடலில் உள்ள போது இதனை உண்ணின் நோய் உரப்பாகும்.

கரப்பான் சொறிசிரங்கு காணுச் சிலந்தி
உரப்பாம் விடக்கடியும் உண்டாம்—உரைத்தவகை
அன்றிச் சயித்தியமும் ஆம்பன்றி தன்னையொத்த
பன்றிப் புடலுக்குப் பார். (அ.கு

---

## 423. புத்திரசிவி விதை—Puththira-(sivi)-vithai

வே. பெ: புத்திரசோகி

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு

செய்கை { குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
வறட்சியகற்றி—ஸ்நித்தகாரி—Emollient

குணம்—இவ்விதைக்கு மூலம், சுரம், வெள்ளை, வயிற்றுப்புசம் நாவறட்சி, இவை போம், ஆண்மை பெருகும்.

ஆயதோர் மூலம்அன லம்வெட்டை மேகமும்போம்
போகம் விளையும் பொருமலறுந்—தாகம்போம்
புத்திர சீவி யெனப் போற்றும் விதையதனுல்
இத்தரையுண் மாதே, இயம்பு:

வ: கு. இதைப் பொடிசெய்து சர்க்கரையுடன் கலந்து 1—2 இராம் எடை வீதம் காலை மாலைகளில் உட்கொண்டுவர, மேற்கண்ட நோய்கள் போம், ஆண்மை பெருகும்.

---

## 424. புல்லுருவி—(Pulluruvi)

வே. பெ. ஒட்டு, மரவொட்டி.

Eng.—Indian Mistletoe.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Badanika | Mal. | Ittikanni. |

இது மரங்களின்மீது பற்றிவளரும் ஒரு வகைக் கொடி. இஃது எந்த மரத்தின் மீது படருகின்றதோ அம்மரத்துப் பெயரால் வழங்கும். அதா வது அரசுமீது படர்வது அரசுப் புல்லுருவி எனப்படும். இப்புல்லுருவிகள் பல. அவைகள் ஒவ்வொன்றிற்கும் சிறப்புப் பண்புண்டு. அவற்றைத் தெரிந்து கொள்ளச் சித்தர் நூல்களைப் பார்க்கவும்.

---

## 425. புளி—Puli

வே . பெ : திந்துருணி, ஆம்பிரம், சிந்தூரம், சிந்தகம், எகின், சிந்தம்.

Tamarindus indica.

Eng.—Tamarind tree.

| | | | |
|---|---|---|---|
| Tel | Chinta-manu | Arab. | Tamar-i-hind |
| Mal. | Puli | Pers. | Ambala |
| Kan. | Hunasehannu | Hind. | Imli. |
| Sans. | Tintrani | Duk. | Amli. |

இம் மரம் இந்தியாவிற்கே உரியது. பர்மாவிலும் ஏராளமாய்ப் பயிராகிறது.

ப - உ : இலை, ஈர்க்கு, பூ, காய், ஓடு, கொட்டை, பட்டை.

இலை, பூ, காய், பழம்.

சுவை - புளிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

ஓடு, கொட்டை, பட்டை, ஈர்க்கு.

சுவை - துவர்ப்ப, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

இலைக்கொழுந்து.

குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
பித்தடக்கி—பித்தசாந்தநி—Anti-bilios.

இலை, பூ, பிஞ்சு.

வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

பழம்

எருஇளக்கி—மலகாரி—Laxative.

பழ ஓடு

அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative.
பித்தடக்கி—பித்தசாந்தநி—Anti-bilious.

கொட்டை

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

கொட்டைமேற்றோல்

சிறுதுவர்ப்பி—ஸங்கோசனகாரி—Mild Astringent.

பட்டை

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Mild Astrinent.
உரமாக்கி—பலகாரி—Tonic

இலை.

குணம் : இது, அழுகிய புண், சோகை, பாண்டு, சிவந்த கண்ணோய் இவைகளை நீக்கும்.

அழுபுண்ணை நீக்கும் அடல்சோபை மாற்றும்
எழுபாண்டு வைப்போக்கும் இப்பால்—முழுதும்
அளியச் சிவந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல். (அ.கு.)

பூ.

பூவினால் அழற்குற்றம், சுவையின்மை, வாந்தி என்னுமிவைகள் நீங்கும்.

பித்தத் துடனே பெருத்த அரோசகம்போம்
மெத்தவெழும் வாந்தி மிதத்துண் நிற்கும்—மெத்தக்
கனத்துப்பூ ரித்தமுலைக் காரிகையே ! வெற்பார்
வனத்துப் புளியம்பூ வால். (அ.கு.)

காய்.

கொட்டை முதிராத புளியம்பிஞ்சு, சோர்வையும், அழல் பெருக்கையும் நீக்கும். ஆனால் வளிக்குற்றத்தை உண்டாக்கும். இது பிள்ளைத் தாய்ச்சிகள் விரும்பத்தக்க உணவாகும்.

கோபமொடு பித்தந் தொலைக்கும் உரிசைதருங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந்—தாபக்
கருப்பமட வார்க்குக் கனவிருப்பம் உள்ளே
பருப்பையுருப் பைம்புளியங் காய். (அ.கு)

### பழம்.

இதனால், அறிவு அழியும், உடல் ஊதும், உடலில் வளிக்குற்றம் மிகும். வெண்ணீர் (சுக்கிலம்) குன்றும், நரை, திரையெழும். வாந்தி, அழல் நோய் இவைகட்கு நன்மை பயக்கும். மருந்துண்ணும்போது தவறாக இதனைக் கொள்ளின், சுரம், முப்பிணி இவைகள் தொடரும்.

புத்தியும் மந்தமாகும் பொருமியே உடலு மூதும்
பத்தியம் தவறும் சந்நி பாதமாம் சுரங்கள் வீறுஞ்
சர்த்தியும் பித்துந் தீரும் தனுவெலாம் வாத மேறும்
மத்திபந் தாது புஷ்டி வருந்திரை நரைபு ளிக்கே. (தே.கு.)

### புளி.

வேந்தனுக்கே சார்பாகி மேலிலிருவர்க் கும்பயனும்
சேந்தனுக்குக் காணியிடஞ் செய்யுமே—சாந்தமிலாப்
பாம்பாக வாகம் பருவரலெய் தப்புரியும்
ஆம்பிர நோய்க்காகா வாம்.

புளியம்பழம் அழல் நோய் (ஆமிலபித்த நோய்)க்கு ஆகாது.
(தே. வெண்பா.)

### பழம்புளி.

இது, முக்குற்றம், வளிநோய், சூலை, ஐயப்பெருக்கு, வாந்தி, விழி நோய், வெறி இவைகளை நீக்கும். சிறப்பாக புளி அழலை (பித்தத்தை)ப் பெருக்குமெனினும், பழம் புளி அழலைப் போக்கும்.

தீதில் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலைகபம் மாறுங்காண்—ஓதுசுரஞ்
சர்த்தியென்ற தோடமிவை சாந்தமாங் கண்ணோய்போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு. (அ.கு,)

### கொட்டை.

துவர்ப்புத் தோலோடுள்ள கொட்டையினால் மேக வெண்ணீர் (சுக்கிலம்) மேகம், கழிச்சல், புண்கள், நீர்க் கடுப்பு, வெள்ளை இவை நீங்கும்.

சுக்கில மேகமனற் றுன்னுமதி சாரமொடு
மிக்கிரணம் நீர்க்கடுப்பு வெட்டையறுந்—தொக்குதுவர்
உற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலும்
நற்றரையுள் மாதே நவிற்று. (அ.கு.)

### பட்டை.

இதனால், உளைமாந்தை, குன்மநோய், வளிக்கழிச்சல், சுரம், செரியாமை இவை நீங்கும். அழல் குற்றத்தைப் பெருக்கும். பசியுண்டாம்.

புளிய மரத்தின் புரணிதனைக் கண்டால்
உளைமாந்தை குன்மவலி யோடும—வளியார்ந்த
பேதிகட் டுஞ்சுரம்போம் புத்தமுறுந் தீபனமாம்
ஓத வசீரணமே துன். (அ.கு.)

வ - கு : இலை ஒருபங்கு, வேப்பிலை ஒருபங்கு, இவ்விரண்டையுஞ் சேர்த்திடித்து, 8 பங்கு நீரவிட்டுக் காய்ச்சிப் புண்களைக் கழுவிவர, ஆறாத புண்கள் ஆறிப்போகும்.

புளியிலே, ஆவாரை வேர்ப்பட்டை வகைக்கு 35 கிராம்; மிளகு கருஞ் சீரகம், வசம்புசுட்டகரி, கார்போக அரிசி வகைக்கு 35 கிராம் இவற்றை ஆடுதீண்டாப்பாளைச் சாற்ருலரைத்து, 350 கிராம் எண்ணெயில் கலக்கி, மூன்று நாள் சூரியனில் வைத்து, பின் சொறி, சிரங்கு, கரப்பான் இவை களின்மீது பூசித்தேய்த்து, மூன்று மணிக்குப் பின் அரைப்பிட்டுத் தலை முழுகிவர, மேற்படி நோய்கள் தீரும்.

இலையை நசுக்கி, நீர் விட்டுக் கொதிக்கவைத்து, கீல் வாயு வீக்கங் களின் மீது பற்றிட, வலி தணியும்.

இலைச்சாற்றில், பழுக்கக்காய்ந்த இருப்புச் சலாகையைத் தோய்த்து, அச்சாற்றில் ஒன்றிரண்டு சங்குவீதமெடுத்துச் சீதக்கழிச்சலுக்குக் கொடுக்க லாம்.

பூவை நசுக்கிச் சிறிது நீர் விட்டுக் கொதிக்கவைத்து, கண்ணைச் சுற்றிப் பூசிவர, கண்சிவப்பு மாறும்.

பூவைச் சிறிது நெய் விட்டு வதக்கித் துவையல் செய்து உண்ணலாம்.

கொட்டை முதிராத புளியின் காயைத் தின்ருல் அழல் நீங்கும். வளிக் குற்றத்தை உண்டாக்கும். பிள்ளைத்தாய்ச்சிகளுக்கு விருப்பமான உண வாகும்.

பழத்தின் புளி 35 கிராம், நிலாவாரை 4 கிராம், கொத்துமல்லிவிதை 2 கிராம், வெந்நீர் 280 கிராம் இவைகளை மணி நேரம் ஊறவைத்து வடிகட்டி, அதில் சருக்கரை 17 கிராம் சேர்த்து, 2 முதல் 140 கிராம் வரையில் கொடுக்க, துன்பமில்லாமல் கழிச்சலுண்டாம்.

புளியை ஒரு பங்கு, உப்பு ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்தரைத்து உண்ணுக்கில் தடவ, அதன் வளர்ச்சி கரைந்துபோம்.

புளியை எல்லா வீடுகளிலும் உணவுக்காகச் செய்யும் குழம்பு முதலியண வற்றிற்கு வழங்குவதுண்டு.

பழம்புளி, கரிசிலாங்கண்ணி இவ்விரண்டையும் அரைத்துப் புன்னைக் காயளவு எட்டு நாள் உள்ளுக்குக் கொடுக்க, அடிதள்ளிய நோய் நீங்கும்.

பழத்தின் மேல் ஓட்டைச் சுட்டுச் சாம்பலாக்கி, சரக்கொன்றைப்புளி முதலிய இதர சரக்குகளோடு சேர்த்தரைத்து, ஈரல் நோய்களுக்குப் பற்றிடலாம்.

புதுக் கொட்டையை ஏழை மக்கள் வேகவைத்துத் தின்பதுண்டு. சிலர் இதை வெயிலில் காயவைத்து அல்லது வறுத்து, பிறகு மாவாக்கி ரொட்டி முதலியவை செய்வார்கள். கொட்டையை மேல்தோல் நீக்கி அருந்துதலே நன்று. இதன் வெண்ணிறப் பருப்பு உடல் வளர்ச்சியைத் தருமெனத் தெரிகின்றது.

இதை மாவாக்கிக் களியாய்க் கிண்டிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம்.

இதை இடித்து வேகவைத்துக் கஞ்சியாக்கிப் பட்டுநூலுக்குப் பசையிடு வார்கள்.

கொட்டையின் மேற்ருேலை இடித்துப் பொடி செய்து, சீதக் கழிச்சலுக் குக் கொடுக்கலாம்.

கொட்டையின் மேற்றோலைக் காயவைத்து, இடித்துத் தூளாக்கி, 260 மி.கி.—390 மி.கி. சருக்கரை அல்லது, தேன் சேர்த்து, தினம் 2, 3 தரம் கொடுத்துவர, கழிச்சல், புண்கள், வெண்ணீர் (சுக்கில) மேகம், நீர்க் கடுப்பு, வெள்ளை ஆகிய இவைகள் தீரும்.

தோலைப் பொடித்துத் தூளாக்கிப் பல் துலக்கிவரின் பல்லிறுகும்.

இதன் தூள் ஒரு பங்கு, சீரகம் 3 பங்கு சேர்த்து இடித்து, அதனளவுக் குப் பனங்கற்கண்டு சேர்த்து, அரைவராகனெடை வீதம், தினம் 3 வேளை சாப்பிட்டு வர, நாட்பட்ட கழிச்சல் நீங்கும்.

பட்டையும் உப்பும் ஒரு மண் சட்டியிலிட்டு எரித்துச் சாம்பலாக்கி, அதில் ஒரு குன்றி வீதம், தினம் இருவேளை கொடுத்துவர, செரியாமை, குன்மம் நீங்கும்.

பட்டைச் சாம்பலை நீரில் கலக்கித் தெளிவிறுத்து, வாய் கொப்புளித்து ,ர தொண்டைப் புண் நீங்கும்.

புளியம்பட்டை, மிளகு புங்கு இலை, வேலிப்பருத்தி இலை, நாயுருவி இலை இவைகளின் சாம்பல் வகைக்குக் கால், ஓமம் 4 கிராம் சேர்த்து நீர் விட்டுக் காய்ச்சி, சிறு குழந்தைகளுக்குக் கொடுத்துவர, தாகம் அடங்கும்.

புளிசர்க்கு, வேப்பீர்க்கு, பொன்னுங்காணிவேர் வகைக்கு 34 கிராம்' கோழியவரைச் செடியின் வேர் 17 கிராம் இவற்றை எல்லாம் நறுக்கிச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டுச் சூரியனில் வைத்து, உண்ண, கணம் நீங்கும்.

---

## 426. புள்ளடி—Pulladi.

இதில் புள்ளடி, சிறுபுள்ளடி என இருவகையுண்டு.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Gitanaram | Hind. | Sarivan. |
| Sans. | Salaparni | | |

இஃது இமயத்தின் அடிவாரத்திலும், இந்தியாவின் வெளிகளிலும் மிகுதியாகக்கூடியது.

ப - உ : பூண்டு.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பகற்றி - ஜ்வரஹரகாரி - Febrifuge.
- செரிப்புண்டாக்கி - போசநகாரி - Digestive.
- உடற்றேறி - வ்யாதபேதகாரி - Alterative.
- உரமாக்கி - பலகாரி - Tonic.

இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, சுரம் நீங்கும்.
இது தசமூலக் குடிநீரில் சேரும் சரக்குகளில் ஒன்று.

## 426. சிறுபுள்ளடி—Chirupulladi

வே. பெ. கடமாரி.

Desmodium. triflorum.

இஃது இந்தியாவின் வெப்ப நாடுகளில் பயிராகும்.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Murpu | Pers. | Muskh-zamin. |
| Hind. | Motha | | |

ப - உ : பூண்டு.

சுவை - கார்ப்பு, கைப்பு தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- பாற்பெருக்கி - ஷீரவர்த்தநி - Galactagogue.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி - Carminative.
- சிறுநீர்ப்பெருக்கி - மூத்ரவர்த்தநி - Diuretic.
- உரமாக்கி - பலகாரி – Tonic.

குணம் : மாந்தம், கணம், கழிச்சல் இவைகளை அடக்கும், பாலைச் சுரப்பிக்கும், வலியைப் போக்கும்.

மாந்தகணம் போராமம் வன்மந்தம் நீங்கிவிடும்
ஒய்ந்தமுலைப் பாலும் ஒழுகுங்காண்—மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்ப்பூங் கோதாய்!
சிறுபுள் ளடியைநிதஞ் சேர். (அ. கு.)

இலை.

வ - கு : இலையை அரைத்துப் பசுவின் பாலில் கலக்கிக் கொடுக்க மேற் கண்டவை நீங்கும்.

வேர்.

இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, பசியைத் தூண்டி உணவைச் செரிப்பிக்கும். நீர்க்கட்டை உடைக்கும். அழல் பிணியைத் தணிக்கும். உடற்கு வன்மை ஊட்டும்.

இதைச் சிதைத்துச் சாறு பிழிந்து எளிதில் ஆறுத கட்டி. புண்களுக்குப் பூசலாம்.

---

## 427. புன்னை—Punnai.

வே. பெ. புன்னாகம், நாகம்.

Celophyllum Apetalum, C. inophyllum.

Eng : Alexandrian Laurel.

| | | | |
|---|---|---|---|
| Tel | Piunnagamu | Sans. | Punnagaha. |
| Mal. | Punna | Hindi | Sarpan. |
| Kan. | Surahonnae | Hind. | Undi. |

இது இந்தியாவின் பல இடங்களிலும், கடற்கரையடுத்த நிலங்களிலும் பயிராகும். இதில் சுரபுன்னை அல்லது சிறுபுன்னை (Callophyllum ongifolium) என்றொரு சிறு இனமுமுண்டு. இவ் விரண்டின் குணமும் ஒன்றே. இதன் எண்ணெயை ஆங்கில மொழியில் Domba Oil, என்று சொல்லுவார்கள்.

ப - உ : இலை, பூ, விதை, பட்டை, பிசின்.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

பட்டை.
துவர்ப்பி—சங்கோசனகாரி—Astringent.
விதை.
புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
புண்ணாக்கி—வ்ரணகாரி—Caustic.
பிசின்.
வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic.
நீர்மலம்போக்கி—வ்ரேசநி—Purgative.

## புன்னைப் பூ.

குணம் : இதனால், நீங்காமேகமும், முப்பிணி, கரப்பான், சொறி, சிரங்கு இவை நீங்கும். ஆனால், மயக்கமுண்டாகும். அழல் பெருகும்.

புன்னைப்பூ பித்தமென்பர் போராடு வன்மேகம்
வின்னப் படர்ச்சித்த விப்பிரமம்—பின்னுங்
கரப்பான் சொறிசிரங்குங் காணு தகற்றும்
உரப்பாம் மயக்கமுண்டாக் கும். (அ.கு.)

## கொட்டை.

இதனால், செவிப்புண், சந்நி, தநுர்வாயு, சூதகவாயு, உடம்பில் நீரேறியதால் வந்த சீதளவாயு இவை நீங்கும்.

கன்ன விரணங் கடுஞ்சந்நி பாதமுடன்
இன்னலுறு வாதை இவையகலும்—புன்னைக்கொட்
டைக்கம்மட் டோவென்னில் ஆர்சூதி காவாய்வும்
மெய்க்கம்மிட் பாழ்வாய்வும் இல். (அ.கு.)

## நெய்.

இதனால், முப்பிணி, பெருவளிநோய்கள், முன்னிசிவு, பின்னிசிவு, ஐவகைவலி, புண், புழுக்கள் ஆகிய இவைகள் நீங்கும்.

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசந்நி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாய்வுமுன்—பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையும்
அல்லார் குழலே ! அறி. (அ.கு)

## இலை, பூ.

வ - கு : இலை, அல்லது பூவைத் தண்ணீரில் ஊறப்போட்டு, அந்நீரைக் கொண்டு கணகளைக் கழுவிவர, கண்வீக்கம், சொறி, சிரங்கு முதலியன தீரும். பூவை உலர்த்திப் பொடித்து, தேனுடன் கூட்டி முப்பிணிக்குக் கொடுக்கலாம்.

## விதை.

விதையை நீர்விட்டு அரைத்துச் சூடாக்கி, கீல்வாயுகளுக்குப் பற்றிட நோய் நீங்கும்.

விதையினின்று எடுக்கப்படுகிற எண்ணெய்க்கு நீர்தாரைப் புண்களைப் பாக்கும் குணம் இருப்பதால், இதை வெள்ளை வெட்டை முதலிய நோய்களுக்குக் கொடுத்துவரலாம். அளவு 15-20 துளி.

இதை மேலுக்குத் தடவிப் பிடித்துவர, பின்னிசிவு முன்னிசிவு முதலிய பெருவளி நோய்கள் நீங்கும்.

இசிவு முதலிய பெருவளி நோய்களுக்குப் பயன்படும் கூட்டு எண்ணெயில் இஃதுமொன்றாகும்.

மேலுக்கு இந்த எண்ணெயைச் சிரங்குகளுக்கும் செவிப்புண்களுக்கும் வழங்கலாம்.

### பட்டை.

இதைக் குடிநீரிட்டு உள்ளுறுப்புகளிலிருந்து வரும் குருதிப் பெருக்குகளுக்குக் கொடுக்க, நன்மை பயக்கும். அன்றியும், எளிதில் ஆறாமல் குருதி பெருகிக்கொண்டிருக்கும் புண்களை, இக்குடிநீர் விட்டுக்கழுவி வர ஆறும். இதைப் பிழிந்து சாறெடுத்துக் கொடுக்க, கழிச்சலையுண்டாக்கும்

### பிசின்.

மரத்தினின்று வடியும் பிசினைத் தண்ணீரில் போட்டுவைக்க, அதினின்றும் எண்ணெய் மிதந்து நிற்கும். இவ் வெண்ணெயைக் கண்ணிலிடக் கண்ணோய் நீங்கும். இதைப் புண்களுக்குப் போடும் மருந்துகளுடன் சேர்ப்பதுண்டு. இப்பிசினை உள்ளுக்குக் கொடுக்க, கழிச்சலும் வாந்தியும் உண்டாகும்.

---

## 428. பூவரசு—Puvarasu.

**வே. பெ. புவிராசன், பூளம்.**

**Thespesia populnea,**

**Fam : Malvace re.**

**Eng : The Portia tree (Heart wo od.)**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Gangaraya** | **Sans.** | **Gardha-bhanda-suparesh-vak.** |
| **Mal.** | **Puvarasa** | | |
| **Kan.** | **Kandarola.** | **Hind.** | **Dumbla.** |

இம்மரம், இந்தியாவிலெங்கும் பயிராகிறதெனினும், தென்னிந்தியாவில் மிகுதியாக உண்டு.

**ப-உ:** இலை, பூ, காய், விதை, பட்டை வேர்.

**சுவை :** கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு- கார்ப்பு.

**இலை, பூ, காய், விதை, பட்டை.**

**செய்கை :**
புழுக்கொல்லி—க்ருமிநாசநி—**Anthelmintic.**
தூய்மையாக்கி—மலினநிவர்த்தி—**De purative.**

**வேர்.**
உரமாக்கி—பலகாரி—**Tonic.**

**குணம் :** நூற்றாண்டு சென்ற பூவரசம் வேர் நாட்பட்ட பெருநோயை நீக்கும். பழுப்பிலை பூ, விதை, காய், பட்டை முதலியவை, புழுத்த புண், காணாக்கடி, குத்தல், விடபாகம், பெருவயிறு, வீக்கம், கரப்பான், சிரங்கு, வெள்ளை இவைகளைப் போக்கும்.

நூற்ருண்டு சென்றதொரு நூண்பூ வரசமவோ
தூருணட குட்டைத் தொலேக்குங்காண்—வீறிப்
பழுத்தஇலே விதைபூப்பட்டையிவை கண்டாற்
புழுத்தபுண்வி ரேசனமும் போம். (அ.கு.)

குட்டங் கடிசூலே கொல்லும் விடபாகத்
துட்ட மகோதரமுஞ் சோபையொடு—கிட்டியெயில்
தாவுகரப் பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங் காய்ப்பட்டைப் பூ. (அ. கு.)

வ-கு : இதன் இலேயை அரைத்து வெதுப்பி, வீக்கங்களின் மீது வைத்துக் கட்டலாம்.

பூவை அரைத்துச் சிரங்குகளின்மீது பூசிவர, அவை போம்.

காயிலிருந்து உண்டாகும் ஒரு வித் மஞ்சள் நிறமுள்ள பாலேத் தோலிலுணடாகும் நோய்களுக்குத் தடவலாம். எச்சிற்றழும்புக்குப் பூச, அஃது ஆறிப்போம். மூட்டு வீக்கங்களுக்குப் பூச, வீக்கம் கரையும்.

காயையும் பட்டையையும் எண்ணெய் முறைகளிற் சேர்த்துக்காய்ச்சி, மேற்கூறிய நோய்களுக்கு வழங்குவதும் வழக்கம்.

சிறு துண்டுகளா:ு வெட்டிய பட்டை 210 கிராம், தண்ணீர் 1400 மி.லி. விட்டுக் காய்ச்சி, மூன்றில் ஒன்ருய் வற்றிய பின் வடிகட்டியேனும், அல்லது 340 கிராம் காய்களேச் சிறு துண்டுகளாய் நறுக்கி 1400 ம. லி. நீர் விட்டுக் காய்ச்சி, மூன்றில் ஒன்ருய் வற்றவைத்து வடி கட்டியேனும் 68—136 கிராம் வீதம், 3—4 முறை கொடுத்துவரக் கழியச் செய்யும். காணுக்கடி நஞ்சு, பெருவயிறு, வீக்கமும் முதலியன நீங்கும்.

பூவரசம் பட்டை எண்ணெயினல், வெள்ளேநோயும் தோலேப்பற்றிய நோயும் போம்.

காயின் எண்ணெயினுல, குன்மநோய், பெருவயிறு முதலியன தீரும். முதிர்ந்தப் பட்டையின் சதையைச் சிதைத்துப் பிழிந்த சாற்றை வாயிலிட்டுக் கொப்பளித்துக்கொண்டே விழுங்கிவிடின் கழிச்சலே யுண்டாக்கும். இவ்வாறே பல நாட்கள் கொள்ளின் உதட்டில் வரும் வெண்புள்ளி (வெண் குட்டம்) போம்.

---

## 429. பூனேக்காலி—Punaikkali

வே: பெ: கண்டுதி, மற்கடி

Mucuna pruriens,

Eng : Plant.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pilliadagu | Sans. | Atmagupta. |
| Mal. | Choraivalli | | |
| Kan. | Nasugenne | Hind. | Kavach. |

இது, வெப்ப நாடுகளில் பயிராகும் ஒரு வகைக் கொடி, சில விடங்களில் இதன் விதையின் பொருட்டு இதைப் பயிரிட்டு வளர்க்கிருர்கள். காயின் உட்பாகத்தைச் சமைத்துத் தின்பதுமுண்டு. இதில் கருமை, வெண்மை என இரு வகையுண்டு.

ப. உ: விதை, வேர், சுனே.

சுவை—துவர்ப்பு தன்மை—தட்பம் பிரிவு—இனிப்பு.

விதை

செய்கை
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- நரம்புரமாக்கி—Nervine Tonic.
- காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

வேர்
- சிறு நீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- நரம்புரமாக்கி—Nervine Tonic.

சுணை.
- புழுக்கொல்லி—கிருமிநாசநி—Vermifuge.
- தடிப்புண்டாக்கி—Irritent

### கருமை—விதை

**குணம் :** இதனால் கற்றாழை நாற்றம், குருதிக்கழிச்சல், கரப்பான நீங்கும், ஆண்மை உண்டாகும்.

தழுதளைநாற் றத்தோடு சாரிரத்தப் போக்கும்
பழுதுபுரி கின்றகரப் பானும்—அழுதேகுந்
தாலமிசை விந்துவுமாஞ் சாற்றற் கரும்பூனைக்
காலி விதையைக் கழறு (அ.கு)

சுணை.

**வ-கு :** காயினமீது மூடியிருக்கும் சுணையை பனைவெல்லத்திலாகிலும் தேனிலாகிலும் கலந்து கொடுக்க, வயிற்றுப்புழு வெளிப்படும் காயை விதை நீக்கி நன்றாய் உலர்த்தி, இடித்துக் குடிநீரிட்டு வடி கட்டி அதில் சிறிது காட்டத்திப் பூச்சேர்த்து நாற்பது நாள புதைத்து வைத்துப் பின்பு எடுத்துத் தக்க அளவில் கொடுத்துவர, சோபைநோய நீங்கும். கைகால் வீக்கமும் போம்.

விதை.

விதையை நன்றாய் உலர்த்திப் பொடித்து அதில் 520—1040 மி. கி வரையிலும் பாலில் கொடுத்துவர, வெள்ளை, வெட்டை நீங்கும். ஆண்மை உண்டாகும்.

மேற்படி விதைத்தூளுடன் சிறு நெருஞ்சில் விதைத்தூள் ஒரெடை சேர்த்து, 4 கிராம் வீதம் பாலில் கலந்து கொடுக்க, ஆண்மை உண்டாகும்.

ஒரு லிட்டர் ஆவின் பாலில் 320 கிராம் விதையைப் போட்டு, பால் வற்றும் வரையில் காய்ச்சி, விதையை எடுத்து உலர்த்திப் பொடித்து, பின் நெய் விட்டு இளவருப்பாய் வறுத்து, சீனிப்பாகு இரு பங்கு சேர்த்து, இலே கிய பதமாய்க் கிளறி எடுத்து, சுண்டை அளவு உருட்டித் தேனில் ஊற வைத்துக்கொள்ளவும். இதில், ஓர் உருண்டை தினம் இரு வேளை கொடுத்துவர, வெள்ளை, வெட்டை, பெரு பாடு, பாரிசவாதம் நீங்கும். உடலை வளர்க்கும்.

இவ்விதை, சிறுநெருஞ்சில்விதை, தண்ணீர்விட்டான் கிழங்கு, முன் ளிலவு, நெல்லி இவைகளின் வேர்ப் பொடி, சீந்தில்சருக்கரை ஓர்அளவு சேர்த்து, அதற்குச் சரி எடை கற்கண்டு கலந்து 6 கிராம் எடுத்து இரண்டு தோலா நெய்யிற் கலந்து, தினம் இருவேளை சாப்பிட்டுப் பால் குடித்து வர, ஆண்மை பெருகும்.

விதை நீக்கிய ஓட்டைச் சுணையுடன், சருக்கரைப்பாகு அல்லது தேனில் நன்றாய் ஊறவைத்து, பின் சுணையை மெதுவாய்ச் சுரண்டி, அத் தேனுடன் அல்லது பாகுடன் நன்றாய்க் குழகுழப்பு வரும் வரை

கலந்து கொண்டே வரவும். வந்தபின, இதில் பெரியவர்க்கு 17 கிராம் சிறியவர்க்கு ஓர் உச்சிக்கரண்டியும், தினந்தினம் காலையில் மூன்று அல்லது நான்கு நாள் கொடுத்துப் பின் கழிச்சல் மருந்து கொடுக்க, வயிற்றுப் புழு விழும்.

மேற்படி விதை 12 கிராம், நெருஞ்சி விதை 20 கிராம் கசகசா 16 கிராம், நீர் முள்ளி 12 கிராம், இலவின் வேர்ப்பட்டை 12 கிராம், சிறுநாகப்பூ 8 கிராம். நிலப்பனங்கிழங்கு, தண்ணீர் விட்டான்கிழங்கு வகைக்கு 8 கிராம், சருக்கரை 8 கிராம் இவைகளைப் பொடிசெய்து வைத்துக்கொண்டு 400 கிராம் வீதம் தினம் இரு வேளை பாலிற் கலந்து குடித்துவர, ஆண்மை பெருகும்.

விதை, வெண்சித்திரமூலவேர் பட்டை, சுக்கு, திப்பிலி, திப்பிலி மூலம், பூனைக்கண்குங்கிலியம், கருவாப்பட்டை, கிராம்பு இவைகளை ஓர் எடையாய் எடுத்துத் தூள் செய்து நீர் விட்டரைத்து மிளகளவு மாத்திரை செய்து, ஒரு மாத்திரை வீதம் தினமொன்றுக்கு இரு வேளை கொடுத்துவர வயிற்றுவலி, குன்மம், வயிற்றுப்புழு முதலியன நீங்கும்.

மேற்படி விதை, சாதிப்பத்திரி, சூடன், சமுத்திராப்பச்சை, வசம்பு, சருக்கரை இவற்றைத் தனித்தனி தூள் செய்து ஒரு எடையாகக் கலந்து அதில் 26. கிராம் வீதம் தினமிருவேளை, பாலிற் கலந்து குடித்துவர வன்மைக் குறைவு நீங்கி உடல் தேறும்.

இதன் வேரைக் குடிநீரிட்டுத் தேன் கலந்துகொடுக்க, ஊழிநோய் சுரநோயிற்காணும் முப்பிணி நீங்கும்.

இதன் வேரை அரைத்து வீக்கங்களின் மீது பற்றிடலாம்.

ஆனைக்கால் வீக்கத்துக்கும் இதை இதர மருந்துகளுடன் சேர்த்துப் பற்றிடலாம்.

## 430. பெருங்காயம்—Perungayam.

**வே-பெ:** அத்தியாகிரகம், இங்கு, இரணம், இராமடம், கந்தி, காயம், சந்துநாசம், பூதநாசம், வல்லீகம்.

Ferula Asafoetida.

Eng. Asafoetida

| | | | |
|---|---|---|---|
| Tel. | Inguva | Arab. | Hiltit. |
| Mal. | Perungayam | Pers. | Angusthagandh. |
| Kan | Ingu. | Hin. | Hing. |
| Sans. | Hingu | Duk. | Hing. |

இது, பாரஸீகம், துர்க்கிஸ்தானம், ஆப்கானிஸ்தானம், காஸ்மீரம், பஞ்சாப் முதலிய இடங்களில் தன்னிச்சையாயும், அளவிறந்தும் பயிராகும் ஒருவகைச் சிறு செடியின் பால் அல்லது பிசின். இஃது இந்தியாவில் எல்லாவிடங்களிலும் கடைகளிலும் விற்கப்படுகின்றது. அநேக நூற்றுண்டுகளாய் இந்தியர் தாங்கள் உண்ணும் உணவிற்குரிய பொருள்களிலும் நோய் தீர்க்கும் மருந்துகளிலும் இதைப்பயன்படுத்தி வருகின்றனர்.

இது மஞ்சள் நிறம்; மிகுந்த நாற்றம் உள்ளது. சற்றேறக்குறைய வெள்ளைப்பூண்டினது நாற்றம் வீசும்; காகரப்புடன் மிகவும் கசப்புடையது; சாராயத்தில் கரையும். நீர் விட்டரைத்தால் பால் நிறமாயிருக்கும்; சாராயங்களுடன் கூடின் பொடிபடும்.

இதில் ஒருவகை வெண்ணிறம் பொருந்தியதுமுண்டு. அதற்கு வெள்ளைப் பெருங்காயம் (சோமகாயம்) என்பது பெயர். இதற்கு மேற்கூறிய காயத்திலும் மிகக் காரமுடையது.

ப. உ. பிசின்.

**சுவை : கைப்பு, கரகரப்பு, தன்மை- வெப்பம், பிரிவு—கார்ப்பு.**

செய்கை:
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-Carminative
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-Antispasmodic
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- மலமிளக்கி-லகுவ்பேசநி-Laxative.
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Anthelmintic.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- காமம்பொருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac
- ருதுஉண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue

குறிப்பு: இது முக்கியமாய்க் குருதியைச் சூடாக்கி, நரம்புகளை வெப்பப்படுத்தும். தமரகத்துடிப்பை உண்டாக்கிப் பெண் இச்சைக் கிளர்ச்சியை உண்டாக்கும். இதைத் தொடர்ச்சியாய் சாப்பிட்டுவரின் தொண்டைப்புண், வயிற்றுப்பல், கழிச்சல், நீர் எரிச்சல், புளியேப்பம் இவைகளை உண்டு பண்ணும்.

குணம்: இதனால், பல், பல்லடி நோய்கள், பாம்பு நஞ்சுகள், தேள் நஞ்சு, மந்தம், ஏப்பம், வாதம், சூதகவாயு, குன்மம், பெருவயிறு, சூதகச்சூலை, குருதியிலுள்ள நுண்புழு, ஐயத்தால் பிறந்த வலிகள் உடல் கடுப்பு, என்னும் இவைகள் போம்.

தந்தவேதந்த மூலத்தெழும்பிணி
சருவகாளம் விருச்சிகங்கீடம்மா
மந்தம்வாதம் உதாவர்த்தம் அல்குல்நோய்
மார்பணங்கட்ட குன்மம்மகோதரம்
உந்துகொர்ப்பத்தின் வித்திரஞ்சூலைச்சூர்
உதிரப்பூச்சி சிலேத்துமத்துறும்வலி
வந்தமெய்க்கடுப் போடிவைமுற்றுமே
மாயுநாறுநற காயங்கிடைக்கினே. (தே.-கு.)

**அளவு 16 மி.கி.—650 மி.கி.**

இதைப் பொரித்து வழங்குதலே நலம். பச்சையாய் வழங்கில், வாந்தி உண்டாகும். தலைசுற்றும். தீக்குற்றத்தைப் பெருகச் செய்யும்.

**வ-கு: பெருங்காயக் கலவை மெழுகு:** காயம், 2, கால்பேனம் (Gabanum) என்று வழங்கும் கந்தபிரோஜா 2, வெள்ளைப்போளம் 2 வெல்லப்பாகு (Treaclee) 1, இவற்றை ஒன்று கூட்டிக் கொதிக்கின்ற நீரில் வைத்து உருக்கி, யாவும் ஒன்று சேருகிற வரையில் துழாவிக் கொடுத்து எடுத்து, தக்க அளவில் இதைச் சூதக வலியுடைய பெண்களுக்கும் செரியாமைக்குங் கொடுக்கவும்.

அளவு 160 மி.கி.—325 மி.கி.

இதை நீர் விட்டு உரைத்து மார்பின் மீது பற்றிட, குழந்தைகட்குண்டாகும் கக்குவான் குணப்படும்.

குழந்தைகள் வயிற்றிலுண்டாகும் பூச்சிகளை வெளிப்படுத்த இதை நீரிலிட்டு அரைத்துக் கலக்கி, பீச்சாகச் செலுத்தலாம்.

அபினும் காயமும் சேர்த்துச் சொத்தைப் பல்லில் வைக்க, வலி நீங்கும்.

பிள்ளை பெற்ற பின்அழுக்கை வெளிப்படுத்த, காயத்தை பொரித்து வெள்ளைப் பூண்டு, பனை வெல்லத்துடன் சேர்த்துக் காலைதோறும் கொடுக்கலாம்.

காயம், கர்ப்பூரம், மிளகு, அபின் சேர்ந்த மருந்து தொடக்க ஊழியில் நன்மை தரும்.

ஒற்றைத்தலைவலி, பல்வலிகளில் இதை வழங்குவதுண்டு.

பெருங்காய லேகியம் : காய மருந்து, குன்மக்குடோரி முதலிய முறைகளைப்பார்க்கவும்.

### பெருங்காயச் சூரணம்.

காயமொன்று லவணமிரட்டி கடியதிப்பிலி அதனிலிரட்டி
தீயதாகு முள்ளிச்சாறு சேரவேமி ரட்டிகூட்டி
ஆயன்சொல் தப்பாதிந்த ஒளஷதங் கொள்வீராயின்
சாயுமே குன்மஞ்சூலை தநுர்வாயுந் தீருமன்றே. (தேரையர்).

காயம் ஒன்று, உப்பு இரண்டு, திப்பிலி நான்கு, செம்முள்ளிக்கீரைச் சாறு எட்டுப் பங்கு இவற்றைக் கூட்டி அரைத்து தக்க அளவில் கொள்ளின், குன்மசூலை, பின்னுக்கும் முன்னுக்கும் விளைகின்ற வலியாகிற தனுர்வாயு தீரும்.

### (வேறு)

சுக்கு, திப்பிலி, மிளகு, ஓமம், சீரகம், கறிவேப்பிலை, இந்துப்பு இவைகளை ஓர் எடை எடுத்து, கால் பங்கு பெருங்காயம் சேர்த்துப் பொடித்து, 325—650 மி. கி. எடை சோறுண்ணும் பொழுது முதற்பிடி யன்னத்துடன் சேர்த்துண்டுவர, மந்தத்தை விலக்கி, பசியையும் சீரணத்தையும் உண்டாக்குவதுடன் வயிற்றுப்புசம் முதலியவற்றையும் போக்கும்.

கோழிமுட்டை மஞ்சட்கருவுடன் காயத்தைக் கூட்டிக் கொடுக்க, வறட்டிருமல், பக்கவலி நீங்கும்.

வாலேந்திரபோளம், மிளகு இவைகளுடன் சேர்த்துக்கொடுக்க, சூதகக் கட்டு ஆறும்.

எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதுக்கிட, காதுவலி நீங்கும்.

கால் ஆழாக்கு நீரில் 2 கிராம் எடை காயத்தைக் கரைத்து, ஒரு சங்களவு எடுத்துச் சிறிது ஓமத்தீநீர் சேர்த்துக் கொடுக்க, குழந்தைகளுக் குண்டாகும் மாந்தம், வயிற்றுப் பொருமல் போம்.

காயத்துடன் உழுந்து சேர்த்துப் பொடித்து, தீயிலிட்டுப் புகைத்த புகையை உட்செலுத்த, இரைப்பு, உப்புசம் தணியும்.

காயத்தை நீர் விட்டரைத்து, தேள் கடி, புடைகள் முதலியவற்றிற்கு பூசலாம்,

---

## 431. பொடுதலை—Poduthalai.

வே பெ : பூற்சாதம், பொடுதிலை.

**Lippia nodiflora.**

| | | |
|---|---|---|
| Tel. | Bokkana | Sans. Vashira |
| Ma. | Kattutippli | |
| Kan. | Nelahippali | Hind. Bakkan |

இது முக்கியமாய்த் தென்னிந்தியாவில் ஆறு, குளம், குட்டை இவைகளின் கரைகளில் தானகப் பயிராகும் ஓர் பூண்டு. இதன் காய் திப்பிலியை ஒத்திருக்கும்.

ப- உ: இலை, காய்.

சுவை-கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent
- வீக்கங்கரைச்சி-ஸோபாநசநி-Deobstruent.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- உரமாக்கி-பலகாரி-Tonic.

குணம் : இதனால் சீதக்கழிச்சல், பெருங்கழிச்சல், இருமல், சூலை நோய், வெள்ளை, வளி நோய் இவை போம். உடல் வன்மைப்படும்.

பொடுதலையின் பேருரைத்தால் போராமப் போச்கும்
அடுதலைசெய் காசம் அடங்கும்—கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்யுரக்கும் வாழ்த்து.

வ-கு : இதை வதக்கி நீர்விட்டுக் கொதிக்கவைத்து இறுத்துக்கொடுக்க சீதக்கழிச்சல், மாந்தம், இருமல், சூலை, வெள்ளை, வளிநோய்கள் ஆகியன தீரும்.

இதை வதக்கி வறுத்த ஓமத்துடன் சேர்த்தரைத்து, நீர் விட்டுக் கொதிக்கவைத்து வடிகட்டி, ஒரு சங்களவு புகட்ட, குழந்தைகளின் கழிச்சல் நிற்கும்.

இதன் இலையுடன் சீரகம் சேர்த்தரைத்துக் கொடுத்துவர, வெள்ளை (வெட்டை) நீங்கும்.

இதன் இலையைத் துவையல் செய்து உண்டுவர, உள்மூலம் தணியும்.

இலையை அரைத்துக் கட்டி, கொப்புளமீது பற்றிட, அவைகள் பழுத்து உடையும். மேலும், புண், அக்கிப்புண், நெறிக்கட்டி, வீக்கம் இவைகள் மீதும் பூசலாம்.

பழைய அரிசியுடன் இதன் காயையும் சேர்த்து உலையிலிட்டு, முதற் கொதி வந்தவுடன் வெந்த அரிசியை உலர்த்தி நொய்யாக்கி, இதைப் பொங்கி மாந்தமுள்ள குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

இதன் இலை, காய் முதலியவற்றின் சாறு எடுத்து அதனுடன் மிளகு எண்ணெய் கூட்டி வெயிலில் வைத்துச் சாறுசுண்டி எண்ணெய் மாத்திரம் தங்கிய பின், இதைத் தலையில் தேய்த்துத் தலை மூழ்கிவர தலையிற் காணும் பொடு நீங்கும். இதனாலேயே இதற்குப் பொடுதலை என்கிற பெயருமுண்டாயிற்று.

---

## 432. பொன்முசுட்டை—Ponmusuttai.

வே - பெ :—கருஞ்சாரணை, பாடை, மலைதாங்கி, வாரிகம், வெற்பேந்தி

Sida acuta.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Visha-boddi | Sans. | Pranijivika |
| Mal. | Cheruparuva | | |
| Kan. | Visha-khaddi | Hind. | Bariaca-karela |

இக்கொடி, இந்தியா, இலங்கை முதலிய வெப்பநாடுகளிலுள்ள மலைகளில் வளருகின்றது. இதன் வேருக்கு "வட்டத்திருப்பி" என்பது பெயர். இது கோயமுத்தூருக்கடுத்த மருதமலையிலும் ஏராளமாகப்பயிராகிறது.

ப-உ இலை, வேர்.

**சுவை—கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.**

செய்கை:

பொது
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Alterative.
- உடலுரமாக்கி-போஷணகாரி-Nutrient.

வேர்.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்நிவர்த்தநி-Stomachic.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.

குணம் : மலைதாங்கியால் 80 வித வளிநோயும், சுரம், காதுவலி, தலைநோய் முதலியவைகளும் நீங்கும். மேலும் வளி, தீ, ஐயநோய்களும் தினவும் போம்.

வாதமெண்ப தஞ்சுரமும் வாத சயித்தியமுங்
காதுவலி பாரங் கரந்திடுங்காண்—போதச்
சிலைதாங்கி நின்ற நுதற் செந்திருவே! நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.
வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றும் தினவடக்கும்—மாதேகேள்!
உண்டிக்கும் வாசனையாம் ஓங்கி வளரனலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண். (அ. கு.)

**வெற் பேந்தி.**

**A variety of the (Drug) Sida.**

எய்த்துநார் போகாம லிந்தியத்தைப் பந்தித்து
மெய்த்தனுவை வெற்பாக்கி விக்குமே—பொய்த்தவருக்
கெற்பாந் திரமாக ஈடழிக்கு நம்பினர்க்கு
வெற்பேந்தி மெய்க்குறுதி மெய்.

வெற்பேந்தி என்னும் பொன் முசுட்டையால், உடல் வன்மையடையும், ஆண்மையும் தந்து உடலைக்கல்லைப்போல் அழியாதபடி நிலைக்கச்செய்யும் விந்து கட்டுப்படும். (தேரன் வெண்பா.)

### வட்டத்திருப்பி.

வேரால், ஐயநோய்கள், வளி, நஞ்சு, தீ, எலும்புருக்கி, கொடிய சுரம், கழிச்சல், சிரங்கு இவை தீரும். ஊனை வளர்க்கும்.

ஐயநஞ் சூதைபித்தத் திக்கரைவு மாபிரமி
வெய்யசுரம் பேதி விரணமெல்லாம்—வையம்விடுத்
தெட்டத் திருப்பிவிடும் என்பைஊ னுக்குமன்றி
வட்டத் திருப்பிவிடுமா. (தே-கு.)

வ-கு : இலையை எண்ணெய் விட்டு வதக்கிக் கட்டிகள் மீது வைத்து கட்ட, அவை எளிதில் பழுத்து உடையும்.

வேரை, வெந்நீர் ஊறலிட்டுக் கொடுக்க, அது வியர்வையை உண்டாக்கும். நோயால் மெலிந்த உடலைத் தேற்றும். செரியாமையைப் போக்கும். வளி நோயைக் கண்டிக்கும்.

வயிற்றுப்புழுவை வெளிப்படுத்த, பச்சை வேரைப் பிழிந்த இரசத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இதன் வேரை குடி நீரிட்டு, கீல்வாயு நோயிலும், வெள்ளை நோயிலும் வழங்கலாம். இது நீரைப் பெருக்கி, உள்ளழலையை ஆற்றும்.

---

## 433. பொன்னாங்காணி—Ponnangkani

வே- பே: கொடுப்பை, சீதை.

Alternanthera Sessilis.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Ponnagantikura | Sans. | Meenakshi / Mathsyakshi |
| Mal. | Mmankanni | Duk. | Ponnangkani |
| Kan. | Vanagone-soppu | | |

இஃது, இந்தியாவில் எங்கும் பயிராகும் ஒரு வகைப்படர்பூண்டு ; எங்கும் கிடைக்கக்கூடியது ; காயகற்பப் பூண்டு. "இக்கீரையில் தங்கச்சத்து உண்டென்றும், இதை முறைப்படி உண்டு வருபவர்களது உடல், தங்கம் போன்ற மேனியைத் தரும் என்றும் பெரியோர் கூறியுள்ளனர். இஃது இதன் பெயரினின்றும் அறிந்து கொள்ள இடமுண்டு. எவ்வாறெனில் 'பொன்னாங்காணி' என்பது, பொன் + ஆம் + காண் + நீ இதை உண்டால் உன் உடல் பொன்னாகக் காண்பாய் எனப் பொருட்படுவதால் என்க".

சுவை : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Alterative.
குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Cooling.

**பொன்னாங்காணி கற்பம்.**

பொன்னாங்கணிக் கீரை போற்றியுண்க் கற்பமுறை
பொன்னாங் கணிக்கீரை போதுமோ—பொன்ன
மிருபதி லக்கமதி யேற்பத் தியத்தை
மிருபதி லக்கமதியே.

(பொ-ள்) செழிப்பாய் வளர்ந்த பொன்னாங்காணிக் கீரையை, செம்மையாக நெய்யில் வதக்கி, மிளகு, உப்பு கூட்டிப் புளியை நீக்கி, கற்ப முறைபின்படி ஒரு மண்டலம் உட்கொள்ளின், உடலுக்கு, அழகு, பொன்னிறம், நீண்ட ஆயுள், கண் குளிர்ச்சி இவற்றைத் தரும்.

**பொன்னாங்காணி.**

சீதையை நாடொறுஞ் சீரண வுண்டிடக்
காதை சேர் நோயலாங் காதமோ டிடுமே.

(பொ-ள்) பொன்னாங்காணியைத் தினந்தோறும் கற்ப முறையாய்ப் புசித்துவரின், எல்லா நோய்களும் நீங்கும். (தே. கா.)

குணம்: கண்காசம், கண் புகைச்சல், கருவிழிநோய், வாயு, அனல், ஈரல் நோய், கீழ் வாயிலுண்டாகும் நோய்கள் இவைகள் போம். உடல் பொன்னிறமாம்.

காசம புகைச்சல கருவிழிநோய் வாதமனல்
கூசும் பிலீகம் குதாங்குரநோய்—பசிவையால்
என்னாங்கா ணிப்படிவம் எமமம் செப்பலென்னைப்
பொன்னாங்கா ணிக்கொடியைப் போற்று. (தே. கு.)

வ-கு: தினம் இதைத் துவட்டிச் சாப்பிட, உடல் ஒளி பெறும்.

உப்பில்லாமல் வேகவைத்து, வெண்ணெயிட்டு நாற்பது நாளுண்ண, கண்ணில் உண்டாம் நோய் தீரும்.

இதை அரைத்து அடையாகச் செய்து, ஒரு நீர் நிறைந்த பானைமீது அப்பி, மறுநாள் காலையில் இதை எடுத்துக் கண்களின் மீது வைத்துக் கட்ட, கண் நோய்கள் தீரும்.

நெய் விட்டு வதக்கி கண்களுக்குக் கட்ட, கண்நோய்கள் தீரும். அன்றியும், இதன் தைலத்தைத் தலை மூழ்கிவர, கண்நோய்கள் தீரும்.

இதன் சாற்றைச் சில மருந்துகளுக்குத் துணையாகவும்: செம்புச் செந்தூரம் செய்யவும் வழங்குவதுண்டு.

இதன் சாறு 1,400 மி.லி. ஒன்று, பொற்றலைக்கையான் சாறு 1,400 மி.லி. பழச்சாறு 700 மி.லி. அரை, பசுவின் நெய் 1,400 மி.லி. ஒன்று, பசுவின் பால் 1,400 மி.லி இவற்றை ஒன்றாய்க் கலந்து, இதில் 68 கிராம் அதிமதுரத்தைப் பால் விட்டு அரைத்துக் கலந்து, காய்ச்சி மெழுகு பதத்தில் வடிகட்டி, அதனுடன் சாதிக்காய் 5 கிராம், சாதிபத்திரி 5 கிராம், சீனைகற்கண்டு 5 கிராம், கோரோசனை 5 கிராம், சேர்த்துக் கலந்து, அதில் 4–8 கிராம் வீதம் தினம் இருவேளை கொடுத்துவர, மூலச்சூடு, வெப்பநோய், கைகால் எரிவு, வாய் நாற்றம், வெள்ளை, வயிற்று எரிச்சல் இவை தீரும். கண் குளிர்ச்சியும் பசியும் உண்டாகும்.

இதன் சாறு 2,800 மி.லி., கரிசலைச்சாறு 1,400 மி.லி., நெல்லிக் காய்ச்சாறு 1,400 மி.லி. எண்ணெய் 2,800 மி.லி. பசுவின்பால் 2,800 மி.லி. இதில் அதிமதுரம், 68 கிராம் எடுத்து பால் விட்டரைத்துக் கலந்து காய்ச்சி மெழுகுபதத்தில் வடிகட்டித் தலை மூழ்கிவர, 96 வகைக் கண் நோய்களும், அழல் நோய்களும் தீரும்.

## 434. மகிழ்—Magizh.

வே-பெ: இலஞ்சி, கேசரம், வகுளம்.

**Mimusops elengi.**

Tol. Pogada | Sans. Vakula
Mal. Mukuzha
Kan. Ranje | Hind. Mulsari

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகும் மரவகுப்பிலொன்று. இதன் பூவிற்கு நல்ல மணமிருப்பதால், இதை இந்தியப் பெண்கள் கொண்டையில் அணிவார்கள்.

ப - உ : பூ, பட்டை, வித்து.

சுவை—துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - காரபபு.

செய்கை { துவர்ப்பி-ஸங்கோசநகாரி-Astringent. உரமாக்கி-பலகாரி-Tonic.

### பூ.

குணம் : பூ உடல் வெப்பத்தையும், புணர்ச்சியிலிச்சையையும் உண்டாக்கும். இதை முகரச் சுவையின்மை நீங்கும்.

வெகுவனல் மாகும் விரகமிக வுண்டாம்
முகர அரோசி முறியும்—மிகவும்
மகிழச் சுரத வகைகாட்டு மாதே !
மகிழத் துரும மலர்க்கு.

(அ.கு.)

நேரிட் டவர்க்கிளைப்பை நீக்கிப் பிணியிபத்தை
வீரிட் டலற விரட்டுமே—சீரிட்ட
வாச மலரின் மணத்தாற் குணத்தோடே
கேசரமென் றேது மகிழ். (தேரன் வெண்பா.)

மகிழம்பூ மணம் இளைப்பை நீக்கி, அழல் குற்றத்தைத் தணிக்கும்.

வ - கு : பூவைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடல் அனல் தணியும்; வன்மை பெறும்.

பூவின் இரசத்தைக் கொண்டு, வெள்ளியை அரைத்துப புடமிட, வெள்ளி பறபமாகும்.

பூத் தீநீரைக் குடிநீருக்குப் பதிலாக வழங்கலாம். மணம் ஊட்டவும் பயன்படும்.

பூவை உலர்த்திப் பொடி செய்து முகர, மூக்கில் நீர் பாய்நது தலை வலியைப் போக்கும்.

### பட்டை.

பண்பு : பட்டை துவர்ப்புள்ளதால், இதை உடல் வெப்பகற்றவும், உடலுரமாக்கவும் வழங்கலாம்.

வ - கு : பல் ஈறு கட்டி, பல் வலித்து வாயினின்று நீர் பாய்வதை திறுத்த, பட்டையை ஊறல் அல்லது குடிநீர் செய்து வாய் கொப்பளித்து வரலாம். இதையே நீர்ப் புழை - நீர்ப்பை தாபிதங்களைப் போக்க பீச்சலாம். இதன் குடிநீர், சுரத்தைப் போக்குவதுடன் வன்மையையுந் தரும்.

**காய்.**

முற்றாத காயை மென்று வந்தால் பல்லிறுகும்.

**பழம்.**

இதனை உண்பதுண்டு. இதனால் தலை வலி நீங்கும்.

**விதை.**

குணம் : இஃது, உடலழகு, வன்மை, ஆண்மை இவைகளைப் பெருக்கும். ஆயினும் ஐயத்தைப் மிகுதிப்படுத்தும். இது கண்ணிற்கு இடும் மருந்துகளில் கூடும். உடலின் வெப்பத்தைப் போக்கி, கழியச் செய்து குற்றங்களைத் தன்னிலைப்படுத்தும். பல வகைப்பட்ட கொடிய நஞ்சு முறிவுக்காகக் கொடுக்கும் மருந்துகளில் சேர்ப்பதுண்டு.

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளமென் பார்கலிக்கஞ் செய்மருந்தாம்—வாதை
மலத்தைவிழித் தோடத்தை வல்விடத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை. (அ.கு.)

வ - கு : விதையைப் பொடித்து, பசுவின் நெய் விட்டரைத்துச் சீலையிற்றடவித் திரியாக்கி, கீழ்வாயிற் செருக, குழந்தைகட்குண்டாகும் எருக்கட்டு தீரும்.

மூலைப்பால் விட்டரைத்துக் கண்களிற்றீட்டக் கண்ணோய் நீங்கும்.

விதையைப் பொடித்து நெய் கூட்டிக் கொடுக்க, உடல் வன்மையையும் ஆண்மையையும் பெறும்.

விதைக்குடிநீர் சுரத்தைத் தணிக்கும்.

விதையைச் சுட்டுப் பற்றுலக்க பல் நோய்போம்.

---

## 435. மங்குஸ்தான்—Mangustan

**Garcinia mangostana, Linn.**

**Eng.—Mangosteen.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Mangushtam (Pandu).** | **Kan.** | **Mangustan** |
| **Mal.** | **Mangusta** | **Hind.** | **Mangustan** |

இது மலாயா நாடுகளில் வளருகிற ஒருவகைச் சிறுமரம். இதைத் தென்னாட்டில் சில இடங்களில் வைத்துப் பயிரிட்டு வருகிறார்கள்.

ப - உ : இலை, பட்டை, பழம்.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : துவர்ப்பி - ஸங்கோசனகாரி-**Astringent.**

குணம் : இதனால், நாட்பட்ட கழிச்சல், சீதக் கழிச்சல், வெள்ளை இவை போம்.

வ - கு : பழத்தை வேகவேத்துப் பிழிந்தெடுத்த சாற்றை, நெருப்பில் வற்றவைத்துச் சருக்கரை கலந்து, பாகு செய்து சாப்பிட்டுவர நாட்பட்ட கழிச்சல் நீங்கும். இத்துடன் சிறிது சீரகம், மல்லி இவைகளின் தூள் சேர்த்துக் கொள்ளின், மிகுந்த நன்மை தரும்.

உலர்ந்த பழத்தைப் பொடி செய்து, 4—6 குன்றியெடை எடுத்து சருக்கரை கலந்து சாப்பிட்டுவர மேற்கூறிய நோய்கள் விலகும்.

மேற்படி பழம், வால்மிளகு, வெங்காரம், வேலம்பட்டை இந்நான்கும் வகைக்கு 260 மி.கி. எடுத்துப் பொடித்துப் பாலில் கலந்து சாப்பிட்டுவர, நாட்பட்ட வெள்ளை, வெட்டை இவை தீரும்.

இதன் பட்டைக் குடிநீரை பீச்சிவர, வெள்ளை நீங்கும்.

பழச்சதை 170 கிராம், கசகசா 136 கிராம், சருக்கரை, 204 கிராம், மாதுளம்பட்டை 170 கிராம், பன்னீர்ப் பூவிதழ் 136 கிராம் கணக்காக இவைகளின் பொடியைக் கலந்து, 260–520 மி.கி. வரையிலும் கொடுத்து வர, குழந்தைகளின் நாட்பட்ட கழிச்சல் நீங்கும்.

பழச்சதை 6, மல்லி 2, கடுக்காய் 2, சோம்பு 2, இவைகளின் பொடியைக் கலந்து 260 மி.கி. வீதமெடுத்து, சருக்கரை சேர்த்துக் கொடுத்துவர, குழந்தைகளுக்குண்டாகும் நாட்பட்ட சீதக்கழிச்சல் நீங்கும்.

பழச்சதைக்குப் பதிலாகப் பழத்தின் ஓட்டையும் வழங்கலாம்.

---

## 436. மஞ்சள்—Manjal.

வே. பெ : அரிசனம், காஞ்சனி, நிசி, பீதம்.

Curcuma longa,

Eng.—Turmeric.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Pasupu | Hindi. | Haldi |
| Mal. | Mannal | | |
| Kan. | Arisina | Sans. | Haridra |

இஃது இந்தியாவில் வெப்பமான பாகங்களில் பயிராகும் செடி. இதன் கிழங்கிற்கு மஞ்சள் என்பது பெயர். இதற்கு ஒருவித மணமுண்டு.

மஞ்சள் இருவகைப்படும் (1) கப்புமஞ்சள், (2) கறிமஞ்சள்.

(1) கப்புமஞ்சள்—கிழங்கின் பெரும் பாகங்களை எடுத்துலர்த்தி, நல்லெண்ணெயிற் பக்குவஞ் செய்யப்படுவது.

(2) கறிமஞ்சள்—கிழங்கின் பக்கங்களிற் கிளைக்கும் விரற்போலுள்ளவைகளை வேறுபடுத்தி, சாணப்பாலில் வேகவைத்துப் பக்குவப்படுத்துவது.

ப- உ : கிழங்கு.

சுவை—கார்ப்பு கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி—Carminative.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

குணம் : உடலிற் பூசிக்குளிக்க உடலுக்குப் பொன்னிறம் தரும் ; புலால் நாற்றத்தை நீக்கும் ; ஆண்கள் மனத்தைக் கவரச்செய்யும் பசியையுமுண்டாக்கும். இதனால் வாந்தி, வளி, தீ, ஐயக்குற்றம், தலைவலி, நீரேற்றம், வெள்ளை, மூக்குநீர்பாய்தல், ஐவகைவலி, வீக்கம், வண்டுகடி, பெரும்புண் இவைபோம்.

பொன்னிறமாம் மேனி புலானாற்ற மும்போகும்
மன்னு புருட வசியமாம்—பின்னியெழும்
வாந்திபித்த தோடமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்தமஞ்ச ளின்கிழங்குக் கு.

தலைவலிநீ ரேற்றஞ் சளையாத மேகம்
உலைவுதரு பீநசத்தி னூடே—வலிசுரப்பு
விஞ்சு கடிவிடமும் வீறுவிர ணங்களும்போம்
மஞ்சள் கிழங்குக்கு மால். (அ. கு.)

வ - கு : மஞ்சளை நீர் விட்டரைத்து உடலிற் பூசி நீராட, உடலிலுண்டான நீங்காத புலால் நாற்றம் நீங்கும். உடல் பொன் சாயலான மேனி பெறும். மேலும், கற்றாழை நாற்றமும், முகத்திலுண்டாகின்ற நோயும் ஐயமும் வியர்வையும் நீங்கும்.

மஞ்சட் குளிதனக்கு மாருத்துர்ச் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந்—தொஞ்சலுறும்
ஐய மொழியு மடர்வியர்வுங் காணுது
வைய மதனில் வழுத்து. (அ.கு.)

மஞ்சளைப் பொடித்துப் புண்கள் மீது தூவ, அவைகள் ஆறும்.

சாதத்துடன் மஞ்சளைச் சேர்த்தரைத்துக் கட்டிகளின்மீது வைத்துக்கட்ட, அவைகள் எளிதில் பழுத்துடையும்.

மஞ்சளைச் சுட்டு முகர நீரேற்றம் நீங்கும்.

வேப்பிலையுடன் மஞ்சளைச் சேர்த்தரைத்து, அம்மைக் கொப்புளத்தின் மீது பூச, அவைகள் பழுத்துடைவதன்றி, வெகு எளிதில் ஆறிப்போகும்.

மஞ்சளுடன் ஆடாதோடையிலை சேர்த்து, பசுவின் நீரை விட்டரைத்துப் பூச, சொறி, சிரங்கு, நமைப்புடைகள் ஒழியும்.

மஞ்சள் அரைப்புடன், சுண்ணும்பு, பொட்டிலுப்புக்கூட்டிச் சுடவைத்துச் சுளுக்கு, அடிபட்ட புண் இவைகட்குப் பூசலாம்.

பச்சை மஞ்சள் இரசத்தைப் பூச, அட்டைக்கடி, நஞ்சு, புதிய காயப்புண் புண் வீக்கம் இவை போம்.

மஞ்சட் பொடியில் 520 மி.கி.—650 மி.கி. அளவு உட்புகட்ட, வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, மாறல் சுரம் நீங்குவதுடன், குடலும் வன்மைப் படும்.

மஞ்சள் நீரை அருந்த காமாலை போம்.

மஞ்சளை அரைத்து நீரிற் கலக்கி, வெண்சீலைக்குச் சாயமேற்றி, அவ்வாடையை உடுப்பதால், வாதநீர்ச் சுருக்கு, இருமல், நச்சுச் சுரம், மாறாத் தினவு, தனிச் சுரம், மலக்கட்டு இவை நீங்கும்.

நீர்க்கடுப்பு காசமொடு நீடு விடசுரமுந்
தீர்க்கநமைச் சல்வெப்புஞ் சேர்மலமும்—பார்க்குண்மிக
அஞ்சியே யேகுமஞ்ச ளாம்வத்தி ரம்புனைந்தால்
வஞ்சியே ! நன்ருய் வழுத்து. (அ.கு.)

மஞ்சள் நீரில் ஒரு சிறிய வெண்சீலைத்துண்டை நனைத்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு, கண் நோய் உள்ளவர்கள், இச்சீலையைக் கொண்டு கணகளை அப்போதைக்கப்போது துடைத்துவர கண் சிவப்பு, கண்ணருகல், கண்வலி, கண்ணில் நீர்கோர்த்தல் போன்றவை தணியும்.

### கறிமஞ்சள்.

இதன் மணத்திற்காகவும், நிறத்திற்காகவும், நாம் உண்ணும் உணவில் இதனைச் சேர்ப்பதுண்டு.

---

## 437. மரமஞ்சள்—Mara-Manjal.

வே : பெ: காலேயகம், தாருவி-

**Coscinium fenestratum,**

**Eng. : Tree-Turmeric.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Manu-pasupu | Sans. | Darvi |
| Mal. | Mara-Mannel. | | |
| Kan. | Madrada-Arisina | Hind. | Jhar-haldi |

இஃது, இலங்கை, மலையாளம் முதலிய நாடுகளிலுள்ள காடுகளில் பயிராகிறது ; இது மர வகை. இதன் சக்கை மஞ்சள் நிறமுடையது. ஆகையால், இதற்கு மரமஞ்சள் எனப்பெயர்..

ப - உ : சக்கை.

சுவை - கைப்பு, தன்மை, வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-Febrifuge.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic.
- உரமாக்கி-பலகாரி-Tonic.

குணம் : இதனால் குழந்தைகளுக்குண்டாம் கணமும், மூலநோய் சுவையின்மை, கணச்சுரம், உட்சுரம் ஆகியவை விலகும்.

அழன்றகண மூலம் அருசி யுடனே
உழன்ற கணச்சுரமும் ஓடுஞ்—சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசுமர மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே ! செப்பு. (அ.கு.)

வ - கு. இதை இடித்துக் 9 கிராமெடுத்துக் குடிநீரிட்டுக் கொடுத்துவர மேற்கண்ட பிணிகள் விலகும். சுரத்திற்குப்பின் காணும் அயர்வு நீங்கும்.

இதை நீ விட்டரைத்துத் தலையில் பற்றிட, வெப்பம் மாறும். குருதி கட்டிய வீக்கம், தோற்சிதைவுகளின் மீது பூச, அவைகள் நீங்கும்.

## மஞ்சிட்டி—Manjitti.

வே - பெ : பாண்டி, மஞ்சூகம்

**Rubia cordifolia,**

**Syn. Rubia munjista, Roxb.**
**Fam : Rubiaceae.**

**Eng. Indian Madder.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Manjishta | Sans. | Manjisthta |
| Mal. | Manchitti | Hindi- | Manjitti. |
| Kan. | Manjisthta. | Hind. | Manjitha. |

இஃது இந்தியாவின் வடமேற்கு மலை நாடுகளிலும், நீலகிரியிலும், பயிராகும் கொடி வகை.

ப- உ : வேர்.

சுவை—துவர்ப்பு, கைப்பு, தண்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : சூதகமுண்டாக்கி - ருதுவர்த்தநி - Emmenagogue.

குணம்: இது சூதக அழுக்கை நீக்கும். குருதிநீர் முதலியவைகட்குச் செந்நிறத்தை ஊட்டும்.

வ - கு. : இவ் வேரைக் குடிநீர்விட்டுக் கொடுக்க, மேற்கூறிய பண்பு களைத் தரும்.

வேரைத் தேன் விட்டரைத்து, முகப்பரு முதலியவைகளுக்குப் பூச அவை போம்.

இதை அரைத்து, வீக்கம் , புண், புடை இவைகளுக்குப் பூசலாம்.

அதிமதுரத்துடன் இதைச் சேர்த்துக் காடிவிட்டரைத்து, எலும்பு முறி வினுலுண்டான நோய்க்கும், வீக்கத்துக்கும் போடலாம்.

மஞ்சிட்டி, சந்தனம், மருட்கிழங்கு ஒரெடை சேர்த்தரைத்து அல்லது பொடித்து, நெய்யிலிட்டு காய்ச்சித் தீச்சுட்ட புண் மீது தடவலாம்.

இதை நிறத்திற்காகத் தைலங்களில் சேர்ப்பதுண்டு.

இதை அடிக்கடி வழங்கின், மனக்கலக்கம் உண்டாகும் என்பது சிலர் கொள்கை.

---

## 439. மணிப்புன்கு—Manippungu.

வே - பெ : பொன்னுங்காய், புன்குமரம், பூவுந்தி.

**Sapindus trifoliatus.**

Sapindus emarginatus, Vahl. Roxb.

Fam : Sapindacear.

| | | | |
|---|---|---|---|
| Tel | Kunkudu-chettu | Sans. | Arishtaphalam, Arishta |
| | | Arab. | Finda qe-hindi |
| Mal. | Ponnankai | Pers. | Ratah |
| Kan. | Kukatekayi | Hindi. | Ritha |

இம்மரம் தென்னிந்தியாவில் எங்கும் வளருகின்றது. தோட்டங்களி லும் பயிரிடப்பட்டு வருகின்றது.

ப - உ : இலை, காய்.

சுவை—கைப்பு, துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- குமட்டலெழுப்பி-வமனவ்யதாகாரி-Nauseact.
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Anthelmintic.

குணம் : இகணுல், கழிச்சல், வயிற்றுநோய், தலைநோய், சூதகநோய் இவைகள் விலகும்.

வ-கு. - : இதனிலையைத் தலைநோய், வலிநோய் இவைகளுக்குக் குடி நீரிட்டுக் கொடுக்கலாம்.

இலையை நீரிலிட்டுக் காய்ச்சி வீக்கங்களுக்கு நீராவியால் உடலை வியர்க்கச் செய்யலாம்.

இதன் காயை (சவுக்காரம்) சோப்புக்குப் பதிலாக வழங்கலாம்.

காயை உரைத்து அதில் நான்கு அல்லது எட்டுக் கிராம் கொடுக்க, வாந்தியாகும். அளவில் மிகுதியாகக் கொடுத்தால் கழிச்சல் உண்டாம்.

4 குன்றியளவில் கொடுத்துவர, குமட்டலை உண்டாக்கிக் கோழையை அகற்றும்.

ஒரு குன்றியளவில் வயிற்று நோயைப் போக்கும்.

கொட்டையை நீரில் நன்றாய் உரைத்து வடிகட்டிச் சாப்பிட செரியாக் கழிச்சல் முதலிய வயிற்றுக்கோளாறுகளை நீக்கும்.

வேரைப் பிழிந்து சாறெடுத்துச் சிறிது மூக்கில் விட, தலைவலி, காககை வலி முதலியன தணியும்.

வேரைக் காடிவிட்டரைத்துத் தேள்கடி முதலிய கடிநஞ்சுகளுக்குப் பூசலாம். நெறி கட்டிகள் கரையும். மேலும் வீக்கம், கீல்வாதம் முதலியவைகளுக்கும் வெளிப்பூச்சாக வழங்கலாம்.

---

## 440. மதனகாமப்பூ—Madanakamappu.

வே - பெ : காமப்பூ, மதனகாமேசுரப்பூ, மதனகாமியப்பூ.

Cycas circinalis.

The cone ot the male variety.

| | | |
|---|---|---|
| Tel. | Madana-mastu, Madana-kamakshi, Rinbadam | Sans. Madanakameswara |
| | | Hindi. Jangli, Madan-mast-ka-ph |
| Mal. | Rinbadam | Duk. Pahari-madan-mast-ka-phul |

இது மேற்குக்கரை நாடுகளிலுள்ள மலைகளில் வளருகின்ற ஒரு வகைச் சுற்றியேறுங் கொடியின்பூ. இப்பூவானது ஆண் பெண் என இருவகைப்படும். அவற்றுள் ஆண் வகைப் பூவே முதன்மையானது.

ப - உ : பூ, விதை, தண்டு.

சுவை—இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை :
- துயிலாக்கி-நித்திராகாரி-Narcotic.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- ஆண்மை பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisisc.

குணம் : இஃது உடற்கு வன்மையையும், ஆண்மையையும் தரும்.

வ - கு : பூவை உலர்த்திப் பொடித்து வேறு மருந்துகளுடன் சேர்த்து, காலை மாலைகளில் உண்டுவர உடல் வன்மை பெற்று ஆண்மை உண்டாகும்.

இதன் பொடியைப் பாலிலிட்டுக் காய்ச்சி, இரவில் படுக்கைக்குப் போகு முன் சாப்பிட, நல்ல தூக்கம் உண்டாம்.

முற்றின பூவை அரைத்து வலியுள்ள இடங்களில் பூச வலி குறையும்.

விதை முதலியவைகளை உலர்த்திப் பொடித்து மாவாக்கி மழை, மக்கள் உணவாய் உண்பர்.

## 441. மந்தாரை—Mantharai (Sivappu).

**வே. - பெ : பூங்காரம்.**

**Bauhinia purpurea.**

**Fma : Leguminosaee.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Devakanchanamu<br>Bodanta-chettu | Kan. | Mandara<br>Kanchivala |
| | | Sans. | Kanchanara<br>Kanchan |
| Mal. | Mantharam. | Hind. | Kachnar<br>Khairwal |

மந்தாரையில் பல இனங்களுண்டு. இவைகள் இந்தியாவில் பலபாகங் களிலும் பயிராகின்றன.

(இது அந்தி மந்தாரை, காட்டு மந்தாரை, கொக்கிறகு மந்தாரை, கொக்கு மந்தாரை), சிவப்பு மந்தாரை, வெள்ளை மந்தாரை எனப் பல பிரிவுகளையுடையது.

இவற்றுள் அந்திமாந்தாரை—அந்தி மல்லி எனவும் காட்டுமந் தாரை—காட்டாத்தி எனவும் பெயர் பெறும். இவ்விரண்டையும் முன்னரே கூறியுள்ளோம். மற்ற மூன்றினில் கொக்கு மந்தாரை, வெள்ளை மந்தாரை என்பது ஒரு பொருளையே குறிக்குமாதலின் சிவப்பு, வெள்ளை மந்தாரை களின் பண்புகளையும் அவற்றின் பொதுச் செயல்களையும் வரைந் திருக்கின்றேம். இவற்றுள் சிவப்பு மந்தாரை சிறந்தது.

ப - உ : பூ, பட்டை, வேர்.

சுவை : துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
- பூவேர்.
  - மலமிளக்கி-மலகாரி-Laxative.
- பட்டை.
  - உடற்றேற்றி-வ்யதபேதாகாரி-Alter tive.
  - உரமாக்கி-பலகாரி-Tonic.
  - துவர்ப்பி-ஸங்கோஸனகாரி-Astringent.

**பூ**

குணம் : இஃதுடையவரிடத்து மன்னவனும் தன்வழிப் படுவன், உடற்கும் விழிக்கும் குளிர்ச்சியைச் செய்யும் ; உடல் வெப்பத்தை நீக்கும்.

மந்தாரப் பூ குளிர்ச்சி மன்னர் வசியமுமாம்
செந்தா மரைத் திருவே ! செப்பக்கேள்—மந்தாரங்
கண்ணுக்கு மாகுளிர்ச்சிகாணுங் கொதிப்பகற்றும்
மண்ணினறும் பூவெனவே வை. (அ.கு.)

வ- கு : இதை உலர்த்திப் பொடித்துச் சிறிது சருக்கரையுடன் கலந் துண்ண, கழியச் செய்யும்.

கண்ணுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கக் கூடிய சில எண்ணெய்களில் இது சேரும்.

பூமொக்கைக் குடிநீரிட்டுக் குடித்துவர, இருமல், குருதிப் போக்கு அடங்கும், பெரும்பாடு நீங்கும்.

பட்டை.

இதன் பட்டையுடன், வேலம்பட்டை, மாதுளம்பூ இவைகளைச் சேர்த்துக் குடிநீரிட்டு வாய் கொப்புளித்துவர, வாய் நீரூறல், தொண்டைப் புண் இவை நீங்கும்.

பட்டையைச் சுக்குத்தூள் சேர்த்துக் கழுநீர் விட்டரைத்துக் கண்டமாலைக் குப் பூசலாம்.

பட்டைக் குடிநீர், கழிச்சலை நிறுத்தும். அழுகிய புண்களில் விட்டுக் கழுவ, அவை உலரும்.

வேர்.

வேர், பட்டை, பூ இம்மூன்றையும் ஓரெடை சேர்த்துக் கழுநீர் விட்டரைத் துக் கட்டிகள் மீது பூச, கட்டிகள் பழுக்கும்.

இதை குடிநீரிட்டுக் குன்மம் வயிற்றுவலி முதலியவைகளுக்கு வழங் கலாம்.

உடல் பருமனை இதன் வேர் போக்கும்.

---

## 442. மயிர் மாணிக்கம்.

Sida spinosa.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mayilu-manikkyamu | Aarb. | Hulbahe-Berri. |
| Mal. | Mayir-manikkam | Pers. | Shanblide-Berri |
| Kan. | Kadu-manthya | | |
| San. | Khara-yashitka | Hind. / Duk. | Jangli-dmethe |

இச்செடியானது, இந்தியாவின் வெப்பநாடுகளிலும் மார்கழி, தைத் திங்களில் ஏராளமாய் வளர்ந்து பயிராகும்.

ப.உ.— இலை, வேர்

சுவை—இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு, இனிப்பு

செய்கை..
இலை.
உள்ளழலாற்றி-அந்தர்ஸ் நிக்தகாரி-Demulcent.
குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.
வேர்.
உரமாக்கி-பலகாரி-Tonic.
வியர்வைபெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.

குணம்: இதனால் மேகமும், வெள்ளையும், இளைப்பு நோயும் நீங்கும். இதில் முறைப்படிரசம் சேர்த்துண்ண, புண் ஆறும்.

மயிர் மாணிக்கத்தால் வளர்மேகம் போகுஞ்
செயிரான மேகவெட்டை தீருங்—கயரோகம்
மாவிரணம் போக்கவிகில் வல்லரதஞ் சேர்த்தரைத்துத்
தாவியுண்பா ருண்டறிந்தோர் தாம். (அ.கு.)

வ-கு: இலையை அரைத்துத் தயிரில் கலக்கிக் கொடுக்க, வெள்ளை வெட்டை நீங்கும். பசுங்கன்றுகளுக்குண்டாகும் கழிச்சல் போகும்.

தலையில் தேய்த்து 2-3 மணி நேரம் பொறுத்துத் தலை மூழ்கிவர கண்ணெரிச்சல் நீங்கும். உடல் குளிரும்.

வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்கூறிய நோயகள் நீங்கும்.

இதன் சாற்றால் இலிங்கம் கட்டுப்படும்.

## 443. மரக்காரை—Marakarai.

**வே - பெ : மதுக்காரை, மராடம், மருவகம் மருக்காரைப்பழம்.**

**Bot : Name : Randia dumetorum, Lamk.**

**Eng : Emetic nut.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Manda-kayual<br>Mranga-kayalu | Arab. | Jauzul-quoi<br>Jouzal-kousal |
| Mal. | Karalik-kaya | | |
| Kan. | Mangari-kai | Hind. | Men-phal. |
| Sans. | Maanda-phalam | Duk. | Med-phal |

இது, தென்னிந்தியாவிலும், இந்தியாவின் கிழக்கு நாடுகளிலும் பயிராகும் ஒரு வகைச் சிறு மரம்.

ப - உ : பழம், பட்டை (வேர்).

சுவை : துவர்ப்பு, சிறு கைப்பு, தன்மை - வெட்பம், பிரிவு - கார்ப்பு.

**பழம்.**

செய்கை :
- வாந்தியுண்டாக்கி-வமநகரி-Emetic.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.
- இசிவகற்றி-அங்காகர்ஷணநாசநி-Antispasmodic.
- துவர்ப்பி-ஸாங்கோஸணகாரி-Astringent.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.

**வேர்.**

செய்கை :
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- வாந்தியுண்டாக்கி-வமனகாரி-Emetic.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-Carminative.

**பழம்.**

**பண்பு :** இதனால், சுரம், வயிற்றுப் பொருமல், மயக்கம், பெருவயிறு போகும். அறிவுண்டாகும்.

சுரமும் பொருமலும்போந் தொல்மயக்க மில்லு
தரமூதல் போமறிவுந் தங்கும்—பருக
அரக்காகு மெல்லிதழ்வாய் ஆரணங்கே ! கான
மரக்காரை யின்கனியை வாழ்த்து.

அ.கு,

**வேர்.**

**குணம் : இது, வாந்தியை உண்டு பண்ணி கோழையை யகற்றும் ஐயத்தைத் தீர்க்கும், முப்பிணியைப் போக்கும். மேலும், சீதக்கடுப்பு குருதியழல் நோய், பித்தம், கரப்பான், வாயு, மாந்தகணம் இவைகளையும் நீக்கும்.**

மரக்காரை யின்வேர்தான் வாந்தி மருந்தாத்
திருக்காஞ் சிலேத்தைத் தீர்க்கும்—முருக்காருஞ்
செய்யவிதழ் மாதே ! திரிதோட மும்போக்கும்
வெய்ய மருந்தெனவே விள்.

சீதக் கடுப்பகலுஞ் சேராது ரத்த பித்தம்
மாதே கரப்பான் போம் வாதம் போம்—போதப்
பெருக்கான மாந்தகணம் பேரும் உலகில்
மரக்காரை வேரருந்து வார்க்கு. (அ.கு.)

வ - கு : பழத்தை உடைத்து உள்ளிருக்கும் விதைகளை நீக்கி பழச் சதையை மாத்திரம் உலர்த்திடித்துப் பொடி செய்து, மீண்டும் உலர்த்தி அரைத்து, மெல்லிதான துணியில் வடித்து, உலர்த்திக் காற்றுப் புகாமல் ஒரு புட்டியில் அடைத்து வைத்துக் கொண்டு 3 கிராம் வீதம் தேன் அல்லது சருக்கரையுடன் கூட்டிக்கொடுக்க, செவ்வையாய் வாந்தியாகும். இதனை குறைந்த அளவு அதாவது 1 முதல் 2 கிராம் சீதபேதிக்குக் கொடுக்க லாம் என்றும், இப்பிகாக் (Ipecac) கின் செய்கை இதற்குண்டு என்றும் சிலர் கூறுவர்.

2 - 3 பழங்களை உடைத்து, 170 மி.லி. நீரில் ஊறவைத்துப் பிசைந்து வடிகட்டிக் கொடுத்தாலும் வாந்தியாகும். வெந்நீர் குடிக்க மிகுதியாக வாந்தியாகும். கோழையைப் போக்கும்.

பழம் சூலை யழிக்கும் செயலுடையதால், பிள்ளை தாய்ச்சிகளுக்கு இதை வழங்கலாகாது.

பட்டை, வேர்.

பட்டை அல்லது வேரைக் குடிநீரிட்டு 175 மி.லி. கொடுக்க வாந்தி யாகும். 15–30 மி. லி. வீதம் கொடுக்க, செரியாக் கழிச்சல், சீதக்கழிச்சல் இவைகளையுங் கண்டிக்கும். பட்டையை உலர்த்திப் பொடித்து, 65—130 மி.கி. உள்ளுக்குக் கொடுத்து வர, வளிநோயில் உண்டாகும் வலியைத் தணிக்கும்.

பட்டை அல்லது வேரைச் அரைத்து மேற்பூச்சாக வீக்கங்களுக்குப் பூசலாம்.

மருக்காரைக் குடி நீர்.

மருக்காரை சுக்கு மருதந்தோல் வெள்வே
லெருக்கா விரைப்பிரம்போ டேழும்—நருக்கியே
நாலிலொன் ருய்க்காய்ச்சி நாற்பது நாட் கொப்புளிக்கப்
பாலன்பல் லாங்கிழவன் பல். (தேரன் வெண்பா)

(பொ - ள்.) மருக்காரை, சுக்கு, மருதந்தோல், வெள்வேலம்பட்டை, எருக்குவேர், ஆவாரை, பிரப்பன் கிழங்கு ஆகிய ஏழையும் ஒரே அளவில் எடுத்திடித்து, நீர் விட்டு, நான்கில் ஒன்ருக வற்றவைத்துக்குடி நீர் செய்து, வாய் கொப்புளித்துவர, வயது முதிர்ந்தவர் பற்களும் இளைஞர் பற்கள் போன்று உறுதிபெறும்.

## 444. மரிமா – Marima.

வே - பெ : புளிமா, கானமரி,

Spondias' mangifera.

Eng. : Hog-plum o Wild mango.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Adavi-mamidi | Kan. | Ambate |
| Mal. | Ambalam. | Hind. | Ambada. |

இதற்கு மரியங்காய் அல்லது புளி மாங்காய் மரம் எனப் பெயர். இம்மரம் இந்தியாவில் எங்கும் பயிராகிறது.

ப - உ : காய்.

**சுவை—புளிப்பு, தன்மை-வெப்பம், பிரிவு - கார்ப்பு.**

| | |
|---|---|
| செய்கை: | ஆண்மைபெருக்கி—காமவர்த்தநீ—Aphrodisiac |
| | பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநீ—Stomachic |

குணம் : இதனுல், வாய்க்கசப்பும், சுவையின்மையும் நீங்கும். சுர நோயினர்களுக்கு உவப்பைத் தேரும்.

வாயின் கசப்பகலும் மாறு அரோசகமும்
ஓயுஞ் சுரத்தோர்க் குவப்பாகுந்—தூயவரித்
தேனமரும் வார்கூந்தற் றெய்வப் பெடையனமே !
கானமரி யங்காயைக் கண்டு.

வ—கு : இதன் காயைத் துவையல் செய்து அல்லது ஊறுகாய் செய்து சாப்பிடுவதனுல், மேற்கண்ட குணங்களை அடையலாம்.

இலேக் கொழுந்தையும் துவையல் செய்து சாப்பிடலாம்.

---

## மருக்கொழுந்து—Marukozhunthu

வே—பெ : தமனகந்தம், மருக்கொழுந்து, மரு.

Artemesia vulgaris

Mal : Kozhuna

இந்தியாவில் மலேநாடுகளில் பயிர் செய்யப்படும் மணமுள்ள பூண்டுகளுள் மருக்கொழுந்தும் ஒன்ருகும்.

ப-உ : பூண்டு.

**சுவை—கைப்பு, கார்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.**

| | |
|---|---|
| செய்கை | உரமாக்கி—பலகாரி—Tonic |
| | பசித்தீத்தூண்டி—ஜடராக்நிவர்த்தநி—Stomachic |
| | துயரடக்கி—வேதநாசநந்தநி—Anodyne |
| | இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodic |

குணம் : இதனுல் கண்ணில் உண்டாகும் படலம், அழற் குற்றத்தினுல் வரும் நோய்கள் போகும். உடற்கு ஊட்டத்தையும் மிகுந்த பசியையும் உண்டாக்கும். கைப்புக்கார்பாலுண்டான அழலேயும் போக்கும். மேலும் புண், சொறி, சிரங்குகட்கும் நன்மருந்தாம்.

கண்ணிலுறு தோடங் கபஞ்சு டிவைபோக்கும்
ஒண்ணனல்கைப் புக்காரம் உள்ளமரும்—மண்ணிற்
கொழுந்தம் மருக்குணத்தைக் கொண்டிருந்த போதுந்
தழைந்தபசி வன்மைதருஞ் சாற்று. (அ.கு.)

வ-கு : மருக்கொழுந்து 34 கிராம் வெந்நீர் 720 மி.லி. இதை ஒரு மணி காலம் மூடிவைத்து, ஊறியபின் வடிகட்டிக்கொள்ளவும். இதில் 30—60 மி.லி. உள்ளுக்குக் கொடுக்க, மேற்கண்ட நோய்கள் போம்.

இதன் இலேயை அரைத்து எண்ணெயிற்கலந்து, வெயிலில்வைத் தெடுத்து, சொறி சிரங்கு, புண் முதலியவைகளுக்குப் பூசலாம்.

**இதைச் சிற்றுமணக்கெண்ணெய் விட்டு வதக்கி ஒற்றடமிட, வீக்கங்கள் குறையும்.**

## 446. மருது—Muruthu.

வே-பெ : அருச்சுனம், ககுபம், பூதவம், பூலத்தி, இந்திரன் பார், வெள்ளைமருதமாம்.

**Terminalia arjuna.**

Eng : Arjunamyrobalan

Tel . Maddi Sans.. Arjuna.

Mal : Marutha Hind { Arjuna, Kaipha }

Kar : Kaidaryavu

இம்மரம் இந்தியாவில் எங்கும் பயிராகிறது. இதில் வெண்மை, செம்மை என இரு வகைகளுண்டு. இவ்விரண்டின் பண்புகளும் ஒன்றே.

ப-உ : இலை, பழம், வித்து, பட்டை.

சுவை : துவர்ப்பு, தன்மை – தட்பம், பிரிவு– கார்ப்பு.

செய்கை :
பட்டை.
உரமாக்கி-பலகாரி-Tonic-
தமரகவெப்புண்டாக்கி-ஹ்ருதயஉஷ்ணகாரி-Cardiac Stimulant
பழம், விதை
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

குணம் : இஃது நீரிழிவு, வெள்ளை, மயக்கம், நீர் வேட்கை, சுரத்தி லுண்டாகும் தயக்கம், பெரு நோய், புழு நோய்கள், வயிற்று நோய், வறட்சூலை இவை போம். தமரகத்தை வன்மைப்படுத்தும்.

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண்—போத
மயக்க மொடுதாக மாருச் சுரத்தின்
தயக்கமறுக கும் மருதஞ் சாற்று.

குட்டரோ கங்கிரும் கோர வயிற்று வலி
துட்டவறட் சூலை தொலையுங்காண்—கிட்டிப்
பொருதம்பா மென்னு விழிப் பூவையரே ! நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து. (அ.கு.)

### இலை.

வ-கு : 11 கிராம் இலையை, 180 மி.லி. பாலில் அரைத்துக் கலக்கி, தினமிருவேளை மூன்று தினம் பத்தியத்துடன் சாப்பிட்டுவர பித்த வெடிப்பு நீங்கும்.

### பழம்.

இதை நன்றாக அவித்துப் பிசைந்து புண்களின் மீது வைத்துக் கட்டி வர, கொடிய புண்களெல்லாம் சீக்கிரம் குணமாகும்.

### பட்டை.

பட்டையைப் பொடி செய்து மூக்கிலிட , தலை வலி நீங்கும்.
மேற்படி பொடியினுல் பல் துலக்கிவர, பல் வலி தீரும்.

பட்டைக் குடிநீரால் புண்களைக் கழுவிவர, அவை சீக்கிரத்தில் உலரும்.

இந்திரன் பாரதனின்பொடி நீருணப்
பந்தமா கியவளிப் பையுளெ லாம்றும்

(பொ - ள் ) : மருதம் பட்டையின் பொடியை வெந்நீருடன் உட்கொண்டு வந்தால், உடலிற்றங்கிய வளிக்குற்றம் நீங்கும்.

இந்திரன் பார்—மருதம் பட்டை. (தே. கா.)

### பட்டைத் தைலம்.

(தந்வந்தரி—தைலம்—500.).

தப்பா தையா தரணியில் மாந்தர்க்கு
ஒப்பா மருதம் பட்டைத் தைலங் கேள்
செப்பா மூலி சிறந்த பொடுதலை
அப்பா மூன்று மறையப் பாண்டமிடே.

பாண்டந் தன்னிற் பதக்கு சலமிடு
பூண்ட கஷாயம் பொருந்த செய்திடு
ஆண்டு மெண்ணெய் யறியச் சமனதாய்
தீண்டு மேபதந் தெளியவே காய்ச்சிடே.

காய்ச்சும் வாலை கருதும் மனோன்மணி
ஆச்சி பாத மடிவணங்கித்தொழு
மூச்சி டாமல் முறையுடன் தான்முழு
போச்சு மேகம் புகன்றேடிப் போமே.

போகும் பாண்டு புகலுங்கா மாலைபோம்
ஏகும் ரோமம் எழும்பும் பெருஞ்சிரங்
காகுமே சொறி கருமேகந் தான்றும்
பாகுதந் வந்திரி பாடின துண்மையே.

### பட்டை.

பட்டையைக் குடிநீர் செய்துகொடுக்க, இரைப்பிருமல், கழிச்சல், சுரங்கள் ஆகியவை தணியும்.

மருதம் பட்டையை வேண்டிய அளவு எடுத்து, ஒன்றிரடண்டாக இடித்து அதற்கு எட்டுப்பங்கு நீர் விட்டு, எட்டில் ஒன்ருகக் காய்த்து வடித்து, அந் நீரைச் சிறு தீயில் எரித்துச் சுண்டக்காய்த்து மெழுகுபதத்தில் எடுத்துக் கொண்டு 1,625 மி.கி. அளவு கொடுக்கலாம்.

மருதுபட்டை, அரசம்பட்டை, வில்வப்பட்டை வகைக்கு 34 கிராம் சாதிக்காய், சாபத்திரி, இலவங்கப்பட்டை வகைக்கு 19 கிராம் இவற்றை 1,400 மி.லி. நீர் விட்டு 170 மி.லி. காய்த்து வடித்து, 60 மி.லி. வீதம் காலை மாலை கொடுத்துவர, கழிச்சல் போம். தமரகத்தை (இருதயத்தை) வன்மைப்படுத்தும்.

## 447. மருள்—Marul

**Sanseviria roxburghiana,**

| | |
|---|---|
| **Tel.** **Chäga** | **Sans.** **Moorva** |
| **Mal.** **Katukapel** | |
| **Kan.** **Heggurutika** | **Hind.** **Murhari** |

இஃது இந்தியாவில் நீருள்ள எல்லா விடங்களிலும் பயிராகிறது.

ப-உ : மடல், கிழங்கு.

சுவை—கார்ப்பு, இனிப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை
நீர்மலம்போக்கி—வ்ஷரேசனி—**Purgative**
உரமாக்கி—பலகாரி—Tonic
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—**Stimulant**

குணம் : இதனால், கோழைக்கட்டு, பெருவயிறு, பலவிதச் சோபை, மூலம் இவை போம். பசியுண்டாம்.

தொண்டைக்கட் டையந் தொலையும் மகோதரமும்
பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண்—கெண்டைவிழி
மானே! மருள்கிழங்கால் மாறுமூ லங்களெலாந்
தானே பசியெ ழும்புந் தான். (அ-கு.)

வ-கு : இதன் மடலை அனலில் காட்டி வதக்கிப் பிழிய, காதுவலி நீங்கும்.

இதனின்று நாரெடுப்பதுண்டு.

கிழங்கைக் குடிநீரிட்டு நீர் வேட்கை, மார்புநோய், சிரங்கு, சுரம், நோய், நெறிக்கட்டு முதலியவைகளுக்கு வழங்கலாம்.

கிழங்கை நெய்யாகச் செய்து, நாட்பட்ட இருமல், ஐயநோய் முதலியவைகளுக்குக் கொடுக்க, அவை போம்.

இதன் சாற்றைச் சிறு குழந்தைகளுக்குண்டாகும் கோழைக் கட்டை நீக்கக் கொடுப்பதுண்டு.

## 448. மல்லி—Malli

(வே - பெ) : அனங்கம், புருணம், மல்லிகை, மவ்வல், மாலதி, விசகலி

Jasminum asmbac,

Eng.—The Ararbian Jasmine.

| | |
|---|---|
| **Tel.** **Malle.** | **Kan.** Mallige. |
| | **Hindi.** **Chamba.** |
| | **Sans.** **vcarshiki** |
| **Mal.** Cheru-pichchakam. | **Hind.** **Mogra.** |

இது, மிகுந்த நறுமணத்தைத் தரக்கூடிய செடி; இந்தியா முழுமையும் கிடைக்கக்கூடியது; வெப்ப நாடுகளில் வளரும்,

ப-உ : இலை, பூ, வேர்.

சுவை : கைப்பு. தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :

இலை

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

பொது

புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
வீக்கமுருக்கி—சோபாநாசிநி—Deobstruent.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

குணம் : இதனால், முக்குற்றம், தலைநோய், உடல்வெப்பம், கண்படலம் இவை நீங்கும். மிஞ்சிய ஐயத்தையும் மனக் கலக்கத்தையும் போக்கும். அன்றியும் இதனின் நன்மணத்தால் கலவி இன்பத்தைப் பெருக்கும். மனதைக் கவரச் செய்யும்.

பூ.

போகமிக உண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
ஆகவனல் சூனியமும் அண்டுமோ ?—பாகனையாய் !
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றெவரும்
பன்னுமல்லி கைப்பூவாற் பார். (அ-கு.)

இலை.

வ-கு :இதன் இலையை வாயிலிட்டு மெல்ல, வாய்ப்புண் முதலியன மாறும்.

இலைச்சாறு அல்லது இலையிலிருந்து எடுக்கும் எண்ணெய், காது நோயை மாற்றும், சீயை நிறுத்தும். இலைச்சாறு காலாணியைப் போக்கும்.

இலையை நெய்யில் வறுத்து ஒற்றடமிட, தொண்டை நோய் முதலியன நீங்கும.

பூ

பூக்களிலிருந்து அத்தர் செய்யலாம். இதிலிருந்து மிகவும் மணமுள்ள எண்ணெய் செய்து, தலையில் தேய்த்து முழுகிவர, உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும். தலைவலி, தோலைப்பற்றிய நோய்கள், கண்ணெரிச்சல் முதலியன தீரும்.

யூனானி வைத்தியர்கள், இப்பூவை அல்லது இலையை அரைத்துத் தொடை யிடுக்கு, குறி முதலிய இடங்களில் பற்றிடுவதால், கலவி இன்பம் பெருகும் என்பர்.

பூவை அரைத்துப் பூச, வீக்கங் குறையும்.
பூவை வைத்து மார்பிற் கட்ட, பால் சுரப்பு நீங்கும்.

வேர்.

இதன் வேர்த்தூளையும், வசம்புத்தூளையும் பழச்சாறு விட்டு மத்தித்துத் தேய்க்க தோலைப் பற்றிய நோய்கள் தீரும்.

குறிப்பு.—மல்லியில் பல வகையுண்டு. அவை சாதிமல்லி, ஊசிமல்லி, குடமல்லி போன்றனவாம். இவைகள் பண்பில் பெரும்பாலும் ஒன்றுபட்டே இருக்கும். காட்டுமல்லி இலையால் வெண்குட்டந் தீரும்.

## 449. மன்ன—Manna

வே - பெ : மேனு

Bot. Name : Tamarix gallica

Eng.—Manna.

| | |
|---|---|
| Sans. Jhavuka | Pers. Gazmazaj. |
| | Hind. Jhan. |

இஃது, அரேபியா முதலிய மேல்நாடுகளில் ஏராளமாயுண்டு. மான்னு என்னும் ஒரு செடியைக் கீறி எடுக்கும் பால் மன்னு எனப்படும். இது செங்கல் போன்று மங்கல் நிறமாயும், துண்டுகளாயும், ஒரு பக்கம் மேடாயுமிருக்கும். உட்புறம் வெண்மையாயும பளபளப்பாயுமிருக்கும்.

ப-உ : பால்.

சுவை : இனிப்பு, தன்மை— தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : மலமிளக்கி—மலகாரி—Laxative.

குணமும் வழக்கும் : இதை நிலாவரை, சீமை இந்துப்பு இவைகளுடன் சேர்த்துப் பெரியவர்களுக்கு 51—85 கிராம் வீதமும், சிறியவர்களுக்கு 6—8 கிராம் வீதமும் கொடுக்க, யாதொரு குமட்டலுமின்றிச் செவ்வையாக வயிறு கழியும். இது குழந்தைகட்கு மிகவும் நல்லது.

## 450. மா—Ma

வே - பெ : ஆமிரம், ஆம்பிரம், எகின், சிஞ்சம், கொக்கு, சூதம், ரேகரம், குதிரை, ஒமை, சேதாரம், மாழை, மாந்தி.

Mangifera indica.

Eng.—Mango tree.

| | |
|---|---|
| Tel. Mamidi (Chettu) | Sans. Amra (Vriksha) |
| Mal. Mavva | Hind. Anbkaper-Amkaper |
| Kan. Mavina (Mavu). | |

இஃது, மிகுதியாய் வெப்ப நாடுகளில் பயிராகும் பெரு மர வகைகளுள் ஒன்று. இதில் பழங்களைக்கொண்டு பலவகையுண்டு.

ப-உ : இலை, பூ, பிஞ்சு, காய், பழம், வித்து, மரப்பட்டை, வேர்ப் பட்டை, பிசின் முதலியன.

பொது.

சுவை : துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

காய்.

சுவை : புளிப்பு, துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

பழம்.

சுவை : இனிப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—இனிப்பு.

பருப்பு.

சுவை : துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை

பிஞ்சு

உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcente.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent
பசித்தீத்தூண்டி ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

காய்

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

பழம்

மலமிளக்கி—மலகாரி—Laxative.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
உரமாக்கி—பலகாரி—Tonic.

கொட்டைப்பருப்பு

புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.

மரப்பட்டை, வேர்ப்பட்டை

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
உரமாக்கி—பலகாரி—Tonic.

குணம் : மாம்பிஞ்சு—இதுவே "சூதப்பிஞ்சு" "மாவடு".

இதனால், வளி முதலாய முக்குற்றங்களின் பெருக்கும், சுவையின்மையும், வாந்தி, மந்தம் ஆகியவையும் போம்.

கவைவாத பித்த கபமருசி வாந்தி
சுவைமறுத்த மந்தமெனுந் தோடம்—இவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே!
சூதத்தின் புன்வடுவைத் துய். (அ-கு.)

மாங்காய்.

இதனால் ஆண்மைக் குறைவு, மிகுவாயு, சிரங்கு, பசியின்மை, ஆறுப் புண், தோல் வெடிப்பு, பல் கூசுதல், சொற்குன்றுதல் ஆகிய இவை உண்டாம். பசியும் விலகும்.

தாதுநட்டம் வாதந் தனிக்கிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதில்—ஓதுகின்ற
வாங்காறுப் புண்வளரும் பற்கூசுங் சொற்குளறும்
மாங்காயுண் பாரை மறு. (அ-கு.)

### மாம்பழம்.

மாம்பழத்தை உண்பதனால் நமைச்சலும், மார்பு எரிச்சலும், கண்ணோயும், கரப்பானும், புண் பெருகும். பசி நீங்கும்.

தின்றாற் றினவெடுக்குந் தீபனம்போம் நெஞ்செரிவாம்
அன்றே விழிநோய் அடருங்காண்—துன்றிமிக
வாதக் கரப்பானும் வன்கிரந்தி யும்பெருகுஞ்
சூதக் கனியின் சுகம். (அ.கு.

### மாம்பழம், காய், பிஞ்சு.

மாம்பழத்தால் ஆண்மை பெருகும், வெண்ணீர் ஊறும், காயால் மேற்கூறியதற்கு எதிராகும். பிஞ்சிக்கு முக்குற்றங்களும் தன்னிலேயெய்தும்.

வேத சத்திய மாக விளம்புவோந்
தாது விர்த்திக்குந் தம்பன மாங்கனி
போதம் மர்த்தனம் புன்காயி னல்வடு
வாத பித்த கபங்களை மாற்றுமே. (அ-கு.)
சூதநற் காய்கனி துய்த்திட வுண்மெலி
வேதமுற் றவையெலா மிமைப்பினி லொழியுமே. (தே.கா.)

(பொ-ள்.) மாங்காய், மாம்பழம், இவைகளை முறைப்படி புசித்தால் மனத்தளர்ச்சி, வன்மைக் குறைவு முதலியன ஒழியும்.

### மாங்கொட்டை.

இதற்குள்ளிருக்கும் பருப்பினால், சீதக் கழிச்சல், குருதிக் கழிச்சல் கடுப்பு, சூடு, பெரும்பாடு, வயிற்றுப் புழு ஆகிய இவை போம்.

பேசுமே சீதப் பெருக்குஞ்சோ ரிக்கடுப்பும்
வீசுமோ மூலமுறு வெங்கொதிப்பு—மாசுடைய
பூங்கொட்டை யைத்தள்ளிப் போட்டுக் கனியில்வந்த
மாங்கொட்டையைக் காணில் வாது. (அ.கு.)

### மாமர வேர்ப்பட்டை.

இதன் வேர்ப்பட்டையால், சீதக் கழிச்சல், வயிற்றுக் கடுப்பு, வாந்தியானும் இவை போம்.

சீதரத் தப்போக்கைச் சிக்கெனவே தாண்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பைப் போக்குங்காண்—ஓதுகின்ற
வாந்தியையும் தீர்க்குவெளி மாமரத்தின் வேர்ப்பட்டை
பூந்துகின் மாதே! புகல்.

### மாம்பிசின்.

மாம்பிசினால், பெரும்பாடு நோயும், குருதிக் கழிச்சலும், வெள்ளையும் நீங்கும்.

பெரும்பாடெங் கோரத்தப் பேதியெங் கேமுக்கல்
தரும்பாழும் வெள்ளையெங்கே சாற்றாய்—கரும்பாம்பின்
நாதநிரி யாசஞ்செய் நங்காய்! வனத்திலுறை
சூதநிரி யாசமெனச் சொல். (அ-கு.)

### மாம்பட்டைத் தைலம்.

மாம்பட்டை 6,800 கிராம், தண்ணீர்விட்டான் கிழங்கு 170 கிராம் நிலப்பனங்கிழங்கு 170 கிராம் இவற்றை இடித்துப்போட்டுக் குடிநீரிட்டுக் காய்ச்சி, அதற்கு நேர் எண்ணெய் கூட்டி எரித்து, பதத்தில் இறக்கி முழுகிவர, மேகம், வெள்ளை, காணுக்கடி ஆகியவை போம்.

மாந்தர்க் காகவே மாம்பட்டைத் தயிலமொன்று
ஆந்தப் பட்டை யிருநூற் பலமெடு
சார்ந்த நிலப்பனை சாற்றும் பலமைந்து
போர்ந்த மிட்டான் புகலச் சரிகூட்டே.

### இலைக்கொழுந்து.

(வ-கு). இதை உலர்த்திப் பொடித்து மூவிரலளவு நீரிழிவிற்குக் கொடுக்கலாம்.

### இலை.

இலையைப் பிழிந்தெடுத்த சாறு 2 தோலா, தேன் ஒரு தோலா, பால ஒரு தோலா, பசு நெய் ½ தோலா ஒன்றுய்க்கலந்து, குருதிக் கழிச்சலுக்குக் கொடுக்கலாம்.

இலையைத் தேன் விட்டு வதக்கிக் குடிநீரிட்டுத் தொண்டைக்கட்டு, குரற் கம்மல் முதலியவற்றிற்கு கொடுக்கப்போம்.

இலையைத் தீயிலிட, அதிலிருந்து வரும் புகை, தொண்டைக் கம்மலை நீக்குவதோடு, விக்கலையும் நிறுத்தும்.

இலையைச் சுட்டுச் சாம்பலாக்கி வெண்ணெயில் குழைத்து, தீப்புண் வேக்காடு முதலியவைகளுக்குப் போடலாம்.

### பூ

பூவை உலர்த்திக் குடிநீரிட்டு, கழிச்சல், நாட்பட்ட சீதக்கழிச்சல் முதலியவைகளுக்குக் கொடுத்துவரப் போகும்.

பூவை உலர்த்திப் பொடியை புகையிட கொசுக்கள் ஓடிவிடும்.

### பிஞ்சு.

கொட்டை முற்றுத பிஞ்சை எடுத்து, காம்பு நீக்கி வாடவைத்து, ஊசியால் பல குத்துகளிட்டு, உப்பு நீரில் ஊறப்போட்டு, வெயிலில் வைத்து உலர்த்தி உண்ண பசியுமுண்டாகும், வாய்க்குமட்டலும் நீங்கும்.

### காய்.

இதில் பலவிதத் துவையல் ஊறுகாய்கள் செய்து வழங்கலாம்.

பச்சைக்காயைக் கொண்டுவந்து தக்கபடி உப்பிட்டுக் கலந்துவைத்து அப்படியே வழங்குவதுண்டு. அல்லது மிளகாய் சேர்த்துத் தாளித்து உண்பதுமுண்டு.

மாங்காயின் மேற்றோலைச் சீவிப் பொடியாக நறுக்கி, உப்புக் கலந்து தாராளமாக எண்ணெய் விட்டுத் தாளித்துச் சாப்பிடலாம்.

### பழம்.

இப்பழம் முக்கனிகளுள் ஒன்று. மிக்க இனிப்பு வாய்ந்தது. உடற்கு ஊட்டத்தையும் வன்மையையும் தரக்கூடியது. மிகுதியாகப் புசிக்கில் கழிச்சலை உண்டாக்கும். சொரி சிரங்கு வரும்.

### மாங்கொட்டைப் பருப்பு.

கழிச்சல் நோய்களுக்கு மாங்கொட்டைப்பருப்பு ஒரு நன்மருந்து.

நாட்பட்ட சீதக் கழிச்சலுக்கு மாம்பருப்புடன் அபின் கூட்டிக் கொடுத்தால், மிகுந்த நன்மை செய்யும்.

கொட்டை முற்றாத மாம்பருப்பைச் சிறு துண்டுகளாக நறுக்கி, வெய்யிலில் உலர்த்திப் பொடிசெய்த தூள் 172 கிராம் சுக்கு, மிளகு, சீரகம் இவைகளின் தூள் வகைக்கு 42 கிராம் மாம்பிசின் தூள் 20 கிராம் அபின் 4 கிராம் இவற்றை நன்றாக அரைத்துவைத்துக்கொண்டு, மேற்கண்ட நோய்களுக்கு, 3 முதல் 5 குன்றிவரை நோயின் வன்மை அறிந்து கொடுக்கலாம்.

தனி மாம்பருப்பை மாத்திரம் தூள் செய்து, 3 கிராம் முதல் 6 கிராம் எடை கொடுக்கலாம்.

பருப்பை எடுத்துப் பொன்னிறமாக வறுத்துத் தூள் செய்து, 325—650 மி.கி. எடை வரை கொடுக்க, வயிற்றுக்கடுப்பு, சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல் ஆகிய இவை போம்.

மாங்கொட்டைப் பருப்பு, கசகசா, சுக்கு, ஓமம், ஓர் எடை எடுத்துப் பழச் சாற்றாலரைத்து அதில் ஒரு சிட்டிகையை நெய்யில் குழப்பிக் கொடுக்க, பெருங்கழிச்சல் தீரும்.

### மாம்பட்டை.

#### மாம்பட்டை அவியல் நீர்.

மாம்பட்டை, கோரைக்கிழங்கு இவைகளைச் சரியெடையாய் எடுத்து, இடித்துப் பிட்டவியலாக அவித்துப் பிழிந்து, அதில் அதிவிடயம், இலவம் பிசின் சரியெடையாய்த தூள் செய்து சேர்த்துக் கலந்து குடிக்க, பெருங் கழிச்சலும் அதைக் சார்ந்த சுரமும் நீங்கும்.

"முடித்துக் கனத்த கருங்குழலாய
முத்தக் காசு மாம்பட்டை !
இடித்துப் பிட்டாய் சுட்டெடுத்து
இறுகப் பிழிந்திட் டதிவிடயம்
தடித்த விலவம் பிசினோடு
தகைமைப் பெறவே கொள் வீரேல்
துடித்து விருந்த வதிசாரம்
சுரத்தைப் போக்குஞ் சொன்னோமே.

#### வாந்தி—கழிச்சலுக்குக் குடிநீர்.

மாம்பட்டை, நெல்லிப்பட்டை, அரசம்பட்டை, பருத்திக்கொட்டை, பருத்தி பிஞ்சு, அத்திப்பட்டை, அத்தித்துளிர் வகைக்கு 4 கிராம் எடுத்து 2,800 மி.லி. தண்ணீர் விட்டு 350 மி.லி. ஆகக் காய்ச்சி, ஒரு சங்கு வீதம் தினமிருவேளை குழந்தைகட்குக் கொடுக்க, வாந்தி, கழிச்சல் ஆகியவை போம்.

"நெல்லுப் பட்டை மாம்பட்டை நிகழுமரசப் பட்டையுடன்
வெல்லும் பருத்தி யின்கொட்டை மேவும் பருத்தி யின்பிஞ்சும்
அல்லும் அத்திப்பட்டையொடு அதன்றன் துளிரும் வகைவகைக்குச்
சொல்லு வராக னெடையொன்று தூக்கிக் குறுணித் தண்ணீரே."
" தண்ணீ ரதனி லேபோட்டுத் தழலிற் காய்ச்சித் தானிறக்கி
வெண்ணீ ரண்டு வேளையிலும் மேவி யதனைப் பாலர்க்கு
எண்ணீர் வார்த்துக் கொடுத்திடவே எகும் வாந்திக் கழிச்சலுமே
பெண்ணீ ருலகில் தருமமுடன் பேணிச் செல்வீர் நலமாகும்.

அன்றியும் இதன் பட்டை, குழந்தைகட்குக் காணும் பித்த சோபைக்குச் செய்யும் எண்ணெயுடன் சேர்க்கப்படுகின்றது.

### மாம்பட்டைத் தைலம்

மாம்பட்டை 6800, கிராம் தண்ணீர் விட்டான் கிழங்கு 170 கிராம், நிலப்பனங் கிழங்கு 170 கிராம் இவற்றை இடித்துப் போட்டுக் குடிநீரிட்டுக் காய்ச்சி, அதற்கு நேர் எண்ணெய் கூட்டி எரித்து, பதத்தில் இறக்கி முழுவிவர, மேகம், வெள்ளை, காணுக்கடி ஆகியவை போம்.

மாந்தர்க் காகவே மாம்பட்டைத் தயிலமொன்று
ஆந்தப் பட்டை யிருநூற் பலமெடு
சாந்த நிலப்பனை சாற்றும் பலமைந்து
போர்ந்த மிட்டான் புகலச் சரிகூட்டே.
கூட்டிப் பாண்டங் குலாவி யிடித்துமே
மீட்டுங் கஷாய நிரையாகக் காய்ச்சிடு
பாட்டு மெண்ணெய் பகருஞ் சரியெடை
மூட்டிக் காய்ச்சி முதிர வடித்திடே.
வடித்த எண்ணெய் வளமாக மூழ்கிடு
நடித்த மேகம் நவிலும் பிரமியம்
கடித்த சில்விடங் காணு தொடுங்கிடும்
முடித்த தயில முறையும் பொய் யாதே.
மாமர வேர்ப்பட்டை.

### குடிநீர்.

மாமர வேர்ப்பட்டை, மாந்தளிர், நாவல்தளிர், புளியாரை, சிறுகுறிஞ்சான், நுணுவிலை, வாழைப்பூ—இவை வகைக்கு 6 கிராம் எடுத்து இடித்து, 2,800 மி.லி நீர் விட்டு 300 மிலியாகக் காய்ச்சி, அதில் வறுத்திடித்த அரிசித் திப்பிலித் தூள், பொரித்த வெங்காரத்தூள் வகைக்கு 1 கிராம் சேர்த்துக் குடித்தால், தாகமுடன் கூடிய கழிச்சல், நான்கு நாள் முறைச் சுரம் தீரும்.

மாவடியுந் துளிர்நாவற் கொழுந்துபுளி யாரை
வன்குறிஞ்சி நுணுவிலையு நறுவாழைப் பூவும்
தாவுவகைக் கோர்கழஞ்சு இருநாழி நீரில்
தகைமைபெற வுழக்காக்கித் தன்னை யுடனே
பூவின்வருந் திப்பிலியும் வெங்காரங் கூட்டிப்
பொருந்திநீர் மேற்பொடியும் புகழ்வாய்க்குட் கொள்ளத்
தாவிவருந் தாகமோ டதிசார சுரமும்
தன்னுன்கு நாள்மாற லுடனஞ்சி விடுமே.

மாவிலை அல்லது பட்டையிலிருந்து வரும் பாலை கால் வெடிப்புக்கு வழங்கலாம்.

### மாம்பிசின்.

மாமபிசினை கால் வெடிப்புக்கு வழங்கலாம். பட்டை பிசினை பழச் சாற்றோடு கலந்து தேமடல், படை முதலியவைகளுக்கும் போடலாம்.

## 154. Machikkai—மாசிக்காய்.

**Quercus infectoria**

**Eng. Magic Nuts, Oak galls.**

| | |
|---|---|
| **Tel.** Màchikkàya | **Sans.** Màchika. |
| **Mal.** Màsikkaya | **Hin.** Màzhuphal |
| **Kan.** Màchi-kayi | |

இது, கிரீஸ், ஆசியா மைனர், சிரியா முதல் பாரசீகம் வரையிலுமுள்ள நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்படுகிறது. இம்மரத்தின் கிளைகளில் ஒருவித பூச்சிகள் துளையிட, அதிலிருந்து வடிகிற பால் உருண்டு திரண்டு கட்டுப்படுவதே மாசிக்காயாகும். இது கருமை, நீலம், வெண்மை

என மூன்று வேறுபாடுகளுடையது. இதற்குள் அகப்படும் பூச்சிகள் வெளிப்படாததற்கு முன்னே எடுப்பது சிறந்ததாகும். அதிலுள்ள பூச்சிகள் வெளிப்பட்டபின் கிடைப்பது அவ்வளவு நன்றன்று.

ப-உ : காய்.

சுவை—துவர்ப்பு, தன்மை—தட்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை : { துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
குருதிப்போக்கடக்கி-ரக்தஸ்தம்பனகாரி-Styptic.
உரமாக்கி-பலகாரி-Tonic.

குணம் : இஃது அக்கரங்கள், நீங்காத உட்சூடு, குழந்தைகளின் கணச்சூடு, பலவகை மேகம் இவற்றைப் போக்கும் . உடற்கு வன்மை தரும்.

அக்கரங்கள் போக்கிவிடும் மாருத வெப்பகற்றும்
மெய்குறுதி மாசிக்காய் மென்மேலும்—தக்கதொரு
பாலர்கண நோய்போக்கும் பன்மேக முந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய் ! விளம்பு.

(அ.கு.)

வ- கு : மாசிக்காய்த்தூள் 34 கிராம், நீர் 700 மி.லி., இதைப் பத்து நிமிடம் வரை காய்ச்சி வடிகட்டி, அதில் 17—34 கிராம் வரையிலும் கொடுக்க மந்தம், பெருங்கழிச்சல், நாட்பட்ட கக்கிருமல், கறும்புள்ளி, வெட்டை, ஐயசுரம் இவைகள் போம்.

இக் குடிநீரையே அக்கரங்களுக்கு வாய் கொப்புளிக்கவும், புண்களைக் கழுவவும், வெள்ளை நோயில் நீர்த்தாரையிலே பீச்சவும், கழிச்சலுக்குப் பீச்சிடவும் செய்யலாம்.

மாசிக்காய்த்தூள் 20 கிராம், பொடித்த சாம்பிராணி 20 கிராம் எடை பன்றி நெய் 136 கிராம், சேர்த்துக் களிம்பு செய்தேனும். மேற்படி , களிம்பில் 6 கிராம் அபினி சேர்த்தேனும் எருவாய் முளைக்குப் பூ நன்மை தரும்.

இதைத் தூள் செய்து மூக்கில் குருதிவடிதலுக்கு மூக்குப் பொடியாகவும் இருமி குருதிக் கக்கல், குருதியோடிழியும் சிறுநீர், பெரும்பாடு, குருதி வாந்தி இவைகட்கு உள்மருந்தாகவும் பயன்படுத்திவர மேற்படி நோய்கள் நீங்கும். ஈறு, மூக்கு, இவ்விடங்களிலிருந்து வடியும் குருதியையும் நிறுத்தும்.

அளவு : தூள் - 325—650 மி.கி. தினம் 2 -3 வேளை.

---

குறிப்பு : மயில்துத்தம், மர உப்பு, பூ நீர்உப்பு, சுண்ணாம்புத் தண்ணீர், அபினி, நாவி, வாந்திஉப்பு இவைகளின் நஞ்சுக்கு இது ஒரு முறிப்பாகும்.

**மாசிக்காய் உப்பு—Tannic Acid.**

இது மாசிக்காயிலிருந்து எடுக்கும் ஒருவகை உப்பு. மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்துடன் துவர்ப்புள்ளதாயிருக்கும். அன்னபேதி சேர்ந்தால் கறுக்கும்.

செய்கை: } குருதிபோக்கடக்கி-ரக்தஸ்தம்பனகாரி-Styptic.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

அளவு : 65—98 மி.கி.

---

## 452. மாசிப்பச்சை—Machipatchai,

வே - பெ. : மாசிப்பத்திரி.

**Artemesia Indica.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Machi-patri | Sans. | Granthiparni |
| Mal. | Masi-pathri | | |
| Kan. | Macha-patri | Hind. | Majtari |

இஃது இந்தியாவிலுள்ள காடுகளிலும், ஆற்றங்கரை யோரங்களிலும் பயிராகும் ஒருவகைப் பூண்டு. இதற்கு ஒருவித மணம் உண்டு. இது சீமையினம், நாட்டினம் என இருவகைப்படும். இருவகைக்கும் பண்பு ஒன்றே. நாம் இங்கு கூறுவது நாட்டு இனம்.

ப- உ : பூண்டு.

சுவை : துவர்ப்பு, புளிப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பகற்றி-ஜவரஹரகாரி-Febrifuge
- பசித்தீத்தூண்டி-ஜட்ராக்னிவர்த்தநி-Stomachaic.
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic.
- புழுக்கொல்லி-கிருமிநாசநி-Anthelmintic.
- அழுகலகற்றி—தாதுக்ஷீணரோதி—Antiseptic.
- உரமாக்கி—பலகாரி-Tonic.

குணம்: இது வளிநோயையும், வெப்பத்தையும், ஐவகை வலியையும் போக்கும்.

புளிப்பும் துவர்ப்பும் பொருந்தியிருந் தாலுந்
தளிர்ந்த காலைக் கனலைச்சாடும்—நெளித்த
வலிதனைவிட் டோட்டுமட மாதே! நீ கேளாய்
வலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து.

அ. கு.

வ - கு : இதனிலைச்சாறு, இஞ்சிச் சாறு, சருக்கரை இவைகளைக்கலந்து தக்க அளவுடன் சாப்பிட, சூதகவலி, சூதகத்தடை, வயிற்றுவலி, குன்மம் நீங்கும்.

இலையை வதக்கி ஒற்றிடமிட வீக்கமும் வலியும் நீங்கும்.

இலைப் பொடியை தூவப் புண்கள் ஆறும்.

இலைச்சாறு ஓர் உச்சிக்கரண்டி அளவில், கோரோசனை 65 மி. இ. கலந்து கொடுக்க, மாந்தம் நீங்கும். பசியும்,முகத்தில் ஒளி யும் உண்டாகும்.

இலைச்சாற்றை உள்ளுக்குக் கொடுக்க, பூச்சிகள் விழும்.

இதன் சாற்றை உச்சியில் தேய்க்க, சுரநோய்களில் முப்பிணி பிறவாமல் தடுக்கும்.

தங்கத்தைச் செந்தூரிக்க, இஃது ஒரு சிறந்த பொருளாகும்.

இதனைச் சூடான காடியில் ஊறவைத்து அடிப்பட்டசிதைவு, வீக்கங்களுக்கு வைத்துக் கட்டலாம். கீராத்தலைவலி, கீல்வாயு முதலியவைகளுக்கும் ஒற்றிடமிடலாம்.

---

## மாதளை—Mathalai.

வே-பெ: தாடிமம், பீசபுரம், மாதுளங்கம், மாதுளம், மாதுளுங்கம் கழுமுள்.

**Eng.—Pomagranate. Punica granatum.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Danimma | Arab. | Rumaman |
| Mal. | Mathlam | Pers. | Gulmarn |
| Kan. | Dalimba | Hind. | Anar |
| Sans. | Shukhdana | Duk. | Darim |

இது, சிறு மரவகுப்பைச் சேர்ந்தது; முக்கியமாய் ஆப்கானிஸ்தானம், பெலுகிஸ்தானம், பாரசீகம் முதலிய இடங்களில் அளவு கடந்து வளருகின்றது; இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிரிடப்பட்டு வருகிறது. (இதில் இனிப்பு மாதளை, புளிப்பு மாதளை பூமாதளை என்று மூன்று வகுப்புகளுண்டு.)

ப-உ பூ, பிஞ்சு, பழம், விதை, பட்டை, வேர்.

பூ, பழத்தோல், பட்டை.

சுவை: துவர்ப்பு. தன்மை - தட்பம், பிரிவு - கார்ப்பு

பழம், விதை.

இனிப்பு. தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

பொது.

செய்கை:

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent

குருதிப்பெருக்கடக்கி - ரக்தஸ்தம்பனகாரி - Styptic.

பூ, பழத்தோல்.

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - Stomachic.

மரப்பட்டை வேர்பட்டை.

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

பழம்.

குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி - Refrigerant.

விதை.

துவர்ப்பி - ஸங்கோசனகாரி - Astringent.

புழுக்கொல்லி - க்ருமிநாசநி - Anthelmintic.

சாயமேற்றி - Toenifuge.

ஆண்மைபெருக்கி - Aphoridisiac.

பூ.

குணம்: இதனால், குருதி வாந்தி, வயிற்றுக்கடுப்பு, வெப்பம், குருதி மூலம் இவை போகும். இது குருதியைப் பெருக்கும்; வன்மையைத் தரும்.

வாந்திபித்த தோடமொடு மாறுக் கடுப்பனலஞ்
சேர்ந்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண்—மாந்தளிர்க்கை
மாதே! யிரத்தபுஷ்டி வல்லபலன் உண்டாக்கும்
பூதலத்துள் மாதுளையின்பூ. (அ.கு.)

### பிஞ்சு.

இதனால் கழிச்சல் வகைகள் யாவும் போம்.

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரும்—பலக்கழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம் பிஞ்சையுண்ண
ஆளும்கண் மாதே ! அறி. (அ.கு)

### பழம்.

மாதுளைக் கனியுண மதனகா மேசுரத்
சூதென வாயுளர் சொல்லுவர் மிக்கவே.

(பொ - ள்) மாதுளம் பழத்தைத் தினமும் புசித்துவரின், ஆண்மைப் பெருக்கு முதலியன உண்டாகும்.

இப்பழத்தினால், முப்பிணி, சுரத்தில் காண்கின்ற வாந்தி, நீர்வேட்கை இவைகள் போம். பிள்ளை உண்டாகாமற்படி செய்கின்ற சூலகநோயைப் போக்கும். அன்றியும் வாய் நீர் ஊறல், விக்கல், மந்தம், வெப்பத்தால் உண்டான காய்ச்சல், நெஞ்செரிவு, காதடைப்பு, மயக்கம் இவை போம். மேலும் உடல் குளிர்ச்சியடையும். மேற்கூறிய பண்புகளைப் பெறத் தானாகப் பழுத்து வெடித்த மாதுளையின் முத்துகளை எடுத்துத் துணியிலிட்டு பிசைந்து சாறெடுத்து வேண்டிய அளவு கற்கண்டு கூட்டி உடனே குடித்தல் வேண்டும்.

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சந்நியா சஞ்சர்த்தி
யங்கையதி தாகமமைச் சாருமோ—கங்கை
இருந்தாடி மக்கட் கிரத்தலைச்செய் நோய்போம்
இருந்தாடி மக்கனிகட் கெண்.

வாய்நீரூ றல்கசப்பு வாந்திவிக்கல் மந்தமிகக்
காய்வெப்பம் நெஞ்செரிவு காதடைப்பும்—ஓயா
மயக்கமுந் தீர்ந்துவிடும் மாதுளம் பழத்தால்
தயக்கமறத் தேமொழியே ! சாற்று.

வெடித்துவீழ் பழத்தை வாங்கி மெல்லிய சீலை கட்டி
கடுக்கெனப் பிழிந்து கொண்டு கண்டுசர்க் கரையுங் கூட்டிக்
குடித்திட வெப்பு மாறுங் குளிர்ந்திடும் அங்க மெல்லாம்
வடித்தநன் மொழியி னளே ! மாதுளம் பழத்தின்சாறே. (தே.கு.)

வ - கு : பூமொக்கை உலர்த்திப் பொடித்து—130 மி.கி. கொடுக்க இருமல் நீங்கும்.

### மாதுளம் பிஞ்சுக் குடிநீர்.

முகமா துளைப்பிஞ் சதிவிடயம் முத்தக் காசு பெருமரத்தோல்
தகைசேர் சுக்கு விளங்காயின் சதையோ ரொன்று கழஞ்சிரண்டு
வகையாய்க் கூட்டி யிருநாழி யுழக்காய்க் காய்ச்சிப் போதருந்த
பகையாய் வருமதிசாரசுரம் போகும் பாரிற் பாரீரே.

(பொ - ள்) மாதுளப்பிஞ்சு, அதிவிடயம், முத்தக்காசு, பெருமரத் தோல், சுக்கு, விளாங்காய்த்தசை இவை ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு கழஞ்சுகளெடுத்து ஒன்று சேர்த்து, இரண்டு நாழி நீர் விட்டு அதை உழக்காய்க் குறுக்கிக் குடிக்க, கழிச்சல் சுரம் பறந்து போகும்.

### மாதுளம் பிஞ்சு.

மேற்படி பொடியுடன், ஏலக்காய்த்தூள், கசகசாத்தூள், குங்கிலியத் தூள் ஓரெடை சேர்த்து, 65 மி.கி. அளவு தினமிருவேளை கொடுத்து வர, நாட்பட்ட பெருங்கழிச்சல், சீதக்கழிச்சல் இவை நீங்கும்.

பூவின் சாறும் அறுகம்புல்லியின் சாறும் ஓரனெடை சேர்த்துக்கொடுக்க மூக்கிலிருந்து குருதி வடிவது நீங்கும்.

மேற்கூறிய பூவையும் புல்லேயும் குடி நீரிட்டுப் பொரித்த வெங்காரம் சிறிதுகூட்டி, வாய் கொப்புளித்துவரத் தொண்டைநோய் நீங்கும்.

பூவை உலர்த்திச் சூரணித்து அதில் 4 கிராம் எடுத்து வேலம் பிசின் தூள் 4 கிராம் அபின் 195 மி.கி. சேர்த்து, வேளேக்கு 260—390 வீதம் கொடுத்துவர, சீதக்கழிச்சல், குருதி கழிச்சல், குருதி நீர், இரத்த மூலம் இவை நீங்கும்.

பிஞ்சைக் குடிநீரிட்டு, சீதபேதி, அதிசாரம் முதலியவைகளுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம்.

வ- கு: இதன் பழச்சாற்றில் கற்கண்டு சேர்த்து மணப்பாகு செய்து அருந்த, அழலேப் போக்கும்; குளிர்ச்சியை உண்டு பண்ணும். சுரம், அழலே, தாகம் இவை நீக்கும்.

பழச்சாற்றை இளேப்பு நோயினர்க்குக் கொடுக்க, மிகுந்த நன்மைதரும். குணத்தின் மேற் கண்ட நோய்களே விலக்கும்.

பழத்தோனுடன் சிறிது இலவங்கம், இலவங்கப்பட்டை நசுக்கிப்போட்டு முறைப்படி குடிநீரிட்டு 15—30 மி.லி. வீதம் தினம் 3—4 வேளே கொடுத்து வர, நாட்பட்ட சீதக்கழிச்சல்நீங்கும். பழத்தோல், மங்குஸ்தான் பழத்தோல், பாலேமரப்பட்டை வகைக்கு 40 கிராம் எடுத்து, 1400 மி.லி. நீர் விட்டு, முறைப்படி குடிநீரிட்டு அதில் 15—30 மி.லி. கொடுக்கலாம்.

மேலும் பலவிதக் கழிச்சல்களுக்கு துவர்ப்பு மருந்து வேண்டியதாயிருக்கும் போது இதைக் கொள்ளலாம்.

பழத்தோலே உலர்த்திப் பொடியாக்கி வழங்கலாம்.

பழத்தோல் பொடி 17 கிராம், வெள்ளேப்போளம் 17 கிராம், சீமைச் சுண்ணும்புத்தூள் (Prepared Chalk) 34 கிராம் சேர்த்துக் கலந்து பல் துலக்க, பல் வலிபோம்.

வேர்ப்பட்டை ஒரு பங்கு, நீர் இருபது பங்கு விட்டுச் சிறிது இலவங்கம் சேர்த்து, எட்டில் ஒன்ருக காய்ச்சிக் கொடுக்க, தட்டைப்புழு விழும். இதனே 15–30 மி.லி. வீதம் காலேயில் வெறும் வயிற்றில் இரண்டு மணிக்கொருதடவையாக ஆறுதடவை குடித்துக்கொண்டே வந்து, கடைசித் தடவையில் கழிச்சலே உண்டாக்கும் மருந்துகளேக் கொடுக்க, புழு வெளியாகும்.

மேற்படி குடிநீரைக் குழந்தைகளுக்குண்டாகும் இருமல்நோய், கண் நோய் பெரியவர்களுக்குண்டாகும் நாட்பட்ட சுரம், முறைச் சுரம், மண்ணீரல் தாபிதம் இவைகளாலுண்டாகும் குருதியழல் முதலிய நோய்களுக்கும் வழங்கலாம்.

**மாதுளங் குடிநீர்.**

மாதுளங் கட்ம்பு புன்கின் வாய்த்ததேவர் திப்பிலி யத்தித்
தீதறுங் கொழுந்து சுக்குதிரிபலேவி ரும்பிக் கூட்டி
நீதியா யிரண்டு நாழி நீருழக் காக்கிக் கொண்டால்
சூதிணே முலேயி னுளே சுரமதி சாரம் போமே.

(பொ - ள்) மாதுளம், கடம்பு, புன்கு இவற்றின் வேர்கள், திப்பிலி, அத்திக்கொழுந்து, சுக்கு, திரிபலே ஆகிய இவை ஒவ்வொன்றையும் ஒரே எடையில் சேர்த்து, 4 லிட். நீர் விட்டு அதை 1 லிட்டராகச் சுண்ட வைத்து அருந்தில், சுரக் கழிச்சல் தீரும். (தேரன்-நூறு)

மாதுளம் பட்டை.

பட்டைச்சாறு 17 கிராம் கொடுக்க, அது வயிற்றுப் புழுவைக் கொல்லும்.

விரை.

விதையானது, நீர்த்துப்போன வெண்ணீரை இறுக்கும்: வெள்ளையில் காணும் நீர் கடுப்பை நீக்கும். இவ்விதை, உடற்கு ஊட்டத்தையும் ஆண்மையையும் உண்டாக்கும் பல வித இலேகியங்களில் சேரும்.

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோ டம்போக்கும்
அக்கணமே கல்கடுப்பை ஆற்றுங்காண்—எக்காலுங்
கோதுளத்தெவ் வனுதமலர்க் கொம்பனைய மாதே! செம்
மாதுளத்தின் பீச வலி. (அ. கு.)

மாதுளைமரத்தின் வேர், பிஞ்சு.

மாதுளைவேர், பிஞ்சு இவைகளினுல், வாந்தி, அதிசாரம், நீங்கும். பழத்தினுல், தாது, ஆண்மை விருத்தியுண்டாகும். தாகம் போம். இலை, காய், மலர் இவைகளினுல் முற்கூறிய நோய்கள் யாவும் விலகும்.

மாதுளைவேர் பிஞ்சிவைக்கு வாந்தியதி சாரம்போம்
தாதுவுமாம் அக்கனிக்குத் தாகம்போம்—சூதைநிகர்
வன்னமுலை யாய்! இலைகாய் மாமலர்க ளுக்குமுனஞ்
சொன்னவையெலாம்போகுஞ் சொல். (அ. கு.)

## 454 மாவலிக்கிழங்கு— Mavalikkizhangu.

வே - பெ : பெருநன்னுரி, மாகாளிக்கிழங்கு.

இது நன்னுரி வகுப்பைச் சேர்ந்த காட்டினம்.

ப - உ : கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை—தட்பம், பிரிவு—இனிப்பு.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerent.
பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic. }

குணம். இஃது, உட்சூடு, தீக் குற்றப்பெருக்கு இவைகளை நீக்கும், பசித்தீயைத் தூண்டும். ஐயத்தை அறுக்கும். பசியை வளர்க்கும்.

அனலையதி பித்தத்தை யாற்றும் பசியாம்
அனலையெழுப் பும்கபம றுக்கும்—அனிலத்தாம்
வேகாளத் தைத்தணிக்கு மென்கொடியே! காடுவளர்
மாகாளிக் கந்தயிது வாம். (அ. கு.)

வ - கு : நன்னுரிக்குடையதே யாகும்.

---

## 455. மாவிலிங்கு—Mavilingu.

வே - பெ : மாவிலங்கு, குமாரகம், வரணி.

Crataeva religiosa.

Eng.—Three leaved caper.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Urumatti | Sans. | Pashugandha, Asmarighna |
| Mal. | Nirvala | | |
| Hindi. | Banan. | Hind. | Tapia, Bilas |
| Kan. | Narumbele | | |

இம்மரம் இந்தியாவின் பல இடங்களிலும் பயிராகின்றது. இலை. மூன்று பிரிவுகளை உடையது.

ப - உ : இலை, பட்டை, வேர்.

சுவை—கைப்பு, தன்மை -வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :

இலை.
பசித்தீத்தூண்டி-ஜடராக்கினிவர்த்தநி-Stomachic.
வெப்பகற்றி-ஜ்விரஹற்காரி-Febrifuge.
உரமாக்கி-பலகாரி-Tonic.

பட்டை, வேர்ப்பட்டை.
தடிப்புண்டாக்கி-ஷோணகாரி-Rubefacient.
மலமிளக்கி-மலகாரி-Laxative.
கற்கரைச்சி-பாஷாணபேததி-Lithontriptic.

பொது.

குணம் : இதனால், சுரமும், காணாக்கடி, பாம்புக்கடி, நஞ்சுகளும் தீராத வளி நோய்களும் போம்.

சுரங்கடியின் றேடந் தொலையாத வாதம்
உரம்பெறு விடங்க ளொழியும்—அரமுங்
கருமா வடுவயிலுங் கண்டஞ்சுங் கண்ணாய்
ஒருமாவி லிங்குக் குரை. (அ.கு.)

பட்டை.

அதனால், வளிநோய்கள், முப்பிணி, கல்லடைப்பு இவைகள் போகும்.

" மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சந்நிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே." (அ.கு.)

வ-கு : இலையைக் குடிநீரிட்டுக் குடிக்க, சுரம், செரியாமை போம்.

இலையை அரைத்துப் பற்றிட, வீக்கங் கரையும்.

இலைச்சாறும், தேங்காய்ப் பாலும் ஓர் அளவு கூட்டி, அதில் அரை 90 மி.லி. கொடுத்துவர, கைகால் முடக்கு நீங்கும்.

பச்சை இலையை, காடி, பழ இரசம் அல்லது வெந்நீரிலரைத்துப் பற்றிட, கொப்பளங்களெழும்பும்.

இலையை உலர்த்திப் பொடி செய்து புகைத்து, அப்புகையை மூகர மூக்கிலுண்டாகும் நோய்கள் நீங்கும்.

இலையை அரைத்து உள்ளங்காலில் பற்றிட, வளி, வீக்கம், எரிச்சல் நீங்கும்.

தனிப்பட்டைக் குடிநீராகிலும், பட்டை கலந்த எண்ணெயாகிலும், கொள்ளில் வளி நோயையும் முப்பிணியையும் போக்கும். குழந்தைகளுக்குண்டாகும் வலியும் மாந்தமும் மாயும். பட்டைக் குடிநீர், கல்லடைப்பு நோயை போக்கும். பட்டையைச் சிதைத்து அல்லது வெட்டி உட்புறமாக வைத்துக் கட்ட, கட்டிகள் கரையும்.

இதன் பட்டையை வட்டமாய் வெட்டி, அரையாப்புக் கட்டிமீது வைத்து அதன் மீது ஓர் ஈயத்தகட்டை வைத்துக் கட்ட, கட்டி அமுங்கிவிடும்.

பட்டையை நன்றாய் நசுக்கி, எருக்கம் இலையைத் தொன்னை தைத்து அதில் வைத்து, முப்பிணி கண்டவர்களுக்குத் தலையில் வைத்துக் கட்ட அது நீங்கும்.

பட்டை 170 கிராம், மூக்கிரட்டை 68 கிராம் எடுத்து, 1,400 மி.லிட்டர் நீர் விட்டு முறைப்படி குடிநீரிட்டு, அதில் 17—35 கிராம் கொடுத்திடில் புரையோடிய நாட்பட்டபுண்கள், விரை வீக்கங்கள் நீங்கும். சிலர் இதை வங்கம் நீறுமெனக் கூறுவர்.

## 456. மான்செவிக்கள்ளி—Manchevikkalli

இஃது இலைக்கள்ளி இனத்தைச் சேர்ந்தது.

ப-உ : இலை, பால்.

சுவை : கார்ப்பு, கைப்பு, தன்மை -வெப்பம், பிரிவு -கார்ப்பு

செய்கை :
- புண்ணழுக்ககற்றி—வரணசுத்திகாரி Detergent.
- நாற்றமகற்றி—பூதிகந்த்நாசநி—Deodorant.
- தூக்குணிப்புழுக்கொல்லி—கருமிநாசநி—Parasiticide.

குணம் : இதனால், ஆறாதபுண்கள், ஊணைப் பற்றிய கழலை, வறட்சி, படை, பொரிக்கிரந்தி, சொறி இவை நீங்கும். வயிறு கழியும்.

மான்செவிக்கள் ளிப்பாற்கு மாறு விரணங்கள்
என்கிளைக்கு நன்மலமி றங்குங்காண்—ஊன்சேர்
வரிகிரந்தி நீங்கா வறட்சிசொறி யோடு
பொரிகிரந்தி யும்போம் பொரிந்து. (அ.கு.)

வ-கு : இலையை அரைத்துப் பூச, படை, தேமல் முதலியன நீங்கும். இதை எண்ணெயில் காய்ச்சிப் பூசிவர, மேற்கூறியவை போம்.

## 457. மிளகரணை—Milakaranai

Toddalia aculeata,

| | | | |
|---|---|---|---|
| Tel. | Konda-Kashinda | Sans. | Kanchana |
| Mal. | Milakaranai | Hind. | Jangli-kali-mirch |
| Kan. | Kada-hakukare | | |

இஃது இந்தியா, சீனா முதலிய இடங்களில் வளர்ந்து வருகிற ஒரு வகைக் கொடி.

ப-உ : இலை, பட்டை, வேர்.

சுவை : துவர்ப்பு, தன்மை : தட்பம் ; பிரிவு : கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant
- உரமாக்கி—பலகாரி Tonic
- அகட்டுவாய்வகற்றி—உதாவாதஹரகாரி—Carminative.
- வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.
- முறைவெப்பகற்றி—முறைவயாதிரோதி—Antiperiodic.

குணம் : இது ஐயம், ஐயப்பெருக்கு, செரியாத வாயு, அகட்டுவாயு, அழல்சூலை, இருமல், இரைப்பு, வயிற்றுப்புசம் ஆகிய இவைகளை நீக்கும்.

ஐயம கற்றும் அசிரணவா தம்போக்குஞ்
செய்யபித்த சூலேகளேத் தீர்க்குங்காண்—பையவரும்
ஈளே இருமல் இரைப்புப்பு சந்தொலேக்கும்
நாளு மிளகரணே நன்று. (அ. கு.)

வ - கு : இலேயைப் பச்சையாக மென்று தின்ன, வயிற்றுநோய் போகும்.

இலேயைக் குடிநீரிட்டுக் குடிக்க, சுரந்தணியும்.

பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, முறைச்சுரம் நீங்கும். வியர்வை உண்டாகும்.

வேர்ப்பட்டை ஒன்றுக்கு, இருபது பங்கு நீர் விட்டு முறைப்படி குடிநீரிட்டுக் கொடுகக, சுரம்கழிச்சல் முதலியவைகள் நீங்கும்.

வேர்ப்பட்டையை இடித்து 87 கிராம் எடுத்துச் சாரயத்தில் ஏழு நாள் ஊறவைத்துப் பிழிந்து, வடிகட்டி எடுத்து 8-16 கிராம் கொடுத்து வர, மேல் கூறிய நோய்களேப் போக்கும்.

வேர்ப் பட்டையையும் கடுகுரோகணியும் குடி நீரிட்டுக் கொடுக்க இரைப்பிருமல் போம்.

வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வீக்கங்களுக்குப் பூசலாம்.

இதனுல் கல்நார் நீருகும்.

## 458. மிளகாய்—Milakai

வே: பெ: முளகாய்

Capsicum annum

Eng.—Red Pepper of Chillies.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mirapakaya | Sans. | Katuvira |
| Mal. | Vathal-Milaka | Duk. | Laul-Mirch |
| Kan. | (Kempu) Menasinkai | Hind. | Gachmirich |

இச்செடி இந்தியாவிலெங்கும் பயிரிடப்பட்டு வருகின்றது

ம - உ : பழம்.

சுவை : கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- நமைச்சலுண்டாக்கி-Irritant.
- தமரக வெப்பமுண்டாக்கி—ஹ்ருதயஉஷ்ணகாரி—Cordiac Stimulant.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி-Stomachic.
- உரமாக்கி பலகாரி—Tonic.

குணம : இதன் பழத்தை மிகுதியாகக் கொள்ளின் குருதிப் போக்கும், மூல முளேயும், எருவாய்க்கடுப்பும், உண்டாகும். அளவோடு கொள்ளின மாந்தம், சுவையின்மை, வயிற்றுநோய், வயிற்றை இழுத்துப் பிடித்தல், வயிற்றுப்பூசம் நீங்கும். ஆண்மை பெருகுமென்பர்.

மூல விரத்த முளேககடுப்பும் உண்டாகுந்
தாலமதில் தாது தழைக்குமென்பர்—ஆலமெனும்
மந்தம் அரோசிகுன்மம் வாய்வும் பொருமலும்போம்.
உந்துமிள காய்ப்பழத்தால் ஒது. (அ.கு.)

வ - கு : மிளகாயைக் குடிநீர் செய்து 2, 3 வேளை கொடுக்க, மார்பு நோய், வயிற்று நோய், செரியாமை, கழிச்சல், சுரத்தில் காண்கிற வாந்தி ஆகியவைகள் நீங்கும்.

இதை அரைத்துத் துணியில் தடவி தோலின் மேல் போட்டு வைக்க, கொப்புளித்து வீக்கம் கரையும். தொண்டைக்கு வேளியிற்பூச, தொண்டைக்குள் எழும்பும் கட்டிகள் உடையும்.

முதுகு, பிடரி முதலிய இடங்களிலுண்டாகும் நாட்பட்டவலி, வீக்கங்களுக்கு இதைப் பூண்டு மிளகோடு சேர்த்தரைத்து எண்ணெயில் குழைத்துப் பூச, நோய் நீங்கும்.

இதன் பொடியுடன், சருக்கரை, பிசின்தூள் சேர்த்து உருண்டை செய்து வாயிலிட்டுச் சுவைக்க, தொண்டைக் கம்மல் நீங்கும்.

இதைக் குடிநீர் செய்து, இஞ்சிச்சாறு சேர்த்துத் தக்க அளவு கொடுக்க வயிற்று உப்புசம், வயிற்றுவலி நீங்கும்.

இத்துடன் பெருங்காயம், கர்ப்பூரம் சேர்த்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து, சிறு சுண்டை அளவு மாத்திரை செய்து ஊழி நோய்க்குக் கொடுக்கலாம்.

இதன் செடியுடன் இலவங்கப்பட்டை, சருக்கரை சேர்த்து குடிநீரிட்டுக் கொடுக்க, குடிவெறியின் பற்று நீங்கும்.

---

## 495. சீமை மிளகாய்—Chimai Milaga

வே: பெ: காந்தாரி, சீனி (ஊசி) மிளகாய்.

Capsicum .

Eng.—Guinea pepper or Malabari.
Mai. Kanthari Milaku

இது இந்தியாவின் வெப்ப நாடுகளில் பயிரிடப்பட்டு வருகின்றது மலபார் திருவிதாங்கூர் இந்நாடுகளில் வளருகின்றது

வ - உ : காய்.

சுவை : கொடிய கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- பசித்தீத்தூண்டி – ஜடராக்னிவர்த்தநி— Stomachic.
- உரமாக்கி—பலகாரி— Tonic.
- ஆண்மைப்பெருக்கி – காமவர்த்தநி· Aphrodisiac
- தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.

குணம் : இதனால் செரியாமை, செரியாக் கழிச்சல், மார்புநோய் முதலியவை நீங்கும். கீல்வாதம், சூதகவலி முதலியவைகளும் சுகமாகும்.

வ - கு : இதன் பொடி 8 கிராம், மீன் கொழுப்பு 4கிராம், ஈசத்தூன் எண்ணெய் 34 கிராம் சேர்த்துக் கலக்கிக் குளிர வைத்து மேலுக்குப் பூச, கீல்வாயு முதலிய நோய்கள் விலகும்.

மிளகாய்த்தூள் 51 கிராம், 850 கிராம் சாராயத்தில் இரண்டு நாள் ஊறவைத்து, நன்றாய் வடிகட்டி அதில், 10 அல்லது 30 துளி, நீர் கலந்து குடிக்க, இது மேற்கூறிய நோய்களைப் போக்கும்.

---

## 460. மிளகு—Milagu.

வே: பெ: கலினை, கறி, காயம், கோளகம், திரங்கல், மிரியல், சருமபந்தம், வல்லிசம், மரீசம், குறுமிளகு, மலையாளி

**Piper nigrum,**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Miriyalu | San. | Maricha |
| Mal. | Kurumulaku | Hind. | Kali-mirch |
| Kan. | Menasu | Pers. | Filfliaisiah |

இது, தென்னிந்தியாவில் மலையாளம், கொச்சி, குடகு, மைசூர் முதலிய மலைநாடுகளில் பயிராகும் ஒருவகைக் கொடி; இது மரங்களைச் சுற்றி ஏறி அடர்த்தியாய் வளரும். இதன் பழத்துக்கு மிளகு என்பது பெயர். இதன் பழம் பழுத்த தோல் உதிர்ந்தால் அது வெள்ளை மிளகு எனக்கூறுவர். ஆயினும், வெள்ளை மிளகு இக்கொடியைச் சேர்ந்ததன்று.

ப - உ : விதை, கொடி.

சுவை : கைப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- காறலுண்டாக்கி—Acrid.
- அகட்டுவாய்வகற்றி - உதரவாதஹரகாரி—Carminatvei
- முறைவெப்பகற்றி - முறைவியாதிரோதி—Antiperiodic
- தடிப்புண்டாக்கி சோணகாரி Rubefacicnt.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—stimulant.
- வீக்கங்கரைச்சி—Resolvent,
- வாதமடக்கி—வாதஹரகாரி—Antivata

நச்சினி - Anti dote.

பச்சை மிளகு

A green variety of Pepper.

குணம்: இது உளிநோய்களையும் சீழ்மூலத்தையும் நீக்கும்.

உளவையுருக்காரம் அடைந்திருக்கும் வாத
விளைவையேல் ஓமறுக்கும் மெய்யே—மிளகின்காய்
கண்டவர்க்கும் இன்பமாம் கார்கையே! சீழ்மூலம்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு.

(அ.கு.)

## பழம் (மிளகு).

இதனால், குளிர்சுரம், பாண்டு, கோழை, கழிச்சல், குன்மம், வாயு, சுவையின்மை, வெறி, மூலம், சந்நியாசம், அபஸ்மாரம், பிரமேகம், இருமல் பங்குவாதம், குய்யரோகம், சோணிதவாதம், களநோய், செவிவலி, இரத்தகுன்மம், செரியாமை, காமாலை இவை போகும்.

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாதம் அருசிபித்தம் மாமூலம்—ஓதுசந்நி
யாச்மபஸ் மாரம் அடன்மேகம் காசமிவை
நாசங் கறிமிளகினால். (அ.கு)
கோணுகின்ற பங்கவலி குய்யவுரோ கம்வாத
சோணிதங்க ழுத்திற்குள் தோன்றுநோய்—காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீர்
ஏதுநோய் காயிருக்கில் ஈங்கு. (தோ.கு.)

### மிளகின் பெருமை.

தியாகி யெங்கும் திரியுமதை யாவத்து
மோயாம லெப்படியு முண்டாக்காற்—பாயாது
போந்திமிர்வா தங்கிரந்தி புண்ணீரும் மண்ணவர்க்கும்
காந்திமெய்வா தச்சலுப்பைக் காய்.

மிளகு, வளி தீ, கபக்குற்றங்கள் இவை அனைத்தையும் நீக்கும். அன்றியும், திமிர்வாதம், கழலை, வளி, சளி இவைகளையும் அகற்றும். (தேரன் வெண்பா.)

வ-கு : இதன் இலை, தழுதாழையிலை, நொச்சியிலை இவைகளைச் சேர்த்துக் கொதிக்கவைத்த நீரை, கீலவீக்கம், வலி, அடிப்பட்டவீக்கம் முதலியவைகளின் மீது விட்டு ஒற்றிடமிட அவை நீங்கும்.

மிளகினிலை, நொச்சிக்கொழுந்து, முதிர்ந்த மிளகாயிலை, இலவங்கம், வெற்றிலை அல்லது துளசியிலை இவைகளை ஓரெடை எடுத்து அரைத்ததை ஒரு கழற்சிக்காய் அளவு காலை மாலை கொடுத்துவர, முறைச்சுரம் நீங்கும்

மிளகுத்தூள் 260—390 மி. கி. கொடுக்க பசியைத் தூண்டும்; வெப்பத்தை உண்டுபண்ணி மனவெழுச்சியை உண்டாக்கும்.

இதன் தூளை குவைனவுடன் சேர்த்து வழங்க முறைச்சுரம் நீங்கும்.

மிளகுத்தூள் 51 கிராம், நீர் 700 மி. லி. விட்டு அரைமணி நேரம் காய்ச்சி வடிகட்டி, அதில் 30—60 மி. கி. வீதம், தினம் 2, 3 தரம் கொடுத்து வர, தொண்டைக்கம்மல், தொண்டைப்புண் இவைகள் நீங்குவதுந்தவிர, வயிற்றைச் சேர்ந்த நோய்களும் நீங்கும்.

I. மிளகுத்தைலம் : தைலவருக்கச் சுருக்கத்தில் இதன் முறையைக் காண்க. இத் தைலத்தினால், நாட்பட்ட வளிநோய்கள், தலை பளுவு, செவிடுபோம். தெளிவு உண்டாம்.

II. மிளகுத்தைலம் : ஷை நூலில் இரண்டாவது முறை. இத் தைலத்தை ஒரு கிராம் உட்கொள்ள அல்லது தினந்தினமும் உடலில் தடவிப்பிடிக்க, அல்லது வாரத்துக் கொருமுறை தலைமுழுகி வர, சோபை, பாண்டு, இருமல், நீர்க்கோவை, தலைவலி, பல வகைத்தினவு, வளிநோய், சுரம் முதலிய நோய்கள் போம்.

மிளகு, பெருங்காயம், அபினி வகைக்கு 2 கிராம் எடுத்து, செவ்வையாக அரைத்து 12 மாத்திரைகள் செய்து, அதில் ஒரு மணிக்கொரு முறை ஒரு மாத்திரை கொடுத்துவர, வாந்திபேதி நீங்கும்.

மிளகுத்தூள் 51 கிராம், தேக்குவிதைத்தூள் 68 கிராம் கசகசா 17 கிராம், தேன், 272 கிராம், ஓமம் 17 கிராம், இவற்றைச் சேர்த்தரைத்தும் ஒரு கழற்சி அளவு தினம் இருவேளை, மூல அடித்தள்ளலுக்கும் கொடுத்துவரலாம்.

இது, பற்பொடி செய்வதற்குரிய பொருள்களில் ஒரு முக்கிய சரக்காகக் கருதப்படுகின்றது.

முக்கடுக்கில் இஃதும் ஒன்று.

மிளகுத்தூள் 10 கிராம், எருக்கம்வேர் 18 கிராம் எடுத்து, பனை வெல்லம் தகுந்த அளவு சேர்த்தரைத்து, தினையளவு மாத்திரை செய்து, ஒரு மாத்திரை தினம் இருவேளை சாப்பிட்டுவர, கொருக்கு நோய் குணமாகும்.

மிளகுத்தூள், வெங்காயம், உப்பு இவைகளைச் சேர்த்தரைத்துத் தலை யில் காணும் புழுவெட்டுக்குப் பூச, மயிர் முளைக்கும்.

மிளகு, சுக்கு, திப்பிலி, பெருஞ்சீரகம் பாறைஉப்பு இவைகள் ஓர் அளவாகச் சேர்த்துப் பொடி செய்து 2-4 கிராம் உணவிற்குப்பின் வாயிலிட்டு மென்று விழுங்க, செரிப்பைப் பிறப்பித்து வயிற்று நோயையும் போக்கும்.

மிளகு 51 கிராம் பெருஞ்சீரகம் 68 கிராம், தேன் 340 கிராம் சேர்த்து இலேகியமாக்கி, கழற்சிக்காய் அளவு தினமிருவேளை சாப்பிட்டுவர, முதியோருக்கும் மெலிந்தோருக்கும் உண்டாகின்ற மூலநோய் தணியும்.

## வெள்ளை மிளகு Vellai milagu.

**Pimentat**

**Eng.—White pepper.**

**Sans. Sitha-maricha** **Pers. Filfilai-sufeed**

இது, காடுகளில் வளரும் ஒரு வகை மரத்தினின்று கிடைக்கும் பழத்தின் கொட்டையேயாம். ஒவ்வொரு பழத்திலும் இரண்டு கொட்டைகள் உண்டு. பழம் சிவந்த நிறமாயும், விதைகள் வெண்மை நிறமாயும் இருக்கும்.

ப-உ : விதை

சுவை- கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-**Carminative.**

குணம் : இதனால் நாட்பட்ட கழிச்சல், ஐயவளி சுரம், சுரம், மேகம் இவை போகும். பசி உண்டாகும்.

வெள்ளை மிளகருந்த வீறு கிரகணிபோம்
தள்ளு கபவாதந் தானேகும்—உள்ள
சுரம்போகுந் தீபனமாம் தொல்மேகம் போமித்
திரம்பார் எவர்களுக்குஞ் செப்பு. (அ-கு.)

வ-கு, மிளகைப்போலவே இதையும் வழங்கலாம்.

## வால்மிளகு—Valmilagu.

**Eng.—Tail-pepper ; cubebs.**

| | |
|---|---|
| **Tel** Tokamiriyalu | **Sans.** Lankesaha. |
| **Mal.** Val-milaka | **Arab.** Kababah. |
| **Kan.** Gandha menasu | **Pers.** Hab-el-arus. |
| | **Hind.** Kabab-Chini. |

இது, ஜாவா சுமத்திரா முதலிய தீவுகளில் வளருகின்ற ஒரு வகை அடர்த்தியான மரமேறும் கொடி. நன்ருய் முதிராத காய்கள் உலர வைத்து எடுத்துக்கொள்ளப்படுகிறது. இக்காய்களின் காம்புகள் சேர்ந்து ஒட்டி வால்போலிருப்பதால், இது வால்மிளகு எனப்பெயர் பெற்றது. தோல் சுருங்கிக் கறுத்து, உள்ளே வெளுத்து எண்ணெய்ப்பசை உள்ள தாயும், காரமும் விறுவிறுப்பும் பொருந்தி நறுமணம் பெற்றதாயு மிருக்கும். இஃது இந்தியாவில் கடைகளில் கிடைக்கும்.

**ப-உ :** (உலர்ந்த) முதிராத காய்.

**சுவை :** கார்ப்பு, விறுவிறுப்பு, **தன்மை**-வெப்பம், **பிரிவு—கார்ப்பு.**

**செய்கை**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**Stimulant.**
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகாரி-**Carminative.**
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தகநி-**Diuretic.**
- கோழையகற்றி-கபஹரகாரி-**Expectorant.**

**குணம் :** இதனல், வளி, தீ, ஐயக்குற்றங்களும், குன்மம், நீர்வேட்கை, வெள்ளை முதலியனவும் போகும். பசி உண்டாகும்.

வாதபித்த ஐயம் வயிற்று வலிதாகஞ்
சீதம் பலநோய் சிதையுங்காண்—போத
அதிதீ பனமாம் அணங்கரசே ! நாளுந்
துதிவால் மிளகருந்தச் சொல்.

(அ.கு.)

**வ-கு :** வால்மிளகுத் தூள், வெடியுப்பு வகைக்கு 260 மி. கி. எடுத்துக் கலந்து, வெள்ளைக்குக் கொடுக்கலாம்.

2 கிராம் வால்மிளகுத் தூளை, 130 மி. கி. படிகாரத்துடன் சேர்த்துத் தினம் மூன்று வேளை கொடுத்துவர, நாட்பட்ட வெட்டை, வெள்ளை முதலியன தீரும்.

வால்மிளகுத்தூள், 260 மி. கி., கருவாப்பட்டைக் குடிநீர் 42 கிராம் இரண்டையும் கலந்து தினம் 3 வேளை கொடுத்துவர, இருமல் சளி நீங்கும்.

260 மி. கி. வால்மிளகுப் பொடியைப் பாலில் கலந்து குடிக்க, தொண்டைக் கம்மல் நீங்கிக் குரல் தெளியும்.

வால்மிளகைப் பன்னீரில் அரைத்துத் தலைவலிக்குப் போடலாம்.

வால்மிளகு, அதிமதுரம், திப்பிலி, சிற்றரத்தை, கடுக்காய் இவைகளின் தூள் ஒரு எடை எடுத்துக் கலந்து, அதற்கு 15 மடங்கு நீர் விட்டுக் காய்ச்சி, நாலில் ஒன்ருய்க் குறுக்கி வேளைக்கு 30—60 மி. லி. தினம் நாலு வேளை கொடுத்துவர, இருமல் நீங்கும்.

வால்மிளகு எண்ணெய் 4 கிராம், குங்கிலியத் தைலம் 12 கிராம்; பிசின் 8 கிராம் சேர்த்துக் கலந்து, இவற்றுடன் கற்பூரத் திராவகம் 204 கிராம் சேர்த்து, வேளைக்கு 34 கிராம் வீதம், தினம் 3 முறை கொடுக்க, பிரமேகம், கர்ப்பமேகம், நாட்பட்ட மேகவெட்டை இவைகள் சுகமாகும்.

வால்மிளகு எண்ணெய் 136 கிராம் வெள்ளை குங்கிலியம் 136 கிராம் பறங்கிச் சக்கைத்தூள் 139 கிராம் கூட்டி இவற்றை நீர்முள்ளிச் சாறு விட்டு அரைத்துச் சுண்டை அளவு உருட்டி, வேளைக்கு இரண்டு மூன்று மாத்திரை காலை மாலை கொடுக்க, நீர்க் கடுப்பு, நீரடைப்பு வெள்ளை இவை போம்.

## 463. முசற்காதிலை—Musarkathilai.

### Ludwigia parviflora.

இது, நீர்க்கசிவுள்ள இடங்களில் வளரும் ஒருவகைச் சிறு கொடி. இந்த இலை முயலின் காதைப் போன்றிருப்பதால் இப்பெயர் பெற்றது.

ப. உ : இலை.

சுவை : துவர்ப்பு, கைப்பு, தன்மை-வெப்பம, பிரிவு-கார்ப்பு.

செய்கை வீக்கமுறுக்கி சோபநாசனி—Deobtrunt

சோபாநாசனி—Deobstruent.

பண்பு : இதனால், குடலண்ட வீக்கமும், கைகால்களின் கீல்களைப்பற்றிய வீக்கமும் நீங்கும்.

பீசத்தெழுந்த பெருவீக்கங் கைகாலில்
வீசிப்பு டைத்தவெறு வீக்கமும்—பேசாமல்
ஏகு முயற்கா திலையிருக்கும் ஊரைவிட்டுப்
பாகு மொழிமாதே ! பார். (அ.கு.)

வ-கு : இதனிலையை மிளகுடன் சேர்த்தரைத்துக் கழற்சிக்காய் அளவு சுக்கு நீரில் கலந்து மூன்று நாள் சாப்பிட, வளி நோய் நீங்கும்.

இதை அரைத்து மேற்கூறிய வீக்கங்களுக்குப் பற்றிட வீக்கம் நீங்கும்.

## 464. முசுட்டை—Musuttai

வே-பெ பஞ்சி.

### Ipomoea candicans.

இஃது ஒரு வகைக் கொடி, தென்னிந்தியாவிலெங்கும் கிடைக்கக் கூடியது.

ப-உ : கொடி.

சுவை : கைப்பு, கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை { நுட்புழுக் கொல்லி-கிருமிநாசநி--Germicide.
வாதமடக்கி-வாதஹரகாரி-Anti vata.
மலமிளக்கி-மலகாரி-Laxative. }

பண்பு : இது, வளி, ஐயக்குற்றப்பெருக்கு, வெள்ளை, நீர்த்தினவு, புடை, சிறுசிரங்கு இவைகளை நீக்கும், வெள்க்குப் போகச் செய்யும்.

மாதே ! முசுட்டையது வாதமொடு ஐயத்தைத்
திதே புரிநீரைத் தீர்க்குங்காண்—வேதனைசெய்
வன்மலத்தைத் தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்கிவிடுஞ் சாற்று.

(அ.கு.)

வ-கு : கொடியைக் குடிநீரிட்டாவது அல்லது பொடி செய்து இதர மருந்துகளுடன் சேர்த்தாவது கொடுக்க, இது மேற்கூறிய நோய்களைப் போக்கும், நீர்த் தாரையின் எரிச்சலைப் போக்கும்.

இதை அரைத்து எண்ணெய்விட்டுக் காய்ச்சி, சொறி, சிரங்கு, நமைச்சல் முதலியவைகட்குப் பூசிவர, அவை போம்.

## 465. முசுமுசுக்கை—Musumuskkai.

வே - பெ : அயிலேயம், இருகுரங்கின்கை, மொசுமொசுக்கை.

Mukia scavrilla

| | |
|---|---|
| Tel. Musumusukaya | Duk. Musmusa. |
| Hindi. Bilavi. | Mar. Chitrati |
| Govila-Kakri. | |

இ:-து இந்தியாவில் எங்கும் பயிராகும் ஒரு வகைக் கொடி.

ப-உ : இலை, வேர்.

சுவை : துவர்ப்பு, கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : கோழையகற்றி—கபரஹரகாரி—Expectorant.
துவர்ப்பி—ஸங்கோஸனகாரி—Astringent.

இலை

குணம் : இதனால் இருமல், கோழை, இரைப்பு, நெஞ்சிற் புகைக் கம்மல், மூக்கில் நீர்ப்பாய்தல் இவை நீங்கும்.

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்த்தோடம் மாறுந்—திருவுடைய
மானே ! முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான். (அ.கு.)

வேர்.

இது, தீநாற்றத்துடன் இறுகிய கோழை, ஆண்மையின்மை, மந்தம் வாந்தி, மார்புநோய், குன்மம், அழல் இவைகளை நீக்கும்.

கந்தம் பரவு களிச்சளியும் புன்விடமு
மந்தம் பெறுவிடமும் வாந்திகளும்—அந்தம்
பெருகுரங்குக் கிச்சூடும் பித்தமுமி ருக்கா
திருகுரங்குக் கைவேருக் கே. (அ.கு.)

வ-கு : இலை இரசத்தில் சிறிது கோரோசனை சேர்த்துக் கொடுக்க, மேற் கூறிய நோய்களைப் போக்கும்.

ஊறவைத்த புழுங்கலரிசியுடன், இவ்விலையையும் சேர்த்து அரைத்து, சிறிது உப்பு கூட்டி அடை சுட்டுக் கொடுத்து வர, கோழைக்கட்டு, இருமல், ஈளை, நீங்கும்.

வேரை உலர்த்திப் பொடியாக்கி அல்லது குடிநீரிட்டுக்கொடுக்க, வாந்தி, மார்புநோய் முதலியன நீங்கும்.

## முடக்கற்றான்—Mudakkatran

வே:-பெ. முடர்குற்றான், முடக்கறுத்தான்.

Cardiospermum halicacabum Linn.

Fam : Sapindaceae.

Eng : Ballon-Vine ; Heart Pea or Winter Cherry.

| | |
|---|---|
| Tel. Budda-boosara | Sans. Karnasphota |
| Mal. Ulinja | „ Jyotishmati |
| Kan. Kànakai | „ Mariavi. |
| | Hind. Kanphata |

இப்பூண்டு, இந்தியா முழுவதும் பயிராகின்றதெனினும், சென்னை வங்காளம், இலங்கை முதலிய இடங்களில் மிகுதியாய் வளருகின்றது ப-உ : இலை, வேர்.

சுவை : துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை :
- சிறுநீர்ப் பெருக்கி—மூத்ரவாத்தநி—Diuretic.
- மலமிளக்கி—மலகாரி—Laxative.
- பசித் த்தூண்டி—ஜடக்னிவர்த்திநி—Stomachic.
- உரமாக்கி—வ்யதாபேதகாரி—Alterative.
- தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.
- வாதமடக்கி—Antivatha.

குணம் : இதனால், கீல், சிலைப்பு, கிரந்தி, கரப்பான் காலவடியைப் பற்றிய வளி, ஆகிய போகும், வெளிக்குப் போகச் செய்யும்.

சூலைப் பிடிப்பு சொரி சிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவாய்வுங் கன்மலமும்—சாலக்
கடக்கத்தா னோடிவிடுங் காசினியை விட்டு
முடக்கற்றான் றன்னை மொழி.

(அ-கு.)

வ-கு. : இலை, வேர் முதலியவைகளைக் குடி நீரிட்டு, வளி மூலம், நாட்பட்ட இருமல் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலைப் பொடியுடன், சித்திரமூல வேர்ப்பட்டைப் பொடி, கரியபோளம் இவை சேர்த்து மூன்று நாள் கொடுக்க, சூதகக்கட்டு நீங்கும்.

இலைகளை வதக்கி அடிவயிற்றில் கட்டச் சூதகத்தை மிகுதிப்படுத்தி சூலக அழுக்குகளை வெளிப்படுத்தும்.

இலையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, அவ்வெண்ணெயை வலிகளுக்குப் பூசலாம்.

இலைச்சாற்றைக் காதில் விட காது வலி, சீழ் வடிதல் நீங்கும். வேர்க்குடி நீர், மூல நோய்க்குக் கொடுக்கலாம். கொடியின் குடி நீருடன் ஆமணக்கெண்ணெய் கூட்டிக்கொடுக்க கழியும்.

முந்திரி.

முந்திரிகை விரை மொழிந்தவா மைவிரை
விந்திரி யமைத்தினை யிடைவிடா தளிக்குமே. (தே. கா.)

## 467. முந்திரி —Mundthri

வே-பெ : கொட்டைமுந்திரிமா கொல்லம்மா

Anacardium occidentale

Eng: Cashew nut tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Mumta-mamadi (chettu) | Sans. | shophakara |
| Mal. | Paranki.mava | Hind. | Kaju |
| Kan. | Jidi | Pers. | Bodomi-pharangi |

இஃது ஒரு சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. இந்தியாவின் வெப்ப நாடுகளில் வராளமாக வளருகின்றது. முக்கியமாகத் தென்னிந்தியாவில் கடற்கரையை அடுத்த மணற்பாங்கான நிலங்களில் பயிராகும்.

ப-உ: பழம், விதை, பட்டை.

சுவை:
பழம், விதை.
இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.
பட்டை
துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
பழம்
சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்நி—Diutretic
வப்பமுண்டாககி-உஷ்ணகாரி—Stimulan
விதை
உரமாக்கி-பலகாரி—Tonic
காமம் பெருக்கி-காமவர்த்தநி—Aphrodisiac
படடை
துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent

முந்திரிகை விரை மொழிந்தவா துமைவிரை
யிந்திர யவமத்தின பிடை விடாத ளிக்குமே.

(பொ-ள்.): முந்திரிப் பருப்பும், வாதுமைப் பருப்பும் விந்துவைப் பெருக்குவதல்லாமல், ஐம்புலன்கட்கும் நன்மை பயக்கும்.

பருப்பு.

பண்பு: இதைத் தின்றால், பித்தச் சூட்டையும், ஆண்மைப் பெருக்கையும், மந்தத்தையும் உண்டாக்கும்.

மெத்தவினிப் பாகுமது மென்கொடியே தின்றக்கால்
பித்த வனிலம் பிறக்குமென்பார்—எத்தலத்தும்
இந்திரியப் புஷ்டி யிளிக்காது மாந்தமுண்டாம்
முந்திரியின் நற்பருப்பை முன். (அ.கு.)

வ-கு: பழத்தைப் பலர் தின்பர். இதில் ஒரு வகைக்காறலும் இனிப்பும் கலந்த நீர் மிகுந்திருக்கும்.

இவ்விரசத்தை வடித்துச் சாராயம் காய்ச்சுவதுண்டு. இச்சாராயத்தைத் தக்க அளவாய் உட்கொள்ளின், சிறுநீரைப் பெருக்கும். வெப்பத்தை உண்டு பண்ணும்.

இதன் கொட்டைப்பருப்பு மிகவும் சுவையானது. இதனால் ஆண்மை உண்டாகும். ஆனால் பசி மந்தப்படும். ஆகையால், பசித்தீயைத் தூண்டக் கூடிய இதரசரக்குகளுடன் இதைச் சேர்த்து உண்பது நலம்.

கொட்டையின் மேல் ஓட்டிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் காரமுடையது. இது மேலுக்குத் தடவமட்டும் வழங்கப்படுகிறது.

இத்தைலத்தின் வாடை பட்டால், கறையான் முதலிய பூச்சிகள் சாகும். இது தோலைச் சிவக்கச் செய்து எரிச்சலைத் தருவதும் தவிர, கொப்புளத்தையும் உண்டாக்கும்.

இதன் எண்ணெயைப் பூச வெடிப்புப் புண் நீங்கும்.

பலவகை மருக்கள், பாலுண்ணி முதலிய குருக்கள், புடைகள் முதலியன இவ்வெண்ணெயால் நீங்கும்.

பருப்பினின்றும் ஒருவகை எண்ணெய், எடுக்கின்றனர். இவ்வெண்ணெயை உள்ளுக்குக் கொடுக்க இது நஞ்சைப் போக்கும். அன்றியும் புண்களை ஆற்றும்.

வேர்ப்பட்டையைக் குடிநீர் செய்து, நீரிழிவு நோய்க்குக் கொடுக்கலாம்.

---

## 462. முருங்கை—Murungai

வே. பெ. சிக்குரு கிரஞ்சனம், கிழவி சோபாஞ்சனம்.

Moringa pterygosperma,

Eng. Horse radish ; Drum-stick tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Munaga | Kam. | Nugge-gida |
| Hindi. | Satrinjin-ka-phul | Sans. | Sigru Sigru-Valkalum |
| Mal. | Murinna | Hind. | Sahijna. |

இம்மரம், இமயமலை அடியிலுள்ள காடுகளில் தானுகவே வளருகின்றது ; இந்தியா, பர்மா, இலங்கை, முதலிய இடங்களில் பயிரிடப்பட்டு வருகின்றது. இதில் காட்டுமுருங்கை (Hedysarum Senneicles), கொடி முருங்கை (புனல்), (Indigofera arcuata), தவசுமுருங்கை (Justicia Iranquebar) எனப் பல வகைகளுண்டு.

ப- உ : எல்லாப் பாகங்களும்.

சுவை - கைப்பு, துவர்ப்பு, இனிப்பு தன்மை - தட்பம். பிரிவு - (காய்) இனிப்பு (பட்டை, வேர்) கார்ப்பு.

செய்கை :

பொது.
இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodie.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—St mulant.
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
சிறுநீர்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretie.

பூ.
உரமாக்கி—பலகாரி—Tonic.
சூதகமுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.

பட்டை.
கருப்பச்சிதைச்சி—கர்ப்பநாசநி—Abortifacient.

பச்சை வேர்.
காரமுண்டாக்கி—Acrid.
கொப்புளமெழுப்பி—த்வக்ஸ்போட்காரி—Vosiceant.
கற்றுகளாக்கி—பாஷாணபேதி—Antilithic.

இலை.

குணம் : இரைனல், மிக்க மந்தம், உட்சூடு, தலைநோய், வெறிநோய் மூர்ச்சை, கணநோய், ஆகிய இவை நீங்கும்.

செறிமந்தம் வெப்பந் தெறிக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகும்—மறமே
நெருங்கையிலை யொத்தவிழி நேரிழையே! நல்ல
முருங்கை யிலையை மொழி. (அ,கு.)

பூ.

இதனால், தீக்குற்றமும், சுவையின்மையும் நீங்கும், கண் குளிர்ச்சியும் உண்டாம். (சுக்கிலம்) வெண்ணீர் பெருகும்.

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகும்
அழிவிந் துவும்புஷ்டி யாகும்—எழிலார்
ஒருங்கையக லாககற் புடைவா ணகையே!
முருங்கையின் பூவை மொழி. (அ.கு.)

முருங்கை.

தவசியி னதண்மறித் தயிரினி லுண்டிட
வவசிய மெலிகடி யறுமிது நிச்சயம். (தே.கா.)

பொ-ள்: தவசி முருங்கைப்பட்டையை அரைத்து, வெள்ளாட்டுத் தயிரிற் கலந்து உட்கொள்ள, எலிக்கடியின் நஞ்சு நீங்கும்.

பிஞ்சு.

இதன் பூப்பிஞ்சைச் சமைத்து தோலுடனுண்ணில், என்புச்சுரம், எலும்பை உருக்குகின்ற வெப்பம், சுவையினமை, வெண்ணீரின்மை (தாதுநட்டம்) இவைகள் நீங்கும்.

சிக்குருக்கு யப்பிஞ்சத் திச்சுரத்திற் குஞ்சநிக்கும்
அக்குருக்கு ருப்பம் அரோசிகட்குஞ்—சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவற்கு மாமதனைப்
பச்சை யுறவருந்திப் பார். (தே.கு.)

முருங்கை.

முருங்கைக் காய்க்கறி முகிளிலை வேர் கொள
வொருங்குள நோயெலா மோடவுந் துறத்தும். (தே.கா.)

(பொ-ள்) முருங்கைக்காய், முருங்கை இலை இவற்றை உணவாகவும் முருங்கைவேரை மருந்தாகவும் முறையுடன் உட்கொள்ள, அவை உடலிற்கு வன்மைதந்து எல்லா நோய்களையும் போக்கும்.

காய்.

நூலில் கூறும் பல பிணிக்கும் ஒவ்வியதாயும், பத்தியக்கறியாயும் இரா நின்ற முருங்கைக் காயால் ஐயம் நீங்கும்.

சொல்லும் பிணியெல்லாந் தோல்வியாம் மையறும்
பல்லுயிர்க்குந் தாதுமிகும் பத்தியமாம்—வில்லார்
பெருங்கைக்கா மன்றுதிக்கும் பெண்ணே! நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி. (அ.கு.)

விதை, ஈர்க்கு.

வித்தினால், நீர்த்துப்போன வெண்ணீர் பிசின் போலாகும். உடல்வலுக்கும். இதன் இலையும், ஈர்க்கும் நீரைப் பெருக்கும்; வயிறு கொட்டும்.

நீரான விந்துவுமோ நீண்டபிசி னைத்தடிக்குஞ்
சீராகமேனி செழிக்குங்காண்—பாராயீ
முருங்கை விதையதனால் மொய்த்தயிலை ஈர்க்கோ
ஒருங்கையுற நீரிறக்கும் உன். (அ.கு.)

### பட்டை.

இதன் வேர்ப்பட்டையினுல்; ஐயமும் முப்பிணியும், மரப்பட்டையினுல் வளிக்குற்றமும், சில நஞ்சுகளும் நீங்கும்.

முருங்கைவேர்ப் பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குறுச் சந்நிகரம் ஓடும்—அருங்கனக,
வட்டைப் பொருடிலேயாய் ! வாய்வொடுவி டங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து. (அ.கு.)

### பிசின்.

இது மிகுதியாகப்போகும் சிறுநீரையும், மோரைப்போல ஒழுகுகின்ற வெண்ணீரையும், வளிநோய்களேயும் நீக்கும். வெண்ணீரை இறுக்கி அழகை உண்டாக்கும்.

முந்துநீ ரைத்தடுக்கும் மோரைப்போ லேயொழுகும்
விந்துவைத்த டிப்பித்து மேனிதருந்—தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரிய முருங்கைப் பிசின். (அ.கு.

### சமூலம்.

இதன் சிறிய பிஞ்சால் முக்குற்றம் நீங்கும். பூவால், ஆண்மையும் வன்மையும், கண்ணுக்குக் குளிர்ச்சியும் உண்டாகும். இலை சுரத்தையும் பட்டை நஞ்சையும், வேர் வளிப் பெருக்கையும் நீக்கும்.

பிஞ்சால் திரிதோடம் பெரும்பூ வால்போகம்
உஞ்சுவிழிக் குக்குளிர்ச்சி யுஞ்சேரும்—விஞ்சிலைவெப்
பாற்றுந்தோல் நஞ்சறுக்கும் அவ்வேர்வா தச்சினத்தை
யாற்று முருங்கையி னது. (அ.கு.)

### காட்டு முருங்கைச் சமூலம்.

கைப்புள்ள காட்டு முருங்கை வேர் பெரும் நஞ்சை நீக்கும்; பூகண்ணுக்குக் குளிர்ச்சி தரும்; இலை-காய் - பிசின் - பிஞ்சு இவை, ஐயநோய்களை நீக்கும்.

தின்றுற் கசப்பாகுந் தீயாங் கொடுவிடத்தைக்
கொன்றுவிடுங் கட்குங் குளிர்ச்சிதரும்—என்றுமையம்
ஓட்டும்வேர் பூவிலைகாய் உற்றபிசி னும்பிஞ்சுங்
காட்டுப் புன்முருங்கை காண். (அ.கு.)

### நாருங்கை

**வ - கு :** இதன் இலையோடு, இரண்டு திரிப் பூண்டு, ஒரு துண்டுமஞ்சள், உப்பு, மிளகு இவ்வகைகளைச் சேர்த்தரைத்து, நாய்க்கடி நஞ்சை முறிக்க, உள்ளுக்குக் கொடுத்து, அதனையே புண்ணின் மீதும் பற்றிட, புண் ஆறி, நஞ்சு நீங்கும்.

இலை இரசத்தைக் கண்ணில் விட, வலிகள் போம். இதைத் தேனுடன் சேர்த்துக் கண்ணிமைகளில் தேய்க்கலாம்.

இலைச் சாற்றுடன் சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க, சிறுநீர் பெருகும்.

இலையும் மிளகும் சேர்த்து, நசுக்கிச் சாறெடுத்துத் தலைவலிக்கு நெற்றியில் தடவலாம்.

இலைச் சாற்றை 36 கிராம் எடையாகக் கொடுக்க, நன்றாய் வாந்தியாகும்

இலையை அரைத்து வீக்கங்களின்மீது பற்றிடலாம்.

இதன் ஈர்க்கு, கருவேப்பிலை, ஈர்க்கு இவைகளைச் சேர்த்துக் குடிநீர் செய்து வயிற்றுவலி முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு. இது வயிற்றுப் புழுக்களைப் போக்கும்.

பூவை இலேகியங்களில் சேர்த்து, உடல் வன்மைக்காகவும், ஆண்மைக் காகவும் வழங்குவதுண்டு.

இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, பண்பின் கீழ்க்கண்ட நோய்களை நீக்கி நற்பயனைத் தரும்.

பூவைக் காடியில் ஊறவைத்து ஊருகாய்போல் வழங்குவதுண்டு.

பூவிலிருந்து பிஞ்சு தோன்றியவுடன் எடுத்து, சமையல் பண்ணித் தோலுடன சாப்பிட்டுவர, மிகுந்த வெப்பத்தைத் தணித்து ஆண்மையை உண்டு பண்ணும்.

காயைச் சமையல் செய்து சாப்பிடுவதுண்டு. பத்தியக் கறிகளிலும் இஃது ஒன்றாகும்.

விதையிலிருந்து ஒரு வகை எண்ணெய் எடுக்கிறார்கள். இவ்வெண் ணெய் வலியை நீக்கும்.

இதன் விதை,கடுகு, சணல்விதை, பார்லி ஆகிய இவற்றை ஓர் அளவு. எடுத்துத் தயிர் விட்டு அரைத்து, கண்டமாலையின் மீது பூசி வர, நற் பயனைத் தரும்.

விதை, இலேகியங்களில் துணைச் சரக்காகச் சேர்க்கப்படுகின்றது. மிகவும் நீர்த்துப்போன வெண்ணீரை கெட்டிப்படுத்தும்.

மரப்பட்டைச் சாறு அநேக எண்ணெய்களில் சேர்வதுண்டு.

பட்டையைச் சிதைத்து, வீக்கங்கள் கட்டிகள் இவற்றின்மீது வைத்துக் கட்டுவதுண்டு.

பட்டைச் சாறு, குப்பைமேனிச் சாறு, இவ்விரண்டையும் சேர்த்து, எண் ணெய் விட்டுக் காய்ச்சி, கரப்பான், சொறி, சிரங்குகளின்மீது தடவ அவை நீங்கும்.

பட்டைச் சாறு சில உலோகங்களைப் பற்பமாக்கும்.

பிசினை எண்ணெயில் கரைத்துக் காதில் விடக் காதுப் புண் ஆறும்.

பாலிற் கரைத்துப் கன்னப்பொறியில் பூச, தலைவலி நீங்கும். இதை நெறிக்கட்டிக்கும் பூசலாம்.

**முருங்கைக் கிழங்குக் குடிநீர்.**

முருங்கைக் கிழங்கு கொடிக்கழன்வேர் முதுசா றடைவேர் வெள்ளுள்ளி
நெருங்கற்றாழை வசம்புடனே நெருப்பில் மிகுந்த கொடிவேலி
யொருங்கத் தேய்ந்த பெருங்காய முடனே காய்ச்சிக் கொள்வீரேல்
பெருங்கைச் சூழ்ந்த நோய்களும்போய் வயிற்று வலியும் வாராதே.

(பொ - ள்) முருங்கைக் கிழங்கு, கழற்சிவேர், சாட்டரணைவேர், வெள் ளுள்ளி, கற்றாழை, வசம்பு, சித்திரமூலம், பெருங்காயம் இவற்றை ஒரே அளவில் சேர்த்து, குடிநீரிட்டுக் குடித்துவரில், வயிற்றுவலியும், இன்னும் சில நோய்களும் சாரா தொழியும்.

வேரின் சாற்றுடன் பால் சேர்த்துத் தக்க அளவாகச் சாப்பிட, விக்கல், இரைப்பு, கீல்வாயு, உள்ளுறுப்புகளின் வீக்கம், முதுகுவலி முதலியவை நீங்கும்.

வேரை அரைத்துக் கடுகுத் தூள் சேர்த்துப் பற்றிடலாம்.

## 469. முலாம்—Mulam,

வே - பெ : குமட்டி.

Citruiias vulgaris.

Eng.—Wat^r Melon

| | |
|---|---|
| Tel. Darbijo | Sans. Kuttoorumbi |
| Mal. Mandeki | Per. Azab Belikh Zichi |
| Kan. Tharbooza | Hind. Jamanka |

இஃது இந்தியா முழுதும்வபயிரிடப்படும் ஒருவகைக் கொடி.

இலைகள் பெரிதாகும் காய்கள பெரிதாகவும் பச்சை அல்லது வெண் மஞ்சள் நிறமாகவும், வெடித்தமிருககும் இது வெள்ளிரி இனத்தைச் சேர்ந்தது.

ப - உ : பழம், வி ஊத

சுவை : இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

**பழம்.**

செய்கை :
குளிர்ச்சியண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.
உள்ளபூலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
சிறுநீ ப்பெருக்கி-மூத்ரவர்த்தநீ-Diuretic.
உட லுரமாக்கி-போஷணகாரி-Nutritive.

குணம் : இதனல், பல்வீழல், உடல் வன்மையும் ஒளியும் குறைதல் உண்டாகும். அன்றியும் இது வளிக்குற்றத்தையும் ஐயக்குற்றத்தையும் பெருக்கும்.

தந்தம் விழுந்திடுமே தாது மெலிந்திடுமே
விந்தைமிகுங் காந்தி விலகிடுமே—சந்ததமும்
வாதம் மிகுந்திடுமே வந்துகபஞ் சேர்ந்திடுமே
ஓதுகுமட் டிக்காயால் உன். (அ.கு.)

வ- கு.: இதன் காயைத் தின்ருல் மேற்கூறிய தோடங்கள் உண்டாகும்.

பழம் மிகவும் சுவையானது ; நீர் வேட்கையைப் போக்கும்.

சாற்ருேடு சருக்கரை கலந்து உட்கொள்ள, வெள்ளையில்காணும் நீர் எரிச்சலைத் தணிக்கும்.

விதையை உடைத்துப் பருப்பைத் உலர்த்தி உடல் வன்மைக்கான மருந்துகளுடன் சேர்த்து வழங்கலாம். இது புழுவைக் கொல்லும்.

---

## 470. முள்ளங்கி—Mullongi.

வே - பெ முள்ளாங்கி, மூலபம்.

Raphanus vulgaris.

| | |
|---|---|
| Tel. Darbujo | San. Kuttoowmbi |
| Mal. Mandeki | Arab. Belikh-zichi |
| Kan. Tharbooza | Hind. Jamanka |

இஃது, இந்தியாவில் எல்லாவிடங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது. இதில் வெள்ளை சிவப்பு மஞ்சள் என மூன்று வகை உண்டு. ஆனால் பண்பு ஒன்றேயாகும்.

ப - உ : இலை, கிழங்கு, விதை.

இலை - கிழங்கு.

சுவை—கார்ப்பு, தன்மை- வெப்பம், பிரிவு - கார்ப்பு.

விதை.

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு- இனிப்பு.

செய்கை :
- ஆண்மைப்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- மலமிளக்கி-மலகாரி-Laxative.
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- பசித்தீத்தூண்டி-ஜடாரக்னிவர்த்தநி Stomachi.

இலை.

குணம் : இதனால், வளிக்குற்றமும் தீக்குற்றமும் பெருகும். வயிற்றுப் புழு, மார்பெரிச்சல் இவைகள் உண்டாகும். வயிற்றுநோய், குன்மம் அடங்கும்.

வாயுமிகும் பித்தம் வளருங் கிருமியுமாம்
ஓய்வுறு நெஞ்செரிவும உண்டாங்காண்—தூயநிற
முள்ளாங்கி யின்இலையை முற்றுமுண்டாற் குன்மவலி
யுளளாங் கிளம்பா துரை. (அ.கு.)

விதை

இது விந்து நட்டத்தைப் போக்கும்.

காமாலை முளளங்கிக் காழால்வித் தாஞ்—சடைவித்
தோமாலை யுள்ளடக்குஞ் சொல். (அ - கு.)

கிழங்கு.

இதனால்' வளி நோய்' கரப்பான், வயிற்றெரிச்சல். குத்தல் குடல் புருமன், இருமல், ஐய நோய், தலைவலி, நீரேற்றம், பல நோய், பல் சிலந்தி, குன்மம். இரைப்பு, மூலக்கடுப்பு இவை போம்.

வாதங் கரப்பான் வயிற்றெரிவு சூலைகுடல்
வாதங்கா சமையம் வன்தலைநோய்—மோதுநீர்க்
கோவைபன்னோய் பல்சிலநதி குன்மமிரைப் புக்கடுப்புஞ்
சாவுமுள்ளங் கிக்கந்தத் தால். (அ.கு.)

வ - கு : முள்ளங்கி நட்டு இரண்டு மூன்று இலைகள் வந்த உடன், அவ்விலைகளில் ஒரு பிடி எடுத்து 2-4 கிராம் சோற்றுப்புச்சேர்த்து,: காலை - மாலை இரு வேளையும் சாப்பிட்டு வர, வெள்ளை யினால் உண்டாகும் நீரடைப்பு நீங்கும். வெளிக்குப்போம்.

இலையைச் சமைத்து தின்பது நாட்டு வழக்கம்.

கிழங்கை நசுக்கிச் சாறு பிழிந்து, 34-100 கிராம் வரையிலும் குடித்துவர, சிறுநீரை நன்றாய்ப் போக்கும்.

கிழங்கைச் சமைத்துண்பது நாட்டு வழக்கம். சிலர் பச்சையாகத் தின்பதும் உண்டு. சுவையின்மையை நீக்கிப் பசியை உண்டுபண்ணும். உணவைச் செரிப்பிக்கும்.

விதையைக் குடிநீரிட்டுக் குடிக்க, மேற்கூறிய பண்புகளைத் தரும்.

## 471. முன்னை—Munnai

வே - பெ : அரணி, வைசயந்தி.

Premna integrifolia,

| | |
|---|---|
| Tel. Ghechi-nelli | Sans. Agnimanthà |
| Mal. Appel | |
| Kan. Takkile | Hind. Agetha |

இது, சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. இந்தியா இலங்கை முதலிய இடங்களில் வளருகின்றது. இதில் எருமை முன்னை (Premna Magsorensis) காட்டுமுன்னை (Croton), பேய்முன்னை ( Celtis Orientali) பசுமுன்னை என பல வகைகள் உண்டு. பசுமுன்னையே பெரும்பாலும் மருந்தாகக் கொள்ளப்படினும் இதற்கும், மற்ற வகைகளுக்கும் செய்கை யும் குணமும் ஏறக்குறைய ஒன்றுபட்டேயிருக்கும்.

ப - உ : இலை, வேர்.

சுவை : துவர்ப்பு, கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomchic.
- அகட்டுவாய்வகற்றி—உதாவாதஹரகாரி—Carminative.
- உடற்றேற்றி—வயதாபேதகாரி—Altarative.
- உரமாக்கி—பலகாரி—Tonic.

### இலை.

குணம் : இலையினால், சுவையின்மை, வீக்கம், கபம், கரப்பான் இவை உண்டாகும். வலிக்குற்றமும், அழல் மந்தமும், மயக்கமும் போம்.

வாயருசி சோபையை மாருக் கரப்பனெழும்
வாயுமந் தாக்கினிம யக்கமென்ற—நோய்கள்
அறுமுன்னை யுன்னுவர்கட் காழி யுலகில்
நறுமுன்னை தன்னிலையை நாடு. (அ-கு.)

### சமூலம்.

முன்னைவேர் வளி, எப்பத்தைப் போக்கும். இலை, உணவைச் செலுத் துவதுந் தவிர, எண்பது வளி நோய்களையும் விலக்கும்.

முன்னைவேர் வாதம் முதிரேப்பந் தான்போக்கும்
அன்னமி றக்கும் அதனிலைதான்—சொன்ன
இயல்வாதம் எண்பதையும் இல்லையெனச் செய்யும்
கயல்பொருவுங் கண்ணாய் ! கருது.

வ - கு : இலையை முறைபடிக் குடிநீரிட்டு 15—30 மி.லி. தினம் இரு வேளை கொடுத்துவர, மேற்கூறிய குணங்களைத் தரும்.

வேரையும் மேற்கூறியபடி குடிநீரிட்டுக் கொடுக்கலாம். இதனால், வளி. எப்பம், வெள்ளை நீங்கும்.

## 472. மூக்கிரட்டை—Mukki-rattai

வே - பெ : புட்பகம், மூக்குறட்டை, இரத்தபுட்பிகா.

Boerhaavia diffusa,

| | |
|---|---|
| Tel. Atika-mamidi | Hind. Gadha-purna |
| Mal. Thavizhama | Duk. Thikri-kà-jhar |
| Kan. Sanadika | Sans. Punarnava |

குறிப்பு—K. M. Nadkarni அவர்கள் இயற்றிய Indian Materia Medicaவிலும், Lieut. Colorel. K. R. Kirtikar, F.L.S. I.M.S-. Major B. D. Bhsu, I.M.S. & I.C.S., இவர்களால் இயற்றிய Indian Medical Plants என்கிற ஒரு நூலிலும், மூக்கிரட்டைக்கு "புனர்நவம்" என்கிற வடமொழிப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. "புனர்நவம்" என்பது, வசத்திச்சாரணையைக் குறிக்கும்.

இஃது இந்தியா முற்றிலுமுள்ள பாழ் வெளிகளிலும், நன்செய் - புன் செய் நிலங்களிலும், புறகளடர்ந்துள்ள விடங்களிலும் படரும் கொடி பூண்டு இனத்தைச் சேர்ந்தது. இதில் இரண்டு பிரிவுண்டு. ஒன்றின் இலை சிறிதாகவும், மற்றென்றின் இலை பெரிதாகவும் இருக்கும். இதற்கு மூக் கரைச்சாரணை எனவும் பெயர் (Boerharia Repens).

இது இந்தியாவில் எங்கும் சாதாரணமாக வளர்கிறது.

ப - உ : செடி, வேர்.

சுவை : கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- கோழையகற்றி—கடஹரகாரி—Expectorant.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்தவர்த்தநி—Diuretic.
- மலமிளக்கி—மலகாரி—Laxative.
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
- வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic (in larger doses).

பண்பு : ஐயம், நமைச்சல், வளிப்பிணி இவைகளை நீக்கும். அழகை யும், கழிச்சலையும், அழல் பிணியையும் உண்டாக்கும்.

சீத மகற்றுந் தினவடக்குங் காந்திதரும்
வாத வினையை மடிக்குங்காண்—பேதி
கொடுக்குமதை உண்டாக்காற் கோமளமே! பித்தம்
அடுக்குமே மூக்குறட்டையாய்.

(அ - கு.)

மூக்கிரட்டை.

மூக்கிரட்டையினிலை முறையுண வாத நோ
யாக்கையிற் பெட்டி யரவென் வடங்குமே. (தேரன் - வெண்பா.)

(பொ - ள்.) மூக்கிரட்டை இலையை உணவு முறையாக வேனும், மருத் துவ முறையாகவேனும் புசித்துவர, உடலிலுள்ள வளி நோய்கள் ஒன் றுந் தலைகாட்டாது, அவை பெட்டியிற் பாம்பு போல அடங்கிவிடும்.

கோணத் தடைவாதக் கொட்டானை மாறவினைக்
கோணத் தடை முழுதுங் கொள்ளட்டுக்—கோணத்தையட்டி

(பொ - ள்) மூக்கில் வரக்கூடிய வளி நோயின் கெடுதிகளெல்லாம் விலக வேண்டின், மூக்கிரட்டைக் கீரையின் சமூலத்தைப் பாகஞ் செய்து ஒரு மண்டலம் புசித்தல் வேண்டும்.

### இலை.

வ - கு : இதன் இலையைக் கறிசெய்து சாப்பிடுவது நமது நாட்டு வழக்கம். இதனால் மலச்சிக்கல் நீங்கும் ; உடல் காந்திபெறும்.

### வேர்.

இதன் வேர்க்குடி நீரை, கீல்வாதத்திற்கும், இரைப்பு நோய்க்கும் கொடுக்கலாம். இது காமாலை, நீர்க்கட்டு, பெருவயிறு, சோபை இவைகளுக்கும் பயன்படும்.

சிற்றுமணக்கெண்ணெயில் இதன் வேரைச் சிதைத்துப் போட்டுக்காய்ச்சி வடிகட்டி, தக்க அளவில் கொடுக்க, கழிச்சல் உண்டாகும். இதனால் நமைச்சல், வளிநோய் தணியும்.

இதன் வேர்ப் பொடியில் சற்றேறக்குறைய 2—4 கிராம் எடையாவது இதன் வேர்க்குடி நீரையாவது கொடுக்க வாந்தியை உண்டாக்கும். கழியவும் செய்யவும்.

குறிப்பு : மூக்கிரட்டைக்கும், வெள்ளைச் சாரணைக்கும் வேற்றுமை அறியாதார், தாம் எழுதிய நூல்களிலும், அகராதிகளிலும் இரண்டும் ஒன்றே என்று எழுதியிருப்பதால், ஒன்றின் குணத்தை மற்றொன்றின் மீது ஏற்றியிருப்பதைக் காணலாம். இரண்டின் குணமும் சற்றேக்குறைய ஒன்று பட்டிருப்பினும், இவ்விரண்டும் ஒன்றின் பெயரே என்று சாதித்தல் கூடாது. இவை படர் கொடி வகுப்பைச் சேர்ந்திருப்பினும், இலை, பூ, தண்டு, காய், நிறம் முதலிய தன்மைகளில் வேறுபட்டேயிருக்கும்.

## 473. மூங்கில்—Mungkil.

வே - பெ : அமை, அரி, ஆம்பல், ஓங்கல், கண், கனை, கழை, காம்பு, கேகம், கிளை, சந்தி, தட்டை, திகிரி, துளை, தூம்பு, நேமி, பணை, பாதிரி, புறக்காழ், முடங்கல், முந்நாழ், மூளை, வஞ்சம், வரை, விண்டு, வெதிர், வேரல், வேய், வேல், வேணு, வேழம்.

**Bambusa arundinaceae,**

**Eng.—Bamboo.**

| | |
|---|---|
| Tel. Veduru | Sans. Vamsa |
| Mal. Mula | |
| Kan. Biduru | Hind. Bhàns |

இது, தென்னிந்தியாவின் காடுகளில் தானாக வளருகின்றது, இதை வட-கீழ் இந்தியாவில் பயிரிட்டு வளர்த்து வருகின்றார்கள். மூங்கிலில் பல வகைகளுண்டு. மூங்கில் பாஷாணம், மூங்கிலுப்பு முதலியவை இதனின்றும் உண்டாகிறது. ஒன்பது மணிகளி லொன்றாகிய முத்துப் பிறக்கு மிடங்களில் இதுவுமொன்றாகும். மூங்கிலில், முப்பது, வருடங்களுக்கொரு முறை பூத்துக் காய்க்குமென்று கண்டறியப்பட்டிருக்கின்றது. இதன் அரிசியை, ஏழை ம ள் வேறு உணவின்றிப் பசியால் வருந்துங்காலை, சமைத்துச் சாப்பிடுவது வழக்கம். ஆகவே, இதற்குப் பஞ்சங்காக்கும் அரிசி எனக் கூறுவதுமுண்டு.

மூங்கிலின் ஒவ்வொரு பகுதியும் மக்களுக்குப் பயன்படுவதாகும். இதன் இளங் குருத்தை, சீனர்களும் ஜப்பானியர்களும் தின்கிறார்கள். காடு மலைகளில் வாழும் மக்கள், மூங்கில் குருத்தையும் அரிசியையு. உணவாகவும், மூங்கிலைச் சீவி, கத்தி, வில் முதலியவைகளாகவும் கையாளுகின்றனர்.

ப-உ : இலை, கணு, வேர், உப்பு, விதை.

சுவை-துவர்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை

இலை

ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenagogue.
புழுக்கொல்லி—க்ருமிந்நாசநி—Anthelmintic.

பொது

வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
துவர்ப்பி—ஸங்கோஷனகாரி—Astringent.
உரமாக்கி—பலகாரி—Tonic.
இசிவகற்றி—அங்காகர்ஷணநாசிநி—Antispasmodic.
காமம்பெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac.

இலை

குணம் : இதனால் குடற்சூலையும், வயிற்றுநோவும், உடலின் குருதித் தடிப்பும், பிள்ளை பெற்றபின் சூலகத்தில் அழுக்கும் போகும்

குடற்கட்டுச் சூலையுடன் குன்மம் உதிரம்
உடற்கெட்டா தோடி யொழியும்—அடற்றங்கு
வேல்விழிமா தேகேளாய் !வேயின் இலைதனக்குக்
கால்வழியுஞ் சோணிதம் போங் காண். (தே-கு.)

விதை. (அரிசி).

பாயசம் முதலானவை செய்வதற்கான மூங்கிலரிசி, குருதியழல் நோய், இடைவிடா சுரம், கண் நோய் இவைகளை நீக்கும்.

உதிரபித் தந்தீர்க்கும் ஓங்குசுரத் திற்கும்
அதிரவரு கண்ணோ யதற்கும்—புதிதாய்க்
கஞ்சிசெய்ய லாகுங் கருதிற்சிற் றுண்டியுமாஞ்
செஞ்சிலம்பார் மூங்கில் அரிசி. (அ-கு.)

மரம்.

இதனால், சூதகக்கட்டு, சுரம், வளிநோய், இரைப்பு இவைகள் போம்.

சூதக வாய்வினது சோணிதந்தங் காதவரு
மாதே ! சுரந்தணியும் வாதம்போம்பூ—பூதரமேல்
ஓங்கி வளர்ந்திழையு மோங்கலெனு மூங்கிலுக்கு
வாங்குஞ்சு வாசம்போம் வாழ்த்து. (அ-கு.)

பாய்.

மூங்கிற்பாய்க்கு, நீரெரிச்சல், இரிச்சுரம், அழல்நோய் ஆகிய இவைகள் பெருகும்.

நீர்கடுப்பு மெத்தவுறு நீடுபித்த மும்பெருகும்
ஆர்க்கும் அனலம் அதிகரிக்கும்—பார்க்குளுறை
யோங்கி னறியமுகைக் கொங்கை மலர்த்திருவே!
மூங்கிலின் பாய்க்கு மொழி (அ-கு.

வ-கு: மூங்கிலின் இளமுளைகளை நசுக்கிப் பிழிந்துச் சாறெடுத்து, அழுகல் புண்களுக்குப் பூசி, பின்னர் அதைச் சிதைத்து வைத்துக் கட்ட அப்புண்களிலுள்ள பூச்சிகள் வெளியேறிவிடும். புண்ணும் ஆறும்.

இளங்குருத்துக்களை 1-க்கு 20 நீர் விட்டுக் குடிநீரிட்டுக் கொடுக்க சூதகக்கட்டு, வெள்ளை இவை நீங்கும். மேலும், சுரம், குட்டம், குழந்தைகளின் வயிற்றிலுள்ள சிறு புழுக்கள் ஆகியவை போகும்.

முளைகளை ஊறுகாய் செய்து உண்ண, பசியை உண்டுபண்ணி செரியாமையைப் போக்கும்.

எலும்பு முறிவுக்குச் சிறு மூங்கிலைப் பத்தைகளாக வைத்துக் கட்டலாம்.

இளங்குருத்திலைகளை, மிளகு, உப்பு சேர்த்துக் கன்று காலிகளுக்குக் கொடுக்க, அவைகட்கு நேரிடும் கழிச்சல் நீங்கும்.

இளங்கணுக்களைக் குடிநீரிட்டு, குருத்துக்களுக்குப் பதிலாக வழங்கலாம்.

**மூங்கிலுப்பு.**

இது மூங்கில் கணுக்களில் தங்கி நிற்கும். இதில் 4 கிராம் எடைக்கு திப்பிலி 2 கிராம், வலம் 1 கிராம், இலவங்கம் $\frac{1}{2}$ கிராம் சருக்கரை 8 கிராம் பொடித்துக் கலந்து, வேளைக்கு 4 கிராம் எடை வீதம், ஐயநோய், இருமல், இரைப்பு, முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

**வேர்.**

வேரை அரைத்துச் சொறி, சிரங்கு, படை முதலியவைகளுக்கு போடலாம்.

உலர்த்திக் குடிநீரிட்டுக் குடிக்க சுரவெப்பந்தணியும்.

**மூங்கிலரிசி.**

வேயரி சியிலடு வெண்சுதை சருக்கரைப்
பாயச முண்டிடப் பல்பிணி யுங்கெடும். (தே-கா.)

(பொ-ள்.) மூங்கிலரிசியை வெண்பொங்கலாகவும், சருக்கரை கூட்டிப் பாயசமாகவும் செய்துண்ண, அவை உடலுக்கு ஊட்டம் கொடுத்து நோய்களை அணுகவொட்டாமல் செய்யும்.

**அரிசி.**

அரிசியை உணவு வகைகள் செய்து தின்பது நாட்டு வழக்கம் நீரிழிவு நோயினர்க்கு இது தக்க உணவாகும் சர்க்கரையும் குறையும்.

## 474. மெருகு—Merugu.

**வே. பெ. உலக்கை, கந்தபுட்பி, தீர்க்ககந்தை, முசலம்:**

**Hamelomena aromatica**

**Eng.—Great leaved caladium.**

| | |
|---|---|
| Tel. Balu-Rakkisa | Sans Gajakarani |
| Mal. Meruka | Hind.. Alu |

இஃது, இந்தியாவில் நீர்ப்பாங்கான இடங்களில் செழித்து வளரு கின்றது ; தோட்டங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது.

இதன் இலை, சேம்பினிலையை விட மிகப் பெரிதாய் நீண்டு பருமனுள்ள தண்டு களோடுங்கூடி இருக்கும். கிழங்கு, அடித்தண்டிலிருந்தே பூமிக்குள் ளிறங்கி பல பக்க வேர்களுடன் உலக்கை போன்றிருக்கும்.

ப-உ : கிழங்கு.

சுவை; கார்ப்பு (காறல்), தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-**Febrifuge**.
வளியடக்கி-வாதஹாகாரி-**Antivata**.
வீக்கமுருக்கி-சோபாநாசநி-**Deobstruent**.

குணம் : இதனால், மேகநோய், வயிற்று நோய், மூலம், ஈளை நோய் எலும்புருக்கிச் சுரம், ஐயப்பெருக்கு ஆகியவைகள் நீங்கும். உடல் குளிர்ச்சி யடையும்.

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப் போக்கும்
துருவுகுன்ம மூலந் துடைக்கும்—பெருமீளை
அத்திசுரம் ஐயறுக்கும் அங்கம் குளிர்விக்கும்
அத்தி முலை மாதே ! அறி. (அ-கு.)

மெருகங் கிழங்கு.

அரச னமைச்ச னதிகாரி சேனைக்
கரச னிவர்க்கிகலே யாகிப்— பொருவும்
மிருகமெனு நாயைமுயல் மேல்விடு தல்போல்
மெருகடியை யேவுவினை மேல்

(தேரர்-வெண்பா.)

இக்கிழங்கு, வளி, தீ, ஐயப்பிணிகள் ஆகிய அனைத்தையும் அகற்றும்.

வ-கு : மேற்கூறிய நோய்களைப் போக்க கீழ்க்கண்டபல வகைத் தைலங்களைச் செய்து வழங்கலாம். அவைகளின் செய்முறையைத் தேரையர் தைல வருக்கத்தில் காண்க.

குமருகுத் தைலம்.

இதை ஒரு துட்டெடை வீதம், காலை மாலை இரு வேளையும் சாப்பிட்டு, மேலுக்குந் துவாலையிட்டு மெதுவுறப் பிடித்துவர ஐயசுரம் விலகிப்போம்.

மெருகுள்ளித் தைலம்.

இதை உடல் வன்மை அறிந்து தினம் காலையில் மாத்திரம் கொடுத்து வர, கீல்களை அசையவொட்டாமல் செய்கிற கீல் வாயு, முடக்கு வாயு, நரித் தலை வாயு முதலிய நோயும், தளிர்ப்போலக் கிளைத்து வருகின்ற புண்களும் வன்மையுள்ள வாயுவின் வீக்கமும் கனவிற் கண்ட பொருட் போலாகும். பத்தியம்—உப்பு, புளி நீக்கல்.

மெருகுப்பச்சைத் தைலம்.

இதில் 85 கிராம் வீதம், படுக்கைக்குப் போகுமுன் 20 நாள் வரையில் உப்பு, புளி, நெய் நீக்கிக் குடிக்கில், மூலம், மூலவாயு, குன்மம், உட்களிச்சு, பெருவயிறு என்னும் பிணிகள் நெருங்கா.

## 475. மோதகவல்லி—Modagavalli.

**வே.பெ. கொழுக்கட்டைமரம்.**

**Sterculia.**

இஃது இந்தியாவிலெங்கும் வளர்கின்ற பெருமரம்.

ப-உ : பட்டை.

சுவை: துவர்ப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு,

செய்கை : துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

பண்பு : இதனால், பெரும்பாடு, வாயுவாலுண்டான கீழ் வாய்க்கனலால் பிறந்த குருதிக்கழிச்சல், சீதக்கழிச்சல் நீங்கும்.

பொங்கிவரு வெள்ளப் புனலினசிர்க் குங்காலால்
அங்கியுந்த விழுமிரத் தாமயநோய்—தங்காவே
போதகத் துச்சியெனப் பூரித்த மாமுலையாய் !
மோதகப் பூருகத்தை முன். (அ.கு.)

வ-கு : பட்டையைக் குடிநீரிட்டு அல்லது இடித்துச் சாறு பிழிந்து, அல்லது உலர்த்திப் பொடி செய்து, தக்க துணைமருந்துடன் கொடுத்துவர மேற்கூறிய நோய்கள் விலகும்.

**மோதகவல்லித் தைலம்** (தேரையர் தைலவருக்கம்).

இதில் ஒரு உச்சிக்கரண்டி வீதம், காலை மாலை இரு வேளையும், நாற்பது நாட்கள் உட்கொண்டுவர, எலும்புருக்கி நோய் போகும். புளி, புகையிலை, மீன் ஆகா.

## வசம்பு—Vasambu.

**வே. பெ : உக்கிரம், வசம், வசை, வேணி, சுடுவான், உரைப்பான், பேர் சொல்லா மருந்து, பிள்ளை மருந்து.**

**Acorus calamus.**

**Eng.—Sweet-flag.**

| | |
|---|---|
| Tel. Vasa | Sans. Vacha |
| Mal. Vayamba | |
| Kan. Baja | Hin Bach* |

இஃது, இந்தியா, பர்மா, வட அமெரிக்கா, ஐரோப்பா முதலிய இடங்களில் ஒதமுள்ள நிலப்பரப்புகளில் விளைகிற ஒரு விதப் பூண்டு.

இதன் தண்டு ஏறக்குறைய பெருவிரற் கனமிருக்கும்.

இதன்மேல் சாம்பற்படிந்த நிறமிருக்கும். இதன் வேருக்கு வசம்பு என்பது பெயர். இதற்கு ஒரு வித மணமுண்டு. இதை உலர்த்திக் கடைகளில் விற்பார்கள்.

ஊடுருவிப்பாயக் கூடிய, வெப்பமும் மணமுள்ள ஒரு வித எண்ணெய்ச்சத்து (Glucocide acorin ) இதிலுண்டு.

ப-உ : வேர்.

சுவை : கார்ப்பு, தன்மை—வெப்பம். பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic.
- முறைவெப்பகற்றி-முறைவ்யாதிரோதி-Anti-periodic.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகரி-Carminative.
- குமட்டலெழுப்பி-வமநவியதாகாரி-Nauseant.
- வாந்தியுண்டாக்கி-வமநகரி-Emetic.
- தொற்றுப்புழுவகற்றி-ஆகந்துகரோகநாசநி-Disinfectant.,
- நுட்புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Germicide.

குணம் : வசம்பினுல், எல்லா நஞ்சுகள், புண்வகைகள், ஐவகைவலி குன்மம், இரத்த பித்தம், வாய்நாற்றம், சூலை, முப்பிணி, இருமல் ஈரல் நோய்கள், யானைக்கால், நாடாப்புழு ஆகியவை போம்.

பாம்பாதி நஞ்சற் புதப்புண் வலிவிடபாகங் குன்மம்
சூம்பா ரிரத்தபித் தம்முக நாற்றம்வன் சூலைசந்நி
வீம்பாம்பை காசம் பிலீகஞ் சிலிபதம் வீறிருமல்
தாம்பாங் கிருமி யிவையேகு மாசிவ சம்பினையே. (தே.கு.)

**வசம்பு.**

வசம்பினைப் பொடிசெய்து மதுவினில் வைகலு
மிசையமே நாப்பிறழ் தேவனை யகலுமே. (தே.க.)

(பொ-ள்.) : வசம்புத்தூளைத் தேனிற் குழைத்து, விடியற்காலைதோறும் உட்கொண்டுவரின், நாக்குப் பிறழ்ச்சி (தெத்துவாய்) நீங்கும்.

அன்றியும், இது செரியாமை, கழிச்சல், வயிற்றுப்பொருமல், வன்மையின்மை, வாயு சொறி சிரங்கு, சுரங்கள், முறைக்காய்ச்சல் ஆகியவைகளையும் போக்கும்.

வசம்பு ஒரு பங்கிற்குப் பத்து பங்கு கொதிக்கின்ற வெந்நீர் சேர்த்து ஊறவிட்டு வடிகட்டி 15—30 மி.லி. கொடுக்க, பசியின்மை, செரியாமை, வயிற்றுப்பொருமல் இவற்றைப் போக்கும். பல கெடுதியினுலும் ஊழியினுலும் குழந்தைகளுக்குண்டாகிற கழிச்சல் முதலியவற்றை நிறுத்தும். முறைக்காய்ச்சலைத் தடுக்கும்.

வசம்புடன் அதிமதுரங் கூட்டிக் காய்ச்சிய குடிநீர், பெரும்பாலும் குழந்தைகளுக்குண்டாகிற இருமல், ஈளை, சுரம், வயிற்றுவலி இவைகளைப் போக்கும்.

வசம்புத் துண்டை வாயிலிட்டுச் சுவைக்க, வாய்நீர் பெருகும். வாயில் ஒரு வித அனலெழும்பும். ஆனுல், தொண்டைக்கம்மல் இருமல் இவற்றைப் போக்கும்.

வசம்புப்பொடியை 150 மி.கி.—650 மி.கி. வரையில் உட்கொள்ள, அகட்டு வாயுவை அகற்றுவதுடன், நரம்புத்தளர்ச்சியையும் விலக்கும். 1 கிராம் மேற்பட்ட அளவில் வாய்க்குமட்டலையும், வாந்தியையுமுண்டாக்கும்.

விடக்காற்றுல், நோய்கள் பரவுங்காலத்தில் இதை வாயிலிட்டு மெல்லுவது வழக்கம்.

நாட்பட்ட கீல்வாத நோய்களுக்குக் காய்ச்சுக்கட்டியுடன் வசம்பை சேர்த்து நீர் விட்டரைத்துப் பற்றிடலாம்.

இதைச்சுட்டுக் கரியாக்கி, தேங்காய் நெய் அல்லது முத்தெண்ணெயுடன் கலந்து, அடிவயிற்றிற் பூச வயிற்றுப் பொருமல் நீங்கும்.

வாளங்கூட்டிச் செய்த மருந்தை அளவுக்கு மிஞ்சிக் கொடுப்பதால், பெருங்கழிச்சல், எருவாய்க் கடுப்பு, வயிற்றுக் கடுப்பு முதலியவைகள் உண்டாகி, கழிச்சல் நிற்காவிட்டால், மஞ்சளை அரைத்து வசம்பிற்குப்பூசி மஞ்சள் கருகும்படிச் சுட்டு, மீண்டும் இவ்வாறே 6 முறை செய்தெடுத்த வசம்பைச் சுட்டுக் கரியாக்கி, தண்ணீர்விட்டுக் குடிநீர் செய்து கொடுக்க, மேற்கூறியவைகள் நீங்கும்.

வசம்பு, காயம், அதிவிடயம், திப்பிலி, மிளகு, சுக்கு, கடுக்காய்த் தோல், இந்துப்பு இவைகளைப் பொடிசெய்து கூட்டி 1—2 கிராம் கொடுக்க, செரியாமை, வளிநோய்கள், மந்தம், மாந்தக் கழிச்சல், வயிற்றுப்பொருமல் முதலியன நீங்கும்.

## 778. வண்டுகொல்லி—Vandu-kolli.

வே. பெ : சீமையகத்தி, மலைத்தகரை, பேயகத்தி, வண்டுகடியிலை.

Cassia alata.

Eng.—Ringworm Shurb.

| | |
|---|---|
| Tel. Shima-avisi | Sans. Dadrughna |
| Mal. Shima-akati | |
| Kan. Shimigida | Hind. Damrdan |

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கும். இதன் பூ, மஞ்சள் நிறம் யிருக்கும்.

ப-உ : இலை, வேர், பூ.

சுவை : கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை ; { தூக்குணிப்புழுக்கொல்லி-க்ருமிநாசினி-Parasiticido.
நீர்மலம்போக்கி-வ்ரேசநி-Purgative.

பண்பு : எச்சற்றமும்பு, படர்தாமரை முதலியவற்றைப் போக்கும்.

வ-கு : மேற்கண்ட நோய்களைப் போக்க, இதன் இலையைத் தேய்க்கலாம்; அல்லது இலையை அரைத்துத் தேங்காயெண்ணெய் அல்லது நல்லெண்ணெயில் குழப்பிப் பூசலாம் ; அல்லது இலையை எலுமிச்சம்பழச் சாறு அல்லது கற்சுண்ணத் தெளிநீர் விட்டரைத்து மேலுக்குத் தேய்க்கலாம் ; அல்லது 2 பங்கு தேன் மெழுகுடன் 5 பங்கு தேங்காயெண்ணெய் கூட்டிக் கரண்டியிலிட்டுத் தீயில் உருக்கி, சூடு குறையுமுன் 7 பங்கு இலைச் சாற்றைவிட்டு மெழுகு போலக் கிண்டி மேலுக்குத் தடவித் தேய்க்கலாம்.

வேரை எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துப் படர்தாமரை முதலியவைகளுக்குப் பூசலாம்.

## வரகு—Varagu .

வே-பெ;: கோத்திரவம்.

Fam : Graminae (Monocot).

Paspsum Lumentaceum.

(A kind of Ragi).

| | |
|---|---|
| Tel. Oragu biyyam | Sans. Varagu |

இது தென் இந்தியாவில் பயிரிடப்படும் பயிர் வகைகளுள் ஒன்று. இதன் நெல், உருண்டு ஒருவித கருநிற உமியால் மூடப்பட்டிருக்கும். இதைச் சிலர் விரும்பிச் சமைத்துச் சாப்பிடுவார்கள்.

**ப-உ :** அரிசி, வைக்கோல்.
**சுவை :** இனிப்பு, **தன்மை**—தட்பம், **பிரிவு**—இனிப்பு.
**செய்கை :** பித்தநீர்ப்பெருக்கி, பித்தகாரி—cholologue.

**வரகு அரிசி.**

கோத்திரத் தரிசியைக் கொளப்பிணி மீறிடும்.
**(பொ-ள்)** வரகரிசி, நோயை மிகுதிப்படுத்தும். (தே.கா.)

**வரகுச்சாதம்.**

**குணம் :** மூச்செறிகின்ற இரைப்பு, இதைச் சேர்ந்த பல நோய்கள், உடல் வறட்சி, சொறி, சிரங்கு, அழல் இவை உண்டாம்.

எறிகபத்தோ டேபலநோ யெய்தும் வறட்சி
சொறிசிரங்கு பித்தந் தொடரும்—நிறையுங்
கரகமெனப் பூரித்த கச்சுமுலை மாதே!
வரகரிசிச் சோற்றால் வழுத்து. (அ-கு.)

**வரகு வைக்கோல்.**

**வ-கு :** ஆற்றுத்துமட்டி, இலைக்கள்ளி, கொம்புக்கள்ளி, போன்ற பொருள்களினின்றும் சாறெடுப்பதற்கு, இவ்வைக்கோலைக் கொளுத்திய தீயில் மேற்கண்ட பொருள்களை வாட்டிச் சாறு எடுப்பது வழக்கம்.

## 479. வலம்புரிக்காய்—Valampurik-kai.

**வே. பெ. திருகுபலை.**

**Hind. : Maroorphalli.**

இக்காய், 2 முதல் 4 அங்குல நீளமாகவும், வரிகளுள்ளதாகவும் திருகலாகவு மிருக்கும். ஆகையால், இதற்கு East Indan Screw tree என்று ஆங்கிலப் பெயர் வழங்கும்.

**சுவை :** கைப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கார்ப்பு.

**செய்கை :** உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcet.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

**குணம் :** இதனால், பூதபைசாசங்கள், பொறுக்கொணவிழிநோய், காது நோய், இருமலில் நேரிடும் கேவல், விக்கல், ஐயசுரம், ஆயாசம், மேகம், கூன்விழுதல் நீங்கும்.

பூதபை சாசம் பொறுக்கொண நேந்திரநோய்
ஓதே மிகுசெவிநோய் கேவல்விக்கல்—ஓதுகுளிர்
தோடமொடு மேகங்கூன் சொன்னவையெ லாம்நடுங்கி
ஓட வலம்புரியை யுன். (அ-கு.)

**வ-கு :** காயை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டி, காதில் 4, 5 துளி விட்டு, பஞ்சிட்டடைக்க, காதடைப்பு, காதுகுத்தல் முதலியன நீங்கும்.

இதைப் பொடிசெய்து தினமொன்றுக்கு 2, 3 முறையாக 4—8 கிராம் வீதம் கொடுத்துவர, இருமலில் நேரிடும் கேவல், விக்கல், மேகம், ஐயசுரம், கூன்விழல் நீங்கும்.

பொடியைக் கொடுத்து வருவதுடன், இத்தூளைப் புகைத்தும் வர, பூத கணக் குற்றங்கள் விலகும்.

## 480 வல்லாரை—Vallarai.

வே. - பெ : சண்டகி, பிண்டீரி, யோசனவல்லி.

Hydrocotyle asiatica, Linn.

Eng. —Indian Pennywort.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Bokudu-chettu, Manduka | Kan. | Vondelagi |
| | | Sans. | Brahmi |
| | | Arab. | Artaniya-e-hindi |
| Mal. | Kudakam | Hind. | Khulakudi |

இப்பூண்டு, இந்தியாவிலுள்ள பல நீர்நிலைகளுக்கருகாமையிலும், தோட்டங்களிலும் பயிராகும். இது சிறந்த பூண்டு வகைகளுள் ஒன்று. இதை அளவுடன் வழங்க, இது பெரும் பயனை அளிக்கும்; அளவிற்கு மிஞ்சினால், தலைச் சுற்றல், தலைவலி இவைகளை உண்டாக்கும்.

ப-உ : பூண்டு.

சுவை : துவர்ப்பு, கைப்பு, இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை:
- உடற்றேற்றி—வயதாபேதகாரி—Alterative.
- உரமாக்கி—பலகாரி—Tonic.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
- ருதுவுண்டாக்கி—ருதுவர்த்தநி—Emmenoqoque.

குணம் : வாய்ப்புண், கழிச்சல், குருதிக் கழிச்சலால் பிறக்கும் வயிற்றுக் கடுப்பு ஆகியவை நீங்கும்.

அக்கர நோய் மாறும் அகலும் வயிற்றிழிவு
தக்கவிரத் தக்கடுப்புத் தானேகும்—பக்கத்தில்
எல்லாரை யுமருந்தென் றேயுரைத்து நன்மனையுள்
வல்லாரை யைவளர்த்து வை. (தே.கு.)

மேற்கண்ட நோய்களை அன்றி, அடியிற்காணும் நோய்களையும் போக்கும். சுரம் இளைப்பு நோயிலுண்டாகும் தொண்டைக் கம்மல், வெறி, யானைக் கால், விரை வீக்கம், நெரிகட்டி, மேகப்புண், காயம், கட்டி, வீக்கம், புடை, கண்டமாலை, மார்பாணி, சூதகக் கட்டு.

வ-கு : எல்லாச் சுரங்களுக்கும் இதன் இலை, துளசியிலை, மிளகு இவைகளை ஓர் அளவாகத் தூக்கிஅரைத்து, 65 மி. கிராம் எடை மாத்திரை செய்து, காலை மாலை இரண்டு வேளையும் கொடுத்துவர, அவைகள் தணியும்.

இலையை அரைத்து வைத்துக் கட்ட, யானைக்கால், விரை வீக்கம், வாயு வீக்கம் கட்டிகளின் வீக்கம், அடிபட்டுத் தசை சிதைந்துண்டான வீக்கம் போகும். அல்லது இந்நோய்களுக்கு இலைச் சாற்றைப் பிழிந்தும் பூசலாம். மேலும், இந்நோய்களில் காணும் சுரம் தணிய, இலைச்சுரசத்தில் 4, 5 துளி வீதம் நாள் ஒன்றுக்கு மும்முறை கொடுத்துவரலாம்.

குழந்தைகளுக்குண்டாகும் படைகள், குருதிக்கேடு, நரம்பு நோய்கள் முதலியவைகளுக்கும், முதிர்ந்த வயதுடையோர்களுக்குண்டாகும் மேகம், வயிற்று நோய், சுரம் முதலியவைகளுக்கும், இலைச்சாறும், பசுவின் பாலும், அதிமதுரத்தூளும் சேர்த்துக் கலந்து கொடுத்து வர, மிகுந்த பலன் தரும்.

குழந்தைகளுக்குண்டாகும் சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல், வயிற்றுக் கடுப்பு முதலிய கோளாறுகளுக்கு, 3, 4 இலை எடுத்து சீரகம், சருக்கரை கூட்டி அரைத்துக் கொடுத்தும், அல்லது தனி இலையை மாத்திரம் அரைத்துக் கொப்பூழ் மீது பற்றிட்டும்வர, அவைகள் நீங்கிக் குழந்தைகள் சுகப்படும்.

குருதிக் கொதிப்பாலுண்டாகும் கொப்புளங்களைப் போக்க, இலைச் சுரசத் துடன் கடப்பம் பட்டை, கருஞ்சீரகம், நெய் சேர்த்தரைத்துப் பூசி வரலாம்.

இலையுடன் வெந்தயமும் சேர்த்துக் குடிநீரிட்டு 1, 2 சங்கு குழந்தை களுக்குப் புகட்ட, சுரம் வயிற்றுக் கோளாறுகள் போம்.

இலை 5—6 எடுத்து, 4—5 மிளகு, ஒரு சிறு திரிபூண்டு கூட்டியரைத்துக் காலை மாத்திரம் உட்கொண்டு, மோரும் சோறுமாக உண்டு வர, புண் நீங்கும். 20—40 நாள் கொடுக்க நேரிடும்.

நெறிகட்டி, மேகம் முதலிய நோய்களுக்கும், அவைகளினுலுண்டாகும் புண்களுக்கும் இலைப்பொடி 130 மி.கி. வீதம் தினமொன்றுக்கு மும் முறை கொடுத்தும், பொடியில் சிறிதெடுத்துப் புண்கள் மீது தூவியும், அல்லது பச்சை இலையை அரைத்துக் கட்டியும் வர, புண்கள் எளிதில் ஆறும். பொடியில் 130—300 மி.கி. வரை எடுத்து பசுவின் பாலில் கலந்து கொடுத்து வர, ஞாபகசக்தி உண்டாகும். மூளையும் பலப்படும்.

**வல்லாரை.**

வல்லாரைக் கற்பமுண் வல்லாரை யார் நிகர்வார்
கல்லாரைப் போலக் கலங்காமல்—வல்லாரைச்
சாறு மிலவணமுஞ் சாபத்திரி யுமுண்ணப்
பேருமடி வல்லைப் பிணி (தேரன்-வெண்பா).

வல்லாரை இலையைக் கற்பமாய் உண்ணில், அறிவு துலங்கும். வல் லாரைச் சாற்றில், உப்பும், சாதிபத்திரியும் கூட்டிக் கொடுக்க, பெரு வயிறு, வல்லை முதலிய பிணிகள் போம்.

வல்லாரை யினிலை மருவுகற்ப மாய்க்கொள்
வெல்லாப் பிணிகளு மிலாமையா மெய்யினில்.

(பொ-ள்) : வல்லாரையை கற்ப முறையாயேனும், உணவு முறையா யேனும் புசித்துவரின் அஃது உடற்கு வன்மையை ஈந்து நோயணுகா வகையை செய்யும்.

இப்பூண்டு, வசம்பு, கடுக்காய், ஆடாதோடை, திப்பிலி, தேன் இவைகளை ஒரெடை எடுத்து முறைப்படி குடிநீர் செய்து, 15—30 மி.லி. வரையிலும், தினம் இரு வேளை கொடுத்துவர, இளைப்பு நோயிலுண்டா கும் தொண்டைக் கம்மல் நீங்கும்.

அரசு 1933-ம் வருடப் பதிப்பு) பாலவாகடத்தில் கணச் சூடு, கண மாந்தம், பிற்கணம் இவைகட்குக் கூறிய "வல்லாரை எண்ணெய்," கணத்திற்குக் கூறிய "வல்லாரை நெய்" இவைகளை கவனிக்கவும்.

## 481. வள்ளி—Valli.

### சிறுவள்ளி—Chiru valli.

**Dioscorea.**

**Eng.—Sweet Yam.**

| | |
|---|---|
| Sans. Madhvalu | Mal. kheruValli. |

தென் இந்தியாவில் கிடைக்கும்.

ப-உ : கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : புழுக்கொல்லி-க்ருமிநாசிநி Vermifuge

வள்ளி என்னும் பெயரின் கீழ் (1) சருக்கரைவள்ளி, (2) சிறுவள்ளி, (3) பெருவள்ளி, (4) வெற்றிலைவள்ளி, (5) பால்வள்ளி எனவழங்கும் கிழங்குகளில் பெருவள்ளி என்பது ஆள் (மா) வள்ளியாகும். வெற்றிலை வள்ளி-காய் வள்ளியாகும்.

குணம் : இதனால், மந்தம், கரப்பான், ஐயப்பெருக்கு, முளைமூலம் ஆகியவை உண்டாகும். பசித்தீக் கெடும். இது வயிற்றுப் புழுக்களைக் கொல்லும்.

மந்தமிகுந் தீபனம்போம் மாறுக கரப்பானுஞ்
சிந்த மிகுகபமுஞ் சேருங்காண்—தொந்தமாய்
மூல முளைவளரும் முட்டைச் சிறுகிழங்கால்
ஏல வளகமின்னே ! பெண். (அ.கு.)

வ - கு : இதன் இலையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, வயிற்றுப் புழுக்கள் விழும்.

இதன் சாற்றை, வேறு துணைமருந்துகளுடன் சேர்த்துக் காய்ச்சி, பெரு நோய்ப் புண்களுக்குத் தடவலாம்.

கிழங்கைச் சமைத்துண்ணலாம். ஆனால் மந்தமுண்டாம்.

---

## 482, சருக்கரைவள்ளி—Charukkarai-valli

வே- பெ: சீனிக்கிழங்கு.

**Ipomea Batatas,**

**En.—Sweet Potato.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Genasu | Kan. | Genasu. |
| Mal. | Chakkara-valli | Hind. | Ratalu. |

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகின்ற கொடி. இதன் கிழங்கு மிகவும் தித்திப்பானது. இதில், வெண்மை, சிவப்பு என இருவகை உண்டு.

ப - உ : கொடி, கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை : { குளிர்ச்சியுண்டாக்கி- சீதளகாரி-Refrigerant.
உடலுரமாக்கி-போஷணகாரி-Nutrient.

கிழங்கு.

பணபு : இது மருந்தின் வன்மையைக் குறைக்கும் ; மூலமுளையையும், குடலிரைச்சலையும், வயிற்றுக்கடுப்பையும் விளைவிக்கும்.

உள்ளிற்கொள் நன்மருந்தை யும்முறிக்குஞ் சர்க்கரையாம்
வள்ளிக் கிழங்கதிக மந்தத்தால்—உள்முளை
மூலம் விளையுநிதம் மோடிரைச்ச லுண்டாகுங்
கோலவயி றுங்கடுக்குங் கூறு. (அ.கு.)

வ–கு : இலையை அல்லது கொழுந்தையரைத்துப் பூசினால், தேள் கடியினாலுண்டாகும் வலியைக் குறைக்கும்.

கிழங்கை வேகவைத்துச் சாப்பிடலாம். ஆனால் இது மந்தபதார்த்தம்.

---

## 483. செவ்வள்ளிக் கொடி—Chev-vallik-Kodi.

Dioscorea purpurea.

Eng.—Red Yam.

Sans. Thambra-Latha

செய்கை : புழுக்கொல்லி-க்ருமிநாசினி : Anthelmintic.

குணம் : இதற்கு பெருநோய் (குறைநோய்), கடுவன், குடலண்டம், மூலம், நகம் குதிக்கால்களைப் பற்றிய கொப்புளம் தீரும்.

குறிப்பு : இது வள்ளிக்கொடிகளில் ஒன்று. சிறு வள்ளிக்கொடியின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வு குறைநோய் கரப்பானும்—இவ்வுலகில்
மானே ! குடல்வாதம் வல்ல படுவனுடன்
ஆனபரு மூலமும்போம் ஆய். (அ.கு.)

வ–கு : இதைக் குடிநீரிட்டு உட்கொண்டும், பெருநோய்களைக் கழுவியும் வர, மேற்கண்ட நோய்கள் தணியும்.

மேலும், இது கரப்பான், மூலம் இவைகட்குச் செய்யப்படும் பொடி இலேகியம் முதலிய மருந்துகளிலும், பீச்சு, முடி, பிடித்தைலங்களிலும் சேரும்.

---

## 484, வள்ளைக்கொடி—Vallaik-Kodi.

வே - பெ : நாளிகம், வள்ளைக்கீரை.

Ipemea aquatica

| | | | |
|---|---|---|---|
| Mar. | Manda | Gond. | Padimuskir. |
| Ma. | Ts-iagri-nuren. | Tel. | Pandiyado. |
| Bomb. | Shendurvel. | | |

இது நீரில் பயிராகும் கொடி. இது நீரின் மீது நீண்டு ஓடும். இதைக் காதணிக்கு ஒப்பிடுவார்கள்.

ப-உ : கீரை, கிழங்கு.

சுவை : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.

வள்ளைக்கொடி.

.......................................

...........................சிந்துவார் -
மாமூத் திரந்தொடு வாய்ப்பிலேயட் டுண்டக்கால்
மாமூத் திரந்தோடு வார்.

வெள்ளைக்கொடி இலை சமூலத்தைப் பக்குவமாகச் சமைத்து உணவுடனு கிலும் தனித்தாகிலும் ஒரு மண்டலம் நல்ல பத்தியத்துடன் உண்டுவரில், நீரிழிவு நோய் நீங்கும்.

குணம் : இதனால், வளிநோய் தணியும். பால் சுரக்கும். "வள்ளைக் கீரை கனிலம் மாறும் பால் உண்டாகும்."

வ-கு : சமைத்து உண்ண மேற்கண்ட பண்புகளைப் பெறலாம். மேலும், இதை ஒரு மண்டலம் மட்டும் புசித்து வர, நீரிழிவு நீங்கும்.

---

## 485. வன்னி—Vanni.

வே - பெ : சமி, தகனம், நெருப்பு.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Jammi | Sans. | Sami |
| Mal. | Vanni | Hind. | Cikura |
| Kan. | Vanni. | Duk. | Mayeen. |

இஃது இந்தியா முற்றிலும், பாரசீகத்தின் சாடுகளிலும், நாடுகளிலும் பயிராகும் மரம். 20—25 அடி உயரம் வளரும். இதன் இலை உருவில் புளியினிலை போன்றிருப்பினும் அளவில மிகச்சிறியது.

ப. உ. இலை, காய், பட்டை.

செய்கை : { உள்ளழலாற்றி-அந்தர்ஸ் நிக்தகாரி-Demuloen
வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.

குணம் : இதற்கு, வளிசன்னி, முப்பிணி, நஞ்சு, ஐயப்பெருக்கு, சொறி இவை நீங்கும்.

வாதசந்தி தோடமறும் மாருத் தழலுளதென்
றேதுவரிவ் வன்னிக் குவமையுண்டோ—பூதலத்தில்
காணர் விடமுங் கபமுஞ் சொறியும்போம்
தேனே ! இதையறிந்து செப்பு. (அ.கு.)

வ - கு : இலையையும் பட்டையையும் தோலைப் பதனிடவழங்குவர்.

இலைச்சாறும், பசுவின் நெய்யும் வகைக்கு 340 கிராம் ஒன்றுகூட்டி இதில் வெண்குங்கில்யம் 51—85 கிராம் கூட்டி எரித்துண்டாகும் நெய்யில், வேளைக்கு 8—17 கிராம் வீதம் காலை மாலை உட்கொண்டுவர, மேகவெட்டை, சொறி, சிரங்கு நீங்கும். அல்லது இந்நெய்யைக் காய்ச்சி எடுத்தவுடன் சுத்த நீரிற் சேர்த்து மத்திட்டுக் கடைய, வெண்ணெய் திரண்டுவரும். இதையும் 2—4 கிராம் வீதம் மேற்கண்ட நோய்க்கு வழங்கிவரலாம்.

இதன் முதிர்ந்த காய்த்தோலைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உள்ளழலை நீங்கும்.

பட்டையை உலர்த்திச் சூரணஞ் செய்து 2—4 கிராம் வீதம் தினமொன்றுக்கு இரு வேளை உபயோகிக்க, வாதசந்நிபாதம், திரிதோடம், விடம், கபவிருத்தி நீங்கும்.

பட்டையை நன்றுயிடித்து ஒரு சிறு கலயத்தில் அரைவாசி பரப்பி, அதன் மீது சோற்றுப்பு வைத்து மேலும் இடித்த பட்டைத் தூளைப் பரப்பி, சில்லிட்டுச் சீலை செய்து குக்கிட புடமிட, உப்பு பற்பமாகும். அசீரணம், அசீரணபேதி, மந்தம் இவைகட்கு இதை வழங்கலாம்.

## 486. வாகை—Vagai.

வே-பெ : சீரிடம், பாண்டில்.

Bot. Name : Albizzia lebbeck, Benth.

(Mimosa flexuosa or M. Sirissa.)

Eng.—Sirissa-tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Girishamu | Hind. | Siris. |
| Mal. | Nenmeni | | |
| Kan. | Shereesh-(mara). | | |
| Sans. | Shirisha | | |

இஃது இமயத்தைச் சார்ந்த இடங்களிலும், வங்காளம், மத்திய இந்தியா, தென் இந்தியா முதலிய இடங்களிலும் பயிராகும் மரம்.

ப - உ : இலை, பூ, பட்டை, வேர்ப்பட்டை, வித்து, பிசின்.

சுவை : கார்ப்பு, கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை : { துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.

### வாகைமரம்.

குணம் : பசியை உண்டாக்கும். பாம்பு முதலிய நஞ்சுகள், அழல் புண்கள், வாதச்சொறி, கரம், நீர்வேட்கை, வாய்ப்புண் ஆகியவைகளைப் போக்கும்.

வாகைகா ரங்கசப்பை வைத்திருக்கு முள்ளபடி
யோகையு றப்பசியை உண்டாக்கும்—தோகையே !
தீரா விடத்தோடு சில்விடத்தை யுந்தீர்க்கும்
ஆராயத் தோன்று மது.

வாகை யனல்விரணம் வாத வறட்சியுடன்
தாக சுரமுந் தணிக்குங்காண்—ஆகமதில்
அக்கர மெல்லா மகற்றிவிடும் பூவனமே
அக்கணத்தி லென்றே யறி. (அ.கு.)

### வாகைப்பூ.

வாகைப்பூ, வளிக்குற்றத்தைத் தன்னிலைப்படுத்தும். நஞ்சுகளைப் போக்கும், ஐயப்பிணியைத் துலைத்துவிடும்.

வாதசம னஞ்செய்யும் வல்விடத்தைப் போக்கிவிடும்
சீதசிலேத் மத்தைச் சிதைக்குங்காண்—போதவுள்ளே
மாகைப்பை வைத்திருக்கும் மாநிலத்தி லேபெரிய
வாகைப்பூத் தன்னை வழுத்து. (அ.கு.)

**வாகைப்பிசின்.**

வாகைப்பிசின், வெள்ளை, மேகக்கட்டி ஆகியவற்றை விலக்கும். அழகை யும் வன்மையையும் உண்டாக்கும்.

வாகைப் பிசின்மேகம் வன்கிரந்தி கட்டியையும்
ஏகத் துரத்தும் இதுநிசமே—மாகனக
மேனி கொடுக்கு மிகுத்தபலன் உண்டாக்கும்
தேனினிய மென்மொழியே தேர். (அ.கு.)

வ - கு : இலையை அரைத்துக் கண் நோய்களுக்குக் கண்களின்மீது வைத்துக் கட்டிவரலாம்.

பூவை அரைத்துக் கட்டிகள், வீக்கம், தடிப்பு இவைகளின் மீது பூசிவர அவைகள் போம்.

பூவை அரைத்தாவது, குடிநீர் செய்தாவது கொடுத்துவர, வளிநோய் களையும், பாம்புக்கடியையும் ஐயப்பெருக்கையும் போக்கும்.

பட்டையை உலாத்திப் பொடி செய்து தக்க அளவில் கொடுக்க, குருதி மூலம், பெருங்கழிச்சல், வெள்ளை, மற்றும் வாகைமரத்தின் கீழ்க்கண்ட நோய்கள் தீரும்.

வேர்ப்பட்டைப் பொடித்ததைக் கொண்டு பல் துலக்க, பல்லீற்றுப் புண் நீங்கும். பல் இறுகும்.

விதையை நீரிலுரைத்துக் கண்களிலிட, கண்நோய்கள் தீரும். நெறிக் கட்டிகளின்மீதும் பூசலாம்.

விதைப் பொடியைச் சுமார் 4—6 கிராம் எடை உட்கொள்ள, நெறிக் கட்டிகள் அமுங்கும்.

விதைத் தைலம் பெருநோயைப் போக்கும்.

பிசினை 1—2 கிராம் எடை கொடுத்துவர, வெள்ளை, கழலை, மேகக்கட்டி போகும். உடலுக்கு அழகும் வன்மையுமுண்டாகும்.

## 487. கருவாகை—Karuvagai.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nallarenga | Kan. | Bilkambi |
| | | Sans. | Krishna-Sirisha |
| Mal. | Karuvaka | | |

ப - உ : கட்டை, வேர்ப்பட்டை.

சுவை: சிறுகைப்பு - கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு- கார்ப்பு.

செய்கை : { கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
மலப்புழுக்கொல்லி—க்ருமிநாசனி—Anthelmintic.

குணம் : கருவாகை மரத்துக்கு, புண், வெப்பம், வளிக்குற்றப்பெருக்கு, சிறுபுழுக்கள், மரணமுறச் செய்யும் இளைப்புநோய் இவை நீங்கும்.

விரணமோ டட்டிணமும் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு—மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங் குடிவிலகும்
வெய்யகரு வாகைக்கு விள். (அ - கு).

வ - கு : கட்டை அல்லது வேர்ப்பட்டையில் 9 கிராம் எடுத்து நன்ருகச் சிதைத்து, குடிநீரிட்டுக் கொடுத்துவர, மேற்கண்ட பிணிகள் நீங்கும். அல்லது பொடி செய்து 2 கிராம் காலை மாலை இருவேளையும் நோய் நீங்குமட்டுங் கொடுத்து வரலாம்.

## 488. வாதநாராயணன்—Vathanarayanan.

Delonixalata.

வே - பெ : வாதரக்காச்சி.

இஃது இந்தியாவில் வெப்ப நாடுகளில் ஏராளமாகப் பயிராகும் மர வகுப்பைச் சேர்ந்தது.

ப - உ : இலை.

சுவை - கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.
செய்கை : வாதமடக்கி - வாதநாசநி—Anti-Vata.
குணம் : வளிப்பெருக்கு, வீக்கம் இவை விலகும், கழிச்சலுண்டாம்.

வ - கு : இதன் இலையை, சிற்றுமணக்கு நெய் விட்டு வதக்கி, வீக்கங்களுக்கும் கட்டிகளுக்கும் ஒற்றிடமிடலாம்.

இலைச்சாறும் ஆமணக்கு நெய்யும் ஓரளவு கூட்டிக் காய்ச்சி வடிகட்டி, 35 முதல் 50 கிராம் வரையிலும் உள்ளுக்குக் கொடுக்க, நன்ருய்க் கழியும். பெருகிய வளிக்குற்றம் தன்னிலைப்படும்.

வாயு நோயைப் போக்கும் தைலங்களில் இவ்விலையின் இரசம் சேருமாயின், வாதநோயை எளிதில் போக்கும்.

## 489. வாதுமை—Vadumai.

Prunus amygdalns.

வே. பெ : அடம்பு.

Eng. Almond.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Badama-vittula. | Kan. | Badami. |
| | | Sans. | Badama. |
| Mal. | Badami. | Hind. | Badam. |

இதில் இரண்டு இனமுண்டு : (1) கைப்புவாதுமை, (2) இனிப்பு வாதுமை.

கைப்பு (கசப்பு) வாதுமை—Kappu Kasappu Vadumai

Prnuus Amayagada, Var, Amara.

Eng Bitter Almond.

இது ஸிரியா, பார்பெரி, ஐரோப்பா, ஆசியாவின் சில பாகங்கள் ஆகிய இவற்றில் விளையும் மரம். தித்திப்பு வாதுமையை போலவே இருக்கும். ஆனால், இதன் பருப்புக் கைக்கும்.

ப - உ : பருப்பு, நெய்.

சுவை.—கைப்பு. தன்மை - வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : 
செந்நீரிளக்கி-Attenuent.
புண்ணழுக்கற்றி-வ்ரணசுத்திகாரி-Detergent.
உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-Emollient.
மல்மிக்கி-மலகாரி-Laxative.

பண்பும் வழக்கும் : கைப்பு வாதுமைப் பருப்பை, நீர் அல்லது காடி விட்டரைத்துத் தலையில் தடவ, பேன்கள் சாகும்.

ஒரு பங்குப்பருப்பை நன்றுயரைத்து, எட்டுப் பங்கு நீரிற்கலக்கி வடிகட்டி, 34 முதல் 68 கிராம் வரையில் கொடுக்க, வெப்பத்தாலுண்டாகும் இருமல், யீரல் வெதுப்பு நீங்கும். இந்நீரைச் சொறி சிரங்குகளுக்குப் பூசலாம்.

இதை அரைத்துக் களியாகக் கிண்டிப்பூச, நமைச்சொறியும், தோல தடிப்பும் போகும்.

இதன் நெய், புண்களை ஆற்றுவதற்குரிய களிம்புகளில் சேர, நற்பயனை அளிக்கும்.

---

### இனிப்பு
### (தித்திப்பு) வாதுமை—Inippu (thithippu) Vadumai.
### Prunus Amygdalus Var, Dulcis.

**Fam : Rosaceal.**

**Eng. Sweet Almond.**

**வே. பெ : அடப்பவிதை.**

இம்மரம், ஆசியாவின் மேற்பாகத்துக்குரியது எனினும், இஃது இந்தியாவில் பாஞ்சாலத்திலும், காஸ்மீரத்திலும், ஆப்கானிஸ்தானத்திலும் பயிரிடப்பட்டு வருகிறது. இங்கிருந்துதான் நமக்கு வாதுமைக் கொட்டை, பிசின் வருகிறது.

ப - உ : பருப்பு, நெய், பிசின், ஓடு.

சுவை : இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை :
பருப்பு-
உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-Emollient.
உடலுரமாக்கி-போஷணகாரி-Nutrient.
நெய்.
உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-Emollient.
மலமிளக்கி-மலகாரி–Laxative.
பிசின்.
ஆண்மைபெருக்கி–காமவர்த்தநி–Aphrodisiac.

**பருப்பு.**

வாதுமைப் பருப்பினால், கண்படலம் புண்கொழுமை போம். ஆண்மை உண்டாகும்.

அடப்பவிதை யாம்வாது மைப்பருப்பி னாலே
மடற்பெரிய கண்படல மாறும்—சடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமுண் டாகுமென
மண்மேற் புகல்வார் மகிழ்ந்து. (அ. கு.)

## நெய்.

இஃது மருந்துகளினாலும் உழைப்பினாலும் கிளைத்த வெப்பங்களையும், ஐயத்தையும் நீக்கும். சுக்கில விருத்தி, ஐம்பொறிக்கு ஒளிவு இவைகளையும் உண்டாக்கும்.

அழலெல்லா மாற்றும் அரிய வுடம்பில்
அழலோடு விந்துவையுண் டாக்கும்—வழுவழுப்பைப்
பூண்டகபம் போக்கும் பொறிகட் கொளிவுசெய்யும்
நீண்ட அடப்பவிதை நெய். (அ.கு.)

## பிசின்

இதனால் வெண்ணீர் பெருகும்; நஞ்சு மருந்துகளின் வன்மையைக் குறைக்கும்.

நெஞ்ச முரக்கு நிகழ்விந்து வுங்கட்டும்
நஞ்சு மருந்துகளு நல்லமிர்தாம்—விஞ்சுகயக்
கோழை யடக்குங் குலவாது மையெனவே
வாழையடம் பின்சளிக்கு மால். (அ.கு.)

* சளி—பிசின்.

## பருப்பு.

வ-கு: நெய் எடுத்த பின்புள்ள வாதுமைப் பருப்பின் திப்பியுடனாவது, அல்லது பருப்புடனாவது கோதுமை மா சேர்த்து, அப்பஞ் செய்து நீரிழிவு நோயினருக்கு வழங்கலாம்.

பருப்பு—8, சருக்கரை—4. கருவேலம்பிசின்—1, இப் பங்குகள் எடுத்து, பருப்பை மைபோலரைத்து, பிறகு பிசின் சருக்கரை கூட்டி அரைத்து 4—8 கிராம் காலை மாலை உட்கொள்ள, அகட்டுப் புண்களை ஆற்றும். வெப்பத்தை நீக்கும். ஆண்மையும், ஐம்பொறிகளுக்கு வன்மையுந் தரும்.

பருப்பு—1, நீர்—8 பங்கு கொண்டு பருப்பைக் கொஞ்சம் நீர் விட்டு, மைபோலரைத்து, அதை மிகுந்த நீரிற் கலக்கி வடிகட்டி, வேறு நெய்ப்பைக் கொடுக்கும் மருந்துகளுக்குத் துணை மருந்தாக 15—30 மி.லி புகட்டலாம்.

பருப்பும், அத்திப்பழமும் சேர்த்தரைத்து வழங்க, கழிச்சல் உண்டாகும்.

உப்பு நீர் தெளித்து, பருப்பை இலகுவாய் வறுத்து, 5, 6 மென்று தின்ன இருமல் தணியும். தொண்டைக் கம்மல் நீங்கும்.

மணப்பாகு, இளகல் செய்தும் வழங்கலாம்.

பருப்பு ஒன்றுக்கு சீனாக்கற்கண்டு அரைப் பங்கு சேர்த்துக் கல்வத்திட்டரைத்து, பிறகு கலுவத்தில் ஒரு பக்கம்ஒதுக்கிச் சூரியனில் சாய்த்து வைக்க நெய் கக்கும். அதில் 1, 2 துளி கண்களிலிடக் கண்களிற்றங்கிய மாசுகள் நீங்கிக் கண்கள் குளிர்ச்சியடையும்.

## நெய்.

இதை 2—4 கிராம் எடை வீதம் கொள்ள, இது நெய்யின் கீழ்க் குறிப்பிட்ட நோய்களைப் போக்கும்.

தித்திப்பு மாதுளைப் பழத்திற்குள் 17—34 கிராம் நெய் செலுத்தி, செம்மண் சீலை சுற்றிக் கும்பிச் சாம்பலில் வெதுப்பி, பழத்தைக் கசக்கிப் பழரசத்தையும், நெய்யையும் உறிஞ்சி உண்ண இருமல் தணியும்.

**பிசின்.**

இதில் 2 — 8 கிராம் எடை வீதம் உட்கொள்ள, இருமல், நீர் எரிச்சல் நீங்கும். ஆண்மை பெரும். ஐயத்தைப் பெருக்கும்.

**ஓடு.**

இதைச் சுட்டுக் கரியாக்கிப் பல் துலக்கலாம்.

---

## 490. வாய்விளங்கம் —Vaivilangam.

**வே-பெ:** வாயுவிளங்கம், கேரளம், வாய்விலங்கம், வர்னனே.

**Embelia ribes.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vayu-vilangamu. | Kan. | Vayi-vulanga. |
| | | Sans. | Vidanga. |
| Mal. | Vizhalari. | Hind. | Bai-badang. |

இது கொடி வகையைச் சேர்ந்தது. இஃது இந்தியாவில் மத்திய—கீழ் இமயத் தொடர்ச்சியிலிருந்து, இலங்கை, சிங்கப்பூர் வரையிலுள்ள மலை நாடுகளில் பயிராகிறது. இதன் பழம் நல்ல மணத்துடன் சுவையாயிருக்கும்.

**ப - உ:** (பழம்), விதை.

**சுவை:** கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - காரபபு.

**செய்கை:**
- புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintics.
- அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரநகாரி—Carminative.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்நிவர்த்தநி—Stomachic.
- வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.

**குணம்:** இதனால், பாண்டு, குன்மம் மிகுபருமநோய், வாயு பாம்பு முதலாகிய நஞ்சுகள், தலை, மூக்கு, வயிறு இவைகளில் இப்பிணிகளைக் காட்டாமற்படி தடுக்கும். நுண்புழுக்களும் எருவாய்ப் புண்ணும் போம்.

பாண்டுகுட்டம் குன்மம் பருந்தூல நோய்வாதந்
தீண்டு திரிவிடஞ் சிரந்துண்டம்—பூண்டமடி
நோய்விளங்கக் காட்டாத நுண்கிருமி யாசனப்புண்
வாய்விளங்கங்காட்டவிடுமால். (அ. கு.)

**விதை.**

விதையை (வாய்விளங்கத்தைப்) பொடி செய்து, 4—16 கிராம் எடை தேனிற் குழைத்து, ஒருநாளைக்கு 2—3 முறை கொடுத்து, அடுத்தநாள் சிற்றாமணக்கெண்ணெய் கொடுக்க வயிற்றுப்புழுக்கள் செத்து வெளிப்படும்.

பொடியில் 2—4 கிராம் எடுத்து, பாலிற் கலக்கிச் சிறுவர்கட்குக் கொடுக்க, வயிற்றுப்பொருமல், செரியாமையால் காணும் வயிற்றுவலி நீங்கும்.

**வர்னனே (வாய்விளங்கம்).**

வாதகுரு வாயுடம்பு வாதமறுத் தப்படியே
வேதையுலோ கங்களிலே வேண்டினுற்—பாத
விரதமுதற் கையாட லென்று விசையும்
வர்னனே நீமனத்தில் வை. (தேரன் - வெண்பா)

வாய்விடங்கம் வளிக்குற்றத்தைத் தன்னிலைப் படுத்துவதன்றியும், இரசம், வங்கம் முதலிய உலோகங்களையும் கட்டும்.

விதையை நன்றுயரைத்து வெண்ணெயிற் குழப்பித் தலைக்குப் பற்றிட, தலைவலி நீங்கும்.

தேள் கொட்டலுக்கும், புடை முதலிய நோய்களுக்கும் விதையை அரைத்துப் பூசலாம்.

புழுக்களையும் போக்கும் அநேக மருந்து முறைகளில் இது சேரும்.

## 491. வாலுழுவை—Valuzhuvai.

**வே-பெ : வாலுளுவை, கங்குணி, மால்கங்குணி, அதிபறிச்சம்.**

**Celastrus paniculatus.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Mal-kanguni-Vittulu** | **Kan.** | **Kariganne** |
| | | **Sans.** | **Jyotishmati** |
| **Mal.** | **Cherupunnari** | **Hind.** | **Mal-kangni** |

**ப-உ :** இலை, விதை, நெய்.

**சுவை :** கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

செய்கை :
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-**Aphrodisiac.**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-**Stimulant.**
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-**Alterative.**
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-**Diaphoretic.**
- நாடியுரமாக்கி-**Nervine tonic.**

**குணம் :** வாலுழுவைக்கு, வயிற்றுக் கடுப்பு, கடுப்புடன் கூடிய குருதிக் கழிச்சல், இருமல், அனல், ஊசியில் குத்துவதுபோல உண்டாகும் கைகால் நீந்தல் போம். வயிற்றை வழிக்கும்.

வயிற்றுக் கடுப்புவலி மாறுக் கிராணி
பயித்தியங் காசமல பந்தஞ்—சயிக்கவொணுச்
சூதிகா வாதமும் போந் தொல்வா லுழுவைவிதைக்
காதிநவ சித்தர் மொழி யாம்.

(அ.கு.)

மேலும் இது, ஐயத்தாலுண்டாகும் சிற்சில நோய்கள், பாரிசவாயு கைகால்களில் திமிரோடுங்காணுகிற ஒரு விதக் குத்தல், குடைச்சல், ஹீல் வாயுவில் உண்டாகும் நோக்காடு இவைகளையும் போக்கும்.

**வித்து.**

வித்தைப் பசுவின் நீர் விட்டரைத்து, அந் நீரிலேயே குழப்பி, பக்குடனுள்ள புண்களுக்குப் பூசத் தீரும்.

விதையைக் களி கிண்டி நாட்பட்ட புண்களுக்கு வைத்துக்கட்ட, வெ.கு. விரைவில் உலரும்.

விதையைப் பொடி செய்து, நாள் ஒன்றுக்கு 2—3 முறை 1—2 கிராம் எண்டவீதம் கொடுத்துவர, இருமல், கடுப்புடன் கூடிய குருதிக் கழிச்சல், வயிற்றுக்கடுப்பு, பெரும்பாடு, அழல் இவை தீரும். இதையே பாலில் காய்ச்சியுண்ண மேனியுண்டாகும்.

## 492. வாலேந்திரபோளம்—Valendraholam.

வே-பெ : குங்குமதிபம், குந்துரு, வெள்ளைப்போளம்,
வெள்ளாத்திபோளம், மீறு.

Balsamodendron myrrha

Eng.—Myrrh.

| | |
|---|---|
| Tel. Balintra-polamu | Sans. Gandha-Rasaha |
| Kan. Bolā | Hindi. Bola |

இஃது அரேபியா, அபிசீனியா நாடுகளில் பயிராகும் மரத்திலிருந்து ஊறி எடுத்து சேகரிக்கப்படும் பிசின். இது கட்டிகளாயும், சிவப்பும் கறுப்பும் கலந்த நிறமாயும், காரமாயு மிருக்கும். எளிதில் தூளாகும். நீரில் இறுகும். சாராயத்தில் கரையும்.

சுவை.—கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-stimulant.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.
- பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி-Stomachic.
- உரமாக்கி-பலகாரி-Tonic.
- அகட்டுவாய்வகற்றி-உதரவாதஹரகரி-Carminhtive.

குணம் : இதனால் கீல்பிடிப்பு, இளைப்பு நோய், நமைச்சல், கரப்பான், குன்மம் இவைகள் போவதுடன், சூதகக்கட்டு, சூதகப் பாண்டு, பாண்டு, ஐயநோய்கள், இரைப்பு, மந்தம், ஆறுப்புண், வாய்ப்புண், கருப்பை நோய்கள் ஆகியவைகளும் நீங்கும்.

சூலைகய ரோகம் சொறிகரப்பான் குன்ம மிவை
ஆலைவா யின்கோல்போல் ஆகுங்காண்—நீலசக்கர
வாளமெனத் தோற்றுமுலை மாதரசே! வாலேந்திர
போளந் தனையெடுக்கும் போது.

வ - கு : இதைப் பொடித்து ½—1 கிராம் எடை கொடுக்க, சூதகக் கட்டு, சூதகப்பாண்டு முதலிய கருப்பையைப் பற்றிய நோய்களும், இரைப்பு, மந்தம், பாண்டு, ஐயம் ஆகியவைகளும் குணப்படும்.

| | | |
|---|---|---|
| வாலேந்திரபோளம் | 1-அவுன்ஸ் | இவைகளைப் பொடித்து வடிகட்டி குல்கந்தைச் சேர்த்து நன்றாய்க் கலந்து, 5—10 உழுந்தெடை கொடுக்க கழிச்சலையுண்டாக்கி சூதகத்தடை முதலிய நோய்களைப் போக்கும். |
| கரிபோளம் | 2 ,, | |
| குங்குமப்பூ | ½ ,, | |
| குல்கந்து | 2½ ,, | |

இத்துடன் கரியபோளம், அயம் சேர்த்துக் கொடுக்க, சூதகக்கட்டு நீங்கும்.

இதைக், கரியபோளத்துடனும் அன்னபேதியுடனும் சேர்த்துக் கொடுக்க, வாத நோய், சூதகக்கட்டு முதலிய நோய்கள் போகும். (கரியபோளத்தின் கீழ்க் காண்க.)

பற்பொடிகளிற் சேர்த்துப் பல் விளக்க, வாய் நாற்றம், ஈறு வளர்ச்சி, தொண்டைப் புண் குணமாகும்.

## 493. வாழை—Vazhai.

வே - பெ : அம்பணம், அரம்பை, ஓசை, கதலி, கவர், சேகிலி, திரணபதி.

Musa sapientum.

Eng—The Plantain tree

| | | | |
|---|---|---|---|
| Tel. | Atrai / Kadali | Sans. | Kadali |
| Mal. | Vazha | Pers. | Moug |
| Kan. | Bale. | Duk. | Maoz. |

வாழை : இது, பனை, தெங்கு போல் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாததா யிருப்பதால், இஃது இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் வைத்துப் பயிர் செய்யப்படுகிறது. இதில் பல வகைகளுண்டு. அவை : (1) அடுக்கு வாழை, (2) இரசதாளி வாழை, (3) கருவாழை, (4) கொட்டை வாழை, (5) செவ்வாழை, (6) நவரை வாழை, (7) நாட்டு வாழை, (8) பசும் வாழை, (9) பேயன் வாழை, (10) மலை வாழை, (11) மொந்தன் வாழை, (12) வெள் வாழை போல்வனவாம். இவற்றுள் அகத்தியர் குணபாடத்தில் என்ன வகை வாழைப் பழத்தின் குணம் கூறப்பட்டிருக்கிறது. அதை வாழைக் குணத்தின் கீழ்க் காண்க. ஈதன்றி மலையாளம், தெலுங்கு, கன்னட நாடுகளிலும், வட நாடுகளிலும் வளரும் வாழைகளில் பல வகைகள் உண்டு.

ப - உ : இலை, பூ, பிஞ்சு, காய், பழம், பட்டை, கட்டை, தண்டு, நீர்.

பூ, பிஞ்சு, காய்.

சுவை—துவர்ப்பு, தன்மை - தட்பம், பிரிவு - கார்ப்பு.

நீர், கட்டை, தண்டு.

சுவை—துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

பழம்

சுவை—இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை :

பூ. பிஞ்சு, காய்.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
நீர்
குருதிப்போக்கடக்கி—ரக்தஸ்தம்பனகாரி—Styptic.
கட்டை, தண்டு.
பித்தமடக்கி—பித்தசாந்தநி—Antipitta.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
இலை, பட்டை.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant.
பழம்
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
மலமிளக்கி—மலகாரி—Laxative.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutritive.

**குணம் :** வாழைக் கிழங்கு (கட்டை) சூட்டைத் தரும். தண்டு குடரிற் சிக்கிய மயிர், தோல், நஞ்சு இவைகளை விடுவிக்கும். பூ வெள்ளையைப் போக்கும். பிஞ்சு மூலக் கடுப்பைத் தீர்க்கும். காயால் உடல் முற்றும் வாயு உண்டாகும்.

நற்கதலிக் கந்தமனல் நல்குந்தண் டோகுடலிற்
சிக்குமயிர் தோல்நஞ்சுந் தீர்த் திடுங்காண்—தொக்குறுபூ
மேகமொழிக் கும்பிஞ்சால் வெங்கடுப்பே கும்காயால்
தேகமுழுக் கக்காலாந் தேர். (அ - கு.)

**எண் வகை வாழைப்பழம் இவை எனலும் அவற்றின் குணமும் '—**

(1) செவ்வாழை, (2) வெள்வாழை, (3) இரசதாளி வாழை, (4) மொந்தன் வாழை, (5) அடுக்கு வாழை, (6) மலை வாழை , (7) பச்சை வாழை, (8) கருவாழை என்கிற எண் வகைப் பழங்களுள் முதற் கூறிய 4-ம் நோயினர்க்கு ஆகும். மற்ற 4-ல் கருவாழை நன்மை தரும். இவ் வெட்டு வகைப் பழங்களும் வளி நோயினர்க்குதவாது. ஆனால், வாழைக்கு எதிர்ப் பொருள்களோடு சேர்த்துண்ணக் குற்றமுண்டாகாது.

செவ்வாழை வெள்வாழை சேர்ந்தரச தாளிமொந்தன்
ஒவ்வுமிவை நோயோர்க் குலகத்தில்—கவவடுக்கு
வாழைமலை வாழைபசும் வாழைகரு வாழைகளில்
ஊழிக்கு வாழைநன்றும் ஓது.

ஓதலுற்ற வாழையெட்டில் உற்ற கனிகளெல்லாம்
வாதநோய்க் காகாது வையகத்தோர்—போதவுண்ண
எண்ணமுண் டாயின் இதற்கியைந்த சத்துருவோ
டுண்ண இடரில்லை உரை. (அ-கு.)

**வாழை**

வங்கத்தை யெல்லாம் வளைத்திடலா லுண்டவரை
யங்கத்தைப் பொன்போ லணைத்திடலாற்—றுங்கி
யுரமிகவிந் தைப்பெருக்கி யுண்மை தரலால்
அரமகளைத் தேயுவென லாம். (தேரன்-வெண்பா.)

வாழைக்கனி, கெடுதிகளைத் தரும் மந்தப் பிணிகள் யாவற்றையும் விளைவிக்கும். ஆகிலும், உடலைப் பொன்போலக் காத்து, உரமாக்கி விந்துவைப் பெருக்கும்.

**வாழைப்பூ குடிநீர்.**

கருவாங் கதலிப் பூமுத்தங் கமழ்வி டத்தேர்க் கொழுந்தெங்கின்
னுருவ்வார் பாளை பெருமரத்தோ லொனிர்மா துளம்பிஞ் சிருகழஞ்சு
தருவார் நீர்வார்த் தெட்டொன்றுய்ச் சுருக்கிலவம்பி சின் விடயம்
ஒருமாத் திரையாய்க் கொண்டக்கா லுயரதிசார மொழிந்திடுமே.

**(பொ - ள்).** வாழைப்பூ, முத்தக்காசு, விடதாரி, பிஞ்சுத் தென்னம் பாளை, பெருமரத்தோல், மாதுளம் பிஞ்சு ஆகிய இவைகளை வகைக்கு 12 கிராம் எடுத்து ஒன்று சேர்த்து, அதற்குத் தக்க நீர் விட்டு, அதை எட்டில் ஒன்றுய்க் காய்ச்சி, அக்குடி நீரை, இலவம் பிசினியையும், அதிவிடயத்தையும் ஓர் அளவாக எடுத்துக் கூட்டி இடித்து, அதில் சிறிது கூட்டிக் கொடுக்க வெள்ளை. பெருங் கழிச்சல் அகலும்.

**வாழை**

**வாழையின் கனியரை வாதமாய்க் காய்முழு**
**தாழுமம் மருந்தவ ரக்கினிமூலம்.**

(தே - கர.)

(பொ - ள்.) வாழைக்காய், பிஞ்சாயிராமல், அரைக்காயாயிருந்தால் புளிக்குற்றத்தையும், முழுக்காயா யிருந்தால் மருந்திற்குக் கெடுதியையும் வாழைப் பூவானல் மூலச்சூட்டையும் உண்டாக்கும்.

### வாழைப்பழத்தின் பொதுக் குணங்கள்.

வாழைப் பழத்தால், உடம்பை வெளுக்கச் செய்கிற நோய், அழற் பிணிகள், மதநோய், மூர்ச்சை ஆகியவை போம்.

சுத்தஅ ருச்சுனஞ்செய் சோமநோய் என்பதுவும்
பித்தநோய் என்னப் பிறந்தவையு—முற்றி
வரம்பைக் கடந்த மதமூர்ச்சை யும்போம்
அரம்பைக் கனியுண் டறி.

(அ—கு)

### பேயன் வாழை பழத்தின் குணம்.

இதனல் வெறியும் உட்சூடும் நீங்கும். வளிப்பெருக்கும், மிகு குளிர்ச்சியும், கழிச்சலும் உண்டாகும்.

பேயன் பழமருந்தில் பித்தரோ கம்போகும்
வாயுவுண்டாகும் மலங்கழியும்—தீயே
தகத்தில் அதிகுளிர்ச்சி ஆகும் அணங்கே !
சகத்தில் இதையறியச் சாற்று.

### மொந்தன் வாழைப் பழத்தின் குணம்.

இதனல், மந்தம், உடல் வலியுடன் பாரிப்பு, இசிவு, ஐயம், முக் குற்றம், நீர்வேட்கை இவை உண்டாம். மன உறுதியைப் போக்குகிற பித்தம், காமாலே, கொழுப்பைப்பற்றிய வறட்சி இவை நீங்கும்.

மந்தமுடன் நோய்கனத்தல் வாதம் வலிசீதம்
தொந்தமறு தாகமிவை தோன்றுங்காண்—புந்திவலி
ஓட்டுபித்தங் காமாலே உள்வறட்சி யுந்தொலேயும்
நாட்டுமொந் தன்பழத்தினல்.

(அ - கு.)

### நவரை வாழைப் பழத்தின் குணம்.

இதனல், மந்தம், தினவு, வளி ஐயக்கூட்டு, கரப்பான் இவை பெருகும்.

மாந்த மொடுநமைச்சல் வாதகப மும்பெருகும்
பாந்தல் உறுகரப்பான் பாவுங்காண்—பூந்தடக்கை
யாழைப் பழித்தமொழி அன்னமே ! கேள் நவரை
வாழைப் பழத்தால் மதி. (அ - கு.)

### குணமும் வழக்கும்-வாழையிலே

வாழை இலேயில் உணவு கொண்டால், உடலின் தோல் பளபளப்பும், நல்வாழ்க்கையும் பொருந்தும். மந்தம், வன்மை இன்மை, இளைப்பு, இவைகள் அணுகா. அழல் குற்றத்தை தன்னிலேப்படுத்தும்.

தொக்கினுறு மின்னுஞ் சுகபோ கமுமன்னும்
அக்கினி மந்த மபலமொடு—திக்கிடுகால்
பாழை யிலேப்புமறும் பன்னுபித்த முஞ்சமனும்
வாழை யிலேக்குணரு வாய். (அ—கு)

வாழைத் தளிரான இலையை, தீ எருவையிட்டு புண்ணுகினதற்கும், நெருப்பு அல்லது வெந்நீர்ப் பட்டதாலுண்டாகும் புண்களுக்கும் வைத்துக் கட்டினுல், புண் சீக்கிரத்தில் உலர்ந்துவிடும். இலையின் மேற்புறத்தை இரண்டு நாள் வைத்துக் கட்டின பிறகு, அடிப்புறத்தை வைத்துக் கட்டவேண்டும். உலர்ந்து வருகின்ற புண்களுக்கு எண்ணெய்ச் சீலையை மடித்து மேலே போட்டு வாழையிலையை வைத்துக் கட்டிக் கொண்டு வந்தால், துணி எண்ணெயாகவேயிருக்கும். புண் சீக்கிரத்தில் உலர்ந்துவிடும். வாழையிலைக்குச் சிற்ருமணக்கு நெய் தடவி புண்களுக்கு இடலாம். இந்த இலையை, கண்ணோவுக்கும், கண் மறைவுக்கும் வைத்துக் கட்டினுல் வெளிச்சத்திற்கு மறைவாயும் குளிர்ச்சியாயுமிருக்கும்.

### பூ.

இது, குருதிமுளை, வெள்ளை, வெறி உடல் கொதிப்பு, சீதக் கழிச்சல், எருவாய்க் கடுப்பு, இருமல், கை கால் எரிச்சல் இவைகளை நீக்கும். ஆண்மை தரும்.

வாழைப்பூ மூலரத்தம் மாபிரமி வெட்டைபித்தம்
கோழைவயிற் றுக்கடுப்பு கொல்காசம்—ஆழியனல்
என்னஎரி கைகால் எரிவுந் தொலைத்துடலில்
மன்னவளர்க் குந்தாது வை. (அ - கு.)

மேற்கண்ட பண்புகளைப் பெற, இதைச் சமைத்துண்ணலாம்.

இதை இடித்துச் சிற்ருமணக் கெண்ணெய் விட்டு வதக்கி, கை, கால் எரிச்சலுக்கு ஒற்றிடமிட்டுப் பிறகு இதையே வைத்துக் கட்டலாம்.

இதன் சாற்றுடன் சிறு பனங்கற்கண்டு கூட்டி உட்கொள்ள, குருதி வெள்ளை, வெள்ளை, வயிற்றுக்கடுப்பு இவை போம்.

இதன் இளம் பூவை புட்டிட்டுச் சாறெடுத்து, பனங்கற்கண்டு சேர்த்துப் பெரும்பாடுடையவர்கட்கு வழங்கலாம்.

### பிஞ்சு

இதற்கு, குருதிக்கடுப்பு, உள்வளைய குருதிமுளை, அடிக்கடி சிறுநீரிழிதல், கீழ் வயிற்றுப் புண் போம்.

உதிரம் விழுகடுப்போ டுண்மூல ரத்தம்
எதிரிலுறுநீரிழிவும் ஏகும்—மதிநுதலே
பேழை வயிற்றுப்புண் பேருந் துவரார்ந்த
வாழக்கச் சற்கு மருண்டு. (அ.கு.)

இது மேற்கண்ட நோய்களுக்குப் பத்திய உணவாம்.

### காய்

இதனுல், வளிதீக் குற்றங்களாலுண்டான கழிச்சல், வாய் நீரூறல். உமிழ் நீரச்சுரப்பு, வயிறுளைதல், உடல் வெப்பம், இருமல் இவைபோம். இது, குருதிப் பெருக்கையும், வன்மையையும் உணவில் விருப்பத்தையும் மிக அளவில் உண்பதையும் உண்டாக்கும்.

வாந்திபித் தம்பேதி வாய்நீர் வயிறுளைதல்
ஆர்ந்தவ னலங்காசம் அண்டாதாம்—சூழ்ந்தேறு
செம்புனலுந் தென்புமுண்டாம் திண்டி மிகப்பெருகும்
அம்புவியுள் வாழையின் காய்
(அ-கு.)

இதைச் சமைத்துண்ண மேற்கூறிய குணங்களைப் பெறலாம்,

### வாழைக் கிழங்கில் ஊறுகின்ற நீர்

இந் நீரை, காலை மாலை 80—169 மி.லி. வீதம் சாப்பிட்டு வர குளிர்ச்சியையும் வண்மையையும் உண்டாக்கும். பெரு வயிறு, சிறுநீர் எரிச்சல் அதில் குருதி வீழல்வயிற்றுப் புண், உடல் வெளுத்து கழிச்சலை உண்டாக்கும் நோய். உளேச்சல், அழலை இவைகளை வராமற்படி, தடுக்கும். தொண்டையில் கோழை அயர்வு, உழலைநோய், பாண்டு எலும்புருக்கி) ஆகியவை நீங்கும்.

இந்நீர் சீத குணமுடையது.

வாழைநீர் தான்குளிர்ச்சி வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே!—வீழுவல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குந் தெரி.
சோமரோ கங்க டுலையு மிளைப்புழலை
நாமமுறும் பாண்டுவகை நாடாதே—பூமிதனில்
காழை எலும்புருக்கி காணு வணங்கரசே!
வாழைநீர்க் கென்றுளத்தில் வை. (அ.-கு.)

### பட்டை.

அடிக்கடிக் கிடைக்கக்கூடாத பச்சிலை முதலியனவற்றைச் சின்னாள் மட்டும் பச்சையாகவே வைத்திருக்க, இதன் பச்சைப் பட்டைக்குள் மூடி வைத்து வரலாம்.

பட்டை உலர்ந்தபின் நாரெடுத்துப் பூமாலைகளைக் கட்டலாம். மேலும் வாழைநார் துணிகள் நெய்யவும் பயன்படுகிறது.

வாழைப்பட்டை சரகு முதலியனவற்றை உலர்த்தி எரிந்த சாம்பலை நீரிலிட்டுத் தெளிவிறுத்திய நீரைக்காய்ச்சின் உப்பாம். இவ்வுப்பு சிறுநீரைப் பெருக்கும் தன்மை யுடையதாம்.

வாழைச் சருகு, எள்ளுச் செடி, பனைவேர், புகையிலை, நாயுருவி இவைகளின் சாம்பல் ஓர் நிறையாகக் கொண்டு மேற் கூறியவாறு செய்யும் உப்பு சாலச் சிறந்ததாகும். இஃது குழந்தைகளுக்குண்டாகும், ஈரல் நோய்களைப் போக்கும். பெருவயிறு, சோகை இவைகளையும் போக்கும்.

### தண்டு-கிழங்கு .

இதை இடித்துப் பிழிந்த இரசத்திற்கு மூத்திரத்தைப் பெருக்கும் செய்கையிருப்பதாலும், இதில் வெடியுப்பின் சத்தும் சேர்ந்திருப்பதாலும் நீர்க்கட்டு, நீர் எரிவு, இரத்தக்கிரிச்சரம் இவைகளைப் போக்க இதை உபயோகிக்கலாம். நோய் கடினமாயிருந்தால், இதன் இரசத்துடன் வெடியுப்பு வெங்காரம், படிகாரபற்பம், அல்லது சுன்னம சேர்த்துக் கொடுக்கலாம்.

கிழங்கின் இரசத்தினால் வெடியுப்பு மேலான சுத்திபெறும்.

கிழங்கை இடித்து அதிலுள்ள நீரைப் போக்கித் திப்பியை அடிபட்ட வீக்கங்களுக்கு வைத்துக் கட்டலாம்.

கிழங்கில் இரசம் (பாதரசம்) நீறும்.

---

## 494. விடத்தேர்—Vidather.

வே - பெ : விடத்தேரை, விடதாரி.

**Mimosa cinerea,**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vetturu | Sans. | Virvriksna |
| Mal. | Vidatheri | Hind. | Varadari. |

இஃது இந்தியாவில் சரதாரணமாய் தென்பாகத்தில் பயிராகிற சிறு செடி.

ப -உ : சமூலம், பிசின்.

சுவை : துவர்ப்பு, தன்மை : தட்பம், பிரிவு -இனிப்பு.

செய்கை :
சமூலம்.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.
பட்டை.
வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
உரமாக்கி-பலகாரி-Tonic.
பிசின்.
உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent

பண்பு : இதனால், முளையை வருவிக்கின்ற மூலம், வயிற்றுப் பிடுங் கலையுடைய பெருங்கழிச்சல் குருதிக்கழிச்சல், ஆகியவை போம்.

முளையைவரு விக்கின்ற மூலரோ கத்தை
யளையுமுதி ரத்தை யடங்கா—துளைதாக
வேகத்தைப் போக்கிவிடும் வெய்யவிடத் தோசக்கிர
வாகத்தைக் காய்முலையாய் வாழ்த்து. (அ.கு.)

பிசின்.

பிசினுக்கு, வெள்ளைநோய் வகைகளையும் கரப்பான் முதலியனவும் விலக்கும் தன்மை உண்டு.

விடத்தேரின் றன்பிசின்றன் வெண்மேகம் போக்கும்
அடுத்தபிர மேகத்தை யாற்றுந்—தொடுத்த
மேகக் கரப்பானை விட்டோட்டும் என்றுலகில்
நாகரிக மாதே நவில். (அ.கு.)

வ - கு : இதன் கொழுந்தைக் கசக்கிக் கண்களில் பிழிய, கண் நோய் தணியும்.

இதன் பட்டையைப் பொடிசெய்து தினத்திற்கு 2, 3 முறை 2 முதல் 6 கிராம் வீதம் கொடுக்க மூலம், குருதிக் கழிச்சல் முதலியன தீரும்.

இதன் பிசினை 2 முதல் 4 கிராம் வீதம் நாளைக்கு இருமுறை கொள்ள வெள்ளை, வெட்டை, கரப்பான் போகும்.

இதன் பட்டைத் தூளுடன் இரசம் சேர்த்தரைக்க மடியும்.

## 495 விராலி Dodanea viscosa

| | | | |
|---|---|---|---|
| Tel. | Bandava (chettu) | | |
| | Buriya | | |
| | Chettipa | Mal. | Vavali. |

இது இந்தியாவில் மலைநாடுகளில் எங்கும் பயிராகிற செடி.

ப-உ : இலை, பட்டை.

சுவை : கைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை :
துவர்ப்பு-ஸங்கோசனகாரி—Astringent.
உரமாக்கி-பலகாரி—Tonic.
கோழையகற்றி-கபஹரகாரி—Expectorant.

குணம் : இதன் இலை பெருமைதங்கிய துருசை வெளுப்பாக்கும், அன்றியும் அடிகனத்த கட்டிகளையும் வீக்கத்தையும் போக்கும்.

ஆன்ற துருசுநீ ருகமனத் துன்னில்லே
ளூன்ற வருகட்டி யோடதைப்புத்—தோன்றிற்
சுராலிக் குதலையிளந் தோகாய் ! விரைவாய்
விராலிக் குழையோடு விள். (அ-கு.)

வ-கு : இதன் இலையைச் சிற்றுமணக்கு நெய் விட்டு வதக்கி, வீக்கங்களுக்கும் கட்டிகளுக்கும் வைத்துக் கட்டிவர, வெகு சீக்கிரத்தில் அவைகள் போம்.

இந்த இலையிலிருந்து சாறு எடுப்பது கடினமே. துருசு சுன்னமிட்டுப் பிழிய சாறு வரும். இதனால் பாதரசம் கட்டுப்படும். மேலும் இதன் இலை, துருசைச் சுன்னஞ் செய்யும்.

இதன் உள்பட்டை மிகக் கைப்புடையது. இதைச் சின்கோனு (Chinchona) வுக்குப் பதிலாக வழங்கலாம் என்பது சிலர் கொள்கை.

---

## 496. விலாமிச்சு வேர்—Vilamichu-ver.

| | | | |
|---|---|---|---|
| Mal. | Iruveli | Sans. | Hreeberam |

இஃது, இந்தியாவில் பூந்தோட்டங்களில் வைத்துப் பயிராக்கும் ஒருவகை பூண்டு. இதன் வேருக்கு நறுமணமுண்டு. இதை இந்திய மாதர்கள் மிகப் பிரியமாகக் கொண்டையில் அணிவார்கள் இதனால் கூந்தல் மணம் பெறும்.

ப-உ : வேர்.

சுவை : கைப்பு, தன்மை-சீதம், பிரிவு-இனிப்பு.

செய்கை :
குளிர்ச்சியுண்டாக்கி - சீதளகாரி-Refrigerant.
பித்தமடக்கி-பித்தஹரகாரி-Anti Pitta.

குணம் : விலாமிச்சம் வேருக்கு, நீரிழிவு, கண்ணெரிவு, குருதியலி நோய், நீர்வேட்கை, வெறி, மயக்கம், மூர்ச்சை, சோபை, தலைவலி, தீச்சுரம் போம்.

மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தந் தள்மயக்கம்—சோகஞ்
சிரநோய் இவையேகுஞ் செய்யவிலா மிச்சுக்
கெரிசுரமும் இல்லை யிசை.

வ-கு : இதன் தைலத்தை வாரத்துக்கொருமுறை முழுக்குத் தை மாகச் கொள்ள மேற்கண்ட நோய்கள் விலகும்.

---

## 497. வில்வம்—Villvam.

வே - பெ. குசாபி, கூவிளம், கூவிளை, சிவத்துருமம், நின்மலி மாலூரம்

Aegle marmelos

Eng. Bael (tree).

| | | | |
|---|---|---|---|
| Tel. | Bilvamu | Sans. | Bilva |
| Mal. | Kuvalam | Pers. | Shul. |
| Kan. | Bela. | Hind. | Bel. |

இஃது இந்தியா முற்றும் பயிராகும் மரம்.

ப-உ : இலை, பூ, பிஞ்சு, காய், பழம், வேர், பிசின், பட்டை, ஓடு, வேர்ப்பட்டை.

இலை, பூ, பிஞ்சு, காய், வேர்.

சுவை துவர்ப்பு, கைப்பு, தன்மை -தட்பம், பிரிவு-கார்ப்பு.

பழம்.

சுவை துவர்ப்புடன் சிறுகைப்பு ,, ,, ,,

சுவை கூடிய இனிப்பு ,, ,, ,, ,,

செய்கை :

இலை.

வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி—Diaphoretic.
காமம்பெருக்கி-காமவர்த்தநி—Aphrodisiac.
வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி—Febrifuge.

பூ, பிஞ்சு, காய்.

துவர்ப்பி-ஸ்ங்கோசனகாரி—Astringent.
செரிப்புண்டாக்கி-பாசநகாரி—Digestive.
பசித்தீத்தூண்டி-ஜடராக்னிவர்த்தநி—Stomachic.

பழம்

துவர்ப்பி-ஸங்கோசனகாரி—Astringent.
எரு இளக்கி மலகாரி—Laxative.
பசித்தீத்தூண்டி ஜடராக்னிவர்த்தநி—Stomachic.

வேர், பிசின்

ஆண்மை பெருக்கி—காமவரத்தநி— Aphrodisiac.

குணம் : வில்வத் தளிர்—எல்லா மேகத்தையும். பூ—மந்தத்தையும், பிஞ்சு—குன்மத்தையும், பழம்—கண்ணிருளையும். ஈசின் வெண்ணீர் குறைவையும் நீக்கும்.

பல்லவம்பூ பிஞ்சின் பழநிரியம்சம் முறையே
வல்லவம் மேகமந்த மாகுன்மம்—செல்லுகின்ற
நோக்கமருள் விந்துநட்ட நூறு மடுக்தவர்கட்
காக்கமருள் வில்லுவத்தி லாம். (அ-கு.)

**வில்வம்.**

மாலூரத் தாலே மடக்களுர்போ மாந்தவரா
மாலூரத்தாலே மடிவபோன்—மாலூரம்.

(தே-ய.)

(பொ-ள்.) வில்வத்தினது காய், கனி, இலை, வேர், முதலானவைகளை பளே, ஊறுகாய், குடிநீர், தைலம் ஆகிய எந்த விதமாகிலும் செய்து உட்கொள்ள, அது, உடற்கு அழகையும் மாண்மையையும் கொடுக்கும்; மயக்கம், குழறிப்பேசும் தன்மை இவற்றை நீக்கும்.

வேருக்கு : குன்மம், முக்குற்றத்தின் கேடு, சோபை, ஐயத்தாலுண்டான நீர் வேட்கை, சுரம், நீரேற்றம், முப்பிணி, உடல் கடுப்பு, இவைகளையும் நீக்கும்.

வில்லலுவத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்.
சொல்வொணு பித்தந் தொடர்சோபை—வலகப
தாகசுரம் நீரேற்றஞ் சந்நியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே.

வில்லத்தின் வேரை மருத்துவ முறைப்படிக் கொள்ளின்
பசித்தீக்கேடு, சுவயின்மை, பெருங்கழிச்சல், விக்கல்
அழல் சுரம், இடைவிடா வாந்தி, உடல் இளைத்தல் ஆகியவை
நீங்கும். அன்றியும் அழகையும் உடற்கு வன்மையையும் தரும்.

அக்கினி மந்தம் அரோசிந்தி சாரம்விக்கல்
நிற்கரிய பித்தசுரம் நீள்வாந்தி—சுடகநோய்
ஆதிய நோய் ஏகும் அழகோடு புஷ்டியுண்டாம்
கோதில்வில்வ வேரதனைக் கொள்.

**இலே.**

வ-கு : இது சிவன் கோவிலில் அர்ச்சனை செய்யும் பத்திரங்களுள் சிறந்தது.

இளந்தளிரை வாட்டித் துல்லிய சீலையில் முடிந்து ஒற்றியிட மேகத்தாலுண்டாகும் கண் சிவப்பு நீங்கும்.

**வில்வவேர்க் குடிநீர்.**

வில்வ பத்திரி வேர்ச்சிறு முட்டியும்
வல்ல சுக்கும் வளம்பெறக் காய்ச்சியே
நல்ல தேனில் நயந்து குடித்திடக்
கொல்ல வந்திடுஞ் சத்தி குறுகுமே [தே-கு.]

(பொ-ள்) வில்வபத்திரி வேர், சிற்றுமட்டி வேர், சுக்கு இம்மூன்றையும் சேர்த்துக் காய்ச்சி எட்டில் ஒன்றாய்க் குடித்து, தேனைக் கலந்து அருந்த கொடிய முப்பிணி, வாந்தி தீரும்.

வில்வ வேருடன் விளர்நன் னுரியும்
புல்லு பயறுடன் பொரியுடன் வெல்லமும்
நல்ல நீர்க்குறு ணியைநாழி யாக்கியே
சொல்லு நீர்வாந்தி யுஞ்சுரமுஞ் சோருமே.

(பொ-ள்.) வில்வவேர், விளாவேர், நன்னாரி, சிறு பயறு, நெற்பொரி, வெல்லம் இவற்றை ஒன்று சேர்த்து, 11 லிட் நீர் விட் டொரு 1 லிட் அளவில் வற்றுமாறு செய்து அருந்த, வாந்தியும் சுரமும் நீங்கும்.

இலை 1-க்கு நீர் 4 பங்குக்குக் கூட்டி நாலிலொன்றாக வடித்த குடிநீர், வயிற்றுக்கடுப்பு, மேகவாயு இவற்றைப் போக்கும். சுரத் திற்கும் கொடுக்கலாம்.

இலைச் சாற்றைப் பிழிந்து, உடனே அதில் மிளகுத்தூள் சிறிது சேர்த்துக் கொடுக்க சோபை, காமாலை தீரும். மேற்படி சாற்றுடன் நீர் அல்லது தேன் கூட்டிக்கொடுக்க, மூக்குநீர் பாய்தலும், சுரமும் போம், ஒரு முறை கழியச் செய்யும்.

பசுவின் நீர் விட்டு இலையை இடித்துப் பிழிந்த சாற்றில் 30—170 மி.லி. வீதம் கொடுத்து வர, பாண்டு, சோபை, வீக்கம் போம் புளி ஆகாது.

## பூ.

இதைக் குடிநீரிட்டேனும், உலர்த்திப் பொடி செய்தேனும மந்தத்தைப் போக்க வழங்கலாம் (குடி நீர் 40—80 மி.லி., பொடி. 260—1,040 மி. கி. வாகும்.)

## பிஞ்சு.

இளம் பிஞ்சை அரைத்து, 2—6 கிராம் எருமைத் தயிரில் கலந்து கொடுக்க, வயிற்றுக்கடுப்பு, குன்மம், சீதக்கழிச்சல் நிற்கும். இம் முறை சிறு பிள்ளைகளுக்கே பெரும்பாலும் வழங்கப்பட்டு வருகிறது.

## காய்.

இதைப் பசுவின் பால் விட்டரைத்துத் தலைக்குத் தேய்த்து நீரா மண்டைச் சூடு, கண்ணெரிச்சல் நீங்கி, கண்கள் குளிர்ச்சியடையும்

காயை வெட்டி வெயிலில் உலர்த்தி பொடி செய்து, சிறுவர்கட்கு 1—2 கிராம் எடையும் முதிர்ந்தவர்கட்கு 2—4 கிராம் எடையும் தினம் இரு முறை கொடுத்து வர, சீதக்கழிச்சல், குருதிக் கழிச்சல் நிற்கும். காயுடன், இஞ்சி, சோம்பு, சேர்த்துக் குடிநீரிட்டு, மூலநோய்க்குக் கொடுத்து வரலாம்.

## பழம்.

(வில்வப்பழத் தைலம்.)

வில்வப்பழம், கார் போகி, வெந்தயம் வகைக்கு 34 கிராம் எடுத்து பசுவின் பால் விட்டரைத்து, 680 கிராம் எண்ணெயிற் கலக்கிச் சிறுதீயிட்டெரித்து வடித்து, தலை முழுகிவர, கண்ணெரிச்சல் தலை வலி, உடல் அழல், மூளையைப் பற்றிய நோய் நீங்குவதுடன உடலுக்கு அழகும் வன்மையும் உண்டாகும்.

(பழச்சத்து.)

பழச் சதையை ஒரு சட்டியிலிட்டு, அது மூழ்கும்படி நீர் விட்டு, மூன்று மணி வரையில் துடுப்பால் கிளறித் துழாவி, கனத்த சீலையில் வடிகட்டி, வடிகட்டிய திப்பிக்கு அது மூழ்கும்படி மறுபடியும் நீர் விட்டு முன் போலவே செய்து வடி கட்டிய நீரை முன் வைத்துள்ள வடிகட்டிய நீருடன் சேர்த்து, இப்படி மொத்தத்தில் 4—5 முறை செய்து, கடைசியில் அந்நீரை நீராவியால் சுண்டக் காய்ச்சி, மெழுகு பதத்தில் எடுத்து வைத்துக் கொண்டு 2—4 கிராம் எடை வீதம் நாள் ஒன்றுக்கு 2—3 முறையாகக் கொடுத்து வர, இளைப்பு நோயில் காணும் கண குளிரும். குருதிப் போக்கு, கழிச்சல், சீதக்கழிச்சல் போம்.

(மணப்பாகு.)

பழச்சத்தை ஒரு பங்கிற்கு இரண்டு பங்கு நீர் விட்டரைத்து வடிகட்டி, சருக்கரை ஒரு பங்கு அல்லது இனிப்பு வேண்டின் அதற்குத் தக்கபடி கூட்டி நாள் ஒன்றுக்கு 2—3 தரம் 80—170 மி. இ. வீதம் உட்கொள்ள குடலுக்கு வலிவை கொடுத்து கழிச்சலை நிறுத்தும்.

(பொடி.)

பழச்சதையை நன்றாக உலர்த்திப் பொடி செய்து, கழிச்சல் நோய்க்கு 2—4 மி.இ. எடை வழங்கலாம்.

(இலேகியம்.)

வில்வ வேரைக் கொண்டு செய்யும் இலேகியம் " **வில்வாதிலேகியம்** " என வழங்கும். இதன் குணத்தை " சித்தர் உறை விளக்கத்திற் " காண்க.

## 498. விழலரிசி – Vizhlorisi.

விழல், இந்தியாவில் எங்கும் பயிராகும் புல்லினத்தை சார்ந்தது. இதிலுண்டாகும் நெல்லின் உமியை நீக்க அரிசியாகும்.

**சுவை** :- இனிப்பு, தன்மை-தட்பம, பிரிவு-கார்ப்பு.

**செய்கை** :
- தாதுவெப்பகற்றி—ஸமனகாரி—Sedative.
- துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
- பசித்தீத்தூண்டி—ஜடராக்கினிவர்த்தநி—Stomachic.

**குணம்** : விழலரிசியால் தீக்குற்றம் பெருக்கும், குடலில் உண்டான பித்த வாயும் போம். வளிக்குற்றம் நீங்கும். முக்குற்றத்தால் உண்டாகும் மேக நோய்களைத் தடுக்கும்

விழலரிசி யென்றுன் மிகுபித்த மேகும்
அழல்குடலின் வாத மகலும்—துழவு
திரிதோட மேகமிவை சேராவா நீயுங்
குறியா இதையறிந்து கொள்.

(அ.கு.)

**வ-கு** : இவ்வரிசியை நொய்யாக்கிக் கஞ்சி காய்ச்சி உண்ண மேற்கண்ட நோய்கள் விலகும்.

## 499. விழுதி--Vizhudi

**Cadabaindica**

இஃது இந்தியாவில் எங்கும் பயிராகும் செடி.

ப-உ : இலை, காய்.

சுவை : சிறுகைப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை:
- நீர்மலம்போக்கி-வரேசநி—Purgative
- வளியடக்கி-வாதநாசநி – Anrivata
- வீக்கமுருக்கி-சோபாநாசநி—Deobstuent
- புழுக்கொல்லி—Antthelmintic

பண்பு : இதன் இலையைச் சமைதது உண்ணின், கரப்பான் வெள்ளை, குத்தலை உண்டாக்கக்கூடிய கட்டிகள், பசியின்மை, வயிற்றுப்புழு, வெளிக்குப் போகாமை இவைகளைப் போக்கி, உடற்கு வன்மையைத் தரும்.

விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீங்கும்
பழுபடுவன் சூலைநோய் பாறும்—எழுபேதி
யாக்குமதி மந்தம் அகக்கிருமி துன்மலமும்
போக்கும் அதுவே புகல். (அ.கு.)

வ-கு : இலையைக் குடிநீரிட்டு ஆமணக்கு நெய் சேர்த்துக் கொடுக்க, கழிச்சலையுண்டாக்கிப் புழுக்களை வெளிப்படுத்தும், குற்றங்களைத் தன்னிலைப் படுத்தும்.

இலையை வதக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட, கட்டிகளின் வீக்கம் வாங்கும்.

இலையை நீரிட்டுக் காய்ச்சி, வீக்கங்களின் மீது யாதாமொரு தைலத்தைப் பூசியபின் இந்நீரை விட்டுக் கழுவ, வீக்கங் குறையும்.

இலையைச் சமையல் செய்தும், காயை வற்றலிட்டு வறுத்தும் உண்பது நாட்டினர் வழக்கம்.

---

## 500. விளா (மரம்) — Vilamaram

வே-பெ : கடிப்பகை, கபித்தம், விளவு, வெள்ளில்.

**Feronia elephantum,**

Eng. : Wood-apple (tree).

| | | | |
|---|---|---|---|
| Tel. | Velaga | Sans. | Kapitha |
| Mal. | Vilav | Hindi | Kavitha. |
| Kan. | Baelada | Hind. | Dharkahth-kaveet. |
| | | Beng. | Kath-bel |

இம்மரம் இந்தியா முற்றிலும் பயிராகும். இதன் பழத்திற்காகவே இது வீடுகளை அடுத்த இடங்களிலும் தோட்டங்களிலும் வைத்து வளர்க்கப் படுகிறது.

ப.உ.: இலே, காய், பழம், பழத்தின் ஓடு. பட்டை. பிசின்.

சுவை

இலே.
துவர்ப்பு, விறுவிறுப்பு, தன்மை—வெப்பம் பிரிவு–கார்

காய்
துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு–இனிப்பு:

பழம்.
இனிப்பு தன்மை—தட்பம், பிரிவு–இனிப்பு.

இலே.
மணமூட்டி—Aromatic.

அகட்டுவாய்வகற்றி—உதசவாதஹரகாரி—Carmiative.

துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.

காய்
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringant.

பழம்
மணமூட்டி—Aromatic.
குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி—Refrigerant

பிசின்
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent

குணம்: இலேயினுல், பசி உண்டாகும். அகட்டு வாயு நீங்கும்.

மரப்பட்டை.

இதனுல் இருமல், இரைப்பு, சுவையின்மை, நீர்வேட்கை, கண்டவாறு பிதற்றுகின்ற வெறிநோய் இவைகள் போகும்.

காச சுவாசங் கதித்த அருசிமுதற்
பேசரிய தாகமிவை பேருங்காண்—வீசு
தபித்தலேச்செய் பித்தந்தரிக்குமோ பூவிற்
கபித்த மரமிருகுங் கால்.

விளா.

மன்னன் முதல்மூவர் மாறுபா டில்லாம
லுன்ன நினேத்த துதவுதலாற்—பன்னிச்
செபித்த வுடலாண்மை சேர்வித் திடலாற்
கபித்தமவிழ் தக்கற்ப கம்.

(தேரன் வெண்பா)

விளா, வளி முதலிய மூன்றையும் தன்னிலேப்படுத்தி உடலாண்மையைத் தருமாதலால் இஃது ஒரு கற்பவகையாம்.

விளா.

கபித்தமா கியவிளாக் கனிமுதற் காயுண
வபத்தமாம் பயித்திய வரந்தையெப் படியுமே. (தே–கா.)

(பொ–ள்): விளாங்காய், விளாம்பழம், இவற்றைப் புசித்துவரின் அழல் நோட்கள் யாவும் பொய்யாய் ஒழிந்துபோம்.

விளா.

வெளியிலே யாக்க முதல் வேண்டினவர்க்கெப்போதும்
வெள்ளியிலே யாக்கவரு மேல். (தே-ய.)

(பொ-ள்) விளா மரத்தின் வேர், இலே, காய், கனி முதலியவற்றை முறையே கற்ப முறையாகக் கொண்டு வந்தால், நோய் அணுகாது. நீண்ட காலம் வாழலாம்.

காய்.

இதனுல் கழிச்சல் வகைகள் போம்.

பழம்.

இஃது, ஈளே, இருமல், கோழை, வெப்பத்தாலுண்டான நீர்வேட்கை வைகளைப் போக்கும். அன்றியும் பசியை உண்டாககும். உடற்கு நன்மை செய்யும்.

எப்போதும் மெய்க்கிதமாம் ஈளேயிரு மல்கபமும்
வெப்பாருந் தாகமும்போம் மெய்ப்பசியாம்—இப்புவியில்
என்ருகி லுங்கனிமேல் இச்சைவைத்துத் தினவெண்ணித்
தின்ருல் விளாங்கனியை தின். (அ.கு.)

பிசின்.

தூய்மைப்படுத்திய விளாம்பிசினைப் பொடித்து, மாத்திரை முதலிய மருந்துகள் செய்து உண்டால், நீடித்த கழிச்சல், வெள்ளே, பெரும்பாடு, நீரிழிவு ஆகிய இவை நீங்கும்.

நல்ல விளாம்பிசினே நற்பாகஞ் செய்தருந்தத்
தொல்லேயதி சாரந் தொலேவதொன்ருே—மெல்லியரால்
வந்தவெள்ளே தன்னுடனே மாதர் பெரும்பாடும்
உந்துநீர்ப் போக்குபோம் உன். (அ.கு.)

வ-கு : கொழுந்திலே ரசத்தைப் பாலுடனுவது, தயிருடனுவது சேர்த்து, கற்கண்டுபொடி கலந்து உட்கொள்ள, அழல் நோய்கள் நீங்கும்.

கொழுந்தைக் குடிநீரிட்டுக் கொடுக்க, வயிற்றில் வாயு தங்கி உண்டாகும் கோளாறுகள் நீங்கிப் பசி உண்டாகும்.

கொழுந்தின் ரசத்தைத் மேலுக்குத் தடவ, கொப்புளங்கள், கோடைக் லுண்டாகும் வியர்வைக்குரு நீங்கும்.

காயை ஓடு நீக்கித் தனித்தேனும், வில்வப்பழத்தோடு சேர்த்தேனும் கழிச்சல் உள்ளவர்களுக்குக் கொடுக்க, நன்மை உண்டாகும்.

காயை பச்சடி செய்து சாப்பிடுவது இந்தியர்களின் வழக்கம். இதனுல் வாய்புண் உள்ளழலே மாறும்.

பழத்தின் ஓட்டை நீக்கிப் பழத்தை மாத்திரம் சாப்பிட வாய்நீர் ஊறல் தொண்டைப்புண், பல்லீற்றுப்புண்கள் போம். பசித்தீ உண்டாகும்.

பழச் சதையுடன் திப்பிலிச் சூரணங் கூட்டி, மேல்மூச்சு, விக்கல் இவை களுக்குக் கொடுக்கலாம்.

இதைப் பாண்டு, காமாலே, சோபை ஆகிய நோய்களுக்குச் செய்யும் இலேகியங்களிற் சேர்க்கலாம். (போகர்—700).

இப்பழத்தின் மணப்பாகு, தீ (பித்த) நோய்களைப் போக்கும். (சித்தர் உறை விளக்கம்).

### விளாவேர்க் குடிநீர்.

திருந்துவிளா வாவாரை செப்புவாட் பூலாவேர்
விருந்திறலி லவங்கைகாட்டு மல்லிகையுங் கூட்டிப்
பொருந்தவே மேதிமோரிற் போதவே வேகவைத்து
அருந்திடத் தயிரில் வார்த்தே யதீதநீ ரிழிவு போமே.

(பொ-ள்) : விளாவேர், ஆவாரைவேர், பூலாவேர், இலவங்கம், காட்டு மல்லிவேர் இவற்றை ஒரே அளவில் எடுத்து, எருமை மோரில் வேக வைத்துத் தயிரில் கலந்து அருந்த மிகுந்த நீரிழிவு தீரும்.

ஓட்டுடன் ஒரு பழத்தை அரைத்து அதில் சிறிதும் சேதப்படாமல் கொடுத்துவர, இடுமருந்து முறியும்.

ஒரு துண்டுப் பிசினை வாயிலிட்டு அடக்கி அதனின்று உண்டாகும் இரசத்தை விழுங்கிக் கொண்டிருந்தால், வரட்டிருமல், நெஞ்செரிவு நீங்கும் ; அல்லது பிசின் பங்கு 4 எடுத்து 60 பங்கு நீரிற் சேர்த்து அடிக்கடி கலக்கிக் கொண்டுவந்து, பிசின் நன்றாய்க் கரைந்து நீரிற் சேர்ந்த பிறகு சீலையில் வடிகட்டி 17—60 கிராம் வீதம் தினம் 2, 3 முறை கொடுக்க மேற் கண்ட நோய்கள் தீரும்.

பிசினை நன்றாயுலர்த்தி, பொடிசெய்து தேனில் குழைத்து அல்லது எருமைத் தயிரில் கலந்து கொடுக்க, சீதக்கழிச்சல், செரியாக்கழிச்சல் நீங்கும்.

விளாம்பிசின் ஒட்டுளருவைக்கு புண்கள் ஆறும். விளாம்பிசின் மாத்திரைக்கு, நீர்வேட்கை, வெள்ளை உட்காய்ச்சல் விலகும். (சித்தர் உறை விளக்கம்).

## 501. விட மூங்கில்—Visha-munkil

### Crinum asiaticum

Eng. Poison bulbe.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kesari-chettu | Sans. | Visha-mandala |
| Mal. | Visha-mula | Beng. | Bodakanad. |
| Kan. | Vihsa-moonguli | Hindi : | Chindar. |
| | | Hindi | Badakauvar |

இச்செடி, வங்காளம், இலங்கை, கொச்சின்-சைனு, மாலுக்கா, கொங் கணம், முதலிய நாடுகளில் உள்ள ஈரமான பள்ளத்தாக்குகளிலமைந்த தோட்டங்களில், பயிராக்கப்படுகிறது. சென்னையிலும் காணலாம்.

ப-உ : இலை, பச்சைக் கிழங்கு.

சுவை. கைப்பு : தன்மை-வெப்பம், பிரிவு : கார்ப்பு.

செய்கை | வியர்வைப் பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic
| வாந்தியுண்டாக்கி—வமனகாரி—Emetic

குணம் : விடமூங்கிலினிலையால், பிளவை, நகச்சுற்று, பெரும்படுவன் சோபை, ஐயத்தால் பிறந்த காது குத்தல் முதலிய நோய்கள் போம்

பிளவையுகிர்ச் சுற்று பெரும்படுவன் வீக்கம்
அளவில்நோய் காதெழுச்சி ஆற்றும்—அளவையுரு
தோங்கி வளர்ந்தமுலை யோவியமே ! நீண்டவிஷ
மூங்கிலிலை நன்மூலி முன்.

(அ.கு.)

வ-கு : இலையின் மீது சிற்றுமணக்கு நெய் தடவி வதக்கியேனும், அல்லது இலையை இடித்து மேற்படி நெய் விட்டு வதக்கியேனும் நகச்சுற்றின் மீது வைத்துக் கட்ட, நோய் போம். இதையே, கை கால் விரல் நுனிகளில் உண்டாகும் வீக்கங்களுக்கும் வைத்துக் கட்டலாம். இதையே, மூட்டிலுண் டாகும் வீக்கங்களுக்கும் சுளுக்குகளுக்கும் ஒற்றமிடலாம்.

இலையை வதக்கிச் சாறு பிழிந்து கொஞ்சம் உப்பு சேர்த்துக்காது வலிக்கு விடலாம்.

சாறு பிழிந்து அவ்வளவு எண்ணெய்க் கூட்டிக் காய்த்து காது நோய்க்கு விடலாம்.

இலையைச் சிதைத்து மாட்டுத் தொழுவங்களில் வைக்கில், அது சில புழுப் பூச்சிகளால் மாடுகளுக்குண்டாகும் நோயை வரவொட்டாமற் தடுக்கலாம்

இலையை உலர்த்திப் புகைக்க, கொசுக்காள் அணுகா.

கிழங்கை நசுக்கி கீல் வாயுகளுக்குக் கட்டலாம். ஆனால், அவ்விடம் சிவக்கும்.

இதன் கிழங்கை முகர, மயக்கத்தை உண்டுபண்ணும். கிழங்கினால் வீரம் கட்டும் எனக் கூறுவர்.

## 802. விஷ்ணுகிராந்தி—Vishnukirantei.

வே-பெ : அபராஜி, பராசிதம், விட்டுணுக்கிராந்தி.

**Evolvulvs alsinoides**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vishnukranti | Sans. | Vishnukranta / Vishnugandhi |
| Mal. / Kan. | Vishnukranti | Hind. | Shankapushti |

இஃது இந்தியா இலங்கை முற்றிலும் பயிராகும் பூண்டு. வறண்ட இடங்களில் வெகுவாகக் காணபபடும்.

ப-உ : பூண்டு.

சுவை : கைப்பு, சிறு காரம், தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

செய்கை :
- வியர்வைப்பெருக்கி-ஸ்வேதகாரி-Diaphoretic-
- உரமாக்கி பலகாரி-Tonic.
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Alterative.
- வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-Febrifuge.
- புழுக்கொல்லி-க்ருமி நாசநி-Anthelmintic.
- தாபமகற்றி-உக்ரரோகசமநகாரி-Antiphlogistic.
- கோழையகற்றி-கப ஹரகாரி-Expectorant.

குணம் : விஷ்ணுகிராந்திக்கு கொடிய சுரத்தாற் பிறந்த ஐயம், உட்சூடு, கோழை, இருமல், வளிக்குற்றத்தால் பிறந்த பிணிகள் ஆகியவை நீங்கும்.

செய்யமா லின்கிராந்திதீராத வல்லசுரத்
தைய மறுக்கும் அனல்தணிக்கும்—வெய்யகப
காச இருமலையுங் கட்டறுக்கும் வாதத்தால்
ஊசலா டும்பிணிபோக் கும். (அ.கு.)

வ-கு : இப் பூண்டைக் குடிநீரிட்டுக் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

விஷ்ணுகிராந்தி.

மாலாகச் சூரண மழையுடனுண்டிடச்
சூலக மாதர்க்குச் சூட்சிய தாக்குமே. (தே.கா.)

(பொ-ள்) : விஷ்ணுகிராந்திப் பொடியை இளவெந்நீருடன் சேர்த்துக் குடித்துவரின், பிள்ளை பேறுண்டாம்.

இப்பூண்டுடன் சீரகம் சேர்த்தரைத்துப் பாலில் கலக்கி உட்கொள்ள, சுரம், நரம்புத்தளர்ச்சி நீங்கும்.

இப்பூண்டோடு துளசியும் சேர்த்துக் குடிநீரிட்டு உண்டுவர, செரியாமை கழிச்சலோடுங்கூடிய சுரம் நீங்கும்.

இதற்குத் தாளகம் செந்தூரமாகும்.

## 503. பெரியலவங்கப்பட்டை—Paria-lavangap-pattai.

Bot. Name : Cinnamomum macrocarpum Fr. Nees

Fam : Hauraeeal.

Eng. : Cinnamon bark ot Cassia bark.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Moddhu-Lavangapatta | Kan. | Dhodda Darchini |
| | Dalchina-chakka | Hind. | Taj |
| | | Duk. | Moti-Dar-Chini |
| Mal. | Elavangaopattai | Sans. | Lavunga-twak |

இது, சீன நாட்டிலிருந்து வருகிற சரக்கு. தளமாயிருக்கும்; மணமும் காரமும் குறைந்திருக்கும்; சிறிது கைக்கும்; திருவாங்கூர், மலையாள நாடுகளிலும் பயிராகிறது.

மேற்கூறிய இடங்களில் பயிராகின்ற பட்டைக்குக் கருவாப்பட்டைக் கிருக்கின்ற பண்புகள் சற்றேறக்குறைய இருக்கும். ஆகையால், கருவாய்ப் பட்டைக்குப் பதிலாக இதனை வழங்கலாம்.

**சுவை :** காரம், இனிப்பு, துவர்ப்பு. **தன்மை :** வெப்பம். **பிரிவு :** கார்ப்பு.

சுவை—**துவர்ப்பி**, ஸங்கோசனகாரி-**Astrigent.**

| | |
|---|---|
| செய்கை | அகட்டுவாய்வகற்றி-உதரவதஹரகாரி-**carminative.** |
| | குருதிப்போக்கடக்கி-ரக்தஸ்தம்பனகாரி-**haemostatic.** |

இப்பட்டை, இருமல், பெருங் கழிச்சல், சீதக் கழிச்சல் வயிற்றுக்கடுப்பு வைகட்கு நன்று.

---

## 504. பேய் அத்தி—Pe-atti.

**Ficus hispida**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Verri-atti** | **Sans.** | **Kako-dumbar.** |
| **Mal.** | **Peyithi** | **Hindi.** | **Kat-gulavia.** |
| **Kan.** | **Adavi-atti.** | **Arab.** | **Tine-Bahri** |

இஃது இந்தியா, மலாக்கா, இலங்கை முதலிய நாடுகளில், மலை களிலும், காடுகளிலும், நாடுகளிலும் பயிராகும் ஒருவகை அத்திமரம்.

இதன் பட்டை ¼ அங்குலம் கனமும் சாம்பல் நிறமுமுடையது. இதன் இலை, அத்தியிலையை விட பெரியதாயும், வட்டமாயும் மிகப் பசுமையுமா யிருப்பதுமன்றி, மேற்புறம் சுரசுரப்பாயுருக்கும். இலையைக் கிள்ளினால் இதினின்றும் பால் வடியும். இதன் காய் மரத்தோடு பற்றி இருப்பதுடன், சுணையும் பொருந்தியிருக்கும்.

**ப-உ :** பழம், விதை, பால், பட்டை.

**சுவை :** மேற்கூறிய உறுப்புகள் யாவும், கைப்பு, **தன்மை**-வெப்பம் **பிரிவு :** கார்ப்பு.

| | |
|---|---|
| செய்கை | **பழம்,** பாற்பெருக்கி-க்ஷீரவர்த்தநி-**Lactagogue.** |
| | **பால்,** நுட்புழுக்கொல்லி-க்ருமிநாசநி-**Germicide.** |
| | **பழம்,** **விதை** வாந்தியுண்டாக்கி—வமனகாரி—**Emetic.** |
| | **பட்டை,** முறைவெப்பகற்றி—முறைவ்யதிரோதி—**Amtiperi-odic.** |

**வ-கு: பழம்** இதை உட்கொள்ள பாலைச் சுரப்பித்து, கருவை **வளர்ப்பிக்கும்.**

பழத்தை உலர்த்திப் பொடிசெய்து நீர்விட்டுப் புற்கைசெய்து கட்ட, அரையாப்புக்கட்டி அழுந்தியேனும் உடைந்தேனும் தீரும்.

**பால் :** இதைப் பூச, கால் வெடிப்பு, புடை, பெருநோயில் உண்டாகும் தடிப்பு, முளை, புண் இவைகள் விலகும். இதனால் ரசம் பற்பமாகும். இதன் முறையைச் சித்தர் விளக்க உறையில் காண்க.

வெடிப்பைமே கப்புடையை வீறிவரு குட்டத்
தடிப்பை மூளைரணத்தைச் சாடும்—படிக்குண்மை
லென்னவொளிர் மாதரசே ! எங்குஞ் சுணைகணிறை
பன்னமுறு பேயத்திப் பால். (அ.கு.)

விதை: இதை உலர்த்தி, புட்டியில் அடைத்து ஓதமில்லாத இடத்தில் வைத்து வேண்டும்போது 4 கிராம் கொடுக்க, வாந்தியாகும்.

பட்டை : இதை இடித்துப் பொடியாக்கி 5 முதல் 8 கிராம் எடை, கொடுக்க, கழிச்சல் உண்டாகும். 2 முதல் 4 கிராம் எடை அளவு கொடுக்க முறைக்காய்ச்சல் போகும்.

---

## 505. வெங்காயம்—Vengayam.

**வே-பெ :** ஈருள்ளி, உள்ளி, ஈரவுள்ளி, ஈரவெங்காயம், காயம், சுக்கிரந்தம், நிச்சியம், பலாண்டு.

Allium gepa.

**Eng : Onion.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Erra-Gadda | Kan. | Nirulli |
| | Ulligadda | Sans. | Pallandu |
| Mal. | Erulli | Hind | Piyaz |
| | | Beng : | Piyaz |

இஃது இந்தியா முழுவதும் பயிரிடப்படுகிறது.

இதன் இலை, தாளெனப் பெயர் பெறும். இத்தாட்களும் கிழங்கும் உணவு வகைகளிலும், கிழங்கும் விதையும் மருந்து வகைகளிலும்பயன்படும்.

**ப-உ :** பூ, தாள், கிழங்கு, விதை.

**சுவை :**—கைப்பு, தன்மை—வெப்பம், பிரிவு—கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி-உஷ்ணகாரி-Stimulant.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- கோழையகற்றி-கபஹரகாரி-Expectorant.
- சூதகமுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.
- தடிப்புண்டாக்கி-ஷோணகாரி-Rubefacient.
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி–Demulcent.
- ஆண்மைபெருக்கி–காமவர்த்தநி–Aphrodisiac.

**பூ.**

**குணம் :** வெங்காயப் பூ, வளி முதலிய மூன்று குன்ம நோய்களையும் குடலைப்பற்றிய நோயையும் போக்கும்.

வயிற்றுச் சிறுநோயை வாத வலியை
உயித்தியஞ் செய்யாமல் ஓட்டும்—குயிற்றுத
சிங்கார கொங்கைச் செழுந்திருவே ! நாட்டிலுறை
வெங்காயப் பூஎன வேவிள். (அ.கு.)

### கிழங்கு.

வெங்காயத்தால், உடலின் வெப்பம், மூலம், சிரங்கு, குருதியழல் நோய், அக்கரம், நீர்வேட்கை, கழிச்சல் இவை நீங்கும். ஆனால், மந்தம், முப்பிணி, இருமல், வயிற்றுப்புசம் பெருகும்.

வெப்பமூ லங்கிரந்தி வீறுரத்த பித்தமுடன்
செப்புநா அக்கரந்தீ ராத்தாகம்—வெப்புக்
கடுப்பறுமந் தஞ்சந்நி காசம்வயிற் றுப்பல்
தடிப்பேறும் வெங்காயத்தால். (அ.கு.)

### வித்து.

வெங்காய வித்து, குன்மத்தைப் போக்கும். ஆண்மையை உண்டாக்கும்.
"வெங்காய வித்து குன்மம் வீட்டும்"

### பூ.

வ-கு : பூவைச் சமைத்தேனும், குடிநீரிட்டேனும், உலர்த்திப் பொடித்தேனும் வழங்க, பூவின் கீழ்க்கூறிய நோய்கள் போம். பூவைக் கசக்கி அதன் இரசத்தைக் கண்களில் விட, கண் மங்கல் நீங்கும்

### கிழங்கு.

பச்சைக் கிழங்கைத் தின்ன, அது, பெண்களுக்குச் சூதகத் தடையைப் போக்கிக் குருதி சிக்கலை அறுக்கும்; நீரைப் பெருக்கும்.

வெங்காயத்துடன் 2—3 மிளகு சேர்த்துண்ண, நளிர்ச்சுரம் தணியும். வெங்காயத்தை உப்புடன் கூட்டியுண்ண, வயிற்றுவலி, குருதியழல் நோய் போகும். குடிநீரிட்டுக் குடிக்க, நீரெரிச்சல், நீர்க்கடுப்பு, நீர்க்கட்டு நீங்கும். நெய் விட்டு வதக்கியுண்ண, உடலனல் தணியும். கும்பிச் சாம்பலில் வேகவிட்டரைத்து, கரையாக் கட்டிகள் மீது வைத்துக் கட்ட, கட்டியைப் பழுக்கவைத்து உடைக்கும்.

கிழங்கின் சாற்றை முகர, மூர்ச்சையும், சூதிகாசந்நியும் தணியும். காதில் 2—3 துளிவிட, காதுநோய் நீங்கும். மேல் பூச, பூச்சிக் கடிகள், தேள் கொட்டல் இவைகளாலுண்டாகும் வலி, புடை முதலிய நோய்கள் போகும். காடியுடன் கலந்து உட்கொள்ளத் தொண்டைப் புண் மாறும். காடியுடன் ஓர் அளவு கூட்டிக் காய்ச்சிக் கொடுக்க, காமாலை, வயிற்றுவலி, ஈரல் வளர்ச்சி ஒழியும். கடுகெண்ணெயுடன் ஓரளவு கலந்து பூச கீல்வாதம் குணப்படும். தனிச் சாற்றை உட்கொள்ள, புகையிலை நஞ்சு மாறும்.

### விதை.

விதையை உலர்த்திப் பொடிசெய்து சருக்கரையுடன் கலந்து வேளைக்கு 3 முதல் 4 கிராம் வீதம் தினம் 2—3 முறைகொள்ள, குன்மநோய் தணியும். ஆண்மை உண்டாகும்.

### தாள்.

இதை உணவுப் பொருள்களுடன் சேர்த்துச் சமைப்பார்கள்.
தாகம் மூலச்சூடு உடல்வெப்பு முதலியவைகள் குறையும்.

## 506. வெட்சி—Vetchi.

வே-பெ.—குல்லே, சிந்தூரம், மசச்சை, சேதாரம்.

**Ixora coccinea.**

**Eng.—Jungle ceranium**

| | | | |
|---|---|---|---|
| **Mal.** | **Thechhi** | **Sans.** | Bindhuk / Pathalee |
| **Kan** | **Kepala** | **Hind.** | Rajana / Rangan |

இது சற்றேறக்குறைய இந்தியாவில் எங்கும் பயிராகும்.

இதில் செம்மை வெண்மை இனமுண்டு. இரண்டும் பண்பில் பெரும்பாலும் ஒக்கும்.

(The word " Ixora " is derived from " Iswara " Signifying God Siva as the plant is sacred is Siva.)

ப - உ : பூ, வேர்.

சுவை : துவர்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- தாதுவெப்பகற்றி-சமனகாரி-Sedative.
- பசிதீத்தூண்டி-ஜடராக்னி வர்த்தநி-Stomachic.
- உரமாக்கி-பலகாரி-Tonic.
- குடலழுகலகற்றி-கோஷ்டக்ஷிணரோதி-Intestinal-antiseptic.
- பித்தநீர்ப்பெருக்கி-பித்தகாரி-Cholagogue.
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி–Astringent.

### பூ.

குணம் : இது மேகச்சூடு, சுர ரோகம், நீர்வேட்கை ஆகிய இவைகளைக் கெடுக்கும். இளைப்பகற்றும். மணமுள்ளது.

வெட்சிப்பூ மேகவழல் விட்டோடும் வாசனையாம்
அடசிவழி யாயுயிர்கொள் ளாரணங்கே—எச்சுஞ்
சுரமுடனே தாகந் தொலேக்கும் உலகில்
விரைவாய் இளைப்பகற்றும் விள்.

(அ.கு.)

வ - கு : இதன் பூவை யரைத்து, வெள்ளாட்டுப் பால் அல்லது மோருடன் கலந்து, வெள்ளை நோய்க்குக் கொடுக்கலாம்.

பூவை நெய் விட்டு வதக்கி 23 கிராம் எடை எடுத்து, சீரகம், சிறு நாகப்பூ வகைக்கு 520 மி.கி. கூட்டி யரைத்து, வெண்ணெய் கற்கண்டு சேர்த்து வழங்கச் சீதக் கழிச்சல் போம். நீர் வேட்கை, இளைப்பாயாசம், சூடு இவைகள் தணியும்.

பூவைக் குடிநீரிட்டு 30 முதல் 60 மி.லி. தினம் 2—3 முறைகொள்ள சுரம் தணியும்.

**வேர்.**

வேர்ப்பட்டையைச் சிறிது திப்பிலி கூட்டி அஷரத்து 1 முதல் 3 கிராம் வீதம் கொடுக்க, கழிச்சல் வகை நீங்கும். சுரம் வெட்டை இவைகளுக் குட் இதை வழங்கலாம்.

வேர்ப்பட்டையை உலர்த்திப் பொடி செய்து நீர் விட்டுக் குழப்பி, ஒரு துல்லிய சீலைத் துண்டில் தடவி, புண்கள், நாட்பட்ட புண்களின்மீது போட்டுவர அவைகள் எளிதில் ஆறும்.

---

## 507. வெட்பாலை—Vetpalai.

**வே - பெ : கிரிமல்லிகை, குடசம், வற்சம்.**

**Wrightia-tinctoria,**

இதன் விவரமறிய குடசப்பாலையின் கீழ்க்கண்ட குறிப்பைப் பார்க்க.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Kodisha | Hind. | Mitta-Indrajava |
| Mal. | Kutakappala | | |
| Sans. | Indrayava | Duk. | Inderjow sheereen |

ப - உ : இலை, பட்டை, வித்து (அரிசி).

**இலை, பட்டை.**

சுவை : துவர்ப்பு, இனிப்பு, சிறு கைப்பு. தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

**வித்து.**

சுவை: இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

**பட்டை.**

செய்கை :
ஆண்மைப்பெருக்கி-காமவத்தநி-Aphrodisiac.
துவர்ப்பி-ஸங்கோசனகாரி-Astringent.

**வித்து.**

உரமாக்கி-பலகாரி-Tonic.

**மரம்.**

குணம் : வெப்ப குணத்தையுடைய வெட்பாலை மரமானது வளி நோய் களையும் முப்பிணிப் பெருக்கையும் நீக்கும்.

அக்கினியை வைத்திருக்கு மார்ந்தவா தம்போக்குந்
திக்குடிரி தோடத்தைத் தீர்த்துவிடும்—சொக்கவிரு
கட்பாலைக் கூற்றைவைத்த கான மடமயிலே !
வெட்பாலை நன்மருந்தாம் விள்.

(அ - கு.)

**வெட்பாலை அரிசி.**

இது, தீ வளிக் கூட்டின் பெருக்கையும், கடுவன், குடல் வாயு, வயிற்றுப் பொருமல், கழிச்சல் வகை முதலியவைகளைப் போக்கும்.

வெட்பாலை தன்னரிசி வீறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத—உப்பிசத்தைக
காணும லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணர் முலையாய் புகல்.

(அ - கு)

இலே.

வ - கு : இலையை மென்று சுவைக்க, பல் வலி நீங்கும்.

பட்டை.

பட்டையுடன், சுரத்தைப் போக்கக் கூடிய கைப்புப் பொருள்களைச் சேர்த்துக் குடிநீரிட்டு, 35—70 மி.லி. வீதம் கொடுக்க, அது குடலைப்பற்றிய நோய்களைத் தீர்ப்பதுடன், சுர முதலிய பிணிகளுக்குப் பின் காணும் உடல் இளைப்பையும் நீக்கி, பசித்தீயைப் பெருகச்செய்து உடற்குவன்மையையும் தரும்.

வித்து.

இதைப் பொடி செய்தேனும் குடிநீரிட்டேனும் வழங்க, வயிற்றுப் பொருமல் முதலிய நோய்களைப் போக்கும்.

---

## 508. வெண்டைக்காய்—Vendaik-kai.

வே.பெ :வெண்டுக்காய்.

Bot. Name : Hibiscus esculentas, Lian

Eng : Ediqie Hibiscus ; Lad'ys Finger.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Benda-chettu | Sans. | Gojihwaka |
| Mal. | Venda | | |
| Ken. | Bende | Hind. | Bhindi |

இஃது இந்தியாவின் வெடபமான பாகங்களில் பயிராகும் சிறு செடி; 2 முதல் 2½ அடி உயரமுள்ளது. இலை, அடியில் அகன்றும் நுனிப்புறம் குறுகியுமிருக்கும். இலைக்கும் காய்க்கும் சுணை உண்டு. பூ ஒற்றை அடுக்கு இதழுள்ளது. நிறம் - மஞ்சள். பூவின் நடுவில் செந்நிறமுண்டு.

ப - உ : இலை, காய், விதை.

சுவை : இனிப்பு, தன்மை - தட்பம், பிரிவு - இனிப்பு.

செய்கை :
- குளிர்ச்சி உண்டாக்கி-சீதளகாரி-Refrigerant.
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-Aphrodisiac.
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-Demulcent.
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி-Diuretic.
- வறட்சியகற்றி-ஸ்நிகதகாரி-Emollient.

குணம் : இதன் காயால், நாட்பட்டக் கழிச்சல், பெருங்கழிச்சல், குருதிக் கழிச்சல் போம், கபவாதம் உண்டாகும். ஆனால், இஃது உண்பதற்கு உருசியாயிருக்கும்.

கண்ட கிராணி கடிய அதிசாரம்
விண்டவெண் சீதரத்தம் மேவுங்காண்—ஒண்டொடியே !
வண்டற்காம் வெய்யகப வாதமிகும்வாய்க்குணவாம்
வெண்டைக்காய் உண்பார்க்கு விள்.

வ - கு : வெண்டைக்காய்ப் பிஞ்சைத் துண்டுத்துண்டாக வெட்டி, 105—160 கிராம் எடுத்து, 700 மி.லி. நீரிற் சேர்த்து 350 மி.லி. குறுக்கி வடித்து, சருக்கரை 4 கிராம் கூட்டி, வெள்ளை, இருமல், நீர்க் கடுப்பு, கழிச்சல் வகைகள் இவைகளுக்கு 35—70 மி.லி. வீதம் 3—4 மணிக்கொரு முறையாகக் கொடுத்துவரலாம்.

இதன் ஆவியைப் பிடித்துவர, இருமல், தொண்டைப்புண், தொண்டைக் கம்மல், தொண்டை எரிச்சல் தீரும்.

இளங்காயையாவது, இலையையாவது நன்ருக நசுக்கி வைத்துக் கட்ட, புண்கள், கட்டிகள் தணியும்.

இதனல் நாட்பட்ட நிணக்கழிச்சல், பெருங்கழிச்சல், குருதிக் கழிச்சல் போம். ஐயவளி நோய்கள் உண்டாம்.

---

## 509. வெந்தயம்—Vendayam.

**வே - பெ : மெந்தியம், மேதி, வெந்தை.**

**Trigonella foenum gracum**

**Eng : Fenugreek.**

| | | | |
|---|---|---|---|
| **Tel.** | **Menthulu** | **Sans.** | **Methi** |
| **Mal.** | **Uluva** / **Venthyam** | **Hind.** | **Methi** |
| | | **Arab.** | **Hulba** |
| **Kan.** | **Menthe-gida** | **Pers.** | **Shamlita** |

இது கீரை வகுப்பிற் சேர்ந்தது. விசேடமாக காஸ்மீரம், பஞ்சாப் பம்பாய், சென்னை, இராஜதானி முதலிய இடங்களில் விளையும். இதனைச் சென்னை மாகாணத்தில் வீட்டுஉபயோகத்திற்காக வீட்டைச் சார்ந்த காலி மனைகளில் உற்பத்தியாக்குவார்கள்.

**ப - உ இலை விரை.**

**சுவை : கைப்பு, தன்மை தட்பம் பிரிவு - கார்ப்பு.**

**கீரை.**

**செய்கை :**
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-**Refrigerant.**
- மலமிளக்கி-மலகாரி-**Laxative.**

**விதை**

- சிறுநீர்ப்பெருக்கி-மூத்திரவர்த்தநி-**Diuretic.**
- உள்ளழலாற்றி-அந்தர்ஸ்நிக்தகாரி-**Demulcent.**
- துவர்ப்பி-ஸங்கோசனகாரி-**Astringent.**
- வறட்சியகற்றி-ஸ்நிக்தகாரி-**Emollient.**
- காமம்பெருக்கி-காமவர்த்தநி-**Aphrodisiac.**
- அகட்டுவாய்வகற்றி-உதாவாதஹரகாரி.
- உரமாக்கி-பலகரரி-**Tonic.**

**இலை (கீரை).**

பண்பு : வெந்தயக் கீரையால், வயிற்றுப்பிசம், மாந்தம், வளிப் பெருக்கு, ஐயப்பெருக்கு, இருமல், சுவையின்மை, ஆகிய இவை போம்.

பொருமல் மந்தம் வாயுகபம் போராடுகின்ற
இருமல் அருசியிவை ஏகுந்—தரையில்
தீது லுயர்நமனேச் சீறும் விழியணங்கே !
கோதில்வெந்த யக்கீரை கொள். (அ.கு.)

விதை (வெந்தயம்).

இது பிள்ளை கணக்காய்ச்சல், சீதக்கழிச்சல், வெள்ளை, உடல் எரிச்சல், குருதியழல்நோய், கணம், எலும்பைப்பற்றி சுரம், நீர்வேட்கை, இளைப்பு நோய், கொடிய இருமல் இவைகளை விலக்கும். ஆண்மை தரும்.

பிள்ளை கணக்காய்ச்சல் பேதிசீ தக்கழிச்சல்
தொள்ளைசெய்யும் மேகம் தொலையுங்காண்—உள்ளபடி
வெச்சென்ற மேனி மிகவுங் குளிர்ச்சியதாம்
அச்சமிலை வெந்தயத்திற்காய்.
பித்தவுதி ரம்போகும் பேராக் கணங்களும்போம
அத்திசுரந் தாகம் அகலுங்காண்—தத்துமதி
வேக இருமலொடு வீறு கயம்தணியும்
போகமுறும் வெந்தயத்தைப் போற்று. (அ.கு.)

இலை (கீரை).

(வ - கு) : இலையை அரைத்துக் கிளறி கட்ட உள் அல்லது வெளி புறத்திற் காணும் வீக்கமும், சுட்ட புண்களும் போம்.

இக்கீரையுடன் கோழிமுட்டை, தேங்காய்ப்பால் சேர்த்து நெய்யில் சமைத் துக்கொள்ள, இடுப்புவலி தீரும்.

இதை வேகவைத்து, தேன் விட்டுக் கடைந்து உட்கொள்ள, வெளிக்குப் போகும். இது, மார்வலி, இருமல், மூலம், உட் புண் இவைகளை போக்கும்.

இத்துடன் சீமைப்புளி, அத்திப்பழம், திராட்சை, ஒரெடையாகச் சேர்த் துக் குடிநீரிட்டுத் தேன் சிறிது கலந்து சாப்பிட, மார்வலி, மூச்சடைப்பு இவை போம்.

இத்துடன் சீமை அத்திப் பழம் சேர்த்தரைத்து கட்டிகளின் மீது பற்றிட அவைகள் உடையும். புடைகள் மீது பூச அவைகள் மாறும்.

கீரையை வேக வைத்து வெண்ணெயிட்டு வதக்கி உட்கொள்ள தீக் குற்றத்தாலுண்டான மயக்கந்தீரும்.

இத்துடன் வாதுமைப் பருப்பு, கசகசா, கோதுமை நெய், நெய், பால், சர்க்கரை சேர்த்துக்கிண்டி உட்கொள்ள உடல் வலுக்கும், வண்மை யுண்டாகும். இடுப்பு வலி தீரும்.

வெந்தயம்.

வெந்தயம் தோசையாய் வேண்டி யுண் டிடவுடல்
மைந்துடன் பருத்திடும் வலிகளை யொழித்திடுங்
கருணையி லஃதினைக் கலந்தயின் றிடவுட
லுரமெனப் பருத்திடு முண்மையி தாகவே. (தே.கா.)

(பொ-ள்) வெந்தயத்தைத் தோசையாய்ச் செய்து விருப்பமுடன். புசித்து வந்தால், உடல் வன்மை பெற்றுப் பருக்கும். உடம்பின் வலி முதலியன நீங்கும். அதனைக் கருணைக் கிழங்கொடு சேர்த்துச் சாப்பிட்டு வந்தால், உடல் நன்றுகப் பருக்கும். இஃது உண்மையாம்.

வித்து (வெந்தயம்).

இதை வறுத்துப் பொடி செய்து, ஊறல் நீர்ச் செய்து உட்கொள்ள, வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், சுரம், உட்சூடு வெள்ளை, சீதக் கழிச்சல் முதலியவைகள் போகும்.

வெந்தயம் 17 கிராம், 340 மி. லி. பச்சையரிசியுடன் சேர்த்துப் பொங்கி, உப்பிட்டுச் சாப்பிட, குருதிபெருகும்.

கஞ்சியில் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்கப் பால் சுரக்கும்.

அரைத்துத் தலையிலப்பி ஊறவைத்துத் தலை முழுகிவர, மயிர் வளரும். அது, மயிர் உதிர்ந்து போவதைத் தடுக்கும்.

இதை மாவாக்கிக் களி கிண்டிக் கட்ட, புண் பூச்சி நோய்களைப் போக்கும்.

இதை வறுத்து, இத்துடன் அவ்வளவு வறுத்த கோதுமையைக் கூட்டி காப்பிக்குப் பதிலாக வழங்கலாம் இதனால் உடல் வெப்பம் நீங்கும்.

வெந்தயலேகியம் : இதனால் வெந்தயத்தின் கீழ்க்கண்ட பல நோய்கள் போகும். (இதன் செய்முறையைச் சித்தர் உறை விளக்கத்திற் காண்க).

வெந்தயம், கடுகு, பெருங்காயம், கறிமஞ்சள் இவைகளைச் சமபாகம் எடுத்து, நெய் விட்டு வறுத்துப் பொடி செய்து, சோற்றுடன் கலந்துண்ண, வயிற்றுவலி, பொருமல், வலப்பாடு-இடப்பாட்டீரல் வீக்கங்கள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டுவரும்.

மிளகாய், கடுகு, வெந்தயம், துவரம்பருப்பு, கறிவேப்பிலை, காயம் இவைகளைத் தக்க அளவு எடுத்து, நெய் விட்டு வறுத்து, புளிக்குழம்பை இதில் கொட்டி, உப்புச்சேர்த்துச் சட்டி மூடி, அரைபபாகம் சுண்டியபின் இறக்கிச் சூட்டுடன் சாப்பிட, வெப்பத்தால் நேரிடும் சிற்சிலப் பிணிகள் தணியும்.

---

## 510. வெள்ளரிக்காய்—Vellarikkai.

உருவாரம். ஊர்வாருகம், கற்கடி, மிருந்து.

**Cucumis sativus**

**Eng. Common Cucumber.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Dosakaya | Sans. | Urvar ukam |
| Mal. | Vellari | Hind. | Kankari. |
| Kan. | Saute-kayi | | |

இஃது ஓர்வகைக்கொடி ; இந்தியா முற்றிலும் பயிராகிறது.

ப-உ. இலை, காய், விதை.

சுவை : இனிப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை
- குளிர்ச்சியுண்டாக்கி—சீதளகாரி-Refrigerant.
- சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி-Diuretic
- உள்ளழலாற்றி—அந்தாஸ்நிக்தகாரி-Demulcent

பிஞ்சு, காய், பழம், விதை.

குணம் : வெள்ளரிப்பிஞ்சுக்கு முக்குற்றங்களும் நீங்கும். காயால், நீர்த்துளைத்தினவு, நீர்ச்சுருக்கு, கரப்பான் இவை நீங்கும். ஆனால் உண்ணும் மருந்து கெடும். வளிக்குற்றம் மிகும். இதை உணவு உண்டபின் உண்ணப் பசியுண்டாகும். பழம் ஐயப்பெருக்கை உண்டாக்கும். விதையால், கடுக்கின்ற நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்ப்புழை வெட்டிப்பு, சதையடைப்பு, வெள்ளை, நீர் எரிச்சல் இவைகள் போம்.

பிஞ்சுவெள்ள ரிக்காய்க்குப் பேசுதிரி தோடம்போம்
வஞ்சியரே ! முற்றிகாய் வாதமுமாம்—நைஞ்சகனி
உண்டாற் சயித்தியமாம் உள்ளிருக்கும் அவ்விதையைக்
கண்டாலும் நீரிறங்கும் காண்.

காய்.

உண்டருந்தத் தீஎழும்பும் உண்மருந்தைத் தான்முடுக்கும்
கண்டகரப் பானைக் கடுக்குங்காண்—பண்டிதரே !
உள்ளரிப்பை நீர்க்கடுப்பை ஊரைவிடுத் தோட்டிவிடும்
வெள்ளரிக்கா யின்குணத்தை விள்.

வித்து.

கடுப்பொடுநீர்க கட்டுவெறுங் கல்லடைப்பு தாரை
வெடிப்பு சதையடைப்பு மேகம்—எடுத்துரைக்க
உள்ளரிவி என்னுமுறை கிரிச்ச ரமிவைகள்
வெள்ளரிவி தைக்கேகும் விள்.

வ. கு: இலையைச் சீரகத்துடன் கலந்து வறுத்துப் பொடி செய்து ஒரு சிட்டிகை கொள்ள, தொண்டையிலுண்டாகும் நோய்கள் போகும். சருக்கரையுஞ் சேர்த்துண்ணச் சிறுநீரைப் பெருக்கும்.

34 கிராம் விதையை அரைத்து, 175 மி.லி. நீரில் கரைத்து வடிகட்டி சருக்கரை சேர்த்துக் கொடுக்க, விதையின் கீழ்கண்ட நோய்களைப் போக்கும்.

விதை, நீரைப் போக்கக்கூடிய குடிநீர்ப் பொடிகளிலும், வன்மையைத் தரக்கக்கூடிய இலேகியங்களிலும் சேரும்.

பிஞ்சு காய் இவைகளை பச்சையாகவே உண்ணலாம். உடல் வெப்பம் மாறும். நீர்வேட்கை தணியும்.

---

## 511. வெள்ளறுகு—Vellarugu.

**Enicostemma littorale**

இது உவர்ப்புள்ள விடங்களில் பயிராகும் பூண்டு ; இந்தியாவில் வெப்பமுள்ள பாகங்களில் கிடைக்கும்.

ப-உ : பூண்டு.

சுவை : கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை :
- பசித்தீத்தூண்டி-தீபனகாரி-Stomachic.
- உரமாக்கி-பலகாரி-Tonic.
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-Alterative.
- மலமிளக்கி-மலகாரி-Laxative.
- வெப்பகற்றி-ஜ்வரஹரகாரி-Febrifuge

குணம் : இதற்கு, குன்மம், வளிநோய், குடல் வாயு, கீல் பிடிப்பு நரம்புகளைப்பற்றிய கழலை, திணவு, சிறு சிரங்கு ஆகியவை போம்.

குன்மமொடு வாய்வு குடல்வாதம் சூலேயிவை
சென்மம்விட் டோடிச் சிதையுங்காண்—வன்மூலேயாய்
உள்ளுறுகி ரந்திசொறி யொட்டிய சிரங்குமறும்
வெள்ளறுகு தன்னே விரும்பு. (அ.கு).

**வ.கு:** இதைக் குடிநீரிட்டு மேற்கண்ட நோய்களுக்குக் கொடுக்கலாம், அல்லது இதன் பொடியை வழங்கலாம்.

இதனே அரைத்துத் தினவு, சிறு சிரங்குகளுக்குப் பூசலாம். இதை யடுத்து சிறிது மிளகும் ஒரு திரிபூண்டும் சேர்த்தரைத்து, பாலில் கலக்கிச் சீழ்ஒழுகுகின்ற வெள்ளேக்கு வழங்கலாம், அல்லது வெண் மிளகுடன் சேர்த்துக் குடிநீரிட்டு வடித்து, கொஞ்சம் பசுவின் வெண்ணெய் கூட்டி, வெப்பமிருக்கும் பொழுது உட்கொள்ளலாம்.

**அளவு:** பொடி 2—4 கிராம் எடை; குடிநீர் 35—70 மி.லி.

---

## 512. வெள்ளிலோத்திரம்—Vellilothram.

**வே. பெ:** காசசங்கை, காயவிலே, தில்லகம், லொத்துகத்தோல், வெள்ளலத்திப்பட்டை.

**Bot. Name: Symplocos racemosa.**

**Eng.—The Lodh-tree, Lotur-bark.**

| | |
|---|---|
| Tel. Lodduga-chettu | Sans. Lodhram |
| Mal. Lodhra | Hind. Lodhra * |
| Kan. Balaloddugina-mara | Duk. Lodha-pathane* |

இது இந்தியாவில் வங்காளத்திலுள்ள தாழ்ந்த மலேநாடுகளிலும், மலேயாளம், ஆசாம், பர்மா முதலிய இடங்களிலும் பயிராகும் சிறு மரம். இது பசுமையாகவே இருக்கும்.

ப-உ: பட்டை.கட்டை

சுவை: துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு- இனிப்பு.

செய்கை:
- சிறுதுவர்ப்பி-ல்குஸ்ங்கோஸ்னகாரி—**Mild Astringen**
- குளிர்ச்சியுண்டாக்கி-சீதளகாரி-**Refrigerant.**
- நச்சரி-விஷநாசநி-**Antidote.**

**குணம்:** வெள்ளி லோத்திரத்திஞல், நஞ்சு, எலும்புருக்கி, பெரு வயிறு, குரற்கம்மல், வியங்கம் உதாவர்த்தம் இவை தீரும்.

தாவரநஞ் சென்புருக்கி தாழா மகோதர நோய்
கூவவொட்டாத குரற்சாதம்—பூவுலகில்
வெல்லவரி தாய வியங்கமுதா வாத்தமும்போம்
நல்லவெள்ளி லோத்திரத்தி ஞல். (அ-கு.)

மேலும், கழிச்சல், சீதக்கழிச்சல், வீக்கம், கண்நோய், சுரம்,புண்கள், ஈரலேப்பற்றிய பிணிகள், பெரும்பாடு, சூதகத்தடை முதலியவைகளும் நீங்கும்.

**பட்டை**

வ-கு: இதன் பட்டையைத் தனித்தாகிலும், இதர சரக்குகளுடன் சேர்த் தாகிலும் குடிநீரிட்டுக் கொடுக்க, மேற்படி செய்யுளில் கண்ட நோய்க ளல்லாமல் பெரும்பாடு, சூதகத்தடை இவைகளும் போம்.

அதிமதுரம், மாதுளைத்தோல், மருதம்பட்டை இவைகளின் பொடி வகைக்கு 1 பங்கு, லொத்துகத்தோல் பொடி 3 பங்கு கூட்டி, 1 கிராம் வீதம் 2, 3-முறையாக 3—5-நாள்வரை கொடுக்க, மேற்கூறிய நோய்கள் போம்.

இதன் பட்டை, அதிமதுரம், பொரித்த படிகாரம், நந்தியாவட்டப்பூ இவைகளை ஓர் அளவாக எடுத்து, நீரிலிட்டரைத்துக் கண்களைச் சுற்றிப் பற்றிட, கண்நோய் விலகும்.

இதன் கட்டையைக் குடிநீரிட்டுக் கொப்பளிக்கப் பல்லீறு பலப்படும்.

---

## 513. வெள்ளுள்ளி—Vellulli.

வே. பெ: இலசுனம், காயம், உள்ளி, பூண்டு,

வெள்ளைப்பூண்டு, வெள்வங்காயம்.

**Allium sativum.**

**Eng.—Garlic.**

| | |
|---|---|
| Tel. Thella-gadda<br>Vellulli | Kan. Bellulli |
| Mar. Lohson. | Sans. Lasuna |
| Mal. Vellulli | Hind. Lashsan* |

இஃது இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் பயிராகும் ஒரு பூண்டு. இதற்கு வெங்காயத்தைப்பார்க்கிலும் காரமதிகம். நீலகிரி பூண்டு மிகவும் பெயர் பெற்றது.

ப-உ கிழங்கு.

சுவை : கார்ப்பு, தன்மை- வெப்பம், பிரிவு- கார்ப்பு.

செய்கை :
அகட்டுவாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative
பசித்தீத்தூண்டி—ஜடராக்னிவர்த்தநி—Stomachic.
உரமாக்கி—பலகாரி—Tonic.
உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative.
வெப்பமுண்டாக்கி—உஷ்ணகாரி—Stimulant.
கோழையகற்றி—கபஹரகாரி—Expectorant.
சிறுநீர்ப்பெருக்கி—மூத்ரவர்த்தநி—Diuretic.
புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.

**குணம்** :இதைச் சிறிய கட்டிகள், செவிடு, நாட்பட்ட இருமல், இரைப்பு, வயிற்றுப்புழு இவைகட்கும், முப்பிணி, வளிநோய்கள், ஐயத்தலைவலி, வாய்நோய், நீரேற்றம், சீதக்கழிச்சல், மூலம் இவைகட்கும் கொடுக்கலாம்.

சந்நியொடு வாதந் தலைநோவு தாள்வலி
மன்னிவரு நீர்க்கோவை வன்சீதம்—அன்னமே !
உள்ளுள்ளி கண்பாய் உளைமூல ரோகமும் போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு. (அ.கு.)

**வெள்ளைப்பூண்டு.**

வெள்ளுளித் திரிகறி மேற்கையாந் தகரையி
லுள்ளலொன் றுந்தின வுப்பச நோய்கெடும்.
(தேரன்- காப்பியம்)

(பொ-ள்.) வெள்ளைப் பூண்டுத்திரி, மிளகு, கையாந்தகரையிலை இம் மூன்றும் ஒரு நிறையாய் சேர்த்தரைத்துச் சாப்பிட, வயிற்றுப்புசம் முதலியன நீங்கும்.

வ-கு: இதையரைத்துச் சிறிய கட்டிகளுக்குப் போட, அவைகள் கரையும்.

இதன் இரசத்தைக் காதில் 1, 2 துளி பிழிய, செவிடு நீங்கும். உள் நாக்கு வீழ்ந்தால் அது படும்படி தொட, குணமாகும். 20--30 துளி வீதம் தினம் 2—3 முறை கொள்ள இருமல், இரைப்பு, வயிற்றுப் புழு இவைகள் தீரும். இதைப் பாலில் வேகவைத்துக் கொடுப்பதும் வழக்கம்.

கடுகு அல்லது தேங்காய் எண்ணெயுடன் பூண்டு சேர்த்து எண்ணெய் யாகக் காய்த்து, பூசி ஒற்றிடமிட, இரைப்பு நோய், குடைச்சல், உடல் நோதல் முதலிய வளி நோய்கள் யாவும் போம். இதனையே காதில் விட, காதி ரைத்தல், குத்தல் நீங்கும். புழுக்கள் இருப்பினும் சாகும்.

நல்லெண்ணெயில் பூண்டை இட்டுக் காய்ச்சி காது நோய்க்கு விடலாம்.

பூண்டை உப்பிட்டுக் கசக்கி சாறெடுத்துத் தடவ, சுளுக்கு மேற்றோல் சரிவு குணப்படும்.

உள்ளியை வேகவைத்து, நெய், சருக்கரை கூட்டிப் பிசைந்து உண்ண, சீதக் கழிச்சல் போகும். இதன் சாற்றைப் புரையொடும் புண்களுக்குப் போட ஆறும்.

---

## 514. வெற்றிலை—Vetrilai.

வே-பெ : தாம்பூலம், தாம்பூலவல்லி, திரையல், நாகவல்லி, மெல்லிலை, வெள்ளிலை, மெல்லடகு.

: Piper betel.

Eng. Betel Leaf

வெள்ளிலை

| | |
|---|---|
| Tel. Tamalapaku | Sans. Nagavalli |
| Mal. Vetilla | Hindi. Pan |
| Kan. Villayadele | Duk. Thambole |

இஃது இந்தியாவில் வெப்ப பாகத்திலும் சதுப்புள்ள இடங்களிலும் பயிர் செய்யப்படும் மரமேறுங் கொடி. இது இலையின் பொருட்டே பயிரிடப்படுகிறது.

இஃது இலையின் நிறத்தாலும், மணத்தாலும், கார்ப்புச் சுவையலும் மூவகைப்படும். மிகுந்த மணமும், காரமும், கருப்பு நிறமும் இல்லாதது "வெற்றிலை". கருமையும் காரமும் மிகுந்தது "கம்மாறு வெற்றிலை". கருப்பூர மணமும், சிறுகாரமுமுடையது "கருப்பூர வெற்றிலை".

ப - உ : இலை.விறுப்பு, கார்ப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு.

செய்கை:
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி -Stimulant
- அகட்டுவாய்வகற்றி- உதரவாதஹரகாரி -Carminative
- துவர்ப்பி - ஸங்கோஸனகாரி -Astrtingent.
- காமம் பெருக்கி - காமவர்த்தநி - Aphrodisiac.
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி -Antiseptic
- வெப்பகற்றி - ஜ்வரஹாகாரி - Febrifuge.
- பசித் தீத்தூண்டி - ஜடராக்கினிவர்த்தநி-Stomachic.
- பாற்பெருக்கி - க்ஷீரவர்த்தனி-Lactagogue
- உமிழ்நீர்ப் பெருக்கி - த்ரவகாரி - Sialogogue

**குணம்** : வெற்றிலேயின் இரசத்தைப் பருகில், ஐயம், **சயித்தியம்,** காணுக்கடி, முப்பிணி இவைகள் ஒழியும்.

ஐயம் அறுங்காண் அதன்சாரங் கொண்டக்காற்
பையச் சயித்தியம்போம் பைந்தொடியே !—மெய்யின்
கடியின் குணம் போகுங் காரவெற்றி லேக்குப்
படியுமுத் தோடமிதைப் பார். **(அ.கு.)**

**கம்மாறு வெற்றிலே**

இதற்கு, நீரேற்றம், தலேபாரம், முப்பிணி, மாந்தம், குரற் கம்மல், வயிற்றுவலி, வயிற்றுப்புசம் ஆகியவை போம்.

எட்டிலொன்று கிட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டி விடுசந்தி மாந்தமொடு—நாட்டிற்
பரியகுரற் கம்மல்வலி பண்டியுப்பி சம்போ
மரியகம் மாறுவெற்றி லே.

**(அ.கு.)**

மேற்கூறிய வெற்றிலேகளே இந்தியர்கள் பெரும்பாலும் வெற்றிலே பாக்காக வழங்குவார்கள். இதற்காகவே இஃது ஏராளமாகப் பயிரிடப் பட்டு, இந்தியா முற்றிலும் வழங்கப்படுகின்றது. வெற்றிலேயைத் தாம் பூலமாய் உபயோகிக்கும்போது, அத்துடன் முக்கியமாகப் பாக்கு, சுண்ணம் சேரும். வெற்றிலேயைத் தாம்பூலமாக உபயோகிக்கும்போது, வெற்றிலே யின் காம்பு, நுனி, நடுநரம்பு, பின்புறத்தில் அமைந்துள்ள தோல், இவைகளே நீக்கியே வழங்கவேண்டும். அன்றியும், சுண்ணம் வைத்த இலேயைப் போட்டுவிடுவதுண்டு. இவ்வாறு செய்யாமல் தின்ருல், தின்பவர் களிடத்தில் இலக்குமி சேராள்.

நீற்றிலேயும் மூக்கு நெடிய நரம்புடனே
தீற்றும் புறவுரியும் தின்றக்கால்—மாற்றலரை
வெல்லப்போர் செய்யும் வீறனெடுமா லாயிடினுஞ்
செல்லப்போய் நிற்குந் திரு. **(அ.கு.)**

வெற்றிலேப் பாக்கை **தின்னுமுறை :** இதனைத் தரிக்கும் இடத்தில் முதலில் வெற்றிலே இன்றி பாக்கை மாத்திரம் போட்டுக்கொண்டால், குற்ற முண்டாகும். மக்களின் உறவு நீங்கும். ஆதலின், முன்னர் வெற்றி லேயை மென்று தின்று பின்னர் முறைப்படி பாக்கு வெற்றிலேகளேத் தின்னவேண்டும். இவ்வண்ணம் நடக்கில் இலக்குமி நிலே பெறும்.

துவர்த்தல், சொக்குதல், மூர்ச்சைப் புழு, உளுத்ததூள், பிசுபிசுப்பு முதலிய குணங்கள் இயற்கையாகப் பாக்கிலிருப்பதால், இதை முதலில் தின்ருல், உடற்குத் துன்பம் நேரிடும் என்பதைக் கருதி, குற்றமுறு மென்றும், பந்துக்களின் கூட்டுறவு நீங்குமென்றும், சுண்ணந் தடவாத புனிதமுள்ள ஒரு வெற்றிலேயை முதலில் மென்று அந்தச் சாற்றை விழுங்கில், நெஞ்சுரலாலும், கபக்கட்டும், மேற்கூறிய பாக்கின் குற்றங் களும் விலகுவதால், இலக்குமி வாசஞ் செய்வாள் என்றும் கூறினா பெரியோர்.

வெற்றிலேக்கு முன்னம் வெறும் பாக்கை வாயிலிட்டாற்
குற்றம் உறுமுறவோர் கூட்டம்போம்—வெற்றிலேயை
முன்னிட்டுப் பாக்கருந்து மூதறிவோர் தம்மார்பின்
மன்னட்டு வாழும்பூ மாது.

## வெற்றிலைப் பாக்கு விழுங்கும் வகை.

பாக்கு, வெற்றிலை, சுண்ணம், இவைகளை ஒன்றுற மெல்லும்போது, அதில் நின்றும் ஊறிய முதல்நீர் நஞ்சு, இரண்டாவது நீர் மிகு பயித்தியம் தரும். மூன்றுவது நீர் அமிர்தம். நான்காவது நீர் அதி இனிப்பு. ஐந்து, ஆறுவது நீர்கள், பித்ததோடம், அக்கினிமந்தம், பாண்டு நோய் இவைகளை உண்டாக்கும்.

அடைகாய்தின்ப தில்லூறு முதல்நீர் நஞ்சாம்
அதிபித்தம் இரண்டாவ தூறு நீரே
கடையமிர்த மூன்றுவ தூறு நீர்தான்
கனமதுர நான்காவ தூறு மந்நீர்
மடையெனவே ஐந்தாறிற் சுரந்துள் ளூறி
வருநீர்க ளைச் சுகித்து மனங்கொண் டுண்டால்
தடையுருப் பித்தமொடு மந்த நோயும்
தளர்பாண்டு நோயுண்டாந் தாஞ்சொன் னேம (தே.கு.)

## வெற்றிலைப் பாக்கு தின்னும் கால வேற்றுமை.

இதனைத் தின்னுவதில், காலையில் பாக்கை அதிகமாகச் சேர்க்கில் தாராளமாய்க் கழியச் செய்யும். பகலில் சுண்ணத்தை அதிகப்படுத்த, நல்ல பசி உண்டாம். மாலையில் வெற்றிலையை அதிகப்படுத்த, வாயில் மணம் வீசும்.

காலை பிளவகங் கட்டுச்சி நீரதிகம்
மாலை யிலையதிக மாயருந்தில்—வேல்விழியே !
காலை மலங்கழியுங் கட்டுச்சி தீபனமாம்
மாலை மணங்குலவும் வாய். (அ.கு.)

## தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி, சுக்கு, கிராம்பு இவைகள் சேருதலின் பண்பு.

காய்ச்சுக் கட்டி சேர்ந்த வெற்றிலைபாக்கினுல், அசைவுற்ற பற்கள் இறுகும். வயிற்றுப் புழுக்கள் சாகும். சுக்கு, கிராம்பு முதலிய மணங் கூடிய வெற்றிலைப் பாக்கால், மனக் களிப்புண்டாகும். உடலைப் பற்றிய சில நோய்களும் செரியாமையும் நீங்கும்.

காய்ச்சுக்கட் டிக்கிறுகுங் கட்டவிழ்ந்த தந்தமங்கார்
பூச்சிக் குழாமிப் புனலிற்சா—மாச்சுக்
கிலவங்க மாதிகளா லின்புண்டா மின்னுஞ்
சொலவங்க நோயுமறுஞ் சொல். (அ.கு.)

## மணப்பொருள் சேர்ந்த வெற்றிலைப் பாக்கின் குணம்.

மணப் பொருளைச் சேர்ந்த பாக்கினுல், மலாவர்த்தவாதம், அக்கினிமந்தம், நாசிரோகம், சுவாசகாசம், அரோசகம், வயிற்றைப் பற்றிய துர்குணம் ஆகியவை நீங்கும். உடலுக்கு ஒளியும் அறிவும், விழிக்கு நலமும் உண்டாகும்.

வாயுமந்தம் பீநசஞ்சு வாசகா சம்மருசி
யேயுதர தோட மிவை போக்குந்—தூயுடற்குக்
காந்தி தரும் புத்திக்குங் கட்குநலஞ் செய்யுமணஞ்
சார்ந்தநறுந் தம்பலர சம். (அ.கு.)

**குறிப்பு** : சுண்ணம், கற்சுண்ணம் அல்லது முத்துச் சுண்ணமாயிருத்தல் வேண்டும். மற்றச் சுண்ணங்களால் பலனில்லை.

தொண்டையடைப்பு, குரற்கம்மலில் வெற்றிலையையும் சாம்பிராணிப் பதங்கத்தையும் மென்று சுவைக்கும்படி செய்யலாம்.

பாற்சுரக்கவும், பால் கட்டி உண்டாகும் முலை வீக்கத்தைக் கரைக்கவும் வெற்றிலையைத் தணலில் வாட்டி அடுக்கடுக்காக வைத்துக் கட்டலாம்.

தலை பளுவுக்கு மூக்கிலும், காது குத்தலுக்குக் காதிலும் வெற்றிலைச் சாற்றில் 2—3 துளி விடலாம்.

வெற்றிலையை எண்ணெயில் நனைத்து, விளக்கில் வாட்டி மார்பின் மேல் போட, இருமல், மூச்சுமுட்டல், கடினசுவாசம், குழந்தைகளுக்குண்டாகும் இருமல் விலகும். இவைகட்கே வெற்றிலைச் சாறுடன் சுண்ணும்புக் கூட்டி தொண்டைக் குழியில் தடவலாம்.

வெற்றிலைச் சாறுடன் இஞ்சிச்சாறும் சேர்த்து, நுரையீரல் சம்பந்தமான நோயில் வழங்கலாம்.

தீப்பட்ட புண்ணின்மீது வெற்றிலையை வைத்துக் கட்டலாம்.

இளம் வெற்றிலைக் கொடி வேரும் மிளகுஞ் சேர்த்துச் சாப்பிட்டு வர மலட்டை உண்டாக்கும்.

வேரைச் சுவைத்துவர, பாடகர்களின் தொண்டை ஒலி பெரும்.

சிறுபிள்ளைகளுக்குண்டாகும் வயிற்றுப் பொறுமல், மலக்கட்டு இவைகளைப்போக்க, வெற்றிலைக் காம்பை ஆமணக்கு நெய்யில் நனைத்து, கீழ் வாயில் வைக்கலாம்.

காமப்பெருக்கை உண்டாக்கும் பொருள்களுடன், வெற்றிலையையும் சேர்த்துண்ண, கலவியில் இச்சை உண்டாகும்.

பாதரசம், வெற்றிலைச் சாற்றால் தூய்மையாம்.

வெற்றிலைச் சாற்றில் கொஞ்சம் கோரேசனஞ் சேர்த்துப் புகட்ட, கோழைக்கட்டு, இருமல், மூச்சுத் திணறல் குணமாகும்.

2—3 வெற்றிலையுடன் 4—5 மிளகு சேர்த்துக் குடிநீரிட்டுப் புகட்ட சிறுவர்களுக்குண்டாகும் செரியாமை விலகும்.

---

## 515. வேங்கை — Vengai.

**வே - பெ :** அசனம், கணி, திமிசு, பிரசாரம்.

Pterocarpus marsupium.

Eng.—The Indian Kino tree.

| | |
|---|---|
| Tel. Vegisa | Sans. Asanam |
| Mal. Venkamaram | |
| Kan. Honnemara | Hind. Bijasar* |

**ப - உ :** இலை, மரப்பட்டை, பிசின்.

**சுவை :** துவர்ப்பு, **தன்மை** - தட்பம், **பிரிவு** - இனிப்பு.

**பட்டை.**

**செய்கை :**

துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**இலை.**

வீக்கமுருக்கி - சோபாநாசநி - Deobstruent.
புண்ணழுக்ககற்றி - வ்ரணசுத்திகாரி - Detergent.

**பிசின்.**

துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.
குருதிபோக்கடக்கி-ரக்தஸ் தம்பனகாரி-Haemostatic
மலமிளக்கி - மலகாரி - (Laxative).

**வேங்கை.**

பக்குவமா யாறு பதத்தை வதைத்துடலில்
மிக்க பிணியை விரட்டியுப்—புக்கல்
மணியிரத மோக வதைகளைப் பந்திக்குங்
கணியதனை நன்றாய்க் கணி.

(வெண்பா.)

வேங்கை, உடலிலுண்டாம் பல பிணிகளைப் போக்குவதன்றியும், உப்பு, கல் (பாடாண) மணிகள், ரசம் உலோகவகைகளைக் கட்டும்.

**இலை**

**பண்பும் வழக்கும்** : இலையை அரைத்துக் களி கிளறி, கட்டிகள், புண்கள், தோலைப் பற்றிய நோய் ஆகிய இவைகளுக்கு வழங்க, கட்டிகள் கரையும் அல்லது பழுத்துடையும். புண்கள் ஆறும். தோல் நோய் விலகும்.

**பட்டை.**

இதைப் பொடி செய்து அல்லது குடிநீரிட்டு வழங்க, செரியாக் கழிச்சல், சீதக் கழிச்சல் முதலியன குணமாகும்.

**பிசின்.**

இம்மரத்தில் வடியும் பால் உறைந்து பிசினாகும். இதற்குக் காய்ச்சுக் கட்டிக்குள்ள செய்கை உண்டு.

இதனால் பொடி இருமல், வெள்ளை, உளைமாந்தை, புண், சீழொழுகல் போம் கழிச்சலுண்டாகும். கண்கள் ஒளி பெறும்.

குத்திருமல் வெட்டையொடு கூறுமுள மாந்தையிவை
எத்திசையும் வாரா திடையுங்காண்—சத்தியமாய்ப்
புண்ணிருமல் சீழொழுகல் போம் மலமிறங்கும்
கண்ணொளிரும் வேங்கைக்குக் காண.

வேங்கைப் பிசின் பொடி 15, அபினி 1, இலவங்கப்பட்டை பொடி 4, இவைகளைக் கலந்து, கல்வத்திலிட்டு நன்றாயரைத்து, புட்டியில் காற்றுப் புகாதபடி கல்லடைப்பானிட்டு வைத்துக்கொண்டு, வேளைக்கு 150 மி.கி.—650 மி. கி. வீதம் தினம் 2, 3 வேளை கொடுக்க, பித்தவாந்தி, செரியாமை, சீதபேதி, நாட்பட்ட அதிசாரம், நீங்கும். புண்களின்மீது தூவி வர, அவைகளினின்று வரும் குருதி நிற்கும். பிறகு அவைகள் ஆறும்.

பிசினை நெய்விட்டு வதக்கிப் பொடிசெய்து, மேற்கூறிய இருமல், வெள்ளை முதலிய நோய்களுக்கு ½ கி—2 கிராம் எடை வீதம் கொடுத்து வரலாம். இதனால் கழியச்செய்யும், கண்களும் ஒளி பெறும், பல் நோய்க்கு இதன் பிசின் பயன்படும்.

---

## 516. வேம்பு—Vembu

**வே. பெ: அரிட்டம், துத்தை, நிம்பம், பாரிபத்திரம் பிசுமந்தம், வாதாரி.**

**(Azadirachta Indica.)**

**Eng.—Margosa-tree.**

| | |
|---|---|
| **Tel. Vepa** | **Sans. Nimba** |
| **Mal. Veppa** | |
| **Kan. Bevina** | **Hind. Nim.** |

இஃது ஒருவித மகிழ்ச்சியைத் தரும் மரம். இந்தியாவிற்கே உரிய தாகத் தெரிகிறது; ஆயினும், பர்மாவிலும் பயிரிடப்படுகிறது. இந்தியா வில் வடமேற்கு நாடுகளில் வறட்சியான பாகங்களில் இது மிகச் செழிப்பாக வளரும்.

சீதத்தால் உண்டாகும் விடசுரங்களைத் தடுக்கும் தன்மை இம்மரத்திற் குண்டென்கிற நம்பிக்கையால், இது பெரும்பாலும் மிகுதியாக நாடுகளின் எல்லைப் புறங்களிலும், வாழும் இடங்களுக்கு அருகிலும், காளி முதலிய கோவில்களிலும், சாலைகளின் இரு புறங்களிலும் வைத்துப் பயிராக்கப்பட்டு வருகிறது. இதில் வேம்பு நீங்க, கருவேம்பு, சர்க்கரை வேம்பு, மலை வேம்பு என்கிற இனமுமுண்டு.

ப-உ: இலை, ஈர்க்கு, பூ, காய், பழம், வித்து, நெய், பிண்ணாக்கு, மரப்பட்டை, வேர்ப்பட்டை, கட்டை, கள், பிசின்.

**இலை.**

**சுவை**—கைப்பு, **தன்மை**—வெப்பம், **பிரிவு**—கர்ப்பு.

**செய்கை:**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - Stimulant
- புழுக்கொல்லி - கருமிநாசநி - Anthelmintic
- வீக்கம்பரப்பி - Discutient

**குணம்:** வயிற்றுப்புழு, பெரு நோய், மாந்தம், நச்சுச்சுரம், அம்மைப் புண், சொறி, சிரங்கு ஆகிய இவைகளை வேப்பிலை போக்கும்.

கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ்சு ரங்கள்
பொருமியம சூரிகையின் புண்கள்—ஒருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகில் நீங்காமல்
கம்பத் திலையிருக்கக் காண். (அ.கு.)

**நிம்பம்.**

கைத்தாலும் பின்னுலகக் காரம்போ லேருசித்து
பித்தா கியவிடத்தைப் பின்னிட்டு—வைத்தமகா
விம்ப மருவினவா மேனிக் களித்திடலால்
நிம்ப முயிர்நிலைக்கு நேர்.

(தேரன் வெண்பா.)

வேம்பு கைப்புப் பொருளாயினும், பித்தப்பையில் நிறைந்த பித்த நீரை வெளியாக்கி, காமாலை நோயைப் போக்கும்.

**வேம்பு.**

புக்தியிதைத் தீட்டுவிக்கும் புன்பிணியை யோட்டுவிக்கு
மிந்தியத்தை நன்று யிசைவிக்கும்—சந்ததமும்
வீறுண்டாங் கற்ப மிகவுண்டா மெஞ்ஞான்றும்
மாறன்று ரையமில்லா மல்.

(தேரன்-வெண்பா.)

வேம்பு, புத்தியைத் தெளிவிக்கும், கபப்பிணியை ஓடடும், அழகைப் பெருக்கும், வீரியத்தை உண்டாக்கும். இது கற்ப மருந்தில் ஒன்றாகும்.

**வேம்பு—பனை—இவைகளின் கற்பம்.**

பாண்டியன்று ரோமமுவர் பண்ணியமா கத்துடங்கிப்
பாண்டியன்று ரோம முவர் பண்ணியதாம்—........
...............
...............

(பொ -ள்) : வேப்பமரத்தின் துளிர், முதிர்ச்சியான இலை ஆகிய இவ்விரண்டையும் இடித்து, அப்பொடியின் அளவிற்கு அரைப் பங்கு ஓமமும் உப்பும் சேர்த்துப் பொடித்து, நல்ல நாளில் புசிக்கத் தொடங்கின், அதனால் கண்ணிலிருக்கும் படலமறைப்பு, காமாலை, மாலைக்கண், புழுவெட்டு முதலிய நோய்கள் அகலும்.

மேலும் கழிச்சல், வெள்ளை, கட்டிகள் இவைகட்கும் பயன்படும்.

வ - கு: வேப்பங் கொழுந்துடன், ஓமம், மிளகு, பூண்டு, சுக்கு, நொச்சிக் கொழுந்து, கறிவேப்பிலை, சோம்பு, சிற்றரத்தை, உப்பு எடுத்து இவைகளுள் உப்பு நீங்கலாக மற்றவைகளைத் தனித்தனியே நெய்விட்டு வதக்கி, கடைசியில் உப்பைச் சேர்த்து நீர் விடாமற்படிமை போலக்கரைக்க மெழுகுபோல் வரும். இதில் 65–260 மி.கி. எடை குழந்தைகளின் வயதிற்குத்தக்கபடி எடுத்து, தண்ணீரில் கரைத்துக் புகட்ட, மாந்தம், வயிற்றுப் பொருமல், மார்புச் சளி இவைகள் நீங்கும். பசியுமுண்டாகும். குடலின் புழுவைக் கொல்லும். கழியச் செய்யும்.

குறிப்பு : மேற்கண்ட பொருள்களுள் நோய்க்குத் தக்கபடி சிலவற்றை நீக்கியும், கழிச்சல், இசிவு இவைகள் கண்டிருந்தால், வசம்பைக் கூட்டியும் நெய்விட்டு வதக்காமலே நீர் விட்டரைத்தும் கொடுக்கலாம். நோய்க்குத் தக்கவாறு ஒவ்வொரு சரக்குகளையும் அளவிட்டு எடுத்துக் கொள்ளவும்.

வேப்பங் கொழுந்துடன் குன்றிமணி வேர்ச் சூரணம் கூட்டியரைத்து (நீர் வேண்டியிருப்பின் 2—3 துளி விட்டுக்கொள்ளலாம்) 130–200 மி.கி. அளவு தினம் மும்முறை கொடுக்க, அசாத்தியமான அம்மை நோய் தீரும்.

வேப்பிலையைத் தனித்தேனும், சிறிது மஞ்சள் சேர்த்தேனும் வெந்நீர் விட்டேனும் விடாமலேனும் அரைத்துச் சீலையில் தடவி மேலுக்குப்போட, கபப்பான், சொறி, சிரங்கு. அம்மைப் புண் இவைகள் நீங்கும். எரிச்சலிருந்தால் அரிசிமா கூட்டிக்கொள்ளலாம்.

வேப்பிலையை நீர் விட்டரைத்துக் களிபோற் கிண்டி மேலுக்குப் போட, வீக்கம், நாட்பட்ட புண், தோலைப்பற்றிய புண் நோய்கள் தீரும்.

வேப்பிலையை அரைத்துக்கட்ட, கட்டிகள் சீக்கிரத்தில் பழுக்கும்.

இலைக் குடிநீர், துட்டப் புண்களைக் கழுவவும், சுடுகையுடனிருக்கும் போது சீலையில் தோய்த்துப் பிழிந்து ஒற்றிடமிடவும் பயன்படும்.

புழு, பூச்சி, செல் முதலியவைகளால் நேரிடும் துன்பங்களை இவ்விலை ஒழிக்கும்.

ஈர்க்கு.

இதைச் சுரக்குடிநீர்களிலும், புழுக்களைக் கொல்லுவதற்குரிய குடிநீரிலும் சேர்க்கலாம்.

பூ.

சுவை : கைப்பு, தன்மை - வெப்பம், பிரிவு - கார்ப்பு,

செய்கை : வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
பசித்தீத்தூண்டி - ஜடராக்னிவர்த்தநி - **Stomachic.**
உரமுண்டாக்கி - பலகாரி - **Tonic.**

குணம் : பித்தத்தாலுண்டாகின்ற பெரு மூர்ச்சை, நாவறட்சி. சுவையின்மை, வாந்தி, நீடித்த வலிநோய், எப்பம், வயிற்றுப் புழு ஆகியவைகளைப் போக்கும்.

பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடம்
சத்தத் தெழுவமனம் தங்கருசி—முற்றியகால்
எப்பம் மசகீட மிவையேகு நாட்சென்ற
வேப்பமல ருக்கு வெருண்டு. (அ.கு.)

வ - கு : நாட்பட்ட பழைய பூவை நெய் விட்டு வதக்கி, உப்பு, சுட்ட பழம்புளி, வறுத்த மிளகாய், கறிவேப்பிலை கூட்டி, துவையல் செய்து சோற்றுடன் கலந்துண்ண, மேற்குறிப்பிட்ட நோய்கள் விலகும்.

பூவை ஊறல் குடிநீரிட்டுக் கொடுக்க, அது பலக் குறைவைப் போக்கும். குன்ம நோயைக் கண்டிக்கும்.

துவரம்பருப்பை வேகவைத்து வடித்த நீரில், மிளகுரசம் செய்வது போலச் செய்து, பாகப்படி இறக்கிய ரசத்தில், பூவை வறுத்துப் பொடிதது கலந்து கொடுக்க. நாவில் உண்டாகும் நோய்கள், சுவையின்மை, வாந்தி, எப்பம் முதலியன படிப்படியாகக் போம்.

புளி, அரைத்த மிளகு இவ்விரண்டையும் தண்ணீரில் கரைத்துப் பிழிந்த வடிகட்டி, அதில் உப்புக் கூட்டிக் கொதிக்கவைத்து நெய்விட்டு வெங்காயத்தை வறுத்து அதிறசேர்த்துக் காய்ச்சி, பாகத்தில் இறக்கி. நெய் விட்டு வறுத்துப் பொடி செய்த பழைய பூவை அதில் கூட்டிக் கலந்து, குழம்பு போலாக்கிச் சோற்றுடன் கலந்து உட்கொண்டுவா, பித்தத்தால எழுந்த சுவையின்மை, வாந்தி, மூர்ச்சை போன்ற நோய்கள் விலகும்.

### காய், பழம்.

சுவை : காய் - கைப்பு, பழம் - சிறு இனிப்பு, கைப்பு, தன்மை (காய்) வெப்பம், (பழம்) - தட்பம், (பிரிவு), காய் - கார்ப்பு, பழம் - இனிப்பு.

செய்கை : { முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Anitiperlodic.
உரமாக்கி - பலகாரி - Tonic.

குணம் : முறை சுரத்தைப் போக்கும் ; வன்மையைக் கொடுக்கும்.

### காய்.

வ - கு : இஃது இளம்பிஞ்சாயிருக்கும்போது இடிக்கப் பால் வரும். இப் பால் 1,400 மி.லி. எடுத்து, 35 கிராம் சுத்தி செய்த வெண்பாடாணக் கட்டிக்குச் சுருக்கிட, பாடாணம் ஒரு வகைக் கட்டாகும். இதைத் தக்க துணை மருந்துடன் வழங்க, நச்சுச்சுரம், முறைச்சுரம், பெருநோய், மூத்திர நோய், மலப் புழு, மூலம் தீரும்.

காயை உலர்த்திக் கொட்டையை நீக்கிப் பொடி செய்து, 2—8 கிராம் எடை வீதம் தினமிருமுறையாகக் கொடுக்க, முறைக் காய்ச்சல் நீங்கும். உடல் வலுக்கும்.

பழத்தின் ரசத்தை எடுத்து மணப்பாகு செய்து தோலைப்பற்றி நோய்களுக்கு வழங்கலாம். (அளவு 17—35 கிராம்).

**வித்து.**

**சுவை :** கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.
**செய்கை :** புழுக்கொல்லி - கிருமிநாசநி - **Anthelmintic.**
**பண்பு :** நஞ்சு, முப்பிணி விலகும்.

"வேம்பின் விதைக்கு விஷஞ்சந்நி பாதமுதல்
தேம்பிவிழுந் தோடுமே னத் தேர்." (அ.கு.)

**வ - கு :** இதன் பருப்பை அரைத்துப் புழுப்பட்ட புண்களுக்குச் பூச புண்ணினின்றும் புழுக்கள் வெளிப்படும். புண் ஆறும்.

**நெய்.**

**சுவை :** கைப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :**
- வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி - **Stimulant.**
- அழுகலகற்றி - தாதுக்ஷீணரோதி - **Antiseptic.**
- பூச்சிகொல்லி - **Insecticide.**

**பண்பு :** வேம்பின் நெய்யைப் பூச, பெரும் வளிநோய் வகைகள், கழலைகள், கரப்பான், சிரங்கு, முன்னிசிவு, சுரம் இவைகள் போம். ஆனால் அழல் மிகும்.

வாதம்போம் பித்தமிகும் மாருக்கி ரந்தியொடு
மோதுகரப் பான்சிரங்கு முன்னிசிவும்—ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்தி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றுருக்கால் விள்ளு. (அ. கு.)

**வ - கு :** வேப்பம் நெய்யுடன் அவ்வளவு ஆடு தீண்டாப்பாளைச்சாறு கூட்டி, சாறுவற்றி நெய் பக்குவப்பட்டபின் இறக்கி வடித்துத் தடவிவர, தோல்கள் வெடித்துக் காணும் புடைகளும், சிறு சிறு கொப்புளங்கள் கண்டு துர்நீர் பாயும் புண்களும், துட்ட புண்களும் நீங்கும்.

வேப்பெண்ணெயை இரும்புக் கரண்டியில் விட்டுக் காயவைத்து எருக்கனிலையைக் கற்றையாய்ச் சுருட்டி கட்டி, ஒரு புறத்தைச் தட்டையாகக் கத்திரித்து தெறிந்து, அதைக் காய்ந்து கொண்டிருக்கும் எண்ணெயில் தோய்த்து ஒற்றிடமிட, பிடரிவலி, நரம்பு, உடல்குத்து, முப்பிணியில் காணும் வலிகள் தீரும்.

ஐங்கூட்டு நெய்யால், பெருவளிநோய்க் கூட்டம், முன்னிசிவு, பின்னிசிவு, முப்பிணி, சுரம், ஐயத்தின் கேடுகள், சொறி, சிறங்கு, கரப்பான் தீரும்.

தனித்த நெய்யை, அக்கி, இல்வாயு, கண்டமாலை, சில தோலைப்பற்றிய நோய்கள் இவைகளுக்கு மே ச்சாய்ப் பயன்படுத்தலாம்.

**பிண்ணாக்கு.**

**செய்கை :** நெய்க்குரிய கைகையே இதற்குமுண்டு.
**குணம் :** இதற்கு, முப் , வளிநோய், தலைவலி, ஐயநோய் போம்.

சந்நியுடன் வாதந் தலைநோய்போம் வாதமறும்
மூன்னின்ற தோடம் முறியுங்காண்—பன்னுதமிழ்
வல்லவரே! வேம்பினல் வந்தபிண்ணாக் கென்றுருகால்
சொற்லையம் போமே தொலைந்து. (அ.கு.)

வ - கு பிண்ணாக்கை இடித்துப் பொடித்து வறுத்து ஒற்றிடமிட மேற்கண்ட நோய்கள் போம்.

பிண்ணாக்கைச் சுட்டுப் பொடிசெய்து முகர, மூக்கினின்றும் நீர் வடியும், தும்மலுண்டாகும். தலைவலி, முப்பிணி நீங்கும்.

### பட்டை.

**சுவை :** கைப்பு, சிறு துவர்ப்பு, **தன்மை** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு

**செய்கை :** முறைவெப்பகற்றி - முறைவ்யாதிரோதி - Antiperodic,
உரமாக்கி - பலகாரி - Tonic.
துவர்ப்பி - ஸங்கோஸனகாரி - Astringent.

**குணம் :** இஃது ஐயசுர முதலிய சுரங்கள், சுரத்தாலுண்டாகும் உடல் தளர்ச்சி, மூலகணம், மாந்தம். மலம், வலிப்பெருக்கு, குன்மம், (வயிற்றுவலி), எரிபூச்சி இவைகளைப் போக்கும்.

ஓதரிய வேம்பை யுறைக்கிற் சுரமுடனே
வாதமறு மூலகண மாந்தம்போந்—தீதாய்
உதிருமெரி பூச்சிகுன்ம மோதா தொழியுஞ்
சிதறுமலம் போகுமெனத் தேர். (அ.கு.)

**வ - கு** சதைத்த வேம்பின் பட்டையின் உட்பாகம் 70 கி. நீர் 720 மி.லி. மணி நேரங் காய்ச்சி வடிகட்டி, சூடாயிருக்கும்போதே 30—45 மி. லி. **வீதம்,** முறை சுரம் வருவதற்கு முந்தியே கொடுக்க, சுரம் வராது வந்தாலும் எளிதாயிருக்கும், இதையே சுரத்தாலேற்பட்ட உடல் அயர் சிக்கும் வழங்கலாம்.

### வேறு.

வேப்பம்பட்டை உள்நார் 35 கிராம், ஏலரித்தூள், **தனியா** (உருளரிசித் தூள், சோம்புத்தூள், சந்தனக்கட்டைத்தூள் வகைக்கு 2 கிராம், தண்ணீர் 700 மி, லி. இவற்றை ஒரு கொதி வருமளவும் காய்ச்சி வடிகட்டி, சூடாயிருக்கும்போதே 40—80 மி. லி. மேற்படி நோய்களுக்குக் கொடுக்கலாம்.

நாட்பட்ட வேப்பமரத்தின் பட்டையைப் பொடிசெய்து, 4—8 கிராம் எடை வீதம்! தினம் இருபோது கொள்ள, நீர்வேட்கை, வாந்தி, சுவையின்மை தீரும். இதையே தோலைப்பற்றிய நோய்களுக்கு வழங் கலாம்.

பட்டை 4 கிராம் திப்பிலி 8 கிராம் சேர்ந்த குடிநீரை, இடுப்புவாதம் கீல்வாதத்திற்கும், இத்துடன் சிறிது மிளகுத்தூளும், நில வேம்புப் பொடியும் அவ்வளவு சேர்த்துக் காய்ச்சிய குடிநீரை, குசுமரோகத் திற்கும், வேர்ப்பட்டைக் குடிநீர் மலைசுரத் (Malaria) திற்கும் வழங்கிவர, நற்பயன் கொடுக்கும்.

### வேப்பம்பட்டைத் தைலம்.

வேப்பம்பட்டை 85 கிராம், விலாமிச்சம் வேர், மிளகு, வெள்ளுள்ளு, சீரகம், கஸ்தூரிமஞ்சள் வகை ஒன்றுக்கு 17 கிராம் இவைகளைப் பசுவின் பால் 700 மி. லி. விட்டரைத்து, நல்லெண்ணெய் 1409 மி. லி. கலந்து தைலஞ் செய்து தலை மூழ்கிவர, பழைய சுரம், வாதநோய், மண்டையிடி, மூக்கடைப்பு, செவிநோய் போம்

### வேறு.

நூறுண்டு வேப்பம்பட்டை 415 கிராம், நீர் 22½ லிட்டர், எட்டில் ஒன்றுகச் சிறுக்கி, எண்ணெய் 2500 மி. லி. கலந்து, இலந்தைவேர், பழம் பாசி, அக்கராகாரம் வகைக்கு 34 கிராம் பால் விட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சி, வடித்து மூழ்கிவரா, பெருநோய், உடல் கடுப்பு, செங்கரப்பன், புண்புரை, சொறி, சிரங்கு தீரும்.

### கள்.

இதற்குப் பசித்தீயைத் தூண்டுதல், உடற்கு வன்மை தரல் ஆகிய செய்கை இருப்பதால், இதை மேகநோய், வளிநோய்கள், பழய சுரம் இவற்றிற்கு வழங்கலாம்.

### பிசின்.

இதற்கும் உரமாக்குஞ் செய்கை இருப்பதால், இதை உலர்த்தி சூரணஞ் செய்து 2—6 கிராம் எடை வீதம் மேகரோகத்திற்குக் கொடுக்கலாம்.

## கருவேம்பு.

இது வேம்பின் இனமே ஆயினும், கருநிறமும், கைப்பும், மரத்தின் ஊட்டமும் மிகப்பெற்றிருக்கும்.

### வழக்கும் பண்பும்.

இதன் இலை, பூ, பட்டை, உள்கட்டை, பிசின் என்கிற யாவையும் ஓரெடையாகப்பொடித்துத் தூக்கி, ஒன்றுபடக் கலந்து, 40 நாள் கொண்ட ஒரு மண்டலம், உப்பு, புளி நீக்கி, காலை மாலை இரு பொழுதும் உண்டுவர, வெளுப்புற்ற உடல், கருவண்டின் நிறம் பெறும் உடலி லுள்ள மயிர்கள் நிமிர்ந்து நிற்கும். இருட்டறையிலிருந்தாலும் உடல் இளஞ்சூரியன் போலக் காணப்படும் என்று போகர் 7000-ல் 1-ஆம் காண்டத்திற் கூறப்பட்டிருக்கிறது.

## சருக்கரைவேம்பு

இது கிடைப்பது அரிது. சிற்சில காடுகளிலும், மலைகளிலும், நாடுகளி லும் கிடைக்கக்கூடும். இது எவ்விதத்திலும் வேம்பிற்கு வேறுபடுவ தில்லை. ஆனால் இலை முதலிய உறுப்புகளின் சுவை இனிப்பாயிருக்கும்.

ப- உ: இலை, பூ, காய், பழம், விதை, பட்டை, வேர்.

**சுவை :** இலை கரும்பு, **காய்** மாம்பழம், **பட்டை** கற்கண்டு, **விதை** நெல்லிக்கனிச்சுவை, **வேர்** கத்தூரிமணம், **தன்மை** சீதம், **பிரிவு**- இனிப்பு.

**செய்கை :**
- உரமாக்கி-பலகாரி-**Tonic.**
- தூய்மையாக்கி-மலினநிவர்த்தநி-**Depurant.**
- உடற்றேற்றி-வ்யதாபேதகாரி-**Alterative.**

**குணம்:** இஃது, உடலை உறுதிப்படுத்தி நீண்டகாலம் நிலைக்க வைப்பதி லும், நாத-விந்துக்களின் குற்றங்களைப் போக்குவதிலும், கடைநாளில் பாதிக்கும் ஐயத்தை விலக்குவதிலும் சிறப்புடையது.

காயசித்தி யாகும் கடியசி லேஷ்மமறும்
தூயவிந்து நாதமிவை சுத்தியுமாம்—தூயவருக்
கெத்திக்கும் கிட்டும் இலையருந்தில் வாயெல்லாம்
தித்திக்கும் வேம்பதற்குத் தேர். (அ.கு.)

**வ-கு. :** இதனைப் பொடித்து, பசுவின் பாலைத் துணையாகக் கொண்டு ஒரு மண்டலஞ் சாப்பிட, கவ்னசித்தி, யோகசித்தி முதலிய உயர்ந்த சித்திகள் கிட்டுமென்றும், பட்டையில்—உப்பும், வேரில்—சூதமும், இலை யில்—நாகமும்,

விதைத்தயிலத்தில்—தாதுவும் கட்டுமென்றும், காயில்—செம்பு நீறும் என்றும், பிஞ்சின் சாற்றில்—இரும்பைப் பழுக்கக் காய்ச்சித் தோய்க்கப் பொன்னாகுமென்றும், இரும்பை இவ்வாறே பூச்சாற்றில் தோய்க்கச் செம்பாகு மென்றும், பழச்சாற்றில் காரீயத்தை உருக்கிச் சாய்க்கப் பொன்னாகு மென்றும் போகர் 7000-த்தின் முதற்காண்டத்தில் காயசித்தி பகுதியின் கீழ்க் கூறுயிருப்பதனாலறிக.

* சுமார், 1886–87 ஆம் ஆண்டில் சென்னை, போர்ட்டு செய்ண்டு ஜார்ஜ் கோட்டை வெளியில், மன்றோ உருவத்திற்கு மேற்புறச்சாலையில் ஒரு மரம் இருந்தது. இம்மரத்தின் இலை இனிப்பாயிருந்ததைக்காண வெகு சனங்கள் அங்குத் தினந்தோறும் (நாள் முற்றும்) கூடுவதைக் கண்ட அதிகாரிகள் அம்மரத்தை வெட்டி விட்டார்கள்.

(க. ச. முருகேச முதலியார்).

---

## 517. மலைவேம்பு—Malai-Vembu.

**Eng.—Common Bead tree. (The Persian Lilac).**
**Melia azatiract.**

| | | | |
|---|---|---|---|
| Tel. | Konda-Vepa | Sans. | Maha-Nim. |
| | | | Parvata- Nimba |
| Mal. | Mala Veieppu | Hind. | Bakayan |
| Kan. | Chikka-bovu<br>Bettada-bevu | Duk. | Gouri-nim |

இஃது இந்தியாவில் பல பாகங்களிலும், பாரசீகம், அமெரிக்கா முதலிய இடங்களிலும் பயிராகும் மரம்.

கைப்பும் அருவருப்புமான சுவை யுடையது. வேப்பிலையின் ஓரங்களில் காணும் அறுவாய் இம்மரத்து இலையில் இராது. இதன் இலை கரும்பச்சை நிறம். காய் சிறிது கனத்தும் உருண்டையாயும் இருக்கும்.

ப-உ : இலை, வேர்ப்பட்டை, பிசின்.

சுவை : கைப்பு, தன்மை, வெப்பம், பிரிவு- கார்ப்பு.

செய்கை :

இலை.

- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Anthemintic.
- பெருமலம்போக்கி-வ்ரேசனகாரி-Cathartic.
- கற்றுகளாக்கி-பாஷாணபேதி-Anthelmintic
- சிறுநீர்ப்பெருக்கி-மூத்ரவர்த்தநி·Diuretic.
- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue.

பூ.

- ருதுவுண்டாக்கி-ருதுவர்த்தநி-Emmenagogue
- வீக்கங்கரைச்சி-Resolvent.

பட்டை.

- பெருமலம்போக்கி-வ்ரேசனகாரி-Cathartic.
- வாந்தியுண்டாக்கி-வமனகாரி-Emetic.

வேர்ப்பட்டை.

- வாந்தியுண்டாக்கி-வமனகாரி-Emetic.
- புழுக்கொல்லி-க்ருமிநாசநி-Anthelmintic.

குணம் : வயிற்றுப்புழு, சூதக வயிற்றுவலி, வெறி நோய் உடலை வர்ட்டு, வள்நோய்கள் நீங்கும்.

மலட்டு புழுவும் வயிற்றின் வலியும்
அலட்டுவாய்வும் போம் அடங்கி—கொலட்டும்
உலவேஞ் சினைதேவற்கண் ஓதிமமே கேளாய் ;
மலைவேம்பின் பேரை வழுத்து (அ.கு.)

வ-கு. : இலைக்கும் காய்க்கும் நஞ்சுதன்மையுண்டெனபது சிலர் கொள்கை. அளவு கடந்து வழங்கினால் யாவும் நஞ்சே சூலகக் குருதியை வெளிப்படுத்தாது கட்டுகின்ற சூதகவலி, நிலைபெற்ற மலட்டுப் புழு, மலட்டு நோய்க்கூட்டம் ஆகிய இவைகளைப் போக்கவல்ல (தேரையரால் இயற்றப்பட்ட "தைலவர்க்கச் சுருக்கத்தில் கூறிய") "கலிங்காதித தைலத்தில்" இதன் இலைச்சாறு சேருகின்றது.

இலைச் சாற்றில் தக்க அளவு கொடுத்து வர, புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும். இலைக் குடி நீரையும் கொடுக்கலாம்.

இலை அல்லது பூவை களி கிளறிக் தலைக்குப் பற்றிட, வாதத்தலை வலியும், கிளைக்கின்ற புண்களின் மீது தடவி வர, அவைகளும் நீங்கும். பேன் உள்ள தலையில் அப்பிவர, பேன்கள் செத்து, விழும். மண்டைச் சொறியும் போம்.

வேர்ப்பட்டையை உலர்த்திப் பொடி செய்து, 5—12 வயதுள்ள சிறுவர் களுக்கு 2—5 கிராம் வீதம், காலை மாலை கொடுத்துவர, வயிற்றுப் புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும். 4 முதல் 6 கிராம் எடை வீதம் கொடுக்க, வெறி, சூதகவயிற்றுவலி நீங்கும்.

பச்சை வேர்ப்பட்டை 3 பங்கும், நீர் 24 பங்கும் சேர்த்து, நீர் அரைப் பாகஞ் சுண்டும் வரைச் சிறுக்கி பாகம் 15—30 மி.லி. வீதம் கொடுத்து வந்தால், வயிற்றுப் புழுக்களைப் போக்கும்.

பிசினைத் தக்க அளவில் கொள்ளக் கருங்கரப்பான், மேகக்கட்டி, செரியாக்கழிச்சல், மண்ணீரல் வீக்கம் குணமாகும்.

## 518. வேர்க்கடலை—Verkadalai.

வே. பெ. நிலக்கடலை.

Arachis hypogoea.

Eng.—Earthnut, Groundnut, Peanut.

Tel. Verushangalu
Mal. Nilakkadala
Kan. Kadalaikkai
Sans. Buchanaka
Hind. Mungphali
Beng. Bat-Kalai, Chinibadalain

இது தென்னிந்தியா, பம்பாய், வங்காளத்தின் சில இடங்களி இவற்றுள் வளரும் ஒரு வகைப் பூண்டு.

இதன் காய் வேரில் காய்த்துப் பூமிக்குள்ளிருக்கும். இதனால் இதற்கு வேர்க்கடலை எனப் பெயர் வந்தது.

ப-உ : கடலை, எண்ணெய்.

சுவை : இனிப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-காரிப்பு.

செய்கை : { உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
மலமிளக்கி—லகுவ்ரேசநி—Laxative.
வரட்சியகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient. }

குணம் : கடலையானது உடலை வளர்க்கும். சிறுநீர்ப் பையின் அழற்சியை மாற்றும். ஆனால், பித்தத்தை மிகச் செய்யும்.

வ-கு : கடலையை வேகவைத்தாவது வறுத்தாவது வெல்லத்துடன் சாப்பிட, உடலை வளர்க்கும். ஆண்மையை உண்டாக்கும்.

பலவகை மிட்டாய் வகைகளில், இக்கடலைப் பருப்பைச் சேர்த்து மிக்க சுவையுள்ள பண்டங்களாக்கித் தின்னலாம்.

இஃது ஏராளமாய் இந்தியாவினின்றும் ஏற்றுமதியாகிறது. மேனாட்டார் இதை மிக ஆவலாக அருந்துகின்றனர். மேலும் பலவகையான தின் பண்டங்களாகச் செய்து, அவற்றைத் திரும்பவும் இந்தியா போன்ற வெளி நாடுகளுக்கு அனுப்பி மிக்க ஊதியம் பெறுகின்றனர்.

இதனின்றும் எடுக்கும் எண்ணெய், உண்பதற்கும் மற்றவைகட்கும் வழங்கப்படுகின்றது.

கடலைத்தோலைநீக்கி இடித்து பொடியாக்கிப் பாலில் வேகவைத்துச் சாப்பிட ஆண்மை உண்டாகும்.

எண்ணெய் ஒரு தேக்கரண்டி வீதம் பாலுடன் சேர்த்து அருந்திவர, நீர்ப்பையை அழலையைப் போக்கி எருவை (மலத்தை) கழியச்செய்யும்.

எண்ணெயை வாதுமை எண்ணெய்க்குப் பதிலாகச் சிலர் வழங்கு கின்றனர்.

---

## 519. வேல்—Vel

**வே-பெ : அரிமேதம், உடை, குடை**

இதில் (1) கருவேல், (2) வெள்வேல், (3) குடைவேல், (4) பீவேல் என நான்கு இனமுண்டு.

### கருவேல் Karuvel

**வே-பெ : கண்டாலு**

Bot. Name. Acacia arabica, willd

Eng. Indian gum arabic tree.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nalla-tumma | San. | Kala-barbura |
| Maḷ. | Karuvelum | | |
| Kan. | Karijali | Hind. | Kala-babul |

இது இந்தியா முற்றிலும் கிடைக்கும். மரத்தின் பட்டைக் கருமை யாயிருக்கும். இதனால் இதற்குக் கருவேல் எனப் பெயர் வந்தது.

ப-உ : கொழுந்து (இலை), பட்டை, வேர், பிசின், வித்து.

சுவை : துவர்ப்பு, தன்மை—தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : {
இலை, பட்டை, வேர், வித்து.
துவர்ப்பி—ஸங்கோசனகாரி—Astringent.
பிசின்
உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—Demulcent.
வரட்சிகற்றி—ஸ்நிக்தகாரி—Emollient.
உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient.
நுரை ஈரல் நோயாற்றி—Pectoral.
ஆண்மைபெருக்கி—காமவர்த்தநி—Aphrodisiac. }

### இலைக்கொழுந்து

**குணமும் வழக்கும்:** இதைத் தயிரிலரைத்துக் குடிக்கில், பாஷாண வேகம் நீங்கும். முலைப்பாலில் அரைத்து அடை தட்டிக் காய்ந்த சட்டியி லிட்டு வெதுப்பி அற்ப சூடாக ஒற்றிடமிடக் கண்சிவப்பு மாறும்.

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரில்
உண்டாற்பா ஷாணவெப்ப மோடுங்காண்—கண்டாவி
வந்தசிவப் பேகும்தை மாதர்பா லாலரைத்து
வெந்தவடை கண்ணிலொத்த வே.

(அ.கு.)

### வேல்

பல்லுக் கடுத்த பலநோ யுகற்றி யதைக்
கல்லுக்கு நேராகக் கட்டுமே—மல்லுக்கு
நண்மின்வினை காளெனப்போய் நாளும் வியாதிகளைச்
சண்மயில் வன்னாயு தம்.

(தேரன்—வெண்பா)

இது, பற்களிலுண்டாகும் பலவகைப்பட்ட நோய்களைப் போக்கி, அவை களைக் கல்லுக்கு ஒப்பாய் அசையாமல் நிலைக்கச் செய்யும்.

அன்றியும்; தனிப்பட அரைத்துக் கொடிய புண்களுக்குக் கட்டினால், துர் நீரை மாற்றும்.

கொழுந்தை அரைத்துச் சருக்கரை கூட்டி, நீரிற் கலக்கிக் காலையில் மாத்திரம் உட்கொள்ள இருமல் தணியும்.

### பட்டை

இதனால், பாதரசத்தினாலுண்டாகும் வேக்காடு முதலிய புண்களும் சுரமும், அழல்நோயும் ஒழியும். பல்லிறுகும்.

தந்தம் இறுகுந் தனிச்சூதப் புண்ணாறும்
வந்தசுரம் பித்தம் மடியுங்காண்—பந்த
மருவே யகலா மலரளக மாதே !
கருவேலம் பட்டைக்குக் காண். (அ.கு.)

இதைக் குடிநீரிட்டு மேல்க்குடல் வெளிப்படலுக்குக் கழுவும் நீராகவும், பல்லாட்டம், வாய்ப்புண், இரசவேக்காடு இவைகளுக்குக் கொப்புளிக்கும் நீராகவும் வழங்கலாம். இப்பட்டையின் ஊறல் குடிநீர் (பட்டை 1 பாகம், தண்ணீர் 14 பாகம்), நாட்பட்ட சீதக்கழிச்சல், நீரிழிவு, சுரம், அழல் நோய் கள் 30—45 மி.லி. வீதம் கொடுத்து வரலாம்.

பட்டையை உலர்த்திப் பொடிசெய்தேனும் சுட்டு, கரியாக்கியேனும் பற்களைத் தேய்த்துவர, பல்லாட்டம், ஈரல் இரத்தம் வடிதல் நீங்கும்.

பட்டையின் சாற்றுடன் முலைப்பாலுங் கூட்டிக் குழைத்துக் கண் ணிலிட கண் இமையிற் காணும் நோய்கள் தணியும்.

### வேர்

இதனால், குருதிக் கடுப்பு, மந்தம், பெருவளி நோய்கள், கரப்பான், வளிக்கழிச்சல் ஆகியனவகள் போம்.

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
பருவாதம் ஊறுகரப் பானும்—பெருகு
பெரும்பேதி யும்போகும் பேசவி ளிக்கும்
கரும்பே ! இதனைக் கருது.

(அ கு.)

இதன் குடிநீர் அல்லது ஊறல் நீரை மேற்கண்ட நோய்களுக்கு வழங்கலாம்.

**பிசின்**

இது, நீர்த்துப்போன தவளத்தை (சுக்கிலத்தை) இறுகச் செய்யும். எரிச்சலோடு விழுகின்ற சீழ்வெள்ளையை நிறுத்தும். அழகையும் வன்மையையும் உண்டாக்கும்.

நீத்தொழுகும் விந்து நிலைக்கப் புரியுமெரி
பூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம்—மாத்திரமோ ?
தேசு தருமாஞ் செய்யும் பெரியோராற்
பேசுகரு வேலம் பிசின்

(அ.கு.)

அன்றியும், இஃது இருமல், குடல்தாபிதம், குடல் புண், தொண்டை நோய், நீர் எரிச்சல், பேதி, காய்ச்சலோடு கூடிய சில நோய்கள் இவைகளுக்கும் உதவும்.

3—5 கிராம் எடையுள்ள பிசின் துண்டு ஒன்றை வாயிலிட்டுச் சுவைத்து அதினின்றும் ஊறும் இரசத்தை விழுங்கிக்கொண்டிருந்தால் வறட்சி, இருமல், நெஞ்செரிச்சல். தொண்டை நோய் போம். ஆண்மை பெருகும். அழல் தணியும். அழகையும் வன்மையும் உண்டாக்கும்.

மதுமேகம், வெகு மூத்திரமுள்ளவர்கள் இவர்களுக்குக் கொடுக்கும் மருந்துகளுக்கு இதைத் துணை மருந்தாக வழங்கலாம். மிக்க பயனளிக்கும்

இதை முட்டை வெண்கருவுடன் கூட்டி, நன்ருய் உறவாக்கித் தீப்புண் மீது தடவலாம்.

பிசின் பொடி இரத்தப்போக்கை நிறுத்தும்;

நெய்விட்டு வறுத்துப் பொடிசெய்து உடல் உரமாக்கவும், ஆண்மை பெருக்கவும் வழங்கலாம்.

குறிப்பு : கருவேலன் குச்சி பல் துலக்க உதவும். இதனல் பல்லிறுகும். " ஆலும் வேலும் பல்லுக்குறுதி " என்பதைக் கவனிக்க.

**கண்டில் வெண்ணெய்.**

**சுவை :** கார்ப்பு, **வீரியம்** - வெப்பம், **பிரிவு** - கார்ப்பு.

**செய்கை :** வெப்பமுண்டாக்கி - உஷ்ணகாரி. கோழையகற்றி - கப்ஹரகாரி.

**குணம் :** கண்டில் வெண்ணெய்க்கு, நெஞ்சிற் கபக்கட்டு, காசம், மூத்திரக்கிரிச்சாம், சூதகச்சூலை நீங்கும். தேகங் காந்தி பெறும்.

கண்டில்வெண்ணெய் மாதே ! கேள் காந்திப்பிர தாபமுமாந்
தொண்டையினுள் நீர்க்கட்டு தூரிருமல்—டிண்டிவரும்
நீர்க்கடுப்பு மூலத்துள் நீர்க்குத்த லும்போகும் ;
பார்க்கு ளறியப் பகர்

(அ.கு.)

**வ - கு :** இதில் ஒன்று அல்லது இரண்டு குன்றியெடை, நாள் ஒன்றுக்கு இருவேளையுமாகக் கொள்ள, மேற்குறித்த நோய்கள் தீரும்.

## வெள்வேல்—Vel-Vel.

**Acacia leucophloea.**

Eng. :—Bapul (with white bark.)

| | | | |
|---|---|---|---|
| Tel. | Tella-tumma | Sans. | Shweta-babbula |
| Mal. | Vel-velum | | |
| Kan. | Bilijali | Hind. | Sufed-Babool |

இது கருவேல் மரத்தைப் போலவே தானிருக்கும். மரத்தின் பட்டை மாத்திரம் வெண்ணிறம், இந்தியாவில் எங்குமுண்டு.

இது மர வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ : இலை, பட்டை, வேர், பிசின், வித்து.

சுவை: துவர்ப்பு, தன்மை- வெப்பம், பிரிவு-கார்ப்பு.

செய்கை : கருவேலுக்குரிய செய்கைகளே இதற்குமுண்டு.

குணம் : வெள்வேலுக்கு மயக்கம், வளிச் சுரம், சந்துக்குடைச்சல், உடல் முழுமையும் பற்றிய வளிநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

பித்தம யக்கமதும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாத மோடுங்காண்—குத்துகின்ற
சந்துக் குடைச்சலுடன் சர்வாங்க வாதம்போம்
கொந்துலவும் வெள்வேலுக்கு. (அ-கு.).

வ-கு. : கருவேலின் உறுப்புகளைப் பயன்படுத்துவதுபோலவே இதன் உறுப்புகளையும் உபயோகிக்கலாம்.

இதன் பட்டைத் தைலத்தை மூழ்கிவர, மேற்கண்ட பிணிகள் விலகும்.

**தைலம்.**

இதன் பட்டை (கணுநீக்கிய) அறுகன்வேர் வகைக்கு 204 கிராம் எடுத்து இவற்றை நீர் 1,400 மி.லி. சேர்த்து, 350 மி.லி. குறுக்கி, 350 மி. லி. எண்ணெய் கூட்டித் தைலம் வடிக்கவும்.

## குடை வேல்—Kudai vel

வே - பெ : உடைவேல்

Acacia - Eburnea.

இவ் வேலமரத்தையும் வெள்வேலைப்போலவே வழங்கலாம்.

---

## பீக்கருவேல்—Pikkaruvel

Bot. Name :—Acacia farniesiana,

Eng :—Cassia flower.

| | | | |
|---|---|---|---|
| Tel. | Nugatumma | Sans. | Arimaedah |
| Mal. | Pivelum | Hind. | Vilayati-Kikar |
| Kan. | Karijali | Duk. | Gu-kikar |

இம்மரம் இந்தியாவில் எங்கும் பயிராகின்றது. இதற்கு நறு மணமுள்ள மஞ்சள் பூக்கள் உண்டு.

இது மர வகுப்பைச் சேர்ந்தது.

ப-உ : இலை, பூ, பட்டை, பிசின்.
சுவை : துவர்ப்பு, தன்மை-தட்பம், பிரிவு-இனிப்பு.

செய்கை : { துவர்ப்பி—ஸங்கோசனகாரி—**Astringent.** / உள்ளழலாற்றி—அந்தர்ஸ்நிக்தகாரி—**Demulcent.** / உடற்றேற்றி—வியதாபேதகாரி—**Alterative.** }

**குணம்** : இதனால் வெள்ளை, வெட்டை, ஈற்றுப் புண் முதலியன தீரும்.

வ-கு : இளங்கொழுந்தை அரைத்துக் கழற்சி அளவு நீரிற் கரைத்து உட்கொள்ள, வெள்ளை மாறும்.

பூவிலிருந்து நறுமணமுள்ள எண்ணெய் எடுக்கலாம். இதில் இரண்டொரு துளி தினமும் சாப்பிட்டுவர, உடலிலுள்ள வெப்பத்தை மாற்றும்.

பட்டையை முறைப்படி குடிநீரிட்டு வாய் கொப்புளித்துவர, பல்லீற்றிலிருந்து வரும் குருதி நிற்கும். பல் உறுதியாகும்.

பிசின், பலவிதப் பொடிகளிலும், உடல் வன்மையைப் பெருக்கக் கூடிய லேகியங்களிலும் சேருகின்றது.

## வேளை—Velai

### 520. நல்வேளை Nal velai

| | | | |
|---|---|---|---|
| Tel. | Vaminta | | |
| Mal. | Karvela | Sans. | Ajaganda |
| Kan. | Shrikala | Hind. | Hurhur |

இஃது இந்தியாவில் எங்கும் கிடைக்கும் சிறு பூண்டு. இதில் சில சாதிகளுண்டு. அவை : நல்வேளை, நாய்வேளை (clemone Viscova) நதைவேளை (Felinaclemone) . நல்வேளைக்குப் பெருங்காய மணமுண்டு.

ப-உ : இலை, பூ, விதை, வேர்.

சுவை : கார்ப்பு, தன்மை-வெப்பம், பிரிவு-கார்ப்பு.

இது இந்தியாவில் எங்கும் தானகவே வளரக்கூடியது.

இது பூண்டு இனத்தைச் சேர்ந்தது.

காடுக்கடுகு அல்லது நாய்வேளை என்ற மூலிகையில் காணும் குணமே இதற்கு பொருந்தும்.

செய்கை :

இலை

தடிப்புண்டாக்கி—ஷோணகாரி—Rubefacient.

விதை

புழுக்கொல்லி—க்ருமிநாசநி—Anthelmintic.
இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Antispasmodic.
அகட்டுவாய்வகற்றி—உத்ரவாதஹரகாரி—Carminative
வியர்வைப்பெருக்கி—ஸ்வேதகாரி—Diaphoretic.

**குணம்** : இதனால் தலைநோய், உடல் நோய், குடைச்சல், ஐயப்பெருக் மார்புவலி, தோடம், வளி, சோபை, ஆகியவை போம். ஆனால், வாய் புண், அனல், பித்தம், பசி, இவை உண்டாகும்.

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்தியம்
உரநோ யிவைக ளொழியும்—உரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் ! பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

நல்லவே ளைப்பூண்டை நாடுங்கால் வாதமும்போம்
சொல்லுமை யத்துடனே சோபையறும்—மெல்லமெல்ல
தக்க வன லும்பித்துந் தானெழும்புஞ்சாந்தமின்றி
அக்கர நோய் மிஞ்சு மறி. (அ.கு.).

பூ.

பூவினால், கணமாந்தம், வளி, நீர்க்கோவை, மார்புச்சளி, மாந்த சுரம் இவை நீங்கும். பசி மிகும்.

கணமாந்தம் வாதங் கபக்கோவை கோழை
அணுமாந்த வெப்பும் அகலும்—மணமாரும்
பாளைக் குழலே ! பசிமெத்த உண்டாகும்
வேளைப்பூ என்றுரைக்கால் விள். (அ.கு.).

**வ-கு** : ஐயத்தாலுண்டாகும் கொடிய தலைநோய்க்கு, இலையைச் சிதைத்துச் சாற்றைப் பிழிந்து, திப்பியை உச்சியில் வைத்து, அதற்குமேல் புதுப் பானை ஓட்டை வைத்துச் சீலையால் இறுக்கிக் கட்ட, ஒருவித விறு விறுப்புண்டாகும். 5—10 நிமிஷம் பொறுத்துக் கட்டை அவிழ்த்து இலைத் திப்பியைப் பிழிய நீர் வடியும். தலைபாரம் நீங்கும்.

காதிற் சீழ்வடிதலுக்கு இலைச் சாற்றில் 1—2 துளிகள் காதில் விடலாம். இதனால், காதில் எரிச்சலுண்டாகும். சிறிது நேரங் கழிந்த பின் எரிச்சல் இராது.

கட்டிகளில் சீழ்பிடிக்காதிருக்க இலையை அரைத்து வைத்துக் கட்டலாம். இலையைக் குழப்பு சாம்பார் செய்து கொடுக்க, வளிநோய்களைப் போக்கும்.

பூவை வதக்கிச் சாறு பிழிந்து, குழந்தைகளின் வயது, நோயின் வன்மை இவைகளை அறிந்து, 5—15 துளி வரையில் முலைப்பாலுடன் கலந்து புகட்ட, கணமாந்தம், மார்புச் சளி, மாந்த சுரம், சலதோடம் நீங்கும்.

பூவை நெய்யிலிட்டு வதக்கித் துவையல் செய்து சோற்றுடன் கலந் துண்ண, வளிநோய்கள் முதலியன தீரும்.

### விதை.

விதைப் பொடியில் 2—4 கிராம் எடுத்து, சருக்கரை சேர்த்து, நாள் ஒன்றுக்கு இரு முறையாய் இரண்டு நாள் கொடுத்த பிறகு, மூன்றும் நாள் 17—34 கிராம் சிற்றுமணக்கெண்ணெய் கொடுக்க, வயிற்றுப் புழுக்கள் வெளிப்படும்.

இதன் விதையை வேகவைத்தாகிலும், வறுத்தாகிலும் 2—4 கிராம் எடை எடுத்து நெய்கூட்டிக் கலந்து, ஒரு சிட்டிகை உப்பு சேர்த்து, கால் சேர் நீருடன் கொடுக்க, சுளுக்கு முதலியவை நீங்கும்.

விதையை வெந்நீர் அல்லது பழ இரசம் அல்லது காடி விட்ட ரைத்துப் புற்கை செய்து வீக்கங்களின் மீது வைத்துக் கட்டலாம்.

விதையைக் குடிநீர் செய்து, முப்பிணிச் சுரங்களிலும் வளிநோய்களி லும் வழங்கலாம்.

### வேர்.

இது வளி நோய்களைக் கண்டிக்கும் தைல முறைகளில் சேரும்.

குறிப்பு :—பாலவாகடத்தில் குறிப்பிட்டுள்ள, வேளைக் குடிநீர் வேளை நெய், வேளையாதி எண்ணெய், வேளை எண்ணெய், வேளை வேர் சுரசம், இவைகளையும் கவனிக்க.

## தைவேளை—Thai velai.

வே - பெ. : அசகண்டா, பாலையம் விவிதம்.

இது வேளையில் ஒரு வகை.

"" வேளை " என்கிற பெயரின்கீழ்—(1) காய்வேளை, (2) முட்கா வேளை, (3) நல்வேளை, (4) நாய்வேளை, (5) தைவேளை என்கிற பெயரால் வழங்கும். பூண்டுகளில் மூன்றுக்கும் நான்குக்கும் பொருத்தம் மிகவுண்டு. மூன்று வதன் பூ வெண்மை. நான்காவதன் பூ மஞ்சள் (இதற்கே காட்டுக் கடுகு என்றும் பெயர்). ஐந்தாவது சிறிது இலையிலும், பூ நிறத்திலும், உருவத திலும் சிறிது வேறுபடும். பூ வெண்மை கலந்த நீல நிறமாயும், பெரி தாயுமிருக்கும்.

இதன் சமூலச் சாற்றுடன் பசுவின் பாலும் சருக்கரையுங் கலந்து உட்கொண்டு வர, இரத்தபீநசம் நீங்கும்.

**குணபாடம் முதற்பாகம் முற்றிற்று.**

—

# குணபாடம் (மூலிகை வகுப்பு)

## பொருட் செயல் தொகுப்பு

நல்லெண்ணெய்க்கு — இதற்கு உள் அழல் ஆற்றி செய்கை கிடையாது.

தேங்காய்எண்ணெய் — உள்ளழல் ஆற்றி செய்கை உண்டு.

விராலி இலை சாறு எடுக்க முடியாத இலை.

# பொருட் செயல் தொகுப்பு

**The Physiological action of the theroutle Agents, with their definition.**

## 1. அகட்டுவாய்வகற்றி

(அகட்டு வாய்வகற்றி—உதரவாதஹரகாரி—Carminative)

அகட்டிலுள்ள காற்றைப் போக்கி வெப்பத்தை உண்டாக்கிப் பிணியை நீக்கும் பொருள். (A calming or soothing drug chief for children that act by relieving pain and flatulence).

**Carminative.**

1. அசமதா ஓமம்.
2. அவரை.
3. அறுவதா.
4. ஆளிவிரை.
5. இஞ்சி.
6. இரட்டைப்பேய் மருட்டி.
7. இலவங்கம்.
8. இலவங்கப்பட்டை.
9. இலவங்கப் பத்திரி.
10. உருத்திரச் சடை.
11. எட்டி.
12. எலுமிச்சை.
13. எலுமிச்சந்துளசி.
14. சிறு ஏலம்.
15. பெரு ஏலம்.
16. மலை ஏலம்.
17. ஓமம்.
18. கண்டங் கத்திரி.
19. கத்தூரி மஞ்சள்.
20. கருஞ்சீரகம்.
21. கருப்பூரப்புல்.
22. காட்டு எலுமிச்சை.
23. காட்டுக் கடுகு.
24. காட்டுக் கருவாப்பட்டை.
25. காட்டுக் கஸ்தூரி.
26. காட்டுக் கிராம்பு.
27. காவட்டம் புல்.
28. இச்சிலிக் கிழங்கு.
29. குட சப்பாலை.
30. குன்மக்குடோரி.
31. கேக்கு விதை.
32. கொத்து மல்லி.
33. கொறுக்காய்ப் புளி.
34. சண்பகம்.
35. சதகுப்பை.
36. சாதிக்காய்.
37. சாதிப்பத்திரி.
38. சிறு நாகப்பூ.
39. சிறு புள்ளடி.
40. சீரகம்.
41. சுக்கான் காய்.
42. சுக்கு.
43. தாளிசபத்திரி.
44. திப்பிலி.
45. தேவதாரு.
46. நல் வேளை.
47. ¦ லக்கடம்பு.
48. ¦ லப்பனை.
49. நரலி.
50. பன்னீர்ப்பூ.
51. பிளப்புச் சீரகம்.
52. புதினா.
53. புளி.
54. பெருங்களர்வா.
55. பெருங்காயம்.
56. பெருஞ்சீரகம்.
57. பேராமுட்டி.
58. மஞ்சள்.
59. மரக்காரை.
60. மலைப்பாலை.
61. மிளகரணை.
62. மிளகு.
63. முன்னை.
64. வங்காரவள்ளை.
65. வசம்பு.
66. வாய் விடங்கம்.
67. வாலேந்திர போளம்.
68. வால் மிளகு.
69. விளா.
70. வெந்தயம்.
71. வெள்ளுள்ளி.
72. வெள்ளை மிளகு.
73. வெற்றிலை.

## 2. அழுகலகற்றி

அழுகலகற்றி—தாது க்ஷணரோதி—Antio septic உடற்கட்டுகளையும் மற்றையப் பொருள்களையும் அழுகவெட்டாமல் தடுக்கின்ற பொருள். (A remedy that prevents putreficition and inhibats the growth of micro organisms).

1. இலவங்கம்.
2. எட்டி.
3. ஓமம்.
4. கரும்பு.
5. காட்டுக் கடுகு.
6. சந்தனம்.
7. சரள தேவதாரு.
8. சாம்பிராணி.
9. பற்பாடகம்.
10. புகையிலை.
11. புங்கு.
12. மாசிப்பத்திரி.
13. வெற்றிலை.
14. வேப்பநெய்.
15. தெங்கு.
16. அரிசி.

## 3. இசிவகற்றி

இசிவகற்றி—அங்காகர்ஷணநாசநி—Anti-spas modic. இசிவுகளைத் தணிக்கின்ற அல்லது போக்குகின்ற பொருள் : (An agent allaying or relieving convulsion or sparmodic pains).

இசிவகற்றி—Anti spasmodic.

1. அபினி.
2. அறுவதா.
3. ஆடாதோடை.
4. இலவங்கம்.
5. ஊமத்தை.
6. ஓமம்.
7. கஞ்சா.
8. கருப்பூரப்புல்.
9. கழற்சிக்கொடி.
10. காட்டுக் கஸ்தூரி.
11. காட்டு முள்ளங்கி.
12. காவட்டம்புல்.
13. கிச்சிலிப் பழம்.
14. குங்குமப்பூ.
15. குருவேர்.
16. குரோசானி ஓமம்.
17. கோவை.
18. சடாமாஞ்சி.
19. சதகுப்பை.
20. சிவக்கரந்தை.
21. தண்ணீர்விட்டான்.
22. தாழை.
23. நல்வேளை.
24. புகையிலை.
25. புதினா.
26. பெருங்காயம்.
27. மரக்காரை.
28. மரு.
29. முருங்கை.
30. மூங்கில்.
31. மருது.
32. மிளகாய்.

## 4. இளைப்பாற்றி

இளைப்பாற்றி—Restorative, உடலை வன்மைபடுத்தி, நன்னிலையில் வைக்கும் பொருள். Drug, cordial or food that is efficacious in restoring one health and vigour.

இளைப்பாற்றி—Restorative.

1. கடற்பாசி.
2. குருக்கத்தி.

## 5. இன்பம் பெருக்கி

இன்பம் பெருக்கி—காமவர்த்தநி—Aphodisiac : கலவி இன்பத்தைப் பெருக்கும் பொருள். Drug that stimulates sexual passion.

இன்பம்பெருக்கி—Aphrodisiac.

1. அக்ரோட்டு.
2. அதிவிடயம்.
3. அமுக்கிராக் கிழங்கு.
4. அலிசி.
5. அவரை.
6. அறுக்கீரை.
7. ஆலமரம்.
8. ஆளிவிரை.
9. இலவங்கப்பட்டை.
10. உளுந்து.
11. ஓரிதழ்த்தாமரை.
12. கஞ்சா.
13. கடலை.
14. கமேலா.
15. கருவேலம்.
16. கறி(ப்பர)முள்ளி.
17. காட்டாத்தி.
18. காட்டு உளுந்து.
19. காட்டு ஏலம்.
20. காட்டுச் சதகுப்பை.
21. கார்போகரிசி.
22. காணும் வாழை.
23. குடசப்பாலை.
24. குன்றி.
25. கூந்தற்பனை.
26. கோட்டம்.
27. சாதிக்காய்.
28. சாதிப்பத்திரி.
29. சாரப்பருப்பு.
30. சாலாமிசிரி.
31. சீந்தில்.
32. சீமை மிளகாய்.
33. சூரை.
34. செம்பரத்தை.
35. தட்டைப்பயறு
36. தண்ணீர்விட்டான்
37. தொட்டாற் சுருங்கி
38. நாகமல்லி
39. நாட்டு அக்ரோட்டுக் கொட்டை.
40. நிலப்பூசனி
41. நீர்முள்ளி
42. நெருஞ்சில்
43. பருத்தி
44. பலாசு
45. பறங்கி
46. பனை
47. பிசின் பட்டை
48. பிரமியவழுக்கை
49. புடல்
50. புளிச்சிறுகீரை.
51. பூனைக்காலி.
52. பெருங்காயம்.
53. பேரீச்சு.
54. மதனகாமப்பூ
55. மரிமா.
56. முக்குளிகீரை.
57. முநதிரி.
58. முள்ளங்கி.
59. முள்ளிலவு.
60. மூங்கில்.
61. வாதுமை.
62. வாலுழுவை.
63. வில்வம்.
64. வெட்பாலை.
65. வெண்டை.
66. வெந்தயம்.
67. வெற்றிலை.

## 6. ஈரல் தேற்றி

(ஈரல்தேற்றி—யக்ருத பலகாரி—Hepatic-tonic—கல்லீரலுக்கு வன்மை தரும் பொருள். Drug that tones the liver).

ஈரல்தேற்றி—Hepatic tonic.

1. கரிசலாங்கண்ணி

## 7. உடல் வெப்பகற்றி

(உடல் வெப்பகற்றி—சமனகாரி—Sedative—உடலில் ஏற்படும் வெப்பத்தைத் தணிக்கும் பொருள். A substance lessons the temperature).

அமுக்கி ராக்கிழங்கு .. ..

## 8. உடலுரமாக்கி

(உடலுரமாக்கி—போஷணகாரி—Nutrient: உடலுக்கு வலுவைக் கொடுத்துக் காப்பாற்றுகின்ற பொருள்: Drug that nourishes the body as a whole).

### உடலுரமாக்கி—Nutrient.

1. அந்திமல்லி.
2. அழிஞ்சில்.
3. இலவங்கம்.
4. உளுந்து.
5. எள்ளு.
6. ஓரிதழ்த் தாமரை.
7. கக்கரிக்காய்.
8. கசகசா.
9. கரும்பு.
10. கருவேல்.
11. கர்க்கடக சிங்கி.
12. கலியாணப் பூசினிக்காய்.
13. காட்டு இலுப்பை.
14. காருச்சருணை.
15. கூந்தபற்னே.
16. கூவைக்கிழங்கு.
17. கேழ்வரகு.
18. கொள்ளுக்காய்வேளை.
19. கொள்ளு.
20. கோதுமை.
21. சருக்கரைவள்ளி.
22. சீமையகத்தி.
23. சுரை.
24. சூரை.
25. சோளம்.
26. தக்கோலம்.
27. தண்ணீர்விட்டான்.
28. தாமரை.
29. தாளிப்பனை.
30. திராட்சி.
31. தினை.
32. துரிஞ்சிபீன்.
32. துவரை.
34. தெங்கு.
35. நெய்தற் கிழங்கு.
36. நெல் (அரிசி).
37. பசசைப்பயறு.
38. பண்ணிமோந்தான்.
39. பயற்றங்காய்.
40. பலா.
41. பனை.
42. பார்லி.
43. பீர்க்கு.
44. பேரீச்சு.
45. பொன்முசுட்டை.
46. மா.
47. முசுமுசுக்கை.
48. முலாம்பழம்.
49. வாதுமை (இனிப்பு).
50. வாழை.
51. வெட்பாலை.
52. வேர்க்கடலை.

## 9. உடற்றேற்றி

(உடற்றேற்றி—வ்யதாபேதகாரி—Alterative—உடல் முழுவதையும் பற்றியாவது ஓர் உறுப்பைப் பற்றியாவது உண்டாக்குகிற நோயை முறைமையோடு போக்கி, உடலை நன்னிலைக்குக் கொணருகிற பொருள். Drug that alters the morbid processes of nutrition and excretion restoring in some unknown way the normal functions of an organ or of the systems without producing any obvious impression on any of the organs of the body.

### உடற்றேற்றி—Alterative.

1. அக்காரப்பட்டை.
2. அக்ரோட்டு.
3. அத்தி.
4. அமுக்கிராக்கிழங்கு.
5. அம்மையார்க் கூந்தல்.
6. அழவாணம்.
7. அழிஞ்சில்.
8. ஆகாசகருடன்.
9. ஆடு தின்னாப்பாளை.
10. ஆவாரை.
11. ஆளிவிரை.
12. ஆற்றுத்தும்மட்டி.
13. ஆனைக்கற்றுழை.
14. இசங்கு.

15. இலுப்பை.
16. ஊமலாற்றி.
17. எருக்கு.
18. கடற்பாலை.
19. கட்டுக்கொடி.
20. கரிசலாங்கண்ணி.
21. கலப்பைக் கிழங்கு.
22. கலியாணப்பூசினி.
23. கறிப்பாலை.
24. கற்றுமரை.
25. கற்றாழை.
26. காட்டுச்சீரகம்.
27. கார்போகரிசி.
28. காருக்கருணை.
29. கிச்சிலிக்கிழங்கு.
30. கிட்டிக் கிழங்கு.
31. குடியோட்டுப்பூண்டு.
32. கொட்டைக்கரந்தை.
33. கொத்தான்.
34. சண்டகம்.
35. சந்தனம்.
36. சருகரை வேம்பு.
37. சிறியாநங்கை.
38. சின்னி.
39. சீந்தில்.
40. சேராங்கொட்டை.
41. தக்காளி.
42. தழுதாழை.
43. தேற்றான்.
44. தொட்டாற்சுருங்கி.
45. நத்தைச்சூரி.
46. நன்னாரி,
47. நாகமல்லி.
48. நாயுருவி.
49. நிலக்குமிழ்.
50. நிலவேம்பு.
51. நீரடிமுத்து.
52. நீர்ப்பூலா.
53. நெய்ச்சட்டி.
54. நொச்சி.
55. பறங்கிப்பட்டை.
56. பாகல்.
57. பால்வள்ளி.
58. பிரண்டை.
59. பீக்கருவேல்.
60. பீதரோகணி
61. புங்கு.
62. புள்ளடி.
63. பெருங்களர்வா.
64. பொன்முசுட்டை.
65. பொன்னாங்காணி.
66. மணத்தக்காளி.
67. மந்தாரைப்பட்டை.
68. முன்னை.
69. வல்லாரை.
70. வாலுழுவை.
71. விஷ்ணுகிராந்தி.
72. வெள்ளறுகு.
73. வெள்ளுன்னி.

## 10. உணர்ச்சிப் போக்கி

(உணர்ச்சிப் போக்கி—ஸ்மிருதிரோதகாரி—Local anaesthetic - உடலில் எந்தப் பாகத்தில் தடவப்படுகிறதோ, அப்பாகத்தின் உணர்ச்சியை நீக்கும் பொருள் ; A substance that produces loss of sensation when used locally.)

இலவங்கத் தைலம்.

## 11. உமிழ்நீர்ச் சுருக்கி

(உமிழ்நீர்ச் சுருக்கி—Anti siatlagogue—வாயிலூறும் உமிழ் நீரைச் சுருக்கும் பொருள் ; A drug that reduces the flow of saliva.

1. கிலுகிலுப்பை

## 12. உமிழ்நீர்ப் பெருக்கி

(உமிழ்நீர்ப் பெருக்கி—த்ரவகாரி—Sialagogue—உமிழ் நீரை அதிகப்படுத்தி நாவில் ஈரத்தை உண்டாக்கும் பொருள் ; Drug that secreases the flow of salva.

1. அக்கரகாரம்.
2. அக்காரபட்டை.
3. இஞ்சி.
4. ஓமம்
5. புகையிலை
6. வெற்றிலை

## 13. உரமாக்கி

(உரமாக்கி—பலகாரி—Tonic : உடற்கு வன்மைதரும் பொருள் ; Dru hat restres the normal tone of the body.)

1. அகத்தி.
2. அக்ரோட்டு.
3. அதிவிடயம்.
4. அமுக்கிராக் கிழங்கு.
5. அறுவதா.
6. அன்னுசிப்பூ.
7. ஆகாசக் கருடன்.
8. ஆடுதீண்டாப்பாளை.
9. ஆலமரம்.
10. ஆவாரை.
11. ஆளிவிரை.
12. ஆள்வள்ளி.
13. இசங்கு.
14. இரவேல் சின்னி.
15. இலுப்பை.
16. ஈச்சுரமூலி.
17. உளுந்து.
18. ஊசிப்பாலை.
19. எட்டி.
20. எருக்கு.
21. எள்ளு.
22. எழிலைப்பாலை.
23. ஒதிமரம்.
24. ஓமம்.
25. கஞ்சாங்கோரை.
26. கடம்பு.
27. கடற்கொஞ்சி.
28. கடற்பாலை.
29. கடற்றேங்காய்.
30. கடுகுரோகணி.
31. கத்தூரிமஞ்சள்.
32. கப்பு.
33. கர்கடகசிங்கி.
34. கரிசலாங்கண்ணி.
35. கரியபோளம்.
36. கருங்கொடிவேலி.
37. கழற்சிக்கொடி.
38. கள்ளிமுளையான்.
39. கலப்பைக் கிழங்கு.
40. கலியாணபூசணி.
41. கறிவேம்பு.
42. கற்றாமரை.
43. கற்றாழை.
44. காட்டாத்தி.
45. காட்டு இருப்பை.
46. காட்டுச் சீரகம்.
47. காட்டுப் பேய்ப்புடல்.
48. காருக்கருணை.
49. கிச்சிலிப்பழம்.
50. கிறிப்பூண்டு.
51. குடசப்பாலை.
52. குருவேர்.
53. குன்றி.
54. கொட்டிக்கிழங்கு.
55. கொட்டைக்கரந்தை.
56. கொத்தான்.
57. கொய்யா.
58. கொள்ளு.
59. கொன்றை.
60. கோட்டம்.
61. கோரை.
62. சங்கன்.
63. சண்பகம்.
64. சருக்கரை வேம்பு.
65. சவ்வரிசி மரம்.
66. சவுக்கு மரம்.
67. சாதிக்காய்.
68. சாமந்திப்பூ.
69. சாயமரம்.
70. சாலாமிசிரி.
71. சிறியாநங்கை.
72. சிறுகுறிஞ்சான்.
73. சிறுபுள்ளடி.
74. சீத்தா.
75. சீந்தில்.
76. சீமை மிளகாய்.
77. சீமையத்தி.
78. சீமைத்தக்காளி.
79. தாமரை.
80. தாளிசபத்திரி.
81. தான்றி.
82. துத்தி.
83. தூதுளை.
84. தேற்றான்.
85. தொட்டாற்சுருங்கி.
86. நத்தைச்சூரி.
87. நறுவிலி.
88. நன்னாரி.
89. நிலப்பனை.
90. நிலப்பூசனி.
91. நிலவேம்பு.
92. நீர்முள்ளி.
93. நுணா.
94. நெட்டிலிங்கம்.
95. நெருஞ்சில்.
96. பண்ணிமோந்தான்.
97. பப்பாய்.
98. பருத்தி.

